# || पञ्चदशी ||

# பஞ்சதசீ

முதல் பாகம்

தஞ்சை மாநகரம்
ஸ்ரீ வெ. குப்புஸ்வாமி ராஜு
(ஸ்ரீ ப்ரஹ்மானந்த ஸ்வாமிகள்)
அவர்கள் தமிழில் எழுதிய
சுலோகார்த்தம், வியாக்கியானம், டிப்பணியாகிய
விளக்கவுரையுடன்

2007

ஸ்ரீ ஞானானந்த நிகேதன்
தபோவனம் அஞ்சல் 605 756
விழுப்புரம் மாவட்டம்
தமிழ்நாடு

।। श्री गुरुभ्यो नमः ।।

श्रीमत्परमहंस परिव्राजकाचार्य सार्वभौम्

श्री भारतीतीर्थ-श्रीविद्यारण्यमुनिप्रणीता

# ।। पञ्चदशी ।।

# பஞ்சதசீ

முதல் பாகம்

தஞ்சை மாநகரம்
ஸ்ரீ வெ. குப்புஸ்வாமி ராஜு
(ஸ்ரீ ப்ரஹ்மானந்த ஸ்வாமிகள்)
அவர்கள் தமிழில் எழுதிய

சுலோகார்த்தம், வியாக்கியானம், டிப்பணியாகிய
விளக்கவுரையுடன்

2007

ஸ்ரீ ஞானானந்த நிகேதன்
தபோவனம் அஞ்சல் 605 756
விழுப்புரம் மாவட்டம்
தமிழ்நாடு

# ஸமர்ப்பணம்

சிவபெருமானின் அம்சமாகவே காலடியில் அவதரித்த ஸ்ரீ சங்கர பகவத் பாதாசார்யர்களால் சிருங்கேரியில் ஸ்தாபிக்கப்பட்ட ஸ்ரீ சாரதா பீட வியாக்கியான ஸிம்ஹாஸனத்தை அலங்கரித்து வந்த ஸ்ரீ வித்யாதீர்த்தர் என்ற யோகீச்வரரிடம் ஆச்ரமம் பெற்ற ஸ்ரீ பாரதீ தீர்த்த ஸ்வாமிகள், ஸ்ரீவித்யாரண்ய ஸ்வாமிகள் என்ற மகான்கள் அப்பீடத்தில் முறையே 11வது, 12வது ஜகத்குருக்களாக விளங்கினார்கள். அவ்விருவர்களும் பூர்வாச்ரமத்தில் சகோதரர்கள் என்றும், பின்னர் அவர்கள் இருவரும் கலந்து கொண்டே கிரந்தங்கள் எழுதியிருப்பதாகவும் தெரிகின்றது. அத்வைத சித்தாந்தத்தை தெளிவாக அறிந்து கொள்ளவும் பின்னர் மனனம் செய்யவும் மிகவும் உபகாரமாக 'பஞ்சதசீ' என்ற கிரந்தத்தை நமக்கு அவர்கள் அருளியுள்ளார்கள்.

சாஸ்திரத்திலுள்ள பல விஷயங்களில் ஏதாவது சிலவற்றைப் பற்றி மட்டும் விரிவாக விளக்குவதுடன் பல சந்தேகங்களுக்கும் சங்கைகளுக்கும் ஸமாதானம் சொல்லி, அநேக திருஷ்டாந்தங்களுடன் எல்லோரின் மனதிலும் நன்கு பதியும்படியான பிரகாரங்களைக் கொண்டு நிரூபணம் செய்யும் நூலுக்கு 'பிரகரணம்' என்று பெயர்.

இந்தக் கிரந்தத்தில் அத்தகைய பதினைந்து பிரகரணங்கள் இருப்பதால், இது 'பஞ்சதசீ' என்றும், 'பஞ்சதச பிரகரணம்' என்றும் பிரஸித்தி பெற்றுள்ளது. இதிலுள்ள பதினைந்து அத்தியாயங்களில் முதல் ஐந்து 'விவேக பஞ்சகம்' என்றும், அடுத்த ஐந்து 'தீப பஞ்சகம்' என்றும், கடைசி ஐந்து பிரகரணங்கள் 'ஆனந்த பஞ்சகம்' என்றும் சொல்லப்படுகின்றன. நன்கு ஆராய்ந்து பார்த்தால், முதல் பத்து பிரகரணங்கள் தனித்தனி கிரந்தங்களென்றும், கடைசி ஐந்தும் சேர்ந்து ஒரே கிரந்தம் என்றும் விளங்கும்.

ஸ்ரீ வித்யாரண்ய ஸ்வாமிகளின் ஸாக்ஷாத் சிஷ்யரான ஸ்ரீ ராமகிருஷ்ண பண்டிதர் முதல் ஆறு பிரகரணங்களையியற்றியவர் ஸ்ரீ வித்யாரண்யர் என்றும், மற்ற ஒன்பது பிரகரணங்களை ஸ்ரீ பாரதீ தீர்த்தர் எழுதினார் என்றும் கருத்து கொண்டிருந்தாலும், தமது வியாக்கியானத்தில் ஒவ்வொரு பிரகரண தொடக்கத்திலும் ''ஸ்ரீ பாரதீதீர்த்த வித்யாரண்ய முநீஸ்வரர்களை வணங்கி உரையாற்றுகிறேன்'' என்றே கூறுகிறார். அவ்விருவர்களில் வயதில் ஜ்யேஷ்டரான ஸ்ரீ வித்யாரண்யர் பெயராலேயே இந்த கிரந்தம் பிரஸித்தியடைந்திருக்கிறது.

ப்ரஹ்ம சைதன்யம் ஸச்சிதானந்த ஸ்வரூபமென்று சாஸ்திரங்களில் கூறியவாறே, ''ஸத் '' என்ற அம்சத்தை தெளிவாக வெளிப்படுத்த விவேக பஞ்சகமும், ''சித்'' என்ற அம்சத்தை விளக்கிக்காட்ட தீப பஞ்சகமும், ''ஆனந்தம்'' என்ற அம்சத்தை ஸ்பஷ்டமாக நிர்ணயிக்க ஆனந்த பஞ்சகமும் அமைந்துள்ளன என்று சொல்லலாம்.

சாஸ்திரார்த்தங்களை எளிதாக புரியும்படி நிரூபணம் செய்வதில் ஸ்ரீ வித்யாரண்யர் தனக்கே உரித்தான வழியை வகுத்துக் கொண்டுள்ளார். விஷயங்களை இரத்தினச் சுருக்கமாகக் கூறுவதிலும், விரிவுபடுத்தி விளக்குவதிலும் திறமை வாய்ந்த

இந்த ஆசாரியரின் போதனா பிரகாரங்கள் நிகரற்றன. நம் அனுபவத்திலுள்ள விஷயங்களையே திருஷ்டாந்தமாகக் காட்டி, தக்க யுக்திகளுடனும், பிரமாணங்களுடன் சாஸ்திரார்த்தங்களை நிரூபிக்கின்றார். எதிர்வாதம் செய்வதில் நிபுணர்களையும் பலவிதமான கேள்விகள் கேட்டு, அவர்களை பதில் சொல்லமுடியாமல் திகைக்கச் செய்து, கடைசியில் தமது சித்தாந்தத்தை ஒப்புக்கொள்ளுமாறு செய்து விடுகின்றார். அறிவதற்கு அரிதான உபநிஷத் அர்த்தங்களை அபூர்வ கற்பனைகளால் சுலபமாக புரிய வைக்கின்றார். நிர்குண வஸ்து விஷயமாகவும் தியானம் உண்டு என்பதை உறுதிப்படுத்துகிறார். சித்ர படம், நாடக தீபம் போன்ற திருஷ்டாந்தங்கள், ஈச்வர சிருஷ்டம், ஜீவ சிருஷ்டம், அஸம்வாதி ப்ரமம், ஸம்வாதி ப்ரமம், ஆனந்தத்தின் பல பிரிவுகள் முதலான விஷயங்கள் அபூர்வமானவை. இத்தகைய சிறப்புக்களைக் கொண்ட இந்த கிரந்தம் இனிமையான சொற்கள் நிறைந்ததாயும், ஸரளமாகவும், லலிதமாகவுமுள்ள சைலியில் அமைந்துள்ளது. சுலோக ரூபமாக இருந்தாலும், பேசும் நடையிலேயே உள்ளது.

ஸ்ரீ வித்யாரண்ய ஸ்வாமிகளின் சிஷ்யரான ஸ்ரீ ராமகிருஷ்ண பண்டிதர் முமுக்ஷுக்களிடம் மிகக்கருணை கொண்டு பஞ்சதசீ கிரந்தத்திற்கு மிருது பதங்களுடன் கூடிய ஸரளமான ஸம்ஸ்கிருத வியாக்கியானம் செய்திருக்கின்றனர். அதை அனுசரித்து சாதாரண தமிழ் நடையில் உரையினை ஸ்ரீ வெ. குப்புசாமி ராஜு அவர்கள் எழுதியிருக்கின்றார். இவ்வுரை, ஆசிரியர் கருத்திற்கு சிறிதும் மாறுபடாது, எவரும் சுலபமாக அறியுமாறு சுத்தமாயும், மிகத்தெளிவாயும், எளிதாயும், முன்பின் அனுசந்தானமுடையதாயும், தேவநாகரி எழுத்தில் ஸம்ஸ்கிருத சுலோகமும், தமிழில் அவதாரிகையும், சுலோகத்தின் அந்வயக்ரமமான பதச்சேதமும், அதற்குப்பின் அந்வயத்திற்கு நேராக சுலோகார்த்தமெனும் பொழிப்புரையும், ஸம்ஸ்கிருத வியாக்கியானத்தின் மொழி பெயர்ப்பும் அமையப் பெற்றுள்ளது. ஆங்காங்கு வேண்டியவிடத்து ஸ்ரீ பீதாம்பர்ஜீ அவர்களால் ஹிந்தியில் செய்யப்பட்ட டிப்பணியினையும், மற்றும் அச்சுதராயர் வியாக்கியானத்தையும் மஹாராஷ்டிரம் தெலுங்கு உரைகளையும் பல ஆசிரியர்கள் கருத்தினையும் தழுவிய விளக்கவுரையும் சேர்க்கப்பட்டுள்ளது.

பஞ்சதசீ முமுக்ஷுக்களுக்கு ஒரு அரிய பொக்கிஷம். இந்த தமிழ் உரை, தமிழ் மொழி மட்டும் அறிந்தோருக்கும், ஸம்ஸ்கிருதத்தில் சிறிது பயிற்சியுடையோருக்கும் ஒரு வரப்பிரஸாதம். இதை நமக்கு தந்தருளிய ஸ்ரீ வெ.குப்புசாமி ராஜு (பின்னர் ஸ்ரீ ப்ரஹ்மானந்த ஸ்வாமிகள்) அவர்களின் வரலாற்றையும் ஸேவையையும் இவ்விடத்தில் நன்றியுடன் நினைவுகூறவேண்டும்.

தஞ்சை மாநகரத்தில் க்ஷத்திரிய குலத்தில் 1867 ஆம் ஆண்டில் பிறந்த ஸ்ரீ குப்புஸ்வாமி ராஜு இளம் வயதிலேயே பல மொழிகளில் தேர்ச்சி பெற்றார். தனது பன்னிரண்டாம் வயதில் தஞ்சாவூர் அரண்மனை சரஸ்வதி மஹால் நூலகத்தில் "ஸ்ரீ குருகீதை" என்னும் அருமையான ஏட்டுச்சுவடி கிடைக்கவே, ஞான வேட்கையுடன், அவருக்கு தவநெறியில் மனம் லயித்து நிஷ்டை கூடிற்று. பதினெட்டாம் வயதில் பெற்றோர் திருமணம் செய்து வைத்தும், அவரது நாட்டம் தவத்திலேயே நிலைத்திருந்தது. பத்தொன்பதாவது வயதிலிருந்து ஐந்து வருடங்கள் தலைமறைவாக க்ஷேத்திராடனம் செய்து, திருவிடைமருதூரில் ஸ்ரீ மருதப்பரை தரிசித்து, அருகில் ஒரு

மூங்கில் வனத்தில் தியானத்தில் திளைத்து அருளனுபவம் பெற்றார். அவர் அங்கிருப்பதை கேள்வியுற்று தாயாரும், சகோதரரும் அவரை வற்புறுத்தி தஞ்சைக்கு அழைத்துச் சென்றனர்.

அங்கு தஞ்சாவூர் மஹாராஜா குலகுருவின் பரம்பரையில் வந்த ஸ்ரீ விஷ்ணுபாவா என்பவரை குருவாக அடைந்து அவரிடமிருந்து சித்ரா பௌர்ணமியன்று ஞானோபதேசம் பெற்றார். தமது குருவினுடைய மஹாசமாதிக்குப் பிறகு சமாதி ஆலயத் திருப்பணியை செய்து முடித்தார். ஸ்ரீ சங்கரர், ஸ்ரீ வித்யாரண்யர் முதலியோர் வடமொழியில் அருளிய பக்தி ஞான நூல்களுக்கு தமிழில் விரிவுரை எழுதி தம் சகோதரர்களை அச்சிடச் செய்தார். தம்மை வந்தடைந்த பக்தர்களுக்கு அன்புடன் உணவளித்து அவரவர் பக்குவத்திற்கேற்ப கர்ம, பக்தி, யோக, ஞான மார்க்கங்களில் போதனை செய்தும், வேதாந்த தர்க்க சாஸ்திரங்களையும் முறைப்படி கற்பித்தார்.

தாயாரும், குழந்தைகள், மனைவி, ஒரு சகோதரர், தகப்பனார் என ஒருவர் பின் ஒருவராக காலகதியடையவே அவருடைய கிருஹஸ்தாச்ரமம் முற்றுப் பெற்றது. வானப்ரஸ்தராக க்ஷேத்ராடனம் மேற்கொண்டு, மேற்கு கரையிலுள்ள தலங்களை ஸேவித்து, பஞ்சவடியில் (நாசிக்) தங்கலானார். அங்கு ஸ்ரீ நாராயண ஜோஷி என்பவரின் வேண்டுகோளுக்கிணங்கி, பக்தர்களுக்கு ஸ்ரீதேவி கீதையை உபதேசித்தார். துவாரகை, குருக்ஷேத்திரம் வழியாக காசி அடைந்து அங்கு ஒரு வருட காலம் வேதாந்த பாடம் சொல்லி வந்தார். ஹரித்வார க்ஷேத்திரத்தில் கும்பமேளாவில் கலந்து கொண்டு தென்னாடு திரும்பினார். பின்னர் இராமேஸ்வரம், திருநெல்வேலி, குற்றாலம் சென்று பழனி தரிசனம் முடித்து, இறுதியாக தஞ்சை வந்து சேர்ந்தார்.

தஞ்சாவூர் கோட்டை வடக்கு ராஜவீதியில் ''ஸ்ரீ சங்கர விலாச சாரதா மந்திரம்'' என்னும் நூல் நிலையத்தை நிறுவினார். தாம் தமிழாக்கம் செய்த நூல்களை அச்சிட ஸ்ரீ சங்கரவிலாஸ சாரதா மந்திர அச்சுக்கூடம் ஒன்றையும் அமைத்தார். ஆதி சங்கரரிடம் மிகுந்த பக்தி கொண்டு அவரது பல அரிய நூல்களை தமிழில் வெளியிட்ட இவரது ஸேவை மிகவும் பாராட்டத்தக்கது.

மூன்றாம் முறையாக வடநாடு பயணம் மேற்கொண்டபோது, ''ஸ்ரீ ப்ரஹ்மானந்த ஸ்வாமிகள்'' என்ற தீட்சாநாமத்துடன் துறவறம் பூண்டு, இமய மலையில் பத்ரிநாத், கேதார்நாத் ஆகிய தலங்களை தரிசித்து தஞ்சை திரும்பினார்.

தமது உத்தம சீடருக்கு சந்நியாச தீட்சையளித்து, சங்கர விலாஸ சாரதா மந்திர நிர்வாகத்தை அவரிடம் ஒப்படைத்தார். தஞ்சாவூர் கரந்தை ஸ்ரீபாலய ஞானதேசிக ஸ்வாமிகள் மடாலயத்தின் மூன்றாம் மடாதிபதியாக சிறிது காலம் பரிபாலனம் செய்து, திருச்சி மாவட்டத்தில் துறையூர் அருகிலுள்ள சிக்கத்தம்பூர் பாளையம் என்ற கிராமத்தில் தங்கி வேதாந்த பாடம் சொல்லியும், தியானம் செய்தும் வந்தார். துன்மதி வருடம் புரட்டாசி மாதம் முதல் நாள் (1921 செப்டம்பர் 16ம் தேதி) வெள்ளிக்கிழமை பௌர்ணமியன்று ஸ்ரீ பிரஹ்மானந்த ஸ்வாமிகள் பல சீடர்களும் சூழ்ந்திருக்க, ஸ்ரீ விருத்தாசல ரெட்டியார் வீட்டில் மஹா ஸமாதியடைந்தார். சமாதி ஆலயம் அமைக்கப்பட்டு இன்றும் நித்ய பூஜை குரு பூஜை சிறப்பாக நடந்து வருகிறது.

பஞ்சதசீ கிரந்தத்தின் இவ்வாசிரியரின் தமிழ் உரை 1908 ஆம் ஆண்டு (கீலக வருடம் புரட்டாசி மாதம்) இரண்டு பாகங்களாக வெளியிடப்பட்டது மிகவும் பிரஸித்தமாக இந்நூல் இருந்த பொழுதும். இதன் இரண்டாம் பதிப்பு வெளிவராமலேயே இருந்தது.

ஸ்ரீஞானானந்த தபோவனத்து வேதாந்த பாடகிரமத்தில் 'பஞ்சதசீ' மிகவும் முக்கியமான ஸ்தானம் பெற்றுள்ளது. மேலும், ஸத்குரு ஸ்ரீ ஞானானந்தகிரி ஸ்வாமிகள் தமிழ் வேதாந்த நூல்களில் தனி அன்பு கொண்டிருந்ததை மனதிற்கொண்டு, அத்தகைய கிரந்தங்களை வெளியிடுவதை லக்ஷியமாகக் கொண்டிருக்கும் ''ஸ்ரீ ஞானானந்த நிகேதன்'' அறக்கட்டளை இந்த அரிய தமிழ் உரையை இரண்டாம் பதிப்பாக நூறாண்டுகளுக்குப்பின் வெளியிடுவது ஸ்ரீஸத்குரு கிருபையாலேயே அமைந்துள்ளது என்பதில் மட்டற்ற மகிழ்ச்சி.

இந்நூலின் பழைய பிரதிகள் கிடைப்பது மிகவும் துர்லபமாக இருந்தது. அங்ஙனம் கிடைத்த நூல்களில் பக்கங்கள் தொட்டால் உதிர்ந்து உடைந்து போகக்கூடிய நிலையில் இருந்தன. ஆகவே அவற்றை புகைப்பட நகல் எடுத்து அப்படியே இரண்டு பாகங்களாக வெளிவருகிறது.

முதல் ஆறு பிரகரணங்களைக் கொண்ட முதல் பாகத்தை பூஜ்யஸ்ரீ தயானந்த ஸரஸ்வதீ ஸ்வாமிகள் அருளிய முன்ரையுடன் இவ்வாண்டு நவராத்திரி உத்ஸவத்தில் விஜய தசமி சுப தினத்தன்று ஸத்குருநாதரின் சரணாரவிந்தங்களில் வந்தனத்துடன் ஸமர்ப்பிக்கிறோம். இரண்டாம் பாகம் சில மாதங்களிலேயே ஆராதனை விழாவிற்கு முன்பாக வெளியிட முயற்சி கொண்டுள்ளோம்.

ஸ்ரீ குப்புஸ்வாமி ராஜூவின் இந்நூல் தமிழில் படிக்கக்கூடிய முமுக்ஷுக்களுக்கு வஸ்து ஞானத்தைக் கொடுக்கும் ஓர் ப்ரஸாத கிரந்தம் என்று பூஜ்ய ஸ்ரீ தயானந்த ஸரஸ்வதீ ஸ்வாமிகள் தமது முன்னுரையில் கூறியுள்ளார்கள். ஆசியுரையை வழங்கி அனுகிரஹித்த அவர்களுக்கு நாராயண ஸ்மிருதி பூர்வமாக நன்றியையும் வந்தனத்தையும் தெரிவித்துக் கொள்கின்றோம்.

இந்த நூலை பிரசுரிப்பதில் தனி ஆர்வம் கொண்டு இதை அச்சிட்டு வெளியிடும் பணியை செவ்வனே செய்து முடித்த சுதர்சன் கிராஃபிக்ஸ் அச்சகத்து ஸ்ரீ என்.சுப்ரமணியம் அவர்களுக்கும், அவருடன் இணைந்து பணியாற்றியவர்களுக்கும் இந்தப் பதிப்பை வெளியிடுவதற்கு உதவி புரிந்த அன்பர்களுக்கும் எங்களது நன்றி.

ஸ்ரீ சங்கர பகவத்பாதாசாரியாள் விளக்கிய வேத நெறியில் ஆத்மவிசாரம் செய்து கொண்டிருக்கின்ற முமுக்ஷுக்கள் நாம் அனைவரும் இந்நூலைத் துணையாகக் கொண்டு, ஸ்ரீஸத்குரு நாதரின் பேரருளுடன் பிறவிப்பயனாகிய ஆத்ம ஞானத்தைப் பெற்றுய்வோமாக.

ஸ்வாமி நித்யானந்தகிரி

ஸ்ரீ ஞான ஆனந்த தவவனம்
ஸர்வ ஜித்து வருஷம், ஐப்பசி மாதம்
விஜயதசமி, அக்டோபர் 21, 2007

# முன்னுரை



ஸ்ரீ வித்யாரண்ய ஸ்வாமிகளால் இயற்றப்பட்ட பல முக்கியமான க்ரந்தங்களில் ஒன்று பஞ்சதசீ. பதினைந்து அத்யாயங்களைக் கொண்ட இந்த க்ரந்தம் வித்யாரண்யராலும் பாரதி தீர்த்தர் என்ற அவருடைய குருவின் மூத்த சிஷ்யராலும் சேர்ந்து எழுதப்பட்ட ஒரு நூல் என்று நாம் அறிகிறோம். வேதாந்த ப்ரகரணம் என்று சொல்லக்கூடிய பல க்ரந்தங்களில் பஞ்சதசீ ஒரு முக்கிய ஸ்தானத்தை வகிக்கிறது. இது முமுக்ஷுக்களுக்கு சாக்ஷாத்காரத்தை கொடுக்கக்கூடிய ப்ரசாத க்ரந்தம் என்று அதை அறிந்த பெரியோர்கள் இந்த நூலை போற்றுகிறார்கள்.

இந்த நூலுக்கு அச்யுத ஸ்வாமி, ஸதாநந்தர், ராமகிருஷ்ண பண்டிதர் போன்றவர்கள் வியாக்யானம் எழுதி இருக்கிறார்கள். இந்த மூன்று வியாக்யானங்களை நன்றாக படித்து, விஷயங்களை புரிந்து கொண்டு ஸ்ரீமான் குப்புஸ்வாமி ராஜு என்ற பெரியவர் இந்த பஞ்சதசீ க்ரந்தத்திற்கு தமிழில் ஸ்லோகார்த்தமும் வியாக்யானமும் டிப்பணி என்று சொல்லப்படுகிற விளக்க உரையுடன் கூடியதாய் எழுதியுள்ள இந்த அற்புதமான தமிழ் புத்தகம் 80 வருடமாக இருந்து வருகிறது. தஞ்சாவூரில் இருந்த இந்த பெரியவர் முறையாக குருவிடம் படித்து நுட்பமான வேதாந்த விஷயங்களை விசாரித்து அறிந்து த்ருட ஞானம் பெற்றவர் என்று அவர்களுடைய நூல்களிலிருந்து தெரிய வருகிறது.

ஸ்ரீகுப்புஸ்வாமி ராஜுவின் இந்த நூல் தமிழில் படிக்கக்கூடிய முமுக்ஷுகளுக்கு வஸ்து ஞானத்தை கொடுக்கும் ஒரு ப்ரசாத க்ரந்தம், ஸ்ரீஸ்வாமி நித்யானந்த கிரி அவர்கள் ஸ்ரீ ஞானாந்த நிகேதன் மூலம்

இம்மாதிரி அரிய புத்தகங்களைக் கண்டுபிடித்து, அவைகளை மறுபடியும் பிரசுரித்து முமுக்ஷுகளுக்கு சகாயம் செய்து வருகிறார். இந்நூலை அளித்த ஞானானந்த நிகேதன் நிர்வாகிகளை நான் மிகவும் பாராட்டுகிறேன். இவர்களுடைய இந்த ப்ரம்ம வித்யா ஸேவை எப்பவும் தொடர்ந்து நடக்க வேண்டும் என்று ஈச்வரனை ப்ரார்த்திக்கிறேன்.

ஸ்வாமி தயானந்தா ஸரஸ்வதி

ஆர்ஷ வித்யா குருகுலம்
ஆனைக்கட்டி (அஞ்சல்)
கோயம்புத்தூர் – 641 108
டிசம்பர் 15, 2006

ஸ்ரீகணேசாயநம:

# ஸ்ரீ பஞ்சதசி

# முகவுரை.

ஸ்ரீ சச்சிதாநந்தசொரூப மாயாவிசிஷ்டரும் சர்வஞ்ஞத்தன்மைமுதலிய கல்லியாணகுணங்களின் ஆசிரயருமான பரமேசுவரன் ஜீவர்களது கர்மாநுசாரமாக அச்சீவர்களுக்கு அறம் பொருள் இன்பம் வீடு என்னும் நால்வகைப்புருஷார்த்தமும் சித்தித்தற்பொருட்டுச் சொப்பனம்போற் கற்பிதமான ஸ்தூலசூக்ஷ்மப்பிரபஞ்சத்தின் சிருஷ்டியைச் செய்தனர். அவற்றில் முதலில் சூக்ஷ்மப்பிரபஞ்சவடிவ சூக்ஷ்மபூதங்களைப் படைத்து, அவை வெளிப்படாதிருத்தலால் போகமுதலியவற்றிற்குச் சாதனமாகாமையைக் கண்டு பஞ்சீகரணவாயிலாக அவற்றினின்றும் பிரஹ்மாண்டத்தினையும், அதிற் பதினான்கு புவனவடிவ வுலகங்களையும், அவ்வவ்வுலகங்களுக்கேற்ற அந்நபாநமுதலிய போக்கியங்களோடு அண்டஜ ஜராயுஜ உற்பிஜ்ஜ சுவேதஜ மென்னும் நால்வகைச் சரீரவடிவ ஸ்தூலப்பிரபஞ்சத்தினையும் படைத்தார். அவற்றுள்,

பசு குதிரைமுதலியவடிவ ஒன்று குறைந்த எண்பத்துநான்குலக்ஷம் சரீரங்களின் சிருஷ்டியாகிய உற்பத்தியினால் தான் சந்தோஷமில்லாதவரானார்.

பின் சொச்சமான இந்திரியம் அந்தக்கரணமுதலிய சகல சாமக்கிரிகளோடுகூடியதும், பிரத்தியகபின்ன பரமாத்மாவான தனது ஆவிர்ப்பாவமாகிய சாக்ஷாத்காரத்திற்கு உரிய ஞானம் பக்திமுதலிய சுபகுணங்களுக்கு நிதானமுமாகிய மனிதசரீரத்தைப் படைத்துப் பரமாத்மதெய்வமாகிய தான் வெகு சந்தோஷ மடைந்தார்.

அம்மனிதர்களில் குணத்தினால் வர்ணாசிரமாதி வேறுபாட்டால் அவரவர்களுக்கு வேறுவேறான நித்தியநைமித்திகாதிகாமங்களுக்கு அதிகாரத்தை உண்டுபண்ணியிருக்கின்றனர்.

வைராக்கியாதி நற்குணங்களை யுண்டுபண்ணுவதாகிய பக்திக்கும் பிரஹ்மாபின்ன ஆத்மாவின் ஞானத்திற்கும், உத்தம மத்திம அதம ஜாதியோடு கூடிய சரீரந்தாங்கிய அதிகாரிகளாகிய ஸ்திரீ புருஷவடிவ சகல மனிதர்களுக்கும் யாஞ்ஞவல்கியர், சுகதேவர், ஜநகர், பிரகலாதர், ரைக்வர், கோபிகை, மைத்திரேயி, கார்க்கி முதலியோரைப்போல் அதிகாரம் கொடுத்திருக்கின்றனர். இது சாஸ்திரத்தினாலும் மகாத்மாக்களாலும் நிச்சயிக்கப்பட்டதாம்.

# முகவுரை.

கர்மம் உபாசனை முதலிய சகல சுபசாதனங்களுக்கும் அத்வைதவித்தையாகிய ஞானவாயிலாக அத்வைதப்பிரஹ்மத்தின் அடைவில் உபயோகமிருக்கின்றது.

இருக்காதி நான்கு வேதங்களும், ஆயுர்வேதாதி நான்கு உபவேதங்களும், சிக்ஷைமுதலிய ஆறங்கங்களும், புராணம், நியாயம், மீமாம்ஸை, தர்மசாஸ்திர மென்னும் வேதார்த்தத்தை நிச்சயிக்கும் நான்கு சாஸ்திரங்களுமாகிய இவை அக்கினிபுராணத்தின் முதலத்தியாயத்தில் சம்ஸ்கிருத வித்தையின் பதினெட்டுப்பிரகரணங்கள் அதாவது அங்கங்க ளெனப்பட்டிருக்கின்றன. அவற்றிற்குக் கர்மோபாசனாதி சாதனங்களால் அத்வைதவித்தையின் வாயிலாக நிர்விசேஷ அதாவது பேதமின்றிய பிரஹ்மத்தின்கண்ணே தாற்பரியம் சொல்லப்பட்டிருக்கின்றது.

ஸ்ரீ பரமேசுவரன் கலியுகத்தில் நாஸ்திக பௌத்தாதி பாஷண்டமதங்களின் அபிவிருத்தியால் முற்கூறிய வித்தை உபயோகமாகாமையைக் கண்டு பரமகாருணிகரும் பர அபரவித்தைகளின் ஆசிரியருமாகிய ஸ்ரீமத் சங்கராசாரியராக அவதரித்துப் பௌத்தாதிமதங்களைக் களைந்து உபநிஷத்பாஷ்யம், பிரஹ்மசூத்ரபாஷ்யம், கீதாபாஷ்ய மென்னும் மூன்று பிரஸ்தானமுதலிய பிரமேயகிரந்தங்களின் வாயிலாக வேதத்தினது கர்மம் உபாசனை ஞானமென்பவற்றைக் கூறும் மூன்று காண்டங்களின் வியவஸ்தையோடு சநாதனமும் சர்வசிரோமணியுமாகிய அத்வைதமதத்தினை அலங்கரித்திருக்கின்றனர்.

அந்தப் பிரமேயகிரந்தங்களினது விஸ்தாரத்தின்பொருட்டு ஸ்ரீ பத்மபாதாசாரியர், சுரேசுவராசாரியர், ஆநந்தகிரியார்முதலிய சிஷ்யப் பிரசிஷ்யர்களால் செய்யப்பட்ட வியாக்கியானவடிவமும் சுவதந்திரமுமான கிரந்தங்க ளிருக்கின்றன. அந்த வியாக்கியானவடிவமும் சுவதந்திரமுமாகிய கிரந்தங்களைப் பாதுகாத்தற்பொருட்டு ஸ்ரீஹர்ஷமிசிராசாரியர் சித்ஸுகாசாரியர் முதலிய ஆசாரியர்கள் கண்டநம், சித்சுகி, பேததிரஸ்காரம், அத்வைதசித்தி, கௌடப்பிரஹ்மாநந்தீயமுதலிய ஆகரகிரந்தங்களைச் செய்திருக்கின்றனர்.

முற்கூறிய நூல்களை விசாரித்தலில் சாமர்த்தியமின்றிய சிறிது சம்ஸ்கிருதப்பயிற்சியுள்ள ஜிஞ்ஞாஸுக்களுக்குப் பிரஹ்மாத்ம ஐக்கிய நிச்சயவடிவ யதார்த்த அபரோக்ஷஞான முண்டாகவேண்டு மென்னும் பிரயோஜனத்தின்பொருட்டுப் பரமதயாளுவும் சகல வேதசாஸ்திரங்களை யுணர்ந்தவரும் சர்வஞ்ஞருமாகிய ஸ்ரீ வித்தியாரண்யமுனிவர் பதினைந்து பிரகரணவடிவ ஸ்ரீ பஞ்சதசி யென்னும் பிரகரணநூலைச் செய்தனர்.

இந்நூலினுள்,

க-ரு (க) பிரத்தியக்தத்துவவிவேகம், (உ) பஞ்சபூதவிவேகம், (௩) பஞ்சகோசவிவேகம், (௪) துவைதவிவேகம், (ரு) மகாவாக்கியவிவேகம்,

௬-௰. (௬) சித்திரதீபம், (௭) திருப்திதீபம், (௮) கூடஸ்ததீபம், (௯) தியானதீபம், (௰) நாடகதீபம்,

௧௧-௧௫. (௧௧) யோகாநந்தம், (௧௨) ஆத்மாநந்தம், (௧௩) அத்வைதாநந்தம், (௧௪) வித்தியாநந்தம், (௧௫) விஷயாநந்தம்

என்னும் பெயரினையுடைய பதினைந்து பிரகரணங்களிருக்கின்றன. அவை யாவும் சேர்ந்து ௧௫௭௧ சுலோகங்களாம். இந்த ஒவ்வொரு பிரகரணமும் வேறு வேறு கிரமமாகப் பயனும் முறையுமுள்ளனவாய்ப் பிரஹ்மாத்மாவின் ஒருமையை யறிவிக்கும் உபாயமான அத்தியாரோபம் அபவாதம் பதார்த்தசோதனைமுதலியவற்றைச் சொல்லுவனவா யிருத்தலின் சுவதந்திரகிரந்தவடிவமா யிருக்கின்றன. இவ்விதத்தால் ஒரு பஞ்சதசியினுள் பதினைந்து நூல்க ளிருக்கின்றன.

இவற்றுள், ஸ்ரீராமகிருஷ்ணபண்டிதருடைய அபிப்பிராயத்தால்

முதல் ஆறுபிரகரணங்கள் ஸ்ரீ வித்தியாரணியஸ்வாமிகளால் செய்யப்பட்டன.

மற்ற ஒன்பது பிரகரணங்களும் ஸ்ரீ பாரதிதீர்த்தகுருவினுல் செய்யப்பட்டன என்ப தொன்று.

௨ ஸ்ரீ விருத்திப்பிரபாகரத்தின் எட்டாவது பிரகாசத்தின் வாக்கியத்தால்

முதற்பத்துப்பிரகரணங்கள் ஸ்ரீ வித்தியாரணியஸ்வாமிகளால் செய்யப்பட்டன.

பின் ஐந்தும் ஸ்ரீ பாரதிதீர்த்தர்களால் செய்யப்பட்டன என்ப தொன்று.

ஆயினும் இந்நூல் இருவராலும் செய்யப்பட்டதென்னும் வார்த்தை நிச்சயம். ஆனால் ஸ்ரீவித்தியாரணியஸ்வாமிகளின் சாக்ஷாத் சிஷ்யர் ஸ்ரீ ராமகிருஷ்ணபண்டிதர் என்பது தற்காலம் அச்சிடப்பட்டிருக்கும் பலபிரதிகளாலும், எனக்குத் திருநெல்வேலி ஜில்லாவினின்லும் கிடைத்த பழைமையான ஏட்டுப்பிரதியாகிய ஆத்மபோதவியாக்கியானத்தினீற்றிலும் அதே ஏட்டுப்பிரதியிலுள்ள பஞ்சதசியின் மகாவாக்கிய விவேக வியாக்கியானத்தி னீற்றிலும் "பாரதீதீர்த்தவித்தியாரணியகுரவர்களின் கிங்கரனாகிய இராமகிருஷ்ணனால் செய்யப்பட்டது" என்று வரையப்பட்டிருக்கும் வாக்கியத்தினாலும், ஒவ்வொரு பிரகரண வியாக்கியானத்தின் தொடக்கத்திலும் "ஸ்ரீ பாரதீதீர்த்த வித்தியாரணிய முநீசுவரர்களை வணங்கி உரையியற்றுகின்றேன்" என்று கூறுதலாலும், தெரியவருகின்றதாகலின், அவ்வாசிரியர்காலத்துரையாசிரியர்வாக்கியத்தாற் றுணியப்படும் முதற்கருத்தே கொள்ளற்பாற்று.

ஸ்ரீ வித்தியாரணியஸ்வாமிகள் இந்நூலை ஆரம்பித்து, தனது ஆசிரியர் மாணுக்கரும், தனக்கு முற்பட்டத்திருந்தமையால் தனது ஆசிரியருமாகிய ஸ்ரீ பாரதீர்த்தஸ்வாமிகளாலியற்றப்பட்ட பிரகரணங்களையும் சேர்த்து இந்நூலை முடித்தனராகலின் இந்நூல் ஸ்ரீ வித்தியாரணியஸ்வாமிகளால் செய்யப்பட்டதென்று சொல்லப்படுகின்றது.

இந்நூல் சர்வசித்தாந்தங்களின் சிரோமணியான வேதாந்தமதத்தின் மற்றெல்லாநூல்களினும் மிக மேலானது. உத்தமன்முதலிய எல்லா முமுக்ஷுக்களுக்கும் பிரஹ்மசாக்ஷாத்காரத்திற்கு ஏதுவாக இதனைப் போன்ற மிகவுத்தமமான நூல் சம்ஸ்கிருதநூல்களிலேயே வேறெதுவு மில்லையெனின், தமிழ்நூல்களில் எவ்வாறிருக்கும்? எனெனின்,

க. அந்நியமான சம்ஸ்கிருத ஆகரநூல்களில் அந்நியமதங்களின் கண்டநமும் சுவமதத்தின் மண்டநமுமாகிய விவாதத்தின் விஷயம் வைக்க ப்பட்டிருக்கின்றது. அது மதத்தினை நிறுத்துதற்கு உபயோகமுள்ள தாம். ஆனுல் முமுக்ஷுக்களுக் குபதேசித்தலில் உபயோகமுள்ள தன்று.

உ. பாஷ்யமுதலிய பிரமேயநூல்களில் முமுக்ஷுக்களுக்கு உபதே சிக்கும் கிரமம் வைக்கப்பட்டிருக்கினும், அவை கடினமாயிருத்தலால் எல் லா முமுக்ஷுக்களுக்கும் உபயோகமானவை யன்று; ஆனுல் அவை தீவிர புத்தியுடைய முமுக்ஷுக்களுக்கு உபயோகமுள்ளனவாம்.

ங. தத்துவாநுசந்தானம் சித்தாந்தமுக்தாவலிமுதலிய அந்நிய சம்ஸ்கிருத பிரகரணகிரந்தங்களும் முமுக்ஷுக்களுக்குப் போதித்தற்பொ ருட்டிருக்கின்றன. ஆனுல் அவையும் கடினமாம். அவற்றில் இவ்வளவு சம்பூர்ணமும் அற்புதமுமான விஷயங்களில்லை.

பஞ்சதசியில் மூன்று பிரஸ்தானங்களுக்கும் வேதசாஸ்திரங்களுக் கும் விரோதமின்றிய அநேக அற்புதமான விஷயங்கள் வைக்கப்பட்டிருக் கின்றன. இந்நூலில் எல்லாப்பிரக்கிரியைகளும் சுருதியை யநுசரித்தன வாயிருக்கின்றன. முற்கூறிய பதினெட்டுப் பிரஸ்தானங்களின் சாரவடிவ அர்த்தம் இதன்கண் வைக்கப்பட்டிருக்கின்றன. சுருக்கமாக எல்லாச் சாஸ்திரங்களின் விஷயங்களும் இதில் காட்டப்பட்டிருக்கின்றன.

க. சம்சாரசாகரத்தினைக் கடத்தற்கு இது மேலான கப்பல்.

உ. வேதாந்தத்தினது பிரக்கிரியையின் அடைவிற்கு இது சிந்தாமணி.

ங. பரமஹம்ஸர்களுக்கு விசிராந்திக்குக் காரணமான இது மாநஸ சரோவரம்.

ச. ஆநந்தாநுபவத்தினது சங்கற்பத்தைப் பூர்த்திசெய்விக்க இது கல்பதரு.

ரு. மோக்ஷவிருப்பமுடைய முமுக்ஷுக்களுக்கு இது காமதேனு.

௯. அநேக அத்தியாசவடிவ பரிவாரத்தோடுகூடிய அஞ்ஞானமாகிய யானையைக் கொல்லுதற்கு இந்நூல் சிங்கம்.

இந்நூலாசிரியராகிய ஸ்ரீ வித்தியாரணியசுவாமிகள் அநேக நூல்கள் இயற்றியிருக்கின்றனர். அவ்வெல்லாவற்றுள்ளும் இந்நூல் மிக்க சிரேஷ்டமானது. வெகுவாய்ச் சொல்லுவதென்? இந்நூலைப்போல் முமுக்ஷுக்களுக்கு இதஞ்செய்வது வேதாந்தமதத்தில் வேறில்லை. ஆனால் எல்லாநூல்களினும் இது மேலானது என்று கூறுவதில் அநுசிதம் ஒன்றுமில்லை. இந்நூலில் பிரமாணயுக்திகளால் ஆபாஸவாதமே நிரூபிக்கப்பட்டிருக்கின்றது. அது முமுக்ஷுக்களுக்குச் சகலவியவஸ்தையினையும் அறிவித்தலில் எளிதாம்.

சுருதி ஸ்மிருதி புராணங்களிலும் பாஷ்யகாரராகிய ஸ்ரீ சங்கராசாரியஸ்வாமிகளது வாக்கியவிருத்தி உபதேசசஹஸ்ரிமுதலிய வசனங்களிலும் ஆபாஸவாதம் சொல்லப்பட்டிருக்கின்றது. அவ்வாறாயினும் ஸ்ரீவித்தியாரணியஸ்வாமிகள் எவ்வாறு ஆபாஸவாதத்தினை உபபாதனஞ்செய்திருக்கின்றனரோ, அவ்வாறு ஒருவரும் செய்யவில்லை.

இந்நூலினை எந்தப் புருஷன் செவ்வையாய்ப் படிக்கின்றானோ, அல்லது கேட்கின்றானோ, அவன் சாரீரகபாஷ்ய முதலிய பெரிய நூல்களையறியத்தக்கவனாகின்றான். ஆதலால் வேதாந்தசித்தாந்தத்தினை அறிவதற்கு இந்நூல் ஏணியாம் அதாவது வழியாம்.

அந்நியமதவாதிகள் வேதாந்தசித்தாந்தத்தினைத் தெரிந்துகொள்ளுவதற்கு வெகுவாய் இந்நூலினைப் படிக்கின்றனர். ஆனால் அவர்களுக்குத்தம் மதத்தின் ஆகரகிரந்தங்கள் எப்படியோ அப்படி இந்நூல் கடினமாய்த் தோற்றுகின்றது. ஏனெனின், அவர்கள் சிரத்தையில்லாதவர்களாகலின் சித்தாந்தத்தின் இரகசியத்தினை அறியக்கூடியவர்களல்லர்.

பிரஹ்மநிஷ்டகுருவினிடத்தும் வேதாந்தசாஸ்திரத்தினிடத்தும் சிரத்தையுள்ள அதிகாரிகளாகிய முமுக்ஷுக்கள் இதனை அறிதல் எளிதாம்; கடினமன்று.

மூலமாத்திரம் கடினமாயிருக்கினும் ஆத்மபோதமுதலியவற்றிற்கு வியாக்கியானம் செய்திருப்பவராகிய ஸ்ரீ வித்தியாரணியஸ்வாமிகளின் சிஷ்யரான ஸ்ரீராமகிருஷ்ணபண்டிதர் முமுக்ஷுக்களின்பேரில் மிகக் கருணையினால் மிருதுபதங்களோடுகூடிய சரளமான சம்ஸ்கிருத வியாக்கியானம் செய்திருக்கின்றனர். அந்த வியாக்கியானத்தினால் சிறிது சம்ஸ்கிருத காவ்யம் கோசம் இலகுவேதாந்தப்பிரகரணம் என்பவற்றை யுணர்ந்த ஜிஞ்ஞாஸுக்களுக்குப் பிரஹ்மநிஷ்ட குருமுகமாக இரகசியத்தோடு இந்நூலைத் தெரிந்துகொள்ளுதல் எளிதாம். இப்பஞ்சதசிக்கு ஜனஸ்தானமென்னும் நாசிகநகரத்தில் வசிக்கும் சீக்கிரகவியாகிய ஸ்ரீ அச்சுதராவ்

(அச்சுதஸ்வாமி) அவர்களால் செய்யப்பட்ட விஸ்தாரமான வியாக்கியான மிருக்கிறது. சதாகந்தராற் செய்யப்பட்ட மற்றோர் வியாக்கியானமு மிருக்கின்றது. ஆனால் அவ்விரண்டு வியாக்கியானங்களும் ஸ்ரீ ராமகிருஷ்ண பண்டிதர் செய்த வியாக்கியானத்திலும் நவீனமாம், அவை எல்லா அதிகாரிகளுக்கும் உரியனவு மன்று. ஆதலால் வெகுவாகப் பிரவர்த்திக்கவில்லை. இவ்வியாக்கியானம் அவ்விரண்டினும் பழைமையானதும் எல்லா அதிகாரிகளுக்கும் தகுதியானதுமாம்; ஆதலாற்றான் எங்காட்டிலும் பிரவிருத்தித்திருக்கின்றது.

என்றாலும் தமிழ்மாத்திர முணர்ந்த புருஷர்களுக்கு

க. இவ்வுரையோடுகூடிய சம்ஸ்கிருத நூலைத் தெரிந்துகொள்ளுதலில் ஒரு கண்டவாசிக்கு மற்றொரு கண்டவாசியின் பாஷையினைப் போலக் கடின முளது.

உ. சர்வோத்தமமென் றறிந்து இந்நூலினைப் படிக்கவேண்டு மென்னும் இச்சையும் ஜிஞ்ஞாஸுக்களுக்கு விலகுகிறதில்லை.

ந. காவிய வியாகரணாதியப்பியாசங்கள் சிரமசாத்திய மென்றறிந்து அவற்றிலும் பிரவிருத்தி யுண்டாகிறதில்லை.

ச. இந்நூலின் விசாரமின்றிச் சில ஜிஞ்ஞாசுக்கள் ஆத்மஞானத்தில் அதி உபயோகியாகிய பதபதார்த்தம் பிரக்கிரியை இவற்றினை அறியாது சந்தேகத்தோடுகூடியவர்களாகவே அதாவது அதிடஞானமுடையவர்களாகவே யிருக்கின்றார்கள்.

அதனால் தமிழர்களாகிய ஜிஞ்ஞாஸுக்களுக்கு மிகுந்த கிலேச முண்டாகின்றதென்றறிந்து, சம்ஸ்கிருதத்தில் சிறிதுணர்ச்சியுடையவர்களாய்த் தமிழ்நூலைப் படித்தலிற் சமர்த்தர்களும் தமிழ்மாத்திர முணர்ந்தவர்களுமாகிய இருவகை அதிகாரிகளுக்கும் யதார்த்த திடாபரோக்ஷத்துவமாகிய பிரஹ்மாத்ம ஐக்கியத்தின் ஞான முண்டாதற்பொருட்டு யாம் ஸ்ரீ ராமகிருஷ்ணபண்டிதரின் வியாக்கியானத்தினை யநுசரித்துச் சாதாரண தமிழ் நடையினால் ஸ்ரீ பஞ்சதசியின் உரையினை எழுதியிருக்கின்றோம்.

இப்பஞ்சதசி முன்னரே தமிழிற் சிலராற் செய்யப்பட்டிருக்கினும், அவற்றுள் ஒன்று ஸ்ரீ வித்தியாரணியசுவாமிகள் திருவாக்கிற் கொதுங்கிய சொந்த அபிப்பிராயத்தால் ஆசிரியர் பெயரின்றித் தமிழ்மாத்திரத்தில் வெளிப்பட்டுளது. மற்றொன்றும் அவ்வாறே ஆசிரியர்மூலசுலோகங்களைப் போட்டுக்கொண்டு ஆசிரியர்கருத்தினின்றும் விலகியதாய் வேதாந்தத்தின் பிரக்கிரியை இன்னதென்று தெரியக்கூடாததாய்ச் சுவகபோலகற்பனமாய் வெளியிடப்பட்டிருக்கிறது. இவை பிரசித்தம். ஆதலின் இவ்வரிய வரப்பிரசாத நூலின் பொருளினை யாவரும் எளிதிலுணர்ந்து பிரதிசயாகக்

தம் எய்துமாறு இதற்கு யாம் இவ்வுண்மைவிளக்க மென்னும் உரையினை யியற்றினம்.

இவ்வுரையோ ஆசிரியர்கருத்திற்கு சிறிதும் மாறுபடாது யாவரும் எளிதின் அறியுமாறு சுத்தமாயும், மிகத்தெளிவாயும் எளிதாயும், முன் பின் அநுசந்தானமுடையதாயும், பதச்சேதமும், சுலோகத்திற்கு நேரான தமிழும், இராமகிருஷ்ணபண்டிதரின் சம்ஸ்கிருதவியாக்கியானத்திற்குச் சரியான தமிழும், ஆங்காங்கு வேண்டியவிடத்து ஸ்ரீ பீதாம்பரஜீ அவர்களால் ஹிந்திபாஷையிற் செய்யப்பட்ட டிப்பணியினையும், மற்றும் அச்சுதராயர் வியாக்கியானத்தினையும், மஹாராஷ்டிர தெலுங்கு உரைகளையும், பல ஆசிரியர்கள் கருத்தினையும் தழுவிய விளக்கவுரையும் அமையப்பெற்றுளது.

ஆதலால் இவ்வுரை முமுக்ஷுக்களுக்கு அத்தியந்த உபயோகமுள்ளது.

இந்நூல் தமிழ்மாத்திர முணர்ந்தவரும் சிறிது சம்ஸ்கிருதப் பயிற்சியோடு தமிழுணர்ந்தவருமாகிய இருதிறத்தாருக்கும் உபயோகமாதற்பொருட்டு, தேவநாகர எழுத்தில் சமஸ்கிருதசுலோகமும், சுலோகத்தின் அந்வயக்கிரமமான பதச்சேதமும், அப்பதச்சேதத்திற்கு மேல் தமிழில் அவதாரிகையும், அதன்பின் அந்வயத்திற்கு நேராகச் சுலோகார்த்த மென்னும் மொழிப்புரையும் அதன்பின் சம்ஸ்கிருத வியாக்கியானத்தின் மொழிபெயர்ப்பும் அதன்கீழ் விளக்கவுரையுமாக பதிப்பிக்கப்பட்டுளது. அல்லாமலும் இந்நூலின் கருத்தைச் செவ்வையாய் நிச்சயித்து அநுசந்தானஞ் செய்யும்பொருட்டுச் சுலோகங்களுக்கு மேல் மூவகையான பிரசங்க மெனப்படும் விஷயக்குறிப்புகள் வைக்கப்பட்டிருக்கின்றன.

அவற்றுள், முதலாவது பிரசங்கம் ஒன்றுமுதற் பல சுலோகங்களின் பிண்டப்பொருளை விளக்குகின்றது.

இரண்டாவது பிரசங்கம் அப்பிண்டப்பொருளி னுள்ளடங்கிய பல தொகைப்பொருள்களைக் கூறுகின்றது.

மூன்றாவது பிரசங்கம் அத்தொகைப்பொருளி னுள்ளடங்கிய பல விரிப்பொருள்களைத் தனித் தனியே யுணர்த்துகின்றது.

அவற்றை நூலினுள் எளிதிற் காணுமாறு அவை நூன்முகப்பில் பிரசங்க அநுக்கிரமணிகை யென அமைக்கப்பட்டிருக்கின்றன.

அன்றியும் இந்நூலில் விஷயங்களை எளிதினுணருமாறு அகாராதிக்கிரமமாக ஓர் அட்டவணையும் எழுதப்பட்டுளது.

. , ; : ! ? - ( ) [ ] “ ” ‘ ’ :— இவைமுதலிய குறிகள் எளிதாய்ப் பொருளுணருமாறு விதிப்படி அமைக்கப்பட்டுள்ளன.

அத்வைதஸ்தாபக பரமாசிரியராகிய ஸ்ரீ மத் சங்கரபகவத் பாதாசாரியர்களின் படமும் எமது ஆசிரியர் படமும் குருபக்தியுடையார்க்கு இதன் பொருள் எளிதில் உணரப்படும் என்பதன் சூசனமாக வைக்கப்பட்டிருக்கின்றன.

இந்நூலாசிரியர் படமமைத்தற்குச் சரியான லக்ஷணம் எமக்குக் கிடைக்கவில்லை. அவரது சரித்திரமாத்திரம் எமக்குக் கிடைத்த பல நூல்களின் ஆராய்ச்சியைக்கொண்டு ஒருவாறு சுருக்கமாய் எழுதப்பட்டுளது.

இந்நூலினைப் பிரஹ்மநிஷ்டகுருவின் முகமாகச் சாஸ்திரத்திற் கூறிய அதிகாரப்படி சாஸ்திரத்திலும் குருவினிடத்தும் சிரத்தை பக்தியோடு கூடிப் படிக்கும் முமுக்ஷுவானவன் எதார்த்தமான பதபதார்த்தப் பிரக்கிரியைகளை அறிதலோடு பிரஹ்மாத்மாபேதத்தினையும் சமஷ்டி வியஷ்டி வடிவ ஜகத்தின் மித்தியாத்தன்மையினையும் நிச்சயஞ்செய்து, “யான் நிஷ்பிரபஞ்சப்பிரஹ்மம்” என்னும் நிச்சயவடிவ தத்துவஞானத்தினை யடைந்து ஜீவன்முக்தனாகும்படியாகவும், சம்ஸ்கிருத பஞ்சதசியினை அறியு மிச்சையோடுகூடிய குசலபுத்தியுடைய புருஷன் இவ்வுண்மைவிளக்க வுரையினைக்கொண்டு அச்சம்ஸ்கிருதபஞ்சதசியினையும் அறிந்துகொள்ளக் கூடியதாகவும் உத்தமமான முறை இந்நூலில் வைக்கப்பட்டிருக்கின்றது.

திருஷ்டிதோஷத்தினாலும் புத்திதோஷத்தினாலும் பிழைகள் ஏற்பட்டிருக்குமாயிற் பெரியோர் உலகினர் பாசியினை யொதுக்கி நீரினைக்கொள்வதுபோல் அவற்றை நீக்கிப் பொருளினைக் கொள்ளுமாறு பிரார்த்திக்கிறேன்.

வே. கு.

முகவுரை முற்றிற்று.

---

ஓம் தத்ஸத் பிரஹ்மணே நம:

## ஸ்ரீ வித்தியாரணியஸ்வாமிகளின்

# சரித்திரம்.

---

### பூர்வாசிரமவிருத்தாந்தம்.

தக்ஷிண திசையில் கர்ணாடகதேசத்திலே துங்கபத்திராநதிக்கரையில் பம்பை யென்று ஒரு க்ஷேத்திர முண்டு. அதில் விஜயமென்னும் நகர மிருந்தது. அதனை முன் கிஷ்கிந்தாபுரி யென்று சொல்லிக்கொண்டிருந்த னர்; இப்போது கோல்கொண்டா என்கின்றனர். எங்கு விரூபாக்ஷர் என் னும் மகாதேவருடைய ஆலய மிருக்கின்றதோ அங்கு ஸ்ரீ வித்தியாரணிய சுவாமிகளின் ஜன்மமும் பூர்வாசிரமத்தின் ஸ்திதியும் நிகழ்ந்திருக்கின்றது.

அவர்களுக்கு (1) மாதவர், (2) மாதவாரியர், (3) மாதவாசாரியர், (4) மாதவாமாத்தியர், (5) மாதவபட்டர் என்னும் பெயர்களிருந்தன. பின் உத்தராசிரமத்தில் ஸ்ரீ வித்தியாரணிய ரென்னும் பெயர் இருந்தது.

க. இவருக்குப் பிறப்பினால் மாதவர் என்னும் பெயருண்டாயிற்று.

உ-ங. மிகுந்த வித்துவத்தன்மையாலும், இவர் இராஜாவின் குல குருவாயிருந்ததனாலும் மாதவாரியர், மாதவாசாரியர், மாதவபட்டர் என்னும் பெயருண்டாயிற்று.

ச. ஸ்ரீ வசிஷ்டமுனிவரைப்போல இராஜாவின் பிரதானமந்திரியா யிருந்தமையால் மாதவாமாத்தியர் என்னும் பெயரால் அக்காலத்தியற்றி யருளிய நூல்களிற் பிரசித்தம் செய்திருக்கின்றனர்.

ரு. வித்தைக்கு வனம்போன் றிருந்தமையால் வித்தியாரணியர் என் னும் பெயர் உண்டாயிற்று.

ஸ்ரீ வித்தியாரணியஸ்வாமிகள் மகா யோகப்பிரஷ்டராய் உத்தமசம்ஸ் காரமுடையவரா யிருந்தனர். வித்தை, ஐசுவரியம், இலக்ஷ்மி, தேஜசோடு கூடியதன்மைமுதலிய விபூதியினால் ஜகத்தை உத்தாரணஞ்செய்தற் பொருட்டு ஈசுவரனது கலைவடிவமாகப் பிரகடமானு ரென்று கொள்ள வேண்டும். அதனால் இராஜசபையில் இவருக்கு யாவரும் சாஷ்டாங்க நமஸ்காரம் செய்துகொண்டிருந்தனர்.

ஸ்ரீ வித்தியாரணியசுவாமிகள் பராசரஸ்மிருதியினது வியாக்கியா னத்தின் உபோற்காதத்தில் இவ்விரண்டு சுலோகங்களை எழுதியிருக்கின்ற னர்:—

श्रीमती जननी यस्य सुकीर्तिमायणः पिता ।
सायणः सोमनाथश्च मनोबुद्धी सहोदरौ ॥ १ ॥
यस्य बौद्धायनं सूत्रं शाखा यस्य च याजुषी ।
भारद्वाजं यस्य गोत्रं सर्वज्ञः स हि माधवः ॥ २ ॥

அவற்றில்,

௧. ஸ்ரீமதி எவனுக்கு மாதாவோ,

௨. அழகிய கீர்த்திவாய்ந்த மாயணர் எவனுக்குப் பிதாவோ,

௩. சாயணர், சோமநாதர் என்னும் இருவரும் எவனுக்குச் சகோதரர்களோ, (௧)

௪. பௌத்தாயனம் எவனுக்குச் சூத்திரமோ,

௫. கிருஷ்ணயஜுர்வேதத்திலுள்ளிருக்கும் போதாயனீ எவனுக்குச் சாகையோ,

௬. பாரத்துவாஜம் எவனுக்குக் கோத்திரமோ,

அவனே சர்வஞ்ஞனாகிய மாதவன், (௨)

இவ்வாறு தமது குலகோத்திராதிகளை யறிவித்திருக்கின்றனர்.

வித்தியாரணியசுவாமிகள் ஜன்மம் சாலிவாகனசகம் ௧௩00-ல் உண்டாயிற்று என்று மகாராஷ்டிர கவி சரித்திர கிரந்தம் கூறுகின்றது.

ஓர் தாம்பிரபட்டயத்தில் சாலிவாகனம் ௧௩௧௩-வதில் பிரஜோற்பத்தி என்னும் வருஷத்தில் வைசாகமாசத்தின் கிருஷ்ணபக்ஷத்தில் சூரியக்கிரகணசமயத்தில் மகாமந்திரீசுவரரான உபநிஷத்துமார்க்கப்பிரவர்த்தகராகிய ஸ்ரீமத்மாதவராஜாவானவர் மாதவபுரமென்னும் பெயரைப்போட்டுக் கசரமென்னும் பெயரால் பிரசித்தமான கிராமத்தை இருபத்துநான்கு பிராம்மணர்களுக்குத் தானம் செய்தார் என்று எழுதப்பட்டிருக்கின்றது. அதனால் சகம் ௧௨00-க்குமேல் வித்தியாரணியசுவாமிகளின் ஜன்மம் உண்டாயிருக்கவேண்டும். ஸ்ரீ சிருங்ககிரி குருபத்ததியின்படி ஸ்ரீ சங்கராசாரியசுவாமிகளுக்கு ௧௩00 வருஷங்களுக்குப்பின் வித்தியாரணியசுவாமிகளிருந்திருக்கிறார்கள். இதன்படி ௬௫0 வருஷங்களானதாகத் தெரியவருகிறது. சித்தாந்தகௌமுதி யென்னும் வியாகரணநூலைச் செய்த பட்டோஜீதீக்ஷிதர்காலம் சற்றேறக்குறைய ௫00 வருஷமிருக்கலாம். அவர் ஸ்ரீ வித்தியாரணியசுவாமிகளது மாதவவிருத்தி யென்னும் நூலினைத் தமது நூலில் பிரமாணங்கொடுத்திருக்கின்றார். இதனாலும் ௫00 வருஷங்களுக்குமுன்னே ஜன்மமுண்டாயிருக்கவேண்டுமென்று தெரியவருகிறது.

மஹம்மது டோகுலாக் காலத்தில் கி.பி. 1334-ல் மாலிக் காப்பூர் என்பவனால் ஆனைகுந்திநகரம் அழிக்கப்பட்டதென்றும், அப்போது ஆனைகுந்திநகரத்தரசனாகிய பூபராயலு தீயிற் குதித்திறந்துபோகவே அவன் சேனாதிபதிகள் ஹரிஹரனும், புக்கனும் துலுக்கர்களுக்குப் பயந்து பம்பாவனத்தில் ஒளியப்போனபோது ஓர் பர்னசாலையில் தவஞ் செய்துகொண்டிருந்த ஸ்ரீ வித்தியாரணியரிடம் தெரிவித்துக்கொள்ள அவர் தம் தபோவலியால் அவர்களுக்கு உதவிசெய்து தம் பெயரால் வித்தியாரணியநகரமென்று ஒரு பட்டணமும் கட்டுவித்து அதனை ஹரிஹரராயலு ஆண்டுவரும்படி செய்தார். அவனுக்குப் பிறகு அவன் சகோதரன் புக்காராயலும் ஆண்டுவந்தான். இவ்விருவருக்கும் ஸ்ரீ வித்தியாரணியர் மந்திரியாகவும் புரோகிதராயுமிருந்திருக்கிறார். இவ்விருவரும் கி. பி. 1336 முதல் 1379வரையில் அரசாக்ஷி செய்திருக்கிறார்கள். அதன் பின் புக்கராயலுவின் புத்திரனான ஹரிஹரராயலு அரசாக்ஷிசெய்தகாலத்தும் மந்திரியாக விருந்து வேதபாஷியம் முடித்ததாகத் தெரியவருகிறது. இதனால் ஸ்ரீ வித்தியாரணியர் ஜன்மகாலம் கி. பி. 1300-ல் உண்டாயிருக்கலாமென்று ஊகிக்கப்படுகிறது.

வித்தியாரணியஸ்வாமிகள் மகாதுரந்தரபண்டிதரா யிருந்தனர். இவர் சொற்பகாலத்திலேயே சகல வித்தைகளையும் அத்தியயனம் செய்திருந்தனர். வெகுவாய்ச்சொல்லுவதிலென்? அநேகமேன்மையான பண்டிதர்களால் அங்கீகரிக்கப்பட்ட சர்வசிரோமணியாகிய ஸ்ரீ சங்கரமதத்தில் ஆசாரியர்களைவிட ஸ்ரீ வித்தியாரணியசுவாமிகளைப்போன்ற வித்துவான்கள் ஒருவரும் இருந்ததில்லை. இவர் அபூர்வ வித்துவானாயிருந்தனர் என்பது வித்துவான்களது முகத்தாலும் அவர்களது நூலினாலும் தெரியவருகின்றது.

ஸ்ரீ வித்தியாரணியஸ்வாமிகள் வைத்தியசாஸ்திரம், ஜோதிஷசாஸ்திரம், வியாகரணசாஸ்திரம், வேதாந்தசாஸ்திரமென்பவற்றின் பேரில் அநேக நூல்களைச் செய்திருக்கின்றனர். அவற்றுள் பிரதானமான சிலவற்றை இங்கு எடுத்துக்கூறுவாம்.—

க. வித்தியாரணியஸ்வாமிகள் நான்குவேதங்களின் பேரிலும் பாஷ்யஞ் செய்திருக்கின்றனர். அவற்றுள், ருக்வேதபாஷ்யம், யஜுர்வேதபாஷ்யம், சாமவேதபாஷ்யம், அதர்வவேதபாஷ்யம், நான்கு வேதங்களின் ஐதரேயம் தைத்திரீயம் தாண்டியம் சதபதம் என்னும் இவைமுதலிய பிராஹ்மணங்களின் பாஷ்யமுதலியன அச்சிடப்பட்டிருக்கின்றன.

உ. சர்வதர்சனசங்கிரகம் செய்திருக்கின்றனர். அதில் வேதாந்தத்திற்கு வேறாகிய சில பிராசீனமதங்களைக் காட்டியிருக்கின்றனர்.

௩. அநுபூதிப்பிரகாசமென்னும் ௩000 சுலோகசங்கையுள்ள நூலைச் செய்திருக்கின்றனர். அதில் வேதாந்தத்தின் சர்வ உபநிஷதங்களின் சாரார்த்தத்தினையும் சுருக்கமாகச் சர்வ ஆக்கியாயிகை(கதை)களுடன் காட்டியிருக்கின்றனர்.

௪. பிரஹ்மகீதை யென்னும் நூல் செய்திருக்கின்றனர். அதில் மாத்துவராமாநுஜமதங்களையும் சங்கரமதத்தினையும் எடுத்துக்காட்டிச் சுருதிசம்மதமான அத்வைதசித்தாந்தத்தினை காட்டியிருக்கின்றனர்.

அதன்பேரில் பிரகாசிகை யென்னும் உரையுளது.

௫. பஞ்சதசி யென்னும் நூலைச் செய்திருக்கின்றனர். அதன் வர்ணனைய் இந்நூலின் முகவுரையில் பிரசித்தம்.

௬. ஜீவன்முக்திவிவேகம் செய்திருக்கின்றனர். இதிற் சந்நியாசத்தின் விபாகபூர்வகமான ஜீவன்முக்திவிலக்ஷணசுகத்தின்றன்மை காட்டப்பட்டுளது.

௭. திருக்குத்திருசியவிவேக மென்னும் நூலும், ஸ்ரீமத் சங்கராசாரியசுவாமிகளாற் செய்யப்பட்ட அபரோக்ஷாநுபூதிக்கு உரையும் செய்திருக்கின்றனர்.

௮. மாதவவிருத்தி யென்னும் வியாகரணநூல் இயற்றியிருக்கின்றனர். இதில் கிரியாபதங்களின் மூல தாதுக்களாகிய ௨௨00 வினைப்பகுதிகளோடு வேறுவேறு பிரத்தியயங்களாகிய விகுதிகளைச் சேர்த்து சொல்லமையும்வண்ணமாகப் பாணினிசூத்திரபாஷியவார்த்திக வசனங்களைக்கொண்டு முறையே உதாரணங்கள் காட்டப்பட்டிருக்கின்றன. இதிற் பெரும்பாலும் எல்லாச் சொற்களும் கொள்ளப்பட்டிருக்கின்றன. இந்நூல் ௨௫000 சுலோகசங்கை யுள்ளது.

௯. நிதானமாதவம்:—இது க௫00 சுலோகசங்கையுள்ள வைத்தியநூல்.

க0. காலமாதவம்:—இது எல்லாக் காலங்களையும் நிர்ணயஞ்செய்வது.

கக. சதப்பிரசினகல்பலதிகா :— இதில் ஒவ்வொரு வினவிற்கும் விடைவடிவ பப்பத்துச்சுலோகங்கள் செய்யப்பட்டிருக்கின்றன. அப்பிரகரணங்களுக்குத் தசக மென்று பெயர்வைக்கப்பட்டிருக்கின்றது. இவ்வாறு நூறுவினுக்களுக்கு விடையாக நூறு தசகங்களிருக்கின்றன. அதில் பஞ்சத்திராவிட பஞ்சகௌடர்களுள்ளடங்கிய பிராஹ்மணர்களின் பேதம் காட்டப்பட்டுளது.

க௨. பராசரஸ்மிருதியின் வியாக்கியானம்:—இதற்குப் பராசரமாதவ மென்று பெயர்.

க௩. காலமாதவம்:—இது காலநிர்ணயத்திற்குச் சுவதந்திரமாகச் செய்த நூல். இதில் பஞ்சாங்கம் வர்ணிக்கப்பட்டிருக்கின்றது.

க௪. ஜைமினீயநியாயமாலாவிஸ்தாரம்:—இது ஜைமினிசூத்திரத்தின் பேரில் செய்யப்பட்டது.

கரு. ஆசாரமாதவம் :—இதில் பிராஹ்மணர்களது கிரமம் காட்டப் பட்டிருக்கின்றது.

கசு. வியவகாரமாதவம் :—இது வியவகாரத்தின் நியாயத்தைப் பற்றிய நூல்.

கஎ. வித்தியாரணியகாலஞானம்:—இதில் தெலுங்குதேசத்து இராஜாக்களின் மரியாதையும், இராஜ்ஜியம் செய்யும் புருஷர்களின் செய்கையுமாகிய வருங்காலவார்த்தை கூறப்பட்டுளது.

கஅ. ஸ்ரீ சங்கரதிக்விஜயம்:— இதில் சங்கராசாரியர்களது சரித்திரம் வர்ணிக்கப்பட்டிருக்கின்றது. இந்நூற்கவிதை வெகு மனோகரமும் மேன்மையுள்ளதும் ஆழமுடையதுமாம். இந்நூலின் முதல் சர்க்கத்தில் வித்தியாரணியர் தமக்கு நவீனகாளிதாஸன் என்னும் பெயர் கொடுத்திருக்கின்றனர். அஃது உசிதமேயாம். அவருடைய எழுத்துக்கள் வெகு சரளமும், மனோகரமும், கம்பீரமும், இரகசியார்த்த முடையனவுமாம்.

கசு. சூதசங்கிதையின் வியாக்கியானம்:— இவ்வுரையினால் அவர் சைவாகமத்தேர்ச்சியின ரென்பது விளங்குகின்றது.

உ0. சங்கரவிலாசம்:—இதில் சிவபாரம்மியம் கூறும் எல்லாப் புராணங்களின் வசனமும் திரட்டப்பட்டுள்ளது. இதனால் இவர் சிவோபாசக ரெனக் காணப்படுகின்றது.

உக. விவரணப்பிரமேயசங்கிரகம்:—இது பிரஹ்மசூத்திரடீகை.

உஉ. உபநிஷத்தீபிகா வென்னும் பெயரால் அநேக வுபநிஷதங்களுக்கு வியாக்கியானம் செய்யப்பட்டிருக்கின்றது.

உங. பிரஹ்மவிதாசீ:—இஃது சகல உபநிஷதங்களின் சாரபூதமான சிறிய அத்வைதநூல் வசனரூபமாய் சகல சித்தாந்தரகசியத்தினையும் சூத்திரம்போல் அடக்கிக் கூறப்பட்டுளது. இது மந்தப்பிரஞ்ஞையுள்ளவர்களிடத்து அவர்காட்டிய கருணையை விளக்குகின்றது.

கர்மவிபாகமாதவியம், பாட்டசாரம், பாட்டசாரவியாக்கியானம், வேதாந்தவிஜயம், பஞ்சசாரவியாக்கியானம், சங்கரபாஷ்யடீகா, கீதாதாற்பரியம், ஸ்மிருதிசங்கிரகமுதலிய அநேக நூல்களைச் செய்திருக்கின்றனர் எனத் தெரியவருகிறது.

ஸ்ரீவித்தியாரணியசுவாமிகள் பூர்வாசிரமத்தில் விஜயநகரத்தின் யதுவம்சியான புக்கதேவராஜாவின் குலகுருவாகவும் பிரதான மந்திரியாகவும் இருந்தனர் என்பது அதிகரணரத்நமாலைமுதலிய நூல்களில் விளக்கமாய் எழுதப்பட்டிருக்கின்றது. இவரது பிரதாபத்தால் அவ்வரசனது ராஜ்யமும், அவ்விராஜ்யத்தில் தர்மத்தின் அபிவிருத்தியும் உண்டாயிற்று.

கோவாநகரத்திலிருந்த துருக்கர்களை விலக்கி இவ்வரசனது ஆணையைச் செலுத்துவித்தார். சப்தநாதரென்னும் மகாதேவரது விக்கிரகத்தை ஸ்தாபனம் செய்தார். கசரமென்னும் கிராமத்திற்கு மாதவபுரமென்று பெயர் கொடுத்துப் பிராஹ்மணர்களுக்குத் தானம் கொடுத்தார். தமது மாதாவின் பெயரால் பூமியைத் தானஞ்செய்தபோது பிராஹ்மணர்களுக்குப்பூமியைப் பிரித்துத் தம் மாதாவினது பெயரின் அநுசாரமாகக் கிராமத்தினை ஆக்கினர். அங்கு ஓடுகின்ற நதிக்கு இவரது பழக்கத்தால் மாதவதீர்த்தமென்னும் பெயர் உண்டாயிற்று. வித்தியாசாலைகளும் அந்நசத்திரங்களும் தேவாலயங்களும் அளவிறந்தன செய்திருக்கின்றனர்.

தம்மாற் செய்யப்பட்ட அநேக நூல்களை வெகு சுத்தப்படுத்திப் பனையோலைமுதலியவற்றில் எழுதுவித்துச், சிலவற்றைமடங்களிலும் க்ஷேத்திரங்களிலுமாகப்பிரித்துக் கொடுத்தார். சிலவற்றை மலைக்குகையில் வைத்தார். சிலவிடங்களில் பூமியிலும் பல புதைத்து வைத்திருக்கின்றார். அவற்றுள் சிலவற்றை ஆங்கிலேயர் பூமியை வெட்டி யெடுத்திருக்கிறார்கள். இது நடந்து சுமார் ௭0 வருஷமாயிற்று.

இவர் கிரகஸ்தாசிரமத்திலும் அத்வைததத்துவத்தில் நிஷ்டையுள்ளவர்; விவேக வைராக்கியாதி சகல சற்குணங்களாலும் நிறைந்தவர். இப்படிப்பட்ட சற்புருஷர் பூத பவிஷ்யத் வர்த்தமானகாலத்திலும் கிடைத்தலரிது. இவ்வாறு ஸ்ரீ வித்தியாரணிய சுவாமியானவர் கிரகஸ்தாசிரமத்தில் காலக்ஷேபம் செய்திருக்கின்றனர். பின் ஒரு சமயத்தில் காயத்திரி தேவியை அபரோக்ஷமாக்க இச்சையுண்டாயிற்று. அதன்பொருட்டுச் சகலதேசத்துப் பிராஹ்மணர்களையும் அழைப்பித்துக் காயத்திரியின் புரச்சரணம் செய்தார். கடைசி அநுஷ்டானவடிவ பலமாகிய காயத்திரி அபரோக்ஷமாகவில்லை. அப்போது காயத்திரிஜபத்தின் பெருமையினாலோ அல்லது பூர்வபுண்ணியக்கூட்டத்தின் பரிபாகத்தினாலோ அவருக்குத் தீவிர வைராக்கிய முண்டாயிற்று. “எந்தத் தினத்தில் வைராக்கிய முண்டாகின்றதோ, அந்தத் தினத்திலேயே சந்நியாசத்தைக் கொள்ளவேண்டும்.” என்றல்முதலிய சுருதிவாக்கியங்களை யநுசரித்து அப்பொழுதே வித்துவத்சந்நியாசம் செய்துகொண்டனர். பின் காயத்திரி வந்து வரங்கொடுக்கத் தொடங்கினள். அப்போது வரத்தை ஏற்றுக்கொள்ளவில்லையாயினும் அமோக தரிசனமுடைய தேவியானவள் வலிய வரங்கொடுக்கத் தொடங்கி மிகப் பின் தொடர்ந்தாள். அப்போது அவர் “என் இச்சைப்படி இக்கர்நாடகதேசமுழுவதிலும் சகல ஜனங்களின் வறுமையும் தொலையுமாறு பொன் நாணயம் வருஷிக்கவேண்டும்” என்று வரங்கேட்டனர். அதற்கு அப்படியே ஆகுக வென்று கூறித் தேவி மறைந்தாள். பின் ஆத்தேசத்தரசனை, ஜனங்கள் அந்நாணயத்தினை யடையும் விஷயமாகக் கேட்டபோது,

அரசன் "ஜனங்களினது வீட்டின்பேரிலும் ஒன்றேகால் முழபரியந்தம் வீட்டைச்சுற்றிலும் விழும் நாணயம் அந்தந்த ஜனங்களைச் சேர்ந்தது. மிஞ்சிய வழிமுதலிய பூமியில் விழும் நாணயம் என்னைச் சேர்ந்தது." என்று சொன்னான். அப்போது அவரது ஆணையால் ஒன்றேகால் சாம பரியந்தம் நாணயமழை பெய்தது. அந்த நாணயத்தினை ஜனங்கள் வராகன் என்கிறார்கள். பின் அத்தேசத்தரசன் அதனைப்போல மற்றும் நாணயங்களைச் செய்வித்து அத்தேசத்தில் வியவகாரம் நடத்தினான் என்னும் வார்த்தை உலகத்திற் பிரசித்தம்.

## பிந்திய ஆசிரம விருத்தாந்தம்.

பிந்திய ஆசிரமத்தில் ஸ்ரீ வித்தியாரணியஸ்வாமிகள் யாஞ்ஞவல்கியரைப்போல வெகு உபரதியுண்டாய்ப் பிரஹ்மவிசாரத்திலேயே தற்பரராயிருந்தார். ஒருமுறை ஸ்வாமிகள் வெளிப்பூமிக்குப் போயிருந்தனர். அப்போது ஓர் துலுக்க அரசனது பொற்செங்கல் காட்டில் விழுந்துகிடந்தது. அங்கு அதனோடு மற்றோர் கல்லினைச் சேர்த்து அதன்பேரிலுட்கார்ந்து மலவிசர்ஜனம் செய்துபோயினர். அப்போது அவ்வரசன் இவ்வாறு சோதித்து வெகுசந்தோஷமடைந்து இவருக்குக் கிராமாதிகளைக் கொடுக்க அதனை அங்கீகரிக்கவில்லை. இவ்வாறிருந்தது இவரது விரக்தியென்னும் வார்த்தை உலகத்தில் கேட்கப்படுகின்றது.

காசியில் ஓர்வகை முயற்சியினால் ஸ்ரீ வேதவியாஸரைச் சந்தித்துத் தான் செய்த வேதபாஷ்யத்தைப் பரிசோதிக்குமாறு காட்ட அதில் ஓரிடத்தும் தோஷமின்மையைக் கண்டு வியாஸாசாரியர் இவருக்கு வித்தியாரண்ணியர் எனப்பெயர் கொடுத்தார் என்று கேட்கப்படுகின்றது. பிந்திய அவஸ்தையில் யாத்திரைக்குச் சக்தியில்லாதிருந்தமையால் தமது குருவின் ஆணையால் ஸ்ரீ சங்கராசாரியஸ்வாமிகளால் ஸ்தாபிக்கப்பட்ட சிருங்ககிரி மடாலயத்தில் ஆதிபத்தியத்தையடைந்து சங்கராசார்யபதவியால் பிரசித்தராய் அநேகமதங்களின் கண்டனத்தோடு தனது சுருதிசம்மதமான அத்வைதமதத்தை உயர்த்தினர்.

தம்மாற் செய்யப்பட்ட சர்வதரிசனசங்கிரகத்தின் ஆதியில் "தமது உசிதமான அர்த்தத்தோடு கூடிய ஆசரிதத்தினால் அர்த்தமுடையவர்களாக எல்லோரையும் எவர் செய்திருக்கின்றனரோ, அப்படிப்பட்ட ஸ்ரீ சாரங்கபாணிதநயரும் சகலாகமமுணர்ந்தவருமான சர்வஞ்ஞவிஷ்ணுகுருவை யான் நிரந்தரம் ஆசிரயிப்பேனாக." என்று மங்கலஞ் செய்திருத்தலால் சர்வஞ்ஞவிஷ்ணுவென்னும் பண்டிதர் இவருக்குக் குருவாயிருந்திருக்கின்றனர். ஆனால் அவர் வித்தியாகுருவாயிருந்திருக்கலாமென்று தெரிகிறது. பஞ்சதசியின் ஆரம்பத்தில் "ஸ்ரீ சங்கராநந்த குருபதாம்புஜன்மங்களுக்கு

நமஸ்கார" மென்று மங்கலஞ் செய்திருத்தலால் ஸ்ரீசங்கராநந்த ஸ்வாமியும் இவருக்குக் குருவாயிருக்கின்றனர். ஆனால் அவர் பிரஹ்மதத்துவோபதேசகுருவா யிருக்கலா மென்று காணப்படுகின்றது. சங்கரவிஜயம் ஜீவன்முக்திவிவேகமுதலிய கிரந்தங்களிலும் ஸ்ரீ வித்தியாதீர்த்தகுருவின் மங்கலஞ் செய்திருக்கின்றனர். அதனால் ஸ்ரீ வித்தியாதீர்த்தரும் இவருக்குக் குருவாயிருக்கின்றனர். ஆனால் பால்யாவஸ்தையில் மந்திரதீக்ஷைக்கும் உத்தராவஸ்தையில் சந்நியாஸதீக்ஷைக்கும் குருவாயிருந்திருக்கலா மென்பது தர்க்கத்தினா லறியப்படுகின்றது. இவரும் இவருக்கு முன்பட்டத்திருந்த ஸ்ரீபாரதிகிருஷ்ணதீர்த்தரும் இப்பரம்பரையின் ௧௦-வது பட்டத்திருந்த வித்தியாதீர்த்தர் அல்லது வித்தியாசங்கரது மாணாக்கரென்று சிலர் எழுதியிருக்கின்றனர். பின்வரும் குருபரம்பரையிலும் வேலாயுதமுதலியார் செய்த சங்கரவிஜயமுகப்பிலுள்ள குரும்பரையிலும் வித்தியாதீர்த்தருக்குப் பின் பாரதிகிருஷ்ணதீர்த்தர், அவருக்குப்பின் வித்தியாரணியர் என்று தெளிவாய்க் காணப்படுகின்றது.

---

## குருபரம்பரை.

॥ श्रीगुरुभ्यो नमः ॥

॥ श्रीजगद्गुरुपरंपराप्रारंभः ॥

महादेवो महाविष्णुस्तितीयश्चतुराननः ।
वशिष्ठश्शक्तियोगींद्रः पराशरमहामुनिः ॥ १ ॥
व्यासश्शुकोगौडपादो गोविंदभगवान्मुनिः
गुरुः श्रीशंकराचार्यष्षणमतस्थापनप्रभुः ॥ २ ॥
सुरेश्वराचार्ययोगी नित्यबोधघनाभिधः ।
ततो ज्ञानघनाचार्यो ज्ञानोत्तममहामुनिः ॥ ३ ॥
ज्ञानगिर्याचार्यवर्यस्तथा सिंहगिरीश्वरः ।
ततश्चेश्वरतीर्थाख्यो नृसिंहाभिधतीर्थकः ॥ ४ ॥
विद्याशंकरतीर्थाख्यो लंबिकायोगतत्परः ।
भारतीकृष्णतीर्थाख्यो विद्यारण्यमहामुनिः ॥ ५ ॥
विद्यानगरनिर्माता वेदभाष्यादिकृद्गुरुः ।
श्रीचंद्रशेखराभिख्यभारती च ततः परम् ॥ ६ ॥

नृसिंहभारतीवर्यो नृसिंहोपासकस्तथा ।
भक्तशंकरनामाढ्यपुरुषोत्तमभारती ॥ ७ ॥
श्रीचंद्रशेखराभिख्यभारतीतदनंतरं ।
नृसिंहभारती चैव पुरुषोत्तमभारती ॥ ८ ॥
भारतीरामचंद्राख्यो नृरसिंहाख्यभारती ।
नृसिंहभारती भूयो नृसिंहोभिनवस्तथा ॥ ९ ॥
सच्चिदानंदयोगींद्रः स्तंभे हेरंबदर्शकः ।
श्रीनृसिंहाख्ययोगींद्रस्सच्चिदानंदभारती ॥ १० ॥
ततश्चाभिनवाभिख्यसच्चिदानंदभारती ।
ततोभिनवपूर्वश्रीनसिंहाभिधभारती ॥ ११ ॥
सच्चिदानंदयोगीशस्तपश्चर्यापरायणः ।
पुनश्चाभिनवाभिख्यसच्चिदानंदभारती ॥ १२ ॥
श्रीशृंगेरीपुराधीशः श्रीविद्यामंत्रबोधकः ।
श्रीमदाचार्यसदृशः श्रीनृसिंहयतीश्वरः ॥ १३ ॥
भारतीनामविख्यातस्तपश्शीलो जगद्गुरुः ।
राजाधिराजसंपूज्यो जगत्ख्यातो विराजते ॥ १४ ॥
श्रीचामुण्डाकृपापूर्णश्रीकृष्णेंद्रेण कीर्तिता ।
जीयास्तदा श्रीशृंगेरीजगद्गुरुपरंपरा ॥

॥ इति श्रीजद्गुरुपरंपरा ॥

---

இவ்விதத்தால் ஸ்ரீ சங்கராசாரியசுவாமிகளின் ௧௨-வது பதவியில் ஸ்ரீ வித்தியாரணியஸ்வாமிகளிருந்திருக்கின்றனர். இதனாலும் இப்போது ஸ்ரீவித்தியாரணியஸ்வாமிகளுக்கு ௫00 வருஷங்களுக்கு மேலாயின என்று நிச்சயிக்கப்படுகின்றது. ஸ்ரீ பாரதிதீர்த்தர் வித்தியாரணியருக்கு நேரே பரம்பரைக் குருவாயிருத்தலால் அவர் செய்த பிரஹ்மாநந்தமென்னும் நூலையும், அவராலேயே செய்யப்பட்டதான விஷயாநந்தம் ௩௯-வது சுலோகத்தின் "उभयं तृप्तिदीपे हि सम्यगस्माभिरीरितम् । இரண்டும் எம்மால் திருப்திதீபத்தில்செவ்வையாகச் சொல்லப்பட்டிருக்கின்றது" என்னும் வாக்கியத்தாற்றணியப்படும் திருப்திதீபமுதலிய ௭ பிரகரணங்களையும்சேர்த்து ஸ்ரீபஞ்சதசி

யென்னும் ஒரு நூலாக வித்தியாரணியர் செய்திருக்கலாமென்று ஊகிக்கப்படுகின்றது. ஜீவன்முக்திவிவேகத்தில் "துக்கநாசசுகாவிர்ப்பாவாதிவ நான்காவது ஐந்தாவது பிரயோஜனங்கள் பிரஹ்மாநந்தத்திலுள்ள நான்காவது அத்தியாயத்தினால் நிரூபிக்கப்பட்டிருக்கின்றன. அவ்விரண்டும் இங்குச் சுருக்கிச்சொல்லப்படுகின்றன" வென்று வித்தியாரணியரே தமது முகத்தால் கூறியிருத்தலால் அவருக்குப் பிந்தியகாலத்தில் ஆநந்தபஞ்சகம் செய்யப்பட்டிருக்கலாமென்பது கூடாததாம்.

இவ்வாசிரியர் இவ்வாறு சிருங்ககிரியில் சிறிதுகாலம் இருந்து, பின் வயதில் ஸ்ரீபஞ்சதசிமுதலியவற்றினைச் செய்து தாம் பிரஹ்மசமரஸபாவத்தினை யடைந்தனர். காயத்திரியானவள் தனது சாக்ஷாத்காரசமயத்தில் "உத்தராவஸ்தையில் நீ ஓர் நூலினைச் செய்வாய் அதனை எவன் செவ்வையாகப் படிப்பானோ அவனுக்குச்சகலநூல்களையும் படித்தலினும் கேட்டலினும் சாமர்த்திய முண்டாகுக" வென்று வரம் கொடுத்தாள் என்று கேள்விப்படுகிறோம். அஃது இதுவே யெனப்படுதலின் இது வரப்பிரசாதகிரந்தமாம். ஆதலால் சதுர்வேதபாஷியகர்த்திருத்துவமுதலிய சர்வஞ்ஞத்துவவிசிஷ்டமகானாகிய வித்தியாரணியரும், பாரதீதீர்த்தரும் சேர்ந்துசெய்ததும் வரம்பெற்றதுமான இப்பஞ்சதசிக்கிரந்தம் எல்லாநூல்களினும் மேலானதாம். இதனைப் படித்து முமுக்ஷுக்கள் வேதாந்தப்பிரக்கிரியையில் சமர்த்தர்களாய்ப் பிரஹ்மாத்ம ஏகத்துவத்தை அபரோக்ஷமாக்கி ஜீவன்முக்தி விதேகமுக்திகளுக்குப் பங்குடையவர்க ளாகுக.

* ஸ்ரீ பாரதிதீர்த்தர் வியாசாதிகரணமாலைமுதலியவற்றைச் செய்திருப்பதாகத் தெரியவருகிறது. ஆனால் அவரது சரித்திரம் விசதமாகத் தெரியவில்லை யாகலின் இங்கு எழுதப்படவில்லை.

ஸ்ரீ வித்தியாரணியஸ்வாமிகளின் சரித்திரம்,

முடிந்தது.



# ஸ்ரீபஞ்சதசி.

## பிரசங்காநுக்கிரமணிகை.

### பிரத்தியக்தத்துவவிவேகம்.

# பிரசங்காநுக்கிரமணிகை.

பஞ்சமகாபூதவிவேகமென்னும் இரண்டாம்பிரகரணம்

முடிந்தது.

---

## பஞ்சகோசவிவேகம் ங.

பஞ்சகோசவிவேக மென்னும் மூன்றும்பிரகரணம்

முடிந்தது.

---

## துவைதவிவேகம் ச.

கிரந்தாரம்பத்தின் பிரதிஞ்ஞையும் பிரயோஜனமும்.

துவைதவிவேக மென்னும் நான்காம்பிரகரணம்

முடிந்தது.

## மகாவாக்கியவிவேகம் ரு.



மகாவாக்கியவிவேக மென்னும் ஐந்தாம்பிரகரணம் முடிந்தது.

---

## சித்திரதீபம் ௬.

# பிரசங்கானுக்கிரமணிகை.

சித்திரதீபமென்னும் ஆறும் பிரகரணம்.

முடிந்தது.

---

## திருப்திதீபம் எ.

திருப்திதீபமென்னும் ஏழாவதுபிரகரணம்

முடிந்தது.

---

## கூடஸ்ததீபம் அ.

# பிரசங்காநுக்கிரமணிகை.

கூடஸ்ததீபமென்னும் எட்டாம் பிரகரணம் முடிந்தது.

---

## தியானதீபம் கூ.

பிரசங்கம். பக்கம்.

நாடகதீபமென்னும் பத்தாம்பிரகரணம்

முடிந்தது.

---

## யோகாநந்தம் ௧௧.

யோகாநந்தமென்னும் பதினேராம் பிரகரணம்

முடிந்தது.

---

## ஆத்மாநந்தம் கஉ.

# பிரசங்காநுக்கிரமணிகை. 

பிரஹ்மாநந்தில் ஆத்மாநந்தமென்னும்
பன்னிரண்டாம் பிரகரணம்
முடிந்தது.

---

## அத்வைதாநந்தம் கங.

# பிரசங்கானுக்கிரமணிகை.



அத்வைதாநந்தமென்னும் பதின்மூன்றும் பிரகரணம் முடிந்தது.

# பிரசங்காநுக்கிரமணிகை.



வித்தியாநந்தமென்னும் பதினான்காம் பிரகரணம்

முடிந்தது.

---

## விஷயாநந்தம் கரு.

விஷயாநந்தமென்னும் பதினைந்தாம் பிரகரணம்

முடிந்தது.

# ஸ்ரீ பஞ்சதசி.

## அகாராதி விஷய அட்டவணை.

அகராதி விஷய அட்டவணை.

முடிந்தது.



# ॥ श्रीपंचदशी ॥

## ॥ श्लोकदर्शकाकाराद्यनुक्रमणिका ॥

இங்குக் காட்டிய இலக்கங்கள் சுலோகவிலக்கங்களாம்.

इति श्लोकानुक्रमणिका संपूर्णम् ।

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| | | பிரத்தியக்தத்துவவிவேகம். | |
| அ | க | * ஙச ஆகாசாதி | ஆகாசாதி |
| அ | கூ | ஞான ஆகாயத்தை | ஆகாயத்தை |
| கஉ | ஙக | நான்கு பிரமாணங்களின் | நான்கு பிரமைகளின் |
| கச | ங | இவள் என் தாய் | அவள் என் தாய் |
| உகூ | கஅ | சங | சஉ |
| ஙக | ரு | ,, | உ. ஞானேந்திரியங்களின் உற்பத்தி |
| ஙங | கங | பிராணிகளின் | பிராணன்களின் |
| சஉ | கக | जन्मनौजन्म | जन्मनोजन्म |
| சஉ | கரு | जन्मत: | जन्मन: |
| ருகூ | உச | மகாவாக்கியத்தில் | மகாவாக்கியத்தின் |
| சாஉ | கஎ | அவ்விர்ண்மனும் | அம்மூன்றினும் |
| ஷை | உக | அவ்விரத்மாசிரய | அவ்வாத்மாசிரயாதி |
| சாங | ச | விகற்பத்தினும் | விகற்பபதத்தினும் |
| சாகூ | ஙரு | அங்நியகர்மஜ | அங்நியத்ரகர்மஜ |
| எ௦ | உ | கிருபையால் | கிரியையால் |
| ஷை | ங | கிருபையால் | கிரியையால் |
| எக | ங | संधानै: | संधानं |
| எஉ | ஙகூ ஙஎ | அது இரண்டு கபாலங்களின் சையோகவிபாகத்தின்பொருட்டுசேஷ்டையுண்டாகின்றது அது | அது |
| எரு | ச | ,, | ங. நிர்விகற்பசமாதியின் நிரூபணம் ருரு-கூக |
| ஷை | ரு | ங. சமாதியின் | க. சமாதியின் |
| எசா | கஅ | அநுபவிக்கப்படுகின்றன | அநுமிக்கப்படுகின்றன |
| | | பஞ்சமகாபூதவிவேகம். | |
| க௦அ | ஙச | ஜோதி, தேயு, | ஜோதி (தேயு) |
| க௦அ | சஉ | சமஷ்டிபிர்மான | சமஷ்டிப்பிராண |
| க௦கூ | கங | सौम्येदमग्र | सदेवसौम्येदमग्र |
| ககக | கசா | மூன்று ே தே | மூன்றுபேத |
| ககச | ரு | ष्टित: | सृष्टित: |
| ககச | கசா | அவயத்தினலாம் | அவயவத்தினலாம் |
| ககஅ | உ௦ | கூடியதற்கு | கூடியதாகு |

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| ககஅ | உஎ | (சத்தே) | (அசத்தே) |
| கஉ0 | ச | ·ह्मस्मा | ह्यस्मा |
| கஉ0 | கரு | பொருந்தும் | பொருத்தும் |
| கஉ0 | உகூ | அல்லது அநாத்மவஸ்தோடாவது எதனால் | எதனால் |
| கஉக | உச | पादाः | पादाः च |
| கஙக | கஅ | बुद्धिमाश्रितं | बुद्धिमाश्रितं |
| கஙரு | அ | निर्मनस्कत्वं साक्षि | निर्मनस्कत्वसाक्षि |
| கஙசு | ஙக | மாகையமல் | மாகையால் |
| ஙஙகூ | உ | शून्यं | न शून्यं |
| கசஉ | சு | तान्निषेधनात् | तन्निषेधनात् |
| கசரு | ச | घठ | घट |
| கசஎ | கஉ | श्रति: | श्रुति: |
| கசஎ | உக | ஏகதேசவிருத்தவில் | ஏகதேசத்திருத்தவில் |
| கரு0 | உரு | சுக்தியின் | சக்தியின் |
| கருஅ | ககூ | தர்மமாம் | தர்மியாம் |
| கசுரு | க | वादिनाम् | वादिनम् |
| கசுரு | எ | ஷை | ஷை |
| கசுசு | உரு | சத்துவாயுக்களின் தர்மத்தால் | சத்துவாயுக்களின் சம்பந்தத்தினைக்காட்டி அச்சத்துவாயுக்களின் தர்மத்தால் |
| கசுகூ | க | पूवोक्ति | पूर्वोक्ति |
| கசுகூ | கரு | சப்தத்தின் அநுவிருத்தி | சப்தவடிவதர்மத்தின் அநுவிருத்தி |
| கஎ0 | உங | வியக்தத்தன்மை | வியக்தா வியக்தத்தன்மை |
| கஎச | உச | आग्ने: | अग्ने: |
| கஎகூ | ச | இந்த வரியிலுள்ள ங.இலக்கமுள்ள விஷயக்குறிப்பினை நீக்கிப்படிக்க | |
| கஅ0 | உரு | बौद्धार्थौ: | बौद्धार्थैः |
| கஅ0 | ஙச | பிரத்தியயத்தன்மை | பிரத்தியக்ஷத்தன்மை |
| கஅக | உஎ | चैदद्वैते | चेदद्वैते |
| கஅச | உ | सतायाः | गतायाः |
| கஅச | ரு | க0ருவது சுலோகத்தின் பிற்பாதியில் ச. ஞானிகளுக்குப்பிராந்தியின்மை என்னும் விஷயக்குறிப்பினைச் சேர்த்துப்படிக்க | |
| கஅச | உசு | தேகாதியாயிருக்கிறேன் | தேகாதியாயிருக்கிறேன் அல்லது ஜீவனாயிருக்கிறேன் |

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| | | பஞ்சகோசவிவேகம். | |
| ௧௯௦ | ௨ | विहितं | निहितं |
| ௧௯௦ | ௧௪ | देहाभ्यंतरः | देहादभ्यंतरः |
| ௨௦௪ | ௧௪ | ऽलिखात् | ऽखिलात् |
| ௨௦௭ | ௪ | तद्विदिताविदि | तद्विदितादथो अविदि |
| ௨௧௧ | ௨ | சூநியமாதலால் | சூநியமாதல் |
| ௨௧௧ | ௨௭ | विवाद् | विवादा |
| ௨௧௩ | ௨ | பிராந்தியொன்றை | பிராந்தியாகிய காரணம் ஒன்றை |
| ௨௨௨ | ௧௮ | एव एषः | सः एषः |
| ௨௨௨ | ௩௦ | சத்திற்குப் | சப்தத்திற்கு |
| ௨௨௫ | ௬ | ௨௦௬ | ௨௦௯ |
| ௨௨௬ | ௫ | सर्वगतस्य | सर्वगतश्च |
| ௨௨௭ | ௧௬ | * ௩௮ | * ௩௭ |
| ௨௨௭ | ௨௨ | பிரஹ்மயாம் | பிரஹ்மமேயாம் |
| ௨௩௧ | ௨௭ | (அ-கை.) | (வி-ம்.) |
| | | துவைதவிவேகம். | |
| ௨௪௧ | ௨௮ | விசேஷமாக | விசேஷணமாக |
| ௨௪௯ | ௫ | वाङ्मयमनोमयोः | वाङ्मयोमनोमयः |
| ௨௫௪ | ௧௬ | ௨௪௩ | ௨௪௦ |
| ௨௫௯ | ௧௮ | அந்தப்பிரமேய | அந்தப்பிரமாணம் பிரமேய |
| ௨௬௧ | ௨௫ | बद्ध्येत | बध्यते |
| ௨௬௪ | ௧௮ | बाह्य | वाबाह्यं |
| ௨௬௭ | ௪ | वेतांत | वेदांत |
| ௨௭௦ | ௪ | ௨௬௦ ௨௬௮ | ௨௬௦.௨௭௦ |
| ௨௭௫ | ௨ | ௨௬௦ ௨௭௦ | ௨௬௬ ௨௭௦ |
| ௨௭௭ | ௨௨ | ஜனனமனன | ஜனனமரண |
| ௨௮௮ | ௧௦ | सपन्न | संपन्न |
| ௨௮௯ | ௩ | अल | अलं |
| | | மகாவாக்கிய விவேகம். | |
| ௨௯௫ | ௨௧ | ஜாதி | ஜ்ஞதி |
| ௨௯௬ | ௨௧ | பிரஜாதியாம் | பிரஜாபதியாம் |

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| | | சித்திரதீபம். | |
| ௩௧௬ | ௨௨ | சம்ஸ்காரம் | சம்சாரம் |
| ௩௧௮ | ௧௪ | संसारा | संसारो |
| ௩௨௨ | ௨ | ஆத்மதத்துவ | உ ஆத்மதத்துவ |
| ௩௨௬ | ௬ | கடஸ்தானத்து | கடாகாசஸ்தானத்து |
| ௩௨௮ | ௧௬ | க, ஜீவ | உ. ஜீவ |
| ௩௩௪ | ௨௫ | விவேகமும் | (விவேகமும்) |
| ௩௪0 | ௨௫ | यद्वत् | यद्वत् इदं |
| ௩௪௬ | ௬ | அஃதெனுந்தன்மை | அஃதெனுந்தன்மை இஃதெனுந்தன்மையில் ஆத்மத்தன்மை |
| ௩௪௮ | ௧௮ | द्वंदी | द्वंद्वी |
| ௩௫0 | ௪ | पूर्वोक्ता वियाकृतः | पूर्वोक्ताविद्यया कृतः |
| ௩௫௨ | ௨௯ | किंतु | किन्तु |
| ௩௫௯ | ௧௯ | பிரார்த்திக்கிறேன் | பார்க்கிறேன் |
| ௩௫௯ | ௨௯ | इंद्रियाणं | इंद्रियाणां |
| ௩௬௧ | ௩0 | ஜீவனும் | ஜீவனமும் |
| ௩௬௨ | ௯ | प्राणदय | प्राणादय |
| ௩௬௩ | ௧௭ | போக்திருத்துவமில்லாமை | பிராணனுக்குப் போக்திருத்துவமில்லாமை |
| ௩௬௪ | ௨0 | வசனங்களால் பாதமாகுதலால் | வசனத்திற்கு மனோமய கோசத்திற்கு ஆத்மதன்மையைப் பிரதிபாதிக்கும் வசனங்களால் பாதமாகுதலால் |
| ௩௬௮ | ௧௪ | आगमाः | इति आगमाः |
| ௩௭௩ | ௯ | ஆந்தரமாகிய ஆத்மா | ஆந்தரமாகிய ஆநந்தமய ஆத்மா |
| ௩௭௩ | ௨௧ | वेत्येव | वेत्येवं |
| ௩௭௪ | ௫ | विवदंतीह | विवदंतेहि |
| ௩௯௩ | ௨௩ | (சு-ம்) | (அ-கை) |
| ௩௯௩ | ௨௫ | विपाकैं | विपाकै |
| ௩௯௫ | ௧௩ | वंयमोक्षौ | वंधमोक्षौ |
| ௩௯௭ | ௭ | मन्यते | मन्वते |
| ௪௧௪ | ௯ | வியாபகத்தை | விபாகத்தை |
| ௪௩௧ | ௧0 | इति | इति एवं |
| ௪௩௩ | ௨௭ | சுருதியை | துதியை |
| ௪௩௮ | ௨௪ | पटः यथा | यथा |
| ௪௩௯ | ௫ | यथा | यथा विक्रियते तथा |

| பக்கம். | வரி | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| சசக | உசா | தர்மங்களில் | கர்மங்களில் |
| சசஉ | கஎ | श्रतः | श्रुतः |
| சசஉ | உஅ | பொருந்தத்தக்கதாம் | பொருத்தத்தக்கதாம் |
| சசச | க0 | ईदृग्बोधेन एव | ईदृग्बोधेन |
| சசரு | உஎ | प्रशाशने | प्रशासने |
| ஷை | ஷை | अतः प्रविष्टः अय | अंतः प्रविष्टःअयं |
| சசசா | ககூ | प्रभवाप्ययं | प्रभवाप्यय |
| சருக | க | சஅஉ-சசாக | சஅஉ-சகூக |
| சருச | அ | मतः | गतः |
| சருச | உ0 | मेघाकाश | मेघाकाश |
| சருசா | உ | உபசங்காரம்செய்து | உபக்கிரமம்செய்து |
| சருஅ | ஙஎ | சுருதியநுமானமாக | சுருதியநுசாரமாக |
| சசாஉ | கஎ | ஆதபாலோக | ஆதபாபாதலோக |
| சசாச | கக | ऐते | एते |
| சசாசா | கஅ | त्रयमेतू सुषुप्तं माया मात्रं | त्रयमेतत् सुषुप्तं स्वप्नमाया मात्रं॥ |
| சசாஅ | ச | சொப்பனபரியந்த | மோக்ஷபரியந்த |
| சகூ0 | கங | சகல | சிந்திக்கத்தகாத வடிவ சகல |
| ரு0உ | கரு | मेस्यादिदं | इदं मेस्यादिदं |
| ருக0 | எ | विदंनित्य | विंदन्नित्य |
| ருகக | உரு | அக்காரணத்தால் | சங்கமின்றியவன் சுகத்தைப் புசிக்கின்றானே, அக்காரணத்தால் |
| ருகங | ச | क्वचित् | क्वचित् क्वचित् |
| ருககூ | கங | बाधो | बोधो |

திருப்தி தீபம்.

| பக்கம். | வரி | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| ருஉஅ | உஉ | तत्त्वतः | श्रुतत्त्वतः |
| ருஙக | ங | तमोऽभिभूत | तमोऽभिभूतः |
| ருஙக | சா | ஆத்மமாயையினால் | ஆத்மாமாயையினால் |
| ருசரு | ஙக | निर्णेतुमित्यभि | निर्णेतुमयमित्याभि |
| ருசகூ | கஉ | தார்ஷ்டாந்த | உ, தார்ஷ்டாந்த |
| ஷை | கங | ,, | சா0எ-சாகஉ |
| ஷை | கசா | दशमोऽस्तीति | दशमोस्मीति |
| ருருகூ | ரு | ऐतविक्षेपात् | एतेविक्षेपात् |
| ருசாகூ | ரு | பிரஹ்ம | பிரம |
| ருஎக | உசா | परोक्षज्ञानस्तथा- | परोक्षज्ञानतस्तथा |
| ருஎஅ | உசா | अन्नं प्रमाणं | अन्नं प्राणं |
| ருகூசா | ச | உண்டுபண்ணுவதென் | உண்டுபண்ணுவதன்றென் |

| பக்கம் | வரி | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| ௫௯௯ | ௨௯ | ௯௬௭-௬௮௦ | ௬௭௭-௯௮௦ |
| ௫௯௮ | ௯ | சொல்லவேண்டா | சொல்லவேண்டு |
| ௬௦௭ | ௧ | ननानास्ति | नेहनानास्ति |
| ௬௧௭ | ௨௯ | கதாதரசுவாமி | கங்காதரசுவாமி |
| ௬௪௭ | ௩ | विमृशम् | विमृशन् |
| ௬௫௭ | ௭ | விற் | நிவர்த்தித்தலிற் |
| ௬௭௩ | ௧௩ | वियाऽहुवात | वियाऽपहुवीत |
| ௬௭௯ | ௫ | சங்கையும் | பரிகாரத்தின் சங்கையும் |
| ௬௮௮ | ௨௯ | விசாரவடிவ | விகாரவடிவ |
| ௭௧௮ | ௧ | கூறிய | கூறிய அர்த்தத்தில் |
| ௭௨௦ | ௭ | ராஜபுத்திகன் | ராஜபுத்திரன் |
| ௭௨௦ | ௨௦ | श्रुत्वा | श्रुतिं श्रुत्वा |
| ௭௨௮ | ௧௪ | भूयो | भूयो भूयो |
| ௭௨௮ | ௨௫ | भूयः | भूयः भूयः |
| ௭௩௪ | ௮ | क्रर्माणि | कर्माणि |
| ௭௪௨ | ௩௫ | பிரஹ்மத்துவ | பிரஹ்மதத்துவ |
| ௭௪௮ | ௧௯ | சரீரத்திலும் | சரீரத்திலும் வாக்கிலும் |
| ௭௫௯ | ௧௦ | युद्ध्वा | युध्वा |
| ௭௫௭ | ௨௯ | இப்போகத்தின் | இப்போதத்தின் |
| ௭௬௭ | ௧௧ | சர்வசாஸ்திரங்களின் | சர்வசாதனங்களின் |
| | | கூடஸ்த தீபம். | |
| ௭௮௧ | ௪ | कुंभेः | कुंभे। |
| ௭௮௬ | ௯ | ஞாதத்தன்மைக | ஞாதத்தன்மைஅஞ்ஞாதத் தன்மைக |
| ௭௮௮ | ௧௯ | गम्यते | गम्यन्ते. |
| ௭௯௧ | ௧௩ | அவச்சேத | அவச்சின்ன |
| ௭௯௭ | ௨௨ | कथंत्विदं | कथंन्विदं |
| ௭௯௭ | ௨௬ | कथं तु | कथं नु |
| ௮௦௯ | ௨ | विवेरण | विवरणे |
| ௮௨௦ | ௨௩ | त्यर्थं | श्रुत्यर्थं |
| | | தியான தீபம். | |
| ௮௩௧ | ௫ | द्रे | दूरे |
| ௸ | ௸ | अभिधावतो | अभिधावतौः |
| ௮௫௮ | ௪ | एवं | एतं |
| ௮௮௦ | ௧௫ | வியயம் | அவ்வியயம் |
| ௮௯௧ | ௯ | कुर्यात्प्रयय | कुर्यात्प्रत्यय |

| கம். | வரி | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| ச | ங0 | तथा | यथा |
| எ | கஎ | बुद्धि | न बुद्धि |
|  | சக | तत्त्वविद् | तत्त्ववित् १०२ |
| ı | கங | वर्णाश्रमवयावस्था | वर्णाश्रमवयोवस्था १०३ |
| சா | ஙக | இந்த யுக்தியின்றி | இந்தப்புக்தியின்றி |
| ரு | ககூ | अन्तत् | अन्यत् |
| கூ0அ | உச | விகாரமின்மை | விசாரமின்மை |
| கூ0கூ | உரு | இடபம் | இடம்பம் |
| க | உகூ | सापथ्यं | सामथ्यं |
| கூஉங | ங0 | கிரமமின்றி | சிரமமின்றி |
| கூஙக | கஅ | எத்தப்புருஷன் | எந்தப்புருஷன் |
| கூஙக | உக | युक्तः यथा | युक्तः सहात्मनायथा |
| கூஙரு | உச | அதிந்திரியனும் | அதீந்திரியனும் |
| கூஙஎ | கஎ | पुरिशय | पुरिशयं |
| கூசக | உக | यः य. | यः |
| கூசங | ச | स्वात्मचितां | स्वात्मचिंतां |
| | | நாடக தீபம். | |
| கூசஅ | ஙங | உஉ-உரு சுலோகங்களிலும் | உ0—உரு சுலோகங்களிலும் |
| கூசாகூ | ககூ | வஸ்துவினை | வஸ்துவினைச்சுருதியினுல் |
| | | பிரஹ்மாநந்தத்தில் யோகாநந்தம். | |
| கூஅக | உரு | आत्मानं | एते आत्मानं |
| கூகூகூ | உஎ | शैाक | शोक |
| தூஉ0 | ககூ | परमात्मनि | परात्मनि 1020 |
| க0ருகூ | கச | சு கதுக்கங்களின் | சுகதுக்கங்களின். |
| | | ஆத்மாநந்தம். | |
| கக0உ | கஅ | கூ | சு |
| கககக | எ | अनुकूल्यात् | आनुकुल्यात् |
| கககக | கஅ | போகத் தன்மைவடிவ உபாதியுண்டு | போகத் தன்மை வடிவவுபாதியில்லை |
| ககககூ | உஅ | இருக்கவேண்டும் | இருக்கவேண்டாம் |
| ககஉ0 | கூ | கங0எ-கஙஉஅ | கங0அ-கஙஉகூ |
| ககசச | உ | பிரியத்துவம் | பிரியதமத்துவம் |
| ககசஎ | கச | पुत्रः | पुत्रः प्रियः |

| பக்கம். | வரி | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| ககசா௩ | ௩எ | பிரதிபிம்பத்தால் | பிரதிபந்தத்தால் |
| ககசாகூ | உஅ | பிராப்தவடிவ பிரதிபந்தத்தினால் பிராப்தபோகம் | பிராரப்தவடிவப்பிரதிபந்தத்தினால் பிராரப்தபோகப் |
| | | அத்வைதாநந்தம். | |
| ககஎ௩ | க0 | க௩எகூ | க௩எசா |
| ககஅரு | உ | சக்தத்தினும் | சக்தனினும் |
| கககூக | உ௩ | रामः | राम ! |
| கககூஅ | கசா | रामः | राम ! |
| கஉஉஎ | கச | अज्ञस्य केन | अज्ञस्यविस्मयः केन |
| கஉ௩௩ | ச | जीवेनानुप्रविश्य | जीवनात्मनानुप्रविश्य |
| கஉசக | உ | நிஜவடிவத்தினை | நிஜசுகத்தினை |
| கஉரு0 | கஅ | इदं यक्त | इदं युक्तं |
| கஉருரு | ரு | उपक्षो | उपेक्षा |
| கூஉருசா | கக | क्षणध्वंसिनी | क्षणध्वंसिनि |
| | | வித்தியாநந்தம். | |
| கஉஎ0 | கஉ | கூடியபடி | கூறியபடி |
| கஉஎ௩ | ௩0 | சொல்லுகிறவனை | கொல்லுகிறவனை |
| கஉஎ௩ | ௩க | சொல்லுகிறவனகிர | கொல்லுகிறவனகிர |
| கஉஎ௩ | ௩உ | அந்தச்சொல்லுதற்கிரியை | அந்தக்கொல்லுதற்கிரியை |
| கஉஎச | ச | தாய்வதையினுமில்லை | தாய் வதையினு மில்லை பிதிருவதையினு மில்லை |
| கஉஎரு | உஅ | சா. சுலோகம் | ௩ சுலோகம் |
| கஉஎஎ | ச | வித்தையுடையவனும் | வித்தை யுடையவனும் ரோகமில்லாதவனும் |
| கஉஅ0 | உஉ | तः | अतः |
| கஉஅ௩ | உஅ | உத்திரர் | ருத்திரர் |
| கஉஅஎ | உ0 | கருகஅ | ௩ருஉஅ |
| கஉகூஉ | கூ | தத்துவத்தையுணர்ந்தவர்க | தத்துவத்தை யுணராதவர்க |
| கஉகூ௩ | ௩ | असु | असुं |
| கஉகூரு | உகூ | அரு-வது சுலோகத்தின் | எசா0-வதுபக்கத்தின் |

ஸ்ரீபஞ்சதசி பிழை திருத்த அட்டவணை
முடிந்தது.

ஓம்

தத்ஸத் பிரஹ்மணே நம:

## ஸ்ரீசங்கராசாரிய ஸ்வாமிகள் துதி.

துங்கமெய்ச் சநக ராதி தூயநான் முநிவர்க் கந்நா
ளங்கணன் கைலை தன்னி லருளிய வுண்மை தோன்ற
விங்கொரு நால்வ ரோடு மெம்மனோர்க் கருள்வான் வந்த
சங்கர பகவற் பாதன் றாண்மலர் தலைமேற் கொள்வாம்.

## ஸ்ரீபரமாசாரிய ஸ்துதி.

ஸ்ரீராமசந்திரனுக்கென் றுஞ்சபமுண்டாகவென் றன்
சீரேயெவரும்புகழ்ந்துபின்னர்த்திருமால்சீரையுரைத்திடமா
ரூராவமுதாயவதரித்தவன்பின்பெருக்கேயருளாளா
நீராமயநீர்த்தெனையாள்வாய்சேர்நதேனுன்றன்சேவடியே.

## சற்குரு ஸ்துதி.

விஷ்ணுவி னம்ச மென்ன வேதியர் குலத்து தித்து
விஷ்ணுவென் னியற்பேர் வாய்ந்தோன் விவேகமி லெம்ம னோர்க்கா
விஷ்ணுநே ரிராம தாஸன் மெய்ம்மரா புற்ற மேலோன்
விஷ்ணுவின் பதம ளித்தோன் மெல்லடிக் கன்பு செய்வாம்.

## உரைமங்கலம்.

ஐந்தொடு பத்து மாய வரும்பிர கரணங் கட்கே
வைங்கர னைம்மு கத்தா னம்மைமால் கதிரோ னீசா
னிங்கிவர் சரணம் போற்றி யியற்றுவ னெளிதின் யார்க்குஞ்
சங்கைதீ ருரையை யானுந் தத்துவ விளக்கப் பேரால்.

---



ஓம்

தத்ஸத்ப்ரஹ்மணேநம:

# ஸ்ரீ பஞ்சதசி.

## * க. பிரத்தியக்தத்துவவிவேகம்.

### முதற்பிரகரணம்.

நூலாசிரியராற் செய்யப்பட்ட மங்கலாசரணம்.

[க] । नमः श्रीशंकरानंदगुरुपादांबुजन्मने ।
सविलासमहामोहग्राहग्रासैककर्मणे ॥ १ ॥

(அவதாரிகை).

இப்போது * உ ஸ்ரீ * ௩ வித்தியாரணிய முநீசுவரராகிய நூலாசிரியர் தாம் ஆரம்பஞ்செய்யக் கருதிய இந்நூல் நிர்விக்கினமாய் முடிதலும், நூலாசிரியரிடத்துண்டாகும், நாஸ்திகத்தன்மையின் பிராந்தி நீங்கி, * ச ஜிஞ்ஞாசுக்களுக்கு இந்நூலிற் பிரியத்துடன் பிரவிருத்தியுண்டாதலுமாகிய இவ்

---

* க. பிரத்தியக்தத்துவவிவேகம் என்பது பிரஹ்மாபின்ன பிரத்தியகாத்மாவை உபாதியினின்றும் பிரித்தறிதலாம். அவ்விவேகம் அந்தக்கரணவிருத்திவடிவமாயிருத்தலால் இப்பிரகரணத்தின் பெயராகாது; என்றாலும் விவேகமும் நூலுமாகிய ஜந்யஜநகங்களின் அபேத அபிப்பிராயத்தால் இப்பிரகரணத்திற்கும் பிரத்தியக்தத்துவவிவேகமென்னும் பெயர் இருக்கின்றது. இவ்வாறே ஏனைய நான்கு விவேகமென்னும் பெயர்களையுடைய பிரகரணங்களிலும் அறிந்துகொள்க. அன்றியும், ஆநந்தமென்னும் பெயரையுடைய ஐந்து பிரகரணங்களிலுமுள்ள ஆநந்தமென்னும் பெயர் வாச்சியவாசகங்களின் அபேத அபிப்பிராயத்தினாலாம்.

* உ. அழகுடைய அல்லது பிரஹ்மவித்தையாகிய இலக்ஷ்மியையுடைய.

* ௩. இந்நூலில் முதற்பிரகரணத்திலிருந்து ஆறு பிரகரணங்கள்வரையிலும் ஸ்ரீ வித்தியாரணியசுவாமிகளால் செய்யப்பட்டனவாம். மற்றவை ஸ்ரீபாரதிதீர்த்தசுவாமிகளாற் செய்யப்பட்டனவாம். இதனாற்றான் இங்கே ஸ்ரீ வித்தியாரணியசுவாமிகளென்னும் பதமாத்திரமிருக்கின்றது. இருவரும் ஒரு கிரந்தத்திற்குக் கர்த்தாவாயிருத்தலால் சமஸ்கிருத உரைகாரர் எங்கும் இருவருடைய மங்கலத்தையும் செய்திருக்கின்றார். ஸ்ரீ பாரதிதீர்த்தசுவாமிகள் ஒருவிதத்தால் ஸ்ரீ வித்தியாரணியசுவாமிகளின் குருவாயிருத்தலின் எங்கும் மங்கலத்தில் பாரதிதீர்த்தசுவாமிகளின் பெயர் முன்வைக்கப்பட்டிருக்கின்றது. முநி-சந்நியாசி; அவர்களுக்கு ஈசுவரன் (ஆசாரியன்) முநீசுவரனவன்.

* ச. ஞானவிருப்புடையோர்.

விரண்டு பிரயோசனத்தின் பொருட்டு *ரு ஆன்றோர் ஒழுக்கத்தால் அடையப்பட்டதும் கிரந்தகர்த்தாவாகிய தன்னால் அநுஷ்டிக்கப்பட்டுவருவதுமான இஷ்டதேவதையாகிய குருவின் நமஸ்காரரூப *சு மங்கலாசரணம் நூலாரம்பத்தில் செய்யவேண்டியதாமென்பதைச் *எ சிஷ்யர்களுக்கு உபதேசித்தற்பொருட்டுச் சுலோகவடிவமாகச் செய்கின்றார். அன்றியும், இந்த வேதாந்தநூலின் *அ விஷயத்தையும் *சு பிரயோஜனத்தையும் *கo பொருளாற் குறிப்பிக்கின்றார்:—

सविलासमहामोहग्राहग्रासैककर्मणे श्रीशंकरानंदगुरुपादांबुजन्मने नमः

(சுலோகார்த்தம்)

காரியத்தோடுகூடிய மகாமோகமாகிய மகரத்தை விழுங்குதலே முக்கியவேலையாயுள்ள *கக ஸ்ரீ *கஉ சங்கராநந்த *கங குருவின் இரண்டு

---

* ரு. வேதாநுசாரமாகிய கர்மத்தைச் செய்யும் வியாசர்முதலியோர் ஆன்றோர். அவர்களது ஒழுக்கம் ஆன்றோரொழுக்கம். சிஷ்டாசார மென்பதுமது.

* சு. விக்கினநாசத்திற்கு அநுகூலமாகிய வியாபாரம் மங்கலாசரணம்.

* எ. சிக்ஷைக்கு (உபதேசத்திற்கு)த்தக்க சாதனத்தோடுகூடிய முமுக்ஷுக்கள் சிஷ்யரெனப்படுவர்.

* அ. ஜீவப்பிரஹ்ம ஐக்கியம் விஷயம்.

* சு. சகலதுக்கநிவிருத்தி பரமாநந்தப்பிராப்தி பிரயோஜனம்.

* கo. அதிகாரி, சம்பந்தம், விஷயம், பிரயோஜனம் என்னும் நான்கு அநுபந்தமும் கிரந்தத்தின் ஆரம்பத்திற் சொல்லவேண்டியவை. அவற்றுள், விஷயமும் பிரயோசனமும் முதல் சுலோகத்திற் குறிப்பிக்கப்பட்டிருக்கின்றன. அதிகாரியை இரண்டாவது சுலோகத்தில் நூலாசிரியரானவர் தமது வாக்கினாலேயே கூறியிருக்கின்றார். இந்த மூன்றும் சித்தித்ததனால் பிரதிபாத்தியப் பிரதிபாதகபாவம் (சொல்லப்படுவது சொல்வது எனுந்தன்மை) முதலிய சம்பந்தம் இயல்பாகவே சித்திக்கின்றது.

* கக. ஸ்ரீ யென்பதுபிரஹ்மவித்தை, அல்லது சருவஞ்ஞத்துவ முதலிய சக்தி, அல்லது ஆசனமாகிய பார்வதி, அல்லது மாயை, அல்லது அணிமாதி அஷ்டசித்தியாம்.

* கஉ. சங்கராநந்தரென்பது சங்கராநந்தசுவாமி, அல்லது சங்கராசாரியராகிய ஆநந்தர் (பரமாத்மா), அல்லது தக்ஷிணாமூர்த்தியென்னும் சிவசொரூபமாகிய பரமாத்மா, அல்லது ஈசுவரன், அல்லது பிரத்தியகபின்ன சுத்தப்பிரஹ்மம்.

* கங. சாக்ஷாத்தாக (நேராக)வாவது பரம்பரையாகவாவது சிக்ஷகராகிய குருவின்.

* ௧௪ பாதங்களாகிய * ௧௫ அம்புஜன்மங்களுக்கு நமஸ்காரம்.

(வியாக்கியாணம்)

ஸ் சம் என்பது சுகம்; அதைத் தருகிறவர் சங்கரரென்னும் சொற்பொருட்காரணத்தால் சகல ஜகத்தையும் ஆநந்திக்கச்செய்யும் பரமாத்மாவாகிய பிரஹ்மம் சங்கரபதத்திற்கு அர்த்தமாம்; " இப்பரமாத்மாவே ஆநந்தத்தைச் செய்கின்றார் " என்னும் சுருதியினால். எல்லாவற்றினுமதிகப் பிரியத்திற்கு விஷயமாயிருத்தலால் பரமாநந்தரூபியாகிய பிரத்தியகாத்மா ஆநந்தபதத்திற்கு அர்த்தமாம். சங்கரராகிய பிரஹ்மம் எதுவோ அதுவே ஆநந்தமாகிய பிரத்தியகாத்மாவாம். இவ்வாற்றால் பிரத்தியகபின்னபரமாத்மா சங்கராநந்தபதம் முழுவதிற்கும் அர்த்தமாம். பிரஹ்மா பின்ன பிரத்தியக்காகிய அவரே குரு; " பிரத்தியகபின்ன பரமாத்மாவாகிய அவர் ஆசாரியரது வடிவத்திலிருந்துகொண்டு இராகாதி மலம் பரிபக்குவமாயிருக்கும் அதாவது தகிக்கப்பட்டிருக்கும் அதிகாரிகளுக்குத் தீக்ஷையாகிய உபதேசத்தால் அஞ்ஞானமுதலிய பிரதிபந்தங்களின் நாசத்திற்கு ஏதுவாகிய சக்தியைக் கொடுத்தலால் பரதத்துவமாகிய தன்னிற் சேர்க்கின்றார்." என்னும் ஆகமவாக்கியத்தால். * ௧௬ ஸ்ரீயையுடையவர்

---

* ௧௪. பாதமென்பது பிரசித்தமாகிய சரணம், அல்லது பாதாளம், அல்லது சொரூபவடிவமான பிரகாசம்.

* ௧௫. அம்புஜன்மமென்பது அம்புவாகிய ஜலத்தில் ஜன்மித்திருக்கும் மகர முதலியவற்றையும் விழுங்கும் மகா திமிங்கிலமாகிய மகாமகரம், அல்லது கமலம். இங்கே குருவினது பாதத்தைக் கமலமாகிய தாமரையாகச் சொல்லுவோமாயின், அதனிடது மூலசுலோகத்தின் பிற்பாதியில் சொல்லப்பட்டிருக்கும் மகரத்தை விழுங்குதலாகிய தொழிற் சம்பவியாது என்னும் அபிப்பிராயத்தால் மகாமகரமென்னும் முதல் அர்த்தம் கொள்ளப்பட்டது.

அன்றியும், கஜேந்திரனை முதலை பிடித்தகாலத்து அது தாமரைப்பூவின்வாயிலாக விஷ்ணுவின் ஆராதனைசெய்ய, பிரகடமாகிய விஷ்ணுவின் சக்கரத்தால் முதலை நாசமாயிற்று. அதுபோலக் குருபாதமாகிய புஷ்பவாயிலாகக் குருவினாராதனையினால் அடையப்பட்ட ஞானத்தால் அஞ்ஞானம் நாசமாகின்றது. இதனால் அந்தக் கஜேந்திரனாற் கொள்ளப்பட்ட கமலத்திற்கும் குருபாதத்திற்கும் சமானத்தன்மை சம்பவிக்கின்றதென்னும் அபிப்பிராயத்தால் கமலமென்னும் அர்த்தம் கொள்ளப்பட்டது.

* ௧௬. இங்கே ஸ்ரீயையுடைய சங்கராநந்தகுரு ஸ்ரீசங்கராநந்தகுரு என்பது மதத்தையுடைய யானை மதயானை என்பதனைப்போன்ற மத்தியமபதலோபிசமாசமென்னும் உருபும் பொருளும் உடன்றொக்கதொகையாம்.

எவரோ அவரே சங்கரானந்தகுரு வென்பது பதாபாஜ முதலியவற்றைப் போன்ற சமாசமாம். இங்கே ஸ்ரீமான் என்பதில் குருவிற்கு *கஎ அணிமாதி ஐசுவரியத்தோடுகூடியதன்மை குறிப்பிக்கப்பட்டது. அல்லது ஸ்ரீயாகிய சம்பத்தினால் ஸ்ரீ சம் சுகத்தைத் தருகிறவர் ஸ்ரீ சங்கரராவர். "தனத்தின் தாதாவினதாம் பராயணம் (பரமகதி); கர்மபலதாதாவாயிருத்தலால்." என்பதனால் ஸ்ரீ குருவிற்குப் பக்தர்களின் இஷ்டத்தைச் சம்பாதித்தலில் சாமர்த்தியம் குறிப்பிக்கப்பட்டது. அந்த ஸ்ரீ சங்கரானந்த குருவினது இரண்டு பாதமாகிய கமலங்களுக்கு நமஸ்காரமிருக்கக்கடவது. அந்தப் பாதகமலங்கள் எப்படிப்பட்டவையெனின் *கஅ சமஷ்டி *க௯ வியஷ்டி ஸ்தூல சூக்ஷ்மப் பிரபஞ்சமென்னும் காரியத்தோடமாகிய விலாசத்தோடு கூடிய மகாமோகமென்னும் *உ௦ மூலாஞ்ஞானமெதுவோ, அதுவே மகர முதலியவற்றைப்போல தன்வசப்பட்ட பிராணிகளுக்கு மிகுந்த துக்கத்திற் கேதுவாயிருத்தலால் மகரமாம்; அதனை விரட்டுவதே எதற்கு முக்கிய தொழிலோ அப்படிப்பட்ட பாதகமலங்களுக்கு நமஸ்காரமென்பது பொருள். இங்கே மூலசுலோகத்தில் சங்கரர் ஆனந்தரென்னும் இரண்டு பதங்களின் *உக சாமானாதிகரணியத்தால் ஜீவப்பிரம்மங்களின் ஐக்கியமாகிய கிரந்தத்தின் விஷயம் குறிப்பிக்கப்பட்டது. ஸ்ரீமான் *உஉ பூமாவாகிய பிரம்மமாயிருத்தலால் அபரிச்சின்ன சுகத்தின் *உ௩ ஆவிர்ப்பாவமாகிய பிரயோசனம் குறிப்பிக்கப்பட்டது. 'காரியத்தோடுகூடிய' என்றல் முதலியவற்றால் சகல *உச அநர்த்தத்தின் *உரு நிவிருத்தியாகிய பிரயோஜனம் கிரந்தகர்த்தாவின் வாக்கினாலேயே கூறப்பட்டிருக்கிறது. [க]

---

*கஎ. க. அணிமா, உ. மகிமா, ௩. கரிமா, ச. லகிமா, ரு. பிராப்தி, சு. பிராகாமியம், எ. ஈசித்துவம், அ. வசித்துவம் என்னும் இவை அஷ்டசித்திகளாம். இவற்றின் அர்த்தத்தைப் பாகவதத்தின் கக-வது ஸ்கந்தத்தின் கரு-வது அத்தியாயத்திலும் ஹடயோகதீபிகையிலும் காண்க.

*கஅ. வனம், ஜாதி, தடாகம் இவைபோல்வன சமஷ்டி.

*க௯. வனமுதலியவற்றின் தனித்தனியான விருக்ஷம், வியக்தி, நீர்த்துளி என்னும் இவைபோல்வன வியஷ்டி.

*உ௦. பரமாத்மசொரூபத்தை மறைக்கும் அஞ்ஞானம் மூலாஞ்ஞானமாம்.

*உக. எப்பதங்கள் பின்னஅர்த்தத்தின் பொருட்டாயிருக்கின்றனவோ அவற்றின் ஒரு அர்த்தத்தை விஷயஞ்செய்யுந்தன்மை சாமானாதிகரணியமாம்.

*உஉ. தேசகாலவஸ்துக்களின் பரிச்சேதமில்லாத சுகவடிவம் பூமா.

*உ௩. இருப்பது வெளிப்படுதல் ஆவிர்ப்பாவம்.

*உச. காரியத்தோடுகூடிய அஞ்ஞானம் துக்கமாகிய அநர்த்தமாம்.

*உரு. நிவிருத்தியென்பது பாதம். அது மித்தையென நிச்சயித்தல்.

நூலாரம்பத்தின் பிரதிஞ்ஞை.

[உ] २ तत्पादांबुरुहद्वंद्वसेवानिर्मलचेतसां ।
सुखबोधाय तत्त्वस्य विवेकोऽयं विधीयते ॥ २ ॥

(அ—கை)

இனி நூலின் அவாந்தரப்பிரயோசனத்தைச் சொல்லுதலுடன் நூலாரம்பத்தின் பிரதிஞ்ஞையைச் செய்கின்றார்:—

तत्पादांबुरुहद्वंद्वसेवानिर्मलचेतसां सुखबोधाय अयं तत्त्वस्य विवेकः विधीयते

(சு—ம்)

அக்குருவினுடைய இரண்டு பாதங்களாகிய கமலங்களின் * உசு சேவை

* உசு. ஈசுவரனது சேவைக்குப் புண்ணியத்தின் உற்பத்திவாயிலாக அந்தக்கரணசுத்தியாகிய அதிருஷ்டம் பலமாம். பிரஹ்மவித்தாகிய குருவினது சேவைக்கு அதிருஷ்ட (பரோக்ஷ)மும் குருவினது சந்தோஷத்தால் தக்க உபதேசவாயிலாக ஞானமுண்டாதலாகிய திருஷ்ட (பிரத்தியக்ஷ)மும் பலமாம். அந்தச் சேவை வாக்குக் காயம் மனம் திரவியம் என்பவற்றின் அர்ப்பணத்தாலுண்டாகின்றது. வாக்கினால் குருவின் துதியைச் செய்தல், நிந்தைசெய்யாதிருத்தல், இன்னதில் தம்மை நமஸ்காரம் செய்கிறேனெனல், அல்லது நமோநம: ஜயஜய என்றிவ்வாறு சொல்லுதலாகிய வாக்கினால் நமஸ்காரம்செய்தல் முதலியன வாக்கின் அர்ப்பணத்தாலுண்டாகும் சேவை. சிஷ்யன் குருவின் பாதம்பிடித்தல், ஜலங்கொண்டுவருதல்முதலிய இட்டவேலையைக் கடவாதிருத்தல், தீர்க்கதண்டம் புரிதல் முதலியன சரீரார்ப்பண சேவையாம். பதிவிரதையாகிய ஸ்திரீக்குப் பதியினிடத்தில் ஈசுவரபாவனையிருத்தல்போல முமுக்ஷுவுக்கும் குருவினிடத்துப் பரமேசுவரபாவனையிருத்தல்வேண்டும். குரு இராசதவியவகாரத்திலிருக்கும்போது அவரைப் பிரஹ்மாவாகவும், மாணாக்கர்களை இரக்ஷிக்கும்போது விஷ்ணுவாகவும், கோபிக்குங்காலத்துச் சிவசொரூபமாகவும், சாந்தமாயிருக்குங்காலத்துக் கங்கைவடிவாகவும், சாஸ்திரத்தில் தற்பரராகுங்காலத்துக் கணேசராகவும், வசனமாகிற பிரகாசத்தால் சந்தேக விபரீதங்களுடன் அஞ்ஞானமென்னுமிருளைப் போக்குங்காலத்துச் சூரியவடிவாகவும் அறிக. இவ்வாறு குருவினிடத்தில் ஈசுவரபாவனையைக் கொள்ளவேண்டும். ஒருகாலும் தோஷதிருஷ்டி செய்யலாகாது. உள்ளே குருவினிடத்து எல்லோரினும் மேலாந்தன்மையைச் சிந்தித்தலாகிய மனதின் நமஸ்காரஞ் செய்தல்வேண்டும். இவைமுதலியன மனதின் அர்ப்பணத்தினாலுண்டாகுஞ்சேவையாம். தனம், தானியம், வீடு, மனைவி, புத்திரன், பசு, தாசன், தாசி, பிருதிவி முதலிய பதார்த்தங்கள் தன மெனப்படும். அவை எல்லாவற்றையும் கிரகஸ்தராகிய குருவினிடத்துச் சமர்ப்பித்தலும், குரு சந்நியாசியா யிருப்பராயின், அத்திரவியத்தை விட்டுக் குருவைச் சரணடைதலுமாகிய இது தனத்தின் அர்ப்பணத்தாலுண்டாகும் சேவையாம். இவ்விதமாகிய குருவின்

யினால் *உஎ மலமொழிந்த சித்தமுடையவர்களுக்கு தத்துவத்தினது விவேகமானது செய்யப்படுகின்றது.

(வி–ம்)

அந்தக் குருவினது இரண்டு பாதமாகிய கமலங்களின் ஸ்துதி நமஸ்காராதிரூப சேவையினால் எவர்களது அந்தக்கரணம் நிர்மலமாய் அதாவது இராகாதிகளில்லாததாயிருக்கிறதோ அவர்களுக்குச் சுகமாயறியும்பொருட்டு அதாவது வருத்தமின்றித் தத்துவஞானம் உண்டாகும்பொருட்டு, ஆரோபிக்கப்படாததாகிய சொரூபமுடையதாயும், *உஅ "அகண்ட சச்சிதாநந்த பிரஹ்மம் மகாவாக்கியத்தினால் அறியப்படுகிறது" என்று *உகூ மேற் சொல்லப்படுவதாயுமிருக்கிற தத்துவமாகிய பிரத்தியகபின்ன பிரஹ்மம் யாதோ அதன் *ஙo இனிச் சொல்லப்படும் இலக்ஷணமுடைய விவேகம் செய்யப்படுகின்றது. அதாவது ஆரோபித (கற்பித) பஞ்சகோசவடிவமாகிய பிரபஞ்சத்தினின்றும் வேறுபிரித்தறிதல் செய்யப்படுகின்றது என்பது அர்த்தமாம். [உ]

க. [யுக்தியினால் ஜீவப்பிரஹ்மங்களின் ஐக்கியத்தைப் பிரதிபாதித்தல் ங–சஉ]

க. ஜாக்கிரமுதலியவற்றில் நித்தியமும் சுவயம்பிரகாசமுமாகிய ஞானத்தின் அபேதமும் விஷயங்களின் பேதமுமாயாறு (ங-எ)

க. ஜாக்கிரத்தில் விஷயங்கள் ஒன்றற்கொன்று பேதமாதலும் அவற்றிற்கு வேறாகிய ஞானம் அபேதமாதலும்.

---

சேவை இங்கு உத்தேசம் செய்யப்பட்டிருக்கின்றது. இங்கே சொல்லப்பட்டிருக்கும் பாதகமலம் குருவின் வடிவத்திற்கும் உபலக்ஷணமாம்.

*உஎ இங்கே நிர்மலசித்தமாகிய காரணத்தைச் சொல்லுதலால் அதன் காரியமாகிய விவேகம், வைராக்கியம், ஷட்சம்பத்தி, முமுக்ஷுத்துவம் என்னும் நான்கு சாதனங்களும் அர்த்தத்தினால் சூசிப்பிக்கப்பட்டன. இதனால் மலவிக்ஷேப தோஷங்களில்லாதவனாய் நான்கு சாதனங்களையுமுடையவன் அதிகாரியெனப்பட்டது.

*உஅ. தேசகாலவஸ்துக்களினாலாகிய பரிச்சேதமில்லாதது.

*உகூ. இதன் சகூ-வது சுலோகத்திற்காண்க.

*ஙo. இதன் ஙங-வது சுலோகத்திற்காண்க.

[௩] 3 शब्दस्पर्शादयो वेद्या वैचित्र्याज्जागरे पृथक् ।
ततो विभक्ता तत्संविदैक्यरूप्यान्न भिद्यते ॥ ३ ॥

(அ—கை)

ஜீவப்பிரஹ்மங்களின் ஏகத்துவமான இந்நூலின் *௩க விஷயம் அமையுமாறு அதாவது முமுக்ஷுவின் உள்ளத்திற் பதிதற்பொருட்டு ஜீவனது சத்தியஞானமுதலிய வடிவத்தன்மையைக் காட்டுமிச்சையுடையவராகிய *௩உ ஆசாரியர் சப்தஸ்பரிசமுதலியன என்னும் வாக்கியத்தினால் முதலில் ஜாக்கிரமுதலிய அவஸ்தைகளில் ஞானத்தின் அபேதத்தைச் சொல்லுதலால் அதன் நித்தியத்தன்மையைச் சாதிக்கின்றார். அம்மூன்றவஸ்தைகளுள் முதலில் வெளிப்படையான வியவகாரமுள்ள ஜாக்கிரத்தில் ஞானத்தின் அபேதத்தைச் சாதிக்கின்றார்:—

जागरे वेद्याः शब्दस्पर्शादयः वैचित्र्यात् पृथक् ततः विभक्ता तत्संवित् ऐक्य रूप्यात् न भिद्यते

(சு—ம்)

ஜாக்கிரத்தில் சப்தஸ்பரிசமுதலியனவாகிய விஷயங்கள் விசித்திரத்தன்மையுடையனவாயிருத்தலால் ஒன்றற்கொன்று வேறாம். அவற்றினின்றும் வேறுபிரிக்கப்பட்ட அவற்றின் ஞானம் ஒருவடிவமாய்க் காணப்படுந்தன்மையால் பேதப்படுகிறதில்லை.

(வி—ம்)

இந்திரியங்களால் விஷயங்களின் ஞானமுண்டாவது ஜாக்கிரமாமென்றினிச்சொல்லப்படும் இலக்ஷணமுடைய அவஸ்தாவிசேஷமாகிய *௩௩ ஜாக்கிரத்தில் ஆகாசமுதலியவற்றின் *௩௪ குணமாயிருத்தலால் பிரசித்தமாயிருக்கிற ஞானத்திற்கு விஷயமாகும் சப்தஸ்பரிசமுதலியவைகளும் அந்தச் சப்த

* ௩க. கிரந்தத்தில் பிரதிபாதிக்கத்தக்கது.

* ௩உ. கிரந்தகர்த்தாவாகிய ஸ்ரீ வித்தியாரணியசுவாமிகள்.

* ௩௩. தேவதைகளின் அநுக்கிரகத்தோடுகூடிய இந்திரியங்களால் விஷயத்தின் ஞானம் எதிலுண்டாகிறதோ அது ஜாக்கிரமெனப்படும். அல்லது இந்திரியஜந்யஞானத்திற்கும் இந்திரியஜந்யஞானத்தின் சம்ஸ்காரத்திற்கும் எது ஆதாரகாலமோ அது ஜாக்கிராவஸ்தை யெனப்படுமென்றிப்படிப் பஞ்சீகரணவார்த்திகத்திலும் விருத்திப்பிரபாகரத்திலும் சொல்லப்பட்ட இலக்கணமுடைய ஜாக்கிராவஸ்தையில்.

* ௩௪. பூதவிவேகத்தின் இரண்டாவது சுலோகத்திற்காண்க.

ஸ்பரிசமுதலியவற்றிற்கு ஆதாரமாயிருத்தலால் பிரசித்தமாயிருக்கும் *நுடு ஆகாசாதி *நுடு திரவியங்களும் பசு குதிரை முதலியவற்றைப்போல விலக்ஷண *நுசு தர்மமுடையனவாயிருத்தலால் ஒன்றற்கொன்று தம்மில் வேறும். அவ்விஷயங்களினின்றும் புத்தியினால் விசாரிக்கப்பட்ட அந்தச் சத்த முதலியவற்றின் ஞானமானது ஞானம் ஞானம் என்று ஒரு வடிவமாகத் தோற்றுவதாயிருத்தலால் *நுஎ ஆகாசத்தைப்போல ஒன்றற்கொன்று பேதப்படுகிறதில்லை. இங்கே இது பிரயோகமாம் அதாவது அநுமானமாம்:— விவாதத்திற்கு விஷயமாகிய *நுஅ ஞானமானது சொரூபமாகப் *நுகூ பேதமில்லாததாம்; *சo உபாதியின்கிரகணமின்றிப்பேதம் தோன்றாமையால்; * சக ஞான

---

* நுடு. குணத்தின் ஆசிரயம் **திரவியம்** இதன் விசேஷம் நுஉ வது சுலோகத்திற் காண்க

* நுசு. அந்நியத்தின் ஆசிரயமாய்ச் சுதந்திரமில்லாதிருப்பது எதுவோ அது **தர்ம** மெனப்படும்.

* நுஎ. கடாகாசம் மடாகாசம் கூபாகாசம் என்னும் இவை முதலியவிடங்களில் உபாதிகள் பின்னபின்னமாயிருக்கினும் ஆகாசம் ஆகாசமென்று ஒருவடிவாகத் தோற்றும் ஆகாசம் பின்னமாகாமல் ஒன்றாகவேயிருத்தல்போல ஞானமும் ஒன்றாகவேயிருக்கின்றது.

* நுஅ. சிதாத்மாவின் சொரூபமாகிய ஞானம்.

* நுகூ. அந்நியோந்நியாபாவமாகிய ஒன்றிலொன்றின்மையின் பெயர் **பேத** மாம். அப்பேதம் ஸஜாதீயம் விஜாதீயம் சுவகதமென்னும் பேதத்தால் மூன்றுவிதமாம். அல்லது (க) ஜீவஈசபேதம் (உ) ஜீவர்களின் பரஸ்பரபேதம் (ந) ஜடஈசபேதம் (ச) ஜடஜீவபேதம் (ரு) ஜடஜடபேதம் என்று ஐந்துவிதமாம். அப்படிப்பட்டபேதமில்லாததுஞானம். இந்தஅநுமானத்தில் ஞானம் **பக்ஷம்**; சொரூபமாகப் பேதமில்லாமை **சாத்தியம்**; உபாதியின் பராமரிசமாகிய ஆராய்ச்சியின்றிப் பேதந்தோற்றாதிருத்தல் ஏது; ஆகாசம் **திருஷ்டாந்தம்**. இது சர்வசாதாரண அநுமானமாம்.

* சo. எந்த வஸ்து தான் எவ்வளவிடத்தில் எந்தக்காலத்திலிருக்கின்றதோ, அவ்வளவிடத்திலுள்ள வஸ்துவை அந்தக்காலத்தில் மற்றவைகளினின்றும் வேறு பிரித்தறிவித்துத் தான் வேறாயிருக்கின்றதோ, அதாவது அவற்றுள் எண்ணப்படுகிறதில்லையோ, அது **உபாதி** யெனப்படுகின்றது. இங்கே இப்படிச் சப்தமுதலியனவும் ஆகாசமுதலியனவுமாகிய சகல அநாத்மபதார்த்தங்களும் ஞானத்திற்கு உபாதியாம்.

* சக. ஆகாயத்திற்குக் கடமடமுதலிய உபாதிகளைக் கொள்ளுதலால் பேதம் தோற்றுகிறது. அந்த உபாதிகளைக்கொள்ளாவிட்டால் பேதம் தோற்றுகிறதில்லை. ஆதலால் ஆகாயம் உபாதியினால் கற்பிக்கப்பட்ட பேதமுடையதாம். சுபாவமாக அதாவது சொரூபமாகப் பேதமுடையதன்று. அதுபோல ஞானமும் சொரூபமாகப் பேதமில்லாததேயாம்.

ஆகாயத்தைப்போல. இவ்வாறே *சஉ சப்தஞானம் ஸ்பரிசஞானத்தினும் பின்னமன்று; *சங ஞானவடிவமாயிருத்தலால்; *சச ஸ்பரிசஞானத்தைப் போல. ஒரே ஞானத்திற்கு ஆகாசத்தைப்போல் உபாதியினாலாகிய பேதத்தாலும் பின்னவியவகாரம் சம்பவிக்குமாயின் வாஸ்தவமாக அதாவது சொரூபமாகப் பேதத்தைக் கற்பிப்பதில் *சரு கௌரவரூபமாகிய தோஷம் விசாரிக்கத்தக்கதாகும் என்பது பொருள். [ங]

உ. ஜாக்கிரசொப்பனங்களின் வேற்றுமையும் அவற்றின்ஞானம் ஒருவடிவாதலும்.

[ச] ∴ तथा स्वप्नेऽत्र वेद्यं तु न स्थिरं जागरे स्थिरम् ।
तद्भेदोऽतस्तयोः संविदेकरूपा न भिद्यते ॥ ४ ॥

(அ-கை)

ஜாக்கிராவஸ்தையிற் கூறிய நியாயத்தைச் சொப்பனவஸ்தையினும் *சசு. அதிதேசம் செய்கின்றார்:—

तथा स्वप्ने ॥

(சு-ம்)

அப்படியே சொப்பனத்திலும்.

---

*சஉ. இவ்வநுமானத்தில் சத்தத்தின் ஞானம் பக்ஷம்; பரிசஞானத்தினும் அபேதத்துவம் (வேறாகாமை) சாத்தியம்; ஞானவடிவத்துவம் ஏது; பரிசஞானம் திருஷ்டாந்தம். இது அசாதாரண அநுமானம். இவ்விதமாக இங்கே (ஞானஐக்கியத்தைச் சாதித்தலில்) அநேக அநுமானங்களிருக்கின்றன. அவற்றைப் புத்திமான்கள் அறிந்துகொள்க.

*சங. யாது யாது ஞானவடிவமோ அது அது பரிசஞானத்தினும் பேதமுடையதன்று என்னும் வியாப்தியுடையது இவ்வேதுவாம்.

*சச. எப்படிப் பரிசஞானம் ஞானமாயிருத்தலால் பரிசஞானத்தினும் வேறல்லவோ அதுபோல.

*சரு. சொற்பத்தால் நிருவாகமுண்டாகுமிடத்தில் அதிக அர்த்தத்தைக் கொண்டு நிருவாகஞ்செய்தல் கௌரவதோஷமாமெனச் சாஸ்திரகர்த்தாக்கள் கூறுகின்றனர். அது ஒரு காசினால் அடையப்படும் பதார்த்தத்தை அதிகப்பணம் செலவிட்டு வாங்குதல் கௌரவதோஷமாதல்போல.

*சசு. ஓரிடத்தில் எழுதப்பட்டிருக்கும், அல்லது சொல்லப்பட்டிருக்கும், அல்லது அறிவிக்கப்பட்டிருக்கும் அர்த்தத்தை மற்றோரிடத்தில் எழுதவாவது, சொல்லவாவது, அறியவாவது ஆஞ்ஞாபித்தல் அதிதேசமாம். மாட்டேறித்தொழுக லென்பது மது.

(வி—ம்.)

எப்படி ஜாக்கிரத்தில் விசித்திரமாயிருத்தலால் விஷயங்கள் பேதமும், ஒருவடிவாயிருத்தலால் ஞானம் அபேதமுமாகின்றதோ, அப்படியே இந்திரியமாகிய கரணங்கள் ஒடுங்கியவிடத்துண்டாகும் ஜாக்கிரசம்ஸ்காரஜந்ய விஷயத்தோடுகூடியஞானம் சொப்பனமாமென்று சொல்லப்படும் இலக்ஷணமுடைய *௬எ. சொப்பனவஸ்தையிலும் சத்தமுதலிய விஷயங்களே பரஸ்பரம் பின்னமாம்; அவற்றின் ஞானம் பின்னமன்று.

(அ-கை.)

அப்படியானால் விஷயமும் அவற்றின் ஞானமும் கிரமமாகப் பேதமாகவும் அபேதமாகவுமிருத்தலால் சொப்பன ஜாக்கிரங்களுக்கு ஒருவடிவாகுந்தன்மையுண்டாகுதலின், "இது சொப்பனம், இது ஜாக்கிரம்" என்னும் பேதவியவகாரம் எக்காரணத்தா லுண்டாகின்றதென்று ஆரம்பித்துக் கூறுகின்றார்:—

अत्र वेद्यं न स्थिरं जागरे तु स्थिरं अतः तद्भेदः ॥

(௬—ம் )

இங்கே அறியப்படுவன நிலையில்லாதன; ஜாக்கிரத்தில் நிலையுடையன; ஆதலால் அவற்றிற்குப் பேதமுண்டு.

(வி—ம்)

இந்தச்சொப்பனத்தில் நாற்புறத்திலும் காணப்படுகின்ற வஸ்துசமூகங்கள் *௬அ. தோற்றமாத்திரசரீரத்தையுடையனவா யிருத்தலால் ஸ்திரமில்லாதனவாம். ஜாக்கிரத்திலுள்ள வஸ்துசமூகங்கள் *௬௯. மற்றக்காலத்திலும் பார்க்கத்தக்கனவாயிருத்தலால் ஸ்திரமாம்; ஆகையால் விஷயங்களின் ஸ்திரத்துவம் அஸ்திரத்துவமாகிய வேறுபாட்டால் அந்தச் சாக்கிரசொப்பனங்கள் இரண்டற்கும் பேதமுண்டென்பது பொருள்.

---

*௬எ. அல்லது, இந்திரியத்தினாற் பெறப்படாத ஞானத்திற்கும் அதன் விஷயத்திற்கும் ஆதாரமான காலம் சொப்பனமெனப்படுமென்றிவ்வாறு பஞ்சீகரணவார்த்திகத்தும் விருத்திப்பிரபாகரத்தும் சொல்லப்பட்டிருக்கும் இலக்ஷணமுடைய சொப்பனவஸ்தையில்.

*௬அ. பிராதிபாஸிக (கற்பித) வடிவமாயிருத்தலால்.

*௬௯. ஒன்று அல்லது இரண்டு வருஷங்களுக்குப் பின்னுவது • வேறு ஜாக்கிரத்திலாவது பார்க்கத்தக்கனவாயிருத்தலால்.

(அ-கை.)

அப்படிச் சொப்பனஜாக்கிரங்கள் இரண்டற்கும் பேதமிருக்குமாயின், அவற்றின் ஞானத்திற்கும் பேதமுண்டாகுமேயென்று ஆசங்கித்துக் கூறுகின்றார்:—

तयोः संवित् एकरूपा न भिद्यते ॥

(சு-ம்.)

அவற்றின் ஞானம் ஒருவடிவினதாம்; வேறுபடுகிறதில்லை.

(வி-ம்.)

ஏகரூபமென்பது *௫௦. ஏதுகர்ப்பிதவிசேஷணம். [ச]

௯. சுழுத்தியில் ஞானம் உளதாதல்.

[௫] सुप्तोत्थितस्य सौषुप्ततमोबोधो भवेत्स्मृतिः ।
सा चावबुद्धविषयाऽवबुद्धं तत्तदा तमः ॥ ९ ॥

(அ-கை.)

இப்படி ஜாக்கிரசொப்பனமென்னும் இரண்டவஸ்தைகளிலும் ஞானத்தின் ஐக்கியத்தை அதாவது ஞானம் ஒன்றென்பதைச் சாதித்துச் சுழுத்திகாலத்தின் ஞானத்திற்கு அந்த ஜாக்கிரசொப்பனங்களின் ஞானத்தோடு ஐக்கியத்தைச் சாதித்தற்பொருட்டு முதலில் அச்சுழுத்தியில் ஞானம் உண்டென்பதைச் சாதிக்கின்றார்:—

सुप्तोत्थितस्य सौषुप्ततमोबोधः स्मृतिः भवेत् ॥

(சு-ம்.)

தூங்கி எழுந்தவனுக்குண்டாம் சுழுத்திகாலத்து இருளாகிய அஞ்ஞானத்தின் ஞானம் நினைவுவடிவமாகின்றது.

(வி-ம்.)

முன் தூங்கிப் பின் எழுந்தவன் அல்லது சுழுத்தியினின்றும் விழித்தவன் தூங்கியெழுந்தவனெனப்படுவன். அவனுக்கு, "எனக்கு ஒன்றும் தெரி

---

* ௫௦. எந்த விசேஷணத்தின் கர்ப்பத்தில் (மத்தியில்) ஏது பெறப்படுவதாகின்றதோ, அந்த விசேஷணம் ஏதுகர்ப்பவிசேஷண மெனப்படுகின்றது. இந்த விசேஷணத்தின் கர்ப்பத்தில் (மத்தியில்) 'ஏகரூபமாயிருத்தலால்' என்னும் வடிவினதாகிய ஏதுவும் சித்தித்தலால் இது ஏதுகர்ப்பிதவிசேஷணமாம்.

யாயில்லை" என்றுண்டாகாநின்ற சுழுத்திகாலத்தஞ்ஞானத்தின் ஞானம் ஸ்மிருதியேயாம்; அநுபவமன்று. ஏனெனின், அவ்வநுபவத்திற்குக் காரணமான இந்திரியத்திற்கு விஷயத்தோடுள்ள சம்பந்தமாகிய இந்திரியசந்நிகருஷமும் * நக. வியாப்தி * நஉ. இலிங்கம் * நங. முதலியனவும் * நச. மில்லாமையால் என்பது தாற்பரியம்.

(அ—ரை.)

அவ்வநுபவமின்மைக்கு * நரு. அதனைச் சொன்ன சித்தித்தனைக் கூறுகின்றார்:—

म॰ ॰ अवबुद्धविषया ॥

(சு—ம்)

அந்த ஸ்மிருதியும் அநுபவஞ்செய்யப்பட்ட விஷயத்தினதாம்.

---

* நக. அவிநாபாவமா (இன்றியமையாமையா) கிய சம்பந்தத்தை **வியாப்தி** யென்பர். எதில்லாமல் எது உண்டாகாதோ அதன் **அவிநாபாவசம்பந்தம்** அதிலிருக்கிறது. அது 'அக்கினியின்றிப் புகையுண்டாகாமையால் அக்கினியின் அவிநாபாவ சம்பந்தம் புகையிலிருக்கின்றது; அது புகையில் அக்கினியின் வியாப்தியாம்' என்பது.

* நஉ. எதன் ஞானத்தால் சாத்தியத்தின் (துணிபொருளின்) ஞானம் (அநுமிதி) உண்டாகின்றதோ, அது **இலிங்கமெ** (குறியெ)னப்படும். அநுமிதிஞானத்தின் விஷயம் **சாத்தியமெ**னப்படும். அது 'அக்கினி அநுமிதிக்கு விஷயமாயிருத்தலால் சாத்தியமாம், புகையின் உணர்ச்சியால் அக்கினியாகிய சாத்தியத்தின் ஞானம் உண்டாகின்றமையால் புகை **இலிங்கமா**'மென்பது.

* நங. இங்கே முதலியவென்னும் சத்தத்தால் உவமிதிவடிவ அநுபவஞானத்தின் சாமக்கிரியான சாதிருசியத்தின் ஞானமாகிய உவமானப்பிரமாணமும், சாப்திப்பிரமையின் சாமக்கிரியாகிய சுரோத்திரசம்பந்தமுள்ள சத்தமும், அர்த்தாபத்தியின் சாமக்கிரியான உபபாத்தியத்தின் ஞானமாகிய அர்த்தாபத்திப்பிரமாணமும், அபாவப்பிரமையின் சாமக்கிரியாகிய அநுபலப்திப்பிரமாணமும் (அப்பிரதீதியும்) கொள்ளப்படும்.

* நச. சுழுத்தியினின்றும் எழுந்த புருடனுக்குச் சுழுத்திகாலத்தில் அநுபவிக்கப்பட்ட அஞ்ஞானத்தோடு இந்திரியத்தின் சம்பந்தம் (பிரத்தியக்ஷத்தின் சாமக்கிரி) இல்லை; அஞ்ஞானம் இந்திரியத்திற்கு விஷயமாகாததாயிருத்தலால். அன்றியும், வியாப்தி இலிங்கங்களாகிய அநுமிதியின் சாமக்கிரியும் இல்லை. இப்படியே மற்ற நான்கு பிரமைகளின் சாமக்கிரிகளில்லாமையும் அறிந்துகொள்க. ஆகையால் சுழுத்தியினின்று எழுந்த புருடனுக்குண்டாகும் அஞ்ஞானத்தின் உணர்ச்சி ஆறு பிரமைகளாகிய அநுபவஞானங்களுள் ஒன்றல்ல; அநுபவத்தினும் வேறாகிய **ஸ்மிருதி ஞானமாம்**.

* நரு. அந்த ஞானம் ஸ்மிருதிரூபமாயிருத்தலால்.

(வி—ம்.)

அந்த ஸ்மிருதி முன் சுழுத்திகாலத்தில் அநுபவிக்கப்பட்ட விஷயத்தையே விஷயஞ் (பிரகாசஞ்) செய்கின்றது. ஏனெனின், "யாது ஸ்மிருதியோ அது அநுபவபூர்வகமாம்" என்னும் வியாப்தியை உலகத்திற் கண்டிருக்கிறோம். அதனால் எந்த அஞ்ஞானத்தின் ஸ்மிருதியுண்டாகின்றதோ, அது முன் சுழுத்திகாலத்தில் அவசியம் அநுபவிக்கப்பட்டதாமென்பது சித்திக்கின்றது.

(அ—கை.)

அங்ஙனமாயின் * ருக. அதனாலுமென்ன சித்திக்குமெனக்கூறுகின்றார்:-

तत् तमः तदा अवबुद्धम् ॥

(சு—ம்)

அதனால் அப்போது (சுழுத்திகாலத்தில்) அந்த அஞ்ஞானம் அநுபவிக்கப்பட்டதாம்.

(வி—ம்.)

* ருஎ. அக்காரணத்தால் அந்தச் சுழுத்திசம்பந்தமுள்ள அஞ்ஞானம் அச்சுழுத்திகாலத்தில் அநுபவிக்கப்பட்டதேயாமென்றறிக.

இங்கே இது பிரயோக (அநுமான) மாம்:—"நித்திரையில் எனக்கு ஒன்றும் தெரியாமலிருந்தது" என்று ஜாக்கிரத்திலுண்டாகும் விவாதத்திற்கு விஷயமாகும் * ருஅ. ஞானம் எதுவோ அது * ருகூ. அநுபவபூர்வமாகத்தக்

---

* ருக. அந்த ஸ்மிருதி அநுபவபூர்வகமாயிருத்தலாலும்.

* ருஎ. எக்காரணத்தால் ஸ்மிருதி அநுபவிக்கப்பட்ட விஷயத்தினதாகின்றதோ அக்காரணத்தால்.

* ருஅ. இது **பக்ஷம்.** தேயுவினும் வேறாகிய பிரகாசசுபாவத்தை ஞானமென்பர். அந்த ஞானம் சேதனவடிவம் விருத்திவடிவம் என்னும் பேதத்தால் இருவகையாம். அவற்றுள், விருத்திவடிவமாகிய ஞானமும் பிரமை அப்பிரமை யென்னும் பேதத்தால் பதின்மூன்று வகையாம். எல்லாஞ் சேர்ந்து பதினான்குவகை ஞானமாம். இதனை ஸ்ரீ விருத்திரத்நாவலியிற் காண்க.

* ருகூ. இது **சாத்தியம்.** ஸ்மிருதிக்கு வேறாகிய ஞானத்தை அநுபவமென்பர். அவ்வநுபவம் யதார்த்தம் (மெய்) அயதார்த்தம் (பொய்) என்னும் பேதத்தால் இருவகையாம். அவற்றுள், ஆறுபிரமையும் ஈசுவரஞானமும் சுகதுக்கங்களின் ஞானமுமாகிய எட்டுவகையும் **யதார்த்தம்**; பிரமம் (பிராந்தி) சம்சயம் தர்க்கம் என்னும் பேதமுள்ள மூன்றுவகையும் **அயதார்த்தம்.** இதனை ஸ்ரீ விருத்திப்பிரபாகரநூலிற் காண்க.

கதாம்; *௬௦. ஸ்மிருதியாயிருத்தலால். *௬௧. எது எது ஸ்மிருதியோ அது அது அநுபவபூர்வகமேயாம்; *௬௨. அந்நியதேசத்திலுள்ள புத்திரனுக்கு "இவள் என்தாய்" என்றுண்டாகும் ஸ்மிருதிபோல. [ரு]

௪. சுழுத்தியின் ஞானம் விஷயத்தினும் வேறுதலும், மற்றைய ஞானங்களினும் வேறாகாமையும்.

[சூ] स बोधो विषयाद्भिन्नो न बोधात्स्वप्नबोधवत् ।
एवं स्थानत्रयेऽप्येका संवित्तद्वद्दिनांतरे ॥ ६ ॥

(அ—கை)

அந்த அநுபவமாகிய ஞானத்திற்குத் தனது விஷயமாகிய அஞ்ஞானத்தோடு வேற்றுமையும் மற்ற ஜாக்கிரசொப்பனங்களின் ஞானத்தோடு அபேதமாகிய ஒற்றுமையும் உண்டென்பதை இரண்டு சுலோகங்களாற் கூறுகின்றார்:—

सः बोधः विषयात् भिन्नः बोधात् न । स्वप्नबोधवत् ॥

(சு—ம்.)

அந்த ஞானம் தன் விஷயத்தினும் வேறும்; ஞானத்தினும் வேறன்று; சொப்பனபோதம்போல.

(வி—ம்.)

சுழுத்திகாலத்து அஞ்ஞான அநுபவம் அஞ்ஞானமாகிய விஷயத்தினும் வேறாகத்தக்கதாம்; ஞானமாயிருத்தலால்; கடஞானத்தைப்போல. அந்த ஞானம் மற்ற ஜாக்கிரசொப்பனங்களின் ஞானத்தினும் வேறன்று; ஞானமாயிருத்தலால்; சொப்பனஞானத்தைப்போல.

௫. சுலோகம் ௬-முதல் இதுவரையிற் சொல்லிய கிரமத்தை எல்லாக் காலங்களிலும் கொள்ளுதலும், ஒரே ஞானம் நித்தியமும் சுவயம் பிரகாசமுமாமெனலும்.

---

*௬௦. இது ஏது. உற்புத்தசம்ஸ்காரமாத்திரத்தால் உண்டாகிய ஞானத்தை ஸ்மிருதி யென்பர். அந்த ஸ்மிருதி பிரமம் யதார்த்தம் என்னும் பேதத்தால் இரண்டுவகையாம். பிரமவடிவ அநுபவத்தின் சம்ஸ்காரத்தாலுண்டாகிய ஸ்மிருதி பிராந்திவடிவமாம். யதார்த்தஞானமாகிய அநுபவத்தாலுண்டாகும் ஸ்மிருதி யதார்த்தமாம்.

*௬௧. இது வியாப்தி.

*௬௨. இது உதாரணம்.

(அ—கை.)

சித்திக்த அர்த்தத்தைச் சொல்லுகின்றவராய் முற்கூறிய நியாயத்தை வேறிடத்தும் அதிதேசம் செய்கின்றார்:—

एवं स्थानत्रये अपि संवित् एका ॥

(சு—ம்.)

இப்படி ஜாக்கிரமுதலிய மூன்றிடங்களிலும் ஞானமொன்றாம்.

(வி—ம்.)

இப்படி மூன்றிடங்களிலும் அதாவது ஒரேதினத்திலிருப்பனவாகிய மூன்றவஸ்தைகளிலும் ஞானம் * கூ௩. ஒன்றேயாம்; "சகல வாக்கியங்களும் * கூ௪. அவதாரணத்தோடுகூடியவைகளாம்" என்னும் நியாயமிருத்தலால்.

तद्वत् दिनांतरे ॥

(சு—ம்.)

அதுபோல் மற்றைய நாட்களிலும்.

(வி—ம்.)

ஒருதினத்தில் மூன்றவஸ்தைகளிலும் ஞானம் ஒன்றாயிருத்தல்போல் மற்றத் தினங்களிலும் ஞானம் ஒன்றேயாம். (சு)

[எ] मासाब्दयुगकल्पेषु गतागम्येष्वनेकधा ।
नोदेति नास्तमेत्येका संविदेषा स्वयंप्रभा ॥ ७ ॥

(அ—கை.)

இதுவுமது.

---

* கூ௩. இங்கே தமிழ் உரையில் விழுந்திருக்கும் நிச்சயவாசகமான एव-ஏவ என்னும் பதத்தின் அர்த்தமாகிய 'ஏ' என்னும் பதம் மூலத்தினும் அதிகமாம். அது சம்பவிக்கும்பொருட்டுச் சகல வாக்கியங்களும் சாவதாரணமாம் அதாவது நிச்சயத்தோடு கூடியனவாம் என்னும் நியாயத்தைச் சம்ஸ்கிருத உரைகாரர் கூறியிருக்கின்றனர்.

* கூ௪. சகல வாக்கியங்களும் एवकार=ஏகாரத்தின் அர்த்தமாகிய அவதாரணத்தோடுகூடியனவாய்த் தமது அர்த்தத்தை அறிவிப்பனவாயிருக்கின்றன. இப்படி ஒப்பாவிடின், பிரமைஞானத்தை உண்டாக்குந்தன்மை இல்லாமையால் வாக்கியத்திற்கு அப்பிரமாணத்தன்மையின் அடைவுண்டாகும். அவதாரணம்=நிச்சயம்=துணிவு=தேற்றம்.

अनेकधा गतागम्येषु मासाब्दयुगकल्पेषु संवित् एका ॥

(சு—ம்.)

அநேகவிதமாகச் சென்றவைகளும் வருபவைகளுமாகிய மாத வருட யுக கற்பங்களிலும் ஞானம் ஒன்றும்.

(வி—ம்.)

அநேகவிதமாகச் சென்றனவும் வருவனவுமாகிய சித்திரை முதலிய மாதங்களிலும், கிருதமெனப்படும் சத்தியமுதலிய யுகங்களிலும், பிராஹ்மம் வராகமுதலிய கற்பங்களிலும் ஞானத்திற்கு அபேதமேயுண்டு; பேதிக்கும் பிரமாணமில்லாமையால்.

(அ-தை.)

ஞானத்திற்கு ஐக்கியத்தைச் சொல்லுதலின் பலத்தைக் கூறுகின்றார்:-

न उदेति न अस्तम् एति ॥

(சு—ம்.)

ஞானம் ஒன்றாயிருத்தலால் உண்டாகிறதில்லை; நசிக்கிறதுமில்லை.

(வி—ம்.)

ஞானம் ஒன்றாயிருக்கிறதினால் அது உண்டாகிறதில்லை; நசிக்கிறதுமில்லை; * சூடு. சாக்ஷியின்றி உற்பத்திநாசம் இரண்டும் சித்தியாமையால். ஞானமாகிய தனது உற்பத்திநாசங்கள் ஞானமாகிய தன்னால் கிரகிக்கக் கூடாதனவா யிருத்தலாலும், அவற்றைக் கிரகிக்கக்கூடிய வேறு ஞானம் இல்லாமையாலும் ஞானத்தின் உற்பத்திநாசங்கள் அசாக்ஷிகமாம் அதாவது சாக்ஷியில்லாதனவாம். சாக்ஷியின்றி ஞானத்தின் உற்பத்திநாசம் சித்தியாதென்பது தாற்பரியம்.

---

* சூடு. பிராகபாவத்தின் சரமக்ஷண (கடைசிக்கண)த்தின் பெயர் உற்பத்தி (ஜன்மம்). பிரத்துவம்சாபாவத்தின் முதற்கணத்தின் பெயர் நாசம். அதனால் எந்தப் புருஷனும் தன் ஜன்மத்தையாவது நாசத்தையாவது காணத்தக்கவனல்லன். ஆத்மாவாகிய ஞானம் தீபத்தைப்போலத் தனது சமானகாலத்தின் (தானிருக்குங்காலத்துள்ள) பதார்த்தங்களைப் பிரகாசிப்பிப்பதாகின்றது. அப்படியாகவே தனது ஸ்திதி காலத்திலில்லாத பிராகபாவப் பிரத்துவம்சாபாவங்களின் ஞானமில்லாமையால் பிராகபாவத்தின் கடைசிக்கணமாகிய ஜன்மத்தையும் பிரத்துவம்சாபாவத்தின் முதற்கணமாகிய நாசத்தையும் ஞானம் தானே அறியத்தக்கதன்று.

(அ—கை.)

அப்படி வேறு ஞானம் இல்லையாயின் கிரகிக்கும் சாக்ஷி இல்லாமையால் இந்த ஞானமும் தோற்றமற்போகும். போகவே உலகத்தில் அந்தத்துவப் பிரசங்கம் அதாவது தோற்றமின்மையின் அடைவு உண்டாகுமெனக் கூறுகின்றார்:—

एषा स्वयं प्रभा ॥

(சு—ம்.)

இந்த ஞானம் சுவயம்பிரகாசம்.

(வி—ம்.)

இந்த ஞானம் * சுசு. சுவயம்பிரகாசமாம். இங்கே இது அநுமானமாம்:—ஞானம் சுவயம்பிரகாசம்; ஞானத்தினால் அறியப்படுந்தன்மையில்லாததாய் அபரோக்ஷத்தன்மையினதாயிருத்தலின்; கடத்தைப்போல. இது * சுஎ. வியதிரேகதிருஷ்டாந்தம். * சுஅ. இந்த ஏது விசேஷணத்தில் அசித்தியுடையதன்று. ஏனெனின், ஞானம் தன்னாலறியப்படுமாயின் ஒரே ஞானம் கர்மமும் கர்த்தாவுமாதலாகிய விரோதமுண்டாம். அது வேறு ஞானத்

---

* சுசு. தனது பிரகாசத்தில் வேறுபிரகாசத்தின் அபேக்ஷையில்லாத அல்லது சுவ அதாவது தனது சத்தையினாலேயே பிரகாசிப்பது அதாவது சமுசயமுதலியவைகளில்லாதிருப்பது எதுவோ அது சுவயம்பிரகாச மெனப்படும். இதனையே சுவப்பிரகாசம், சொப்பிரகாசம் என்பர்.

* சுஎ. கடம் ஞானத்திற்கு விஷயமாகாததாய் அபரோக்ஷமன்று. ஆனால் ஞானத்திற்கு விஷயமாவதாய் அபரோக்ஷமாம். ஆகையால் சொப்பிரகாசமுமன்று. அதுபோல இந்த ஞானம் ஞானத்திற்கு விஷயமாகாததாய் அபரோக்ஷமன்றென்பதில்லை. ஆனால் ஞானத்திற்கு விஷயமாகாததாய் அபரோக்ஷமாம். ஆகையால் சொப்பிரகாசவடிவமாம். இது **வியதிரேகிதிருஷ்டாந்தத்தின்** வடிவமாம். ஏது திருஷ்டாந்த அநுமானங்கள் அந்நுவயியும் வியதிரேகியுமாம். சாத்தியம் திருஷ்டாந்தமென்னும் இரண்டிலும் வியாப்தியுள்ள **ஏது அந்நுவயியாம்.** திருஷ்டாந்தத்தில் வியாப்தியில்லாததாய்ச் சாத்தியமாத்திரத்தில் இருப்பதாகிய ஏது **வியதிரேகியாம்.** தார்ஷ்டாந்தத்திற்குச் சமானமாகிய அல்லது ஏதுவின் வியாப்தியோடுகூடிய **திருஷ்டாந்தம் அந்நுவயியாம்.** தார்ஷ்டாந்தத்தினும் விருத்தமாகிய அல்லது ஏதுவின் வியாப்தியின்றிய **திருஷ்டாந்தம் வியதிரேகியாம்.** அந்நுவயி ஏது திருஷ்டாந்தங்களோடு கூடிய **அநுமானம் அந்நுவயியாம்.** அவற்றினும் விபரீதம் **வியதிரேகியாம்.**

* சுஅ. "அறியப்படாததாய் அபரோக்ஷமாயிருத்தலால்" என்னும் எந்த ஏது ஞானத்தின் சொப்பிரகாசத்தன்மையிலிருக்கின்றதோ அந்த ஏதுவின் விசேஷணமாகிய ஞானத்தினாலறியப்படுந்தன்மையில்லாததாய் என்பது அசித்தமன்று.

தால் அறியப்படுமாயின் *சுக. அநவஸ்தையுண்டாகின்றது. இதனால் ஏதுவின் விசேஷணம் சித்திக்கின்றது. ஆதலால் சொப்பிரகாசமாயிருத்தலால் விளங்குகின்ற ஞானத்திற்கு அநாத்மவஸ்துக்கள் எல்லாவற்றையும் பிரகாசிப்பிக்குந்தன்மை சம்பவித்தலால் ஜகத்தோற்றமின்மை யுண்டாமென்னும் பிரசங்கமில்லையென்பது தாற்பரியம். (எ)

**உ. ஞானமே ஆத்மா; ஆத்மா பரமாநந்தமாமெனல். அ—கஉ.**

க. ஞானவடிவ ஆத்மா பரமப்பிரேமையின் சித்தியினால் பரமாநந்தமாமெனல்.

[அ] इयमात्मा परानंदः परप्रेमास्पदं यतः ।
मानभूवं हि भूयासमिति प्रेमात्मनीक्ष्यते ॥ ८ ॥

(அ—தை.)

இப்படி ஞானத்திற்கு நித்தியத்துவமும் சொப்பிரகாசத்துவமுமிருக்குக. அதனாலாகிய தென்னையெனக் கூறுகின்றார்:—

इयं आत्मा ॥

(சூ—ம்.)

இந்த ஞானம் ஆத்மாவாம்.

(வி—ம்.)

இங்கே இது அநுமானமாம்.—இந்த ஞானம் ஆத்மாவாகத்தக்கதாம்; *எ0. நித்தியமாய்ச் சொப்பிரகாசமா யிருத்தலால். எது இத்தன்மையது (ஆத்மா) அன்றோ, அது இத்தன்மையதன்று அதாவது நித்தியமாய்ச் சொப்பிரகாசமுமன்று. *எக. கடம் ஆத்மாவல்ல; ஆகையால் நித்திய சொப்பிரகாசவடிவுமல்ல; இந்த ஞானம் அதுபோலவன்று. ஆத்மாவிற்கு நித்தியமாகிய ஞானவடிவத்தன்மையைச் சாதித்தலால் சத்தியத்தன்மையும் சாதிக்கப்பட்டதாயிற்று; நித்தியத்தன்மைக்கு வேறாகச் சத்தியத்தன்

---

* சுக. ஞானத்திற்கு வேறு ஞானத்தினால் அறிதற்குரியதன்மை யுளதாகவே தான் பெறப்பட்டாலன்றி பிறவற்றின் பெறுதியுண்டாகாது. ஆதலால் அதனை அறிவதாகிய வேறு ஞானமும், அதற்கு வேறு ஞானமும் அபேக்ஷிக்கப்படுகின்றன. இவ்வாற்றால் அநவஸ்தையாம்.

* எ0. உற்பத்தி நாசமில்லாததாய் அல்லது பாவரூபமாய்ப் பிறப்பில்லாததாய்.

* எக. இது வியதிரேகிதிருஷ்டாந்தம்.

மையில்லாமையால். நித்தியத்தன்மையாகியசத்தியத்தன்மை எதற்கிருக்கின்றதோ அது நித்தியமும் சத்தியமுமாமென்று வாசஸ்பதிமிசிர ரென்னும் ஆசிரியர் கூறியிருக்கின்றார்.* எஉ. ஆகையால் இது * எங. அபிப்பிராயமாம்.

(அ—கை.)

ஆத்மாவின் ஆநந்தரூபத்துவத்தைச் சாதிக்கின்றார்:—

परानंदः ॥

(சு—ம்.)

அந்த * எச. ஆத்மா பராநந்தமாம்.

(வி—ம்.)

அந்த ஞானமாகிய ஆத்மா பராநந்தமாம் அதாவது * எரு. நிரதிசய சுகவடிவமாம்.

(அ-கை.)

அந்த ஆத்மாவின் ஆநந்தத்தன்மையில் ஏதுவைக் கூறுகின்றார்:—

यतः परप्रेमास्पदम् ॥

(சு—ம்.)

எதனால் மேலாகிய பிரியத்திற்கு விஷயமாயிருக்கின்றதோ அதனால்.

(வி—ம்.)

ஆத்மா எக்காரணத்தால் * எசு. நிருபாதிகத்தன்மையால் அதாவது

---

* எஉ. நித்தியத்துவத்தின் சித்தி (பெறுதி)யால் சத்தியத்துவமும் சித்தித்தது.

* எங. அபிப்பிராயம், பாவம், ஆசயம் என்பன ஒருபொருட்கிளவி.

* எச. எல்லாவற்றிற்கும் உள்ளாகப் பிரகாசிப்பதாகிய சாக்ஷி.

* எரு. எல்லாவற்றினும் அதிகசுகவடிவம். ஆத்மாநந்தத்தின் இலேச (விஷயப் பிராப்தியால் அந்தர்முகமாகிய விருத்தியிலுள்ள பிரதிபிம்ப)த்தால் எறும்புமுதல் பிரஹ்மாபரியந்தமுள்ள சகல ஜீவர்களும் ஆநந்தமுடையவராகின்றார்கள். ஆகையால் ஆத்மாவாகிய ஆநந்தபிம்பம் சகலவிஷயாநந்தத்தினும் அதிகமாம்.

* எசு. தனம், புத்திரன், தேகம், இந்திரிய முதலிய உபாதியோடுகூடியிருத்தலால் ஆத்மாவினிடத்துப் பிரியத்தின் ஏற்றத்தாழ்வுண்டாகிறது. தேகமுதலிய உபாதிகளைவிட்டு ஆத்மாமாத்திரத்தில் எல்லாவற்றினும் அதிகமான பிரியமிருக்கின்றது. [கஉ-கள-கஙஎ] (ஆத்மாநந்தத்தின் உக-ஙக) பார்க்க.

உபாதியில்லாமையால் நிரதிசயப்பிரேமைக்கு விஷயமாகின்றதோ அதனால் பரமாநந்தமாம். இங்கே இது அநுமானமாம்:—ஆத்மா பரமாநந்தவடிவமாம்; மேலாகிய பிரியத்திற்கு விஷயமாயிருத்தலால்; எது பரமாநந்தவடிவமன்றோ அது மேலாகிய பிரியத்திற்கு விஷயமுமன்று; கடத்தைப்போல; இந்த ஆத்மா மேலாகிய பிரியத்திற்கு விஷயமன்றென்பதில்லை; அதனால் பரமாநந்தவடிவமன்றென்பதில்லை; ஆனால் பரமாநந்தவடிவமேயாம்.

(அ-கை.)

அப்படியானால் ஆத்மாவாகிய தன்னிடத்தில் "ஐ! யான் கெட்டேன்!" என்று துவேஷம் காணப்படுதலால் பிரியத்திற்கு விஷயமாந்தன்மையே சித்தியாதெனின், மேலாகிய பிரியத்திற்கு விஷயமாகுந்தன்மை எங்கிருந்துண்டாகுமென்றுசங்கித்து, * எள. துவேஷமாகிய அது துக்கசம்பந்த நிமித்தத்தாலுண்டானதாயிருத்தலால் வேறுவிதமாகச் சித்தித்திருப்பதாலும், பிரியம் ஆத்மாவில் அநுபவசித்தமாயிருத்தலாலும் ஆத்மாவிற்குப் பிரியத்திற்கு விஷயமாகுந்தன்மை சித்தியாதென்பதில்லையென்று சமாதானம் செய்கின்றார்:—

हि आत्मनि मा भूवं न भूयासम् इति प्रेम ईक्ष्यते ॥

(சு-ம்.)

எதனால் "நானிருக்கலாகாதென்பதில்லை எப்பொழுது மிருப்பேனாக" வென்று பிரியமானது ஆத்மானிடத்துக் காணப்படுகின்றதோ அதனால்,

(வி-ம்.)

எந்தக்காரணத்தால் "நானிருக்கலாகாது" என்பதாக எனது அசத்துத்தன்மை எந்தக்காலத்திலும் உண்டாகலாகாது; ஆனால் "இருக்கவேண்டும்" அதாவது என்றும் என்னுடைய சத்துத்தன்மை(இருக்கை)யே இருத்தல்வேண்டும் என்றிவ்வாறு பிரியமானது ஆத்மாவினிடத்தில் எல்லோரா

---

* எள. ஆத்மா இயல்பாகவே துக்கசம்பந்தமில்லாததா யிருந்தபோதிலும் துக்கசம்பந்தமுள்ள தேகமுதலிய உபாதிகளின் சேர்க்கையால் ஆத்மாவினிடத்தில் துக்கத்தின் சம்பந்தம் தோற்றுகின்றது. அந்தத் துக்கநிமித்தத்தால் உபாதிக்குத் துவேஷத்திற்கு விஷயமாந்தன்மை உண்டாகின்றது. அதன் அத்தியாசத்தால் ஆத்மாவும் துவேஷத்திற்கு விஷயமாகத்தோற்றுகின்றது; இயல்பன்று. உப்பாகிய நிமித்தத்தால் இயல்பாகிய புளிப்பும், மணிமந்திர ஔஷதமாகிய நிமித்தத்தால் இயல்பாகத் தாகஞ்செய்யும் அக்கினியின் சக்தியும் திரோதானமாதல்போலத் துக்கசம்பந்தத்தாலுண்டாகிய துவேஷமாகிய நிமித்தத்தால் ஆத்மாவின் சுபாவசித்தமாகிய பிரேமைக்கு விஷயமாகுந்தன்மையாகிய பிரியதமத்துவம் திரோதானமாகின்றது.

னும் அறியப்படுகின்றதோ, அந்தக்காரணத்தால் ஆத்மாவினிடத்தில் பிரியத்திற்கு விஷயமாந்தன்மை சித்தியாதென்பதில்லை என்பது பொருள். (அ)

[கூ] ?
तत्प्रेमात्मार्थमन्यत्र नैवमन्यार्थमात्मनि ।
अतस्तत्परमं तेन परमानंदताऽऽत्मनः ॥ ९ ॥

(அ-கை.)

அப்படியானல் ஆத்மாவினிடத்துப் பிரியத்தினது சொரூபத்தின் அசித்தியுண்டாகவேண்டாம். * எஅ. பிரியத்தின் பரத்துவமாகிய எல்லாவற்றினுமதிகமாகுந்தன்மையில் பிரமாணமில்லாமையால் ஆத்மாவினது பரமாநந்தத்தன்மையைச் சாதித்தலில் பரமப்பிரேமைக்கு விஷயமாந்தன்மை வடிவ ஏதுவின் [விசேஷணமாகிய "எல்லாவற்றின் அதிகமாம்" என்பது சித்தியாதென்று சங்கித்துக் கூறுகின்றார்:—

अन्यत्र प्रेम तत् आत्मार्थं एवं आत्मनि अन्यार्थं न । अतः तत् परमम् ॥

(சு-ம்.)

மற்றவைகளிலுள்ள அந்தப் பிரியம் ஆத்மாவின்பொருட்டாம். ஆத்மாவினிடத்திலுள்ள பிரியமானது இப்படி மற்றவைகளின்பொருட்டன்று. ஆகையால் அந்த ஆத்மாவினிடத்துள்ள பிரியம் மேலானதாம்.

(வி-ம்.)

தனக்கு வேருகிய புத்திராதிகளிடத்திலுள்ள பிரியம் ஆத்மாவின்பொருட்டாம் அதாவது அப்புத்திராதிகள் அந்த ஆத்மாவிற்கு உபகாரமாயிருக்கின்ற நிமித்தத்தினுலேயாம்; சுபாவமாக அன்று. இப்படி ஆத்மாவினிடத்துள்ள பிரியம் அந்நியபுத்திராதிகளின்பொருட்டன்று; ஆத்மா அந்நியபுத்திராதிகளுக் குபகாரமாயிருக்கும் நிமித்தத்தாலுமன்று. ஆனல் ஆத்மாவாகிய தன்பொருட்டேயாம். ஆகையால் அந்த ஆத்மாவினிடத்துள்ளபிரியம் பரமம் அதாவது எல்லாவற்றினு மதிகமாகிய நிரதிசயமாம்; உபாதியில்லாததாயிருத்தலால்.

(அ-கை.)

சித்தித்த அர்த்தத்தைக் கூறுகின்றார்:—

तेन आत्मनः परमानन्दता ॥

(சு-ம்.)

அந்த ஏதுவினுல் ஆத்மாவிற்குப் பரமாநந்தத்தன்மையிருக்கிறது.

---

* எஅ. ஆத்மாவினிடத்துள்ள பிரியத்தின்.

(வி-ம்.)

அந்த நிரதிசயப்பிரேமைக்கு விஷயமாதலாகிய ஏதுவால் ஆத்மாவிற்குப் பரமாநந்தத்துவமான நிரதிசய சுகவடிவத்தன்மை நிச்சயிக்கப்பட்டது. (௯)

௨. பிரஹ்மமும் ஆத்மாவும் ஒன்றெனல்.

[௧0] इत्थं सच्चित्परानंद आत्मा युक्त्या तथाविधम् ।

परं ब्रह्म तयोश्चैक्यं श्रुत्यंतेषूपदिश्यते ॥ १० ॥

(அ-கை.)

இந்த ஏழு சுலோகங்களினால் சொல்லப்பட்ட அர்த்தத்தைச் சுருக்கிக் காட்டுகின்றார்:—

इत्थं युक्त्या आत्मा सच्चित्परानंदः ॥

(சு-ம்.)

இப்படி யுக்தியினால் ஆத்மா சத்து சித்து பராநந்தமென்பது சித்தித்தது.

(வி-ம்.)

"शब्दस्पर्शादय :—சப்தஸ்பரிசமுதலியன" என்னும் மூன்றாவது சுலோகமுதல் ஏழாவது சுலோகம் வரையில் ஞானத்தின் நித்தியத்தன்மையைச் சாதித்து, அதற்கே "इयमात्मा இது ஆத்மா" என்னும் எட்டாவது சுலோகத்தின் பதத்தால் ஆத்மத்தன்மையைச் சாதித்தலால் ஆத்மாவிற்குச் சச்சிதாநந்த ரூபத்துவம் சாதிக்கப்பட்டது. "परानन्दः பராநந்தமாம்" என்னும் எட்டாவது சுலோகத்தினால் ஆத்மாவிற்குப் பராநந்தத்தன்மை சாதிக்கப்பட்டது. இதனால் மகாவாக்கியத்திலுள்ள துவம்பதத்தினர்த்தமாகிய ஆத்மா சச்சிதாநந்தவடிவமெனச் சித்தித்தது.

(அ-கை.)

அப்படியானால் முற்கூறிய சச்சிதாநந்தவடிவ லக்ஷணமுடைய ஆத்மா யுக்தியினாற்றானே அறியப்படுமாயின் * ஏக. உபநிடதங்கள் நிர்விஷயமாத

* ஏக. உபநிடதங்கள் விஷயமில்லாதனவா (வியர்த்தமா)கின்றமையால் அவற்றிற்கு அப்பிரமாணத்தன்மையின் பிராப்தியுண்டாகும். அல்லது ஆத்மா உபநிடதங்களுக்கு விஷயமாகாததாயிருத்தலால் ஆத்மாவினிடத்தில் அப்பிரமாணத்தன்மையின் பிராப்தியுண்டாகும்.

லால் அப்பிரமாணமாகுமேயென்னும் பிரசங்கமுண்டாகு மென்றுசங்கித்துக் கூறுகின்றார்:—

तथाविधं परं ब्रह्म । तयोः ऐक्यं च श्रुत्यंतेषु उपदिश्यते ॥

(சு-ம்.)

அப்படிப்பட்டது பரப்பிரஹ்மமாம். பிரஹ்மம் ஆத்மாவென்னும் அவ்விரண்டிற்கும் ஐக்கியமானது வேதாந்தமாகிய உபநிடதங்களில் உபதேசிக்கப்பட்டிருக்கின்றது.

(வி-ம்.)

அப்படிப்பட்ட சச்சிதாநந்தமாகிய பரப்பிரஹ்மம் மகாவாக்கியத்தில் "தத்" பதத்தின் அர்த்தமாம். அந்த "தத், தத் த்வ துவம்" பதங்களிரண்டின் அர்த்தமாகிய பிரஹ்மாத்மாவிற்கு அகண்டைகரசத்துவமாகிய ஐக்கியம் உபநிஷதங்களில் கூறப்பட்டிருக்கின்றது. ஆதலால் வேதாந்தங்களுக்கு விஷயமின்மையில்லை. (௧௦)

௯. ஆத்மா பரமாநந்தமாமென்பதில் சங்கையும் சமாதானமும்.

[௧௧] अमाने न परं प्रेम भाने न विषये स्पृहा ।
अतो भानेऽप्यभाताऽसौ परमानंदतात्मनः ॥ ११ ॥

(அ-கை.)

ஆத்மாவின் பரமாநந்தரூபத்தன்மையைப் பிரதிவாதி ஆக்ஷேபிக்கின்றான்:—

अभाने परं प्रेम न । भाने विषये स्पृहा न ॥

(சு-ம்.)

ஆத்மாவின் பரமாநந்தரூபத்துவம் விளங்காதாயின் மேலாகிய பிரியம் உண்டாகாது; விளங்குமாயின் விஷயங்களில் இச்சை உண்டாகாது.

(வி-ம்.)

ஆத்மாவின் பராநந்தத்துவம் தோற்றவில்லையா? தோற்றுகிறதா? தோற்றவில்லையெனின், ஆத்மாவினிடத்து எல்லாவற்றினும் அதிக சிநேகமாகிய பரமப்பிரேமை உண்டாகலாகாது; ஏனெனின், சிநேகம் விஷயத்தில் சௌந்தரியத்தைக் காணுதலால் உண்டாவதாயிருத்தலால். தோற்றுகிறதென்னும் இரண்டாவது பக்ஷமாயின் விஷயாநந்தத்திற்குச் சாதனமாகிய

மாலை சந்தனம் ஸ்திரீ முதலியவற்றிலாவது அவற்றாலாகிய சுகத்திலாவது இச்சையுண்டாகலாகாது; ஏனெனின், பரமசுகமாகிய பலம் கிடைத்திருக்குங்காலத்து விஷயவடிவ சாதனத்திலிச்சை யுண்டாகாமையாலும், நித்தியமாகிய நிரதிசயாநந்தம் இலபித்திருக்க க்ஷணிகமும் சாதனங்களின் அதீனமாயிருத்தன்முதலிய தோஷங்களால் தூஷிக்கப்பட்டதுமான விஷயசுகத்திலிச்சை சம்பவியாமையாலும் ஆத்மாவிற்குப் பரமாநந்தரூபத்துவம் பொருந்தாது. (இது சங்கை.)

(அ-கை.)

இங்கே விளங்குதல் விளங்காமை என்னுமிரண்டிற்கும்வேறுந்தன்மை சம்பவித்தலால், ஆத்மாவிற்குப் பரமாநந்தரூபத்தன்மை பொருந்தாதென்பதில்லையெனச் சித்தாந்தி பரிகரிக்கின்றார்:—

अतः आत्मनः असौ परमानंदता भाने अपि अभाता ॥

(சு-ம்.)

ஆகையால் இந்த ஆத்மாவின் பரமாநந்தத்தன்மை தோற்றிக்கொண்டிருந்தும் தோற்றுகிறதில்லை.

(வி-ம்.)

எதனால் தோற்றம் தோற்றமின்மை என்னுமிரண்டு பக்ஷங்களிலும் தோஷமிருக்கின்றதோ, அந்தக்காரணத்தால் ஆத்மாவின் பரமாநந்தத்துவம் தோற்றிக்கொண்டிருந்தும் தோற்றாமலிருக்கின்றது. (கக)

[கஉ] १२. अध्येतृवर्गमध्यस्थपुत्राध्ययनशब्दवत् ।
भानेप्यभानं भानस्य प्रतिबंधेन युज्यते ॥ १२ ॥

(அ-கை.)

அப்படியானால் ஒன்றற்கு ஒரேகாலத்தில் தோற்றுதல் தோற்றாமை என்றிரண்டு பொருந்தாது என்றாசங்கித்து, பொருந்தாதெனல் "ஒன்றன்கண் தோற்றுதலும் தோற்றமின்மையும் ஓரிடத்தும் காணப்படவில்லை" யென்றா? அல்லது யுக்தியில்லாமையினலா? என்று விகற்பித்து அவற்றில் முதல் விகற்பம் பொருந்தாதெனக் கூறுகின்றார்:—

अध्येतृवर्गमध्यस्थपुत्राध्ययनशब्दवत् भाने अपि अभानम् ॥

(சு-ம்)

அத்தியயனம் செய்பவர்களின் கூட்டத்தின் மத்தியிலிருக்கும் புத்திரனது அத்தியயனசத்தத்தைப்போலத் தோற்றிக்கொண்டிருந்தும் தோற்றாதிருக்கிறது.

(வி-ம்.)

வேதம் ஓதுவோர்களது கூட்டத்தின் மத்தியிலுள்ள ஒருவனுடைய புத்திரனது அத்தியயனமாகிய அவனாற்சொல்லப்பட்ட படனத்தின் சத்தமானது வெளியில் நிற்கும் அவனது பிதாவிற்குச் சாமானியமாக விளங்கிக் கொண்டிருந்தும் "இது என்புத்திரனது சத்தம்" என விசேஷமாக விளங்காததுபோல ஆநந்தம் விளங்கிக்கொண்டிருந்தும் விளங்காமலிருக்கின்றது.

(அ-கை.)

இரண்டாவது விகற்பத்தைக் குறித்துக் கூறுகின்றார்:—

भानस्य प्रतिबंधेन युज्यते ॥

(சு-ம்.)

விளக்கத்தின் * ௮௦. பிரதிபந்தத்தால் விளங்கிக்கொண்டிருந்தும் விளங்காதிருத்தல் பொருந்துகின்றது.

(வி-ம்.)

ஸ்புரணமாகிய விளக்கத்திற்குச் சொல்லப்படுமிலக்ஷணமுடைய பிரதிபந்தத்தால் சாமானியமாகத் தோற்றிக்கொண்டிருந்தும் விசேஷவடிவமாகத் தோற்றாதிருத்தல் பொருந்துகின்றது என்பது பொருள். (௧௨)

---

* ௮௦. காரியத்திற்கு விரோதியானது பிரதிபந்தமென்றும், பிரதிபந்தகமென்றும் சொல்லப்படும். இங்கே பரமாநந்தத்தன்மையின் விசேஷத்தோற்றமாகிய காரியத்திற்கு விரோதியாகிய ஆவரணம் பிரதிபந்தமாம். இங்கே இது விவேக (பேத)மாம்:-அஞ்ஞானிகளுக்கு அவித்தையினாலாகிய (௧௬-வது சுலோகத்தில் சொல்லப்படும்) ஆவரணமென்னும் பிரதிபந்தத்தால் பரமாநந்தத்தன்மை சாமானியமாகத் தோற்றிக்கொண்டிருந்தும் விசேஷமாகத் தோற்றுகிறதில்லை. ஆகையால் ஆத்மாவினிடத்து மேலாகிய பிரியமும் விஷய இச்சையும் கூடும். வித்வான் (ஞானி) களுக்கு ஒருகால் வியவகாரத்தில் விசேஷமாய் அறியப்பட்ட ஆத்மாவின் அவிசாரத்தாலுண்டாம் பகிர்முகவிருத்தியாகிய பிரதிபந்தத்தால் பரமாநந்தத்தன்மை சாமானியமாகத் தோற்றிக்கொண்டிருந்தும் சிலகாலம் விசேஷமாகத் தோற்றுகிறதில்லை. அதனால் ஆத்மாவினிடத்துப் பரமப்பிரோமையும் விஷயங் (இஷ்டவஸ்துக்)களில் இச்சையும் உண்டாகின்றது. மறுபடியும் விசாரத்தால் முற்கூறிய பிரதிபந்தம் நீங்குவதால் விசேஷமாகப் பரமாநந்தத்தன்மை தோற்றுகின்றது. அது ஈரமுள்ள ஆற்றின் மணலை ஓரிடத்து விலக்குவதினால் பள்ளத்தில் ஜலம் வெளிப்பட்டு, மறுபடியும் மணலைத் தள்ளுவதினால் ஜலம் மறைக்கப்பட்டு, மறுபடியும் மணலை விலக்குவதினால் ஜலம் ஆவரணமின்றித் தோற்றுவது போலாம்.

௪. பரமாநந்தத்தன்மையினூறு விளக்கத்லைதத் தடுப்பதின் இலக்ஷணம்.

[கங] प्रतिबंधोऽस्ति भातीति व्यवहारार्हवस्तुनि ।
तन्निरस्य विरुद्धस्य तस्योत्पादनमुच्यते ॥ १३ ॥

அப்படியானால் அந்தப்பிரதிபந்தம் யாது? எனக் கூறுகின்றார்:—

अस्ति भाति इति व्यवहारार्हवस्तुनि तं निरस्य विरुद्धस्य तस्य उत्पादनम् प्रतिबंधः उच्यते ॥

(க-ம்.)

"இருக்கிறது" "விளங்குகிறது" என்னும் வியவகாரத்திற்குரிய பதார்த்தங்களில் அதை நிஷேதித்து அதற்கு விரோதமாகிய "இல்லை" "தோற்றவில்லை" என்னும் வியவகாரத்தை உண்டுபண்ணுவது பிரதிபந்தமென்று சொல்லப்படுகிறது.

(வி-ம்.)

"இருக்கிறது" "விளங்குகிறது" என்னும் வியவகாரத்திற்குரிய வஸ்துக்களில், முற்கூறிய அந்த "இருக்கிறது" "விளங்குகிறது" என்னும் வியவகாரத்தை நிஷேதித்து, முற்கூறிய அவ்வியவகாரத்திற்கு விருத்தமாகிய "இல்லை" "விளங்கவில்லை" என்னும் வியவகாரமுண்டாகுதல் பிரதிபந்தமெனப்படும். (கங)

௫. திருஷ்டாந்த தார்ஷ்டாந்தங்களில் பிரதிபந்தத்தின் காரணம்.

[கச] तस्य हेतुः समानाभिहारः पुत्रध्वनिश्रुतौ ।
इहानादिरविद्यैव व्यामोहैकनिबंधनम् ॥ १४ ॥

(அ-கை.)

முற்கூறிய இலக்ஷணமுடைய பிரதிபந்தத்தின் காரணத்தைத் திருஷ்டாந்த தார்ஷ்டாந்தங்களிரண்டிலும் கிரமமாகக் காட்டுகின்றார்:—

पुत्रध्वनिश्रुतौ तस्य हेतुः समानाभिहारः इह व्यामोहैकनिबंधनं अनादिः अविद्या एव ॥

(க-ம்.)

புத்திரனது சத்தத்தைக் கேட்பதாகிய திருஷ்டாந்தத்தில் அநேகரோடு படித்தல் அந்தப் பிரதிபந்தத்திற்குக் காரணமாம். இங்கே தார்ஷ்டாந்தத்தில் விபரீதஞானத்திற்கு முக்கியகாரணமாகிற அநாதி அவித்தையே பிரதிபந்தத்திற்குக் காரணமாம்.

(வி–ம்.)

புத்திரனது சத்தத்தைக் கேட்டலாகிய திருஷ்டாந்தத்தில் அநேகர்களோடுசேர்ந்து படித்தல் அந்தப் பிரதிபந்தத்திற்குக் காரணமாம். விசேஷமாகப் பரமாநந்தத்தன்மை தோற்றுவதாகிய தார்ஷ்டாந்தத்தில் விபரீதஞானத்திற்கு முக்கியகாரணமும் அநாதியுமாகிய சொல்லப்படும் இலக்ஷணமுடைய அவித்தை பிரதிபந்தத்திற்குக் காரணமாம். (கச)

ஈ. பிரகிருதியின் சொரூபம் கரு—கஅ.

க. பிரகிருதியின் சொரூபமும் பேதமும்.

[கரு] चिदानंदमयब्रह्मप्रतिबिंबसमान्विता ।
तमोरजःसत्त्वगुणा प्रकृतिर्द्विविधा च सा ॥ १५ ॥

(அ–கை.)

இப்போது பிரதிபந்தத்திற்கு ஏதுவாகிய அவித்தையைப் பிரதிபாதித்தற்கு, அவ்வவித்தையினது காரணமாகிய பிரகிருதியைப் * அக. பிரதிபாதிக்கின்றார்:—

चिदानंदमयब्रह्मप्रतिबिंबसमान्विता तमोरजःसत्त्वगुणा प्रकृतिः सा च द्विविधा ॥

(சு–ம்.)

ஞாநாநந்தவடிவமாகிய பிரஹ்மத்தின் பிரதிபிம்பத்தோடு கூடியதாகிய தாமதஇராஜச சாத்வீகவடிவமுள்ளது பிரகிருதியாம். அப்பிரகிருதி மறுபடியும் இரண்டுவகையாம்.

(வி–ம்.)

ஞாநாநந்தவடிவமாகிய பிரஹ்மம் எதுவோ அதனது பிரதிபிம்பத்தோடுகூடியதாகிய சாத்வீக இராஜச தாமதமென்னும் மூன்றுகுணங்களின் * அஉ. சாம்யாவஸ்தை பிரகிருதி யெனப்படுகின்றது, அப்பிரகிருதி மறுபடியும் இரண்டுவகையாம். மூலத்தில் மறுபடியும் என்னும் அர்த்தமுடைய च-ச என்னும் பதத்தால் கஅ-வது சுலோகத்தில் சொல்லப்படும் தமப்பிரதானப்பிரகிருதியின் வேறு மூன்றுவதுவிதம் சூசிக்கப்படுகின்றது (கரு)

---

* அக. அதன் இன்மையில் அதனை ஆரோபித்துக் கூறுகின்றார்:—

* அஉ. ஏற்றத்தாழ்வின்றிச் சமமாயிருத்தல்.

உ. மாயை அவித்தைகளின் பேதமும் ஈசுவரனது சொரூபமும்.

[கசு] सत्त्वशुद्ध्यविशुद्धिभ्यां मायाविद्ये च ते मते ।
मायाबिंबो वशीकृत्य तां स्यात्सर्वज्ञ ईश्वरः ॥ १६ ॥

(அ—கை.)

காரணத்தோடு பிரகிருதியின் இரண்டுவிதத்தை ஒன்றரைச்சுலோகத்தாற் காட்டுகின்றார்:—

सत्त्वशुद्ध्यविशुद्धिभ्यां ते च मायाविद्ये मते ॥

(சு—ம்.)

சத்துவகுணத்தின் சுத்த அசுத்தங்களால் அப்பிரகிருதியின் இரண்டு விதங்களும் முறையே மாயை அவித்தையென மதிக்கப்பட்டிருக்கின்றன.

(வி—ம்.)

பிரகாசவடிவ சத்துவகுணத்தின் சுத்தியாவது மற்ற இரஜோதமோகுணங்களால் மலினமாகாமை; சத்துவத்தின் அசுத்தியாவது மற்ற இரஜோதமோகுணங்களால் மலினமாதல்; இவற்றால் அந்தப்பிரகிருதி மாயை அவித்தையென இரண்டுவிதமாக ஒப்பப்பட்டிருக்கின்றது. அவற்றுள், விசுத்த சத்துவகுணப்பிரதானமுடையது மாயையும் மலினசத்துவகுணப்பிரதானமுடையது அவித்தையுமாம்.

(அ—கை.)

எதன்பொருட்டு மாயை அவித்தைகளின் பேதமானது சொல்லப்பட்டதோ, அந்தப் பிரயோஜனத்தை இப்போது காட்டுகின்றார்:—

मायाबिंबः तां वशीकृत्य सर्वज्ञः ईश्वरः स्यात् ॥

(சு—ம்.)

மாயாப்பிரதிபிம்பர் அந்தமாயையை வசஞ்செய்து சர்வஞ்ஞனாகிய ஈசுவரனாகின்றார்.

(வி—ம்.)

மாயையில் பிரதிபிம்பித்த சிதாத்மாவாகியபிரஹ்மம் அந்தமாயையைச் சுவாதீனப்படுத்திக்கொண்டு சர்வஞ்ஞத்துவமாகிய முற்றறிவுடைமை முதலிய குணங்களையுடைய ஈசுவரனாகின்றது. (கசு)

.௩ ஜீவனது சொரூபம் (பிராஞ்ஞனை வர்ணித்தல்.)

[௧௭] अविद्यावशगस्त्वन्यस्तद्वैचित्र्यादनेकधा ।
सा कारणशरीरं स्यात्प्राज्ञस्तत्राभिमानवान् ॥ १७ ॥

(அ-கை.)

இதுவுமது.

अविद्यावशगः तु अन्यः तद्वैचित्र्यात् अनेकधा ॥

(சு-ம்.)

*அவித்தைவசத்தனாகிய அந்நியஜீவன் அந்த அவித்தையினது விசித்திரத்தன்மையால் அநேகவிதமாம்.*

(வி-ம்.)

*அவித்தையிற் பிரதிபிம்பித்துள்ளதும் அவ்வவித்தையின் வசமாகியதுமான ஞாநாத்மா ஜீவனும். அந்த ஜீவனும் அவ்வுபாதியாகிய அவித்தையினது அசுத்தியின் தாரதம்மியமாகிய விசித்திரத்தன்மையால் தேவர் திரியக்கெனும் பசுபக்ஷி முதலிய பேதத்தால் பலவிதமாம் என்பது பொருள்.*

(அ-கை.)

*"முஞ்சிப்புல்லினின்றும் சலாகையை எடுப்பதுபோல ஆத்மா தீரர்களால் யுக்தியினுல் மூன்று சரீரங்களினின்றும் வேறுபிரிக்கப்பட்டதாய்ப் பரப்பிரஹ்மமேயாகின்றது" என்று மேல் சஙு-வது சுலோகத்தில் மூன்று சரீரங்களின்றும் விவேகிக்கப்படும் ஜீவனுக்குப் பிரஹ்மத்தன்மையைக் கூறுவார். அங்கே மூன்று சரீரங்களெவை? அந்தந்தச் சரீரமாகிய உபாதியுடைய ஜீவனுக்கு வடிவம் யாது? என்று கேட்கும்விருப்பத்தில், "அது காரணசரீரமாகின்றது" என்பன முதலியவற்றால் அவை எல்லாவற்றையும் கிரமமாகக் கூறுகின்றார்:—*

सा कारणशरीरं । तत्र अभिमानवान् प्राज्ञः स्यात् ॥

(சு-ம்.)

*அவ்வவித்தை காரணதேகமாகின்றது. அக்காரணசரீரத்தில் அபிமானமுடைய ஜீவன் பிராஞ்ஞனாகின்றான்.*

(வி-ம்.)

*அவித்தை ஸ்தூல சூக்ஷ்மசரீர முதலியவற்றிற்குக் காரணவடிவமாகின்றது. பிரகிருதியின் அவஸ்தாவிசேஷமாயிருத்தலால் இவ்வவித்தைக்*

கும் காரணத்தன்மை உபசாரமாகச் சொல்லப்படுகின்றது. தத்துவஞானத்தால் நாசமாகின்றமையால் இவ்வவித்தை சரீர மெனப்படுகின்றது. அந்த அவித்தையாகிய காரணசரீரத்தில் தாதான்மிய அதாவது அபேத அத்தியாசத்தால் "நான் அஞ்ஞானி" என்றபிமானிப்பவனாகிய ஜீவன் பிராஞ்ஞனாகின்றான். பிரஞ்ஞையாகிய ஞாநதிருஷ்டியான அவிநாசி சொரூபம் எவனுக்கிருக்கிறதோ அவன் பிரஞ்ஞன்; பிரஞ்ஞனே பிராஞ்ஞனென்னும் பெயருடையவனாகின்றான் என்பது பொருள். (கஎ)

ச. அபஞ்சீகிருத பஞ்சமகாபூதங்களின் உற்பத்தி கஅ-உக.

க. தமப்பிரதானப்பிரகிருதியினின்றும் சூக்ஷ்மபஞ்ச மகாபூதங்களின் உற்பத்தி.

[கஅ] तमःप्रधानप्रकृतेस्तद्भोगायेश्वराज्ञया ।
वियत्पवनतेजोऽम्बुभुवो भूतानि जज्ञिरे ॥ १८ ॥

(அ—கை)

கிரமமாக அடையப்பட்ட சூக்ஷ்மசரீரத்தையும் அந்தச் சூக்ஷ்மசரீர வடிவ உபாதியுடைய ஜீவனையும் பிரதிபாதித்தற்குச் சூக்ஷ்மசரீரத்துக்குக் காரணமாகிய ஆகாய முதலியவற்றின் சிருஷ்டியைக் கூறுகின்றார்:—

तद्भोगाय तमःप्रधानप्रकृतेः ईश्वराज्ञया वियत्पवनतेजोऽम्बुभुवः भूतानि जज्ञिरे ॥

(சு—ம்.)

அந்தப் பிராஞ்ஞர்களாகிய ஜீவர்களது போகத்தின் பொருட்டுத் தமப்பிரதானப் பிரகிருதியினின்றும் ஈசுவரனது ஆணையாகிய இச்சையினால் ஆகாயம், காற்று, அக்கினி, ஜலம், பிருதிவி என்னும் பூதங்கள் உண்டாயின.

(வி—ம்.)

அந்தப் பிராஞ்ஞர்களாகியஜீவர்களுக்குச் சுகதுக்க சாக்ஷாத்காரமாகிய போகம் சித்திக்கும்பொருட்டு முன் மூன்றாவதாகக் கூறப்பட்ட ஜகத்தின் உபாதானகாரணமாகிய தமோகுணத்தை முக்கியமாகவுடைய தமப்பிரதானப் பிரகிருதியினின்றும் ஈசனம் அதாவது பிரேரித்தல் முதலிய சக்திகளோடுகூடிய ஈசுவரனது பார்வையோடு நிமித்தகாரணமாகிய சிருஷ்டியின் இச்சையென்னும் ஆணையால் ஆகாயமுதற் பிருதிவிபரியந்தமான பஞ்ச பூதங்களும் வெளிப்பட்டன. (கஅ)

[௧௯] सत्त्वांशैः पंचभिस्तेषां क्रमाद्धींद्रियपंचकं ।
श्रोत्रत्वगक्षिरसनघ्राणाख्यमुपजायते ॥ १९ ॥

(அ-கை.)

பூதங்களின் சிருஷ்டியைக் கூறிப் பௌதிகங்களாகிய பூதகாரியங்களின் சிருஷ்டியைக் கூறுவாராய் முதலில் ஞானேந்திரியங்களின் சிருஷ்டியைக் கூறுகின்றார்:—

तेषां पंचभिः सत्त्वांशैः श्रोत्रत्वगक्षिरसनघ्राणाख्यम् धीन्द्रियपंचकं क्रमात् उपजायते ॥

(சு-ம்.)

அவற்றின் ஐந்துசத்துவாம்சங்களால் சுரோத்திரம் துவக்கு நேத்திரம் சிங்ஙுவை கிராணம் என்னும் பெயருடைய ஞானேந்திரியம் ஐந்தும் கிரமமாக உண்டாயிருக்கின்றன.

(வி-ம்.)

அவ்வாகாய முதலியவற்றின் ஐந்து உபாதானமாகிய சத்துவ குணபாகங்களால் சுரோத்திரம், துவக்கு, சக்ஷு, சிங்ஙுவை, கிராணம் என்னும் ஞானேந்திரியங்கள் ஐந்தும் கிரமமாயுண்டா யிருக்கின்றன. ஒவ்வொரு பூதத்தினுள்ள சத்துவாம்சத்தினின்றும் ஒவ்வொரு ஞானேந்திரிய முண்டாகின்றதென்பது பொருள். (௧௯)

அந்தக்கரணத்தின் உற்பத்தியும் அதன் பேதமும்.

[௨0] तैरंतःकरणं सर्वैर्वृत्तिभेदेन तद्विधा ।
मनो विमर्शरूपं स्याद्बुद्धिः स्यान्निश्चयात्मिका ॥ २० ॥

(அ-கை.)

சத்துவாம்சங்களின் ஒவ்வொரு * அஎ. அசாதாரண காரியங்களைக் கூறி எல்லாவற்றின் * அசா. சாதாரண காரியங்களையும் கூறுகின்றார்:—

तैः सर्वैः अंतःकरणम् ॥

(சு-ம்.)

அவைகள் எல்லாவற்றாலும் அந்தக்கரணமுண்டாகின்றது.

---

* அஎ. ஒன்றற்கே காரியம்.
* அசா. எல்லாவற்றிற்கும் காரியம்.

(வி—ம்.)

பூதங்களிற் சேர்ந்திருக்கும் சகல சத்துவகுணாம்சங்களாலும் மனம் புத்தி என்பவற்றின் உபாதானமான அந்தக்கரணமாகிய * அநி. திரவிய முண்டாகின்றது.

(அ—கை.)

அவ்வந்தக்கரணத்தின் அவாந்தரபேதத்தை நிமித்தத்தோடு கூறுகின்றார்:—

तत् वृत्तिभेधेन द्विधा ॥

(சு—ம்.)

அது விருத்திபேதத்தினால் இரண்டுவிதமாம்.

(வி—ம்.)

அவ்வந்தக்கரணம் பரிணாமமாகிய விருத்திபேதத்தால் இரண்டுவிதமாம்.

(அ—கை.)

விருத்திபேதத்தைக் காட்டுகின்றார்:—

विमर्शरूपं मनः स्यात् । निश्चयात्मिका बुद्धिः स्यात् ॥

(சு—ம்.)

மனம் சம்சயவடிவினதாகின்றது. புத்தி நிச்சயவடிவினதாகின்றது.

(வி—ம்.)

சமுசயரூப விருத்தி எதற்கு வடிவமாயிருக்கின்றதோ அது மனமாம். நிச்சயம் எதற்குச் சொரூபமாயிருக்கின்றதோ அப்படிப்பட்ட விருத்தி புத்தியாயிருக்கின்றது. (உ0)

௪. கர்மேந்திரியங்களின் உற்பத்தி.

[உக] रजोंऽशैः पंचभिस्तेषां क्रमात्कर्मेंद्रियाणि तु ।
वाक्पाणिपादपायूपस्थाभिधानानि जज्ञिरे ॥ २१ ॥

(அ—கை.)

கிரமமாக அடையப்பட்ட ரஜோகுண அம்சங்களின் ஒவ்வொரு அசாதாரண காரியத்தையும் கூறுகின்றார்:—

---

* அநி. (கூஉ) வது சுலோகத்தின் "முதலிய" என்னும் பதத்தின் விளக்கவுரையிற் காண்க.

तेषां पंचभिः रजोंशैः तु वाक्पाणिपादपायूपस्थाभिधानानि कर्मेन्द्रियाणि क्रमात् जज्ञिरे ॥

(சு-ம்.)

அந்தப் பூதங்களின் ஐந்து இரஜோகுண அம்சங்களினின்றும் வாக்கு, பாதம், பாணி, பாயுரு, உபஸ்தம் என்னும் பெயரையுடைய கர்மேந்திரியங்கள் கிரமமாக உண்டாயின.

(வி-ம்.)

அவ்வாகாயமுதலியவற்றின் ஐந்து உபாதானமாகிய ரஜோகுண அம்சங்களினின்றே வாக்கு, பாதம், பாணி, பாயுரு, உபஸ்தம் என்னும் பெயரையுடையனவாய்க் கிரியையையுண்டுபண்ணும் ஐந்து கர்மேந்திரியங்கள் கிரமமாக உண்டாயின. ஒவ்வொரு பூதத்திலுள்ள ஒவ்வொரு இரஜோகுணபாகத்தினின்றும் ஒவ்வொரு கர்மேந்திரியமுண்டாயிற்று என்பது பொருள். (உக)

இ. பிராணிகளின் உற்பத்தியும் அவற்றின் பேதமும்.

तैः सर्वैः सहितैः प्राणो वृत्तिभेदात्स पंचधा ।
प्राणोऽपानः समानश्चोदानव्यानौ च ते पुनः ॥ २२ ॥

(அகை.)

பூதங்களினது இரஜோகுண அம்சங்களின் சாதாரண காரியத்தைக் கூறுகின்றார்:—

साहितैः तैः सर्वैः प्राणः ॥

(சு-ம்.)

சேர்ந்துள்ள அந்த இரஜோகுண அம்சங்கள் எல்லாவற்றினுலும் பிராணன் உண்டாகின்றது.

(வி-ம்.)

சேர்ந்து காரணத்தன்மையடைந்த பஞ்சபூதங்களினது இரஜோகுணத்தின் ஐந்து அம்சங்களினின்றும் பிராணன் உண்டாகின்றது.

(அ-கை.)

அந்தப் பிராணனது அவாந்தரபேதத்தைக் கூறுகின்றார்:—

सः वृत्तिभेदात् पंचधा ॥

(சு-ம்.)

அந்தப் பிராணன் விருத்திபேதத்தால் ஐந்துவிதமாம்.

(வி-ம்.)

அந்தப் பிராணன் பிராணனம் (மேற்செல்லல்) * ௮௬. முதலிய வியாபாரபேதத்தால் ஐந்துவிதமாம்.

(அ-கை.)

விருத்திபேதங்களையே காட்டுகின்றார்:—

ते पुनः प्राणः अपानः समानः च उदानव्यानौ च ॥

(சு-ம்.)

அவைகளோ * ௮௭. பிராணன் * ௮௮. அபானன் * ௮௯. சமானன் * ௯0. உதானன் * ௯௧. வியானன் என்பனவாம்.

(வி-ம்.)

அவ்வைந்துபேதங்களும் பிராணன்முதலிய பதங்களின் வாச்சியங்களாம் என்பது பொருள். (௨௨)

---

* ௮௬. முதலிய வென்னுஞ் சொல்லால் அபானனம், சமானனம், உதானனம், வியானனம் என்னும் தொழில்களும் கொள்ளப்படும். ௧. இருதயதேசத்தி லிருந்துகொண்டு சுவாச உச்சுவாசமாக உள்ளும்வெளியும் வருதல்போதல்களுக்குப் பிராணனக்கிரியை யென்று பெயர். ௨. குதத்திலிருந்து கொண்டு மலமூத்திரங்களைக் கீழே இறக்குவதற்கு அபானனம் என்று பெயர். ௩. தோட்டக்காரன் கிணற்று நீரை வாய்க்காலின்வழியாய்த் தோட்டமுழுவதிலும் சேர்ப்பித்தல்போல நாபியிலிருந்துகொண்டு உண்ட அந்நரசங்களை எடுத்து நாடியின்வழியாய்ச் சரீரமுழுவதிலும் அடைவித்தற்குச் சமானனம் என்று பெயர். ௪. கண்டத்திலிருந்துகொண்டு கூடவே உண்ணப்பட்டனவும் பருகப்பட்டனவுமாகிய அன்னஜலங்களை வேறுபிரித்தற்கும் வாந்திமுதலியவற்றைச் செய்தற்கும் உதானன மென்று பெயர். ௫. சரீரமுழுவதினுமிருந்துகொண்டு சகல அங்கங்களின் மூட்டுகளையும் திருப்புவதற்கு வியானனக்கிரியை யென்று பெயர். இந்த ஒவ்வொரு கிரியையினையும் செய்யும் வாயுக்கள் கிரமமாகப் பிராணன்முதலிய பெயர்களுடையனவாகச் சொல்லப்படுகின்றன.

* ௮௭. மேற்செல்லுஞ் சுபாவமுடைய நாசிநுனியிலிருக்கும் வாயு பிராணன்.

* ௮௮. கீழ்ச்செல்லுஞ் சுபாவமுடைய குதமுதலியவற்றிலிருக்கும் வாயு அபானன்.

* ௮௯. சரீரமத்தியிலிருந்துகொண்டு அந்நரசமுதலியவற்றைச் சரீரமுழுவதினும் நாடிவழியாய்ச் செலுத்தும் வாயு சமானன்.

* ௯0. மேற்செல்லும் சுபாவமுடையதாய்க் கண்டத்திலிருக்கும் வாயு உதானன்.

* ௯௧. சகலநாடிகளிலும் செல்லுஞ் சுபாவமுடையதாய்ச் சரீரமுழுவதினுமிருக்கும் வாயு வியானன்.

௫. சூக்ஷ்மசரீரத்தின் சொரூபம் ௨௩-௨௫.
க. இலிங்கதேகத்தைக் கூறுதல்.

बुद्धिकर्मेंद्रियप्राणपंचकैर्मनसा धिया ।
शरीरं सप्तदशभिः शूक्ष्मं तल्लिंगमुच्यते ॥ २३ ॥

(அ-கை.)

ஆகாயமுதல் பிராணன்வரையிலுள்ள தத்துவங்களின் சிருஷ்டி எதன் பொருட்டுச் சொல்லப்பட்டதோ அந்தப் பிரயோஜனத்தை இப்போது காட்டுகின்றார்:—

बुद्धिकर्मेंद्रियप्राणपंचकैः मनसा धिया सप्तदशभिः सूक्ष्मं शरीरम् ॥

(சு-ம்.)

ஞானேந்திரியம் கர்மேந்திரியம் பிராணன் என்னும் மூன்றுபஞ்சகங்களும் மனமும் புத்தியுமாகிய பதினேழுதத்துவங்களால் சூக்ஷ்மசரீரமாகின்றது.

(வி-ம்.)

புத்தியாகிய ஞானத்தை யுண்டாக்கும் இந்திரியங்கள் புத்தியிந்திரியம் அதாவது ஞானேந்திரியம் என்றும், கர்மமாகிய வியாபாரத்தை உண்டாக்கும் இந்திரியம் கர்மேந்திரிய மென்றும் சொல்லப்படும். ஞானேந்திரியம் கர்மேந்திரியம் பிராணனென்னும் மூன்றன் பஞ்சகங்களும், சமுசயமாகிய மனதும், நிச்சயவடிவ புத்தியுமாகிய இவையாவுஞ் சேர்ந்து பதினேழு என்னும் எண்ணுடைய தத்துவங்க ளாகின்றன. அவற்றால் சூக்ஷ்மசரீரமாகின்றது.

(அ-கை.)

சூக்ஷ்மசரீரமாகிய அதற்கே வேறுபெயரைக் கூறுகின்றார்:—

तत् लिंगम् उच्यते ॥

(சு-ம்.)

அது இலிங்க மெனப்படுகின்றது.

(வி-ம்.)

அந்தச் சூக்ஷ்மசரீரம் வேதாந்தங்களில் இலிங்க மென்று சொல்லப் படுகின்ற தென்பது பொருள். (௨௩)

௨. தைஜஸ இரணியகர்ப்பர்களின் சொரூபம்.

प्राज्ञस्तत्राभिमानेन तैजसत्वं प्रपद्यते ।
हिरण्यगर्भतामीशस्तयोर्व्यष्टिसमष्टिता ॥ २४ ॥

(அ·கை.)

இந்தவிதமாகச் சூக்ஷ்மசரீரத்தைக் கூறி அதன் அபிமானித்தன்மை யோடுகூடிய * கூஉ. பிராஞ்ஞ * கூஙு. ஈசுவரர்களது வேறு அவஸ்தையைக் காட்டுகின்றார்:—

प्राज्ञः तत्र अभिमानेन तैजसत्वं प्रपद्यते । ईशः हिरण्यगर्भतां ॥

(சு-ம்.)

பிராஞ்ஞனானவன் அந்த இலிங்கசரீரத்தில் அபிமானத்தால் தைஜஸத்தன்மையை யடைகிறான்; ஈசுவரன் இரண்யகர்ப்பத்தன்மையை அடைகிறான்.

(வி·ம்.)

மலினசத்துவகுணப்பிரதான அவித்தையாகிய உபாதியுடைய காரணசரீரத்தின் அபிமானியான பிராஞ்ஞன் என்னும் ஜீவன் தேஜசு என்னும் சத்தத்தின் வாச்சியமாகிய அந்தக்கரணத்தால் * கூச. உபலக்ஷிக்கப்பட்ட இலிங்கசரீரத்தில் தாதான்மியமாகிய அபேத அபிமானத்தால் * கூரு. தைஜஸ னென்னும் பெயரை யடைகிறான். சுத்தசத்துவகுணப்பிரதான மாயையை உபாதியாகவுடைய பரமேசுவரன் அந்த இலிங்கசரீரத்தில் நானென்னும் அபிமானத்தால் இரணியகர்ப்பன் அதாவது சூத்திராத்மா வென்னும் பெயரை அடைகின்றான்.

(அ·கை.)

அப்படியானால் தைஜஸ இரணியகர்ப்பரென்னும் இருவருக்கும் இலிங்கசரீர அபிமானம் சமமாயிருக்க, அத்தைஜஸஇரணிகர்ப்பர்களுக்குப் பரஸ்பரபேதம் எக்காரணத்தா லுண்டாகின்றது எனக் கூறுகின்றார்:—

---

* கூஉ. பிரகிருஷ்டமான(மிக்க)சுயம்பிரகாசவடிவ ஆநந்தாத்மாவில் அஞ்ஞான விருத்தியாகிய ஞானம் எந்தச் சுழுத்தியபிமானிக் கிருக்கின்றதோ அவன் பிராஞ்ஞ னெனப்படுவன். சம்ஸ்காரவடிவ வெளிப்படையின்றிய உபாதியோடுகூடியிருத்தலால் அவ்வுபாதியாற் சூழப்பட்டதாயிருத்தலின் அதிகப் பிரகாசத்தன்மையின்மையால் இந்தச் சுழுத்தியபிமானியாகிய ஜீவனுக்குப் பிராஞ்ஞத்துவ முண்டு.

* கூஙு. சகல ஜீவர்களுக்கும் கர்மாநுசாரமாக ஈசிதாவாகிய பலதாதாவாயிருத்தலால் பரமாத்மா ஈசுவரனவர்.

* கூச. தேஜஸென்னும் சத்தத்தின் வாச்சியமாகிய அந்தக்கரணத்தைவிடாமல் அதன் சம்பந்தமுள்ளனவாகிய பிராணேந்திரியங்களும் கொள்ளப்படுதலால் இங்கே விடாத இலக்கணை உண்டாகின்றது. அவ்விலக்கணையினு லறியப்பட்டவென்பது உபலக்ஷிக்கப்பட்ட என்பதன் பொருள்.

* கூரு. அல்லது தேஜஸெனப்படும் காரியரூபமாகப் பரிணாமத்தை அடைந்த அந்தக்கரணம் எதுவோ, அது ஸதூலசரீரமுதலியவைக ளில்லாததா யிருக்கின்றது. அந்தத் தேஜஸென்னும் சத்தத்திற்கு வாச்சியமாகிய அந்தக்கரணத்திற்கு எஜமானனாகும் சொப்பனாபிமானி ஜீவனாகிய சிதாபாசன் தைஜஸ னெனப்படுகின்றான்.

तयोः व्यष्टिसमष्टिता ॥

(சு-ம்.)

அவர்களுக்கு வியஷ்டித்தன்மையும் சமஷ்டித்தன்மையு முண்டு.

(வி-ம்.)

தைஜஸஇரணியகர்ப்பர்க ளிருவருக்கும் முறையே வியஷ்டித்தன்மை சமஷ்டித்தன்மைக ளிருக்கின்றன. அதனாற்றான் அவர்களுக்குப் பேத மிருக்கின்ற தென்பது பொருள். (உ௪)

௩. தைஜஸ இரணிகர்ப்பர்களின் வியஷ்டிசமஷ்டித் தன்மைகளை வர்ணித்தல்.

समष्टिरीशः सर्वेषां स्वात्मतादात्म्यवेदनात् ।
तदभावात्ततोऽन्ये तु कथ्यंते व्यष्टिसंज्ञया ॥ २५ ॥

(அ-கை.)

ஈசுவரனது * ௬௬. சமஷ்டிவடிவத்தன்மையிலும் ஜீவர்களது * ௬௭. வியஷ்டிவடிவத்தன்மையிலும் காரணத்தைக் கூறுகின்றார்:—

ईशः सर्वेषां स्वात्मतादात्म्यवेदनात् समष्टिः ।
ततः अन्ये तु तदभावात् व्यष्टिसंज्ञया कथ्यंते ॥

(சு-ம்.)

ஈசுவரன் எல்லோருடைய சொரூபஐக்கியஞானத்தால் சமஷ்டியாவர். அந்த ஈசுவரனினும் அந்நியராகிய ஜீவர்கள் அஃதில்லாமையால் வியஷ்டி என்னும் பெயராற் சொல்லப்படுகின்றனர்.

(வி-ம்.)

ஈசுவரனாகிய இரணியகர்ப்பன் சகல இலிங்கசரீர உபாதியுடைய தைஜஸஜீவர்களது சொரூபத்தோடு தனது ஐக்கியத்தை அறிதலால் சமஷ்டியாகின்றார். அந்த ஈசுவரனுக்கு அந்நியமாகிய ஜீவர்கள் எல்லோருடைய சொரூப ஐக்கியமாகிய அந்த ஞானமில்லாமையால் வியஷ்டிசத்தத்தால் சொல்லப்படுகிறார்கள். (உ௫)

---

* ௬௬. ஒரு ஞானத்திற்கு விஷயமாந்தன்மை. இங்கே சகல சூக்ஷ்மசரீரங்களுக்கும் இரணியகர்ப்பனென்னும் சூத்திராத்மாவினுலாவது அல்லது வேறு ஜீவர்களாலாவது வனம்போல் ஒரு ஞானத்திற்கு விஷயமாதலால் சமஷ்டித்தன்மை யுண்டு.

* ௬௭. அநேகபுத்திகளுக்கு விஷயமாகுந்தன்மை. இங்கே சகலஜீவர்களுக்கும் தத்தம் ஒவ்வொரு இலிங்கசரீரமும் ஒவ்வொரு விருக்ஷத்தைப்போல இவை அநேகமாமென்று அநேகபுத்திக்கு விஷயமாந்தன்மையால் வியஷ்டித்தன்மை யுண்டு.

ஃ. பஞ்சீகரண நிரூபணம் ௨௬-௩௦.
க. பஞ்சீகரணத்தின் பிரயோஜனம்.

तद्भोगाय पुनर्भोग्यभोगायतनजन्मने ।
पंचीकरोति भगवान्प्रत्येकं वियदादिकम् ॥ २६ ॥

(அ-கை.)

இவ்வாறு இலிங்கசரீரத்தையும் அவ்வுபாதியுடைய தைஜஸ இரணிய கர்ப்ப ரிருவரையும் காட்டி ஸ்தூலசரீர (பிரஹ்மாண்ட) முதலியவற்றின் உற்பத்தி சித்திக்கும்பொருட்டுப் பஞ்சீகரணத்தைக் கூறுகின்றார்:—

भगवान् पुनः तद्भोगाय भोग्यभोगायतनजन्मने वियदादिकम् प्रत्येकं पंचीकरोति ॥

(கு-ம்.)

பகவான் மறுபடியும் அந்த ஜீவர்களது போகத்தின்பொருட்டுப் போக்கியங்களும் போகஸ்தானங்களு முண்டாக ஆகாயமுதலிய ஒவ்வொன்றையும் பஞ்சீகரிக்கின்றார்.

(வி-ம்.)

ஐசுவரியமுதலிய * ௧௮அ. ஆறுகுணங்களோடுகூடிய பகவானாகிய பரமேசுவரன் மறுபடியும் அந்த ஜீவர்களின் போகத்தின்பொருட்டு அன்னபானமுதலிய நால்வகைச்சரீரஜாதியான போகஸ்தானங்களும் உண்டாகும்பொருட்டு ஆகாயமுதலிய பூதங்கள் ஒவ்வொன்றையும் பஞ்சீகரிக்கின்றார் அதாவது ஐந்துவடிவமில்லாததை ஐந்துவடிவமாகும்படி செய்கின்றார். ஒவ்வொரு பூதத்தையும் * ௧௮௯. ஐந்துஐந்துவிதங்களாகச் செய்தலையே பஞ்சீகரண மென்பர். (௨௬)

2. பஞ்சீகரணத்தின் வடிவம்.

द्विधा विधाय चैकैकं चतुर्धा प्रथमं पुनः ।
स्वस्वेतरद्वितीयांशैर्योजनात्पंच पंच ते ॥ २७ ॥

---

* ௧௮அ. எல்லாஐசுவரியமும், எல்லாத்தருமமும், எல்லாக்கீர்த்தியும், எல்லா இலக்ஷ்மியும், எல்லாஞானமும், எல்லாவைராக்கியமுமாகிய இவ்வாறுகுணமும் பக மெனப்படும். அதனையுடையவர் பகவா னெனப்படுவர்.

* ௧௮௯. ஐந்து ஐந்து விதங்களாகச் செய்தலாவது கலப்பின்றியிருந்த ஒவ்வொருபூதத்தையும் மற்ற நான்கு பூதங்களின் அம்சங்களோடு சேர்த்துப் பூதக்கலப்புடையதாகச்செய்தல். இது ஸ்ரீ விசாரசந்திரோதயம் ௯-வது கலையிலும், ஸ்ரீ பாலபோதம் ௯-வது உபதேசத்திலும் மிகத்தெளிவாய்க் கூறப்பட்டிருத்தலால் அறியவிரும்புவோர் ஆண்டுக் காண்க.

(அ-கை.)

ஒவ்வொன்றற்கும் ஐந்தாகுந்தன்மை எப்படியாமெனக் கூறுகின்றார்:-

एकैकं द्विधा विधाय । पुनः च प्रथमं चतुर्धा स्वस्वेतरद्वितीयांशैः योजनात् ते पंच पंच॥

(சு-ம்.)

ஒவ்வொரு பூதத்தையும் இரண்டு இரண்டுவிதமாகப் பிரித்து முதல் ஒரு பாகத்தை நான்குவிதமாக்கி அவற்றைத் தத்தம்மின் வேறாகிய மற்ற ஸ்தூல அம்சங்களோடு சேர்த்தலால் அவை அவ்வைந்தாகின்றன.

(வி-ம்.)

ஆகாயமுதலிய ஒவ்வொரு பூதத்தையும் * ௯00. இரண்டுபங்காகப் பிரித்து மறுபடியும் முதன்முதற்பாகங்களை நந்நான்குபாக மாக்கித் தம்மின் வேறாகிய நான்குபூதங்களின் இரண்டாவது இரண்டாவது பாகங்களோடு முதன்முதற்பாகங்களின் நான்கு நான்கு அம்சங்களினின்றும் ஒவ்வொன்றைச் சேர்த்தலால் அவ்வாகாயமுதலிய ஒவ்வொன்றும் ஐந்து ஐந்தாகின்றன. (உஎ)

௬. பிரஹ்மாண்ட முதலியவற்றின் உற்பத்தியும் வைசுவாநரனைக் கூறுதலும்.

तैरंडस्तत्र भुवनभोग्यभोगाश्रयोद्भवः ।
हिरण्यगर्भः स्थूलेऽस्मिन्देहे वैश्वानरो भवेत् ॥ २८ ॥

(அ-கை.)

இப்படிப் பஞ்சீகரணத்தைச் சொல்லி அந்தப்பூதங்களால் உண்டாக்கப்படுங் காரியவர்க்கங்களைக் காட்டுகின்றார்:—

तैः अण्डः । तत्र भुवनभोग्यभोगाश्रयोद्भवः

(சு-ம்.)

அவற்றால் பிரஹ்மாண்டமுண்டாகின்றது. அப்பிரஹ்மாண்டத்தில் புவனம் போக்கியம் போகஸ்தானம் என்பவற்றின் உற்பத்தி யுண்டாகின்றது.

---

* ௯00. மூலத்திலுள்ள இரண்டுவித மென்னும் அர்த்தத்தையுடைய "द्विधा இரண்டுவிதமாக" வென்னும் சத்தமானது தந்திரத்தால் ஒருமுறை உச்சரிக்கப்பட்டதாகலின் அது இரண்டுவிதம் இரண்டுவிதம் என்பதாக द्विधा சப்தத்தின் ஆவிருத்தியைப் போதிப்பதாயிற்று.

ஒருமுறை உச்சரிக்கப்பட்டு அநேக அர்த்தத்தைப் போதிப்பதெதுவோ, அது தந்திர மெனப்படும்.

(வி-ம்.)

உபாதானகாரணமாகிய பஞ்சீகிருதபூதங்களால் பிரஹ்மாண்ட முண்டாகின்றது. அந்தப் பிரஹ்மாண்டத்தினுள் மேற்பாகத்திலிருக்கும் பிருதிவிமுதலிய ஏழும் பிருதிவியின்கீழுள்ள அதலமுதல் பாதாளம்வரையிலுள்ள ஏழுமாகிய பதினான்கு புவனங்களில் அந்தந்தப் பிராணிகளால் புசிக்கத்தக்க அன்னமுதலியனவும், அந்தந்தப் புவனங்களுக்குத்தக்க சரீரமும் அந்தப்பஞ்சீகிருத பூதங்களாலேயே ஈசுவரனது இச்சையாகிய ஆணையால் உண்டாகின்றன.

(அ-கை.)

இப்படி ஸ்தூலதேகத்தின் உற்பத்தியைக் கூறி அந்த ஸ்தூலசரீரங்களின் அபிமானமுள்ள சமஷ்டி இரணியகர்ப்பனுக்கு வைசுவாநரனென்னும் பெயருடைமையும், ஒவ்வொரு ஸ்தூலசரீரத்திலும் அபிமானமுடையவர்களாகிய வியஷ்டிதைஜஸர்களுக்கு விசுவர்களென்னும் பெயருடைமையுமாமென இரண்டரைச் சுலோகங்களால் கூறுகின்றார்:—

अस्मिन् स्थुले देहे हिरण्यगर्भः वैश्वानरः भवेत् ॥

(சு-ம்.)

இரணியகர்ப்பன் இந்தச்சமஷ்டி ஸ்தூலதேகத்தில் வைசுவாநரனாகின்றான்.

(வி-ம்.)

இந்தப்பிரஹ்மாண்டமாகிய ஸ்தூலதேகத்திலிருக்கும் இரணியகர்ப்பன் * ௧௦௧. வைசுவாநரனாகின்றான். (உ௮)

௩. விசுவன் சம்சாரத்தை யடைதல்.

तैजसा विश्वतां याता देवतिर्यङ्नरादयः ।
ते पराग्दर्शिनः प्रत्यक्तत्त्वबोधविवर्जिताः ॥ २९ ॥

(அ-கை.)

இதுவுமது.

तैजसा विश्वतां याताः ॥

---

*. ௧௦௧. எல்லாநரர்களது அபிமானியாயிருத்தலால் அதாவது சகலப்பிராணிகளின் சமூகத்திலும் "அகம்-நான்" என்னும் அபிமானமுடையவராயிருத்தலால் ஈசுவரன் வைசுவாநரனெனப்படுவர். வைசுவானரனாகிய அவரே பற்பலவிதமாய் விளங்குகின்றமையால் விராட்டென்றும் சொல்லப்படுவர்.

(சு-ம்.)

தைஜஸராகிய ஜீவர்கள் இந்த வியஷ்டிஸ்தூலசரீரத்தில் விசுவத்தன்மையை யடைகின்றார்கள்.

(வி-ம்.)

அந்த ஒவ்வொரு ஸ்தூலசரீரத்திலுமிருக்கும் தைஜஸராகிய ஜீவர்கள் * கoஉ. விசுவர்களென்னும் பெயருடையவர்களாகின்றார்கள்.

(அ-கை.)

அந்த விசுவஜீவர்களது அவாந்திரபேதத்தைக் கூறுகின்றார்:—

देवतिर्यङ्नरादयः

தேவர் திரியக்கு (பசுபக்ஷி) நரர்முதலியவர்களாகின்றார்கள்.

(அ-கை.)

இப்போது விசுவனென்னும் பெயரையடைந்த அந்த ஜீவர்கள் தத்துவஞான மில்லாதிருத்தலால் சமுசாரத்தைப் பெறுந்தன்மையைத் திருஷ்டாந்தத்தோடு ஒன்றரைச்சுலோகத்தாற் கூறுகின்றார்:—

ते पराग्दर्शिनः

(சு-ம்.)

தேவர்முதலியோராகிய அவர்கள் வெளிப்பார்வையுடையவர்கள்.

(வி-ம்.)

அத்தேவர்முதலிய ஜீவர் வெளிச்சத்தமுதலிய விஷயங்களையே காண்கின்றார்கள்; பிரத்தியகாத்மாவைக் காண்கிறதில்லை; "पराञ्चि खानि व्यतृणत्स्वयंभूस्तस्मात्पराङ् पश्यति नान्तरात्मन्- சுயம்புவாகிய பரமாத்மாவானவர் இந்திரியங்களைப் பராக்காக அதாவது பகிர்முகமாகச் சிருஷ்டித்தார். அதனால் புருஷன் வெளிப்பதார்த்தங்களைக் காண்கின்றான். உள் ஆத்மாவைக் காண்கிறதில்லை" என்னும் சுருதியினால்.

(அ-கை.)

அப்படியானால் நையாயிகர்முதலிய ஜீவர்கள் தேகத்திற் கந்நியமாக ஆத்மாவை அறிகின்றார்களே என்று ஆசங்கித்து, ஆத்மாவை அவர்கள் தேகத்திற்கு வேறாக அறிந்தபோதிலும் சுருதியால் நிச்சயிக்கப்பட்ட தத்

* கoஉ. சூக்ஷ்மசரீர அபிமானத்தை விடாமல் அந்தந்த ஸ்தூலசரீரத்தில் "அஹ்-அகம்" என்னும் அபிமானமுடைய ஜாக்கிராபிமானியாகிய ஜீவன் விசுவனெனப்படுவன்.

ருவமாகிய சுத்தாத்மசொரூபத்தை அறிகிறதில்லை. அதனால் அவர்கள் பகிர்முகர்களேயாவர் என்னும் அபிப்பிராயமாகக் கூறுகின்றார்:—

प्रत्यक्तत्त्वबोधविवर्जिताः

(சு-ம்.)

பிரத்தியக்தத்துவஞான மில்லாதவர்களா யிருக்கின்றார்கள்.

(வி-ம்.)

அந்த ஜீவர்கள் சாக்ஷியாகிய ஆத்மஞான மில்லாமையினால் வெளிப் பார்வையுடையவ ராகின்றார்கள். (உசு)

[௩௦] कुर्वते कर्म भोगाय कर्म कर्तुं च भुंजते ।
नद्यां कीटा इवाऽऽवर्तादावर्तांतरमाशु ते ।
व्रजंतो जन्मनो जन्म लभंते नैव निर्वृतिम् ॥ ३० ॥

(அ-கை.)

இதுவுமது.

भोगाय कर्म कुर्वते कर्म कर्तुं भुंजते च । ते नद्यां आवर्तात्
आवर्तांतरम् आशु कीटाः इव जन्मनः जन्म व्रजंतः निर्वृतिं नैव लभंते ॥

(சு-ம்.)

அந்த ஜீவர்கள் போகத்தின்பொருட்டுக் கர்மத்தைச் செய்கின்றார்கள். * ௧௦௩. கர்மத்தைச் செய்யப் புசிக்கின்றார்கள். ஆற்றில் ஒரு * ௧௦௪. சுழு வினின்றும் மற்றோர்சுழலை விரைவாக அடைவனவாகிய கீடங்கள்போல அந்த ஜீவர்களும் ஒரு ஜன்மத்தினின்றும் வேறு ஜன்மத்தை யடைகின்றார் கள். அதனால் நிர்விருதியாகிய சுகத்தை அடைகிறதில்லை.

(வி-ம்.)

அந்த ஜீவர்கள், பிரத்தியக்தத்துவத்தின் ஞானமில்லாமையால் சுகமுதலியவற்றின் அநுபவமாகிய போகத்தின்பொருட்டு மனிதர்முதலிய சரீரங்களை ஆசிரயித்து அந்தந்தச் சரீரத்திற்குத்தக்க * ௧௦௫. கர்மமாகிய

---

* ௧௦௩. மூலத்திலுள்ள கர்ம மென்னும் சத்தத்தின் ஒருமை ஜாதிஒருமையாம். விடாத இலக்கணையால் ஒன்றைச் சொல்லுதலினால் அதன் ஜாதியும் கொள்ளப்படும்.

* ௧௦௪. சுழி.

* ௧௦௫. காணுதல் தொடுதல்முதலிய கிரியைகளின்றிப் பிராரப்தகர்மத்தின் பலாநுபவம் பொருந்தாது; ஆகையால் பிராரப்தத்தின் பிரேரணையால் ஜீவன் போகசாதனமாகிய திரவியமுதலியவற்றின்பொருட்டாவது அல்லது போகத்தின் பொருட்டாவது கிரியையைச் செய்கின்றான்.

வியாபாரத்தைச் செய்கின்றார்கள். கர்மத்தைச் செய்தற்குத் தேவர்முதலிய சரீரங்களால் அந்தந்தப் பலத்தைப் புசிக்கின்றார்கள். பலாநுபவமில்லாத போது அந்தந்தப் பலமாகிய சுகவடிவத்தின் ஸஜாதீயமாகிய சுகத்தின் இச்சை சம்பவித்தலின்மையின் அந்தந்தச் சாதனங்களின் அநுஷ்டானம் சம்பவியாமையால், ஆற்றுவெள்ளத்தில் விழுந்த கீடம் ஒரு சுழலினின்றும் மற்றோர் சுழலைச் சீக்கிரமாக அடைவதாய்ச் சுகத்தை அடையாதது போலச் சம்சாரத்திலிருக்கும் ஜீவர்களும் சீக்கிரமாக ஓர் பிறப்பினின்றும் மற்றோர் பிறப்பை அடைகின்றவர்களாய்ச் சுகத்தை யடைகிறதில்லை. (௨௰)

எ. விசுவனுக்குச் சம்ஸாரம்நீங்குந்தன்மை ௨௧—௨௨.

க. கீடத்தின் திருஷ்டாந்தத்தில் துக்கநிவிருத்தியின் உபாயம்.

[௨௧] सत्कर्मपरिपाकात्ते करुणानिधिनोद्धृताः ।
प्राप्य तीरतरुच्छायां विश्राम्यंति यथा सुखम् ॥ २१॥

(அ-கை.)

இவ்வாறு ஜீவர்களுக்குச் சம்சாரத்தின் அடைவைக் கூறி, அந்தச் சம்சாரநிவிருத்தியின் உபாயத்தைக் காட்டுதற்கு முதலில் திருஷ்டாந்தத்தைக் கூறுகின்றார்:—

ते सत्कर्मपरिपाकात् करुणानिधिना उद्धृताः तीरतरुच्छायां प्राप्य सुखं यथा विश्राम्यंति ॥

(சு-ம்.)

நல்வினையின் பரிபாகத்தால் அதாவது முதிர்ச்சியால் கருணாநிதியாகிய புருஷனால் இரக்ஷிக்கப்பட்ட அக்கீடங்கள் கரையின் மரத்துநிழலை யடைந்து சுகமுண்டாகும்வண்ணம் இளைப்பாறுகின்றன.

(வி-ம்.)

அக்கீடங்கள் முன்ஜன்மத்தில் சம்பாதிக்கப்பட்ட புண்ணியகரும பரிபாகத்தால் கிருபையுள்ள ஓர்புருஷனால் ஆற்றுவெள்ளத்தினின்று வெளியே எடுக்கப்பட்டனவாய்க் கரையிலுள்ள மரத்துநிழலை அடைந்து சுகமுண்டாகும்வண்ணம் இளைப்பாறுகின்றன. (௨௧)

உ. கீடதிருஷ்டாந்தத்தின் அர்த்தத்தை விசுவதார்ஷ்டாந்தத்தில் பொருத்துதல்.

[௨௨] उपदेशमवाप्यैवमाचार्यात्तत्त्वदर्शिनः ।
पञ्चकोशविवेकेन लभंते निर्वृत्तिं पराम् ॥ २२ ॥

(அ-கை.)

இப்போது திருஷ்டாந்தமாகிய கீடத்தில் சித்தித்த அர்த்தத்தைத் தார்ஷ்டாந்தத்தில் பொருத்துகின்றார்:—

एवं तत्त्वदर्शिनः आचार्यात् उपदेशं अवाप्य पञ्चकोशविवेकेन परां निर्वृतिं लभंते ॥

(சு-ம்.)

இப்படி ஜீவர்கள் தத்துவஞானியாகிய குருவினின்றும் உபதேசத்தை யடைந்து பஞ்சகோசங்களின் விவேகத்தால் *க0ு. மேலாகிய சுகத்தை யடைகிறார்கள்.

(வி-ம்.)

இப்படிக் கீடத்திற் சொல்லியபடி அந்த ஜீவர்களும் முன்சம்பாதிக்கப் பட்ட புண்ணியகருமபரிபாக வசத்தாற்றானே பிரத்தியகபின்னபிரஹ்ம சாக்ஷாத்காரமுடைய ஆசிரியரினின்றும் "தத்துவமஸி" முதலிய மகாவாக்கி யத்தின் பிரஹ்மாத்ம ஐக்கியவடிவ அர்த்தத்தின் சம்பந்தமுள்ள ஞானசா தனமாகிய மேல் ருஅ-வது சுலோகத்திற் சொல்லப்படும் சிரவண மென் னும் உபதேசத்தைச் சம்பாதித்துச் சொல்லப்படும் அந்நமயாதி பஞ்சகோ சங்களின் விவேகத்தால் பேரின்பமாகிய மோக்ஷசுகத்தை யடைகின்றார் கள். (௩௨)

அ. பஞ்சகோச நிருபணம் ௩௩—௩௯.

க. ஏதுவோடுகூடிய பஞ்சகோசங்களின் பெயர்.

[௩௩] अन्नं प्राणो मनो बुद्धिरानंदश्चेति पंच ते ।
कोशास्तैरावृतः स्वात्मा विस्मृत्या संसृतिं व्रजेत् ॥ ३३ ॥

(அ-கை.)

அந்த அந்நமயாதி பஞ்சகோசங்களெவை யென்று கேட்குமிடத்து அவற்றைக் கூறுகின்றார்:—

अन्नं प्राणः मनः बुद्धिः आनन्दः च इति ते पञ्च कोशाः ॥

(சு-ம்.)

* க0எ. அந்நமயம், * க0அ. பிராணமயம், * க0கூ. மனோமயம், * கக0. விஞ்ஞானமயம், * ககக. ஆநந்தமயம் என அவை ஐந்து கோசங்களாம்.

(வி-ம்.)

அந்நமயமுதல் ஆநந்தமயம்வரையிலுள்ளவை பஞ்சகோசங்களாம்.

---

* க0சு. நிரதிசய.
* க0எ. போகஸ்தானவடிவம்.
* க0அ. கிரியாசத்தியுடைய காரியவடிவம்.
* க0கூ. இச்சாசத்தியுடைய காரணவடிவம்.
* கக0. ஞானசத்தியுடைய கர்த்தாவடிவம்.
* ககக. போக்தாவடிவம்.

(அ-கை.)

அந்த அந்நமயாதிகளைக் கோசமென்னும் சத்தத்தாற் சொல்லுதற்குக் காரணத்தைக் கூறுகின்றார்:—

तैः आवृतः स्वात्मा विस्मृत्या संसृतिं व्रजेत् ॥

(சு-ம்.)

அக்கோசங்களால் மறைக்கப்பட்ட ஆத்மா மறதியால் சம்சாரத்தை அடைகின்றான்.

(வி-ம்.)

அவ்வந்நமயாதி கோசங்களால் மறைக்கப்பட்ட சொரூபமாகிய ஆத்மா தனது சொரூபத்தின் மறதியால் ஜன்மமுதலியவற்றின் அடைவாகிய சம்சாரத்தை யடைகின்றது. * ௧௧௨. கோசம் கோசகாரமென்னும் புழுவை மறைத்தலால் கிலேசத்திற்கு ஏதுவாயிருத்தல்போல அந்நமயாதிகளும் * ௧௧௩. அத்வைதத்தன்மை ஆநந்தத்தன்மைமுதலிய ஆத்மவிசேஷணங்களை மறைப்பனவாயிருத்தலால் ஆத்மாவின் கிலேசத்திற்கே ஏதுவாகின்றன. ஆதலின் கோச மென்னப்படுகின்றன வென்பது பொருள். (௩௩)

௨. அந்நமயப்பிராணமயங்களின் சொரூபம்.

[௩௪] स्यात्पंचीकृतभूतोत्थो देहः स्थूलोऽन्नसंज्ञकः ।
लिंगे तु राजसैः प्राणैः प्राणः कर्मेंद्रियैः सह ॥ ३४ ॥

---

* ௧௧௨. முள் முதலியவற்றாற் செய்யப்பட்ட புழுக்கூடு.

* ௧௧௩. ஆத்மாவிற்குச் சத்துத்தன்மை சேதனத்தன்மை ஆநந்தவடிவத்தன்மை அத்வைதத்தன்மை என நான்கு விசேஷணங்களும், தேகாதிகளுக்கு அசத்துத்தன்மை ஜடத்தன்மை துக்கவடிவத்தன்மை துவைதத்தோடுகூடியதன்மை என நான்கு விசேஷணங்களும் இருக்கின்றன. அவற்றுள், ஆத்மாவின் சத்துத்தன்மையும் சேதனத்தன்மையும் தேகாதிகளின் அசத்துத்தன்மை ஜடத்தன்மைகளை மறைத்திருக்கின்றன. அதனுல் தேகாதிகள் சத்தைப்போலவும் சேதனத்தைப்போலவும் தோற்றுகின்றன. தேகாதிகளின் துக்கவடிவத்தன்மையும், துவைதத்தோடுகூடியதன்மையும், ஆத்மாவின் ஆநந்தவடிவத்தன்மையினையும் அத்வைதவடிவத்தன்மையினையும் மறைத்திருக்கின்றன. அதனுல் ஆத்மா துக்கமுடையதும் துவைதத்தோடுகூடியதுமாகத் தோற்றுகின்றது. இவ்விரண்டு விசேஷணங்களின் ஆவரணத்தால் மற்றப்பூரணத்தன்மை நித்தியமுக்தத்தன்மைமுதலிய விசேஷணங்களின் ஆவரணமும் சித்திக்கின்றது. இவ்வாறு ஆத்மாவிற்கும் பஞ்சகோசங்களுக்கும் ஒன்றற்கொன்று அந்நியோந்நியாசமிருத்தலால் முமுக்ஷுக்கள் ஆத்மாவையும் பஞ்சகோசங்களையும் அவசியம் விவேகித்தல் தகுதியாம்.

(அ-கை.)

அக்கோசங்களின் சொரூபத்தைக் கிரமமாக இரண்டார்ச் சுலோகத்தினாற் கூறுகின்றார் :—

पंचीकृतभूतोत्थः स्थूलः देहः अन्नसम्ज्ञकः ।
प्राणः तु लिंगे राजसैः प्राणैः कर्मेंद्रियैः सह स्यात् ॥

(சு-ம்.)

பஞ்சீகிருதபூதங்களினின்றும் உண்டாகிய ஸ்தூலசரீரம் அந்நமயமென்னும் பெயரையுடையதாகின்றது. இலிங்கசரீரத்திலுள்ள இராஜஸமாகிய பஞ்சப்பிராணனும் கர்மேந்திரியமும் சேர்ந்து பிராணமயகோசமாகின்றன.

(வி-ம்.)

பஞ்சீகிருதபூதங்களினின்றும் உண்டாகிய ஸ்தூலதேகம் அந்நமயமென்று சொல்லப்படும். இலிங்கசரீரத்திலிருக்கும் இரஜோகுணகாரியமாகிய பிராணன்முதலிய பஞ்சவாயுக்களும் வாக்குமுதலிய ஐந்து கர்மேந்திரியங்களுமாகிய பத்தும் சேர்ந்து பிராணமயகோச மாகின்றன. (௩௪)

௩. மனோமயவிஞ்ஞானமயகோசங்களின் சொரூபம்.

[௩௫] सात्विकैर्धींद्रियैः साकं विमर्शात्मा मनोमयः ।
तैरेव साकं विज्ञानमयो धीर्निश्चयात्मिका ॥ ३५ ॥

(அ-கை.)

இதுவுமது.

विमर्शात्मा सात्विकैः धींद्रियैः साकं मनोमयः । निश्चयात्मिका धीः तैः एव साकं विज्ञानमयः ॥

(சு-ம்.)

சமுசயரூபமாகிய மனம் சத்துவகுணகாரியமாகிய ஞானேந்திரியத்தோடு சேர்ந்து மனோமயமாகின்றது. நிச்சயவடிவமாகிய புத்தி அதே ஞானேந்திரியங்களோடு சேர்ந்து விஞ்ஞானமயமாகின்றது.

(வி-ம்.)

சமுசயவடிவினதும் பஞ்சபூதங்களின் சத்துவாம்சத்தின் காரியமுமாகிய மனம், ஒவ்வொரு பூதத்தினது சத்துவகுண அம்சத்தின் காரியமாகிய சுரோத்திரமுதலிய பஞ்சேந்திரியங்களோடு சேர்ந்து மனோமயமாம்.

நிச்சயரூபமும் அப்பூதங்களினது சத்துவாம்சத்தின் காரியமுமாகிய புத்தி முற்கூறிய ஞானேந்திரியம் ஐந்துடன் கூடியதாய் விஞ்ஞானமயமென்னும் கோசமாகின்றது. (௩௫)

௬. ஆநந்தமயனது சொரூபமும் ஆத்மாவிற்குக் கோசங்களின் வாச்சியத் தன்மையில் காரணமும்.

[௩௬] कारणे सत्वमानंदमयो मोदादिवृत्तिभिः ।
तत्तत्कोशैस्तु तादात्म्यादात्मा तत्तन्मयो भयेत् ॥ ३६ ॥

(அ-கை.)

இதுவுமது.

कारणे सत्त्वं मोदादिवृत्तिभिः आनंदमयः ॥

(சு-ட்.)

காரணசரீரத்திலுள்ள சத்துவகுணமானது மோதமுதலிய விருத்திகளோடு சேர்ந்து ஆநந்தமயமாகின்றது.

(வி-ம்.)

காரணசரீரமாகிய அவித்தையிலுள்ள மலினசத்துவகுணமானது பிரிய மோதப் பிரமோத மென்னும் இஷ்டதரிசன லாப போகங்களாலுண்டாகிய சுகவிசேஷங்களோடு சேர்ந்து ஆநந்தமயமென்னும் கோசமாகின்றது.

(அ-கை )

அப்படியானால் ஸ்தூலசரீரமுதலியவற்றிற்கு அந்நமயமுதலிய சத்தத்தின் வாச்சியத்தன்மையிருக்க, சுருதியில் "स वा एष पुरुषोऽन्नरसमयः" அந்த அல்லது இந்தப்புருஷன் அந்நரசமயன்" என்று ஆரம்பித்து "तस्माद्वा एतस्मादन्नरसमयादन्योंतर आत्मा प्राणमयोऽन्योंऽतर आत्मा मनोमयः ॥ * ககச. அந்த அல்லது * ககரு. இந்த அந்நரசமயனினின்றும் அந்நியமாகிய அந்தராத்மா பிராணமயனுவன். வேறு அந்தராத்மா மனோமயனுவன்." என்பனமுதலிய சுருதியால் ஆத்மாவிற்கு அந்நமயமுதலிய சத்தத்தின் வாச்சியத்தன்மை எப்படிச் சொல்லப்படுகின்றதென் றாசங்கித்து, தேகமுதலியவை அந்நமுதலியவற்றின் விகாரமாயிருத்தலால் அந்நமயமுதலிய சத்தத்தின் வாச்சியமாம். ஆத்மாவிற்கோ அந்தந்தக் கோசங்களோடு அபேதமிருத்தலால் முற்கூறிய சுருதியில் அந்நமயாதி சப்தத்தின் வாச்சியத்தன்மை இருக்கின்றதெனக் கூறுகின்றார்:—

---

* ககச. வேதத்தின் மந்திரபாகத்திற் கூறிய.

* ககரு. வேதத்தின் பிராஹ்மணபாகத்திற் கூறிய.

आत्मा तु तत्तत्कोशैः तादात्म्यात् तत्तन्मयः भवेत

(சு-ம்.)

*௧௧௬. ஆத்மாவோ அந்தந்தக் கோசங்களோடு ஒற்றுமையாயிருத்தலால் அந்தந்தக் கோசவடிவ மாகின்றது.

(வி-ம்.)

பிரத்தியகாத்மா அந்தந்தக் கோசங்களோடு தாதாத்மிய அபிமானத்தால் அந்தந்தக் கோசவடிவ மாகின்றது. அதாவது வியவகாரகாலத்தில் அந்நமயமுதலிய கோசங்களின் முக்கியத்தன்மையால் அந்நமயமுதலிய சத்தத்தின் வாச்சியமாகின்றது. (௩௬)

௬. அந்வயவெதிரேகங்களால் ஆத்மா பிரஹ்மவடிவமாதல் ௩௭-௪௨.

௧. அந்வயவெதிரேகங்களின் பயன்.

[௩௭] अन्वयव्यतिरेकाभ्यां पंचकोशविवेकतः ।
स्वात्मानं तत उद्धृत्य परं ब्रह्म प्रपद्यते ॥ ३७ ॥

(அ-கை.)

அப்படியானால் இப்போது இந்தவிதமாகிய அதாவது அந்தந்தக் கோசவடிவமாகிய ஆத்மாவிற்குப் பிரஹ்மத்துவம் எவ்வாறுண்டாகுமென்றுசங்கித்து, கோசங்களினின்றும் வேறுபிரித்தலால் அந்தப் பிரஹ்மத்துவ முண்டாகின்றதெனக் கூறுகின்றார் :—

अन्वयव्यतिरेकाभ्यां पञ्चकोशविवेकतः स्वात्मानं तत उद्धृत्य परं ब्रह्म प्रपद्यते ॥

(சு-ம்.)

உடன்பாட்டாலும் எதிர்மறையாலும் பஞ்சகோசங்களை விவேகித்தலால் ஆத்மா தன்னை அக்கோசங்களினின்றும் எடுத்துப் பரப்பிரஹ்மத்தை அடைகின்றான்.

(வி-ம்.)

* ௧௧௭. சொல்லப்படும் அந்வயவெதிரேகங்களால் அந்நமயாதி கோசங்களைப் பிரத்தியகாத்மாவினின்றும் விவேகித்தலாலாவது அல்லது அந்நமயாதி பஞ்சகோசங்களினின்றும் ஆத்மாவை வேறுபிரித்தலாலாவது

---

* ௧௧௬. மூலசுலோகத்திலுள்ள ஒ என்னும் அர்த்தமுடைய तु என்னும் பதம் ஆத்மா கோசங்களினும் வேறும் என்பதை அறிவித்தற்பொருட்டாம்.

* ௧௧௭. [௩அ-௪௨] சுலோகங்களிற் காண்க.

ப்ரத்தியகாத்மாவாகிய தன்னைப் பஞ்சகோசங்களினின்றும் புத்தியினால் வெளிப்படுத்தி அவ்வாத்மாவைச் சிதாநந்தரூபமாக நிச்சயித்து, அதிகாரியானவன் * ௧௧அ. முற்கூறிய இலக்ஷணமுடைய பிரஹ்மத்தை அடைகிறான் அதாவது பிரஹ்மமே யாகின்றான் என்பது பொருள். (௩௭)

௨. சொப்பனத்தில் ஆத்மாவின் அந்வயமும் ஸ்தூலதேகத்தின் வெதிரேகமும்.

[௩அ] अभाने स्थूलदेहस्य स्वप्ने यद्भानमात्मनः ।
सोऽन्वयो व्यतिरेकस्तद्भानेऽन्यानवभासनम् ॥ ३८ ॥

(அ-கை.)

இப்போது சொல்லக்கருதிய அந்வயவெதிரேகங்களைக் காட்டுகின்றார்:—

स्वप्ने स्थूलदेहस्य अभाने आत्मनः यत् भानम् सः अन्वयः । तद्भाने अन्यानवभासनम् व्यतिरेकः ॥

(சு-ம்.)

சொப்பனத்தில் ஸ்தூலதேகமானது தோற்றுதிருக்குங்காலத் துண்டாகும் ஆத்மாவின் தோற்றம் எதுவோ அது அந்வயமாம். அவ்வாத்மா தோற்றுங்காலத்து ஸ்தூலதேகம் தோற்றுதிருத்தல் வெதிரேகமாம்.

(வி-ம்.)

சொப்பனுவஸ்தையில் அந்நமயமாகிய ஸ்தூலதேகம் தோற்றுதிருக்குங்காலத்துப் பிரத்தியகாத்மா சொப்பனசாக்ஷித்தன்மையாக விளங்கிக்கொண்டிருத்தல் ஆத்மாவின் அந்வயமாம். அந்தச் சொப்பனுவஸ்தையிலேயே ஆத்மா விளங்கும்போது ஸ்தூலதேகம் தோற்றுதிருத்தல் ஸ்தூலதேகத்தின் வெதிரேகமாம். இந்தப் பிரகரணத்தில் அந்வயவெதிரேகமென்னும் சொற்களால் கிரமமாக அநுவிருத்தி வியாவிருத்திகள் அதாவது அநுசூதத்தன்மை வேறுந்தன்மைகள் சொல்லப்படுகின்றன என்றறிக. ()

௩. சுழுத்தியில் ஆத்மாவின் அந்வயமும் லிங்கதேகத்தின் வெதிரேகமும்.

[௩௯] लिंगाभाने सुषुप्तौ स्यादात्मनो भानमन्वयः ।
व्यतिरेकस्तु तद्भाने लिंगस्याभानमुच्यते ॥ ३९ ॥

(அ-கை.)

இவ்வாறு ஸ்தூலதேகத்தின் அநாத்மத்தன்மையை யறிவிக்கும் அந்வயவெதிரேகங்களைக் காட்டி, இனி இலிங்கதேகத்தின் அநாத்மத்தன்மையை யறிவிக்கும் அந்வயவெதிரேகங்களைக் காட்டுகின்றார்:—

* ௧௧அ. [௧௦-௧௫] சுலோகங்களிற் காண்க.

सुषुप्तौ लिंगाभाने आत्मनः मानम् अन्वयः स्यात् । तद्भाने लिंगस्य अभानं तु व्यतिरेकः उच्यते ॥

(சு-ம்.)

சுழுத்தியில் இலிங்கசரீரம் தோற்றாதிருக்குங்காலத்தில் ஆத்மா விளங்குதல் அந்வயம், ஆத்மா தோற்றுங்காலத்து இலிங்கசரீரம் தோற்றாமை வெதிரேக மென்று சொல்லப்படுகின்றது.

(வி-ம்.)

சுழுத்தியவஸ்தையில் சூக்ஷ்மசரீரமாகிய இலிங்கம் தோற்றாதகாலத்து அவ்வாத்மா அவ்வவஸ்தையின் சாக்ஷியாக விளங்குதல் ஆத்மாவின் அந்வயமாம். ஆத்மா தோற்றுங்காலத்து இலிங்கசரீரம் தோற்றாதிருத்தல் அவ்விலிங்கதேகத்தின் வெதிரேக மெனப்படும். (௩௯)

௪. இலிங்கதேகவிவேகத்தில் சங்கையும் சமாதானமும்.

[௪௦] तद्विवेकाद्विविक्ताः स्युः कोशाः प्राणमनोधियः ।
ते हि तत्र गुणावस्थाभेदमात्रात्पृथक्कृताः ॥ ४० ॥

(அ-கை.)

பஞ்சகோசவிவேகத்தை ஆரம்பித்து இலிங்கதேகத்தை விவேகித்தல் பிரகிருதத்தில் அசங்கதமாம் அதாவது பொருத்தமில்லாததா மென்று சங்கித்துப் பிராணமயமுதலிய மூன்றுகோசங்களும் அதனுள் அடங்கியிருத்தலால் பஞ்சகோசங்களின் விவேசனத்தில் இலிங்கதேகத்தின் விவேகம் பிரகிருதத்திற் பொருந்தாததா மென்ப தில்லையெனக் கூறுகின்றார்:—

तद्विवेकात् प्राणमनोधियः कोशाः विविक्ताः स्युः ॥

(சு-ம்.)

அந்த இலிங்கதேகவிவேகத்தால் பிராணமயம் மனோமயம் விஞ்ஞானமயமென்னும் மூன்று கோசங்களும் விவேகிக்கப்பட்டவைகளாகின்றன.

(வி-ம்.)

அந்த லிங்கசரீரவிவேகத்தால் பிராணமயம் மனோமயம் விஞ்ஞானமயமென்னும் கோசங்கள் ஆத்மாவினின்றும் வேறுபிரிக்கப்பட்டனவாகின்றன.

(அ-கை.)

அந்த இலிங்கசரீரத்தின் விவேகத்தாலுண்டாம் மூன்றுகோசங்களின் விவேகம் எதனாலாமெனக் கூறுகின்றார்:—

हि ते तत्र गुणावस्थाभेदमात्रात् पृथक् कृताः ॥

(சு-ம்.)

எக்காரணத்தாலெனின், அம்மூன்றுகோசங்களும் அவ்விலிங்கசரீரத்தில் சத்துவரஜோகுணங்களது அவஸ்தையின் பேதமாத்திரத்தால் வேறு பிரிக்கப்பட்டனவாகின்றன.

(வி-ம்.)

எக்காரணத்தாலெனின், அந்தப் பிராணமயமுதலியவைகள் அந்த லிங்கசரீரத்தில் சத்துவ ரஜோகுணங்களது கௌணமுக்கியத்தன்மைகளால் உண்டாம் * ௧௧௯. அவஸ்தாபேதத்தினாலே வேறாகச் சொல்லப் படுகின்றன என்க. (௪௦)

௫. சமாதியில் ஆத்மாவின் அந்வயமும் காரணதேகத்தின் வெதிரேகமும்.

[௪௧] सुषुप्त्यभाने भानं तु समाधावात्मनोऽन्वयः ।
व्यतिरेकस्त्वात्मभाने सुषुप्त्यनवभासनम् ॥ ४१ ॥

(அ-கை.)

ஆநந்தமயமாகச் சொல்லக் கருதிய காரணசரீரத்தை விவேகிக்கும் உபாயம் கூறுகின்றார்:—

समाधौ सुषुप्त्यभाने आत्मनः तु भानं अन्वयः । आत्मभाने सुषुप्त्यनवभासनं तु व्यतिरेकः॥

(சு-ம்.)

சமாதியில் சுழுத்தி (அஞ்ஞானம்) தோற்றாதிருக்கும்போது ஆத்மா தோற்றுதல் அந்வயமாம். ஆத்மா தோற்றுங்காலத்துச் சுழுத்தி தோற்றாதிருத்தல் வெதிரேகமாம்.

(வி-ம்.)

* ௧௨௦. மேற்சொல்லப்படும் இலக்ஷணமுடைய சமாதியவஸ்தையில் சுழுத்திசத்தத்தால் உபலக்ஷிக்கப்பட்ட காரணதேகமாகிய அஞ்ஞானம்

---

* ௧௧௯. பிராணமயம் கேவல ரஜோகுணத்தின் அவஸ்தையாம். மனோமயம் ஞானேந்திரியத்தால் விகாரஞ்செய்தலாலும், இச்சை முதலிய ரஜோகுண விருத்தியோடு கூடியிருத்தலாலும் சாத்துவீகராஜஸமென்னும் இரண்டு குணங்களின் அவஸ்தையாம். விஞ்ஞானமயம் சத்துவமாத்திரத்தின் அவஸ்தையாம். இப்படி அவஸ்தைகளின் பேதத்தால் ஒரே இலிங்கசரீரத்தில் மூன்று கோசங்கள் வேறாகச் சொல்லப்படுகின்றன.

* ௧௨௦. [௫௫] வது சுலோகத்திற் காண்க.

தோற்றுதிருக்கும்போது ஆத்மா தோற்றுதல் ஆத்மாவின் அந்வயமாம். ஆத்மா தோற்றிக்கொண்டிருக்கும்போது சுழுத்தியென்னுஞ் சொல்லால் உபலக்ஷிக்கப்பட்ட அஞ்ஞானம் தோற்றுதிருத்தலே அவ்வஞ்ஞானத்தின் வெதிரேகமாம். இங்கே இது பிரயோகமாம் (அநுமானமாம்):—பிரத்தியகாத்மா அந்நமயமுதலிய கோசங்களின் வேறாம்; அந்தக் கோசங்களுக்கு ஒன்றற்கொன்று வேறுபாடிருந்தபோதிலும், தான் (ஆத்மா) அபின்னமாயிருத்தலால்; அந்தக் கோசங்கள் பரஸ்பரம் பின்னமாகத் தோற்றியபோதிலும் எது பின்னமாகத் தோற்றுகிறதில்லையோ அது அக்கோசங்களினும் வேறாம்; *கஉக. புஷ்பங்களினும் நூல் வேறுதல்போலும், *கஉஉ. கொம்பொடிந்ததுமுதலிய பசுக்களின் வியக்தியாகிய வடிவங்களினும் பசுத்தன்மையாகிய ஜாதி வேறுதல்போலும். (சக)

**சு. பஞ்சகோசங்களினின்றும் வேறுபிரிக்கப்பட்ட ஆத்மா பிரஹ்மத்தையடைதல்.**

[சஉ] यथा मुंजादिषीकैवमात्मा युक्त्या समुद्धृतः ।
शरीरत्रितयाद्धीरैः परं ब्रह्मैव जायते ॥ ४२ ॥

(அ-கை.)

அந்வயவெதிரேகங்களால் பஞ்சகோசங்களினின்றும் வேறுபிரிக்கப்பட்ட ஆத்மாவிற்குப் பிரஹ்மத்தினடைவு உண்டாகின்றதெனக் *கஉங. கூறப்பட்டது. அதைப் பிரதிபாதிக்கும் "अंगुष्ठमात्रः पुरुषोऽन्तरात्मा *கஉச. அங்குஷ்டமாத்திரமாகிய புருஷன் அந்தராத்மாவாம்" என்னும் முதலேயும் "तं विद्याच्छुक्रममृतम् அவ்வந்தராத்மாவைச் சுத்தமாகவும் அமிருதமாகவும் அதாவது மரணமில்லாததாகவும் அறியவேண்டும்." என்னும் அந்தத்தையுமுடைய கடவல்லிசுருதியை அர்த்தத்தாற் சொல்லுகின்றார்:—

---

* கஉக. புஷ்பங்கள் ஒன்றற்கொன்று வேறாக இருக்கினும், அவற்றிற் கோர்க்கப்படிருக்கும் நூலானது தான் (சொரூபமாக) அபின்னமாகத் தோற்றுகின்றமையால் புஷ்பங்களினும் வேறாம்.

* கஉஉ. கொம்பு ஒடிந்தது, மொட்டை (கொம்பில்லாதது) முதலிய பசுக்களின் வியக்திகள் வேறாகத் தோற்றினும், அவற்றில் அநுகூதமாயுள்ள பசுத்தன்மையாகிய ஜாதி, தான் வேறாகத் தோற்றுமையால் அவ்வியக்திகளினின்றும் வேறுபிரித்துக் கூறப்படுகின்றது. அதுபோல.

* கஉங. [ஙஎ] வது சுலோகத்திற் காண்க.

* கஉச. அந்தக்கரண வுபாதியாகிய இருதயதேசம் அங்குஷ்டமாத்திர மெனப்படும். அந்த அந்தக்கரணம் ஆத்மாவாகிய புருஷனுக்கு உபாதியாயிருத்தலால் உபசாரமாக ஆத்மாவும் அங்குஷ்டமாத்திர மெனப்படுகின்றது. விசேஷணமாகிய உபாதியிலுள்ள தர்மத்தின் விவகாரம் விசிஷ்டமாகிய உபகிதத்திலுமா மென்னும் நியமத்தால்.

यथा मुञ्जात् इषीका एवं आत्मा युक्त्या शरीरात्रितयात् धीरैः समुद्धृतः परं ब्रह्म एव जायते ॥

(சு-ம்.)

எப்படி முஞ்சிப்புல்லினின்றும் ஆணியாகிய நடுத்தண்டானது வேறு பிரிக்கப்படுகிறதோ, அப்படி ஆத்மாவும் யுக்தியினுல் மூன்று சரீரங்களினின்றும் தீரபுருஷர்களால் எடுக்கப்பட்டதாய்ப் பரப்பிரஹ்மமே யாகின்றது.

(வி-ம்.)

எப்படி முஞ்சி என்னும் புல்லினின்றும் மத்தியிலுள்ள மிருதுவாகிய புல்லின் ஆணியானது வெளியே மறைப்பனவாயிருக்கும் ஸ்தூலமாகிய இலைகளைப் பிளக்கும் உபாயமாகிய யுக்தியால் எடுக்கப்படுகின்றதோ, அப்படி ஆத்மாவும் அந்வயவெதிரேகமென்னும் உபாயமாகிய யுக்திகளால் * கஉரு. முற்கூறிய மூன்று சரீரங்களினின்றும் * கஉசு. பிரஹ்மசரிய முதலிய சாதனசம்பத்தியுடைய அதிகாரிகளாகிய * கஉஎ. தீரபுருஷர்களால் வேறுபிரிக்கப்படுங்காலத்து அவ்வாத்மா பரப்பிரஹ்மமே யாகின்றது; ஞானநந்தசொரூபத்தன்மையுடைமையாகிய இலக்ஷணம் பிரஹ்மம் ஆத்மா இரண்டிலும் சமானமாயிருத்தலால் என்பது அபிப்பிராயம்.(சஉ)

உ. மகாவாக்கியத்தால் ஜீவப்பிரஹ்மஐக்கியத்தைப் பிரதிபாதித்தல் சங-கரு.

க. "தத்துவமஸி" மகாவாக்கியத்தின் அர்த்தம் சங-ருஉ.

௧. முன்னூலில் நிகழ்ந்ததைக் கூறுதலும் பின்வரும் நூலின் அபிப்பிராயமும்.

[சங] परापरात्मनोरेवं युक्त्या संभावितैकता ।
तत्त्वमस्यादिवाक्यैः सा भागत्यागेन लक्ष्यते ॥ ४३ ॥

(அ-கை.)

இத்தனை சுலோகங்களைச் செய்ததினுல் பிரஹ்மத்தன்மையாகிய பலத்தோடு தத்துவஞானம் நிரூபிக்கப்பட்டிருத்தலால், மேல்கிரந்தபாகங்களை ஆரம்பிக்க வேண்டியதில்லை என்னும் பிரசங்கமுண்டாமென்றுசங்கித்து, அந்த மேல்கிரந்தபாகத்தின் ஆரம்பம் சித்தித்தற்பொருட்டு முன்

---

* கஉரு. [கஎ] சுலோகத்திற் காண்க.

* கஉசு. இங்கே பிரஹ்மசரியத்தைக் கூறுதல் வைராக்கியமுதலியவற்றிற்கும் உபலக்ஷணமாம். அதனுற்றான் முதலிய என்னும் பதம் விழுந்திருக்கின்றது.

* கஉஎ. தீ என்பது புத்தி; அதை ர என்பது விஷயங்களினின்றும் ரக்ஷித்தல்; அவ்வாறு ரக்ஷிப்பவர்கள் தீரரெனப்படுவர்.

னுள்ள அர்த்தத்தை மறுபடியும் சொல்லுதலோடு மேல்கிரந்தத்தின் தாற்பரியத்தையும் கூறுகின்றார் :—

एवम् परापरात्मनोः एकता युक्तया संभाविता । सा तत्त्वमस्यादिवाक्यैः भागत्यागेन लक्ष्यते ॥

(சு-ம்.)

இப்படிப் பரமாத்மஜீவாத்மாக்களின் ஐக்கியம் யுக்தியினுலே சம்பவித்தது. அவ்வைக்கியம் தத்துவமஸிமுதலிய வாக்கியங்களால் பாகத்தை விடுதலால் இலக்ஷணையினுல் அறியப்படுகின்றது.

(வி-ம்.)

முற்கூறியவண்ணம் கிரமமாக * கஉஅ. "தத்" * கஉகூ. "துவம்" பதங்களுக்கு அர்த்தமாகிய ஜீவாத்மபரமாத்மாக்களிருவரின் ஐக்கியம் (ஒருமை),லக்ஷணத்தின் (ஞானநந்தவடிவத்தன்மையின்) சமத்துவத்தைக் காட்டுதல் * கநO. முதலிய உபாயமாகிய யுக்திகளால் ஜிஞ்ஞாசு அல்லது வாதியினது புத்தியில் அங்கீகாரம் செய்விக்கப்பட்டது. அவ்வைக்கியம் * கநக. "தத்துவமஸி" * கநஉ. முதலிய * கநந. மகாவாக்கியங்களால் * கநச. விருத்தாம்சத்தை விடுதலால் இலக்ஷணவிருத்தியினுல் * கநரு. அறிவிக்கப்படுகின்றது. (சங)

உ. 'தத்'பதத்தின் வாச்சியார்த்தம்.

[சச] जगतो यदुपादानं मायामादाय तामसीम् ।
निमित्तं शुद्धसत्वां तामुच्यते ब्रह्म तद्गिरा ॥ ४४ ॥

---

* கஉஅ. "தத்துவமஸி" என்னும் மகாவாக்கியத்தின் முதற்பதம்.

* கஉகூ. "தத்துவமஸி" என்னும் மகாவாக்கியத்தின் இரண்டாவது பதம்.

* கநO. முதலிய என்னும் பதத்தால் அத்தியாரோபஅபவாதம், அந்நுவ்ய வெதிரேகமுதலிய யுக்திகளும் கொள்ளப்படும்.

* கநக. சாமவேதத்தின் சாந்தோக்கிய உபநிஷத்திலுள்ள மகாவாக்கியம். மகாவாக்கியத்தின் [ரு-சு] சுலோகத்திற் காண்க.

* கநஉ. முதலிய என்னும் சொல்லால் இருக்குமுதலிய வேதத்தின் உபநிஷத்துக்களிலுள்ள மகாவாக்கியங்களும் கொள்ளப்படும். மகாவாக்கியவிவேகத்தின் [க-ச]. [எ-அ] சுலோகங்களிலும் காண்க.

* கநந. ஜீவப்பிரஹ்ம ஐக்கியத்தை அறிவிக்கும் வாக்கியம் மகாவாக்கியம்.

* கநச. முற்றறிவுடைமைமுதலிய ஐக்கியவிரோதமுள்ள தர்மங்களை.

* கநரு. இது பிரதிஞ்ஞை.

(அ-கை.)

"தத்துவமஸி" என்னும் மகாவாக்கியார்த்த(ஜீவப்பிரஹ்ம ஐக்கிய)த்தின் ஞானம், தத்பத துவம்பதார்த்தங்களின் ஞானபூர்வகமாயிருத்தலால் முதலிற் "தத்" பதத்தின் வாச்சியார்த்தத்தைக் கூறுகின்றார்:—

यत् तामसीं मायां आदाय जगतः उपादानं शुद्धसत्वां तां निमित्तं ब्रह्म 'तत्'. गिरा उच्यते॥

(சு-ம்.)

எந்தப்பிரஹ்மம் தாமசகுணத்தையுடைய மாயையை(பிரகிருதியை)க் கொண்டு ஜகத்திற்கு உபாதானமும் (முதற்காரணமும்), சுத்தசத்துவ குணத்தையுடைய அந்த மாயையைக் கொண்டு நிமித்தகாரணமு மாகின்றதோ அந்தப் பிரஹ்மம் 'தத்'பதத்தால் சொல்லப்படுகின்றது.

(வி-ம்.)

எந்தச் சச்சிதாநந்தமாகிய பிரஹ்மம் * கசுசு. தமோகுணப்பிரதான மாயையை உபாதியாகக்கொண்டு, சர(ஜங்கம) அசர (ஸ்தாவர) மென்னுங் காரியசமூகமாகிய ஜகத்திற்கு உபாதானமும் அதாவது ஜகத்தின் அத்தியாசத்திற்கு அதிஷ்டானமாகிய விவர்த்தோபாதானமும், * கசுஎ. சுத்தசத்துவகுணப்பிரதான அந்தமாயையை உபாதியாகக்கொண்டு நிமித்தமும் அதாவது தமப்பிரதானப் பிரகிருதிவடிவ உபாதான * கசுஅ. முதலியவற்றை அறியும் கர்த்தாவு மாகின்றதோ, அதே நிமித்த உபாதான வடிவப் பிரஹ்மம் * கசுகூ. (ஈசுவரன்) "தத்துவமஸி" என்னும் மகாவாக்கியத்திலுள்ள 'தத்'பதத்தாற் சொல்லப்படுகின்றது அதாவது அது 'தத்' பதத்திற்கு வாச்சியமாகின்றது என்பது பொருள். (சச)

---

* கசுசு. தமோகுணத்தை முக்கியமாயுடையது [கஅ] சுலோகத்திற் காண்க.

* கசுஎ. இரஜோதமோகுணங்களால் அமிழ்த்தப்படாத சுத்தசத்துவகுணத்தை முக்கியமாகவுடையது [கசு] சுலோகத்திற் காண்க.

* கசுஅ. இங்கே முதலியவென்னுஞ் சொல்லால் ஜீவர்களின் அதிருஷ்டமாகிய புண்ணியபாவம், தனது இச்சை, ஞானம், முயற்சி, காலம், திக்கு, பிராகபாவம், பிரதிபந்தகாபாவம் என்னும் மற்ற இவ்வெட்டுநிமித்தகாரணங்களும் கொள்ளப்படும். குயவன் குடத்தின் உபாதானமாகிய தண்டசக்கரமுதலியவற்றையும் அறிபவனாய்க் கடத்துக்குக் கர்த்தாவாதல்போலச் சுத்தசத்துவகுணப்பிரதான மாயாவுபகிதப்பிரஹ்மமும் ஜகத்தின் உற்பத்திமுதலியவற்றிற்கு ஏதுவாகிய சகல சாமக்கிரிகளையும் அறிவதாயிருத்தலால் ஜகத்திற்குக் கர்த்தாவாம்.

* கசுகூ. ஜகத்திற்கு அபின்னநிமித்தோபாதானகாரணமாகிய அந்தர்யாமி.

ங. 'துவம்'பதத்தின் வாச்சியார்த்தம்.

[சரு] यदा मलिनसत्वां तां कामकर्मादिदूषिताम् ।
आदत्ते तत्परं ब्रह्म त्वंपदेन तदोच्यते ॥ ४५ ॥

(அ-கை.)

'துவம்'பதவாச்சியார்த்த்தைக் கூறுகின்றார்:—

तत् परं ब्रह्म यदा मलिनसत्त्वां कामकर्मादिदूषितां तां आदत्ते तदा 'त्वं' पदेन उच्यते ॥

(சு-ம்.)

அந்தப்பரப்பிரஹ்மமே எப்போது மலினசத்துவகுணத்தோடுகூடியதும் காமம் கர்மமுதலியவற்றால் தூஷிக்கப்பட்டதுமாகிய அந்தமாயையைக் கொள்ளுகின்றதோ அப்போது 'துவம்'பதத்தால் சொல்லப்படுகின்றது.

(வி-ம்.)

* கசo. அந்தப் பிரஹ்மமே எப்போது (எந்தச் சம்சாரஅவஸ்தையில்) சிறிது இரஜோதமோகுணங்கள் கலத்தலாகிய ஏதுவால் * கசக. மலினசத்துவகுணப்பிரதானமும், * கசஉ. காமம் கர்ம * கசங. முதலியவற்றால் தூஷிக்கப்பட்டதுமான அவித்தையெனும் சத்தத்திற்கு வாச்சியமுமாகிய * கசச. மாயையை உபாதியாகக் கொள்ளுகின்றதோ, அப்போது 'துவம்'பதத்தால் கூறப்படுகின்றது. அது 'துவம்'பதத்திற்கு வாச்சியமாம். (சரு)

ச. இலக்ஷணையினால் வாக்கியார்த்தத்தின் ஞானமாமாறு.

[சசு] त्रितयीमपि तां मुक्त्वा परस्परविरोधिनीम् ।
अखंडं सच्चिदानंदं महावाक्येन लक्ष्यते ॥ ४६ ॥

---

* கசo. எந்தப் பிரஹ்மம் அந்நிய உபாதிகளின் சேர்க்கையால் ஜகத்திற்கு நிமித்தோபாதான மாகின்றதோ அதே பிரஹ்மம்.

* கசக. இரஜோதமோகுணங்களால் அமிழ்த்தப்படும் மலினசத்துவகுணத்தை முக்கியமாகவுடையது. (கசு) சுலோகத்திற் காண்க.

* கசஉ காமம்=விஷய இச்சை. கர்மம்=அதிருஷ்டம்.

* கசங. முதலியவென்னும் சொல்லால் வாசனையும் கொள்ளப்படும்.

* கசச. மாயை=பிரகிருதி.

(அ-கை.)

இவ்வாறு "தத் துவம்" பதார்த்தங்களின் அர்த்தத்தைக் கூறிப் பதசமுதாயமாகிய வாக்கியத்தின் அர்த்தத்தைக் கூறுகின்றார்:—

त्रितयीम् अपि परस्परविरोधिनीं तां मुक्त्वा अखंडं सच्चिदानंदं महावाक्येन लक्ष्यते ॥

(சு-ம்.)

ஒன்றற்கொன்று விரோதமுள்ள மூன்றுவிதமாகிய அம்மாயையை விட்டு அகண்டமாகிய சச்சிதாநந்தப்பிரஹ்மம் மாகாவாக்கியத்தால் அறியப்படுகின்றது.

(வி-ம்.)

தமப்பிரதான சுத்தசத்துவப்பிரதான மலினசத்துவகுணப்பிரதானத் தன்மைகளின் பேதத்தால் மாயை மூன்றுவிதமாகச் சொல்லப்பட்டது. இதனால் ஒன்றற்கொன்று விரோதமாயுள்ள அந்த மாயையை * கசடு. விட்டு, அகண்ட அதாவது * கசசு. பேதமில்லாத சச்சிதாநந்தப் பிரஹ்மம் மகாவாக்கியத்தைக்கொண்டு இலக்ஷணையினால் அறியப்படுகின்றது.()

ரு. பாகத்தியாகலக்ஷணையில் திருஷ்டாந்தம்.

[சஎ] सोऽयमित्यादिवाक्येषु विरोधात्तदिदंतयोः ।
त्यागेन भागयोरेक आश्रयो लक्ष्यते यथा ॥ ४७ ॥

(அ-கை.)

அப்படியானால் இவ்வாறு இலக்ஷணாவிருத்தியினால் வாக்கியார்த்த ஞானம் எங்கே காணப்பட்டது என்றாசங்கித்துக் கூறுகின்றார்:—

सः अयं इत्यादिवाक्येषु तदिदंतयोः विरोधात् भागयोः त्यागेन एकः आश्रयः यथा लक्ष्यते ॥

(சு-ம்.)

"அவனே இவ"னென்பனமுதலிய வாக்கியங்களில் அவன் இவன் என்னும் தன்மைகளுக்கு விரோதமிருத்தலின் விரோதபாகங்களை விடுதலால் ஒரு ஆசிரயமாகிய பிண்டம் எப்படி இலக்ஷணையினாலறியப்படுகின்றதோ.

---

* கசடு. சுருதியுக்திகளால் மித்தையென அறிந்து.

* கசசு. சுகதமுதலிய மூன்று பேதமில்லாத அல்லது முன் மூன்றாவது சுலோகத்தின் சு-வது டிப்பணத்திற் கூறிய ஐந்து பேதமில்லாத சுகதமுதலிய மூன்று பேதங்களின் சொரூபமும் நிராகரணமும் பூதவிவேகத்தின் [உ0-உரு] சுலோகங்களிற் காண்க.

(வி-ம்.)

"அவனே * கசஎ. இந்தத் தேவதத்தன்" என்பனமுதலிய வாக்கியங்களில் அவனெனுந்தன்மை அதாவது அந்தப் பரோக்ஷமாகிய தூர

* கசஎ. தேவதத்தனென்னும் ஓர் புருஷனிருந்தான். அவனை வேறோர் எஞ்ஞதத்தனென்னும் புருஷன் வேறுதேசத்தில் முன்னொருகாலத்திற் கண்டிருந்தான். அத்தேவதத்தன் வெகுகாலத்திற்குப் பின் தன்தேசத்தை விட்டு அவ்வெஞ்ஞதத்தன் தேசத்திற்குச் சென்றான். அப்போது அவ்வெஞ்ஞதத்தன் அருகிலிருக்கும் புருஷனைப் பார்த்து, "அவனே இந்தத் தேவதத்தன் அதாவது அந்நியதேசத்தில் முற்காலத்தில் என்னாற் பார்க்கப்பட்ட அவனே இந்தேசத்தில் தற்காலத்தில் உடையப்பட்ட இத்தேவதத்தன்" என்றான். இதைக் கேட்டுச் சுரோதாவானவன் எஞ்ஞதத்தனை நோக்கி, "அந்நியதேசகாலத்துக்கும் இந்தத் தேசகாலத்திற்கும் ஐக்கியவிரோதமிருத்தலால் அந்தத் தேசகாலங்களையுடைய புருஷன் எப்படி இந்தத் தேசகாலமுடையவனாதல் சம்பவிக்கும்" என, அதற்கு அவ்வெஞ்ஞதத்தன் "அந்தத் தேசகாலங்களோடுகூடிய தர்மமும் இந்தத் தேசகாலங்களோடுகூடிய தர்மமுமாகிய இரண்டையும் விட்டு இரண்டுதர்மங்களிலும் அநுகூதமாய் (இருப்பதாகிய) தர்மியென்னும் தேவதத்தனது பிண்டம் ஒன்றேயா மென்பது யான் கூறியதின் அபிப்பிராயமாம்" எனக் கூறினான். இதைக்கேட்டு "அவனே இந்தத் தேவதத்தன்" என்று நிச்சயித்தான்.

அதுபோல "சிருஷ்டிக்குமுன் ஒரே அத்துவிதீயசத்தாகிய பிரஹ்மமிருந்தது" என்பது சுருதியிற் கேட்கப்பட்டிருக்கின்றது. அந்தப் பிரஹ்மத்தைத் தத்துவஞானியாகிய மகாத்மாவானவர் தானே தானாக அறிந்திருக்கின்றார். அதே பிரஹ்மம் சிருஷ்டிக்குப் பிந்திய காலத்தில் அவித்தையாகிய உபாதியால் ஜீவத்தன்மையையடைந்து சம்சாரத்திற் சுழன்று ஓர் நல்வினையின் பரிபாகத்தால் விவேகமுதலியவற்றோடுகூடிய சிஷ்யனாய் அம்மகாத்மாவாகிய குருவை விதியோடு சரணமடைய அப்போது அக்குருவானவர் "அது அதாவது சிருஷ்டிக்கு முன்னிருக்கும் ஒரே அத்துவிதீயசத்தாகிய பிரஹ்மம் நீ அதாவது சிருஷ்டிக்குப் பிந்திய காலத்தில் சம்சாரதசையிற்சுழலும் ஜீவன்" என்று கூறினார். அதைக் கேட்டு அந்த ஜீவனாகிய சிஷ்யன் மனமெனும் சுரோதாவின் வழியாய் "ஆசிரியரே அற்பஞ்ஞத்துவம் அற்பசக்தியுடைமை பராதீனத்துவமுதலிய நிக்ருஷ்டதர்மமுடைய நான் எப்படிச் சர்வஞ்ஞத்துவம் சர்வசக்தியுடைமை சுதந்திரத்துவமுதலிய சிரேஷ்ட தர்மமுடைய பரமேசுவரனாவேன்" என்றான். அதற்குக் குருவானவர் "ஈசுவரனது உபாதியாகிய மாயையும் அதனாலாகிய சர்வஞ்ஞத்துவமுதலிய தர்மங்களும் அப்படியே ஜீவனது காரிய (வியஷ்டிஸ்தூலசூக்ஷ்மசரீர)த்தோடு அவித்தையாகிய உபாதியும் அவற்றினாலாகிய அற்பஞ்ஞத்துவமுதலிய தர்மங்களும் உற்பத்தி, ஸ்திதி, பிரளயம், ஜாக்கிரம், சொப்பனம், சுழுத்தியென்னுங் காலமும் சொப்பனத்தைப்போலவும் மனோராச்சியத்தைப்போலவும் கற்பிதமாயிருத்தலால் மித்தையாமென்றறிந்து இவை இல்லவே இல்லை என்பதாக இவற்றின் பார்வையைவிட்டு மிஞ்சியிருக்கும் அகண்ட சச்சிதாநந்தமாகிய பிரஹ்மம் நீயே என்றறிக" எனக் கூறினார். அதை அந்த ஜீவன் மனமென்னுங் காதாற் கேட்டு மனனநிதித்தியாசனம் செய்து, தன்னைப் பிரஹ்மவடிவமாகச் சாக்ஷாத்கரித்தான். இது திருஷ்டாந்தத்தோடு சிஷ்யனது புத்தியில் வருத்தமின்றி அறிவித்தற்பொருட்டு உருவகம் செய்து சொல்லப்பட்டது.

தேச பூதகாலத்தோடுகூடியதன்மையாகிய தர்மம், இவனெனுந்தன்மை அதாவது இந்த அபரோக்ஷ சமீபதேச வர்த்தமானகாலத்தோடுகூடிய தன்மையாகிய தர்மம் என்னும் இரண்டற்கும் விரோதமிருத்தலால் விரோததர்மத்தைவிட்டுத் தேவதத்தனாகிய ஓர் புருஷனது சொரூபமான சரீரம் ஒன்றே எப்படிப் பாகத்தியாகலக்ஷணையினாலே அறியப்படுகின்றதோ. (சஎ)

௯. பாகத்தியாகலக்ஷணையில் தார்ஷ்டாந்தம்.

[சஅ] मायाविद्ये विहायैवमुपाधी परजीवयोः ।
अखंडं सच्चिदानन्दं परं ब्रह्मैव लक्ष्यते ॥ ४८ ॥

(அ-கை.)

இப்படி *கசஅ. திருஷ்டாந்தத்தைக் கூறித் தார்ஷ்டாந்தத்தைக் கூறுகின்றார்:—

एवं परजीवयोः उपाधी मायाविद्ये विहाय अखंड सच्चिदानंदं परं ब्रह्म एव लक्ष्यते ॥

(சு-ம்.)

இப்படியே பரமாத்மஜீவாத்மாக்களின் உபாதியாகிய மாயைஅவித்தைகளைவிட்டு அகண்ட சச்சிதாநந்தபரப்பிரஹ்மமே இலக்ஷணையினாலறியப்படுகிறது.

(வி-ம்.)

இப்படி அதாவது "அவனே இந்தத்தேவதத்தன்" என்னும் வாக்கியங்களைப்போலப் பரமாத்மஜீவாத்மாக்களின் உபாதியாகிய முற் *கசக. கூறப்பட்ட மாயைஅவித்தைகளிரண்டையும் விட்டு அகண்ட சச்சிதாநந்தமாகிய பரப்பிரஹ்மமே மகாவாக்கியத்தால் இலக்ஷணையினாலறியப்படுகின்றது. (சஅ)

எ. மகாவாக்கியத்தின் லக்ஷியார்த்தத்தில் பூர்வபக்ஷி தோஷக்கூறல்.

[சகூ] सविकल्पस्य लक्ष्यत्वे लक्ष्यस्य स्यादवस्तुता ।
निर्विकल्पस्य लक्ष्यत्वं न दृष्टं न च संभवि ॥ ४९ ॥

(அ-கை.)

அப்படியானால் மகாவாக்கியத்தால் இலக்ஷிக்கத்தக்க (இலக்ஷணையினாலறியத்தக்க) பிரஹ்மம் சவிகற்பமா அதாவது விகற்பத்தோடு கூடியதா?

---

* கசஅ. வாதிபிரதிவாதிகளிருவருக்கும் சம்மதம் (அநுகூலம்) திருஷ்டாந்தம்.
* கசக. [கசு] ம் [சச-சரு] சுலோகங்களிலும் காண்க.

நிர்விகற்பமா அதாவது விகற்பமில்லாததா? என்று இரண்டுவிதமாக விகற்பித்துக்கொண்டு பூர்வபக்ஷியானவன் முதற்பக்ஷத்தில் தோஷத்தைக் கூறுகின்றான் :—

सविकल्पस्य लक्ष्यत्वे लक्ष्यस्य अवस्तुता स्यात् ॥

(சு-ம்.)

சவிகற்பப்பிரஹ்மத்திற்கு இலக்ஷியத்தன்மையுளதாயின் இலக்ஷியத்திற்கு அநித்தியத்துவம் உண்டாகும்.

(வி-ம்.)

* கரு0. விபரீதமாயிருத்தலால் கற்பிதமாகும் பெயர் ஜாதிமுதலியன விகற்பமாம். அதனோடுகூடியிருப்பது சவிகற்பம். அச்சவிகற்ப வஸ்துவிற்கு இலக்ஷியத்தன்மையிருக்குமாயின், அதாவது மகாவாக்கியத்தினால் அறியத்தக்கதாகுந்தன்மையிருக்குமாயின் இலக்ஷியமாகிய பிரஹ்மத்திற்கு மித்தியாத்துவ முண்டாம். ஏனெனின், பெயர் ஜாதிமுதலிய தர்மங்களையுடைய கடமுதலிய பதார்த்தங்களில் மித்தியாத்துவம் காணப்படுதலால்.

(அ-கை.)

இரண்டாவது பக்ஷத்தில் தோஷத்தைக் கூறுகின்றான் :—

निर्विकल्पस्य लक्ष्यत्वं न दृष्टं न च संभवि ॥

(சு-ம்.)

நிருவிகற்பவஸ்துவிற்கு இலக்ஷியத்துவம் கண்டதுமில்லை;சம்பவிக்கவுமாட்டாது.

(வி-ம்.)

பெயர் ஜாதிமுதலியவைகளில்லாத நிர்விகற்பத்திற்கு இலக்ஷியத்துவம் உலகத்தில் ஓரிடத்துங் கண்டதில்லை ; சம்பவிக்கவுமாட்டாது. ஏனெனின், இலக்ஷியத்துவமாகிய தர்மமுடைய வஸ்துவிற்கு நிர்விகற்பத்தன்மையின் * கருக. வியாகாதமிருத்தலால். (சக)

* கரு0. இரச்சுவின் சொரூபத்தினும் விபரீதமாயிருத்தலால் சர்ப்பம் கற்பிதமாதல்போல அகண்ட சச்சிதாநந்த பிரஹ்மத்தினும் விபரீதமாய் அதாவது கண்டிதம் அசத்துமுதலியவடிவமா யிருத்தலால் பெயர் ஜாதிமுதலிய தர்மங்களும் கற்பிதமாம்.

* கருக. சத்தத்தின் இலக்ஷணவிருத்தியா லறியப்படுவது எதுவோ, அது இலக்ஷிய மெனப்படும். அவ்விலக்ஷியத்தில் பசுவிற் பசுத்தன்மைச்சாதியாகிய தர்மம்போலும், கடத்தில் கடத்துவஜாதியாகிய தர்மமிருத்தல்போலும் இலக்ஷியத்துவமாகிய தர்ம மிருக்கின்றது. இந்த இலக்ஷியத்துவ தர்மமாகிய விகற்பமுடைய இலக்ஷியம் சவிகற்பமெனச் சித்திக்கும். அதை மறுபடியும் நிருவிகற்பமென்று சொல்லுதலால் வியாகாததோஷ முண்டாகின்றது. எதனால் அதை இலக்ஷியமாயிருத்தலால் சவிகற்பமென்றும் நிருவிகற்பமென்றும் சொல்லுகிறீரோ அதனால் வியாகாத (விரோத) முண்டாகின்றது. எங்கே தனது சொல்லால் தனது வார்த்தைக்குப் பாத முண்டாகின்றதோ, அங்கே வியாகாததோஷம் சொல்லப்படுகின்றது. அது "என் தாய்மலடி" என்பது போலவாம்.

அ. சித்தாந்தியின் அசத்துத்தரம்.

[௫௦] विकल्पो निर्विकल्पस्य सविकल्पस्य वा भवेत् ।
आद्ये व्याहतिरन्यत्रानवस्थात्माश्रयादयः ॥ ५० ॥

(அ-கை.)

இப்போது சித்தாந்தியானவர் ஜாதியுத்தரமென்னும் * ௧௫௨. அசத்துத்தரமுடையதா யிருத்தலால் இவ்வுன்னுடைய ஆச்சரியகரமாகிய வினுப் பொருந்தாது என்று விகற்பபூர்வகமாகத் தோஷத்தைக் கூறுகின்றார் :—

विकल्पो निर्विकल्पस्य वा सविकल्पस्य भवेत् ?
आद्ये व्याहतिः । अन्यत्र अनवस्थात्माश्रयादयः ॥

(சு-ம்.)

இவ்விகற்பம் நிர்விகற்பத்திற்கா ? அல்லது சவிகற்பத்திற்கா ? முதற்பக்ஷத்தில் வியாகாததோஷ முண்டாகின்றது. இரண்டாவது பக்ஷத்தில் அநவஸ்தை ஆத்மாசிரயமுதலிய தோஷங்க ளுண்டாம்.

(வி-ம்.)

இலக்ஷியத்துவம் சவிகற்பத்திற்கா ? நிர்விகற்பத்திற்கா ? வென்றுன்னாற் செய்யப்பட்ட * ௧௫௩. விகற்பமானது நிர்விகற்பத்திற்கா ? அல்லது சவிகற்பத்திற்கா ? அவற்றுள்,

" நிர்விகற்பத்திற்கு விகற்பம் செய்யப்பட்டது " என்னும் முதற்பக்ஷத்தில் உன்னாற்சொல்லப்பட்ட நிர்விகற்பத்திற்கு விகற்பமாமென்பது வியாகாதமேயாம்; அதனை நிருவிகற்பமென்று கூறி அதற்கே விகற்பமும் செய்தலால்.

---

* ௧௫௨. யதார்த்தநிச்சயத்தில் கேட்டலாகிய உனது அசத்துவினுவினைப் போல் அதற்கு உஷ்டிரலகுடிகாநியாயத்தால் கேட்டவிற்கேட்டலாகிய அசத்துத்தரம் கொடுத்தல்வேண்டும். அவ்வசத்துத்தர முளதாகவே இந்த உன்னுடைய வினு அசங்கதமாகும். உஷ்டிரமாகிய ஒட்டை மதங் கொண்டகாலத்து அவ்வொட்டையின்பேரில் வைக்கப்பட்டிருக்கும் விறகினுலே அதைத் தெளிவித்தலன்றி வேறுசாதனங்களால் ஆகிறதில்லை. ஆகையால் இந்த நியாயமாகிய திருஷ்டாந்தத்தை உஷ்டிரலகுடிகாநியாய மென்பர்.

* ௧௫௩. ஒரேவார்த்தையிலுள்ள மதபேதம் எதுவோ அது விகற்ப மெனப்படும்.

“சவிகற்பத்திற்கு விகற்பம் செய்யப்பட்டது” என்னு மிரண்டாவது பக்ஷத்தில் ஆத்மாசிரயமுதல் அநவஸ்தைபரியந்தமான நான்கு தோஷங்களு முண்டாம். அஃதெங்ஙனமெனின் :— விகற்பத்தோடு கூடியிருக்கின்றதென்னும் மூன்றும் வேற்றுமையை இறுதியாகவுடைய விகற்பத்தாலும் முதல்வேற்றுமையை இறுதியாகவுடைய விகற்பத்தினாலும் சொல்லப்படுவது ஒரே விகற்பமா? அல்லது இரண்டு விகற்பமா? ஒன்றேயெனின், அவ்வொரே விகற்பம் தானே விகற்பத்தின் ஆசிரயவிசேஷணத் தன்மையால் ஆசிரயமும், அதனது ஆசிரிதமு மாகின்றது. அதனால் ஆத்மாசிரயதோஷ முண்டாகும். இரண்டெனின், மூன்றும்வேற்றுமையாற் சொல்லப்படும் விகற்பமும் விகற்பவடிவமாயிருத்தலாலும் அதனது ஆசிரயமும் சவிகற்பமாயிருத்தலாலும் அதன்விசேஷணவடிவமாகிய விகற்பம் முதல்வேற்றுமையினாற் சொல்லப்படும் விகற்பமா? அல்லது அவ்விரண்டினும் வேறு? முதல்வேற்றுமையினாற் சொல்லப்படும் விகற்பந்தானென்னும் முதற்பக்ஷத்தில் அந்நியோந்நியாசிரயதோஷ முண்டாம். அவ்விரண்டினும் வேறு மென்னும் இரண்டாவது பக்ஷத்திலும் தர்மிவிசேஷணமாகிய விகற்பம் முதல்வேற்றுமையினாற் சொல்லப்பட்டதா? அல்லது அவ்விரண்டினும் வேறு? முதல்வேற்றுமையினாற் சொல்லப்பட்டதென்னும் முதற்பக்ஷத்தில் சக்கிரிகாதோஷ முண்டாகும். அதனினும் வேறு என்னும் இரண்டாவது பக்ஷத்தில் அதற்கும் வேறு அதற்கும் வேறு என அநவஸ்தாதோஷ முண்டாகும்.

அவ்வாத்மாசிரயதோஷங்களே விளக்கிக் கூறப்படுகின்றன :—

க. “सविकल्पस्य विकल्पः சவிகற்பப் பிரஹ்மத்திற்கு விகற்பம்” என்னும் வாக்கியத்திலுள்ள சவிகற்பமென்னும் பதத்திற்குப் பொருள் யாதெனிற் கேட்பாயாக. விகற்பத்தோடு கூடியிருப்பது எதுவோ அது சவிகற்பப்பிரஹ்மம் என்னும் *கஙச. தர்மியாம். அந்தச் சவிகற்பப்பிரஹ்மம் எந்த விகற்பத்தோடுகூடியிருக்கின்றதோ அந்த விகற்பம் இப்பிரசங்கத்தில் *கஙரு. மூன்றும்வேற்றுமையை இறுதியாகவுடைய விகற்பபதத்தினாற் சொல்லப்படுகின்றது. அந்தச் சவிகற்பப்பிரஹ்மத்தில் உன்னாற்செய்யப்பட்ட விகற்

---

* கஙச. தர்மியென்பது ஆசிரயம் (அதிகரணம்). அதுவே அநுயோகியாம்.

* கஙரு. வியாகரணத்தின்படியுள்ள எழுவேற்றுமையுருபுகளில் மூன்றும்வேற்றுமையுருபு எந்தப் பதத்தினிறுதியி லிருக்கின்றதோ அது மூன்றும்வேற்றுமையை இறுதியாகவுடையதாம். முதல் வேற்றுமையுருபு எந்தப் பதத்தினிறுதியி லிருக்கின்றதோ அது முதல் வேற்றுமையை இறுதியாகவுடையதாம்,

பமானது இங்கே முதல் வேற்றுமையை இறுதியாகவுடைய விகற்பபதத்தி னாற் சொல்லப்படுகின்றது.

பிரதிவாதியே! இங்கே முதல்வேற்றுமையை இறுதியாகவுடைய விக ற்பபதத்தினாலும் மூன்றாம் வேற்றுமையை இறுதியாகவுடைய விகற்பத்தி னாலும் உன்னாற் சொல்லப்படும் விகற்பம் ஒன்றா? அல்லது இரண்டா? ஒரேவிகற்பத்தை முதல்வேற்றுமையை இறுதியாகவுடையதாகவும் மூன் றாம் வேற்றுமையை இறுதியாகவுடையதாகவும் சொல்லுமிடத்து, ஒரு விற்பமாகிய தானே விகற்பத்திற்கு ஆசிரயமாகிய சவிகற்பப்பிரஹ்மத்திற்கு விசேஷணமாதலால் * கநிரு. தானே * கநிஎ தனக்கு * கநிஅ. ஆசிரயமா யிற்று அதாவது முதல்வேற்றுமையை இறுதியாகவுடைய உன் விகற்பத்தி ற்கு ஆசிரயமாகிய சவிகற்பப்பிரஹ்மத்தின் விசேஷணமென்னும் மூன்றாம் வேற்றுமையை இறுதியாகவுடைய விகற்பமும் முதல்வேற்றுமையை இறு

---

* கநிரு. மூன்றாம்வேற்றுமையை இறுதியாகவுடைய விகற்பம்.

* கநிஎ. பிரஹ்மத்தோடுகூடிய தன்னில் முதல்வேற்றுமையை இறுதியாக வுடைய விகற்பரூபமாக இருப்பதற்கு.

* கநிஅ. ஒரேவிகற்பம் மூன்றாம் வேற்றுமையை இறுதியாகவுடைய ரூபத்தால் முதல்வேற்றுமையை இறுதியாகவுடைய தனக்கு எப்படி ஆசிரயமாயிற்றெனின் கேட்பாயாக:—விசிஷ்டத்திலிருக்கும் தர்மம் விசேஷணத்திலுமிருக்கு மென்னும் நியமத்தால். இதன்பொருள்:—விசேஷணத்தோடுகூடிய வஸ்துவில் எந்தத் தர்ம மிருக்கிறதோ அது விசேஷணத்திலும் நியமமாயிருக்கும். திருஷ்டாந்தம்:— "தண்டி (தண்டமுடையவன்) வந்திருக்கிறான்" என்னும் வாக்கியத்தில் தண்டம் விசேஷண (ஆதேய) மும் புருஷன் விசேஷிய (ஆதார) மும்மாம். தண்டமாகிய விசேஷணத் தோடுகூடிய தண்டிபுருஷனிடத்து வருதற்றொழிலாகிய எந்தத் தர்மமிருக்கின்றதோ அது தண்டமாகிய விசேஷணத்திலு மிருக்கும். தண்டி வந்திருப்பதுபோலத் தண்ட மும் வந்திருக்கிறது. சித்தாந்தம்:—இங்கே தண்டியைப்போலச் சவிகற்பப் பிரஹ் மாத்மா விசேஷியமாம். தண்டத்தைப்போல மூன்றாம்வேற்றுமையை இறுதியாக வுடைய விகற்பம் விசேஷணமாம். தண்டவிசிஷ்டதண்டியைப்போல மூன்றாம் வேற்றுமையை இறுதியாகவுடைய விகற்பவிசிஷ்டம் சவிகற்பப்பிரஹ்மாத்மா. விசிஷ்டத்திலிருக்கும் வருதற்றொழிலாகிய தர்மத்தைப்போல உபாதியாகிய உனது முதல்வேற்றுமையை இறுதியாகவுடைய விகற்பமாம். போகுதற்கு ஆசிரயம் தண் டியாதல்போல தண்டமுமாம். இவ்வாறு உன்னுடைய முதல்வேற்றுமை இறுதி யாகவுடைய விகற்பத்திற்கு ஆசிரயம் சவிகற்பப் பிரஹ்மமாதல்போலச் சவிகற்பப் பிரஹ்மத்தின் விசேஷணமாகிய மூன்றாம்வேற்றுமையை இறுதியாகவுடைய விகற்பமும் உனது முதல்வேற்றுமையை இறுதியாகவுடைய விகற்பத்திற்கு ஆசிரய மாம். இவ்வளவு அர்த்தமும் "ஒரு விகற்பமாகிய தானே விகற்பத்தின் ஆசிரயத் திற்கு விசேஷணமா யிருத்தலால் முதல்வேற்றுமையை இறுதியாகவுடைய தனக்கு ஆசிரயமாம்." என்னும் வாக்கியத்தால் குறிப்பிக்கப்பட்டது.

தியாகவுடைய உனது விகற்பத்திற்கு ஆசிரயமாம் ; ஏனெனின் விசிஷ்டத்திலிருக்கும் தர்மம் விசேஷணத்திலுமிருக்குமென நியமமிருத்தலால்.

பின்னும் அந்த ஆசிரயமாகிய மூன்ரும்வேற்றுமையை இறுதியாகவுடைய தன்னில் முதல்வேற்றுமை இறுதியாகவுடையதாக உனது விகற்பமிருத்தலால் * கஙகூ. தானே * ககூ0. தனக்கு ஆசிரிதமுமாகும். அப்போது ஒரேவிகற்பம் மூன்ரும்வேற்றுமையை இறுதியாகவுடைய வடிவத்தால் ஆசிரயமும் முதல்வேற்றுமையை இறுதியாகவுடையவடிவத்தால் ஆசிரிதமுமாகும். இதுவே தனது சித்தியில் தன்னை அபேக்ஷித்தல் என்னும் ஆத்மாசிரயதோஷமாம்.

உ. முதல்வேற்றுமையை இறுதியாகவுடைய விகற்பமும் மூன்ரும்வேற்றுமையை இறுதியாகவுடைய விகற்பமும் ஒன்றற்கொன்று வேறு வேறெனின் அதாவது இரண்டெனின், மூன்ரும்வேற்றுமையை இறுதியாகவுடைய விகற்பமும் விகற்பவடிவமாயிருத்தலால் அதனது ஆசிரயமாகிய பிரஹ்மம் சவிகற்பமாயிருத்தலாலும் அந்த மூன்ரும்வேற்றுமையை இறுதியாகவுடைய விகற்பத்தின் ஆசிரயமான பிரஹ்மத்தின் விசேஷணமாகிய ஓர் விகற்பம் ஒப்பவேண்டியதாம். இவ்வாக்கியத்தினல் குறிக்கப்பட்டதிதுவாம் :—யாது யாது விகற்பமோ அந்தந்த விகற்பம் சவிகற்பமாகிய ஆசிரயத்தில் இருக்கின்றது ; நிர்விகற்பத்திலில்லை. முதல்வேற்றுமையை இறுதியாகவுடைய உன்னுடைய விகற்பம் சவிகற்பமாகிய ஆசிரயத்திலிருப்பது போலச் சர்வவிகற்பமும் விகற்பமாகிய ஆசிரயத்திலிருப்பனவாயின். ஆகையால் முதல்வேற்றுமையை இறுதியாகவுடைய உனது விகற்பமும் நிலைக்கும்பொருட்டு மூன்ரும் வேற்றுமையை இறுதியாகவுடைய விகற்பத்தால் ஆசிரயமான பிரஹ்மமாகிய தர்மிக்குச் சவிகற்பம் செய்யப்பட்டது போல மூன்ரும்வேற்றுமையை இறுதியாகவுடைய விகற்பம் நிலைக்கும் பொருட்டு ஏதேனும் ஓர் விசேஷணமாகிய விகற்பத்தால் ஆசிரயம் சவிகற்பம் செய்யத்தக்கதாகின்றது. மூன்ரும்வேற்றுமையை இறுதியாகவுடைய விகற்பத்தினது * ககூக. ஆசிரயத்தின் * ககூஉ. விசேஷணமாகிய விகற்பம் விசேஷணமாகிய விகற்பமெனப்படுகின்றது. அந்த விசேஷணமாகிய விகற்

---

*கஙகூ. முதல்வேற்றுமையை இறுதியாகவுடைய விகற்பம்.

*ககூ0. மூன்ரும்வேற்றுமையை இறுதியாகவுடைய ஆசிரயத்திற்கு.

*ககூக. பிரஹ்மத்தின்.

*ககூஉ. தன்னோடுகூடிய பிரஹ்மத்தைத் தன்னோடு நிர்விகற்பத்தினின்று வேறுபிரித்தறிவிப்பது.

பம் முதல்வேற்றுமையை இறுதியாகவுடையதா? அல்லது முதல்வேற்று மை மூன்றும்வேற்றுமைகளை இறுதியாகவுடைய அவ்விரண்டு விகற்பங்களுக்கும் வேறாகிய மூன்றாவதா? *கசுங. முதற்பக்ஷத்தில் அந்நியோந்நியாசிரயதோஷ முண்டாம். அஃதெங்ஙனமெனின், பரஸ்பரத்தின் சித்தியில் பரஸ்பரத்தின் அபேக்ஷை அந்நியோந்நியாசிரயத்தின் இலக்ஷணமாம். அந்த இலக்ஷணம் இப்பக்ஷத்தி லிருக்கின்றது. ஏனெனின், *கசுச. இங்கே முதல்வேற்றுமையை இறுதியாகவுடைய விகற்பம் நிலைக்கும்பொருட்டு மூன்றும்வேற்றுமையை இறுதியாகவுடையது அபேக்ஷிக்கப்படுகின்றது. மூன்றும்வேற்றுமையைவுடையது நிலைத்தற்பொருட்டு விசேஷணமாகிய விகற்பம் அபேக்ஷிக்கப்படுகின்றது. அவ்விசேஷணமாகிய விகற்பமும் முதல்வேற்றுமையை இறுதியாகவுடையதேயா மென்று உன்னு லங்கீகரிக்கப்பட்டிருத்தலால் மூன்றும்வேற்றுமையை இறுதியாகவுடையதற்கு முதல் வேற்றுமையை இறுதியாகவுடையதே அபேக்ஷிக்கப்பட்டது. இவ்வாறு அந்நியோந்நியாசிரயதோஷ முண்டாகின்றது.

ங. விசேஷணவடிவமாகிய விகற்பம் அந்த முதல்வேற்றுமை மூன்றும் வேற்றுமைகளையுடைய விகற்பங்களுக்கு வேறாகிய மூன்றாவதென ஒப்புக் கொள்ளும்பக்ஷத்தில், அந்த விசேஷணவடிவமாகிய மூன்றாவதுவிகற்பமும்*கசுரு.முன்போல விகற்பவடிவமா யிருத்தலானும்,அவ்விசேஷணவடிவமாகிய விகற்பத்தின் ஆசிரயமாகிய பிரஹ்மம் சவிகற்பவடிவமா யிருத்தலானும் ஆசிரயத்திற்கு அந்நியமான *கசுசு. தர்மி விசேஷணவடிமாகிய விகற்பம் அங்கீகரிக்கவேண்டியதாம். அந்த அந்நியவிசேஷணமாகிய விகற்பம் முதல்வேற்றுமையை இறுதியாகவுடையதா? அல்லது முதல்வேற்றுமையை இறுதியாகவுடையது, மூன்றும்வேற்றுமையை இறுதியாகவுடையது, விசேஷணவடிவமாகியது என்னும்

---

*கசுங. மூன்றும்வேற்றுமையை இறுதியாகவுடையதின் ஆசிரயமாகிய விசேஷணவடிவமென்னும் விகற்பம் முதல்வேற்றுமையை யிறுதியாகவுடையதே; வேறு மூன்றாவது அன்று என்னும் பக்ஷத்தில்.

*கசுச. முற்கூறிய முதற்பக்ஷத்தில்.

*கசுரு. முதல்வேற்றுமையை இறுதியாகவுடையதும் மூன்றும்வேற்றுமையை இறுதியாகவுடையதுமாகிய விகற்பத்தைப்போல.

*கசுசு. முதல்வேற்றுமையை இறுதியாகவுடையது மூன்றும்வேற்றுமையை இறுதியாகவுடையது விசேஷணவடிவமாகியது என்னும் இந்த மூன்றுவிகற்பங்களுக்கும் சங்கேதமாய்க் கிரமமாகப்பெயர்கள் சொல்லியதுபோல மூன்றாவதுவிகற்பத்தின் ஆசிரயமாகிய விகற்பத்திற்குச் சம்ஸ்கிருத உரைகாரராகிய இராமகிருஷ்ணபண்டிதர் சங்கேதத்தால் தர்மிவிசேஷணவடிவ மென்று பெயர் வைத்திருக்கின்றார். அதுவே இங்கே அந்நிய விசேஷணவடிவமாகச் சொல்லப்பட்டிருக்கின்றது.

மூன்றுவிகற்பங்களுக்கும் வேறாகிய நான்காவதா? முதற்பக்ஷத்தில் சக்கிரிகாதோஷ முண்டாம். அஃதெங்ஙனமெனின், சக்கரத்தைப்போலச் சுழல்வதைச் சக்கிரிகாதோஷ மென்பர். * கசுஎ. இங்கே முதல்வேற்றுமையை இறுதியாகவுடையது நிலைக்கும்பொருட்டு மூன்றும்வேற்றுமையை இறுதியாகவுடையதும், அம்மூன்றும்வேற்றுமையை இறுதியாகவுடைய விகற்பம் நிலைக்கும்பொருட்டு விசேஷணவடிவமாகிய மூன்றுவது விகற்பமும், அவ்விசேஷணவடிவமாகியது நிலைக்கும்பொருட்டு அந்நிய விசேஷணவடிவ அதாவது தர்மிவிசேஷணவடிவ விகற்பமும் அபேக்ஷிக்கப்படுகின்றன. அந்த அந்நிய விசேஷணமாகிய விகற்பம் முதல்வேற்றுமையை இறுதியாகவுடையதாகவே அங்கீகரிக்கப்பட்டிருக்கின்றது. பின்னும் முதல்வேற்றுமையை இறுதியாகவுடையது நிலைத்தற்கு மூன்றும் வேற்றுமையை இறுதியாகவுடையதும், இம்மூன்றும்வேற்றுமையை இறுதியாகவுடையது நிலைத்தற்கு மூன்றுவதும், அது நிலைத்தற்கு முதல்வேற்றுமையை இறுதியாகவுடையதும் அபேக்ஷிக்கப்படும். இப்படிச் சக்கரத்தைப்போலச் சுழற்சியுண்டாகின்றமையால் சக்கிரிகாதோஷ முண்டாகும்.

௪. தர்மிவிசேஷணவடிவமாகிய விகற்பம் அந்த முதல்வேற்றுமையை இறுதியாகவுடையது மூன்றும்வேற்றுமையை இறுதியாகவுடையது விசேஷணவடிவமாகியது என்னும் விகற்பங்களுக்கு வேறாகிய நான்காவதா மெனின், அந்த அந்நிய விசேஷணவடிவமாகிய நான்காவது விகற்பம் முன்போல விகற்பவடிவமாயிருத்தலால் அதன் ஆசிரயப் பிரஹ்மத்தையும் சவிகற்பமாக்குவதற்காக வேறு ஓர்விசேஷணமாகிய விகற்பம் ஐந்தாவதாக ஒப்பவேண்டியதாம். அப்போது ஐந்தாவது விகற்பமும் விகற்பவடிவமாயிருத்தலால் அதன் ஆசிரயமான பிரஹ்மத்தைச் சவிகற்பமாக்குவதற்கு வேறு ஓர் விசேஷணவடிவமாகிய ஆறுவது விகற்பமும் அங்கீகரிக்கவேண்டியதாம். இப்படி மேலும் அது நிலைத்தற்கு ஏழாவதும், பின்னும் அது நிலைத்தற்கு வேறு எட்டாவதும் அங்கீகரிக்கவேண்டியதாம். இப்படி அநவஸ்தாதோஷ முண்டாகின்றது. பிரமாணமில்லாத தாரைக்கு (பிரவாகத்திற்கு) அநவஸ்தை யென்று பெயராம். இப்படியே "வித்வான்கள் இந்த அநவஸ்தை மூலத்தைக் கெடுப்பதென்றனர்" என்று வேறு சாஸ்திரங்களிலும் கூறப்பட்டிருக்கின்றது. இப்படி இலக்ஷியத்திற்போல விகற்பபக்ஷத்திலும்

---

*கசுஎ. விசேஷணவடிவமாகிய மூன்றுவது விகற்பத்தின் ஆசிரயமாகிய தர்மிவிசேஷணவடிவமாகிய விகற்பம் முதல்வேற்றுமையை இறுதியாகவுடையது முதலிய மூன்றற்கும் வேறாகிய நான்காவதாம் என்னும் முதற்பக்ஷத்தில்.

தோஷமுண்டு. *கசுஅ. அதைப் பிருதிவியின் சையோகமுடைய கடத்தின் திருஷ்டாந்தத்தாற் கண்டுகொள்க. (ருo)

[ருக] इदं गुणक्रियाजातिद्रव्यसंबन्धवस्तुषु
समं तेन स्वरूपस्य सर्वमेतदितीष्यताम् ॥ ५१ ॥

(அ-கை.)

இவ்விகற்பபக்ஷத்தில் மாத்திரமே இந்த வியாகாதமுதல் அநவஸ்தை பரியந்தமான தோஷங்களுண்டென்பதில்லை, குணமுதலிய அநாத்ம வஸ்துக்கள் முழுவதிலும் இத்தத்தோஷம் பிரவர்த்திக்கின்றது எனக் கூறுகின்றார் :—

इदं गुणक्रियाजातिद्रव्यसंबंधवस्तुषु समम्

(சு-ம்.)

இத்தோஷம் குணம் கிரியை ஜாதி திரவியம் சம்பந்தம் என்னும் வஸ்துக்களில் சமானமாம்.

(வி-ம்.)

இந்த விகற்பபக்ஷத்தில் சொல்லப்பட்ட வியாகாதமுதலிய தோஷங்கள் குணமுதலிய ஐந்து பதார்த்தங்களிலும் சமமாம். அதெங்ஙனமெனின் :—குணம் நிர்க்குணத்திலிருக்கின்றதா? அல்லது குணமுடையதிலிருக்கின்றதா? கிரியையும் கிரியையில்லாததிலிருக்கின்றதா? அல்லது கிரியையுள்ளதிலிருக்கின்றதா? முதற்பக்ஷத்தில் வியாகாதமும், இரண்டாம்பக்ஷத்தில் ஆத்மாசிரயமுதலிய நான்குதோஷங்களுமுண்டாகின்றன. அதை முன்போல விசாரித்தறிக. இப்படியே புத்திமான்கள் ஜாதிமுதலிய எல்லா இடங்களிலும் அறிந்துகொள்க.

---

*கசுஅ. வெண்குடம் குடசையோக (சம்பந்தவிசேஷ) மில்லாத பிருதிவியில் சையோக சம்பந்தத்தாலிருக்கிறதா? அல்லது குடசையோகமுள்ள பிருதிவியிலிருக்கிறதா? என்னும் முதற்பக்ஷத்தில் "என்வாயில் நாக்கில்லை" "என்பிதா பாலப்பிரஹ்மசாரி" என்னும் வாக்கியங்களைப்போலத் தன்வார்த்தையினாலேயே தன் வார்த்தைக்குப் பாதமுண்டாதலாகிய வியாகாததோஷமுண்டாகின்றது. அப்பிருதிவியினையே குடசையோகமில்லாததாகவும் சொல்லிப் பின் அதில் குடசையோகமும் சொல்லுதலால் வியாகாதமாம். "குடசையோகமுள்ள பிருதிவியில் வெண்குடம் சையோகத்தாலிருக்கின்றது." என்னும் இரண்டாவதுபக்ஷத்தில் ஆத்மாசிரயமுதலிய நான்குதோஷங்களுமுண்டாகின்றன. அந்நான்கு தோஷங்களையும் வெண்குடத்தைப்போலக் கருங்குடம் செங்குடம் மஞ்சட்குடம் முதலியவற்றைக் கற்பித்துக்கொண்டு புத்திமான்கள் அறிந்துகொள்ளக்கடவர்.

க. சித்தாந்தியின் சத்துத்தரம்.

(அ-கை.)

இது அசத்துத்தரமாமாயின் சத்துத்தரம் யாது என்று சங்கிக்கச் சித்தாந்தி சத்துத்தரம் கூறுகின்றார்:—

तेन एतत् सर्वं स्वरूपस्य इति इष्यताम् ॥

(சு-ம்.)

அக்காரணத்தால் 'இந்தக் குணமுதலியன யாவும் சொரூபத்தினவா மென்று அங்கீகரித்தல்வேண்டும்.

(வி-ம்.)

இப்படி விகற்பம் *கசுக சம்பவியாமையாகிய ஏதுவால் இந்தக் குணமுதலிய (தர்மங்கள்) யாவும் சொரூபத்தினுடையனவாம். அதாவது *கஎ0. வஸ்துவின் சொரூபத்திற் கற்பிததாதாத்மியசம்பந்தத்தா லிருக்கின்றன என்பது அபிப்பிராயம். (ருக)

[ருஉ] विकल्पतदभावाभ्यामसंस्पृष्टात्मवस्तुनि ।
विकल्पितत्वलक्ष्यत्वसंबंधाद्यास्तु कल्पिताः ॥ ५२ ॥

(அ-கை.)

இப்படி வேறு இடங்களாகிய அநாத்மவஸ்துக்களில் இருக்குக. *கஎக. பிரகிருத (ஆத்மப்பிரசங்க)த்தில் என்ன வந்ததெனக் கூறுகின்றார்:—

विकल्पतदभावाभ्यां असंस्पृष्टात्मवस्तुनि विकल्पितत्वलक्ष्यत्वसंबंधाद्याः तु कल्पिताः ॥

(சு-ம்.)

விகற்பத்தினாலும் விகற்பத்தின் அபாவத்தினாலும் பற்றப்படாதிருக்கும் அசங்கஆத்மவஸ்துவில் விகற்பத்துவம், இலக்ஷியத்துவம், சம்பந்த முதலியவை கற்பிதங்களாம்.

---

*கசுக. குணமுதலியவைகள் விகற்பத்தைச் சகியாமையால் சம்பவிக்கிறதில்லை. வியவகாரத்தில் தோற்றுகின்றன. ஆகையால்,

*கஎ0. தத்தம் ஆசிரயமாகிய குணிமுதலியவஸ்துஉபகிதசேதனசொரூபத்தில்.

*கஎக. ஆரம்பிக்கப்பட்ட அர்த்தத்தில் [சச] சுலோகத்திற் காண்க.

(வி-ம்.)

விகற்பத்தோடும் விகற்பத்தின் அபாவத்தோடும் சம்பந்தமில்லாத பிரத்தியகபின்ன பரமாத்மவஸ்துவில் (விகற்பம் நிருவிகற்பத்தி லிருக்கின்றதா? சவிகற்பத்தி லிருக்கின்றதா? குணம் நிர்க்குணத்திலிருக்கின்றதா? சகுணத்திலிருக்கின்றதா? என்னும் இவைமுதலிய முற்கூறப்பட்ட வாதியின் இரண்டபிப்பிராயமாகிய விகற்பத்திற்கு விஷயமாதலாகிய)விகற்பத்துவம், சத்தத்தின் இலக்ஷணாவிருத்தியால் அறியத்தகுந்ததன்மையாகிய இலக்ஷியத்துவம், * ௧௭௨. சம்பந்த * ௧௭௩. முதலிய இவை யாவும் இரச்சுவிற்சர்ப்பம்போலக் கற்பிதமேயாம் என்பது பொருள். (௫௨)

---

* ௧௭௨. அபாவசாதிருசியங்களுக்கு வேறாகிய, பிரதியோகியின் அபேக்ஷையோடுகூடிய பிரதீதியின் விஷயம் சம்பந்த மெனப்படும். எதில் மற்றொன்றன் சம்பந்தமிருக்கின்றதோ அது சம்பந்தத்தின் அநுயோகியாம். எதன் சம்பந்தம் மற்றொன்றி லிருக்கின்றதோ அது சம்பந்தத்தின் பிரதியோகியாம். பிரதியோகியின் பிரதீதிபூர்வகமாய் எதன் பிரதீதியுண்டாகின்றதோ அப்படிப்பட்டவைகளோ அபாவமும் சாதிருசியமுமாம்; ஆனலவை அவற்றினும் வேறன்று; அவற்றிற்கு வேறாகவோ மற்றக் கடமுதலியன விருக்கின்றன; அவை பிரதியோகியின் அபேக்ஷையோடுகூடிய பிரதீதிக்கு விஷயமன்று. ஆதலால் முற்கூறிய சம்பந்தத்தின் இலக்ஷணத்திற்கு ஓரிடத்தும் அதிவியாப்தி முதலியவைக ளில்லை. இது சம்பந்தத்தினது இலக்ஷணத்தின் பரீக்ஷை (பதகிருதி)யாம். இலக்ஷணத்திற்கு அதிவியாத்திமுதலிய மூன்றுதோஷங்களு மில்லை என்பதைக் காட்டும் விசாரத்திற்குப் பரீக்ஷை யென்று பெயராம். அசாதாரண (ஒன்றிலுள்ள) தர்மத்தை இலக்ஷண மென்பர்.

(௧) அவ்வியாப்தி இலக்ஷியத்தின் ஏகதேசத்தில் இலக்ஷணமிருத்தல். (௨) அதிவியாப்தி இலக்ஷியத்திலிருந்து இலக்ஷியமல்லாததிலுமிருத்தல். (௩) அசம்பவம் இலக்ஷியத்தைவிட்டு அலக்ஷியத்திலிருத்தல். இம்மூன்று தோஷங்களு மில்லாமைக்கு அசாதாரணதர்ம மென்று பெயராம்.

முற்கூறிய இலக்ஷணமுடைய சம்பந்தம் சையோகமுதலியவடிவமா யிருக்கின்றது.

இங்கே முதலிய வெனுஞ்சொல்லால் சமவாயம் தாதாத்மியம் முதலிய அநேக சம்பந்தங்கள் கொள்ளப்படும்.

இரண்டு திரவியங்களின் சம்பந்தம் சையோகசம்பந்த மெனப்படும். அச்சையோகம் கர்மஜ (கர்மத்தாலாகிய) சையோகம், சையோகஜ (சையோகத்தாலாகிய) சையோகம், சகஜ (உடன்தோன்றிய) சையோகம் என்னும் பேதத்தால் மூன்று வகையாம்.

௧. எதன் உற்பத்தியில் கிரியை அசமவாயிகாரண மாகின்றதோ அது கர்மஜ சையோகம். அவற்றுள் கர்மஜசையோகம் இரண்டுவகையாம், ஒன்று அந்நியகர்மஜசையோகம்; மற்றொன்று உபயகர்மஜசையோகம்.

(க) சையோகத்தின் உபாதானகாரணமாகிய ஆசிரயம் இரண்டாம். அவற்றுள் ஒன்றன் கிரியையால் எந்தச் சையோகம் உண்டாகின்றதோ அது அந்நியதரகர்மஜமாம்; பக்ஷியின் கிரியையால் விருக்ஷத்திற்கும் பக்ஷிக்கும் சையோகமாதல்போல.

(உ) இரண்டு ஆசிரயத்தின் கிரியையால் உண்டாகும் சையோகம் உபயகர்மஜமாம்; இரண்டு ஆட்டுக்கடாக்களின் கிரியையாலுண்டாகும் இரண்டு ஆட்டுக்கடாக்களின் சையோகம்போல.

உ. சையோகவடிவ அசமவாயிகாரணத்தாலுண்டாவது யாதோ அது சையோகஜசையோகமாம். கைக்கும் மரத்திற்குமுள்ள சையோகத்தாலாகிய காய(சரீர)த்திற்கும் மரத்திற்குமுள்ள சையோகம் சையோகஜசையோகமாம்.

ஙூ. சையோகமுடையதின் பிறப்போடு உண்டாகிய சையோகத்தைச் சகஜசையோக மென்பர். பொன்னில் பார்த்திவ (பிருதிவியின்காரிய) பாகமும் தைஜஸ (தேயுவின்காரிய) பாகமு மிருக்கின்றன. அவற்றிற்குள்ள சையோகம் சகசமாம். பொன்னிலுள்ள மஞ்சள் நிறத்திற்கும் குருத்துவத்திற் (திண்மைக்) கும் ஆசிரயமாகிய பார்த்திவபாகமும், அக்கினியின் சையோகத்தால் நாசமாகாத திரவத்துவத்திற் (நிகழ்ச்சிக்)கு ஆசிரயமாகிய தைஜஸபாகமு மிருக்கின்றன.

இவ்வாறு மூன்றுவகை சையோகசம்பந்தம் சொல்லப்பட்டது.

(க) நித்தியசம்பந்தத்திற்குச் சமவாயசம்பந்த மென்று பெயர். அது நியாயமதத்தில் குணகுணிக்கும், ஜாதிவியக்திக்கும், கிரியை கிரியையுடையதற்கும், உபாதானகாரணகாரியத்திற்கும் பரஸ்பரம் ஒப்பப்பட்டிருக்கின்றது. நியாயமதத்தில் சொரூபசம்பந்தத்திற்குத் தாதாத்மிய மென்று பெயர்.

(உ) பூர்வமீமாம்சையின் வார்த்திககாரராகிய பட்டர்மதத்தில் சிறிதுபேதத்தோடுகூடிய அபேத (பேதாபேத) த்தைத் தாதாத்மிய மென்பர்.

(ஙூ) சர்வசிரோமணியாகிய வேதாந்தசித்தாந்தத்தில் பேதாபேதங்களுக்கு விலக்ஷணமாகிய சம்பந்தம் தாதாத்மிய மெனப்படும். அதனையே அநிர்வசனீய (கற்பித) தாதாத்மிய மென்று கூறுவர். இங்கே பேதத்திற்கு விலக்ஷண மென்று சொல்லுதலால் வாஸ்தவ அபேதமும், அபேதத்திற்கு விலக்ஷண மென்பதனால் கற்பிதபேதமும் கொள்ளப்படும். ஆகையால் சித்தாந்தத்தில் கற்பிதபேதத்தோடுகூடிய வாஸ்தவ அபேதம் தாதாத்மியசம்பந்தமாம்.

எங்கே (முற்கூறிய குணகுணிமுதலிய நான்கில்) நியாயமதத்தில் சமவாயசம்பந்தம் ஒப்பப்பட்டிருக்கின்றதோ அங்கே வேதாந்தபட்டமதங்களில் தாதாத்மியம் வியவகரிக்கப்படுகின்றது. இவ்வாறு சையோகம் சமவாயம் தாதாத்மியம் என மூன்று சம்பந்தங்கள் சொல்லப்பட்டன.

இப்படியே வியவகாரத்தின் பொருட்டு இன்னும் அநேகசம்பந்தங்க ளிருக்கின்றன. அவற்றினை விரிவஞ்சி விடுத்தனம்.

* கஎஙூ. இங்கே மூலசுலோகத்திலுள்ள ஆதி என்னும் பதத்தால் திரவியம், குணம், ஜாதி, கிரியை என்பவைகளும் கொள்ளப்படும். இந்நான்கின் இலக்ஷணத்தைக் கூறுகின்றார்:—

௨. சிரவண மனன நிதித்தியாசனங்களின் லக்ஷணம். ருரு-ருச.

௧. சிரவணமனனங்களின் லக்ஷணம்.

[ருரு] इत्थं वाक्यैस्तदर्थानुसंधानैः श्रवणं भवेत् ।
युक्त्या संभावितत्वानुसंधानं मननं तु तत् ॥ ५३ ॥

(அ-கை.)

இவ்வளவு கிரந்தசமூகங்களால் என்ன சொல்லப்பட்டதென்று கேட்குமிடத்துப் பலிதத்தைக் கூறுகின்றார் :—

इत्थं वाक्यैः तदर्थानुसंधानं श्रवणं भवेत् युक्त्या संभावितत्वानुसंधानं तत् तु मननम् ॥

(சு-ம்)

இப்படி மகாவாக்கியங்களினால் அவற்றின் (மகாவாக்கியங்களின்) அர்த்தத்தை அநுசந்தித்தல் சிரவணம் ஆகின்றது. யுக்தியினால் யோக்கியதையை அநுசந்தித்தல் எதுவோ அது மனன மாகின்றது.

---

(௧) குணத்தின் ஆசிரயம் திரவிய மெனப்படும். குணம் தானுயிருந்தும் அது அதற்கு ஆசிரயமாகாது. ஜாதி முதலியவற்றிற்கு ஆசிரயமாகிய வேறு வியக்திமுதலியவைகளு மிருக்கின்றன. ஆனால் அவை குணத்திற்கு ஆசிரயமாகா. ஆகையால் குணத்தினாசிரயம் திரவியமாம். அல்லது சமவாயிகாரணத்தைத் திரவிய மென்பர். இவ்வாறு நையாயிகர் திரவியத்திற்கு இலக்ஷணம் கூறியிருக்கின்றனர்.

நையாயிகர் சமவாயி அசமவாயி, நிமித்தமென மூவகைக்காரணங் கூறுவர். வேதாந்தமதத்தில் அசமவாயி நீங்கிய இரண்டுகாரணங் கூறப்படுகின்றது. நையாயிகர் எதைச் சமவாயிகாரண மென்கின்றனரோ அதனையே வேதாந்திகள் உபாதானகாரண மென்பர்.

நையாயிகர் காரியத்தினது சமவாயிகாரணத்தின் சம்பந்தமுடையதாய்க் காரியத்தை உண்டாக்கும் சையோகத்தை அல்லது குணத்தை அல்லது கிரியையை மூன்றாவதுகாரணமாகிய அசமவாயிகாரண மென்பர். அதனையே வேதாந்திகள் நிமித்தகாரணத்திற் சேர்த்து எண்ணுவர். எது இருந்தால் காரியம் உண்டாகுமோ, எது இல்லாவிட்டால் காரியம் உண்டாகாதோ அப்படிப்பட்ட காரியத்திற்குச் சமீபித்த முற்காலத்திலிருப்பது காரணமாம். அவற்றுள் காரியத்தின் உற்பத்திமாத்திரத்திற்குக் காரண மெதுவோ அது நிமித்தகாரணம். உற்பத்தி ஸ்திதி நாசங்களுக்கு எது காரணமோ அது உபாதானகாரணமாம். இது பிரசங்கத்தாற் சொல்லப்பட்டது.

இப்போது முற்கூறிய லக்ஷணமுடைய திரவியம் நியாயமதத்தில் பிருதிவி, ஜலம், அக்கினி, வாயு, ஆகாசம், திக்கு, காலம், ஆத்மா, மனமென்னும் பேதத்தால் ஒன்பது விதமாகக் கொள்ளப்பட்டிருக்கின்றது. இவற்றின் அவாந்தரபேதம் நியாயநூல்களில் பிரசித்தம். உபயோகமின்மை கருதி இங்கு எழுதப்படவில்லை.

(வி-ம்.)

இப்படி "எது(பிரஹ்மம்)ஜகத்திற்கு உபாதானமோ" என்னும் சச-வது சுலோகமுதல் நிஉ-வது சுலோகம்வரையிலுள்ள கிரந்தசமூகத்திற் சொல்லியபடி "தத்துவமஸி" முதலிய மகாவாக்கியங்களால் அவ்வாக்கி

---

(உ) கர்மத்திற்கு வேருகிய ஜாதிமாத்திரத்தின் ஆசிரயம் குண மெனப்படும். கர்மத்திற்கு வேருகவோ ஜாதி சமவாயசம்பந்தம் அபாவமுதலியனவு மிருக்கின்றன. ஆனல் அவை ஜாதியி னுசிரயமல்ல. கர்மத்திற்கு வேருகிய ஜாதியினுசிரயம் திரவியங்களுமாம்; ஆனல் அவை ஜாதிமாத்திரத்தின் ஆசிரயமாகாமல் குணம் கிரியை முதலிய வேறு தர்மங்களுக்கும் ஆசிரயமாகின்றன. ஜாதிமாத்திரத்தின் ஆசிரயமோ கர்மமுமாம்; ஆனல் அது கர்மத்தினும் வேறன்று. ஆகையால் முற்கூறிய குணத்தின் இலக்ஷணத்திற்கு ஓரிடத்தும் அதிவியாப்தியில்லை. முற்கூறிய இலக்ஷணமுடைய குணமானது உருவம், இரசம், கந்தம், பரிசம், சங்கை, பரிமாணம், வேற்றுமை, சையோகம், விபாகம், பரத்துவம், அபரத்துவம், குருத்துவம், திரவத்துவம், சிநேகம், சத்தம், புத்தி, சுகம், துக்கம், முயற்சி, இச்சை, வெறுப்பு, தர்மம், அதர்மம், வாசனை என்று இருபத்துநான்குவகையாம். இப்படி நையாயிகர்கள் குணத்துக்குப் பேதத்தோடு இலக்ஷணம் சொல்லியிருக்கின்றார்கள்.

(ங) நித்தியமாய் ஏகமாய்ச் சமவாயசம்பந்தத்தால் அநேகதர்மங்களில் அநுகதமாயுள்ள தர்மம் சாமாநிய மெனப்படும். அதனையே ஜாதி யென்றுங் கூறுவர். நியாயமதத்தில் மனமும் நித்தியமாம். ஆனல் அது ஏகமும் அநேகத்தில் அநுகதமுமாகாது நாநாவும் அணுவுமாயிருக்கின்றது. ஆத்மாவும் நித்தியமும் அநேகத்திலநுகதமுள்ளதுமாம். ஆனல் ஏகமன்று; நாநாவாம். நித்தியமும் ஏகமும் அநேகத்திலநுகதமுமாயுள்ளதோ ஆகாயமுமாம்; ஆனல் அது சமவாயசம்பந்தத்தால் அநேகத்தில் அநுகதமாகாமல் சையோகசம்பந்தத்தாலாகின்றது. ஆகையால் இந்த ஜாதியின் இலக்ஷணத்துக்கு ஓரிடத்திலும் அதிவியாப்தியில்லை. முற்கூறிய ஜாதி பரம்(அதிகத்திலிருப்பது), அபரம் (குறைவிலிருப்பது) என்னும் பேதத்தால் இரண்டுவகையாம். அவற்றுள் நியாயமதத்தின்படி

[க] கடமிருக்கிறது படமிருக்கிறது என்பதாகச் சகலபதார்த்தங்களிலும் இருக்கும் சத்தையாகிய ஜாதி பரமாம்.

[உ] ஒன்பது திரவியங்களிலுமுள்ள திரவியத்துவவடிவம், அநேக கர்மங்களிலுள்ள கர்மத்துவம், இருபத்துநான்கு குணங்களிலுள்ள குணத்துவம் இவைமுதலிய ஜாதி அபரமாம்.

இப்படி நியாயமதத்தில் பேதத்தோடு ஜாதியின் இலக்ஷணம் சொல்லப்பட்டிருக்கின்றது.

(ச) சையோக விபாகங்களுக்கு எது அசமவாயிகாரணமோ அதன் சஜாதீயத்தைக் கர்ம மென்பர். அதனையே கிரியை யென்றுங் கூறுவர். இரண்டு கபாலங்களுக்குத் தங்கள் சையோக விபாகத்தின்பொருட்டுச் சேஷ்டை யுண்டாகின்றது. அது இரண்டு கபாலங்களின் சையோக விபாகத்தின் பொருட்டுச் சேஷ்டையுண்டா

யங்களின் அர்த்தமாகிய ஜீவப்பிரஹ்மஐக்கியத்தை அநுசந்தித்தல் *கஎச. சிரவணமாம். "ஜாக்கிரத்தில் வேத்தியங்களாகிய சப்தஸ்பரிசமுதலிய வைகள்" என்னும் மூன்றாவது சுலோகமுதல் "இப்படிப் பராத்மா

கின்றது. அது இரண்டு கபாலங்களின் சையோகவிபாகத்திற்கு அசமவாயிகாரணமாம். ஏனெனின், காரியத்தின் சமவாயி (உபாதான) காரணத்திற்குச் சம்பந்தமுடையதாய்க் காரியத்தை உண்டாக்குவது அசமவாயி யெனப்படும். எதன் சொரூபத்தில் காரியம் பிரவேசிக்கின்றதோ அது சமவாயிகாரணமாம். இரண்டு கபாலங்களினது சையோக விபாகங்களின் சமவாயிகாரணம் இரண்டு கபாலமாம். அவற்றுள் சமவாயசம்பந்தத்தால் இரண்டு கபாலங்களின் சேஷ்டையிருக்கின்றது. அவற்றின் (கபாலங்களின்) காரியம் சையோக விபாகங்களை உண்டாக்குவதாம். ஆகையால் இரண்டு கபாலங்களின் சேஷ்டை அவற்றின் சையோக விபாகக்களுக்கு அசமவாயிகாரணமாம். இப்படி மற்ற நூல்முதலியவற்றின் சையோகவிபாகங்களிலும் தம் உபாதானகாரணத்தின் சேஷ்டையே அசமவாயிகாரணமாம்.

அந்தச் சேஷ்டையின் சஜாதீயம் அதாவது சமானஜாதியுடையது வேறு சேஷ்டையாம். அந்தச் சேஷ்டைக்குக் கர்ம மென்றும் கிரியை யென்றும் பெயராம்.

இந்த லக்ஷணத்தின் பரீக்ஷையாவது:—சையோகவிபாகமோ தாமுமாம். அவை அவற்றின்காரணமன்று. அவற்றின் காரணமோ கபாலங்களுமாம். ஆனால் அவை அசமவாயிகாரணமாகாமல் சமவாயிகாரணமாகின்றன. நீலபடத்தின் நீலநிறமாகிய குணத்திற்கு அசமவாயிகாரணம் நூலின் நீலநிறமாகிய குணமாம். கடத்தின் அசமவாயிகாரணம் கபாலசையோகமாம். அது சையோகவிபாகங்களுக்கு அசமவாயிகாரணமாகாது, குணத்திற்கும் கடத்திற்கும் அசமவாயிகாரணமாம். ஆகையால் சையோகவிபாகங்களினது அசமவாயிகாரணத்தின் சஜாதீயம் கர்மமாம் என்னும் கர்மத்தின் இலக்ஷணம் தோஷமில்லாததாம்.

அந்தக் கர்மம் எழுதல் வீழ்தல் வளைதல் நிமிர்தல் போகுதல் என ஐந்துவகையாமென்று நையாயிகர் கிரியையின் இலக்ஷணத்தை அறிவித்திருக்கின்றனர். வேதாந்தமதத்தில் எது செய்யப்பட்டிருக்கின்றதோ அது கர்மமாம். அக்கர்மம் காயிகம் வாசிகம் மானஸிகம் என மூன்றுவகையாம். அல்லது வசனம் ஆதானம் கமனம் இரதிபோகம் மலத்தியாகம் என ஐந்துவகையாம். அதுவே கிரியையாம். மற்றக் கிருஷிவாணிஜ்யமுதலிய கிரியைகள் அவற்றில் அடங்கியனவாம்.

* கஎச. அங்கி அங்கபேதத்தால் சிரவணம் இரண்டுவகையாம். அவற்றுள்,

(க) குருமுகமாகக் கேட்கும் மகாவாக்கிய உபதேசம் (சுரோத்திரசையோகரூப) முதலாவதாம்.

(உ) தாற்பரியத்தை நிச்சயித்தலிற் கூறப்பட்டிருக்கும் ஆறு இலிங்கமாகிய யுக்திகளால் வேதாந்த (உபநிஷத்) வாக்கியங்களுக்கு அத்விதீயப் பிரஹ்மத்தில் தாற்பரியத்தை நிச்சயித்தலாகிய பலத்தை (அவதியை) உடையதான வேதாந்தவாக்கியங்களின் விசாரம் இரண்டாவதாம். அவற்றுள், ஞானத்திற்குக் காரணம் முதலாவது; பிரமாணகதசந்தேகத்தை நிவிருத்திப்பது இரண்டாவது. முதல் சிரவணம் மேல் காட்டப்பட்டிருக்கின்றது. இரண்டாவது சிரவணத்தைத் திருப்திதீபத்தின் க0௧-வது சுலோகத்திற் காண்க.

வாகிய பிரஹ்மம் அபராத்மாவாகிய ஜீவனென்னும் இருவரின் ஐக்கியம் சம்பவித்தலால் " என்னும் சந-வது சுலோகம்வரையிலுள்ள கிரந்தசமூகத்தாற் சொல்லியவிதமாகிய யுக்தியினால் சிரவணஞ்செய்த அர்த்தத்தைப் பதியச்செய்யும் ஞானம் *கஎரு. மனனம் (சிந்தனம்) எனப்படும். (நிங)

உ. நிதித்தியாசனத்தின் லக்ஷணம்.

[நிச] ताभ्यां निर्विचिकित्सेऽर्थे चेतसः स्थापितस्य यत् ।
एकतानत्वमेतद्धि निदिध्यासनमुच्यते ॥ ५४ ॥

(அ·கை.)

இப்போது நிதித்தியாசனத்தைக் கூறுகின்றார்:—

ताभ्यां निर्विचिकित्से अर्थे स्थापितस्य चेतसः यत् एकतानत्वं एतत् निदिध्यासनं उच்यते हि ॥

(சு-ம்.)

அவற்றால் சந்தேகமற்ற அர்த்தத்தில் ஸ்தாபிக்கப்பட்ட சித்தத்தின் ஒருமை எதுவோ அது இந்த *கஎசு. நிதித்தியாசன மென்று சொல்லப்படுகின்றது.

(வி-ம்)

முற்கூறிய சிரவணமனனங்களால் சந்தேகம்நீங்கிய ஜீவப்பிரஹ்ம ஐக்கியமாகிய அர்த்தத்தில் ஸ்தாபிக்கப்பட்ட (*கஎஎ. தாரணை யுடைய)சித்தத்தின் ஒருமை அதாவது ஒருவஸ்துவின் (பிரஹ்மாத்ம ஐக்கியத்தின்) வடிவமாகிய விருத்தியின் பிரவாகமுடைமை எதுவோ அது இந்த நிதித்தியாசன மெனப்படும். இங்கே (மூலத்தில் உள்ள) एकतानत्वं என்னுஞ்

---

*கஎரு. திருப்திதீபத்தின் ௧௦௨-வது சுலோகத்திற் காண்க.

*கஎசு. அநாத்மாகாரமான விஜாதீயப்பிரத்தியயமாகிய விருத்தியின் திரஸ்காரபூர்வக ஆத்மாகார சஜாதீயப்பிரத்தியயத்தின் பிரவாகரூபம் நிதித்தியாசனமாம். இதனையே அநாத்மாகாரவிருத்தியின் மறைப்பில்லாத பிரஹ்மாகாரவிருத்தியின் நிலை என்பர். நிதித்தியாசனத்தைத் திருப்திதீபத்தின் ௧௦௫-௧௨௯-வது பரியந்த சுலோகங்களிற் காண்க.

*கஎஎ. " சித்தம் யாதேனும் ஒரிடத்தில் சம்பந்தித்தல் தாரணையாம்" என்று யோகசூத்திரத்தில் பதஞ்சலிபகவான் சொல்லியிருக்கின்றார். முதலில் தாரணை யுண்டாய்ப் பின் தியான முண்டாகின்றது.

இதனால் தாரணையுடைய சித்த மெனப்பட்டது. இதன் விசேஷம் சித்திரதீபத்தின் உ௮௦-வது சுலோகத்தின் விளக்கவுரையிற் காண்க.

சொல்லானது "அந்தக்கரணவிருத்தியாகிய பிரத்தியயத்தின் ஏகதானத்வம் (ஒருநிலைமையுடைமை) தியானமாம்." என்று யோகசாஸ்திரத்தில் பிரசித்தமாம் என்பதை அறிவிக்கின்றது. (ருச)

க ரு. சமாதியின் சொரூபமும், அது . . . னேத்தரமும்,
கீதையின் பிரமாணமும்.

[ருரு] ध्यातृध्याने परित्यज्य क्रमाद्ध्येयैकगोचरम् ।
निवातदीपवच्चित्तं समाधिरभिधीयते ॥ ५५ ॥

(அ-கை.)

அந்த நிதித்தியாசனத்தின் பரிபாக அவஸ்தையாகிய சமாதியைக் கூறுகின்றார்:—

ध्यातृध्याने क्रमात् परित्यज्य ध्येयैकगोचरं निवातदीपवत् चित्तं समाधिः अभिधीयते ॥

(சு-ம்.)

தியானிப்பவன் தியானமென்னு மிரண்டையும் கிரமமாக விடுவதனால் தியானிக்கப்படும் வஸ்து ஒன்றனையே விஷயஞ்செய்யும் காற்றில்லாத தீபம் போன்ற சித்தமானது சமாதி யென்று சொல்லப்படுகின்றது.

(வி-ம்)

நிதித்தியாசனத்தில் முதலில் (அபக்குவதசையில்) *கஎஅ. தியாதா, *கஎகூ. தியானம், *கஅ0. தியேயம் என்னு மிம்மூன்று திரிபுடிகளும் தோற்றுகின்றன. அவற்றுள், சித்தமானது எப்போது அப்பியாசவசத்தால் தியானிப்பவன் தியான மென்னு மிரண்டையும் கிரமமாக விட்டுத் தியானிக்கப்படுபொருளாகிய தியேயம் (பிரஹ்மம்) ஒன்றையே விஷயஞ் செய்வதாகின்றதோ அப்போது அது *கஅக. சமாதி யென்று சொல்லப்

* கஎஅ. தியானத்தின் கர்த்தா (சாபாஸ அந்தக்கரணம்) தியாதாவாம்.

* கஎகூ. தியேயவடிவமாகிய சித்தவிருத்தியின் பிரவாகம் தியானமாம்.

* கஅ0. தியானம் செய்யத்தக்கதாகிய தியானவிஷயமான பிரஹ்ம மெதுவோ அது தியேயமாம்.

* கஅக. இது சமாதியின் சொரூபமாம். சமாதியின் இலக்ஷணத்தைச் சித்திர தீபத்தின் உஅ0-வது சுலோகத்தின் டிப்பணத்திற் காண்க.

படும். அதில் (சித்தத்தின் சமாதித்தன்மையில்) திருஷ்டாந்தம்:—*கஅ௨. வாயுவில்லாத இடத்தில் இருக்கும் தீபம் நிச்சலமாயிருத்தல்போல நிச்சலமாகிய ஒரே ஜ்ஞேயவடிவமா யிருக்கும் சித்தம் சமாதியா மென்பது பொருள். (ருரு)

[ருசு] वृत्तयस्तु तदानीमज्ञाता अप्यात्मगोचराः ।
स्मरणादनुमीयंते व्युत्थितस्य समुत्थितात् ॥ ५६ ॥

(அ-கை.)

அப்படியானால் சமாதியில் விருத்திகள் தோற்றாமையால் அவைகள் ஜ்ஞேயம் ஒன்றையே விஷயஞ்செய்யு மென்பதும் நிச்சயிக்கக்கூடியதன்றென்று ஆசங்கித்துச் சமாதிகாலத்தில் விருத்திகளிருப்பது அநுமானப்பிரமாணத்தால் அறியப்படுதலால் விருத்திகள் ஜ்ஞேயத்தை விஷயஞ் செய்வது நிச்சயிக்கக்கூடியதன்றெனலாகாதெனக் கூறுகின்றார்:—

आत्मगोचराः वृत्तयः तु तदानीं अज्ञाताः अपि व्युत्थितस्य समुत्थितात् स्मरणात् अनुमीयन्ते ॥

(சு-ம்.)

ஆத்மாவை விஷயஞ்செய்வனவாகிய விருத்திகளோ அப்போது (சமாதிகாலத்தில்) அறியப்படாதனவாயிருக்கினும் சமாதியினின்றும் விழித்தவனது செவ்வையாயுண்டாகிய நினைவால் அநுமிக்கப்படுகின்றன.

(வி-ம்)

* கஅ௩. ஆத்மாவை விஷயஞ்செய்யும் விருத்தி அந்தச்சமாதிகாலத்தில் தோற்றாதிருந்தாலும் சமாதியினின்றும் விழித்த புருஷனுக்கு "இவ்வளவுகாலம்வரையிலும் நான் சமாதியில் நிலைத்திருந்தேன்" என்று

---

* கஅ௨. அக்கினியின் உபாதானகாரணம் வாயுவாம். அதனால் அக்கினியின் உற்பத்தி ஸ்திதி நாசங்கள் வாயுவின் அதீனமாம். ஆகையால் வாயு முழுதுமில்லாவிட்டாலும் தீபம் நிலைக்காது. இதனால் அசைவுவடிவமாக வாயுவில்லாததும் சூக்ஷ்ம (அசைவற்ற) வடிவமாக வாயுவுள்ளதுமாகிய அறைமுதலிய இடங்களில் தீபம் அசையாதிருக்கின்றது. அதுபோலச் சமாதியிலும் அந்தக்கரணம் முழுதுமில்லாவிட்டால், சரீரம் நிலையாமல் விழுந்துவிடும். ஆகையால் மனம் புத்தி சித்தம் அகங்காரமென்னும் விருத்திகளை விட்டுச் சூக்ஷ்ம (மூலாந்தக்கரண) வடிவமாகச் சமாதியில் அந்தக்கரணம் நிலைத்திருக்கின்றது.

* கஅ௩. பிரஹ்மத்திற்கு அபின்னமாகிய பிரத்தியகாத்மா.

செவ்வையாக உண்டாகும் நினைவால் *கஅச. அநுமிக்கப்படுகின்றது. யாது யாது நினைக்கப்படுகின்றதோ அது அது முன் அநுபவிக்கப் பட்டதா மென்னும் வியாப்தி உலகத்தில் சித்தித்திருத்தலால் என்பது பொருள். (நிகூ)

[நிஎ] वृत्तीनामनुवृत्तिस्तु प्रयत्नात्प्रथमादपि ।
अदृष्टासकृदभ्याससंस्कारसचिवाद्भवेत् ॥ ५७ ॥

(அ·கை.)

அப்போது (சமாதிகாலத்தில்) விருத்திகளை உண்டாக்கும் முயற்சி இல்லாமையால் அவ்விருத்திகளின் அநுவிருத்தி எப்படி யுண்டாகுமென் றாசங்கித்து அந்தக்காலத்தில் முயற்சி இல்லாவிடினும் அதிருஷ்டமாகிய புண்ணியமுதலிய சாதனங்களோடுகூடிய சமாதிக்கு முந்தியகாலத்து முயற்சியினால் விருத்தியின் அநுவிருத்தி யுண்டாகின்றதெனக் கூறுகின் றார்:—

वृत्तीनां अनुवृत्तिः तु प्रथमात् अपि प्रयत्नात् अदृष्टासकृदभ्याससंस्कारसचिवात् भवेत् ॥

(சு-ம்.)

விருத்திகளின் *கஅடு. அநுவிருத்தியோ அதிருஷ்டம் அடிக்கடி அப்பியசித்தலின் சம்ஸ்கார மென்பவற்றோடு கூடிய முற்காலத்து முயற் சியா லுண்டாகின்றது.

(வி-ம்.)

* கஅசு. அசுக்கிலகிருஷ்ண மென்னும் யோகிகளது புண்ணிய விசே

---

* கஅச இங்கே இது அநுமானமாம்:—சமாதிகாலத்தில் விருத்திக ளிருக்கின் றன; எழுந்தகாலத்தில் அந்தச் சமாதியின் நினைவு உண்டாகின்றமையால்; நித்திரை யைப்போல; எது எது நினைக்கப்படுகின்றதோ அது அது முன் அநுபவிக்கப்பட்ட தாம்; "அவன் என்பிதா" என்பதுபோல.

* கஅடு. பிரஹ்மாகாரப்பிரவாகரூபமாகிய ஒருவிருத்திக்குப் பின் மற்றொருவிருத் தியிருத்தல் எதுவோ அது விருத்தியின் அநுவிருத்தி யெனப்படும். தண்டத்தால் குலாலசக்கரத்தைத் திருப்புதலாகிய முயற்சிக்குப் பின்னும் குலாலசக்கரம் தானே திரும்புதலுண்டாகின்றது. அதுபோல முற்காலத்து முயற்சிமுதலியவற்றால் விருத்தி யின் அநுவிருத்தி யுண்டாகின்றது.

* கஅசு. "அசுக்கிலகிருஷ்ணகர்மம் யோகிகளுக்காம். மூன்றுவிதகர்மம் மற்ற ஜீவர்களுக்காம்" என்று பதஞ்சலிபகவான் யோகசூத்திரத்தில் சொல்லியிருக்கின்றார். அசுக்கிலகிருஷ்ணகர்மம் யோகிகளுக்காம். சுக்கிலகர்மம், கிருஷ்ணகர்மம், சுக்கில

க்ஷமும், அடிக்கடி சமாதியின் அப்பியாசத்தால் உண்டாகிய * கஅஎ. பாவனை என்னும் சம்ஸ்காரவிசேஷமுமாகிய இரண்டு துணைக்காரணங்களோடும் கூடியிருக்கும் சமாதிக்கு முந்தியகாலத்துப் * கஅஅ. பிரயத்தனத்தால் பிரஹ்மமாகிய ஞேயம் ஒன்றனையே விஷயஞ்செய்யும் விருத்தியின் பிரவாகரூபமாகக் கலந்திருத்தலாகிய அநுவிருத்தி யுண்டாகின்றது. (நிஎ)

[ருஅ] यथा दीपो निवातस्थ इत्यादिभिरनेकधा ।
भगवानिममेवार्थमर्जुनाय न्यरूपयत् ॥ ५८ ॥

(அ-கை.)

அப்படியானால் இந்தச் சமாதி பூர்வாசாரியர்களால் நிரூபிக்கப்பட்டிருப்பதாகக் காணப்படவில்லையேயென் றுசங்கித்து எல்லோருக்கும் குருவாகிய ஸ்ரீபுருஷோத்தமராகிய கிருஷ்ணபகவானால் நிரூபிக்கப்பட்டிருத்தலால் பூர்வாசாரியர்களால் நிரூபிக்கப்பட்டிருப்பதாகக் காணப்படவில்லையென்ப தில்லையெனக் கூறுகின்றார்:—

"यथा निवातस्थः दीपः" इत्यादिभिः भगवान् अनेकधा इमम् एव अर्थं अर्जुनाय न्यरूपयत् ॥

(சு-ம்.)

எப்படிக் காற்றில்லாத இடத்திலுள்ள தீபமிருக்கின்றதோ என்னு மிவைமுதலியவற்றால் அநேகவிதமாகப் பகவானனவர் இதே அர்த்தத்தை அர்ச்சுனனுக்கு நிரூபித்தார்.

(வி-ம்.)

"காற்றில்லாதவிடத்திலுள்ள தீபம் அசையாததுபோல என்பது ஆத்மாவின் யோகத்தி (சமாதியி)ன்பொருட்டுப் பொருந்தும் யோகியின் ஏகாக்கிரமாகிய சித்தத்தின் உவமானத்தை நினைப்பூட்டி (அறிவித்து) இருக்கின்றது." * கஅகூ. என்னும் சுலோகத்தால் அநேகவிதமாக

---

கிருஷ்ண இருவடிவமாகியகர்மம் என்னும் இவை அந்நிய ஜீவர்களுக்காம். இங்கே அசுக்கில கிருஷ்ண மென்பது சகாமமாகிய சுபாசுபகர்மங்களுக்கு விலக்ஷணமாய் யோகாநந்தத்திற்குக் காரணமாயுள்ள புண்ணியவிசேஷத்திற்காம். சுக்கில மென்பது சுவர்க்கமுதலிய விஷயசுகத்திற்கேதுவாகிய சகாம சுபகர்மத்திற்காம். கிருஷ்ண மென்பது நரகமுதலியதுக்கத்திற் கேதுவாகிய அசுபமாகிய பாபகர்மத்திற்காம்.

* கஅஎ. அநுபவத்தினாலுண்டாகியதாய் ஸ்மிருதிக்கு ஏதுவாகிய சம்ஸ்காரம் பாவனை எனப்படும்.

* கஅஅ. உற்சாகவிசேஷத்திற்குப் பிரயத்தன மென்று பெயர். அதனையே முயற்சி என்றும் கூறுவர்.

* கஅகூ. கீதையின் சு-வது அத்தியாயத்தின் கசு-வது சுலோகத்திற் காண்க.

ஞானம், ஐசுவரியம் * கக௦. முதலிய ஆறுபக(ஐசுவரிய)த்தோடுகூடிய பகவான் இதே சமாதி என்னும் அர்த்தத்தை அர்ச்சுனனாகிய சிஷ்யனுக்குச் சொன்னார். (கி அ)

௨. சமாதியின் அவாந்தரபலம்.

[௫கூ] अनादाविह संसारे संचिताः कर्मकोटयः ।
अनेन विलयं यांति शुद्धो धर्मो विवर्धते ॥ ५९ ॥

(அ·கை.)

இந்தச்சமாதியின் * கக௧. அவாந்தரபலத்தைக் கூறுகின்றார்:—

अनादौ इह संसारे संचिताः कर्मकोटयः अनेन विलयं यांति शुद्धः धर्मः विवर्धते ॥

(சு-ம்.)

அநாதியில் இந்தச்சம்சாரத்தில் சஞ்சிதங்களாகிய கர்மகோடிகள் இதனால் (சமாதியினால்) இலயம் அடைகின்றன; சுத்தமாகிய தர்மமானது விருத்தியாகின்றது.

(வி-ம்.)

அநாதிகாலத்து இந்தச் சம்சாரத்தில் புண்ணியபாவங்களாகிய கர்மகோடிகள் அதாவது அளவில்லாத கர்மங்கள் சம்பாதிக்கப்பட்டிருக்கின்றன. அவை இந்த நிருவிகற்பசமாதியினால் (* கக௨. ஞானவாயிலாக) விலய (நாச) த்தை அடைகின்றன. “ क्षीयंते चास्य कर्माणि तास्मिन् दृष्टे परावरे அந்

* கக௦. முதலிய எனுஞ் சொல்லால் தர்மம் கீர்த்தி இலக்ஷ்மி வைராக்கியம் என்பவை கொள்ளப்படும். (கி அ)

*கக௧. பரமப்பிரயோஜனத்திற்கு எது வாயிலோ (சாதனமோ) அது அவாந்தரப்பிரயோஜனமாம்.

* கக௨. இராமகீதை தேவிகீதைமுதலிய புராணப்பிரசங்கங்களில் நிதித்தியாசனத்தின் பரிபாக அவஸ்தையாகிய சமாதியின் பலம் பிரஹ்மசாக்ஷாத்காரமாம். அதனால் அஞ்ஞானத்தாலாகிய ஆவரணம் நிவிருத்தியாகின்றது. அவ்வாசிரயம் நிவிருத்தியாகவே அநேகசஞ்சிதகர்மங்கள் நிவிருத்தியாகின்றன. “அந்தப் பரமாத்மாவைக் கண்டகாலத்தில் இந்தப் புருடனது கர்மங்கள் நாசமாகின்றன” என்னும் சுருதியினாலும் பிரஹ்மசாக்ஷாத்காரமுண்டாகிய பின் கர்மநிவிருத்தி கேட்கப்படுகின்றது. ஆகையால் இங்கே ஞானவாயிலாக என்று சொல்லியிருக்கிறது.

தப் * கக௬. பராவரமாகிய பிரஹ்மத்தைப் *கக௪. பார்க்குமிடத்து இந்தப் புருஷனது * கக௫. கர்மங்கள் க்ஷயமாகின்றன" என்னும் சுருதியாலும், "ज्ञानाग्निः सर्वकर्माणि அர்ச்சுன! ஞானக்கினி சர்வ கர்மங்களையும் பஸ்மமாக்குகின்றது" என்னும் கீதாஸ்மிருதியாலும் விலாசத்தோடு (ஸ்தூல சூக்ஷ்ம காரியசமூகங்களோடு) கூடிய அவித்தையை நிவர்த்திக்கும் சாக்ஷாத்காரத்துக்குப் * கக௬. பிரதிபந்தத்தின் நிவிருத்திவாயிலாகச் சாதன (காரண)மாகிய சுத்ததர்மம் (புண்ணியவிசேஷம்) விருத்தியை யடைகின்றது. இது வெளிப்படை. (௫௯)

[௬0] धर्ममेघमिमं प्राहुः समाधिं योगवित्तमाः ।
वर्षत्येष यतो धर्मामृतधाराः सहस्रशः ॥ ६० ॥

(அ-கை.)

சமாதியால் தர்மம் விருத்தியாகின்றதென்பதில் பிரமாணம் யாதெனக் கூறுகின்றார்:—

योगवित्तमाः इमम् समाधिं धर्ममेघं प्राहुः ॥

(சு-ம்)

யோகத்தையுணர்ந்தவர்கள் இந்தச் சமாதியைத் தர்மமேகமென்று சொல்லுகின்றனர்.

---

* கக௩. பர அதாவது பிரஹ்மலோகமுதலிய புநராவிருத்தியுடைய பதங்கள்; அவர அதாவது எதனினும் தாழ்ந்தனவா யிருக்கின்றவோ அப்படிப்பட்ட பிரத்தியகபின்ன பரப்பிரஹ்மம் பராவர மெனப்படுகின்றது.

* கக௪. அபரோக்ஷமாக அறிந்தகாலத்து. திருஷ்டி (பார்வை) என்பது அறிதற்காம். அந்த ஞானத்தின் விஷயம் திருஷ்டம் (பார்க்கப்பட்டது) எனப்படும்.

* கக௫. ஞானியின் பிராப்தகர்மம் போகத்தால் நாசமாகின்றது. ஞானத்திற்குப் பின் உண்டாகும் ஆகாமியகர்மம் "நான் அகர்த்தா அபோக்தா அசங்கன்" என்னும் நிச்சயத்தின் பலத்தால் தாமரையிலையைத் தண்ணீர் பற்றாததுபோல ஞானியின் சொரூபத்தைப் பற்றாது. ஆகையால் பரிசேஷத்தால் அநேக ஜன்மங்களில் சம்பாதிக்கப்பட்ட சஞ்சிதகர்மத்திற்கே தத்துவஞானத்தால் நாசமுண்டாகின்றது.

* கக௬. சித்தத்தின் மலவிக்ஷேப தோஷமுதலியவடிவப் பிரதிபந்தத்தின்.

(வி-ம்.)

யோகத்தை மிகவும் உணர்ந்தவர்களாகிய பிரஹ்மசாக்ஷத்காரமுடைய வர்கள் இந்த நிருவிகற்பசமாதியைத் தர்மமேக மென்று சொல்லியிருக் கின்றனர் என்பது * ககூஎ. வெளிப்படை.

(அ-கை.)

அந்தச் சமாதி தர்மமேக மென்பதை * ககூஅ. உபபாதனஞ் செய்கின் றார்:—

यतः एषः धर्मामृतधाराः सहस्रशः वर्षति ॥

(சு-ம்.)

எதனால் இது(சமாதி) ஆயிரக்கணக்காய்த் தர்மமாகிய அமிர்ததாரை களை வருஷிக்கின்றதோ (அதனால்)

(வி-ம்.)

இந்தச்சமாதி ஆயிரமாயிரமாகத் * ககூகூ. தர்மமாகிய அமிர்ததாரை யை வருஷிக்கின்றது; சமாதியின் "क्षणमेकं ऋतुशतस्यापि ஒரு க்ஷணம் இருது (யஞ்ஞம்)நூறின் தர்மமாம்" என்னும் சுருதியினால். ஆதலால் இந்தச் சமா தியைத் தர்மமேக மென்றனர் என்று முற்பாதியோடு அந்வயம் (சூ0)

கூ. சமாதியின் பரமப்பிரயோஜனம்.

[சூக] अमुना वासनाजाले निःशेषं प्रविलापिते ।
समूलोन्मूलिते पुण्यपापाख्ये कर्मसंचये ॥ ६१ ॥

---

* ககூஎ. பிரசங்கியானம் (சித்தத்தின் ஏகாக்கிரத்தன்மை)இருந்தும் எப்போது இந்தப் பிராஹ்மணன் (பிரஹ்மமாதற்கு இச்சையுள்ள முமுக்ஷு) விரக்தனுகின்று னோ அதாவது அதனாலும் (சித்த ஏகாக்கிரத்தாலும்) சிறிது சித்திமுதலியவற்றைப் பிரார்த்தி (இச்சி)க்கிறதில்லையோ, அப்போது அவனுக்கு விவேகக்கியாதி (சொரூப சாக்ஷாத்காரம்)உண்டாகின்றது. அதனால் இவனுக்குத் தர்மமேக மென்னும் சமாதி சித்திக்கின்றது. இப்படி யோகசாஸ்திரத்தின் நான்காவது கைவல்யபாதத்தின் இருபத்தெட்டாவது சூத்திரத்தில் பிரசித்தமாயிருக்கிறது.

* ககூஅ. பூர்வபக்ஷமுதலிய விஷயங்களுக்குப் பரஸ்பர ஏதுவுடையதாதல் முதலியவற்றை விஸ்தாரபூர்வகமாய் யுக்தியோடு உச்சரித்தல், அல்லது விவாதஞ் செய்து சித்திக்கச்செய்தல் உபபாதனம் எனப்படும்.

* ககூகூ. புண்ணியவிசேஷமாகிய முற்கூறிய தர்மத்தால் ஞானிக்கு உத்தம லோகத்தையடைதல்முதலிய வேறுபல முண்டாகாது; ஆனால் ஞானத்திற்கு முன் ஞான உற்பத்தியில் பிரதிபந்தம் நிவிருத்தியாகின்றது. இரண்டாவது அந்த ஞானி யைத் தரிசித்தல், சம்பாஷித்தல், சேவித்தல் என்பவற்றால் உலகத்தாருக்குப் பாப நிவிருத்தியும் விரும்பியபடிசித்தித்தல்முதலியவைகளு முண்டாகின்றன.

(அ-கை.)

இப்போது சமாதியின் * உ00. பரமப்பிரயோஜனத்தைக் கூறுகின்றார்:—

अमुना वासनाजाले निःशेषं प्रविलापिते पुण्यपापाख्ये कर्मसंचये समूलोन्मूलिते ॥

(சு-ம்.)

இதனுல் (சமாதியினுல்) வாசனைக்கூட்டங்கள் முழுவதும் நாசமாக்கப்பட்டும், புண்ணியபாபங்களென்னும் கர்மக்கூட்டங்கள் வேரோடு நாசமாகியும்.

(வி-ம்.)

இந்தச் சமாதியினுல் அகங்காரம்(நானெனல்)மமகாரம் (எனதெனல்) கர்த்திருத்வமுதலிய அபிமானத்திற்கு ஏதுவாகிய ஞானத்தினும் விரோத சம்ஸ்காரசமூகமாகிய வாசனைக்கூட்டம் முழுவதும் நாசமடைந்தும், புண்ணியபாபமென்னும் கர்மக்கூட்டம் வேரோடு * உ0க. நாசமாகியும்.(சுக)

ச. பிற்சுலோகங்களின் பலித்த அர்த்தத்தைக் கூறுதல் சுஉ-சுரு.
க. வாக்கியத்தால் அபரோக்ஷஞான முண்டாதல்.

[சுஉ] वाक्यमप्रतिबद्धं सत्प्राक्परोक्षावभासिते ।
करामलकवद्बोधमपरोक्षं प्रसूयते ॥ ६२ ॥

(அ-கை.)

பலிதத்தைக் கூறுகின்றார்:—

वाक्यं अप्रतिबद्धं सत् प्राक् परोक्षावभासिते करामलकवत् अपरोक्षं बोधं प्रसूयते ॥

(சு-ம்.)

வாக்கியமானது பிரதிபந்தமில்லாததாய் முன் பரோக்ஷமாக அறியப்பட்ட (தத்துவத்தில்) கரத்திலுள்ள ஆமலகத்தை அல்லது அமலகத்தைப் போல அபரோக்ஷமாகிய ஞானத்தை உண்டாக்குகின்றது.

* உ00. எதைவிட அதிகமாக வேறு பிரயோஜனம் உண்டாகிறதில்லையோ அப்படிப்பட்ட முக்கியப்பிரயோஜனம் (பலம்) பரமப்பிரயோஜனமாம்.

* உ0க. இந்தச் சுலோகத்திற்குப் பிற்சுலோகத்தோடு சம்பந்த முண்டு.

(வி-ம்.)

"தத்துவமஸி" முதலிய மகாவாக்கியங்கள் கர்மவாசனை என்னும் பிரதிபந்தங்களில்லாதனவாய் முன் பரோக்ஷத்தன்மையால்பிரகாசிக்கப்பட்ட தத்துவமான பிரத்தியக்காகிய பிரஹ்மத்தில் கரத்திலுள்ள * உ0உ. ஆமலகத்தை (நெல்லிக்கனியை) அல்லது * உ0ஙு. அமலகத்தை (சுத்தமாகிய நீரை) விஷயஞ்செய்யும் அபரோக்ஷஞானத்தைப்போல் அபரோக்ஷத்தன்மையால் தத்துவத்தைப் பிரகாசிப்பித்தலில் சாமர்த்தியமுள்ள ஞானத்தை உண்டாக்குகின்றன. (கூஉ)

உ. பரோக்ஷஞானத்தின் பயன்.

[கூங] परोक्षं ब्रह्मविज्ञानं शाब्दं देशिकपूर्वकम् ।
बुद्धिपूर्वकृतं पापं कृत्स्नं दहति वह्निवत् ॥ ६३ ॥

(அ-கை.)

இப்போது பரோக்ஷஞானத்தின் பலத்தைக் கூறுகின்றார்:—

देशिकपूर्वकं शाब्दं परोक्षं ब्रह्मविज्ञानं बुद्धिपूर्वकृतं कृत्स्नं पापं वह्निवत् दहति ॥

(சு-ம்.)

குருமுகமாக அடையப்பட்டதும் சப்தத்தாலாகியதுமாகிய பரோக்ஷ (பிரத்தியக்ஷமல்லாத) பிரஹ்மஞானம் புத்திபூர்வகமாகச் செய்யப்பட்ட எல்லாப் பாபங்களையும் அக்கினியைப்போல எரிக்கின்றது.

(வி-ம்.)

பிரஹ்மநிஷ்டராகிய குருமுகமாக அடையப்பட்டதும், "தத்துவமஸி" முதலிய சாஸ்திரத்தினால் உண்டாகியதுமாகிய * உ0ச. பரோக்ஷப் பிரஹ்மஞானம் புத்தி * உ0ரு. பூர்வகமாகச் செய்யப்பட்ட சகல பாபங்களையும் அக்கினியைப்போலத் தகிக்கின்றது. (கூங)

---

* உ0உ. கையில் வைக்கப்பட்ட நெல்லிக்கனி எப்படி நாற்புறமும் அறியப்படுகின்றதோ அதுபோல.

* உ0ங. கையிலுள்ள நெல்லிக்கனி வெளிப்புறத்தில் அறியப்படுகின்றது, ஆனால் உட்புறம் அறியப்படுகிறதில்லை என்னும் அருசியால் இரண்டாவது அர்த்தம் (கையிலுள்ள தெளிவாகிய ஜலம்) கொள்ளப்பட்டது.

* உ0ச. திருப்திதீபத்தின் கக-வது சுலோகத்திற் காண்க.

* உ0ரு. தெரிந்து செய்ததைப்போன்ற அறியப்பட்ட அல்லது ஜன்மத்திற்குப்பின் ஞானத்திற்குமுன் செய்யப்பட்ட சகல பாபங்களையும்.

௬. அபரோக்ஷஞானத்தின் பயன்.

[௬௪] अपरोक्षात्मविज्ञानं शाब्दं देशिकपूर्वकम् ।
संसारकारणाज्ञानतमसश्चंडभास्करः ॥ ६४ ॥

(அ-கை.)

அபரோக்ஷஞானத்தின் பலத்தைக் கூறுகின்றார்:—

शाब्दं देशिकपूर्वकं अपरोक्षात्मविज्ञानं संसारकारणाज्ञानतमसः चंडभास्करः ॥

(சு-ம்.)

குருவினால் அடையப்பட்டதும் சாஸ்திரத்தினா லுண்டாகியதுமாகிய அபரோக்ஷமாகிய ஆத்மாவின் விஞ்ஞானம் சம்சாரத்திற்குக் காரணமாகிய அஞ்ஞானமென்னு மிருளிற்கு உக்கிரமாகிய சூரியனும்.

(வி-ம்.)

குருமுகமாக அடையப்பட்டதும் சாஸ்திரத்தினா லுண்டாகியதுமான * ௨0௬. அபரோக்ஷமாகிய பிரஹ்மாபின்ன ஆத்மாவின் சம்சயவிபரீதமில்லாத அபரோக்ஷஞானம் ஜன்மாதி சம்சாரத்திற்குக் காரணமாகிய அஞ்ஞானமென்னும் இருளிற்குச் சண்டபாஸ்கரனும் அதாவது மத்தியானகாலத்துச் சூரியனும். வெளியிலுள்ள இருளை மத்தியானகாலத்துச் சூரியன் நீக்குவதாவதுபோல (ஆத்மாவை விஷயஞ்செய்யும்) உள் இருளாகிய அஞ்ஞானத்தை முற்கூறிய (அபரோக்ஷ) ஞானம் நிவிருத்திப்பதாகின்றது. (௬௪)

௭. கிரந்தாப்பியாசத்தின் பயன்.

[௬௫] इत्थं तत्त्वविवेकं विधाय विधिवन्मनः समाधाय ।
विगलितसंसृतिबंधः प्राप्नोति परं पदं नरो न चिरात् ॥ ६५ ॥

(அ-கை.)

கிரந்த (இந்தப்பிரகரண) த்தினது அப்பியாசத்தின் (அடிக்கடி விசாரித்தலின்) பலத்தைக் கூறுகின்றார்:—

नरः इत्थं तत्वविवेकं विधाय विधिवत् मनः समाधाय विगलितसंसृतिबंधः । परं पदं न चिरात् प्राप्नोति ॥

---

* ௨0௬. திருப்திதீபத்தின் ௧௬-வது சுலோகத்திற் காண்க.

(சு-ம்.)

மனிதன் இப்படித் தத்துவவிவேகத்தைச் செய்து(அதனால்)விதிப்படி மனதை ஒருமைப்படுத்திச் சம்சாரபந்தத்தினின்றும் நீங்கியவனாய்த் தாமசமில்லாமல் (உடனே) மேலாகிய பதத்தை (மோக்ஷத்தை) அடைகிறான்.

(வி-ம்.)

புருஷனானவன் * உ0எ. முற்கூறியவிதமாகப் பிரஹ்மாத்மாவின் ஐக்கியமாகிய தத்துவத்தைப் பஞ்சகோசங்களினின்றும் வேறுபிரித்து அந்தத் தத்துவத்தில் * உ0அ. சாஸ்திரத்திற் சொல்லியபடி மனதை நிறுத்தி அபரோக்ஷஞானத்தால் சம்சாரபந்தத்தினின்றும் நீங்கியவனாய் எல்லாவற்றினு மதிக ஆநந்தமாகிய மோக்ஷத்தைத் தாமசமின்றி யடைகிறான். சத்திய ஞாநாநந்தவடிவமாகிய பிரஹ்மமே யாகிறான் என்பது பொருள். (சுரு)

பிரத்யக்தத்துவவிவேகமென்னும்

முதற்பிரகரணம்

முடிந்தது.

---

* உ0எ. பிரகரண முழுவதிலும் சொல்லப்பட்ட அத்தியாரோப அபவாதம் முதலியவற்றால்.

* உ0அ. ஐக்கியவிசாரம் லயசிந்தனமுதலிய உபாயங்களால் சகலப்பிரபஞ்சத்தையும் இல்லையென்று விசாரித்து "நான் பிரஹ்ம" மென்பதாக மனதை அந்தவடிவமாகச்செய்து.

ஓம்

தத்ஸத்ப்ரஹ்மணேநம:

# ஸ்ரீ பஞ்சதசி.

---

## உ. § பஞ்சமகாபூதவிவேகம்.

### இரண்டாம் பிரகரணம்.

" சிருஷ்டிக்குமுன் இது சத்தாக இருந்தது " என்னும் சுருதியின் அர்த்தத்தைச் சொல்லுதல் பூர்வகமாகப் பஞ்சமகாபூதவிவேகத்தின் பிரதிஞ்ஞை.

[௬௬] सदद्वैतं श्रुतं यत्तत्पंचभूतविवेकतः ।
बोद्धुं शक्यं ततो भूतपंचकं प्रविविच्यते ॥ १ ॥

(அ-கை)

"सदेव सोम्येदमग्र आसीदेकमेवाद्वितीयं சௌம்மியனே (பிரியமுள்ளவனே)! சிருஷ்டி (ஜகத்துற்பத்தி)க்குமுன்னே * க. இது (ஜகத்து) * உ. * ௩. ஒரே * ச. அத்விதீய * ரு. சத்துரூபப் * ௬. பிரஹ்மமாய் * எ. இருந்

---

§ பிரஹ்மத்தினின்றும் பஞ்சமகாபூதங்களின் விவேகம் அல்லது பஞ்சமகாபூதங்களினின்றும் பிரஹ்மத்தின் விவேகம் எதன்கண் செய்யப்படுகின்றதோ அது **பஞ்சமகாபூதவிவேகமாம்**

* க. ஆறு பிரமாணமுதலியவற்றால் காணப்படுகின்ற ஜகத்தானது முதலிற் காரணப்பிரஹ்மவடிவமாக விருந்தது; கடம் தனது உற்பத்திக்குமுன் மண்திரள் வடிவமாயிருத்தல்போல.

* உ. ஒருதன்மையாயிருத்தலால் சுவகதபேதமில்லாததாய்.

* ௩. " ஏவ " சப்தத்தின் அர்த்தமாகிய ஏகாரம் மற்றச் சம்பந்தங்களை நிஷேதிப்பதாகும். ஆகையால் ஏ என்பது சஜாதீயபேதமில்லாததாம்.

* ச. விஜாதீயபேதமில்லாதது **அத்விதீயம்.**

* ரு. மூன்றுகாலத்திலும் பாதமாகாதது **சத்தாம்.**

* ௬. மாயையும் அதன் காரியமுமாகிய எல்லாவற்றினும் அதிகவியாபகமாயிருத்தலால் நிரபேக்ஷவியாபகம் **பிரஹ்மமாம்.**

* எ. " இருந்தது " என்னுஞ் சொல்லால் பிரஹ்மத்திற்குப் பூதகாலத்தோடு கூடியதன்மை தோற்றுகின்றது. அது காலவாசனையோடுகூடிய சிஷ்யனுக்கு அறிவிக்கும்பொருட்டாகலின் துவைத மன்று. ௬0௩-வது சுலோகத்திற் காண்க.

தது ” என்னும் * அ. சுருதியால் ஜகத்தின் * கூ. உற்பத்திக்குமுன் ஜகத்திற்குக் காரணமாகிய எந்தச் சத்ரூப *கo. அத்விதியப் பிரஹ்மம் கேட்கப் பட்டிருக்கின்றதோ, அது வாக்கிற்கும் மனதிற்கும் * கக. விஷயமாகாததாயிருத்தலால் அந்தப் பிரஹ்மம் * கஉ. தானாகவே (இயல்பாகவே) அறியக்கூடியதன்று. ஆகையால் அந்தப் பிரஹ்மத்தின் * கங. காரியமாயிருத்தலால் அதன் உபாதிவடிவ பஞ்சபூதங்களின் விவேகவாயிலாக அந்தப் பிரஹ்மத்தை யறிவிக்கும்பொருட்டு * கச. உபோற்காதத்தன்மையால் பஞ்சபூதங்களின் விவேகத்தைப் பிரதிஞ்ஞை செய்கின்றார்:—

* அ. சாமவேதத்தின் சாந்தோக்கிய உபநிஷத்திலுள்ள கூ வது பிரபாடக (அத்தியாய) த்தில் சுவேதகேதுவென்னும் புத்திரனுக்கு உத்தாலகரென்னும் முனிவர் சொல்லியிருக்கின்றனர்.

* கூ. முதற்கணத்தோடுண்டாம் சம்பந்தத்திற்கு உற்பத்தி என்று பெயர்.

* கo. பிரளயகாலத்தில் மற்றப் பதார்த்தங்கள் பிரஹ்மத்தி லில்லையாயினும், சுத்தத்தினின்றும் சிருஷ்டி சம்பவியாமையாலும், “ மாயையைப் பிரகிருதி (உபாதானம்) என்றறிக ” என்னும் சுருதியாலும் மாயாசத்தி பிரஹ்மத்தி லிருக்கின்றது. ஆகையால் அந்த மாயாவிசிஷ்டத்திற்கு அத்விதீயத்தன்மை சம்பவியாது என்னும் சங்கைக்கு இது சமாதானம்:—சுழுத்திகாலத்தில் ஆத்மாவில் மித்தையாக அவித்தை இருக்கின்றது. அது தனது திருஷ்டியாலேனும், பிறர் திருஷ்டியாலேனும், அல்லது ஆறு பிரமாணங்களாலேனும் ஆத்மாவிற்கு வேறாகத் தோற்றுகிறதில்லை. ஆகையால் ஆத்மா அத்விதீயமாம். அதுபோலப் பிரளயத்திலும் மித்தையான மாயாசக்தி வேறாகத்தோற்றுகிறதில்லை. அக்காலத்தில் பிரஹ்மம் அத்விதீயமாம். சிருஷ்டிக்குப் பின்னும் சகல ஜகத்தும் அதில் ஆரோபிதமாம் (மித்தையாம்). ஆகையால் எப்போதுமே பிரஹ்மம் அத்விதீயமாம்.

* கக. பிரஹ்மம் ஜாதி, குணம், கிரியை, பெயர், சம்பந்தமுதலிய சகல தர்மங்களு மில்லாததாயிருத்தலால் மனதிற்கும் வாக்கிற்கும் விஷயமாகாததாம். பிரஹ்மத்தைச் சாஸ்திரம் இலக்ஷணையினாலே கூறுகின்றது; மகாத்மாக்களோ விருத்தி வியாப்தியினா லறிகின்றார்கள்.

* கஉ. விசாரித்தாலல்லாமல் கடமுதலியவற்றைப்போல அறியக்கூடியதன்று.

* கங. மண்ணின் காரியமாகிய கடம் மண்ணின் அந்வயவியதிரேகங்களோடு கூடியிருத்தலால் மற்ற நூல்முதலியவற்றினின்றும் தனது காரணமாகிய மண்ணை வேறுபிரித்தறிவிப்பதா யிருக்கின்றது. ஆதலால் உபாதியாம். இப்படியே சிலந்திப் பூச்சியின் நூலிலும் அறிக. அதுபோலப் பிரஹ்மத்தின் காரியமாகிய ஆகாயமுதலிய பஞ்சபூதங்களும் சச்சிதாநந்தப் பிரஹ்மத்தின் அந்வயவியதிரேகங்களோடு கூடியிருத்தலால் அசத்துமுதலியவற்றினின்றும் பிரஹ்மத்தை வேறுபிரித்தறிவிப்பனவாயிருக்கின்றன. ஆகையால் பிரஹ்மத்தி னுபாதியாய்ச் சொல்லப்படுகின்றன. அந்த உபாதிகளோடு பிரஹ்மத்திற்குத் தாதாத்மிய முண்டு. ஆகையால் அவைகளும் பிரஹ்மமும் ஒன்றற்கொன்று விவேகிக்கப்படுகின்றன.

* கச. சொல்லத்தக்கபொருளை மனதில் வைத்துக்கொண்டு அதன்பொருட்டு வேறொன்றைச் சொல்லுதல் உபோற்காத மெனப்படும். ஒருவனுக்கு மற்றொருவன் வீட்டினின்றும் மோர்வாங்கவேண்டியிருக்குமானால் அப்போது அவன் முதலிலே சென்று “ மோர்கொடு ” என்று கேட்குமிடத்து உலோபியாயுள்ளவன் மோர்கொ

यत् सत् अद्वैतं श्रुतं तत् पंचभूतविवेकतः बोद्धुं शक्यम् । ततः भूतपंचक प्रविविच्यते ॥

(சு-ம்.)

*எந்தச் சத்துவடிவ அத்வைதப்பிரஹ்மம் கேட்கப்பட்டிருக்கின்றதோ அது பஞ்சபூதவிவேகத்தால் அறியக்கூடியதாம். அதனால் பஞ்சபூதங்கள் (பிரஹ்மத்தினின்றும்)-மிருதியாக விவேசனம் செய்யப்படுகின்றன அதாவது பிரஹ்மத்தினின்றும் வேறுபிரித்தறிவிக்கப்படுகின்றன.* (க)

க. அபஞ்சீகிருத பஞ்சமகாபூதங்களின் குணத்தையும் காரியத்தையும் வர்ணித்தல் கூஎ-அஉ.

க. ஆகாயமுதலியவற்றின் குணங்களைக் கூறுதல் கூஎ-எக.

க. பூதங்களது குணங்களின் பெயரும் அவற்றின் சுருக்கமான யோசனையும்.

[உ] शब्दस्पर्शौ रूपरसौ गंधो भूतगुणा इमे ।
एकाद्वित्रिचतुःपंचगुणा व्योमादिषु क्रमात् ॥ २ ॥

(அ-கை.)

*அங்கு முதலில் ஆகாயமுதலிய பஞ்சபூதங்களுக்கும் குணத்தால் பேதத்தை (ஒன்றற்கொன்று வேறென்பதை) அறிவிக்கும்பொருட்டு அவற்றின்* ✻ *கரு. குணங்களைக் கூறுகின்றார்:—*

शब्दस्पर्शौ रूपरसौ गंधः इमे भूतगुणाः

(சு-ம்.)

*சப்தமும் ஸ்பரிசமும் ரூபமும் இரசமும் கந்தமுமாகிய இவை பஞ்சபூதங்களின் குணங்களாம்.*

---

*டானுகலின் அந்தப் பிரயோசனத்தை மனதில் வைத்துக்கொண்டு அதன்பொருட்டே "உங்கள் பசு பால்கறக்கிறதா? இல்லையா?" வென்று வினவுதல் உபோற்காதமாம். அதுபோல இங்கே அத்விதீயப்பிரஹ்மத்தை அறிதலாகிய பிரயோசனத்தை மனதில் வைத்துக்கொண்டு அதன்பொருட்டுப் பஞ்சபூதத்தின் விவேகமுதலியவற்றைக் கூறுதல் உபோற்காதமாம். இப்படியே மற்ற இடங்களிலும் உற்போகாதத்தினையறிக.*

✻ *கரு. குணத்தின் சாமானியலக்ஷணம் எஉ-வது பக்கத்தின் டிப்பணத்திற் காண்க.*

(அ-கை.)

அப்படியானால் இந்த *கசு. ஐந்து குணங்களும் எல்லாப்பூதங்களுக் குமா? அல்லது ஒவ்வொரு பூதத்திற்கு ஒவ்வொரு குணமா? என்று சங்கித்து இவ்விரண்டுவிதமு மல்ல, வேறு மூன்றாவதுவிதமேயா மென் னும் அபிப்பிராயமாய்க் கூறுகின்றார்:—

व्योमादिषु क्रमात् एकाद्वित्रिचतुःपंचगुणाः ॥

(சு-ம்.)

ஆகாயமுதலிய ஐந்துபூதங்களிலும் * கஎ. கிரமமாக ஒன்று இர ண்டு மூன்று நான்கு ஐந்து குணங்க ளிருக்கின்றன. (உ)

உ. பூதங்களினது குணங்களின் விபாகம்.

[கூஅ] प्रतिध्वानिर्वियच्छब्दो वायौ वीसीति शब्दनम् ।
अनुष्णाशीतसंस्पर्शो वह्नौ भुगुभुगुध्वनिः ॥ ३ ॥

(அ-கை.)

அதே வேறுவித (முற்கூறிய வேறு மூன்றாவது உபாய)த்தை விளக் குகின்றார்:—

वियच्छब्दः प्रतिध्वनिः ॥

(சு-ம்.)

ஆகாயத்தின் சப்தம் எதிரொலியாம்.

(வி-ம்.)

முதலில் ஆகாயத்தில் சப்தம் ஒன்றே குணமாம். அந்த ஆகாயத்தின் குணமாகிய சப்தம் * கஅ. பிரதித்தொனிவடிவினது.

(அ-கை.)

வாயுவின் சப்தம் ஸ்பரிச மென்னு மிரண்டு குணங்களில் வாயுவின் சப் தத்தை அநுகரண(சமானவடிவ)த்தாற் காட்டுகின்றார்:—

वायौ 'वीसी' इति शब्दनम् ॥

---

* கசு. ஒவ்வொரு பூதத்திற்கும் ஐந்து ஐந்து குணங்களிருக்கின்றனவா?

* கஎ. ஆகாயத்திற்கு ஒரு குணமும், வாயுவிற்கு இரண்டு குணமும், அக்கினி க்கு மூன்று குணமும், ஜலத்திற்கு நான்கு குணமும், பிருதிவிக்கு ஐந்து குணமு மாக.

* கஅ. மலைமுதலியவற்றின் மத்தியிலுள்ள வெளியிடத்தில் வேறு சப்தத்தின் பிரதிபிம்பம் உண்டாகின்றது. அது பிரதித்தோனி (எதிரொலி) யாம்.

(சு-ம்.)

வாயுவில் வீசி என்னும் சப்த மிருக்கின்றது.

(வி-ம்.)

வாயுவில் வீசி என்னும் வடிவினதாகிய சப்த மிருக்கின்றது. இப்படியே (மேல் தேயுமுதலியவற்றில்) சப்தத்தின் * கக. அநுகரண மிருக்கின்றது. அதனை அறிந்துகொள்க.

(அ-கை.)

அதன் (வாயுவின்) ஸ்பரிசத்தைக் கூறுகின்றார்:—

अनुष्णाशीतसंस्पर्शः ॥

(சு-ம்.)

வாயுவில் குளிர்ச்சியும் வெப்பமு மில்லாத ஸ்பரிச மிருக்கின்றது.

(அ-கை.)

அக்கினியில் சப்தம் ஸ்பரிசம் ரூபம் என்று மூன்று குணங்க ளுண்டு. அவை கிரமமாகச் சொல்லப்படுகின்றன:—

वह्नौ भुगुभुगुध्वनिः

(சு-ம்.)

அக்கினியில் புகுபுகு வென்னும் சத்த மிருக்கின்றது. (௩)

[௬௯] उष्णः स्पर्शः प्रभारूपं जले बुलुबुलुध्वनिः ।
शीतः स्पर्शः शुक्लरूपं रसो माधुर्यमीरितम् ॥ ४ ॥

(அ-கை.)

இதுவுமது.

उष्णः स्पर्शः प्रभारूपम्

(சு-ம்)

உஷ்ணமாகிய பரிசமும் காந்தியாகிய உருவமு மிருக்கின்றன.

---

* கக. ஒரு சத்தத்தைப்போல வேறு சத்தம் செய்தற்குச் சத்தத்தின் அநுகரண மென்று பெயராம். அதனையே சத்தத்தின் அநுகார மென்றுங் கூறுவர். குயில் முதலியவற்றின் சத்தத்தைக் கேட்டுச் சிறுவர்களும் அந்தச் சத்தத்தை உச்சரிக்கின்றார்கள். அது அதன் (சத்தத்தின்) அநுகரணமாம். அதுபோல இங்கே வாயுமுதலியவற்றினது சத்தத்தின் அநுகரணமாம்.

(அ-கை.)

ஜலத்திலிருக்கும் சப்தம் ஸ்பரிசம் ரூபம் இரசமென்னும் நான்கு குணங்களையும் கூறுகின்றார்:—

जले बुलबुलध्वनिः शीतः स्पर्शः शुक्लरूपं रसः माधुर्यं ईरितम् ॥

(சு-ம்.)

ஜலத்தில் புளுபுளு வென்னும் சப்தமும் குளிர்ச்சியாகிய ஸ்பரிசமும் வெண்மையுருவமும் இனிமையாகிய இரசமும் சொல்லப்பட்டிருக்கின்றன.

(வி-ம்.)

ஜலத்தில் புளுபுளு வென்னும் சத்தமும் சீதஸ்பரிசமும் வெண்ணிறமும் * உ0. மாதுரியரசமு மிருக்கின்றன. (ச)

[எ0] भूमौ कडकडाशब्दः काठिन्यं स्पर्श इष्यते ।
नीलादिकं चित्ररूपं मधुराम्लादिको रसः ॥ ९ ॥

(அ-கை.)

பூமியிலிருக்கும் சப்தம் ஸ்பரிசம் ரூபம் இரசம் கந்த மென்னும் ஐந்து குணங்களையும் கூறுகின்றார்:—

भूमौ कडकडा शब्दः काठिन्यं स्पर्शः इष्यते । नीलादिकं चित्ररूपं मधुराम्लादिकः रसः ॥

(சு-ம்.)

பூமியில் * உக. கடகடவென்னும் சத்தமும், கடினத்தன்மை ஸ்பரிசமும், நீல * உஉ. முதலிய சித்திர உருவமும், * உங. தித்திப்புப்

* உ0. ஜலத்தில் சுபாவமாகவோ மதுரமாகிய இரச மிருக்கின்றது. ஆனால் வெவ்வேறு பூமியின் சம்பந்தத்தால் உவர்ப்புமுதலியவைகள் தோற்றுகின்றன. நெல்லிக்காய் கடுக்காய்முதலியவற்றைத் தின்றபின் ஜலத்தைக் குடித்தால் ஜலத்தின் இனிப்பாகிய சுபாவம் தோற்றுகின்றது.

* உக. பேரிகைமுதலியவற்றின் பார்த்திவ(பிருதிவியினலாகிய) சத்தம் பிரசித்தமாம்.

* உஉ. நீலமென்பது கருமைக்காம். முதலிய வென்பதனல் வெண்மை, பொன்மை, செம்மை, பசுமை (கிளியின் நிறம்போன்றது), புகைமை (குரங்கின் நிறம் போன்றது)என்னு மிவை கொள்ளப்படும். இவை அனைத்துஞ் சேர்ந்து சித்திரவர்ணமாம். இது பிருதிவியின் உருவமாம்.

* உங. சர்க்கரைமுதலியவற்றினது.

* உச. புளிப்பு * உடு. முதலிய இரசமும் அங்கீகரிக்கப்படுகின்றன. (ரு)

[எக] सुरभीतरगंधौ द्वौ गुणाः सम्यग्विवेचिताः ।
श्रोत्रं त्वक्चक्षुषी जिह्वा घ्राणं चेंद्रियपंचकम् ॥ ६ ॥

(அ-கை.)

இதுவுமது.

सुरभीतर गंधौ द्वौ ॥

(சு-ம்.)

சுகந்தம், அதனின் வேறாயது என்னும் இரண்டு கந்தங்களிருக்கின்றன.

(வி-ம்.)

பிருதிவியில் சுகந்தந்துர்க்கந்தங்களென்னும் இரண்டு கந்தங்களு மிருக்கின்றன. இதுவரையிலும் பிருதிவியின் குணங்கள் சொல்லப்பட்டன.

(அ-கை.)

முற்கூறிய பொருளை (பூதங்களின் குணத்தை) முடிக்கின்றார்:—

गुणाः सम्यक् विवेचिताः ॥

(சு-ம்.)

இப்படிப் பஞ்சபூதங்களின் குணங்கள் செவ்வையாக விவேகிக்கப்பட்டன அதாவது வேறுபிரித்தறிவிக்கப்பட்டன.

உ. ஐந்து ஞானேந்திரியங்களின் வர்ணனம் சு-கூ.

க. ஐந்து ஞானேந்திரியங்களின் பெயர்.

(அ-கை.)

இப்படிப் பஞ்சபூதங்களுக்குக் குணத்தினால் பேதத்தைச் சொல்லி, இப்போது காரியத்தின் வேறுதலை அறிவித்தற்குப் பூதங்களின் காரியமாகிய ஞானேந்திரியங்களை முதலிற் கூறுகின்றார்:—

श्रोत्रं त्वक् चक्षुषी जिह्वा घ्राणं च इंद्रियपंचकम् ॥

* உடு. முதலிய என்னுஞ்சொல்லால் இலவணம்(உவர்ப்பு), கைப்பு(வேம்புமுதலியவற்றினது), துவர்ப்பு(கடுக்காய் முதலியவற்றினது), கார்ப்பு(மிளகாய் முதலியவற்றினது)என்பவையும் கொள்ளப்படும். இந்த அறுசுவையும் பிருதிவியி லிருக்கின்றன.

* உச, புளிமுதலியவற்றினது.

(சு-ம்.)

சுரோத்திரம் (காது), துவக்கு (தோல்), சக்ஷு (நேத்திரம்), ஜிஹ்வை (நாக்கு), கிராணம் (மூக்கு) என்னும் இவைகள் ஐந்து * உகூ. ஞானேந்திரியங்களாம். (சு)

உ. ஞானேந்திரியங்களின் இடம் வியாபாரம் இருப்பு சுபாவம் என்பன.

[எஉ] कर्णादिगोलकस्थं तच्छब्दादिग्राहकं क्रमात् ।
सौक्ष्म्यात्कार्यानुमेयं तत्प्रायो धावेद्बहिर्मुखम् ॥ ७ ॥

(அ-கை.)

அவற்றின் ஸ்தானங்களையும் வியாபாரங்களையும் காட்டுகின்றார்:—

तत् क्रमात् कर्णादिगोलकस्थं शब्दादिग्राहकम्

(சு-ம்.)

அந்த ஞானேந்திரியபஞ்சகம் கிரமமாகக் காது * உஎ. முதலிய கோளக(இட)ங்களி லிருக்கின்றன ; அவை கிரமமாகச் சப்த * உஅ. முதலியவற்றைக் * உகூ. கிரகிப்பனவாம்.

(அ-கை.)

இந்திரியங்க ளுண்டென்பதில் பிரமாணம் யாதென்று கேட்குமிடத்துக் * ௩0. காரியலிங்கக அநுமானமே பிரமாணமெனக் கூறுகின்றார் :—

सौक्ष्म्यात् कार्यानुमेयम् ॥

---

* உகூ. சப்தமுதலியவற்றின் ஞானத்திற்குச் சாதனமாகிய இந்திரியங்களை ஞானேந்திரிய மென்பர்.

* உஎ. முதலியவெனுஞ் சொல்லால் சரீரம் நேத்திரம் நாக்கு மூக்கு என்பவைகளும் கொள்ளப்படும்.

* உஅ. முதலியவெனுஞ் சொல்லால் பரிசம் உருவம் இரசம் கந்த மென்பவைகளும் கொள்ளப்படும்.

* உகூ. விஷயஞ்செய்வனவா யிருக்கின்றன.

* ௩0. எந்த அநுமானத்திற்கு இலிங்கம்(ஏது) காரிய(உருவமுதலியவற்றை அறிதலாகிய வியாபார)மா யிருக்கின்றதோ அவ்வநுமானம் காரியலிங்ககஅநுமானமாம்.

(சூ-ம்.)

அவ்விந்திரியபஞ்சகம் சூக்ஷ்மமாயிருத்தலால் தமது காரியத்தால் * ௬௧. அநுமிக்கத்தக்கனவாம்.

(வி-ம்.)

உருவத்தின் ஞானம் * ௬௨. கரணத்தாலாகியதாம்; கிரியையாயிருத்தலால்; யாது யாது கிரியையோ அது அது கரண(சாதன)த்தாலாகியதாம்; * ௬௩. வெட்டுதற்றொழிலைப்போல என்னும் இவை * ௬௪. முதலியன இந்திரியம் உண்டென்பதில் * ௬௫. அநுமானமென் றறிக. அவ்விந்திரியங்கள் சூக்ஷ்மமாயிருத்தலால் அதாவது அபஞ்சீகிருதபூதங்களின் காரியமாயிருத்தலின் * ௬௬. துர்லக்ஷியமாயிருத்தலால் அநுமானத்தாலறியத் தக்கனவாம் என்பது பொருள்.

---

* ௬௧. மலையிற் புகையாகிய இலிங்கத்தா(குறியா)ல் நெருப்பு அநுமிக்கத்தக்கது போல உருவமுதலிய விஷயங்களை அறிதலென்னும் காரியமாகிய இலிங்கத்தால் இந்திரியம் அநுமித்தறியத்தக்கதாம்.

* ௬௨. அசாதாரணகாரணத்திற்குக் கரண மென்று பெயர். காரணமாத்திரத்திற்குக் கரண மென்னும் பெயரில்லை. ஒரே காரியத்தின் காரணத்தை அசாதாரண காரண மென்பர். இங்கே இந்திரியங்கள் உருவமுதலியவற்றின் ஞானமாகிய ஒவ்வொரு காரியத்திற்கும் காரணமாயிருத்தலால் கரண மெனப்படுகின்றன.

* ௬௩. கட்டையை இரண்டாகப் பிரித்தற்கு வெட்டுதற்றொழில் என்று பெயர். அதற்கே சிதைத்த லென்றும் பெயர். வெட்டுதற்றொழில் கிரியையாயிருத்தலால் வாள் கோடரிமுதலிய கரணங்களால் உண்டாகியதாயிருத்தல்போல உருவமுதலியவற்றை வேறுபிரித்தறிவிக்கும் அவற்றின் ஞானமும் கிரியையாயிருத்தலால் கரண ஜந்யமேயாம். இது இந்திரியமுண்டென்பதில் அநுமானமாம்.

* ௬௪. முதலிய வென்னுஞ் சொல்லாற் சத்தத்தின் ஞானமும் ஸ்பரிசஞானமும் இரசஞானமும் கந்தஞானமும் கரணத்தால் (கிரமமாகச் சுரோத்திரம், துவக்கு, சிங்நுவை, கிராணமென்னு மிந்திரியங்களால்) உண்டாயினவாம்; விஷயங்களை வேறுபிரிக்கும் கிரியையாயிருத்தலால்; சிதைத்தற்கிரியையினைப்போல என்னும் இச்சேர்க்கையாகிய நான்கு அநுமானங்களும் கொள்ளப்படும்.

* ௬௫. அநுமிதிப்பிரமாவின் கரணம் (அசாதாரணகாரணம்).

* ௬௬. விஷய இந்திரியங்களின் சம்பந்தத்தாலுண்டாகிய ஞானத்தைப் பிரத்தியக்ஷ மென்பர். பஞ்சீகிருதபூதங்களும் அவற்றின் காரியங்களும் தக்கபடி இந்திரியங்களுக்கு விஷயமாம். அபஞ்சீகிருத(சூக்ஷ்ம)பூதங்களும் அவற்றின் காரியமாகிய ௧௦. இந்திரியங்களும், ௨. அந்தக்கரணமும், ௫. பிராணனும் இந்திரியத்திற்கு விஷயமாகா. எதனுல் இந்திரியம் அபஞ்சீகிருதபூதங்களின் காரியமாயிருத்தலால் இந்திரியஜந்திய (பிரத்தியக்ஷ) ஞானத்திற்கு விஷயமல்லவோ அதனுல் பிரத்தியக்ஷமாக வருத்தத்தினுலும் அறியத்தக்கனவாகா(துர்லக்ஷியமாம்). இதனுலேயே அநுமானத்தினு லறியப்படுகின்றன.

(அ-கை.)

இந்த ஞானேந்திரியங்களி னியல்பைக் கூறுகின்றார் :—

तत् प्रायः बहिर्मुखं धावेत् ॥

(சு-ம்.)

அது பெரும்பாலும் வெளிமுகமாக ஓடுகின்றது.

(வி-ம்.)

அந்த ஞானேந்திரியபஞ்சகம் பெரும்பாலும் பகிர்முகமாய்(வெளியிலுள்ள கடபடமுதலிய விஷயங்களை நோக்கி) ஓடுகின்றது ; " परांचि खानि व्यतृणत्स्वयंभूः * கூள. சுவயம்பு(பரமாத்மா)வானவர் இந்திரியங்களைப் பகிர்முகமாகச் சிருஷ்டித்து ஆத்மதரிசனத்தினின்றும் வேறுபிரித்தார். அதனால் புருஷன் வெளிவிஷயங்களைக் காண்கிறான் ; உள் ஆத்மாவை அறிகிறதில்லை " என்னும் சுருதியால் என்பது பொருள். (எ)

௯. ஞானேந்திரியங்கள் உள் விஷயங்களைக் கிரகிக்குமாறு.

[எஅ] कदाचित्पिहिते कर्णे श्रूयते शब्द आंतरः ।
प्राणवायौ जाठराग्नौ जलपानेऽन्नभक्षणे ॥ ८ ॥

[எகூ] व्यज्यंते ह्यांतराः स्पर्शा मीलने चांतरं तमः ।
उद्गारे रसगंधौ चेत्यक्षाणामांतरग्रहः ॥ ९ ॥

(அ-கை.)

" இந்திரியபஞ்சகங்கள் பெரும்பாலும் வெளியே ஓடுகின்றன " என்பதனால் குறிப்பிக்கப்பட்ட இந்திரியங்கள் ஒவ்வொரு சமயத்தில் உள்விஷயங்களைக் கிரகிக்கின்றன என்பதை இரண்டு சுலோகங்களினாற் காட்டுகின்றார் :—

कदाचित् कर्णे पिहिते प्राणवायौ जाठराग्नौ आंतरः शब्दः श्रूयते ॥

(சு-ம்.)

ஒவ்வொருகாலத்தில் காதை மூடினால் பிராணவாயுவிலும் உதராக்கினியிலும் உடலினுட்சத்தம் கேட்கப்படுகின்றது.

---

* கூள. தானாகவேயிருக்கும் பரமாத்மா சுவயம்பு ஆவர். பிரஹ்மாவிற்குச் சுவயம்பு வென்னும் பெயரிருக்கினும், இந்திரியங்களி னுற்பத்தி பிரஹ்மதேவருக்கு முன்னமே சித்தித்திருத்தால் இங்கே பரமாத்மாவே கொள்ளப்படுகின்றனர்.

(வி-ம்)

ஒருகாலத்தில் காதைக் கையினால் மூடிக்கொண்டால் பிராணவாயுவி னும் உதராக்கினியினுமிருக்கும் உட்சத்தம் கேட்கப்படுகின்றது.

(அ-கை)

உட்பரிசத்தைக் காட்டுகின்றார் :—

जलपाने अन्नभक्षणे हि आंतराः स्पर्शाः व्यज्यंते ॥

(கு-ம்.)

நீர்குடித்தலிலும் அன்னமுண்ணுதலிலும் உட்பரிசங்கள் வெளிப் படுகின்றன.

(வி-ம்.)

நீரைக் குடிக்குங்காலத்தும் அன்னமுண்ணுங்காலத்தும் (சீதோஷ் ணமுதலிய) உட்பரிசங்கள் வெளிப்படுகின்றன.

(அ-கை)

உள் உருவமுதலியவற்றைக் காட்டுகின்றார் :—

मीलने च आंतरं तमः उद्गारे च रसगंधौ इति अक्षाणाम् आंतरग्रहः

(கு-ம்)

கண்ணைமூடியகாலத்து உள்ளிருள் காணப்படுகின்றது. ஏப்பமிடுங் காலத்து (இரசகந்தங்களிரண்டும்) கிரகிக்கப்படுகின்றன. இப்படி இந் திரியங்களுக்கு உள்ளுணர்ச்சி இருக்கின்றது.

(வி-ம்)

கண்ணைமூடியகாலத்துச் சரீரத்தினுள்ளிருள் தோற்றுகின்றது. ஏப் பமுண்டாகுங்காலத்து உள்ளிரசமும் கந்தமும் * ௩-அ. ஏற்றபடி கிரகிக் கப்படுகின்றன. இவ்வாறு ஞானேந்திரியங்கள் உள் விஷயங்களை அறி கின்றன. (௯)

### ௩.. கர்மேந்திரியங்கள் ஐந்தின்வர்ணனம் ௭௫-௭௬.

#### க. கர்மேந்திரியங்களின் வியாபாரம்.

[௭௫] पंचोक्त्यादानगमनविसर्गानंदकाः क्रियाः ।
कृषिवाणिज्यसेवाद्याः पंचस्वंतर्भवंति हि ॥ १० ॥

---

* ௩-அ. உள்ளே உண்ட உணவு எத்தன்மைத்தோ அத்தன்மைய இரசமும் கந் தமும் அறியப்படுகின்றன.

இப்போது கர்மேந்திரியங்களில்லை என்னும் வாதிகளாகிய நையாயி கர்முதலியோர்களை நோக்கி அக்கர்மேந்திரியங்களுண்டென்று * ௩௯. சமர்த்திக்கும்பொருட்டு அக்கர்மேந்திரியங்களின் வியாபாரத்தைக் கூறுகின்றார் :—

उत्क्यादानगमनविसर्गानंदकाः पंच क्रियाः ॥

(சு-ம்)

வசனம் ஆதானம் கமனம் விசர்க்கம் ஆநந்தம் என்னுமிவை ஐந்து கிரியைகள்.

(வி-ம்)

வசனம் (பேசுதல்), ஆதானம் (ஏற்றல்), கமனம் (போகுதல்), விசர்க்கம் (மலநீக்கம்), ஆநந்தம் * ௪௦. (இரதிபோகம்) என்னும் பெயருடையவைகள் ஐந்துகிரியைகளா மென்பது * ௪௧. பிரசித்தமாம்.

(அ-கை)

அப்படியானல் வேளாண்மைமுதலிய வேறுகிரியைகளும் இருத்தலால் கிரியைகள் ஐந்தென்று கூறியது எங்ஙனமாமென்றாசங்கித்துக் கூறுகின்றார் :—

हि क्रिषिवाणिज्यसेवाद्याः पंचसु अंतः भवंति

(சு-ம்)

கிருஷி வாணிஜ்யம் சேவக* ௪௨. முதலியவைகள் இவ்வைந்தி லடங்குகின்றன. இதனுற்றான் கிரியை ஐந்தெனப்பட்டது. (௧௦)

உ. கர்மேந்திரியங்களின் பெயர், இருப்பு, இடம்.

[எசு] वाक्पाणिपादपायूपस्थैरक्षैस्तत्क्रियाजनिः ।
मुखादिगोलकेष्वास्ते तत्कर्मेंद्रियपंचकम् ॥ ११ ॥

* ௩௯. யோக்கியாயோக்கியங்களை விசாரிக்கும்பொருட்டு அல்லது யுக்தாயுக்தங்களைப் பரீக்ஷிக்கும்பொருட்டு.

* ௪௦. வீரியம் வெளிப்படும்வாயிலாக ஆநந்தத்திற்குக் காரணமாயிருத்தலால் பசுதர்மமாகிய கிரியையை ஆநந்த மென்பர்.

* ௪௧. இங்கே பிரசித்தமென்னுஞ் சொல் சேவ (வாக்கிய சேஷ) மாம். வாக்கியத்தை நிறைக்கும்பொருட்டாவது அல்லது அர்த்தத்தை நிறைக்கும்பொருட்டாவது எஞ்சிய சொல்லை வெளியினின்றும் அதிகமாக வருவித்துச் சொல்லுதல் வாக்கியசேஷமாம். இதனையே அத்தியாகார மென்றும் சோல்லெச்ச மென்றும் கூறுவர்.

*௪௨. முதலியவென்னுஞ் சொல்லால் குதித்தல் ஓடுதல் நிமிர்தல் வளைதல் முதலிய கிரியைகளும் கொள்ளப்படும்.

(அ-கை.)

அந்தக் கிரியைகளை உண்டாக்கும் இந்திரியங்களெவை யெனக் கூறுகின்றார் :—

वाक्पाणिपादपायूपस्थैः अक्षैः तत्क्रियाजनिः ॥

(சு-ம்.)

வாக்கு, பாணி (கை), பாதம், பாயு (குதம்), உபஸ்தம் (குய்யம்) என்னும் (கர்ம) இந்திரியங்களால் அந்தக் கிரியையின் உற்பத்தி [illegible]றது.

(வி-ம்.)

வாக்குமுதலிய இந்திரியங்களால் அந்த வசனமுதலிய கிரியைகளின் உற்பத்தி யுண்டாகின்றது. இங்கும் வசனக்கிரியை கா[illegible] கிரியையாகையால்; அதைத்த[illegible] அநுமான[illegible]

(அ-கை.)

அவ்வைந்து கர்மேந்திரிய(கர்மத்திற்குக் கா[illegible]மாகிய இந்திரிய)ங்களின் ஸ்தானங்களையும் காட்டுகின்றார் :—

तत् कर्मेंद्रियपंचकं मुखादिगोलकेषु आस्ते ॥

அந்தக் கர்மேந்திரியங்களைந்தும் முகமுதலிய கோளகங்களில் இருக்கின்றன.

(வி-ம்.)

முதலியவென்னுஞ் சொல்லால் கை கால் மலத்துவாரம் மூத்திரத்துவாரம் என்னும் கோளக(ஸ்தான)ங்களும் கொள்ளப்படுகின்றன. (௧௧)

ச. மனதின் வர்ணனம் ௭௭-௮௧.

௧. மனதின் காரியம் இடம் உள்ளிந்திரியத்தன்மை யிவையெனல்.

[௭௭] मनो दशेंद्रियाध्यक्षं हृत्पद्मगोलके स्थितम् ।
तच्चांतःकरणं बाह्येष्वस्वातंत्र्याद्विनेंद्रियैः ॥ १२ ॥

(அ-கை.)

இப்போது முற்கூறிய பத்து இந்திரியங்களையும் செலுத்துவதாயிருத்தலால் பிரசங்கத்தினால் அடையப்பட்ட மனதின் கிருத்தி(காரி)யத்தையும் இடத்தையும் காட்டுகின்றார் :—

இப்போது கர்மேந்திரியங்களில்லை என்னும் வாதிகளாகிய நையாயிகர்முதலியோர்களை நோக்கி அக்கர்மேந்திரியங்களுண்டென்று * ௬௯. சமர்த்திக்கும்பொருட்டு அக்கர்மேந்திரியங்களின் வியாபாரத்தைக் கூறுகின்றார் :—

उत्क्यादानगमनविसर्गानंदकाः पंच क्रियाः ॥

(சு-ம்)

வசனம் ஆதானம் கமனம் விசர்க்கம் ஆநந்தம் என்னுமிவை ஐந்து கிரியைகள்.

(வி-ம்)

வசனம் (பேசுதல்), ஆதானம் (ஏற்றல்), கமனம் (போகுதல்), விசர்க்கம் (மலநீக்கம்), ஆநந்தம் * ௭0. (இரதிபோகம்) என்னும் பெயருடையவைகள் ஐந்துகிரியைகளாமென்பது * ௭௧. பிரசித்தமாம்.

(அ-கை)

அப்படியானால் வேளாண்மைமுதலிய வேறுகிரியைகளும் இருத்தலால் கிரியைகள் ஐந்தென்று கூறியது எங்ஙனமாமென்றாசங்கித்துக் கூறுகின்றார் :—

हि क्रिषिवाणिज्यसेवाद्याः पंचसु अंतः भवंति

(சு-ம்)

கிருஷி வாணிஜ்யம் சேவக* ௭௨. முதலியவைகள் இவ்வைந்திலடங்குகின்றன. இதனான்றான் கிரியை ஐந்தெனப்பட்டது. (௧0)

உ. கர்மேந்திரியங்களின் பெயர், இருப்பு, இடம்.

[எசு] वाक्पाणिपादपायूपस्थैरक्षैस्तत्क्रियाजनिः ।
मुखादिगोलकेष्वास्ते तत्कर्मेंद्रियपंचकम् ॥ ११ ॥

---

* ௬௯. யோக்கியாயோக்கியங்களை விசாரிக்கும்பொருட்டு அல்லது யுக்தாயுக்தங்களைப் பரீக்ஷிக்கும்பொருட்டு.

* ௭0. வீரியம் வெளிப்படும்வாயிலாக ஆநந்தத்திற்குக் காரணமாயிருத்தலால் பசுதர்மமாகிய கிரியையை ஆநந்தமென்பர்.

* ௭௧. இங்கே பிரசித்தமென்னுஞ் சொல் சேஷ (வாக்கிய சேஷ) மாம். வாக்கியத்தை நிறைக்கும்பொருட்டாவது அல்லது அர்த்தத்தை நிறைக்கும்பொருட்டாவது எஞ்சிய சொல்லை வெளியினின்றும் அதிகமாக வருவித்துச் சொல்லுதல் வாக்கியசேஷமாம். இதனையே அத்தியாகார மென்றும் சொல்லெச்ச மென்றும் கூறுவர்.

* ௭௨. முதலியவென்னுஞ் சொல்லால் குதித்தல் ஓடுதல் நிமிர்தல் வளைதல் முதலிய கிரியைகளும் கொள்ளப்படும்.

(அ-கை.)

அந்தக் கிரியைகளை உண்டாக்கும் இந்திரியங்களெவையெனக் கூறுகின்றார்:—

वाक्पाणिपादपायूपस्थैः अक्षैः तत्क्रियाजनिः ॥

(சு-ம்.)

வாக்கு, பாணி (கை), பாதம், பாயு (குதம்), உபஸ்தம் (குய்யம்) என்னும் (கர்ம) இந்திரியங்களால் அந்தக் கிரியையின் உற்பத்தி உண்டாகின்றது.

(வி-ம்.)

வாக்குமுதலிய இந்திரியங்களால் அந்த வசனமுதலிய கிரியைகளின் உற்பத்தி யுண்டாகின்றது. இங்கும் வசனக்கிரியை கரணபூர்வகமாம்; கிரியையாகையால்; சிதைத்தற்கிரியைபோல. இவைமுதலிய காரியலிங்கக அநுமானங்களைக் காண்க.

(அ-கை.)

அவ்வைந்து கர்மேந்திரிய(கர்மத்திற்குச் சாதனமாகிய இந்திரிய)ங்களின் ஸ்தானங்களையும் காட்டுகின்றார்:—

तत् कर्मेंद्रियपंचकं मुखादिगोलकेषु आस्ते ॥

அந்தக் கர்மேந்திரியங்களைந்தும் முகமுதலிய கோளகங்களில் இருக்கின்றன.

(வி-ம்.)

முதலியவென்னுஞ் சொல்லால் கை கால் மலத்துவாரம் மூத்திரத்துவாரம் என்னும் கோளக(ஸ்தான)ங்களும் கொள்ளப்படுகின்றன. (கக)

௬. மனதின் வர்ணனம் எஎ-அக.

க. மனதின் காரியம் இடம் உள்ளிந்திரியத்தன்மை யிவையெனல்.

[எஎ] मनो दशेंद्रियाध्यक्षं हृत्पद्मगोलके स्थितम् ।
तच्चांतःकरणं बाह्येष्वस्वातंत्र्याद्विनेंद्रियैः ॥ १२ ॥

(அ-கை.)

இப்போது முற்கூறிய பத்து இந்திரியங்களையும் செலுத்துவதாயிருத்தலால் பிரசங்கத்தினால் அடையப்பட்ட மனதின் கிருத்தி(காரி)யத்தையும் இடத்தையும் காட்டுகின்றார்:—

இப்போது கர்மேந்திரியங்களில்லை என்னும் வாதிகளாகிய நையாயி கர்முதலியோர்களை நோக்கி அக்கர்மேந்திரியங்களுண்டென்று * ௩௯. சமர்த்திக்கும்பொருட்டு அக்கர்மேந்திரியங்களின் வியாபாரத்தைக் கூறுகின்றார் :—

उक्त्यादानगमनविसर्गानंदकाः पंच क्रियाः ॥

(சு-ம்)

வசனம் ஆதானம் கமனம் விசர்க்கம் ஆநந்தம் என்னுமிவை ஐந்து கிரியைகள்.

(வி-ம்)

வசனம் (பேசுதல்), ஆதானம் (ஏற்றல்), கமனம் (போகுதல்), விசர்க்கம் (மலநீக்கம்), ஆநந்தம் * ௪௦. (இரதிபோகம்) என்னும் பெயருடையவைகள் ஐந்துகிரியைகளா மென்பது * ௪௧. பிரசித்தமாம்.

(அ-கை)

அப்படியானால் வேளாண்மைமுதலிய வேறுகிரியைகளும் இருத்தலால் கிரியைகள் ஐந்தென்று கூறியது எங்ஙனமாமென்றாசங்கித்துக் கூறுகின்றார் :—

हि क्रिषिवाणिज्यसेवाद्याः पंचसु अंतः भवंति

(சு-ம்)

கிருஷி வாணிஜ்யம் சேவக* ௪௨. முதலியவைகள் இவ்வைந்தி லடங்குகின்றன. இதனுற்றான் கிரியை ஐந்தெனப்பட்டது. (௧௦)

௨. கர்மேந்திரியங்களின் பெயர், இருப்பு, இடம்.

[௭௬] वाक्पाणिपादपायूपस्थैरक्षैस्तत्क्रियाजनिः ।
मुखादिगोलकेष्वास्ते तत्कर्मेंद्रियपंचकम् ॥ ११ ॥

---

* ௩௯. யோக்கியாயோக்கியங்களை விசாரிக்கும்பொருட்டு அல்லது யுக்தாயுக்தங்களைப் பரீக்ஷிக்கும்பொருட்டு.

* ௪௦. வீரியம் வெளிப்படும்வாயிலாக ஆநந்தத்திற்குக் காரணமாயிருத்தலால் பசுதர்மமாகிய கிரியையை ஆநந்த மென்பர்.

* ௪௧. இங்கே பிரசித்தமென்னுஞ் சொல் சேஷ (வாக்கிய சேஷ) மாம். வாக்கியத்தை நிறைக்கும்பொருட்டாவது அல்லது அர்த்தத்தை நிறைக்கும்பொருட்டாவது எஞ்சிய சொல்லை வெளியினின்றும் அதிகமாக வருவித்துச் சொல்லுதல் வாக்கியசேஷமாம். இதனையே அத்தியாகார மென்றும் சொல்லெச்ச மென்றும் கூறுவர்.

*௪௨. முதலியவென்னுஞ் சொல்லால் குதித்தல் ஓடுதல் நிமிர்தல் வளைதல் முதலிய கிரியைகளும் கொள்ளப்படும்.

(அ-கை.)

அந்தக் கிரியைகளை உண்டாக்கும் இந்திரியங்களெவை யெனக் கூறுகின்றார் :—

वाक्पाणिपादपायूपस्थैः अक्षैः तत्क्रियाजनिः ॥

(சு-ம்.)

வாக்கு, பாணி (கை), பாதம், பாயு (குதம்), உபஸ்தம் (குய்யம்) என்னும் (கர்ம) இந்திரியங்களால் அந்தக் கிரியையின் உற்பத்தி உண்டாகின்றது.

(வி-ம்.)

வாக்குமுதலிய இந்திரியங்களால் அந்த வசனமுதலிய கிரியைகளின் உற்பத்தி யுண்டாகின்றது. இங்கும் வசனக்கிரியை கரணபூர்வகமாம்; கிரியையாகையால் ; சிதைத்தற்கிரியைபோல. இவைமுதலிய காரியலிங்கக அநுமானங்களைக் காண்க.

(அ-கை.)

அவ்வைந்து கர்மேந்திரிய(கர்மத்திற்குச் சாதனமாகிய இந்திரிய)ங்களின் ஸ்தானங்களையும் காட்டுகின்றார் :—

तत् कर्मेंद्रियपंचकं मुखादिगोलकेषु आस्ते ॥

அந்தக் கர்மேந்திரியங்களைந்தும் முகமுதலிய கோளகங்களில் இருக்கின்றன.

(வி-ம்.)

முதலியவென்னுஞ் சொல்லால் கை கால் மலத்துவாரம் மூத்திரத்துவாரம் என்னும் கோளக(ஸ்தான)ங்களும் கொள்ளப்படுகின்றன. (கக)

௪. மனதின் வர்ணனம் ௧௨-அக.

௧. மனதின் காரியம் இடம் உள்ளிந்திரியத்தன்மை யிவையெனல்.

[௧௨] मनो दशेंद्रियाध्यक्षं हृत्पद्मगोलके स्थितम् ।
तच्चांतःकरणं बाह्येष्वस्वातंत्र्याद्विनेंद्रियैः ॥ १२ ॥

(அ-கை.)

இப்போது முற்கூறிய பத்து இந்திரியங்களையும் செலுத்துவதாயிருத்தலால் பிரசங்கத்தினால் அடையப்பட்ட மனதின் கிருத்தி(காரி)யத்தையும் இடத்தையும் காட்டுகின்றார் :—

मनः दशेन्द्रियाध्यक्षं हृत्पद्मगोलकेस्थितम् ॥

(சு-ம்.)

மனமானது பத்து இந்திரியங்களுக்கும் (பிரேரிக்குஞ்செய்கையால்) அதிபதியும் * சங. இருதயகமலமாகிய கோளகத்தில் உள்ளதுமாம்.

(அ-கை.)

அந்த மனம் உள்ளிந்திரியமா மென்பதைக் காரணத்தோடு கூறுகின்றார் :—

तत् च इंद्रियैः विंना वाह्येषु अस्वातंत्र्यात् अंतःकरणम् ॥

(சு-ம்.)

அந்த மனம் இந்திரியங்களின்றி வெளிச்சத்தமுதலிய விஷயங்களில் பிரவிருத்திக்கச் சுதந்திரமில்லாதிருத்தலால் அந்தக்கரண (உள்ளிந்திரிய) மாம். (௧௨)

௨. மனதின் தசேந்திரியங்களைப் பிரேரிக்குந்தன்மையும் சத்துவமுதலிய குணமுடைமையும்.

[௭அ] अक्षेष्वर्थार्पितेष्वेतद्गुणदोषविचारकम् ।
सत्वं रजस्तमश्चास्य गुणा विक्रियते हि तैः ॥ १३ ॥

(அ-கை.)

மனம் பத்து இந்திரியங்களுக்கும் அதிபதியா மென்பதை விளக்குகின்றார் :—

अक्षेषु अर्थार्पितेषु एतत् गुणदोषविचारकम् ॥

(சு-ம்.)

இந்திரியங்கள் விஷயங்களில் ஸ்தாபிக்கப்பட்டகாலத்து இது (மனம்) குணதோஷங்களை விசாரிப்பதாம்.

---

* சங. பாதத்திலுண்டாகும் துக்கமும் சிரசிலுண்டாகுஞ் சுகமும் ஒரேகாலத்திலறியப்படுகின்றன. அது மனதின் சம்பந்தமின்றிச் சம்பவியாதாகையால், மனம் இருதயமாத்திரத்திலன்று, சரீரமுழுவதினும் வாசஞ்செய்கின்றது. என்றாலும் விசேஷத்தன்மையாக முக்கிய வாசஸ்தானமாயிருத்தலால் இருதயம் ஸ்தான மென்னப்பட்டது. அது தீபத்தின் பிரகாசம் வீடுமுழுவதிலு மிருந்தபோதிலும், விசேஷமாகத் திரியோடுகூடிய பாத்திரத்திலேயே இருத்தலால் அது அதற்கு முக்கிய வாசஸ்தானமாதல்போலவாம்

(வி-ம்.)

ஞானேந்திரியங்கள் தத்தம் விஷயங்களில் ஸ்தாபிக்கப்பட்டகாலத்து இம்மனம் "இது நன்று, இது தீது" என்று குணதோஷங்களை விசாரிப்பதாகின்றது. இதன்தாற்பரியம்:— * ௪௪. ஆத்மா பிரமாஞானத்திற்கு ஆசிரயமான பிரமாதாவாயிருத்தலால் எல்லாஞானங்களுக்கும் சாதாரணமா (சமானமா)யிருத்தலாலும், நேத்திரமுதலிய இந்திரியங்கள் உருவமுதலியவற்றின் ஞானத்தையுண்டாக்குதன்மாத்திரத்தில் கிருதார்த்தமாகுதலாலும் அவ்வாத்மாவினுலும் இந்திரியங்களாலும் விஷயங்களிலுள்ள குணதோஷத்தை விசாரித்தல் பொருந்தாது. குணதோஷங்களின் விசாரமோ தோற்றுகின்றது; அது *௪௫. வேறுவிதமாக (ஒருகாரணமுமில்லாமல்) சம்பவியாமையால் அதற்கு(குணதோஷவிசாரத்திற்கு)க் காரணமாகப் பரிசேஷத்தால் (ஒழிபால்) மனமே அங்கீகரிக்கத்தக்கதாம்.

(அ-கை.)

மனம் வைராக்கியம் காமமுதலிய அநேகவித விருத்திகளோடுகூடியதென் றறிவித்தற்பொருட்டுச் சத்துவமுதலிய குணங்களோடுகூடியதெனக் காட்டுகின்றார்:—

सत्वं रजः तमः च अस्य गुणाः ॥

(சு-ம்.)

* ௪௬. சாத்துவிகம் * ௪௭. இராஜஸம் * ௪௮. தாமசம் (என்னும் மூன்றும்) இந்தமனதின் குணங்களாம்.

(அ-கை.)

அச்சாத்துவிகமுதலியவை அதன் (மனதின்) குணமாவதிற் காரணத்தைக் கூறுகின்றார்:—

हि तैः विक्रियते ॥

---

* ௪௪. சிதாபாசனோடுகூடிய அந்தக்கரண உபகிதசேதனம்.

* ௪௫. ஓர் பருத்த புருஷன் பகலில் உண்ணுவிடின் அவனிடத்தில் தோற்றும் பருமை போஜனமாகிய சாதனமின்றிச் சம்பவியாதாகையால் அர்த்தத்தினுல் இரவில் உண்பானென்னும் கற்பனை யுண்டாகின்றது. இங்கே பருமை, சம்பவியாதென்னும் ஞானம் அர்த்தாபத்திப்பிரமாணமாம். அதனுலுண்டாகிய இரவில் சாப்பிடுவான் என்னும் ஞானம் அர்த்தாபத்திப்பிரமையாம். அதுபோல இங்கு மறிக.

* ௪௬. பிரகாசமாகிய குணத்தைச் சத்துவகுண மென்பர்.

* ௪௭. பிரவிருத்திவடிவமாகிய குணத்தை இராஜோகுண மென்பர்.

* ௪௮. மோகம் ஜாட்டியமென்னும் சுபாவத்தையுடைய குணத்தைத் தமோகுண மென்பர்.

(சு-ம்.)

எதனால் அவற்றால் விகாரப்படுகின்றதோ (அதனால்)

(வி-ம்.)

எந்தக்காரணத்தால் அந்தச்சாத்துவிகமுதலிய குணங்களால் மனம் விகாரத்தை (பரிணாமமாகிய விருத்திவடிவத்தன்மையை) அடைகின்றதோ, அந்தக்காரணத்தால் இதற்கு முற்கூறிய மூன்றுகுணங்களிருக்கின்றன வென்பது பொருள். (௧௩)

௬. மனத்திற்குக் குணங்களின் பேதத்தால் விருத்திவடிவத்தினால் விகாரமுடைமை.

[௭௧] वैराग्यं क्षांतिरौदार्यमित्याद्याः सत्वसंभवाः ।
कामक्रोधौ लोभयत्नावित्याद्या रजसोत्थिताः ॥ १४ ॥

(அ-கை.)

சாத்துவிகமுதலிய குணங்களால் அம்மனம் விகாரியா மென்பதையே காட்டுகின்றார்:—

वैराग्यं क्षांतिः औदार्यं इत्याद्याः सत्वसंभवाः कामःक्रोधौ लोभयत्नौ इत्याद्याः रजसा उत्थिताः ॥

(சு-ம்.)

* ௪௯. வைராக்கியம், * ௫0. க்ஷமை (பொறுமை), * ௫௧. உதாரத்தன்மை இவை * ௫௨. முதலிய (சாந்தவிருத்திகள்) சத்துவகுணத்

---

* ௪௯. துறத்தலின் இச்சை அல்லது இச்சையின்மை வைராக்கியமாம். இதனைச் சித்திரதீபத்தின் ௨௭௮-வது சுலோகத்திற் காண்க.

* ௫0. அந்நியபுருஷர்களின் அபராதத்தைச் சகித்தல் க்ஷமையாம்.

* ௫௧. தனமுதலியன கொடுத்தலிற் சுருக்கமின்மை ஔதாரியமாம்.

* ௫௨. முதலியவென்னுஞ் சொல்லால்
(௧) விவேகம்:—நித்தியாநித்தியவஸ்துவிசாரம்,
(௨) சமம்:—மனதின் நிக்கிரகம்,
(௩) தமம்:—இந்திரியநிக்கிரகம்,
(௪) உபரதி:—விட்டவிஷயத்தில் விருப்பமின்மை,
(௫) தீதிக்ஷை:—சீதோஷ்ணமுதலியவற்றைச் சகிக்குமியல்பு,
(௬) சிரத்தை:—குருசாஸ்திர வசனங்களிலுள்ள திடவிசுவாசம்,
(௭) சமாதானம்:—சத்ரூபப்பிரஹ்மமாகிய இலக்ஷியத்திலுள்ள சித்தத்தின்ஏகாக்கிரத்தன்மை,

தாலுண்டாயினவாம். * ருங. காமம், * ருச. குரோதம், * ருரு. உலோபம், * ருசு. முயற்சி இவை * ருஎ. முதலிய கோரவிருத்திகள் இராஜோகுணத்தால் உண்டாயினவாம்.

---

(அ) முமுக்ஷுத்துவம்:—மோக்ஷவிருப்பமுடைமை,
(கூ) தவம்: —தனது தர்மத்திலிருத்தல்,
(க0) சத்தியம்: —சமதரிசனம்,
(கக) தயை:—அந்நியதுக்கத்தை நீக்க விரும்புதல்,
(கஉ) ஸ்மிருதி:—முன்பின் விசாரித்தல்,
(கங) துஷ்டி:—கிடைத்ததைக் கொண்டு சந்தோஷித்தல்.
(கச) தியாகம்:—பணத்தைச் செலவிடுமியல்பு=தகுதியில்லாத செய்கையில் நாணுதல்=கொடுக்குமியல்பு,
(கரு) சுவநிர்விருத்தி:—ஆத்மாவினிடத்துப்பிரியம்,
(கசு) மானமின்மை:—தனது குணத்தைப் புகழாதிருத்தல்,
(கஎ) இடம்பமின்மை:—தனது தர்மத்தை வெளியிடாமை,
(கஅ) அஹிம்சை.—பிறருக்குத்துன்பஞ் செய்யாதிருத்தல்,
(ககூ) க்ஷமை:—திதிக்ஷை. அது முன் சொல்லப்பட்டது,
(உ0) ஆர்ஜவம்:—வக்கிரமின்மை; நேர்மை,

இவைமுதலிய கீதையின் கசு-வது அத்தியாயத்தில் சொல்லப்பட்டனவாகிய தெய்வசம்பத்துக்களும் கொள்ளப்படும்.

* ருங. "எனக்கு இது வேண்டும், இது வேண்டும்" என்னும்வடிவினதாகிய இச்சை காமமாம்.

* ருச. தனக்கும் பிறருக்கும் சந்தாபத்தை உண்டாக்கும் தாபமுடைய விருத்தி குரோதமாம். இதனையே துவேஷமென்றும் கூறுவர்.

* ருரு. பிறர்பொருளை விரும்புதல் லோபம்.

* ருசு. உற்சாகவிசேஷமாகிய செய்கை பிரயத்தினம்.

* ருஎ. முதலியவென்னுஞ் சொல்லால்

(க) யாகமுதலிய வியாபாரம்,
(உ) மதம்: —தர்ப்பம்,
(ங) பேராசை:—கிடைத்ததில் சந்தோஷமில்லாமை,
(ச) ஸ்தம்பம்: —கர்வம்,
(ரு) வாழ்த்து:—பொருள் முதலியவற்றின் இச்சையால் கடவுள் முதலியோரைப் பிரார்த்தித்தல்,
(சு) பேதம்: —நான் வேறு இது வேறு என்னும் பேதபுத்தி,
(எ) சுகம்:—விஷயானுபவம்,
(அ) மதோற்சாகம்:—மதத்தால் யுத்தமுதலியவற்றில் ஆக்கிரகித்தல்,
(கூ) புகழை விரும்புதல்,
(க0) ஆசியம்:—பரிகாசம்,
(கக) வீரியம்:—பிரபாவத்தைப் பிரகடனஞ் செய்தல்,
(கஉ) பலமாக முயற்சித்தல்,
(கங) இராகம்: —சுகத்தை விரும்புதல்

இவைமுதலிய அசுரசம்பத்துக்களும் கொள்ளப்படும்.

(வி-ம்.)

வெளிப்படையாயிருத்தலால் இதற்கு வியாக்கியானம் எழுதப்படவில்லை. (கச)

[௮0] आलस्यभ्रांतितंद्राद्या विकारास्तमसोत्थिताः ।
सात्विकैः पुण्यनिष्पत्तिः पापोत्पत्तिश्च राजसैः ॥ १५ ॥

(அ-கை.)

இதுவுமது.

आलस्यभ्रांतितंद्राद्याः विकाराः तमसा उत्थिताः ॥

(சு-ம்.)

* ருஅ. சோம்பல், * ருகூ. மயக்கம், * சு0. தந்திரை * சுக. முதலிய மூடவிருத்தியாகிய விகாரங்கள் தமோகுணத்தினால் உண்டானவைகளாம்.

---

* ருஅ. இச்சையில்லாமையாலாம் உற்சாகத்தின் பிரதிபந்தம் அல்லது முயற்சியின்மை ஆலசியமாம் (சோம்பலாம்).

* ருகூ. ஒரு வஸ்துவில் வேறொன்று தோற்றுதல் பிராந்தியாம். இதனையே மோக மென்றும் மயக்க மென்றும் கூறுவர்.

* சு0. தூக்கத்தின் ஆதியில் உண்டாகும் சோம்பல் தந்திரையாம்.

* சுக. முதலிய என்னுஞ் சொல்லால்

(க) பிரமாதம்:—வேறு காரியத்திலுள்ள விருப்பத்தால் கருதிய கர்த்தவ்வியத்தைச் செய்யாதிருத்தல்,

(உ) நித்திரை:—விருத்தியினொடுக்கம்,

(ங) அப்பிரகாசம்:—அவிவேகம்,

(ச) அப்பிரவிருத்தி:—பிரவிருத்தியில்லாமை.

(ரு) கிருபணத்வம்:—பணமுதலியவற்றைக் கொடுத்தலில் தாராளமின்மை,

(சு) அநிருதம்:—பொய்,

(எ) இம்சை:—பிறரை வருத்தல்,

(அ) சிரமம்,

(கூ) கலகம்,

(க0) சோகம்:—இழந்ததைச் சிந்தித்தல்,

(கக) விஷாதம்:—துன்பம்,

(கஉ) தீனத்துவம்:—ஏழைமை,

(கங) ஆசை:—எனக்கு இது ஆகுமென்னும் நோக்கம்,

(கச) பயம்,

(கரு) ஜடத்துவம்:—அறிவின்மை,

இவைமுதலிய அசுரசம்பத்துக்களும் கொள்ளப்படும்.

௪. குணங்களினது விகாரங்களின் பயனையும் அந்தக்கரணமுதலியவற்றின் எஜமானாகிய சிதாபாஸனையும் கூறுதல்.

(அ-கை.)

வைராக்கியமுதலிய விருத்திகளின் காரியத்தைப் பகுத்துக்காட்டுகின்றார்:—

सात्विकैः पुण्यनिष्पत्तिः च राजसैः पापोत्पत्तिः

(சு-ம்.)

சத்துவகுணத்தாலாகிய விருத்திகளால் புண்ணியத்தின் உற்பத்தியும் இரஜோகுணத்தாலாகிய விருத்திகளால் பாபத்தின் உற்பத்தியும் உண்டாகின்றன. (கடு)

[அக] तामसैर्नोभयं किंतु वृथायुःक्षपणं भवेत् ।
अत्राहं प्रत्ययी कर्तेत्येवं लोकव्यवस्थितिः ॥ १६ ॥

(அ-கை.)

இதுவுமது.

तामसैः न उभयं किन्तु वृथा आयुःक्षपणं भवेत् ॥

(சு-ம்.)

தமோகுணத்தினாலாகிய விருத்திகளால் புண்ணியபாபங்களிரண்டுமுண்டாகிறதில்லை, ஆனால் வீணாகவே ஆயுள் க்ஷயமாகின்றது.

(அ-கை.)

இவ்வைராக்கியமுதலிய மனதின் விருத்திகள் புத்தியாகிய அந்தக்கரணத்திலிருத்தலால் அந்தக்கரண * கஉ. முதலிய எல்லாவற்றிற்கும் எஜமானைக் கூறுகின்றார்:—

अत्र "अहं" इति प्रत्ययी कर्ता एवं लोकव्यवस्थितिः ॥

(சு-ம்.)

இவற்றில் நான் என்னும் பிரத்தியயமுடையவன் எஜமானாகும் (பிரபுவாம்). இப்படி உலகத்தில் வியவஸ்தை யிருக்கின்றது.

* கஉ. இங்கே முதலியவென்னுஞ் சொல்லால் அந்தக்கரணவிருத்தியும் இந்திரியமுதலியவைகளும் கொள்ளப்படும்.

(வி-ம்.)

இவற்றில் (அந்தக்கரணத்திலும் அதன் விருத்திகளிலும்) * ௯௬. நா னென்னும் விருத்தியுடையது கர்த்தா (பிரபு)வாம்; உலகத்தில் காரியத்தைச் செய்பவன் பிரபு (எஜமானன்) என்று சொல்லப்படுதலால். (௧௬)

ரு. முன்(௯எ-அக)சுலோகம்வரையிற்கூறிய ஜகத்து பூதங்களின் காரியமா மென்னும் நிச்சயம் அஉ.

[அஉ] स्पष्टशब्दादियुक्तेषु भौतिकत्वमतिस्फुटम् ।
अक्षादावपि तच्छास्त्रयुक्तिभ्यामवधार्यताम् ॥ १७ ॥

இப்படி ஜகத்தின் ஸ்திதியைக் கூறி இப்போது அந்த ஜகத்து பௌதிகம் (பூதங்களின் காரியம்) என்றறியு முபாயத்தைக் கூறுகின்றார்:—

स्पष्टशब्दादियुक्तेषु भौतिकत्वम् अतिस्फुटम्

(சு-ம்.)

வெளிப்படையாகிய சப்தமுதலியவற்றோடுகூடிய பதார்த்தங் (கடாதி) களில் பௌதிகத்தன்மை மிகவும் வெளிப்படையாம்.

(வி-ம்.)

ஸ்பஷ்டமாகிய சப்தஸ்பரிசமுதலிய குணங்களோடுகூடிய கடமுதலிய பதார்த்தங்களில் பூதகாரியத்தன்மை * ௯௭. ஸ்பஷ்டமாகவே அறியப்படுகின்றது.

(அ-கை.)

அப்படியானால் இந்திரியமுதலியவற்றில் பௌதிகத்துவம் எப்படி நிச்சயிக்கப்படுகின்றதென் றாசங்கித்து, ஆகம (சுருதி) அநுமானப்பிரமா

* ௯௬. "நான் கர்த்தா, நான் போக்தா, நான் பிரமாதா நான் சுகி, நான் துக்கி என்று அந்தக்கரணத்தில் நானென்னும் பிரத்தியயமு (விருத்தியு)டையதும்; நான் வைராக்கியமுடையவன், உதாரி, காமி, குரோதமுள்ளவன், உலோபி, பிரயத்தனசீலன், சோம்பலுடையவன், பிராந்தன் என்னும் இவைமுதலிய அந்தக்கரணவிருத்திகளில் நான் என்னும் பிரத்தியயமுடையதுமாகிய சாபாச அகங்காரம்.

* ௯௭. பிதாவின் ஏதேனும் ஒரு குணம் புத்திரனிடத்திருத்தலால் அவன் இவன் புத்திரனென்று அறியப்படுவதுபோல, ஆகாயத்தின் குணமாகிய சப்தம் வாயுவிலிருத்தலால் வாயு ஆகாயத்தின் காரியமாம். இப்படிப் பின்பின் வாயுமுதலியவற்றின் குணங்களாகிய ஸ்பரிசமுதலியவற்றோடுகூடிய பின்பின்னுள்ள தேயுமுதலியவை அந்தந்த வாயுமுதலியவற்றின் காரியமா மென்று ஸ்பஷ்டமாக அறியப்படுகின்றன. அதுபோலப்பூதங்களின் குணங்களோடுகூடிய கடமுதலியனவும் பூதங்களின் காரியமா மென்று ஸ்பஷ்டமா யறியப்படுகின்றன.

ணங்களால் இந்திரியமுதலியவற்றில் பூதத்தின் காரியத்தன்மை நிச்சயிக்கப்படுகின்றதெனக் கூறுகின்றார்:—

अक्षादौ अपि शास्त्रयुक्तिभ्यां तत् अवधार्यताम् ॥

(சு-ம்.)

இந்திரிய * சுடு. முதலியவற்றிலும் சுருதி அநுமானங்களால் அந்தப் பௌதிகத்துவம் நிச்சயிக்கப்படுக.

(வி-ம்.)

"अन्नमयं हि सौम्य मन आपोमयः प्राणस्तेजोमयी वाक् சௌமியனே! நிச்சயமாக மனம் * சுசு. அந்நமயம்; பிராணன் * சுஎ. ஜலமயம்; வாக்கு

---

* சுடு. முதலியவென்னுஞ் சொல்லால் மனமும் மனோவிருத்தியும் பிராணனும் தேகமும் கொள்ளப்படுகின்றன.

ஞானேந்திரியங்கள் எதனால் ஒவ்வொரு பூதங்களின் குணத்தை அறிபவைகளாயிருக்கின்றனவோ, அதனாலும் பூதசம்பந்தமுடையனவாயிருத்தலால் ஒவ்வொரு பூதத்திற்கு ஒவ்வொன்று காரியமாமென்னும் நிச்சயமுண்டாகின்றது. அவற்றுள், தொக்கும் நேத்திரமும் கிரமமாக ஸ்பரிசத்தையும் உருவத்தையும் அவற்றின் ஆசிரயமாகிய கடமுதலிய திரவியங்களையும் கிரகிப்பனவாம். சுரோத்திரமும் சிங்ஙுவையும் கிராணமும் கிரமமாகச் சத்தரசகந்தங்களைக் கிரகிப்பனவாம். இங்குச் சிறிது விசேஷமிருக்கின்றது. விஸ்தாரமும் கடினமுமாமென்றஞ்சி யதனை வரையாது விடுத்தனம்.

ஒவ்வொரு பூதத்தின் முற்கூறிய ஒவ்வொரு குணத்தை நிர்வகிப்பது கர்மேந்திரியமாம். அவற்றுள் ஆகாயத்தின் குணமாகிய சத்தத்தை வசனித்தற்கிரியைவாயிலாக நிர்வகிப்பது வாக்காம். இப்படியே எல்லாவற்றிலும் அறிந்துகொள்க. ஆகையால் கர்மேந்திரியமும் பூதசம்பந்தமாயிருத்தலால் பூதங்களின் காரியமாம்.

மனம் சகல பூதங்களின் குணத்தையும் சகல இந்திரியங்களின்வாயிலாகவும் வெளிப்பட்டுக் கிரகிப்பதாயிருத்தலால் அம்மனம் சேர்ந்துள்ள பஞ்சபூதங்களின் காரியமாம். ஆனால் (க) சுரோத்திரமுதலியவைகள் ஞானத்திற்குச் சாதனமாயிருத்தலால் இவை பூதங்களின் சத்துவகுண அம்சத்தின் காரியமாம். (உ) வாக்குமுதலியன கிரியைக்குச் சாதனமாயிருத்தலால் அவை பூதங்களின் இரஜோகுண அம்சத்தின் காரியமாம். (ங) அந்தக்கரணம் எல்லாஞானத்திற்கும் சாதனமாயிருத்தலால் அது பூதங்களினது சத்துவகுணத்தின் காரியமாம். இவ்வளவு பேதமுண்டு.

* சுசு. இங்கே அந்நமென்னுஞ் சொல்லால் அந்நத்திற்கு உபாதானமாகிய பிருதிவியும் அர்த்தத்தால் கொள்ளப்படும். அந்நத்தின் ஸ்தூலபாகத்தால் மலமும், மத்திமபாகமாகிய இரசத்தால் மாம்சமும் உண்டாகின்றன. தயிரின் சூக்ஷ்மபாகத்தால் வெண்ணெயுண்டாவதுபோல அந்நத்தின் புண்ணியபாபவடிவ சூக்ஷ்மபாகத்தால் மனமுண்டாகின்றது. பாலர்களது மனம் அந்நமில்லாமையால் இல்லாததுபோலிருக்கின்றது. அது அந்நத்தைப் புசித்தலால் விருத்தியடைகின்றது. பிருதிவியின் காரியமாகிய அந்நமுதலியவற்றைச் சாப்பிடுதலால் மனம் விருத்தியாகின்றது. அவ்வந்நத்தைப் பதினைந்து நாள்வரையிலும் சாப்பிடாவிட்டால் நசிக்கின்றது அதாவது மறைகின்றது. ஆதலால் மனம் பிருதிவிபூதத்தின் காரியமாம். இது சாமவேதத்திலுள்ள சாந்தோக்கிய உபநிஷத்தின் ஆறுவதுபிரபாடகமென்னும் பிரகரணத்தில் தேயு, அப்பு, பிருதிவி என்னும் மூன்று பூதங்களின் சிருஷ்டிக்கிரமமாய்ச் சொல்லப்பட்டிருக்கின்றது.

* சுஎ. குடிக்கப்பட்ட ஜலத்தின் ஸ்தூலபாகத்தால் மூத்திரமும், மத்திமபாகத்தால் இரத்தமும், சூக்ஷ்மபாகத்தால் பிராணனுமுண்டாகின்றன. பதினைந்து நாள்

* சுஅ. அக்கினிமயம்" என்னும் இவைமுதலியன சாஸ்திரமாம் (சுருதியாம்). இது அநுமானமாம்:—விவாதத்திற்கு விஷயமாகிய சுரோத்திரமுதலிய இந்திரியங்கள் ஆகாயமுதலிய பூதங்களின் காரியமாகத்தக்கனவாம்; பூதங்களின் அந்வயவியதிரேகத்தை அநுசரித்தனவாயிருத்தலால்; எது எதன் அந்வயவியதிரேகத்தை அநுசரித்ததாயிருக்கின்றதோ அது அதன் காரியமாகக் காணப்பட்டிருக்கின்றது. அது மண்ணின் அந்வயவியதிரேகத்தை அநுசரித்ததாகிய கடம் மண்ணின் காரியமாதல்போலவாம். இச்சுரோத்திரமுதலிய இந்திரியங்களும் பூதங்களின் அந்வயவியதிரேகத்தை * சுகூ. அநுசரித்தனவாயிருத்தலால் அத்தன்மைய பூதங்களின் காரியமாம். "षोडशकल: सौम्य पुरुष: சௌம்மியனே (சுவேதகேதுவே)! இந்தப் * எ0. புருஷன் * எக. பதினாறு கலையுடையவன்" என்னும் இவைமுதலிய வாக்கியத்தால் சாந்தோக்கியசுருதியில் மனம் பூதங்

---

வாயில் நீர் அருந்தாவிட்டால் பிராணனுக்கு வியாகூலமுண்டாகித் தேகத்தினின்றும வெளிப்படுமாகையால் பிராணன் அப்புப்பூதத்தின் காரியமாம். இது சாந்தோக்கியத்திலுள்ளது.

* சுஅ. சாப்பிடப்பட்ட அக்கினியின் (சூடுள்ள பதார்த்தங்களாகிய நெய்முதலியவற்றின்) ஸ்தூலபாகத்தால் எலும்பும், மத்திமபாகத்தால் மேதையு(கொழுப்பு)ம், சூக்ஷ்மபாகத்தால் வாக்கு முண்டாகின்றன. சரீரத்தில் மிகுந்த குளிர்ச்சியால் சூடு மறையுங்காலத்து வாக்குத் தடைப்படுகின்றது. ஆகையால் வாக்குத் தேயுவின் காரியமாம். வாக்கைச் சொன்னமையால் மற்ற இந்திரியங்களின் பௌதிகத்தன்மையினையு மறிந்துகொள்க.

* சுகூ. மண்ணிருந்தால் கடமுண்டாம், மண்ணில்லாதிருந்தால் கடமுண்டாகாதென்னும் அந்வய (உண்மை) வியதிரேகங்(இன்மை)களை அநுசரித்தது கடமாம். அதுபோல முன் டிப்பணத்திற் கூறியவிதமாகப் பிருதிவிமுதலிய பூதங்களிருந்தால் வாக்குமுதலியவைகளு மிருக்கும். உவை இல்லாவிட்டால் இவைகளு மிரா. ஆகையால் பூதங்களின் அந்வயவியதிரேகங்களை அநுசரித்தவை இந்திரியங்களாம்.

* எ0 பிரஹ்மத்திற்கு அபின்னமாகிய பிரத்தியகாத்மா பிண்டப் பிரஹ்மாண்டங்களில் பூர்ணமாயிருத்தலால் புருஷனும். அவர் அவித்தையால் தன்னிலாரோபிக்கப்பட்ட உபாதியாகிய பதினாறுகலைவடிவ அவயவங்களை யுடையவராய்ச் சொல்லப்படுகின்றனர். யதார்த்தமாகவோ அவர் நிஷ்களரென் றறியத்தக்கவர்.

* எக. "அப்பரமாத்மா சமஷ்டிப்பிராணனை (அபஞ்சீகிருதபூதமும் அவற்றின் காரியமுமாகிய இவற்றின் சமஷ்டிரூப சூத்திராத்மா வென்னும் பெயரோடு கூடிய இரணியகருப்பனை)ச் சிருஷ்டித்தார். அந்தச் சமஷ்டிப்பிராணனால் சிரத்தையை(நற்கருமத்திற் பிரவிருத்தித்தற்கேதுவை)யும், ஆகாயம், வாயு, ஜோதி, (தேயு) ஜலம், பிருதிவி, தசேந்திரியம், மனம், அந்நம் என்பவற்றையும் சிருஷ்டித்தார். அந்நத்தால் (புசித்தல்வாயிலாக) வீரிய(பல)ம், (பலத்தினாற் சாதிக்கத்தக்க)தபம், (இருக்குமுதலிய) மந்திரம், (மந்திரத்தாற் சாதிக்கத்தக்க யஞ்ஞமுதலிய)கர்மம், (சொர்க்கமுதலிய) உலகம், அவ்வுலகங்களிலுள்ள (தேவதத்தன் யஞ்ஞதத்தன் முதலிய)பெயர்கள் என்னும் இவை எல்லாவற்றை (கசு-கலைகளை)யும் சிருஷ்டித்தார்" என்னும் பிரசின உபநிஷத்தின் கடைசியாகிய ஆறுவது பிரசின (பிரகரண)த்திலுள்ள சுருதியில் பதினாறு கலைகள் சொல்லப்பட்டிருக்கின்றன. அவற்றுள் மனமும் எண்ணப்பட்டிருக்கின்றது. அம்மனம் சமஷ்டிப்பிராண(சேர்ந்துள்ள சூக்ஷ்மபூதங்களி)னது காரியம் என்னப்பட்டிருக்கின்றது; அதனால் மனம் பூதங்களின் அந்வயவியதிரேகத்தை அநுசரித்ததாம்.

களின் அந்வயவ்யதிரேகத்தை அநுசரித்ததாமெனக் கேட்கப்பட்டிருக்கின்றது. அப்படியே அந்நிய கர்மேந்திரியம் பிராணன்முதலியவற்றினும் மறிக. (௧௭)

௨. "சௌமியனே! சிருஷ்டிக்குமுன் இது (ஜகத்து) ஒரே அத்விதீய சத்தாயிருந்தது" என்னும் சுருதியால் சத்தை (அத்விதீயத்தைப்) பிரதிபாதித்தல் அங்-௧௧௧.

௧. சுலோகம் ௬௬-ல் கூறிய சுருதியின் அர்த்தம் அங்-௬௦.

௧. இதுவென்னும் பதத்தின் பொருள்.

[அங.] एकादशेंद्रियैर्युक्त्या शास्त्रेणाप्यवगम्यते ।
यावत्किंचिद्भवेदेतदिदंशब्दोदितं जगत् ॥ १८ ॥

(அ-கை.)

இப்படிப் பூதங்களையும் பௌதிகங்களையும் பிரித்துக்காட்டி இப்பிரகரணத்தின் ஆதியிலுள்ள "सौम्येदमग्र आसीत् சௌமியனே! இது(ஜகத்து) முன்சத்தாகவே இருந்தது" என்னும் அத்விதீயப்பிரஹ்மத்தைப் பிரதிபாதிக்கும் சுருதியை வியாக்கியானம் செய்பவராய் அவ்வாக்கியத்திலுள்ள "இது" வென்னும் பதத்தின் அர்த்தத்தைக் கூறுகின்றார்:—

एकादशेंद्रियैः युक्त्या शास्त्रेण अपि यावत् किंचित् जगत् अवगम्यते एतत् इदंशब्दोदितं भवेत् ॥

(சு-ம்.)

*௭௨. பதினொரு இந்திரியங்களாலும் *௭௩. யுக்தியினாலும் *௭௪. சாஸ்

---

* ௭௨. இங்கே ஞானேந்திரியபஞ்சகம் கர்மேந்திரியபஞ்சகம் மனம் என்பன பதினொன்று. அவற்றுள் ஐந்து ஞானேந்திரியமாகிய [ஞ] பிரத்தியக்ஷப்பிரமாணத்தால் பிரத்தியக்ஷப்பிரமாவின் [ஞ] சப்தமுதலிய விஷயங்கள் அறியப்படுகின்றன. கர்மேந்திரியங்களைந்தால் வசனம் ஆதானமுதலிய சகலக் கிரியைகளும் அந்தக் கிரியைகளின் விஷயங்களாகிய சொல்லப்படுவது கொடுக்கப்படுவது முதலியனவும் கொள்ளப்படும்; மனதினுடைய ஆந்தர(மானச)ப்பிரத்தியக்ஷப்பிரமாவின் விஷயமான சுகமுதலியனவும், பிரத்தியக்ஷ அநுமிதிப்பிரமாமுதலிய சகல வஸ்துக்களின் ஞானமும் கொள்ளப்படுகின்றன.

* ௭௩. யுக்தி என்பது அநுமானப்பிரமாணத்திற்காம். அதனால் அநுமிதிப்பிரமாவின் விஷயங்கள் கொள்ளப்படுகின்றன.

* ௭௪. சாஸ்திரமென்பது சத்தப்பிரமாணமாம். அதனால் சப்தஜந்யஞானமாகிய சாப்திப்பிரமாவின் விஷயமாகிய பரோக்ஷமான சுவர்க்காதிகளும், தர்மாதிகளும், அபரோக்ஷமான மனமுதலியனவும் கிரகிக்கப்படுகின்றன.

திரத்தின்* எடு.வும் யாதொன்று அறியப்படுகின்றதோ அந்த ஜகத் தானது எல்லாச்சுருதிகளிலும் இஃதெனுஞ் சொல்லாற் கூறப்பட்டிருக் கின்றது.

(வி-ம்.)

பிரத்தியக்ஷ(மனதோடு ஞானேந்திரிய) முதலிய(கர்மேந்திரிய)சகலப் பிரமாணங்களாலும், உம்மையால் சத்தம் அருத்தாபத்திமுதலிய *எசு. பிரமாணங்களின் ஞானத்தாலும் எவ்வளவு பிரபஞ்சம் அறியப்படுகின் றதோ அது முழுவதும் "முன் 'இந்த' ஜகத்து சத்தாகவே யிருந்தது" என்னுஞ் சுருதிவாக்கியத்திலுள்ள * என. "இது" என்னும் பதத்தால் சொல்லப்பட்டிருக்கின்றது. (கஅ)

உ. சுருக்கமாக கசு-வது சுலோகத்திற்கூறிய சுருதியினை அர்த்தத்தாற் படித்தல்.

[அசு] इदं सर्वं पुरा सृष्टेरेकमेवाद्वितीयकम् ।
सदेवासीन्नामरूपे नास्तामित्यारुणेर्वचः ॥ १९ ॥

(அ-கை.)

இப்படி இதுவெனும் சத்தத்தைக் கூறி இனி அந்த (கசு-ல் கூறிய) சுருதியை அர்த்தத்தாற் சொல்லுகின்றார் :—

---

* எடு. உம்மையால் எஞ்சிய உபமான அர்த்தாபத்தி அநுபலப்திப்பிரமா ணங்களும் கொள்ளப்படும். அவற்றால் உபமிதிப்பிரமாவின் விஷயமான உபமேய பதார்த்தமும், அர்த்தாபத்திப்பிரமாவின் விஷயமான உபபாதகமும், அபாவப்பிரமா வின் விஷயமான ஐவகை அபாவமும், சகலப்பிரமாணங்களையும் விஷயஞ்செய்யும் அவற்றின் ஞானமும் கிரகிக்கப்படுகின்றன.

* எசு. பிரமாணங்களின் ஞானங்களால் அந்த ஞானங்களின் விஷயமாகிய பிரமாணவடிவப்பிரபஞ்சமும் கிரகிக்கப்படுகின்றன.

* என. வர்த்தமானகாலத்திற்கு முன்னிடத்தோடுள்ள சம்பந்தம் இது எனும் சப்தத்திற்கு அர்த்தமாகையால் சகலப்பிரமாணஜந்ய ஞானத்திற்கும் விஷயமாகும் பரோக்ஷ அபரோக்ஷ பூத பவிஷியத்து வர்த்தமானகாலங்களிலுள்ள பதார்த்தமா கிய சர்வப்பிரபஞ்சமும், இஃது எனும் பதத்திற்கு அர்த்தமாதல் பொருந்தாது. என் னலும் சர்வஞ்ஞ ஈசுவரனது பார்வையால் அல்லது சர்வஞ்ஞராகிய உத்தாலகமுனி வரரது பார்வையால் சகல பதார்த்தங்களும் அபரோக்ஷமாதலால் நேரி (முன்னி) டத் திற்றானே இருப்பனபோன் றிருக்கின்றன. எல்லாக்காலமும் ஏகரசமாய்த் தோற்று தலால் வர்த்தமானத்திற்குச் சமமாம். ஆதலால் ஈசுவரனுலாவது அல்லது உத்தா லகமுனிவரராலாவது உச்சரிக்கப்பட்ட முற்கூறிய சுருதியிலுள்ள இதுவெனும் பதத் திற்கு அர்த்தம் சர்வகாலசம்பந்தியாகிய சகல பதார்த்தங்களுமாதல் பொருந்தும்.

"इदं सर्वं सृष्टेः पुरा एकं एव अद्वितीयकं सत् एव आसीत् नामरूपे न आस्तां" इति आरुणेः वचः ॥

(சு-ம்.)

"தோற்றுகின்ற இந்தச் சகலஜகத்தும் சிருஷ்டிக்குமுன் ஒரே இரண்டற்ற சத்காரணமாகவே இருந்தது. நாமரூபங்கள் இல்லவே இல்லை" என்று ஆருணி என்னும் உத்தாலகரது வசன மிருக்கின்றது.

(வி-ம்.)

இது அருணி என்னும் இருஷியினது புத்திரராகிய உத்தாலகமுனிவர் தனது புத்திரனாகிய சுவேதகேதுவை நோக்கிக் கூறிய வசனமாம். (கசு)

ரு. உலகத்துள்ள சுவகதமுதலிய மூன்றுபேதம்.

[அ௭] वृक्षस्य स्वगतो भेदः पत्रपुष्पफलादिभिः ।
वृक्षांतरात्सजातीयो विजातीयः शिलादितः ॥ २० ॥

(அ-கை.)

முற்கூறிய சுருதியிலுள்ள "ஒரு" "ஏ" "அத்துவிதியம்" என்னும் மூன்றுபதங்களால் சத்வஸ்துவில் அடைந்திருக்கும் சுகதமுதலிய மூன்றுபேதங்களையும் நிவர்த்திக்க உலகத்திலுள்ள சுகதமுதலிய மூன்று பேதங்களையும் முதலிற் காட்டுகின்றார்:—

वृक्षस्य पत्रपुष्पफलादिभिः स्वगतः भेदः वृक्षांतरात् सजातीयः शिलादितः विजातीयः ॥

(சு-ம்.)

விருக்ஷத்திற்கு இலை புஷ்பம் பழமுதலியவற்றினின்றும் *எஅ. சுகதபேதமும், வேறு விருக்ஷத்தினின்றும் * எகூ. சஜாதீய பேதமும், கல்முதலியவற்றினின்றும் * அ0 விஜாதீய * அக. பேதமும் இருக்கின்றன. (உ0)

* எஅ. சுவகதமென்பது அவயவத்திற்காம். அதனாலாகிய பேதம் சுவகதபேதம். இதனையே சுகதபேத மென்றும் கூறுவர். அது பிராஹ்மணனுக்குத் தனது அவயவமாகிய கைகால்முதலியவற்றினோடிருப்பதுபோலவாம்.

* எகூ. இனமுடையதாலாகிய பேதம் ஸஜாதீயபேதம். அது பிராஹ்மணனுக்கு அந்நியபிராஹ்மணனோடுள்ள பேதம்போலவாம்.

* அ0. வேறு ஜாதி (வேற்றினம்) உடையதாலாகிய பேதம் விஜாதீய பேதம். அது பிராஹ்மணனுக்குச் சூத்திரர்முதலியோர்களோடுள்ள பேதம்போலவாம்.

* அக. பரஸ்பர அபாவத்திற்கு (ஒன்றிலொன்றின்மைக்கு)ப் பேத மென்று பெயராம். அது கடத்திற்கும் படத்திற்குமுள்ள பேதம்போல. அதில் பரஸ்பர அநுயோகி (ஆசிரயம்) பிரதியோகி (நிரூபகம்)க ளிருக்கின்றன.

௬. சத்வஸ்துவில் அடையப்பட்ட மூன்றுபேதங்களைச் சுருதியின் மூன்று பதங்களால் நிவர்த்தித்தல்.

[அ௬] तथा सद्वस्तुनो भेदत्रयं प्राप्तं निवार्यते ।
ऐक्यावधारणद्वैतप्रतिषेधैस्त्रिभिः क्रमात् ॥ २१ ॥

(அ-கை.)

இப்படி அநாத்மவஸ்துக்களில் மூன்று பேதத்தைக் காட்டிச் சத்வஸ்துவாகிய பிரஹ்மத்திலும் வஸ்துத்தன்மையின் பிராந்தியால் அடையப்பட்ட அம்மூன்று பேதங்களையும் சுருதியானது மூன்றுபதங்களால் நிவிருத்திக்கின்றதெனக் கூறுகின்றார்:—

तथा सद्वस्तुनः प्राप्तं भेदत्रयं ऐक्यावधारणद्वैतप्रतिषेधैः त्रिभिः क्रमात् निवार्यते ॥

(சு-ம்.)

அப்படியே சத்வஸ்துவை அடைந்த சுகதமுதலிய மூன்றுபேதங்களும் ஐக்கியம், நிச்சயம், துவிதத்தை நிஷேதித்தலென்னும் பொருளுடைய மூன்று சுருதியிலுள்ள பதங்களால் கிரமமாக நிவிருத்திக்கப்படுகின்றன.

(வி-ம்.)

வஸ்துத்தன்மையின் சமத்துவத்தால் அநாத்மாவைப்போல சத்ரூபமாகிய ஆத்மவஸ்துவினிடத்திலும் அடையப்பட்ட சுவகதமுதலிய மூன்றுபேதங்களுண்டு. அப்பேதங்கள் ஏகத்துவம், அவதாரணம் (நிச்சயம்), துவைதநிஷேத மெனப்படும் முப்பொருள்வாசகமான ஏகம், ஏவ, அத்விதீயம் என்னும் மூன்றுபதங்களால் கிரமமாக நிவிருத்திக்கப்படுகின்றன என்பது பொருள். (உ-க)

௭. சத்வஸ்துவில் சுவகதபேதத்தைக் கண்டித்தல்.

[அ௭] सतो नावयवाः शंक्यास्तदंशस्यानिरूपणात् ।
नामरूपे न तस्यांशौ तयोरद्याप्यनुद्भवात् ॥ २२ ॥

(அ-கை)

முதலில் சத்வஸ்துவின் சுகதபேதம் சங்கை செய்யத்தக்கதன்று. இந்தச் சத்வஸ்து அவயவமில்லாததாயிருத்தலால் எனக் கூறுகின்றார்:—

सतः अवयवाः संक्याः न तदंशस्व अनिरूपणात् ॥

(த-ம்.)

*சத்தின் அங்கங்கள் சங்கிக்கத்தக்கவைக ளன்று; அந்தச் சத்தின் அவயவங்கள் * அ௨. நிரூபிக்கப்படாமையால்.*

(அ-கை.)

*அப்படியானால் நாமரூபங்கள் ஏன் சத்தினவயவங்களாகா வென்று ஆசங்கித்துச் சிருஷ்டிக்குமுன் அந்நாமரூபங்கள் இல்லாமையால் நாமரூபங்கள் சத்தினம்சமாகாவெனக் கூறுகின்றார் :—*

नामरूपे तस्य अंशौ न तयोः अद्य अपि अनुद्भवात् ॥

(த-ம்.)

*நாமரூபங்களிரண்டும் அந்தச் சத்தின் * அ௩. அம்சங்கள் அல்ல; அவற்றிற்கு இதுவரையிலும் அதாவது சிருஷ்டிக்கு முற்காலம்வரையிலும் உற்பத்தி யில்லாமையால்.* (௨௨)

---

* அ௨. சத்வஸ்து ஜடமாயின் சாவயமாதல் பொருந்தும். சத்வஸ்துவை ஜடமென்றால், "சத்வஸ்து விநாசியம்; ஜடமாகையால்; எது ஜடமோ அது விநாசியாகக் காணப்படுகின்றது; கடம் முதலியவற்றைப்போல" என்னும் அநுமானப்பிரமாணத்தால் சத்வஸ்துவிற்கு அசத்துத்தன்மை உண்டாகும். ஆகையால் சத்வஸ்து ஜடமன்று; சேதனமாம். அந்தச் சேதனமாகிய சத்வஸ்து சாவயமாதல் பொருந்தாது அதனைச் சாவயவமென்போனைச் சத்வஸ்துவின் அவயவம் சேதனமா? அல்லது அசேதனமா? என்று கேட்கவேண்டும் சேதனமெனின், சத்வஸ்துவினும் பின்னமா? அபின்னமா? பின்னமென்றால் அத்விதீயத்வத்தைப் பிரதிபாதிக்கும் அநேகசுருதிகளுக்கு விரோதமாம். அபின்னமென்றால் சத்வஸ்துவிற்கும் அவற்றிற்கும் அவயவ அவயவித்தன்மை (அங்காங்கிபாவம்) பொருந்தாது. ஜடமெனின், ஜடமாகிய அசேதன [illegible]ால் உண்டாக்கப்பட்ட சத்வஸ்துவும் நூல்களாலுண்டாக்கப்பட்ட ஜடமாகிய வஸ்திரத்தைப்போல ஜடமாம். ஆகையால் முற்கூறிய அநுமானத்தால் நாசமுடையதாயிருத்தலால் சத்துத்தன்மைக்குப் பங்கமுண்டாம். அதனால் சத்வஸ்துவின் அவயவங்கள் நிரூபிக்கப்படுவதில்லை.

* அ௩. சத்தென்னும் பெயரோ வியவகாரத்தின்பொருட்டுக் கற்பிக்கப்பட்டிருக்கின்றது. உருவமாகிய ஸ்தூலம், சூக்ஷ்மம், நெடுமை, குறுமை என்னும் வடிவங்கள் சத்துக்கில்லை. "ஸ்தூலமில்லாதது, அணுவல்லாதது, குறிவில்லாதது நெடியில்லாதது" என்னுஞ் சுருதியால் ஆகாரம் நிஷேதிக்கப்பட்டிருத்தலால் சத்து சித்து ஆநந்தமுதலியன சத்வஸ்துவின் அவயவங்க ளன்று; அதன் சொரூபமாம். ஏனெனின் கசப்பு, வசனை, குளிர்ச்சி யென்னும் மூன்றுகுணங்களும் சந்தனத்தினுடையவாம். ஆனால் அவை பிரிக்கப்படுகிறதில்லை. அதுபோலச் சத்துமுதலியவைகளும் பின்னமாகா, (க) சத்தானது சித்து ஆநந்தங்களுக்கு பின்னமாகுமாயின் ஜடமும் துக்கவடிவமுமாதலால் அசத்தாகும். (௨) சித்தானது சத்து ஆநந்தங்களுக்கு வேறாயின் அசத்தும் துக்கரூபமுமாதலால் ஜடமாகும். (௩) ஆநந்தமானது சத்துச்சித்துக்களுக்கு வேறாகுமாயின் அசத்தும் ஜடமுமாகுதலால் துக்கவடிவாம். ஆகையால்

[அஅ] नामरूपोद्भवस्यैव सृष्टित्वात्सृष्टितः पुरा ।
न तयोरुद्भवस्तस्मान्निरंशं सद्यथा वियत् ॥ २३ ॥

(அ-கை.)

சிருஷ்டிக்குமுன் நாமரூபங்கள் எதனுலில்லை என்றுசங்கித்துக் கூறுகின்றார்:—

नामरूपोद्भवस्य एव सृष्टित्वात् सृष्टितः पुरा तयोः उद्भवः न ॥

(சு-ம்)

நாமரூபங்களின் உற்பத்தியே சிருஷ்டிவடிவமாயிருத்தலால் சிருஷ்டிக்குமுன் அவற்றின் உற்பத்தியில்லை.

(அ-கை.)

சித்தித்த அர்த்தத்தைக் கூறுகின்றார்:—

तस्मात् यथा वियत् । सत् निरंशम् ॥

(சு-ம்.)

அதனுல் எப்படி ஆகாசம் அம்சமில்லாததாயிருக்கின்றதோ அப்படிச் சத்தாகிய பிரஹ்மம் நிரம்சமாம்.

(வி-ம்.)

இங்கே இது அநுமானமாம்:—சத்வஸ்து அவயத்தினுலாகிய சுவகத பேதமில்லாததாகத்தக்கதாப்; நிரவயவமாதலால்; ஆகாயத்தைப்போல(உ-ம்.)

சு. சத்வஸ்துவில் சஜாதீய பேதத்தின் கண்டனம்.

[அக] सदंतरं सजातीयं न वैलक्षण्यवर्जनात् ।
नामरूपोपाधिभेदं विना नैव सतो भिदा ॥ २४ ॥

(அ-கை.)

அப்படியானுல் சத்வஸ்துவிற்குச் சுவகதபேதமிருக்கவேண்டாம், சஜாதீயபேதம் ஏனிருக்கலாகாது என்றுசங்கித்து அச்சத்திற்குச் சமான ஜாதியுடைய வேறு சத்து சொல்லப்படவேண்டும். வேறு சத்து நிரூபிக்

பரஸ்பரம் பின்னமன்று; ஆனுல் எந்தப் பிரஹ்மம பாதிக் ப்படாத சத்தோ அது சித்தாம். எது குன்றாத பிரகாசவடிவ சித்தோ அது துக்கசம்பந்தமில்லாத ஆநந்தமாம். இப்படிச் சத்துமுதலியவைகள் சத்வஸ்துவாகிய பிரஹ்மத்தின் சொரூபமாம்; குணமும் அவயவமு மன்று, ஆகையால் சத்து நிரவயமாம்.

கக்கூடியதன்று. ஏனெனின், சத்துக்கு வேற்றுமை இல்லாமையால் எனக் கூறுகின்றார்:—

सजातीयं सदंतरं न वैलक्षण्यवर्जनात् ॥

(க-ம்.)

சத்திற்குச் * அச. சஜாதீயமாகிய வேறுசத்து இல்லை; சத்திற்கு வேறுபாடில்லாமையால். F.

(அ-கை.)

அப்படியானால் "கடமிருக்கிறது" என்பது கடத்தின் சத்தை "படமிருக்கிறது" என்பது படத்தின் சத்தை. இப்படிச் சகலவஸ்துக்களிலும் வேறு வேறு சத்தை தோற்றுகின்றது. இவ்வாறு சத்திற்கு வேறுபாடு தோற்றுகின்றதேயென்று ஆசங்கித்து ஆகாச பதாகாசங்களைப்போலச் சத்திற்கு நாமரூப உபாதியினாலாகிய பேதம் தோற்றுகின்றது; இயல்பாகச் சித்தித்தபேதம் தோற்றுகிறதில்லையெனக் கூறுகின்றார்:—

नामरूपोपाधिभेदं विना सतः भिदा न एव ॥

---

* அச. சத்து நானாவாகுமாயின் சத்திற்குச் சஜாதீயமாகிய வேறு சத்திருக்கும்; அச்சத்து நானாவாகாது. ஏனெனின், அந்த நானாவாகிய சத்தை வாஸ்தவமென்றால் அத்வைதத்தைப் பிரதிபாதிக்கும் அநேக சுருதிகளுக்கு விரோதமுண்டாகும். வாஸ்தவமாகிய நாநா சத்து பரிச்சின்னமா? வியாபகமா? பரிச்சின்னமாயின் தேசகால வஸ்துக்களினாலாகிய பரிச்சேதமாகிய அந்தமுடையதாயிருத்தலால் உற்பத்தி நாசமுடைமையால் அநித்தியமாம். ஆகவே அசத்துத்தன்மையின் அடைவு உண்டாகும். வியாபக அபரிச்சின்ன)மெனின், தேச கால வஸ்துக்களாலாகிய பரிச்சேதமில்லாததாயிருத்தலால் நாநா(அநேக)த்துவம் சம்பவியாது. அவற்றை (நாநா சத்துக்களை) அவாஸ்தவ (சத்தை) எனின், "என் தாய் மலடி" என்னும் வாக்கியம்போல வியாகாதமுண்டாகும். பாரமார்த்திக வியாவகாரிக பிராதிபாஸிகமென்னும் பேதத்தால் மூன்றுவிதமாகிய சத்தைக் கூறினும் பொருந்தாது. ஏனெனின், பணக்காரனது சத்தை(சாமர்த்தியம்) எதுவோ அது அவன் ஆசிரிதமுடையவனது சத்தையாகப் பிராந்தியினால் தோற்றுகின்றது. அவன்வாயிலாக அவனது வேலைக்காரனுடைய சத்தை தோற்றுகின்றது. ஆனால் அவற்றில் ஒரே சத்தை இருக்கின்றது. அதுபோல இங்கும் ஒரே பாரமார்த்திக "சத்து" இருக்கின்றது. அது வியாவகாரிக (கடமுதலிய) வஸ்துக்களிலும் பிராதிபாஸிக (சொப்பனமுதலிய) வஸ்துக்களிலும் ஸ்படிகத்தில் செஞ்சிறப்போல அந்யதாக்கியாதியாலாவது இரச்சுவிற்குச் சர்ப்பத்தோடுள்ள தாதாத்மியசம்பந்தத்தைப்போலச் சம்சர்க்காத்தியாசத்தால் அநிர்வசநீயக்கியாதியாலாவது தோற்றுகின்றது. இப்படிச் சத்திற்கு நாநாத்துவமில்லாமையால் சத்திற்குச் சஜாதீயமாகிய வேறு சத்து பொருந்தாது. ஆகையால் சத்து சஜாதீய பேதமில்லாததாம்.

(சு-ம்.)

நாமரூபமாகிய உபாதியின் பேதமின்றிச் சத்திற்கு வேற்றுமை இல்லை.

(வி-ம்:)

இங்கே இது அநுமானமாம்:—சத்வஸ்து சஜாதீய பேதமில்லாததா கத்தக்கதாம்; உபாதியைக் கொண்டாலல்லாமல் பேதம் தோற்றுமையால்; ஆகாயத்தைப்போல. (உ௪)

ஏ. சத்வஸ்துக்களில் விஜாதீயபேதத்தின் கண்டனம்.

[௬௦] विजातीयमसत्तत्तु न खल्वस्तीति गम्यते ।
नास्यातः प्रतियोगित्वं विजातीयाद्भिदा कुतः ॥ २५ ॥

(அ-கை.)

அப்படியானால் அப்போது சத்திற்கு விஜாதீயத்தோடு பேதமிருக் கட்டுமே என்றுசங்கித்துச் சத்தின் விஜாதீயம் அசத்தாம். அதற்கு அசத் தாயிருத்தலினாலேயே பிரதியோகியாதல் சம்பவியாமையால் அந்த அசத் துவடிவப் பிரதியோகியினுடைய * அநு. பேதமாகிய அந்நியோந்நியா பாவம் பொருந்தாதெனக் கூறுகின்றார்:—

* அநு. அந்நியோந்நியாபாவத்தைப் பேதமென்பர் ஒன்றிலொன்றை நிஷே திக்கும் அபாவத்தை அந்நியோந்நியாபாவமென்பர் அது கடம் படமல்ல, படம் கடமல்ல என்பதுபோல இங்கே கடபடங்களுக்கு அந்நியோந்நியாபாவமிருக்கின்றது. எதில் மற்றொன்றின் அபாவமிருக்கின்றதோ அது அபாவத்தின் அநுயோகியாம் (ஆசிரயமாம்) எதன் அபாவம் மற்றொன்றிலிருக்கின்றதோ அது அபாவத்தின் பிரதியோகி என்றும், நிரூபகம் (நிரூபணஞ்செய்வது) என்றும் சொல்லப்படுகின்றது. அநுயோகி பிரதியோகிகளின் ஞானபூர்வகமாக அபாவத்தின் ஞானம் உண்டாகின்றது. அஃதின்றி யுண்டாகிறதில்லை. ஆதலால் அபாவம் அநுயோகி பிரதியோகிகளின் அதீனமாம் அவ்வநுயோகி பிரதியோகிகளும் சத்ரூபமாக அபேக்ஷிக்கப்படு கின்றன; அசத்ரூபமாக அன்று. இங்குச் சத்தாகிய பிரஹ்மமென்னும் அநுயோகி யின் சத்திலுள்ள விஜாதீயவடிவபேத(அந்நியோந்நியாபாவ)த்தின் பிரதியோகி, வந்தியாபுத்திரன் முயற்கோடுமுதலியனவாகிய அசத்தாம் (சூனியமாம்) அது சொரூபமில்லாததாயிருத்தலால் இல்லவே இல்லை ஆகையால் அவ்வசத்திற்குப் பிரதியோகியாதல் பொருந்தாது. ஆதலால் அந்த அசத்தாகிய பிரதியோகியை யுடைய சத்தின் விஜாதீயபேதமும் பொருந்தாது சத்திற்கு விலக்ஷணமாகிய (பாதமாகத்தக்க மாயையும், அதன் காரியமாகிய) ஸ்தூல சூக்ஷ்மப்பிரபஞ்சமும் அசத்தென்னும் சத்தத்திற்குப் பொருளாம் அந்தப் பிரதியோகியுடையன சத்தின் விஜாதீயபேதம் என்போமாயின் அதுவும் பொருந்தாது. ஏனெனின் அவைகள் (மாயையும் அதன் காரியமும்) கண்ணாடியில் தோன்றும் நகரம்போலவும், சொப்பனத் தின் யானைமுதலியவற்றை போலும் இல்லாதனவாயிருந்து தோற்றிக்கொண்டிருத் தலால் பாரமார்த்திக (யதார்த்தத்தன்மையின்) அபாவத்தால் மித்தையாயிருத்த லால் அவற்றோடு சத்திற்கு விஜாதீயபேதம் என்றுமில்லை பிரளயகாலத்தில் சத் திற்கு வேறாய் மாயை எந்தப் பிரமாணத்தாலும் சித்தியாது. பிரபஞ்சத்திற்கோ உற்பத்தியுமில்லை. ஆகையால் அவற்றோடு சத்திற்கு விஜாதீயபேதம் பொருந்தாது. ஆதலால் சத்து விஜாதீயபேதமில்லாததாம.

विजातीयं असत् तत् तु "अस्ति" इति खलु न गम्यते । अतः अस्य प्रतियोगित्वं न । विजातीयात् भिदा कुतः ॥

(சு-ம்.)

(சத்தின்) விஜாதீயம் * அசு. அசத்தாம். அதுவோ "இருக்கிறது" என்று நிச்சயமாக அறியப்படுகிறதில்லை. ஆகையால் இவ்வசத்திற்குப் பிரதியோகித்தன்மை இல்லையெனின், சத்திற்கு விஜாதீயத்தினின்றும பேதம் எப்படிப் பொருந்தும்? (ஒருவிதத்தாலும் பொருந்தாதென்றபடி.) (உரு)

அ. பலித்தபொருள்.

[கூக] एकमेवाद्वितीयं सत्सिद्धमत्र तु केचन ।
विह्वला असदेवेदं पुराऽऽसीदित्यवर्णयन् ॥ २६ ॥

(அ-கை)

சித்தித்த அர்த்தத்தைக் கூறுகின்றார்:—

एकं एव अद्वितीयं सत् सिद्धम् ॥

(சு-ம்.)

ஒரே அத்துவிதீயசத்தான பிரஹ்மம் நிச்சயிக்கப்பட்டது.

உ. சூந்யவாதி(மாத்யமிகர்)களின் பூர்வபக்ஷமும் கண்டனமும் கூக-கக௯

க. சூந்யவாதியின் பூர்வபக்ஷத்தைக் கூறுதல்.

(அ-கை.)

இப்போது * அஎ. ஸ்தூணாநிகநநந்யாயத்தால் சத்தாகிய அத்துவிதீயத்தினையே திடமாக்கப் பூர்வபக்ஷத்தை (சங்கையை)க் கூறுகின்றார்:—

---

* அசு. சொரூபமல்லாத (துச்சமாகிய) வந்த்யாபுத்திரனும், சசவிஷாண (முயற்கொம்பு) முதலியனவும் அசத்தெனப்படும். அல்லது சத்தாகிய பாதமில்லாததற்கு விலக்ஷணமான அசாவது பாதமாகத்தக்க வியாவகாரிக அல்லது பிராதிபாஸிக அநிர்வசநீய மித்தியாபதார்த்தங்களும் (மாயையும் அதன் காரியமும்) சிலவிடத்து அசத்தெனும் பதத்திற்கு அர்த்தமாம். அவ்விரண்டு அர்த்தங்களுள் இங்கே பிரளயத்தில் இக்கூறியவிதமாகவோ அடையப்படுவது மில்லையாகலின் இங்கே அடையப்பட்ட முதல் அர்த்தம் கொள்ளப்படுகின்றது.

* அஎ. ஸ்தூணை என்பது குதிரைமுதலியவற்றைக் கட்டுவதற்குரிய கம்பம்; அதன் நிகநந மென்றால் திட அதிடத்தைப் பரீக்ஷித்த (அசைத்த) லோடு பூமியில் நாட்டுதல்; அதாவது அசைத்தால் அதிடமாம்; அதை மறுபடியும் சுடப்பாறைமுதலியவற்றைக் கொண்டடித்தலால் திடமாம்; இந்த நியாய(திருஷ்டாந்த)த்தால்

अत्र विह्वलाः केचन "असत् एव इदं पुरा आसीत्" इति अवर्णयन् ॥

(சு-ம்.)

இந்தச் சத்தாகிய அத்விதீயத்தில் வியாகூலமுடையவர்களாகிய சில சூனியவாதிகள் "சிருஷ்டிக்குமுன்னே இந்த ஜகத்து * அ-அ. அசத்தாகவே இருந்தது" என்று வர்ணித்தனர். (௨௬)

௨. சூனியவாதியின் வியாகூலத்தன்மையில் திருஷ்டாந்தமும் பிரமாணமும்.

[௯௨] मग्नस्याब्धौ यथाक्षाणि विह्वलानि तथास्य धीः ।
अखंडैकरसं श्रुत्वा निःप्रचारा बिभेत्यतः ॥ २७ ॥

(அ-கை.)

சூனியவாதிகளின் வியாகூலத்தன்மையில் திருஷ்டாந்தத்தைக் கூறுகின்றார்:—

अब्धौ मग्नस्य अक्षाणि यथा विह्वलानि ॥

(சு-ம்.)

சமுத்திரத்தில் மூழ்கினவனது இந்திரியங்கள் எப்படி வியாகூலமுடையனவாகின்றனவோ.

---

அதாவது இக்கம்பம் நாட்டுதலைப்போல மனமென்னும் சலனமுள்ள குதிரையைக் கட்டுதற்கு (நிறுத்துதற்குரிய) இடமாகிய அத்துவிதீய சத்தாகிய கம்பத்தைத் திடம் (நிச்சயிக்கப்பட்டது) அதிடம் (சந்தேகமுடையது) என்று பரீக்ஷித்தலோடு முமுக்ஷுவின் மதியாகிய பூமியில் நாட்டுதலாம் (சங்கை சமாதானங்களால் நிச்சயித்தலாம்). பூர்வபக்ஷமாகிய அசைப்பால் அசைய (சந்தேகத்தோடு கூடியதற்கு)மாயின், மறுபடியும் பூர்வபக்ஷ நிராகரண (சமாதான) மென்னும் கடப்பாரைமுதலியவற்றைக்கொண்டு இடித்தலால் திடமாகின்றது. இந்த ஏதுவால் கிரந்தகர்த்தா சூனியவாதிகளின் மதத்தின் பூர்வபக்ஷத்தை (சங்கையை) மாத்திரம் சொல்லுகின்றார் அதாவது நிரூபிக்கவில்லை.

* அ-அ. சுகதராகிய புத்தரது சீடர்களிற் சிலர் மாத்யமிகர் அதாவது சூனியவாதிகளாவர். அவர் மதத்தில் சிருஷ்டிக்கு முன்னும் பின்னும் சகல பதார்த்தங்களும் வேற்றுமையில்லாத சூனியமே தத்துவமாம். மத்தியில் பிராந்தியினால் நாமரூபவடிவமும் ஜகத்தும் தோற்றுகின்றன. இந்த ஜகத்தின் பிராந்தியும் நிரதிஷ்டானமாம். எது முதலிலும் கடையிலு மில்லையோ அது அசத்தியாகியின்படி கானற்சலம் இரச்சுசர்ப்பமுதலியவற்றைப்போல மத்தியிலு மில்லை. ஆகையால் சூனியமே பரமதத்துவமாம். இப்படி மாத்தியமிக (நாஸ்திக) அநுசாரிகள் "இது (ஜகத்து) முன் அசத்தாயிருந்தது" என்று வர்ணிக்கின்றார்கள்.

(அ-கை.)

திருஷ்டாந்தத்திற்கூறிய அர்த்தத்தைத் தார்ஷ்டாந்தத்திலும் பொருத்துகின்றார்:—

तथा अस्य धीः अखंडैकरसं श्रुत्वा निःप्रचारा अतः बिभेति ॥

(சு-ம்.)

அதுபோல இவ்வசத்வாதியின் புத்தி சவகதமுதலிய மூன்றுபேதங்களுமில்லாத அகண்டைகரஸவஸ்துவைக் கேட்டு அதிற் பிரவிருத்தியில்லாததாய் அதனின் அஞ்சுகின்றது.

(வி-ம்.)

* ௨௯. இவ்வசத்துவாதிகளின் புத்தி (அந்தக்கரணம்), அகண்டைகரசவஸ்துவைக் கேட்டுக் * ௩௦. சாகார (வடிவத்தோடுகூடிய) வஸ்துவிற்போல அகண்டைகரசவஸ்துவிற் பிரவிருத்தியில்லாததாய் இவ்வகண்டைகரசவஸ்துவினின்றும் பயத்தைபடைகின்றது. (௨௭)

[௨௮] गौडाचार्या निर्विकल्पे समाधावन्ययोगिनाम् ।
साकारब्रह्मनिष्ठानामत्यंतं भयमूचिरे ॥ २८ ॥

(அ-கை.)

முற்கூறிய அர்த்தத்தில் ஆசாரியரது சம்மதியை (மேற்கோளை)க் காட்டுகின்றார்:—

गौडाऽऽचार्याः साकारब्रह्मनिष्ठानाम् अन्ययोगिनां निर्विकल्पे समाधौ अत्यंतं भयं ऊचिरे ॥

(சு-ம்)

ஸ்ரீகௌடபாதாசாரியரும் * ௩௧. சாகாரப் பிரஹ்மத்தில் நிஷ்டையு

---

* ௨௯. அதிஷ்டானப்பிரஹ்மத்தின் அஞ்ஞானத்தால் உட்பார்வையில்லாது வெளிப்பார்வையுடைய சூனியவாதிகளும் அவர்களுக்குச் சமானமான மற்ற அஞ்ஞானிகளுமாகிய புருஷர்களின்.

* ௩௦. பாவ அபாவவடிவத்தோடுகூடிய வஸ்துவின்கண் புத்தி பிரவிருத்தியுடையதாதல்போல நிராகாரப்பிரஹ்மத்தில் பிரவிருத்திக்கிறதில்லை. ஆகையால் சூனியத்தைக் கற்பிக்கின்றார்கள்.

* ௩௧. விராட்டு அல்லது கோவுலகம் அல்லது வைகுண்டமுதலிய உலகங்களில் வசிக்கும் இருபுயம் நாற்புயமுதலிய சின்னங்களைத் தரித்துள்ள அல்லது இராம கிருஷ்ண நரசிம்மமுதலிய அவதாரங்களைத் தரித்துள்ள விஷ்ணு, கைலாசாமுதலிய உலகவாசியாகிய சிவன்முதலியோரது சரீரம்; அல்லது அவர்களின் மூர்த்தி (பிரதிமை); அல்லது யாதேனும் ஓர் ஆரோபிக்கப்பட்ட வஸ்து சாகாரமாம்.

டைய அந்திய அஞ்ஞானிகளாகிய * ௩௨. யோகிகளுக்கு * ௩௩. நிருவி கற்பசமாதியில் மிகுந்த பயம் கூறலாயினர். (௨௮)

[௩௪] अस्पर्शयोगो नामैष दुर्दर्शः सर्वयोगिभिः ।
योगिनो बिभ्यति ह्यस्मादभये भयदर्शिनः ॥ २९ ॥

(அ-கை)

ஸ்ரீகௌடபாதஸ்வாமிகள் எந்த வாக்கியத்தாற் சொல்லியருளினர்? என்று கேட்கும் அவாவுண்டாக அவரது * ௩௪. வார்த்திகவடிவ சுலோகத்தையே சொல்லுகின்றார்:—

अस्पर्शयोगः नाम एषः सर्वयोगिभिः दुर्दर्शः ॥

(சு-ம்)

* ௩௫. அஸ்பரிசயோகம் என்னும் இந்நிருவிகற்பசமாதி எல்லாயோகிகளாலும் காணுதற்கரியதாம்.

(வி-ம்)

உபநிஷத்தில் பிரசித்தமாயுள்ள இந்த அஸ்பரிசயோகமென்னும் நிருவிகற்பசமாதி சாகாரவஸ்துவின் தியானத்தில் நிலையுடைய சகலவேதாந்

---

* ௩௨. முற்கூறிய சாகாரவஸ்துவில் சித்தத்தைப் பொருந்தும் உபாசகர்களுக்கு.

* ௩௩. தியாதாதியான முதலிய திரிபுடியின் கற்பனையில்லாத சமாதி நிர்விகற்பசமாதி.

* ௩௪. ஸ்ரீ சங்கராசாரியஸ்வாமிகளின் குருவாகிய ஸ்ரீ கோவிந்தபாதாசாரியரவர்களுக்குக் குருவும் ஸ்ரீ வியாசமுனிவரது புத்திரராகிய சுகதேவரது சிஷ்யருமாகிய ஸ்ரீ கௌடபாதாசாரியர் அவர்களால் செய்யப்பட்ட மாண்டூக்கிய உபநிஷத்தின் வார்த்திகமாகிய காரிகையின் அத்வைதமென்னும் மூன்றாவது பிரகரணத்திலுள்ளது இவ்வார்த்திகமென்னும் சுலோகமாம். வார்த்திக மென்பது மூலத்தில் சொல்லப்பட்டனவும், சொல்லப்படாதனவும், அரிதிற் சொல்லப்பட்டனவும், விருத்தமாகச் சொல்லப்பட்டனவுமாகிய அவற்றின் சிந்தன (விசார) வடிவ வியாக்கியான விசேஷத்திற்காம்.

* ௩௫. வர்ணாசிரம முதலிய தர்மங்களோடாவது பாபமாகிய மலத்தோடாவது அல்லது அநாத்மவஸ்துவோடாவது அல்லது (அநாத்மவஸ்துவோடாவது) எதனுல் ஸ்பரிச (சம்பந்த)ம் உண்டாகாமல் ஜீவனைப் பிரஹ்மத்தன்மையோடு பொருத்துகின்றதோ அப்படிப்பட்ட அத்வைத(பிரஹ்ம)த்தின் அநுபவம் (சாக்ஷாத்காரம்) அஸ்பரிசயோகம். அது உபநிஷத்தில் பிரசித்தமாம். அந்த அஸ்பரிசயோகத்தோடு கூடிய யோகி(நிர்க்குணப்பிரஹ்மநிஷ்டஞானி)களினதாம் இந்த அஸ்பரிசமென்னும் யோகம்.

தார்த்தஞானமில்லாத கர்மிகள்முதலிய யோகிகளாலும் காணுதற்கரிய தாம் அதாவது சிரவணாதிவடிவ துக்கத்தால் அறியத்தக்கதாம் என்பது பொருள்.

(அ-கை.)

அந்தச் சமாதி அரிதாய் அடையத்தக்கதா மென்பதில் யுக்தியைக் கூறுகின்றார்:—

हि योगिनः अभये भयदर्शिनः अस्मात् बिभ्यति ॥

(சு-ம்)

எதனால் சாகாரத்தியானத்தில் நிலையுடையயோகிகள் அபயத்தில் பயத்தைக் காண்பவர்களாய் இதனினின்றும் (சமாதியினின்றும்) பயத்தை யடைகின்றார்களோ அதனால்.

(வி-ம்.)

எந்தக்காரணத்தினால் முன்(௯௧-௯௩ல்)கூறிய துவைதத்தைக் காணும் யோகிகள் பயமில்லாத நிர்விகற்பசமாதியில் நிர்ஜனப்பிரதேசத்தில் சிறுவர்களைப்போலப் பயத்தைக் காண்கிறார்களோ அதாவது பயத்திற்கு ஏதுவாகுந் தன்மையைக் கற்பித்துக்கொண்டு இந்த அஸ்பரிசமென்னும் யோகமாகிய நிருவிகற்பசமாதியினின்றும் பயத்தை யடைகிறார்களோ, அதனால் அந்த நிர்விகற்பசமாதி அவர்களுக்குக் கிடைத்தற்கரியதாம். (உ௯)

[௯௫] भगवत्पूज्यपादाश्च शुष्कतर्कपटूनमून् ।
आहुर्माध्यमिकान्भ्रांतानचिंत्येऽस्मिन्सदात्मनि ॥ ३० ॥

(அ-கை)

ஸ்ரீமத் *௯௬. சங்கராசாரியசுவாமிகளாலும் இவ்வர்த்தம் சொல்லப்பட்டிருக்கின்றதெனக் கூறுகின்றார்:—

भगवत्पूज्यपादाः च शुष्कतर्कपटून् अमून् माध्यमिकान् अचिंत्ये अस्मिन् सदात्मनि भ्रांतान् आहुः

* ௯௬. சாஸ்திரார்த்தத்தை ஆசரித்தலாலும், உலகத்தை சாஸ்திரத்திற்சொல்லிய ஆசாரத்தில் நிலைநிறுத்துவதாலும், தாமும் (சாஸ்திரீயமாகிய ஆசாரத்தை) ஆசரிப்பதனாலும் ஆசாரிய ரெனப்படுகின்றனர்.

(சு-ம்.)

* ௬௭. பகவத்பூஜ்யபாதராகிய ஸ்ரீசங்கராசாரியசுவாமிகளும் * ௬௮ அசுஷ்கதர்க்கத்தில் வல்லவர்களாகிய இந்த மாத்தியமிகராகிய * ௬௯. சூனிய வாதிகளைச் * ௧00. சிந்திக்கத்தகாத *௧0௧. இச்சத்ரூப பிரஹ்மாத்மாவில் பிராந்தர்கள் (பிராந்தியுடையவர்கள்) என்று கூறியிருக்கின்றனர். (௩0)

[௩௧] अनादृत्य श्रुतिं मौर्ख्यादिमे बौद्धास्तमस्विनः ।
आपेदिरे निरात्मत्वमनुमानैकचक्षुषः ॥ ३१ ॥

(அ-கை.)

அந்த ஸ்ரீசங்கராசாரியரது வார்த்திகத்தைப் படனஞ்செய்கின்றார் :—

तमस्विनः अनुमानैकचक्षुषः इमे बौद्धाः मौर्ख्यात् श्रुतिं अनादृत्य निरात्मत्वं आपेदिरे ॥

(சு-ம்.)

அஞ்ஞானமாகிய இருளை உடையவர்களும், அநுமானநேத்திரமொன்றனையே (முக்கியமாக) உடையவர்களுமாகிய இந்தப் பௌத்தர்கள் (புத்தனது சீடர்கள்) * ௧0௨. மூர்க்கத்தன்மையால் சுருதியை (வேதத்தை) அநாதரஞ்செய்து சொரூபமில்லாத சூனியத்தன்மையை அறிகின்றார்கள் (௩௧)

---

௬௭ எவரது பாத (சரண)ம் பகவான்களால் அதாவது ஐசுவரிய சம்பன்னராகிய இராஜாமுதலியோர்களால் அல்லது பத்மபாதர்முதலிய விஷ்ணுவாதிகளின் அவதாரத்தால் பூஜ்யமா (ஆசாரியராகத்தக்கதா) யிருக்கிறதோ அல்லது எவருக்குப் பகவத் கோவிந்தபாதரது சரணம் பூஜ்யமாயிருக்கின்றதோ அப்படிப்பட்டவர் பூஜ்யபாதர்.

* ௬௮. அதிஷ்டத்தைச் சம்பாதித்தலாகிய அல்லது நவீன (புதிய) அர்த்தத்தைக் கற்பித்தலாகிய தர்க்கம், சுதர்க்கம் குதர்க்கமென இருவகையாம். சுருதிக்கு விரோதமில்லாதது சுதர்க்கம். சுருதிக்கு விரோதமானது குதர்க்கம். விரசமா (சுவையற்றதா)யும் நிஷ்பலமா (பயனற்றதா)யுமிருத்தலால் குதர்க்கம் சுஷ்கதர்க்கமெனப்படும். நாஸ்திகர் வேதத்தைப் பிரமாணமாகக் கொள்ளாததால் அவர்கள் சுஷ்கதர்க்கத்தில் தேர்ந்தவராவர்.

* ௬௯. மாத்தியமிக மதாநுசாரிகளை.

௧00. அந்நிய (அநாத்ம) வஸ்துக்களைப்போல் சிந்திக்கும் விருத்தியாகிய சித்தத்திற்கு விஷயமாகாத.

* ௧0௧. ஓரிடத்தும் (சகுணநிர்க்குண வஸ்துக்களில்) நிலை (நிச்சயம்) பெறாது சூனியத்தில் நிலைத்தலால் பிராந்தர்களாவர்.

* ௧0௨. அற்பஞ்ஞத்துவமிருக்கச் சர்வஞ்ஞத்தன்மையின் அபிமானமுடைமை மூர்க்கத்தன்மை.

௯. சிருஷ்டிக்குமுன் சூனியமிருந்தது என்னும் சூனியவாதியின் பக்ஷத்தினை விகற்பத்தோடு தூஷித்தல்.

[௩௭] शून्यमासीदिति ब्रूषे सद्योगं वा सदात्मताम् ।
शून्यस्य न तु तद्युक्तमुभयं व्याहतत्वतः ॥ ३२ ॥

(அ-கை.)

இப்போது அசத் (சூனிய) வாதத்தை விகற்பித்துத் தூஷிக்கின்றார் :-

शून्यं आसीत् इति सद्योगं ब्रूषे वा सदात्मतां । तत् उभयं शून्यस्य व्याहतत्वतः न तु युक्तम् ॥

(சு-ம்.)

"சூனியமே முன் இருந்தது" என்னும் ௩௧-வது சுலோகவாக்கியத்தால் சூனியத்திற்குச் சத்தோடு சம்பந்தம் சொல்லுகிறாயா? அல்லது சத்தாரூபத்துவம் சொல்லுகிறாயா? அந்த இரண்டு பக்ஷமும் சூனியத்திற்கு விரோதமா யிருத்தலால் பொருந்தா.

(வி-ம்.)

சூனியவாதி! "சிருஷ்டிக்குமுன் சூனியமே இருந்தது" என்னும் வாக்கியத்தால் நீ சூனியத்திற்குச் சத்தையாகிய பராஜாதியோடு சம்பந்தம் சொல்லுகிறாயா? அல்லது சூனியத்திற்குச் சத்தாரூபத்துவம் சொல்லுகிறாயா? என்பது விகற்பத்தின் பொருள். சத்தையோடு சம்பந்தம் அல்லது சத்ரூபத்தன்மைவடிவம் என்னும் அவ்விரண்டுபக்ஷமும் சூனியத்திற்கு *௧0௯. வியாகாதவடிவதோஷமிருத்தலாற் பொருந்தா என்பது பொருள் (௩௨)

[௩௮] न युक्तस्तमसा सूर्यो नापि चासौ तमोमयः ।
सच्छून्ययोर्विरोधित्वाच्छून्यमासीत्कथं वद ॥ ३३ ॥

(அ-கை.)

வியாகாதத்தன்மையைத் திருஷ்டாந்தபூர்வகமாகத் திடப்படுத்துகின்றார் :—

सुर्यः तमसा युक्तः न च असौ तमोमयः अपि न सच्छून्ययोः विरोधित्वात् शून्यं आसीत् कथं वद ॥

---

* ௧0௯. அதனை (சூனியத்தை) அசத்தென்றும் கூறி, மறுபடியும் அதனை இருளோடுகூடிய அல்லது இருள்வடிவமாகிய சூரியன் என்பதுபோலச் சத்தின் சம்பந்தமுடையது என்றும் சொல்லுதல் வியாகாதமாம்.

(சு-ம்.)

எப்படிச் சூரியன் இருளோடுகூடியதுமன்றே, இச்சூரியன் இருள் வடிவமும் அன்றே, அப்படிச் சத்திற்கும் சூநியத்திற்கும் பரஸ்பரம் விரோதமிருத்தலால் சூநியமே இருந்த தென்பது எப்படியாம்? சூநியவாதி! நீ சொல்லுவாயாக. வியாகாததோஷத்தோடு கூடியிருத்தலால் எவ்விதத்தாலுமாகாது என்பது பொருள். ( நூ.நூ)

(அ-கை.)

[கூகூ] वियदादेर्नामरूपे मायया सुविकल्पिते ।
शून्यस्य नामरूपे च तथा चेज्जीव्यतां चिरम् ॥ ३४ ॥

அப்படியானால் சித்தாந்தி! தமது மதமாகிய வேதாந்தத்தில் ஆகாயமுதலியவற்றிற்கு நிருவிகற்பப்பிரஹ்மத்தில் யாதொரு சத்தையாகிய இருப்பு இருக்கின்றதோ அது வியாகாதத்தை அடைகின்றதேயென் றாசங்கித்துக் கூறுகின்றார் :—

(சு-ம்)

वियदादेः नामरूपे मायया सुविकल्पिते ॥

ஆகாயமுதலியவற்றின் நாமரூபங்கள் மாயையினால் சத்திற் கற்பிக்கப்பட்டிருக்கின்றன.

(அ-கை.)

அப்படியானால் சூநியத்தின் நாமரூபங்களும் மாயையால் சத்வஸ்துவிற் கற்பிதங்களாம் என்று சொல்லும் புத்தனது சிஷ்யனாகிய மாத்தியமிக வடிவ பௌத்தனுக்கு அபசித்தாந்தமெனும் சித்தாந்தபங்கம் உண்டாம் என்னும் அபிப்பிராயமாகக் கூறுகின்றார் :—

शून्यस्य नामरूपे च तथा चेत् चिरं जीव्यताम् ॥

(சு-ம்.)

சூநியத்தின் நாமரூபங்களும் அப்படியே மாயையினால் சத்வஸ்துவில் கற்பிக்கப்பட்டனவேயாமெனின் நீ * கOச. வெகுகாலம் வாழக்கடவாய். (நூச)

---

* கOச. தனது சித்தாந்தத்தைவிட்டு வேதாந்தசித்தாந்தத்தைக் கிரகிக்கும் வாதியை நோக்கிச் சொல்லும் உபகாசகர்ப்பித அதாவது பரிகாசத்தை உள்ளடக்கிய ஆசீர்வாதமாம்.

ச. "சத்தே யிருந்தது" என்னும் சுருதியின் வாக்கியத்திற் சங்கைசமாதானம்.

[௧௦௦] सतोऽपि नामरूपे द्वे कल्पिते चेत्तदा वद ।
कुत्रेति निरधिष्ठानो न भ्रमः क्वचिदीक्ष्यते ॥ ३५ ॥

(அ-கை.)

அப்படியானால் சூரியத்தைப்போலச் சத்வஸ்துவின் நாமரூபங்களும் கற்பிதமாகவே அங்கீகரிக்கவேண்டியனவாம்; உங்கள் அத்வைதமதத்தில் வாஸ்தவமாக நாமரூபங்களிரண்டு மில்லாமையால் என்று வாதி சங்கிக்கின்றான்:—

सतः अपि नामरूपे द्वे कल्पिते चेत् ॥

(சு-ம்.)

சத்தின் நாமரூபங்கள் இரண்டும் கற்பிதங்களா மெனின்.

(அ-கை.)

வாதி! இந்த உனது பூர்வபக்ஷம் விகற்பத்தைச் சகியாமையால் * ௧௦௫. அயுக்தமேயாம் என்னும் அபிப்பிராயமாகச் சித்தாந்தி சங்கையை நிவிருத்திக்கின்றார்.

तदा कुत्र इति वद ॥

(சு-ம்.)

அப்போது எந்த அதிஷ்டானத்தில் கற்பிதமாம். அதனைச் சொல்லு.

(வி-ம்.)

இங்கே இது அபிப்பிராயமாம்:—சத்தின் நாமரூபங்களும் கற்பிதமாமென்று சொல்லும் வாதியைச் சத்தின் நாமரூபங்கள் சத்தாகிய அதிஷ்டானத்திற் கற்பிதமா? அல்லது அசத்திற் கற்பிதமா? அல்லது ஜகத்திற் கற்பிதமா? என்று சித்தாந்தி கேட்கிறார். இம்மூன்று பக்ஷங்களில் முதற்பக்ஷம் பொருந்தாது; ஏனெனின், சுத்திமுதலியவற்றிற்கு வேறாகிய வெள்ளிமுதலியவற்றின் நாமரூபங்களின் ஆரோபம் வெள்ளிமுதலியவற்றிற்கு வேறாகிய சுத்திமுதலிய அதிஷ்டானத்திற் காணப்படுதலால் சத்தின் நாமரூபங்கள் சத்தாகிய தன்னிலேயே கற்பிக்கப்படுதல் பொருந்தாமையால். இரண்டாவது பக்ஷமும் பொருந்தாது; அசத்தாகிய சூனியத்திற்கு அதிஷ்டானத்தன்மை பொருந்தாமையால். மூன்றாவது பக்ஷமும்

---

௧௦௫. சத்திற்கு நாமமும் (வாசகமாகிய சத்தமும்) உருவம் (ஸ்தூலமுதலிய வடிவமும்) இல்லாமையால் யுக்தியில்லாததாம்.

பொருந்தாது; சத்தினின்றும் உண்டாகி ஜகத்திற்குச் சத்தினது நாமரூபங்களின் கற்பனைக்கு அதிஷ்டானமாந்தன்மை பொருந்தாமையால்.

(அ-கை)

அப்படியானால் சத்தின் நாமரூபங்களது கற்பனைக்கு அதிஷ்டானம் வேண்டாம். இச்சத்தின் நாமரூபங்களின் கற்பனை அதிஷ்டானமின்றியும் ஏன் உண்டாகலாகாது என்றாசங்கித்துக் கூறுகின்றார்:—

निरधिष्ठानः भ्रमः क्वचित् न ईक्ष्यते ॥

(சு-ம்.)

அதிஷ்டானமில்லாத பிராந்தி ஓரிடத்தும் காணப்படுகிறதில்லை. (௩௫)

[கOக] सदासीदिति शब्दार्थभेदे वैगुण्यमापतेत् ।
अभेदे पुनरुक्तिः स्यान्मैवं लोके तथेक्षणात् ॥ ३६ ॥

(அ-கை.)

அப்படியானால் "இது முன் அசத்தாகவே யிருந்தது" என்பதில் தாம் வியாகாததோஷம் கூறியதுபோல "சௌமியனே! இதுமுன் சத்தாகவே இருந்தது" என்னுமிடத்தும் தோஷ மிருக்கின்றதென்று வாதி சங்கிக்கின்றான்:—

'सत् आसीत्' इति शब्दार्थभेदे वैगुण्यं आपतेत् । अभेदे पुनरुक्तिः स्यात् ॥

(சு-ம்.)

"சத்து இருந்தது" என்னுஞ் சுருதியிலுள்ள இரண்டு சப்தங்களின் அர்த்தம் பேதமா? அபேதமா? சத்தார்த்தம் பேதமாகுமாயின் சித்தாந்தபங்க மென்னும் விரோதத்தன்மை உண்டாம். அபேதமாகுமாயின் கூறியதுகூறலென்னும் குற்ற முண்டாகும்.

(வி-ம்.)

"இது முன் சத்தாகவே யிருந்தது" என்னும் சுருதியிலுள்ள தோஷத்தைக் காட்டுகின்றான்:—"சத்து" "இருந்தது" என்னும் பின்னமாகிய இரண்டு சப்தங்களின் அர்த்தங்களுக்கும் பேதமிருக்கிறதா? இல்லையா? பேதம் உண்டெனின் * கOசு. அத்வைதத்துக்குக் கேடுண்டாம்.

---

* கOசு. இரண்டு சத்திருத்தலால் அத்வைதத்திற்குக் கேடுண்டாம்.

பேதமில்லையெனின் * கOஎ. புநருக்தியாகிய கூறியதுகூறலென்னுங் குற்ற முண்டாகும். ஆகையால் "சத்து" "இருந்தது" என்று சொல்லுதல் பொருந்தாது.

(அ-கை.)

சித்தாந்தி இரண்டாவதான பேதமில்லை யென்னும் பக்ஷத்தை அங்கி கரித்து முற்கூறிய புநருக்திதோஷத்தைப் பரிகரிக்கின்றார் :—

एवम् मा ॥

(சு-ம்.)

"சத்திருந்தது" என்னுமிடத்துத் தோஷ மிருக்கின்றது என்று சொல்லலாகாது.

(அ-கை.)

அப்படியானால் (சத்திருந்தது என்னு மிரண்டு சப்தங்களின் அர்த்தத் திற்கு அபேதத்தை அங்கீகரித்தலில்) கூறிய புநருக்திதோஷத்திற்குப் பரி காரம் யாது என்றாசங்கித்துக் கூறுகின்றார் :—

लोके तथा ईक्षणात् ॥

(சு-ம்.)

உலகத்தில் அவ்விதப் பிரயோகத்தைக் காணுதலால். (ரு௬)

[கOஉ] कर्तव्यं कुरुते वाक्यं ब्रूते धार्यस्य धारणम् ।
इत्यादिवासनाऽऽविष्टं प्रत्यासीत्सदितीरणम् ॥ ३७ ॥

(அ-கை.)

அப்படியானால் உலகத்தில் சத்து இருந்தது என்னும் இவ்வித இர ண்டுபொருளுடைய இரண்டு சொற்களை உச்சரித்தலாகிய பிரயோகங்க ளில் புநருக்தி இல்லை யென்பது எங்கே பார்க்கப்பட்டது என்றாசங்கித் துக் கூறுகின்றார் :—

कर्तव्यं कुरुते वाक्यं ब्रूते धार्यस्य धारणम् ॥

* கOஎ. ஒருமுறை உச்சரிக்கப்பட்ட சத்தத்தையேனும் அர்த்தத்தையேனும் மறுபடியும் உச்சரித்தல் புநருக்திதோஷமாம். அது சத்தப்புநருக்தி அர்த்தப்புநருக்தி என இரண்டு வகையாம். அவற்றுள் வெவ்வேறு பொருளுடைய சத்தங்களுக்குப் புநருக்திதோஷமு மில்லை. ஆனால் ஒரு பொருளுடைய சமான அல்லது விலக்ஷண சப்தங்களை உச்சரித்தலால் அர்த்தப்புநருக்தியாம். அது தோஷவடிவமாம். அஃது இங்கே இருக்கின்றது.

(சு-ம்.)

காரியத்தைச் செய்கிருன். வாக்கியத்தைச் சொல்லுகிருன். தரிக்கத்தக்கதனைத் தரிக்கிருன்.

(அ-கை.)

உலகத்தில் இப்படிப் பிரயோகமிருக்குக. இதனால் " சத்தே இருந்தது" என்னும் சுருதியில் என்ன கிடைத்ததெனக் கூறுகின்ருர் :—

इत्यादि वासनाविष्टं प्रति 'सत् आसीत्' इति ईरणम् ॥

(சு-ம்.)

* ௧0௮. இவைமுதலிய உலகப்பிரசித்தமாகிய புநருக்திதோஷமுதலிய பிரயோகங்களினது வாசனைகளின் ஆவேசத்தோடுகூடிக் கேட்கும் புருஷனை நோக்கிச் "சத்திருந்தது" என்று சுருதி சொல்லியிருக்கின்றது. (௩எ)

[௧0௩] कालाभावे पुरेत्युक्तिः कालवासनया युतम् ।
शिष्यं प्रत्येव तेनात्र द्वितीयं न हि शंक्यते ॥ ३८ ॥

(அ-கை.)

அப்படியானல் அத்விதீயவஸ்துவில் பூதகால * ௧0௬. மில்லாமையால் "சிருஷ்டிக்குமுன் சத்திருந்தது" என்று சொல்லுதல் பொருத்தமில்லாததாமென் ருசங்கித்துக் கூறுகின்ருர் :—

कालाभावे 'पुरा' इति उक्तिः कालवासनया युतम् शिष्यं प्रति एव ॥

(சு-ம்.)

அத்விதீயவஸ்துவில் பூதமுதலிய காலங்களில்லா திருக்கவும் "முன்" என்னும் சுருதிவாக்கியம் பூதபௌஷியத்துமுதலிய காலத்தின் வாசனை

* ௧0௮. இங்கே முதலியவென்னுஞ்சொல்லால் இழு! இழு! என்று தண்ணீர் இறைத்தல் முதலியவற்றிலும், அகோ! அகோ! என்று சந்தோஷத்திலும், அடி! அடி! கொல்லு! கொல்லு! பிடி! பிடி! என்று கோபத்திலும், அடே! அடே! என்று பயத்திலும், கொடு! கொடு! என்று ஏழைமையிலும், சிந்தையிலும், துதியிலும் புநருக்திதோஷமில்லை யெனல் கொள்ளப்படும்.

* ௧0௬. காலமில்லாத பரமாத்மாவில் காலமிருக்கின்றதா? அல்லது காலமுடையதில் காலமிருக்கின்றதா? முதற்பக்ஷத்தில் வியாகாதமும், இரண்டாவது பக்ஷத்தில் ஆத்மாசிரயமுதலிய தோஷங்களும் உண்டாகின்றன. அந்தத் தோஷங்களை ௫0-வது சுலோகத்திற் சொல்லியபடி கண்டுகொள்க. இவ்விதத்தால் பிரஹ்மத்தில் காலத்தின் அபாவ மிருக்கின்றது.

யோடுகூடிய சிஷ்யனைக்குறித்ததா யிருக்கின்றது; யதார்த்தத்தன்மை அபிப்பிராயத்தா லிருப்பதன்று.

(அ-கை.)

அப்படியானால் ஜகத்தின் உற்பத்திக்குமுன் பூர்வகாலமுதலியவடிவி னதாகிய ஜகத்தின் பிராகபாவத்நால் பிரஹ்மத்திற்கு அபாவவடிவ துவைத் தோடுகூடியதன்மை * ககO. உண்டாகுமென் றாசங்கித்துச் சுருதியின் பிர விருத்தி பாவாபாவமாகிய துவைதத்தின் அநுபவஜந்ய சம்ஸ்காரவடிவ வாசனையின் ஆவேசத்தோடுகூடிய சுரோதாவிற்கு அறிவிக்கும்பொருட் டாயிருத்தலால் இவ்வத்வைதத்தில் மிகுந்த சங்கைசெய்தல் தகுதியன்றெ னக் கூறுகின்றார்:—

तेन अत्र द्वितीयं शंक्यते न हि ॥

(சு-ம்.)

அக்காரணத்தால் பிரஹ்மத்தில் துவைதம் சங்கிக்கப்படுகிறதில்லை. ()

[௩௦௪] चोद्यं वा परिहारो वा क्रियतां द्वैतभाषया ।
अद्वैतभाषया चोद्यं नास्ति नापि तदुत्तरम् ॥ ३९ ॥

(அ-கை.)

இப்போது சித்தாந்தத்தின் இரகசியத்தைக் கூறுகின்றார்:—

चोद्यं वा परिहारः वा द्वैतभाषया क्रियतां अद्वैतभाषया चोद्यं न अस्ति । तदुत्तरं अपि न ॥

(சு-ம்)

வினவாவது விடையாவது * கக௧. துவைதவார்த்தையினால் செய்யப் படுகிறது. * ககஉ. அத்வைத வார்த்தையால் வினவு மில்லை; அதற்கு விடையு மில்லை.

---

* ககO. ஒன்று பிரஹ்மம் (அநுயோகி); மற்றையது அதில் ஜகத்தின் (பிரதி யோகியின்) அபாவம். ஆகையால் பிரஹ்மத்திற்குத் துவைதத்தோடுகூடியதன் மை யுண்டாம்.

* கக௧. அஞ்ஞானியின் திருஷ்டியால் ஆரோபிக்கப்பட்ட துவைதத்தை விஷயஞ்செய்யும் பாஷை (துவைதபாஷை)யினால் வினவிடைகள் பொருந்தும்.

* ககஉ. சகல ஆரோபத்தோடுங்கூடிய மனதையும் வாக்காகிய தன்னையும் நிஷேத(அபவாத)ஞ்செய்தல்வாயிலாகத் தர்மமில்லாத பிரஹ்மத்தைப் போதிக் கும் பாஷையாகிய அத்வைதபாஷையால் வினவிடை பொருந்தா.

(வி-ம்.)

வியவகாரதசையில் விகற்பமாகிய வினாவும் விடையும் கற்பிக்கத்தக்கனவாம். பரமார்த்த(வாஸ்தவ)மாகவோ அத்வைதமே யதார்த்தவஸ்துவாம் என்பது பொருள். (௩௯)

ரு. வாஸ்தவத்துவைத மில்லை யென்பதில் ஸ்மிருதிப்பிரமாணம்.

[௧௦ரு] तदा स्तिमितगंभीरं न तेजो न तमस्ततम् ।
अनाख्यमनभिव्यक्तं सत्किंचिदवशिष्यते ॥ ४० ॥

(அ-கை.)

பரமார்த்தமாகத் துவைதமில்லை யென்பதில் ஸ்மிருதியைப் பிரமாணமாக்குகின்றார் :—

तदा स्तिमितगंभीरं न तेजः न तमः ततं अनाख्यं अनभिव्यक्तं सत् किंचित् अवशिष्यते ॥

(சு-ம்.)

அப்போது நிச்சலமாயும், ஆழமாயும், தேயுவடிவமல்லாததாயும், இருளல்லாததாயும், வியாபகமுள்ளதாயும், சொல்லக்கூடாததாயும், வெளிப்படையில்லாததாயு மிருக்கும் சத்துவடிவ ஓர் வஸ்து மிஞ்சியிருக்கின்றது.

(வி-ம்.)

அப்போது பிரளயகாலத்தில் நிச்சலமும், அதாவது கிரியையில்லாததும், கெம்பீரமும் அதாவது மனதினால் விஷயஞ்செய்யத்தகாததும், தேயுவல்லாததும் அதாவது * ௧௧௩ தேயுத்தன்மைச்சாதியின் அதிகரணமல்லாததும், இருளாகிய அஞ்ஞானத்திற்கு விலக்ஷணமாகியதும் அதாவது ஆவரணமில்லாத சுபாவமுடையதும், வியாபகமும், வியாக்கியானஞ் செய்யக்கூடாததும், பிரகடமில்லாததும் அதாவது நேத்திரமுதலிய இந்திரியங்களுக்கும் விஷயமாகாததும், சத்தும் அதாவது சூனியத்தின் விலக்ஷணமும், இதனாலேயே இஃது எனுந்தன்மையால் சொல்லக்கூடாததுமாகிய வஸ்து எதுவோ அது மிஞ்சியிருக்கின்றது. அதாவது துவைதமா

* ௧௧௩. எல்லாக்கடங்களிலும் கடத்துவமாகிய ஜாதியும், எல்லாப்பிராஹ்மணரிலும் பிராஹ்மணத்துவமாகிய ஜாதியு மிருத்தல்போல, சூரியன் சந்திரன் முதலிய சகல தேயுக்(பிரகாசங்)களிலும் தேயுத்தன்மைச்சாதியாகிய தர்ம முண்டு. அதன் ஆசிரயமாகாததாம்; பரப்பிரகாசமும் மித்தையுமாகிய சூரியன்முதலிய ஜோதிகளுக்கு விலக்ஷணமாய் (சுவயம்பிரகாசமாயும் சத்தியமாயும்) இருத்தலால்.

கிய ஜகத்தின் நிஷேதத்திற்கு * கககூ. எல்லையாக நிலைத்திருக்கின்றது என்பது பொருள். (௪0)

சு. ஆகாயத்தின் அசத்துத்தன்மையில் சங்கைசமாதானம்.

[கOசு] ननु भूम्यादिकं मा भूत्परमाण्वंतनाशतः ।
कथं ते वियतोऽसत्वं बुद्धिमारोहतीति चेत् ॥ ४१ ॥

(அ-கை)

அப்படியானால் உற்பத்தியுடையனவா யிருத்தலால் அநித்தியமாகும் பூமிமுதலியவற்றிற்கு அசத்துத்தன்மை யிருக்குக. நித்தியமாகிய ஆகாயத்திற்கு அசத்துத்தன்மை அத்வைதவாதியாகிய தம்மால் எப்படி அங்கீகரிக்கப்படுகின்ற தென்று வாதி * ககரு. சங்கிக்கின்றான்:—

ननु परमाण्वंतनाशतः भूम्यादिकं माभूत् वियतः असत्वं ते बुद्धिं कथं आरोहति इति चेत् ॥

(சு-ம்.)

அங்ஙனமாயின் பிருதிவி அப்புத் தேயு வாயுக்களின் பரமாணுக்களாகிய அவயவங்களுக்கு * கககூ. நாசமிருத்தலால் பூமிமுதலியவைகள் சத்தியமாதல்வேண்டாம். ஆனால் சித்தாந்தி! ஆகாயத்தின் அசத்துத்தன்மை தமது புத்தியில் எப்படி ஏறுகிறது என்பாயாயின் வாதியே! கேள். (௪க)

[கOஎ] अत्यंतं निर्जगद्व्योम यथा ते बुद्धिमाश्रितम् ।
तथैव सन्निराकाशं कुतो नाश्रयते मतिम् ॥ ४२ ॥

(அ-கை.)

சித்தாந்தியானவர் திருஷ்டாந்தத்தை ஆசிரயித்து முற்சுலோகத்திற் கூறிய சங்கையைப் பரிகரிக்கின்றார்:—

---

* கக௪. தனது விவர்த்தமாயிருத்தலால் தனது சொரூபமேயாகிய ஜகத்தின் அத்தியந்தாபாவத்தின் அநுயோகியாகிய அதிஷ்டானரூபமாயிருத்தலால்.

* ககரு. தனது பக்ஷத்தில் தளர்ச்சியடைந்த வாதியானவன் நியாயமதப்படி மூலசுலோகத்திற் சங்கிக்கின்றான்.

* கககூ. நையாயிகர்களது மதத்தில் பிருதிவிமுதலிய நான்கு பூதங்களின் உபாதானமாகிய பரமாணுக்கள் நித்தியமாக ஒப்பப்பட்டிருக்கின்றன. அவற்றிற்கு நாசம் அவர்கள் மதப்படி சொல்லுதல் பொருந்தாதாகையால் இங்கே நாசமென்னும் பதத்திற்கு வியோகமே (பிரிவே) பொருளாம். சாளரத்தின் வழியாய் உட்சென்ற சூரியனது கிரணத்தில் தோற்றும் நுட்பமாகிய துசிதிரியணுகமாம் (திரிசரேணுவாம்). அதன் மூன்றாவது பாகத்திற்கு அணுவென்றும், ஆறாவது பாகத்திற்குப் பரமாணுவென்றும் பெயராம்.

अत्यंतं निर्जगद्व्योम यथा ते बुद्धिं आश्रितं तथा एव निराकाशं सत् मतिम् कुतः न आश्रयते ॥

(சு-ம்.)

வாதி! ஜகத்தேயில்லாத ஆகாயம் எப்படி உனது புத்தியை ஆசிரயத்திருக்கின்றதோ அப்படியே ஆகாயமின்றிய சத்தானது உன்மதியை ஏன் ஆசிராயிக்கிறதில்லை.

(வி-ம்.)

ஜகத்தேயில்லாத என்பதற்கு ஜகத்மாத்திரம் (முழுதும்) இல்லாத என்பது பொருள். (௪௨)

[௯௦அ] निर्जगद्व्योम दृष्टं चेत्प्रकाशतमसी विना ।
क्व दृष्टं किं च ते पक्षे न प्रत्यक्षं वियत्खलु ॥ ४३ ॥

(அ-கை.)

அநுபவிக்கப்பட்ட பதார்த்தத்திற்கு அசம்பவமில்லை யென்னும் நியாயமாகிய உதாரணத்தை ஆசிரயித்து வாதி சங்கிக்கின்றான்:—

निर्जगद्व्योम दृष्टं चेत् ॥

(சு-ம்.)

பிருதிவிமுதலிய ஜகத்தில்லாத ஆகாயம் அநுபவிக்கப்பட்டதெனின்.

(அ-கை.)

ஆகாயத்தைக் காணுதலே சித்தியாதென்று சித்தாந்தி பரிகரிக்கின்றார்:—

प्रकाशतमसी विना क्व दृष्टम् ॥

(சு-ம்.)

சூரியன்முதலியவற்றின் பிரகாசமு மிருளுமின்றி * ககன. எங்கே கண்டாய்? சொல். ஓரிடத்தும் காணுதல் பொருந்தாது.

---

* ககன. விரிந்த சூரியன்முதலியவற்றின் பிரகாசமும் இருளுமாகிய இரண்டன் சம்பந்தத்தால் உருவமில்லாத ஆகாயத்தில் பிராந்தியினால் கருமையுருவம் தோற்றுகின்றது. அக்கருமையே பார்வைக்கு விஷயமாகின்றது; ஆகாய மன்று. அந்தக் கருமையை ஆகாயத்தில் ஆரோபித்து “நான் ஆகாயத்தைப் பார்த்திருக்கின்றேன்” என்று சொல்லுகிறாய். ஆனால் ஒளியுமிருளுமின்றி ஓரிடத்தும் ஆகாயம் தோற்றுதல் பொருந்தாது.

(அ-கை.)

அவகாசத்திற்குப் பிரத்தியக்ஷத்தன்மையை ஒப்புதலால் உன்னுடையது அவசித்தாந்தமுமாமெனக் கூறுகின்றார்.—

किंच ते पक्षे खलु वियत् प्रत्यक्षं न ॥

(சு-ம்.)

அன்றியும் உனது மதத்தில் நிச்சயமாகவே ஆகாயம் * கக௮. பிரத்தியக்ஷமென்னும் இந்திரியகோசர மன்று. (சங)

எ. சத்வஸ்துவின் தரிசனத்தில் சங்கைசமாதானம்.

[க0க] सद्वस्तु शुद्धं त्वस्माभिर्निश्चितैरनुभूयते तूष्णीं ।
स्थितौ न शून्यत्वं शून्यबुद्धेश्च वर्जनात् ॥ ४४ ॥

(அ-கை.)

அப்படியானால் காணுதலின் இன்மை சத்வஸ்துவிலும் சமானமாகுமே யென்றாசங்கித்துச் சத்தாகிய பிரஹ்மம் அறிஞர் அஞ்ஞானிகளென்னும் * ககக. சகலஜனங்களது அநுபவத்தாலும் சித்தித்திருத்தலால் சத்வஸ்துவிலும் காணுதலின்மை ஆகாயத்திற்குச் சமானமாயிருக்கின்றதென்பது பொருந்தாதெனக் கூறுகின்றார்:—

सुद्धं सद्वस्तु तु निश्चितैः अस्माभिः तूष्णींस्थितौ अनुभूयते ॥

* கக௮. சூனியவாதிகள் மதத்தில் ஆவரணத்தினது அபாவத்தின் அதிகரண (மலடிமைந்தனுக்குச் சமான)மாக ஆகாயம் சித்தித்தலால் இந்திரியகோசரமாகாது. நியாயமதத்தில் உற்பூத (பிரகடமுதலிய) பிருதிவி ஜலம் தேயுவெனும் திரவியங்களின் பிரத்தியக்ஷஞானம் நேத்திரேந்திரியத்தாலுண்டாம். உற்பூத உருவமும் ஸ்பரிசமுமுடைய பிருதிவி ஜலம் தேயுவென்னும் திரவியங்களின் பிரத்தியக்ஷஞானம் தொக்கிந்திரியத்தாலுண்டாம். மற்றச் சுரோத்திரம் சிங்ஙுவை கிராணம் என்னும் இந்திரியங்களால் திரவியத்தின் பிரத்தியக்ஷஞான முண்டாகாது; ஆனால் ஒவ்வொரு குணம் கிரகிக்கப்படும் என்பது நியமமாம். ஆகாயம் உருவம் ஸ்பரிசம் என்னுங் குணங்களுடையதன்று. ஆகையால் ஆகாயம் இந்திரியகோசர (பிரத்தியக்ஷ) மாகாது.

* ககக. "நான் சத்தாயிருக்கிறேன்" என்று சாமானியவடிவமாகச் சகலஜனங்களுக்கும் சொரூபஞான முண்டாகின்றது. "நான் சித்தாயிருக்கிறேன்" "நான் ஆநந்தமாயிருக்கிறேன்" என்னுமிவை முதலிய விசேஷவடிவமாக ஞானிகளுக்கே சொரூபஞான முண்டாகின்றது, மற்றையோருக்கு உண்டாகிறதில்லை.

(சு-ம்.)

கேவல சத்வஸ்துவோ நிச்சயமுடையவர்களாகிய நம்மால் விகற்பமில்லாத உதாசீனதசையில் அநுபவிக்கப்படுகின்றது.

(அ-கை.)

அப்படியானல் சும்மாவிருத்தலாகிய மௌனத்தில் சூநியமே இருக்கின்றது. வேறொரு வஸ்துவுந் தோற்றாமையால் என்றாசங்கித்துச் சூநியமும் பொருந்தாதெனக் கூறுகின்றார்:—

च शून्यबुद्धेः वर्जनात् शून्यत्वं न ॥

(சு-ம்.)

சூநியத்தோற்றம் இல்லாமையால் மௌனதசையில் * கஉ0. சூநியத்துவ மில்லை. (௪௪)

அ. சத்வஸ்துவின் இருப்பிற் சங்கை சமாதானம்.

[கக0] सद्बुद्धिरपि चेन्नास्ति माऽस्त्वस्य स्वप्रभत्वतः ।
निर्मनस्कत्वसाक्षित्वात्सन्मात्रं सुगमं नृणाम् ॥ ४५ ॥

(அ-கை.)

அப்படியானல் தூஷ்ணீமவஸ்தையில் சத்தின் ஞானமில்லாமையால் சத்தினிருப்பும் பொருந்தாது, அதுவோ நிகழ்கின்றதே என்று வாதி சங்கிக்கின்றான்:—

सद्बुद्धिः अपि न अस्ति चेत् ॥

(சு-ம்.)

சத்தின் ஞானமும் இல்லையெனின்.

(அ-கை.)

அச்சத்து சொப்பிரகாசமாயிருத்தலால் அதன் ஞானமின்மை அத்வைதவாதியாகிய எமக்கு அநிஷ்டமன்று என்று சித்தாந்தி பரிகரிக்கின்றார்:—

* கஉ0. இங்கே இது இரகசியமாம்:— சூநியத்தின் ஞானமுண்டாகுமாயின் சூநியத்தை அறிபவனிருத்தலால் சூநியம் (எல்லாவற்றின் அபாவம்) பொருந்தாது. சூநியத்தின் ஞானமில்லாவிடினும் சாக்ஷியில்லாத சூநியம் பொருந்தாது. ஸ்புரணையில்லாத தூஷ்ணீம் அவஸ்தையில் எதனல் எந்த வஸ்துவின் ஞானமு மில்லையோ அதனல் சூநியத்தின் ஞானமு மில்லாமையால் அப்போது சூநியமில்லை.

अस्य स्वप्रभत्वतः मा अस्तु ॥

(சு-ம்.)

அப்போது இச்சத்து சொப்பிரகாசமாயிருத்தலால் சத்தின் ஞானம் வேண்டியதில்லை.

(அ-கை.)

தன்னை விஷயஞ்செய்யும் ஞானமில்லாதிருக்கச் சத்வஸ்து எப்படி அறியக்கூடியதாமெனக் கூறுகின்றார்:—

निर्मनस्कत्वं साक्षित्वात् सन्मात्रं नृणाम् सुगमम् ॥

மனமில்லாத (நிருவிகற்ப) அவஸ்தைக்குச் சாக்ஷியாயிருத்தலால் கேவலவஸ்துவானது விசாரசீலராகிய நரர்களுக்கு வருத்தமின்றி * கஉக. அறியத்தக்கதாம். (சரு)

[கககு] मनोजृंभणराहित्ये यथा साक्षी निराकुलः ।
मायाजृंभणतः पूर्वं सत्तथैव निराकुलम् ॥ ४६ ॥

(அ-கை.)

இப்படி நிஷ்பிரபஞ்ச சாக்ஷியாகிய பிரத்தியகாத்மாவின் விளக்கத்தைத் தூஷ்ணீம்ஸ்திதியில் காட்டி இந்தத் தூஷ்ணீம்தசையாகிய திருஷ்டாந்தத்தின் வலியாற் சிருஷ்டிக்குமுன்னும் சத்வஸ்து அதுபோலவே அறியக்கூடியதாமெனக் கூறுகின்றார்:—

मनोजृंभणराहित्ये यथा साक्षी निराकुलः तथा एव मायाजृंभणतः पूर्वं सत् निराकुलम् ॥

(க-ம்.)

எப்படிச் சாக்ஷியானது * கஉஉ. விக்ஷேபமில்லாததாயிருக்கிறதோ அப்படியே மாயையின் பரிணமமாதலாகிய காரியத்திற்கெதிர்ப்படுந்தன்மை என்னும் கலக்கத்திற்கு முன் பிரளயாவஸ்தையில் சத்தாகிய பிரஹ்மம் * கஉந. வியாகூலமில்லாததாம். (சகு)

---

* கஉக. "நானிருக்கின்றேன்" என்று சாமானியமாகச் சத்தை தோற்றுகின்றது.

* கஉஉ. மனதின் சங்கற்ப விகற்பமாகிய விக்ஷேபமில்லாத கேவலமாயிருக்கிறது.

* கஉந. மாயையின் காரியமாகிய ஸ்தூல சூக்ஷ்மப்பிரபஞ்ச மென்னும் விக்ஷேபமில்லாதிருக்கின்றது.

## ௩. மாயாசக்தியின் வர்ணனம் ௧௧௨-௧௨௩.

### ௧. மாயையின் இலக்ஷணமும் அதனால் துவைதமின்மையும். ௧௧௨-௧௧௮.

#### ௧. மாயையின் இலக்ஷணம்.

[௧௧௨] निस्तत्त्वा कार्यगम्यास्य शक्तिर्मायाग्निशक्तिवत् ।
न हि शक्तिः क्वचित्कैश्चिद्बुद्ध्यते कार्यतः पुरा ॥ ४७ ॥

(அ-கை.)

*மாயையின் அசாதாரணதர்மமாகிய லக்ஷணம் யாதென்னும் ஆசங்கையுண்டாக அங்குக் கூறுகின்றார்:—*

निस्तत्त्वा कार्यगम्या अस्य शक्तिः माया ॥

(சு-ம்)

*மித்தையும் காரியத்தினால் அறியப்படுவதுமாகிய இந்தப் பிரஹ்மத்தின் சாமர்த்தியம் * ௧௨௪. மாயையாம்.*

(வி-ம்)

ஜகத்திற்குக் காரணவஸ்துவாகிய பிரஹ்மத்திற்கு வேறாகிய வாஸ்தவ சொரூபமில்லாததும் ஆகாயமுதலிய காரியமாகிய இலிங்கத்தால் (ஏதுவால்) * ௧௨௫. அநுமிக்கத்தக்கதுமாயுள்ள இந்தச் சத்வஸ்துவின் சக்தியாகிய ஆகாயமுதலிய காரியங்களை உண்டாக்கும் சாமர்த்தியம் எதுவோ அது மாயை எனப்படும்.

---

* ௧௨௪. மாயையினது இலக்ஷணத்தின் பரீக்ஷை இதுவாம்:—தத்துவமில்லாததோ (மித்தையோ) ஜகத்துமாம். அது காரியமாகிய இலிங்கத்தாலறியத்தக்கதன்று. ஆனால் பிரசித்தமாயும் காரியவடிவமாயு மிருக்கின்றது. பிரஹ்மம் காரியமாகிய இலிங்கத்தாலறியப்படுவதாயினும் அது மித்தையும் தானே தனது சக்தியுமாகாது. ஆனால் வாஸ்தவவடிவமும் சக்தியினாசிரயமு (சக்தியுடையது)மாம். மிருத்திகைமுதலியவற்றின் சக்தி மித்தையும் காரியமாகிய இலிங்கத்தாலறியப்படுவதுமாம். அது சத்தின் (பிரஹ்மத்தின்) சக்தியன்று. ஆகையால் மித்தையும் காரிய இலிங்கத்தாலறியப்படுவதுமாகிய சத்தின் சக்தி மாயையாகிய மூலப்பிரகிருதியாம் என்னும் இந்த மாயையின் இலக்ஷணத்திற்கு ஒரிடத்தும் அதிவியாப்தியில்லை.

* ௧௨௫. அநுமானப்பிரமாணத்தாலறியத்தக்க அநுமிதிப்பிரமாவின் விஷயமாகிய அவ்வநுமானம் இதுவாம்:—ஆகாயமுதலிய பிரபஞ்சமாகிய காரியம் தனது காரணமாகிய விவர்த்தோபாதானப் பிரஹ்மத்திலுள்ள சத்தியினாலுண்டாகியதாம்; காரியமாகையமல்; யாது யாது காரியமோ அது அது தத்தம் உபாதானகாரணத்திலுள்ள சத்தியினாலுண்டானதாம். அது அக்கினியிலுள்ள சத்தியினாலுண்டாகிய பொறிமுதலிய காரியங்களைப்போலவும், மண்ணிலுள்ள சத்தியினாலுண்டாகிய கடமுதலிய காரியங்களைப் போலவுமாம்.

(அ-கை.)

சக்தியுடையதாகிய ப்ரஹ்மவஸ்துவிற்கு வேறாகச் சக்தி யுண்டென்பதில் திருஷ்டாந்தத்தைக் கூறுகின்றார் :—

अग्निशक्तिवत् ॥

(சு-ம்.)

அக்கினியின் தாகம் செய்யும் சாமர்த்தியம்போல.

(வி-ம்.)

* கஉசு. அக்கினிமுதலிய சக்தியுடையவற்றின் சொரூபத்திற்கு வேறாகப் * கஉஎ. பொறிமுதலிய காரியமாகிய இலிங்கத்தால் அநுமிக்கத்தக்க அக்கினிமுதலியவற்றிலுள்ள சாமர்த்தியத்தைப்போல மாயாசக்தியுமிருக்கின்றது என்பது பொருள்.

(அ-கை.)

சக்தி காரியமாகிய இலிங்கத்தா லறியத்தக்கதா மென்பதை வியதிரேகமுகமாகத் திடமாக்குகின்றார் :—

कैश्चित् कचित् कार्यतः पुरा शक्तिः न हि बुध्यते ॥

(சு-ம்)

எதனால் எவராலும் எவ்விடத்தும் அக்கினிமுதலிய சக்தியுடையவற்றின்கண் காரியத்திற்கு முன் சக்தி அறியப்படுகிறதில்லையோ அதனால் சக்தி காரியமாகிய இலிங்கத்தா லறியத்தக்கதாம். (சஎ)

[கககூ] न सद्वस्तु सतः शक्तिर्न हि वह्नेः स्वशक्तिता ।
सद्विलक्षणतायां तु शक्तेः किं तत्त्वमुच्यताम् ॥ ४८ ॥

(அ-கை)

இப்படி மாயாசக்தி காரியமாகிய இலிங்கத்தால் அறியத்தக்கதா மென்பதைச் சொல்லி, இப்போது பிரஹ்மத்திற்கு வேறாகச் சத்தையின்மையாகிய சக்தியின் மித்தியாத்தன்மையை உபபாதனஞ் செய்கின்றார் :—

सद्वस्तु सतः शक्तिः न ॥

---

*கஉசு. இங்கேமுதலிய வென்னுஞ்சொல்லால் மண் ஜலமுதலியன கொள்ளப்படும்.

* கஉஎ. இங்கே முதலியவென்னும் பதத்தால் கடம், குளிர்ச்சி, பொடிமுதலியவற்றைத் திரட்டுதல் என்பனமுதலிய அதனதன் காரியமும் கொள்ளப்படும்.

(சு-ம்.)

சத்வஸ்துவானது தானே சத்தாகிய தனது சக்தியாகாது.

(வி-ம்)

இங்கே இது அபிப்பிராயம்:—சத்வஸ்துவின் சக்தி சத்ரூபமா? அல்லது அசத்ரூபமா? என்பன இரண்டு விகற்பம். அவற்றுள் முதலில் சத்தின் சக்தி சத்ரூபமா மென்னும் முதற்பக்ஷம் பொருந்தாது. ஏனெனின், அப்படியாகுமாயின் அதாவது சத்தின்சக்தி சத்துவடிவமாகுமாயின் சத்திற்கு அபின்னமாயிருத்தலால் அச்சத்தின் சக்தியாகத்தகாததா யிருக்கின்றது.

(அ-கை.)

முற்கூறிய சக்தி சத்துவடிவ மன்று என்னும் அர்த்தத்தில் திருஷ்டாந்தத்தைக் கூறுகின்றான்:—

हि वह्नेः स्वशक्तिता न ॥

(சு-ம்.)

* கஉஅ. அக்கினிக்குத் தானே சக்தியாந்தன்மை யில்லை.

(அ-கை.)

சத்தின்சக்தி அசத்துவடிவமா மென்னும் இரண்டாவது பக்ஷத்திலும் அசத்துவடிவமாகிய சத்தின் சக்தி முயற்கொம்புபோன்ற சொரூபமில்லாமையால் துச்சமா? அல்லது பாதிக்கப்படாத சத்திற்கு விலக்ஷணமா அதாவது பாதமாகத்தக்கதா? என்னும் விகற்பத்தின் அபிப்பிராயத்தால் சித்தாந்தி வாதியை நோக்கிக் கேட்கிறார்:—

सद्विलक्षणतायां तु शक्तेः किं तत्त्वम् उच्यताम् ॥

(சு-ம்)

சத்தி சத்துவிலக்ஷணம் அதாவது * கஉகூ. அசத்துவடிவமாகுமாயின் அச்சக்திக்குச் சொரூபம் யாது? கூறுக. (சஅ)

---

* கஉஅ. அக்கினி தானே தனது சக்தியாகாது. ஏனெனின், அக்கினியே அக்கினியின் சக்தியாகுமாயின், அக்கினியிருக்கப் பிரதிபந்தவடிவ மணிமந்திர ஔஷதங்களால் தாகமில்லாமற்போகின்றது. உத்தேஜகமாகிய பிரதிபந்தத்தை மாற்றும் மணிமந்திர ஔஷதமிருக்குமாயின் பிரதிபந்தம் இருக்குங்காலத்தும் தாக முண்டாகின்றது. அவ்விரண்டும் உண்டாகலாகா. உண்டாகின்றமையால் அக்கினியின் சக்தி அக்கினிவடிவ மன்று; அக்கினிக்கு வேறுமென விச்சயிக்கப்படுகின்றது.

* கஉகூ. சத்திற்கு விலக்ஷணமாகிய அசத்து என்பதற்கு இரண்டு பொருளுண்டு:—ஒன்று சொரூபமில்லாததாம் (சூனியமாம்); மற்றொன்று பாதிக்கத்தக்க

[௧௧௪] शून्यत्वमिति चेच्छून्यं मायाकार्यमितीरितम्।
शून्यं नापि सद्यादृक्तादृक्तत्त्वमिहेष्यताम् ॥ ४९ ॥

(அ-கை.)

அந்த மனிதக்கொம்புக்குச் சமானமா? அல்லது சத்திற்கு விலக்ஷணமா? என்னு மிரண்டு பக்ஷங்களுள் மனிதக்கொம்புக்குச் சமானமா மென்னும் முதற்பக்ஷத்தை அநுவதித்துத் தூஷிக்கின்றார் :—

शून्यत्वं इति चेत् शून्यं मायाकार्यं इति ईरितम् ॥

(சு-ம்.)

சக்தியின் சொரூபம் சூநியமாமெனின் இன்மையாகிய சூநியம் மாயையின் காரியமாம் என்று முன் ௩௪-வது சுலோகத்தில் உன்னாற் சொல்லப்பட்டிருக்கின்றது.

(வி-ம்.)

“ சூநியத்தின் நாமரூபங்களிரண்டும் அப்படியே ஆகாயமுதலிய நாமரூபங்களைப்போலச் சத்திற்கற்பிதமாம் என்றுகொள்ளுவாயாயின் நீ வெகு காலம் வாழக்கடவாய்.” என்று முன் இந்தப் பிரகரணத்தின் ௩௪-வது சுலோகத்திற்கூறிய வசனத்தால் நீ உனது வாயினாலேயே சூநியத்தை மாயையின் காரிய மென்று கூறியிருக்கின்றாய். ஆகையால் அச்சூநியவடிவமாகிய காரியம் சக்தி(முன் சித்தித்துள்ள மாயை)யின் சொரூபமாகாது என்பது பொருள்.

(அ-கை.)

ஆகையால் சக்தி சத்திற்கு விலக்ஷணமா மென்னும் இரண்டாவது பக்ஷம் மிஞ்சியிருக்கின்ற தென்று கூறுகின்றார் :—

शून्यं न सत् अपि न यादृक् तादृक् तत्त्वम् इह इष्यताम् ॥

(சு-ம்.)

சத்தின் சக்தி மனிதக்கொம்புபோலச் சொரூபமில்லாத சூநியமுமன்று ; பாதிக்கத்தகாததான சத்து மன்று ; ஆனால் எப்படி மிஞ்சியிருக்கின்றதோ அப்படிப்பட்ட சக்தியின் சொரூபம் இங்கே வேதாந்தசித்தாந்தத்தில் அங்கீகரிக்கவேண்டும்.

---

சொரூபமுடைய மித்தையாகிய அநிர்வசநீய அர்த்தமாம். ௧௧௭-வது பக்கத்தின் அ௬-வது டிப்பணத்திற் காண்க. அவ்விரண்டு அசத்தெனும் சொற்களின் அர்த்தத்தினுள் சக்திக்குச் சொரூபம் யாது? அதைச் சொல்லுக வென்பது வினாவின் அபிப்பிராயமாம்.

(வி-ம்.)

மாயையின் சொரூபம் சத்தாகவாவது அல்லது அசத்தாகவாவது சொல்லத்தகாததாம் அதாவது *கூ0. அநிர்வசநீயமாம் என்பது அபிப்பிராயம். (சக)

---

*கூ0. சத்தசத்தினும் விலக்ஷணத்திற்கு அநிர்வசநீய மென்று பெயராம். மாயையின் சொரூபம் சத்தெனின், அச்சத்து பிரஹ்மத்தின் பின்னமா? அல்லது அபின்னமா? பின்னமெனின், அத்வைதத்தைப் பிரதிபாதிக்கும் சுருதிகளுக்கு விரோதமுண்டாகும். இடையின்றிய பிரஹ்மத்தில் அச்சக்தியின் நிலையும் சம்பவியாது. ஆகையால் பிரஹ்மத்தினும் பின்னமாகாது.

பிரஹ்மத்திற்கு அபின்னமாகிய சத்து சக்தியின் சொரூபமெனின், சக்திக்கும் சக்தியுடையதற்கும் ஐக்கியம் அசம்பாவமா மென்று ககூ-வது சுலோகத்திற் கூறிய தோஷமுண்டாம். ஞானத்தினால் நிவிருத்திக்கத்தக்க பதார்த்தமில்லாமையால் சாதனத்தோடு ஞானத்தையும், ஞானத்தினால் சாதிக்கத்தக்க மோக்ஷத்தையும் பிரதிபாதிக்கும் வேதமுதலிய சாஸ்திரங்களும் வியர்த்தமாம்.

மாயையின் சொரூபம் அசத்தெனின், அசத்தாகிய மாயை பாவரூப (உண்மைவடிவ) மாகிய ஜகத்திற்குக் காரணமாதல் சம்பவியாது. கீதையின் இரண்டாவது அத்தியாயத்தின் கசு-வது சுலோகத்தில் கூறிய "அசத்திற்குப் பாவமில்லை (இருப்பில்லை)" என்னும் பகவானது வாக்கியத்திற்கு விரோதமுண்டாம். ஆகையால் மாயையின் சொரூபம் அசத்தென்பதும் பொருந்தாது. ஆனால் சத்தசத்திற்கு விலக்ஷணம் மாயையின் சொரூபமாம்.

இங்கே இது சங்கையாம்:—சத்திற்கு விலக்ஷணம் அசத்தாம். அதனை அசத்திற்கு விலக்ஷணமென்று சொல்லுதல் விருத்தமாம். அதுபோல அசத்திற்கு விலக்ஷணம் சத்தாம். அதனைச் சத்திற்கு விலக்ஷணமெனல் விருத்தமாம். ஆகையால் சத்தசத்திற்கு விலக்ஷண மென்று சொல்லுதலால் மாயைக்கு யாதொரு சொரூபமும் சித்திக்கவில்லை. அஃதின்றி ஞானத்தினால் நிவிருத்தியாகத்தக்க பிரபஞ்சம் சித்தியாது. இதனால் ஞானமுதலியவை வியர்த்தமாம்.

இச்சங்கைக்குச் சமாதான மிதுவாம்:—இங்கே சத்திற்கு விலக்ஷண மென்னுஞ் சொல்லிற்குப் பொருள் அசத்தென்பது கருத்தன்று. ஆனால் மூன்றுகாலத்திலும் பாதிக்கத்தகாதது சத்து. அதனினும் விலக்ஷண மென்றதினால் பாதிக்கத்தக்கது என்பது சத்விலக்ஷண மென்னும் சொல்லிற்குப் பொருளாம். அசத்திற்கு விலக்ஷணமென்னும் சத்தத்திற்கு அர்த்தம் சத்தென்பது கருத்தன்று. ஆனால் அசத்தென்பது சொரூபமில்லாததா (சூனியமா)ம். அதற்கு விலக்ஷண மென்றதினால் சொரூபமுடைய தென்பது அசத்விலக்ஷண மென்னும் சொல்லிற்குப் பொருளாம். பாதமாகத்தக்க (மித்தையென்று நிச்சயிக்கத்தக்க) சொரூபமுடைய வஸ்து சதசத் (சத்தசத்திற்கு)விலக்ஷண மெனப்படும். அதனையே அநிர்வசநீய மென்றுங் கூறுவர். இவ்வாற்றால் மாயையிலும், அதன் காரியமான ஆகாயமுதலிய வியாவகாரிகவஸ்துக்களிலும், சொப்பனம் இரச்சுசர்ப்பமுதலிய பிராதிபாஸிகவஸ்துக்களிலும் முழுவதிலும், பாதயோக்கிய சொரூபமுடைய தென்பதே அநிர்வசநீயமென்னும் பதத்திற்கு அர்த்தமாம்.

உ. மாயை அநிர்வசநீயமா மென்பதில் சுருதிப்பிரமாணம்.

[கக௫] नासदासीन्नोसदासीत्तदानीं किंत्वभूत्तमः ।
सद्योगात्तमसः सत्वं न स्वतस्तन्निषेधनात् ॥५०॥

(அ·கை.)

மாயை சதசத்திற்கு விலக்ஷணமா மென்னும் இவ்வர்த்தத்தில் சுருதிப்பிரமாணத்தைக் கூறுகின்றார் :—

तदानीं न असत् आसीत् नो सत् आसीत् किंतु तमः अभूत् ॥

(சு-ம்.)

அப்போது பிரளயகாலத்தில் அசத்தும் இருந்ததில்லை; சத்துமிருந்ததில்லை. மற்றென்னை யிருந்ததெனின் இருளாகிய அஞ்ஞானமே இருந்தது.

(வி-ம்)

"तम आसीत् சத்துமிருந்ததில்லை அசத்துமிருந்ததில்லை ; ஆனால்அஞ்ஞானமாகிய * கரூக. இருளே யிருந்தது" "तमसा गूढमग्रे சிருஷ்டிக்குமுன் அஞ்ஞானவடிவ தமத்தினால் மறைக்கப்பட்டதாய்ப் பிரஹ்மம் இருந்தது" என்னும் இவைமுதலிய சுருதி அஞ்ஞானபதத்திற்கு வாச்சியமாகிய மாயை சதசத்திற்கு விலக்ஷணமான அநிர்வசநீய மென்பதில் பிரமாணமாம் என்பது பொருள்.

(அ-கை.)

அப்படியானால் "தமமிருந்தது" என்னும் சுருதிவாக்கியத்தால் அஞ்ஞானத்திற்குச் சத்துத்தன்மை எப்படிச் சொல்லப்படுகின்றதென அங்குக் கூறுகின்றார் :—

सद्योगात् तमसः सत्वं स्वतः न ॥

(சு-ம்.)

சத்தாகிய அதிஷ்டானப்பிரஹ்மத்தின் * கரூஉ. கற்பிததாதான்மிய

---

* கரூக. இங்கே சத்தசத்திற்கு விலக்ஷணமாகிய "மாயையே யிருந்தது" என்பது பொருள்.

* கரூஉ. (க) இரண்டு திரவியங் (குணத்திற்கு ஆசிரியமாகும் வஸ்துக்)களுக்கே சையோகசம்பந்த முண்டாகும். (சுகூ-வது பக்கத்தின் கஎஉ-வது டிப்பணத்திற்காண்க.) பிரஹ்மம் நிர்க்குணம்; மாயை சத்துவமுதலிய குணவடிவமாம்; குணத்திற்கு ஆசிரயமாகாது. ஆகையால் பிரஹ்மமும் மாயையும் குணத்திற்காசிரயமான திரவியமாகா. அதனால் அவ்விரண்டிற்கும் சையோகசம்பந்தமும் பொருந்தாது.

சம்பந்த மென்னும் யோகத்தால் அஞ்ஞானத்தின் சத்துவமாகிய இருப்புச் சொல்லப்படுகின்றது ; தன்னியல்பால் அன்று.

(அ-கை.)

அஞ்ஞானத்திற்கு இயல்பாகிய சத்தை எதனாலில்லை எனக் கூறுகின்றார் :—

तान्निषेधनात् ॥

(சு-ம்.)

"சத்திருந்ததில்லை" என்னுஞ் சுருதிவாக்கியத்தால் அவ்வஞ்ஞானத்தின் சத்தை நிஷேதிக்கப்படுதலால். (௫0)

௬. சக்தியும் சக்தியின் காரியமும் வேறாகாதெனுந்தன்மையால் துவைதத்தை நிராகரித்தல்.

[கக௬] अत एव द्वितीयत्वं शून्यवन्न हि गण्यते ।
न लोके चैत्रतच्छक्त्योर्जीवितं लिख्यते पृथक् ॥ ९१ ॥

(அ-கை.)

பலிதத்தைக் கூறுகின்றார் :—

अतः एव शून्यवत् द्वितीयत्वं न हि गण्यते ॥

---

(உ) குணத்திற்கும் குணிக்கும், ஜாதிக்கும் வியக்திக்கும், கிரியைக்கும் கிரியையுடையதற்கும், உபாதானகாரணத்திற்கும் காரியத்திற்கும் சமவாயசம்பந்தமுண்டு. பிரஹ்மத்திற்கும் மாயைக்கும் ஒன்றற்கொன்று குணகுணித்தன்மையும், ஜாதிவியக்தித்தன்மையும், கிரியை கிரியையுடைமையும், காரணகாரியத்தன்மையும் இல்லாமையால் அவற்றிற்குச் சமவாயசம்பந்தமும் பொருந்தாது.

(௩) சொரூபசம்பந்தத்திற்கு தாதாத்மியசம்பந்த மென்று பெயர். பிரஹ்மமும் மாயையும் ஒன்றற்கொன்று விலக்ஷணமாயிருத்தலால் அவற்றிற்குத் தாதாத்மிய சம்பந்தமும் பொருந்தாது. அல்லது எங்கே (குணகுணிமுதலியவற்றில்) நையாயிகர் சமவாயம் ஒப்புகின்றார்களோ அங்கே வேதாந்தமதத்தில் தாதாத்மியம் சொல்லப்பட்டிருக்கின்றது. ஆகையால் சமவாயம் நிஷேதிக்கப்படவே தாதாத்மியமும் நிஷேதிக்கப்பட்டதாம்.

(௪) சுருதியில் பிரஹ்மத்திற்கு அசங்கத்தன்மை பிரதிபாதிக்கப்படுதலால் மாயைக்கும் பிரஹ்மத்திற்கும் வாஸ்தவசம்பந்தம் பொருந்தாது. ஆனால் ஆகாயத்திற்கும் கருமைக்குமுள்ள சம்பந்தம்போலப் பிரஹ்மத்திற்கும் மாயைக்கும்(கற்பித) தாதாத்மியசம்பந்தம் ஒப்பப்பட்டிருக்கிறது. அதனையே அநிர்வசநீயதாதாத்மிய மென்றுங் கூறுவர். இப்படிச் சமஷ்டிவியஷ்டிப் பிரபஞ்சத்திற்கும் பிரஹ்மத்திற்கும் இதே சம்பந்தம் ஒப்பப்பட்டிருக்கின்றது.

(சு-ம்.)

இதனாற்றான் சூந்யத்தைப்போல மாயைக்கு இரண்டாவதுதன்மை யாகிய பிரஹ்மத்திற்கு வேறுந்தன்மை எண்ணப்படவில்லை.

(வி-ம்.)

மாயைக்கு இயல்பாகச் சத்தையில்லாமையால் சூந்யத்தைப்போல மாயைக்கும் இரண்டாவதெனுந்தன்மை எண்ணப்படவில்லை அதாவது ஆத ரிக்கப்படவில்லை என்பது பொருள்.

(அ-கை.)

மித்தைக்கு இரண்டாவதாந்தன்மை அங்கீகரிக்கப்படாமையில் திருஷ் டாந்தத்தைக் கூறுகின்றார் :—

लोके चैतत्तच्छक्त्योः जीवितं पृथक् न लिख्यते ॥

(சு-ம்.)

சக்தியுடையவனும் அவனது சக்தியுமாகிய இரண்டன் இருப்பும் வேறு வேறு யெழுதப்படுகிற தில்லை. (ருக)

[ககஎ] शक्त्याधिक्ये जीवितं चेद्वर्धते तत्र वृद्धिकृत्।
न शक्तिः किंतु तत्कार्यं युद्धकृष्यादिकं तथा ॥ ९२ ॥

(அ-கை.)

அப்படியானால் சக்தி அதிகமாயிருக்குமிடத்துப் பிழைப்பின் அதி கத்தன்மையும் உலகத்தில் காணப்படுதலால் சக்திக்கும் புருஷனுக்கும் தனித்தனி இருப்பிருக்கின்றது என்று வாதி சங்கிக்கின்றான் :—

शक्त्याधिक्ये जीवितं वर्धते चेत् ॥

(சு-ம்)

யுத்தமுதலியவற்றின் சாமர்த்தியவடிவ சக்தி அதிகரிக்க ஜீவிப்பு விருத் தியாகின்ற தென்பையாயின்.

(அ-கை.)

ஜீவிப்பின் விருத்தியில் சக்தி காரண மன்று; மற்றென்னெனின் அதன் (சக்தியின்) காரியமாகிய யுத்தம், கிருஷி, வியாபாரம், சேவைமுதலியன ஜீவிப்பின் விருத்தியிற் காரணமா மென்று சித்தாந்தி பரிகரிக்கின்றார் :—

तत्र वृद्धिकृत् शक्तिः न किंतु तत्कार्यम् युद्धकृष्यादिकम् ॥

(சு-ம்.)

அங்கு ஜீவனத்தில் விருத்தியைச் செய்வது சக்தி யன்று. மற்றென்னெனின், அச்சக்தியின் காரியமாகிய யுத்தம் வேளாண்மைமுதலியவைகள் ஜீவிப்பின் விருத்திக்குக் காரணமாம்.

(அ-கை.)

இத்திருஷ்டாந்தத்தில்கூறிய அர்த்தத்தைத் தார்ஷ்டாந்தத்தில்(மாயா சக்தியில்) பொருத்துகின்றார் :—

तथा

(சு-ம்.)

அப்படியே மாயாசக்தி பிரஹ்மத்திற்கு வேறன்று. (௫௨)

[௧௧௮] सर्वथा शक्तिमात्रस्य न पृथग्गणना क्वचित् ।
शक्तिकार्ये तु नैवास्ति द्वितीयं शंक्यते कथम् ॥ ५३ ॥

(அ-கை.)

முற்கூறிய அர்த்தத்தை எல்லாச் சக்திகளின் ஸ்தானத்திலும் பிரதிஞ்ஞைசெய்கின்றார் :—

सर्वथा शक्तिमात्रस्य क्वचित् पृथक् गणना न ॥

(சு-ம்.)

எல்லாவிதத்தாலும் சகல சக்திகளும் ஓரிடத்தும் சக்தனுக்கு வேறாக எண்ணப்படுவதில்லை.

(அ-கை.)

அப்படியாளுல் மாயாசக்தியினால் சத்திற்குத் துவைதத்தோடுகூடிய தன்மை வேண்டாம். அதன் (மாயாசக்தியின்) காரியமான ஸ்தூலசூக்ஷ்மப் பிரபஞ்சத்தால் பிரஹ்மத்திற்குத் துவைதத்தோடுகூடியதன்மை யுள்ளதேயாம் என்றாசங்கித்து, அச்சக்தியின் காரியம் அப்போது பிரளயகாலத்தில் இல்லாதிருத்தலால் அம்மாயாகாரியத்தினாலும் பிரஹ்மத்திற்குத் துவைதத்தோடுகூடியதன்மை பொருந்ாதெனக் கூறுகின்றார் :—

शक्तिकार्ये तु न एव अस्ति कथं द्वितीयं शंक्यते ॥

(சு-ம்)

மாயாசக்தியின் காரியமான நாமரூபமோ அப்போது இல்லவே இல்லை. ஆகையால் சக்தியின் காரியமாகிய அதனால் துவைதமாகிய இரண்டாவது எப்படிச் சங்கிக்கப்படும்? (எவ்விதத்தாலும் துவைதசங்கை பொருந்தாது என்பது பொருள்) (௫௩)

௨. பிரஹ்மத்தின் ஏகதேசத்திற் சக்தியிருத்தல். ருச. ருஅ.

க. திருஷ்டாந்தத்தோடு சக்தி பிரஹ்மத்தின் ஏகதேசத்திருத்தல்.

[கககூ] न कृत्स्नब्रह्मवृत्तिः सा शक्तिः किंत्वेकदेशभाक् ।
घटशक्तिर्यथा भूमौ स्निग्धमृद्येव वर्तते ॥ ५४ ॥

(அ-கை.)

அப்படியானால் சத்தின் சக்தியாகிய மாயை சத்தில் எங்கு மிருக்கின்றதா? அல்லது அதன் ஏகதேசமாகிய ஒரு அவயத்தில் இருக்கின்றதா? என்பது இரண்டு விகற்பம். அவற்றுள், எங்குமிருக்கின்ற தென்னும் முதற்பக்ஷம் பொருந்ாது; ஏனெனின், ஞானிகளாகிய முக்தர்களால் அடையத்தக்க * கஙங. சுத்தப்பிரஹ்மத்தின் அபாவம் சம்பவித்தலால். * கஙச. ஏகதேசத்திலிருக்கின்ற தென்னும் இரண்டாவது பக்ஷமும்

* கஙங. ஞானிக்கு மாயை அவித்தைமுதலிய பிரபஞ்ச மில்லாத சுத்தப்பிரஹ்மத்தின் அடைவு உண்டாகின்ற தென்பது வேதாந்தத்தின் சித்தாந்தமாம். மாயை பிரஹ்மமுழுவதினு மிருக்குமாயின் பிரஹ்மமுழுவதும் மாயாவிசிஷ்டமாகுதலால் பிரஹ்மத்தில் சுத்தத்தன்மையாகிய மாயையின்மை உண்டாகாது. ஆகையால் ஜீவன் முக்தர்களாகிய ஞானிகளுக்கு விதேகமோக்ஷதசையில் அடைதற்குரிய சுத்தமாயையின்றிய கேவலப்பிரஹ்மம் இல்லாமற்போகும். அன்றியும் மாயையோடுகூடிய பிரஹ்மத்தை முக்தர்களடைவார்களாயின், அங்கும் அவித்தையிருத்தலால் முக்தர்களுடைய ஆத்மா அவித்தியாவிசிஷ்டமாகுதலாலேனும், அல்லது அவித்தையில் பிரதிபிம்ப (ஆபாச)மாகுதலாலேனும் ஜீவத்தன்மையை அடைதலால் மறுபடியும் ஜன்மமுதலிய சம்சாரத்தினடைவு உண்டாகும். முற்கூறிய இவ்வநர்த்தத்தின் அடைவால் பிரஹ்மத்தில் எங்கும் மாயை உண்டெனல் பொருந்தாது.

* கஙச. பிரஹ்மத்தின் ஏகதேசத்தில் மாயை இருக்கிறதென்று சொல்லுமிடத்தில் பிரஹ்மத்தில் மாயை நிலைத்தற்குத் தேசம் என்னும் அவயவம் சொல்லவேண்டியதாம். அந்தத் தேசம் வாஸ்தவமா? அல்லது கற்பிதமா?

(க) வாஸ்தவமெனின் பிரஹ்மத்திற்கு நிரவயவத்தன்மையைப் பிரதிபாதிக்கும் சுருதிக்கும், முன் ககஙு-வதுபக்கத்தின் அங-வது டிப்பணத்திற்கூறிய யுக்திக்கும் விரோத முண்டாகும். ஆகையால் பிரஹ்மத்திற்கு வாஸ்தவ(யதார்த்த)தேசமாகிய அவயவம் பொருந்தாது.

(உ) பிரஹ்மத்தில் கற்பிததேசத்தைச் சொல்லுமிடத்து,

[க] அந்தத்தேசம் தூலசூக்ஷ்மப்பிரபஞ்சவடிவமா?
[உ] அல்லது ஜீவேசுவரவடிவமா?
[ங] அல்லது காலவடிவமா?
[ச] அல்லது சூநியவடிவமா?
[ரு] அல்லது மாயைவடிவமா?
[சு] அல்லது வேறுவடிவமா? வென ஆறுவிகற்ப முண்டாகின்றன.

அவற்றுள்,

பொருந்தாது; ஏனெனின், பிரஹ்மத்திலுள்ள நிரம்சமாகிய நிரவயவத்தன் மைக்கு விரோதமிருத்தலால் என்றுசங்கித்து,முழுவதிலுமிருக்கின்றதென் னும் முதற்பக்ஷம் அங்கிகரிக்கப்படாமையால் ஏகதேசத்திலிருக்கிறதென் னும் இரண்டாவது பக்ஷத்தில் நிரம்சத்தன்மைக்கு விரோதமாமென்னும் சங்கையின் மறுப்பு (திரஸ்கார)வடிவ பரிகாரம் இதன் ௫அ-வது சுலோ கத்திற் சொல்லப்படுமென்னும் அபிப்பிராயமாகக் கூறுகின்றார்:—

सा शक्तिः कृत्स्नब्रह्मवृत्तिः न किंतु एकदेशभाक् ॥

(சு-ம்.)

அந்தச் சக்தியானது பிரஹ்மமுழுவதிலுமில்லை; ஆனால் அதன் ஏக தேசத்திலிருக்கின்றது.

(அ-கை.)

சக்தியின் ஏகதேசத்திலிருத்தலில் திருஷ்டாந்தத்தைக் கூறுகின்றார்:-

यथा घटशक्तिः भूमौ स्निग्धमृदि एव वर्तते ॥

---

[க] முதல்விகற்பம் பொருந்தாது. ஏனெனின், முற்கூறிய பிரபஞ்சம் மாயையின் காரியமாகையால் (பிரபஞ்சம்) மாயையினது ஸ்திதியின் அதீனமாம். ஆகையால் அது அதற்கு ஆசிரயமாகாது.

[உ] ஜீவேசுவரவடிவமென்னும் இரண்டாவது பக்ஷமும் பொருந்தாது. ஏனெனின், ஜீவேசுவரர்களும் மாயிகமா(மாயையினது லீலையின் அதீனமாகத் தமது லீலையையுடையவர்களா)யிருத்தலால் அவர்கள் அதற்கு ஆசிரயமாவது பொருந்தாது.

[௩] காலவடிவமென்னும் மூன்றாவது பக்ஷமும் பொருந்தாது. ஏனெனின், காலம் மாயையால் கற்பிக்கப்பட்டதாயிருத்தலாலும் அதற்குத் தேசவடிவ மாதல் சம்பவியாமையாலும் மாயைக்கு ஆசிரயமாதல் பொருந்தாது.

[௪] சூனியவடிவமென்னும் நான்காவது பக்ஷமும் பொருந்தாது. ஏனெனின், சூனியமும் மாயையின் காரியமான விகற்பவடிவமாகிய துச்சமாயிருத்தலால் எதற்கும் ஆசிரயமாதல் பொருந்தாது.

[௫] மாயைவடிவமென்னும் ஐந்தாவது பக்ஷமும் பொருந்தாது. ஏனெனின், மாயை தனக்குத் தானே ஆசிரயமாமெனின் ஆத்மாசிரயதோஷமுண்டாகும். அதற்கு இரண்டாவது மாயை ஆசிரயமாமெனின் அந்நியோந்நியாசிரயதோஷமுண் டாம். மூன்றாவது மாயையெனின் சக்கிரிகாதோஷமுண்டாம். நான்காவதெனின் அநவஸ்தைமுதலிய (விநிகமனவிரகம், பிராக்லோபம், பிரமாண அபாவம் என்னும்) தோஷங்களுண்டாம்.

[௬] இவற்றைவிட வேறுகற்பனைகள் இல்லாமையால் கடைசிப்பக்ஷமும் பொருந்தாது. ஆகையால் நிரவயவப்பிரஹ்மத்தில் தேசம் சம்பவியாமையால் பிரஹ்மத்தின் ஏகதேசத்தில் மாயை இருக்கிறதென்று கூறுதல் பொருந்தாது.

(சு-ம்.)

எப்படிக் கடவடிவ காரியத்தை யுண்டாக்கும் சாமர்த்தியமாகிய சக்தி பூமிமுழுவதிலு மில்லையோ, ஆனல் பூமியில் களிமண்வடிவ ஏகதேசத்திலேயே இருக்கின்றதோ, அப்படியே மாயையின் சக்தியும் பிரஹ்மத்தின் ஏகதேசத்தி லிருக்கின்றது. (ருச)

உ. சக்தி சத்தின் ஏகதேசத்திலிருத்தலிற் பிரமாணம்.

[கஉ0] पादोऽस्य सर्वा भूतानि त्रिपादस्ति स्वयंप्रभः ।
इत्येकदेशवृत्तित्वं मायाया वदति श्रुतिः ॥ ५५ ॥

(அ-கை.)

சக்தி பிரஹ்மத்தின் ஏகதேசத்திலிருப்பதில் பிரமாணமாகிய சுருதியைக் கூறுகின்றார்:—

अस्य पादः सर्वा भूतानि त्रिपाद् स्वयंप्रभः अस्ति इति श्रुतिः मायाया एकदेशवृत्तित्वं वदति ॥

(சு-ம்.)

"பரமாத்மாவிற்கு எல்லாப்பூதங்களும் ஒரு பாத (பாக)மாம். மற்ற மூன்றுபாகம் சொப்பிரகாசமாம்" என்று மாயையின் ஏகதேசத்திலிருக்குந் தன்மையை வேதமானது சொல்லுகின்றது. (ருரு)

[கஉக] विष्टभ्याहमिदं कृत्स्नमेकांशेन स्थितो जगत् ।
इति कृष्णोऽर्जुनायाह जगतस्त्वेकदेशताम् ॥ ५६ ॥

(அ-கை)

சக்தி பிரஹ்மத்தின் ஏகதேசலிருத்தலில் சுருதிமாத்திரமே பிரமாணமன்று; கீதாஸ்மிருதியும் பிரமாணமாமெனக் கூறுகின்றார்:—

"अहं कृत्स्नं इदं जगत् एकांशेन विष्टभ्य स्थितः" इति कृष्णः अर्जुनाय जगतः तु एकदेशतां आह ॥

(சு-ம்.)

"அர்ச்சுனா! பரமேசுவரனாகிய நான் இந்தச் சுற்றிலுங்காணப்படும் ஸ்தூல சூக்ஷ்மவடிவமாகிய பிரபஞ்சமுழுவதையும் * கஙு. ஏகதேசத்

* கஙு. எல்லாப் பூதசொரூபமாகிய பிரபஞ்சத்தின் உபாதான சக்தியாகிய மாயையை உபாதியாகவுடையது ஒருபாத(அவயவ)மாம். அதனல் இங்கே மூன் கஉ0-வது சுலோகத்தில் கூறிய சுருதியே மூலமாமென்னும் அர்த்தம் பாஷியகாரராலும் ஸ்ரீ ஆநந்தகிரிஸ்வாமிகளாலும் கீதையின் வியாக்கியானத்தில் சொல்லப்பட்டிருக்கின்றது.

தால் தரித்துக்கொண்டு நிலைத்திருக்கிறேன்" என்று ஸ்ரீ கிருஷ்ணபகவான் அர்ச்சுனனுக்கு ஜகத்தின் ஏகதேசத்திலிருத்தலைச் * கஙௗ. சொன்னார். ()

௫. எஞ்சிய மாயையின்றிய சொரூபத்தின் இருப்பில் பிரமாணம்.

[கஉஉ] स भूमिं विश्वतो वृत्वा ह्यत्यतिष्ठद्दशांगुलम् ।
विकारावर्ति चात्रास्ति श्रुतिसूत्रकृतोर्वचः ॥ ५७ ॥

(அ-கை.)

இப்போது மாயை சிறிதுமின்றிய சொரூபமாகிய மூன்றுபாதவடிவ சுவயம்பிரகாசத்தின் சத்பாவத்தில் பிரமாணமாகிய சுருதியையும் வியாச சூத்திரத்தையும் கூறுகின்றார்:—

सः भूमिं विश्वतः वृत्वा दशांगुलं हि अत्यतिष्ठत् । विकारावर्ति च अस्ति अत्र श्रुतिसूत्रकृतोः वचः ॥

(சு-ம்.)

அப்பரமாத்மா * கங௭. பூமியை எங்கும் வியாபித்து * கங௮. பத்து அங்குலம் அதிகரிக்கின்றது. காரியமாகிய பிரபஞ்சத்தினும் அதிகரிக்கின்றதென்னும் சுருதிசூத்திரகாரர்களின் வாக்கியம் இங்கே மாயையின்றிய சொரூபத்தின் சத்பாவத்தில் பிரமாணமாம்.

(வி-ம்.)

"विकारावर्ति च तथाहि स्थितमाह விகாரமாகிய பிரபஞ்சத்தினும் பிரஹ்மம் அதிகரிக்கின்றது. அப்படியே பிரஹ்மத்தின் நிலையை முற்கூறிய சுருதி கூறியிருக்கின்றது" என்னும் சூத்திரகாரராகிய ஸ்ரீ வியாசமுனிவரது * கங௯. வாக்கியமு மிருக்கின்றது என்பது பொருள். (௫௭)

---

* கங௬. கீதையின் பத்தாம் அத்தியாயத்தின் கடைசியாகிய ௪உ-வது சுலோகத்திற் காண்க.

* கங௭. இங்கே சுருதியில் பூமி என்னுஞ்சொல்லால் அதனால் உபலக்ஷிக்கப்பட்ட சகலப்பிரபஞ்சமும் கொள்ளப்படும்.

* கங௮. இங்கே பத்து அங்குலம் வரையிலும் என்று சொல்லுதல் உபசார ஆரோப)மாகவாம். இதன் அபிப்பிராயம் இதுவாம்:—பரமாத்மா சகலப் பிரபஞ்சங்களினும் அதிகரித்து வேறாய் அளவுபடாதவரா யிருக்கின்றா ரென்பதாம்.

* கங௯. சாரீரகத்தினது நான்காவது அத்தியாயத்தின் நான்காவது பாதத்திலுள்ள கக-வது பிரஹ்மசூத்திரம்.

ச. வாஸ்தவப்பிரஹ்மத்தை நிரம்சமாக கஉ0-கஉஉ சுலோகங்களிற் கூறிய சுருதியின் அபிப்பிராயம்.

[கஉ௲] निरंशेऽप्यंशमारोप्य कृत्स्नेंऽशे वेति पृच्छतः ।
तद्भाषयोत्तरं ब्रूते श्रुतिः श्रोतृहितैषिणी ॥ ५८ ॥

(அ-கை.)

அப்படியானால் பிரஹ்மத்தின் ஏகதேசத்தில் மாயையிருக்குமாயின் பிரஹ்மத்தின் நிரம்சத்தன்மைக்கு விரோதமுண்டாகு மென்று முன் ககக-வது சுலோகத்திற் கூறியிருத்தற்குப் பரிகாரம் யாதென்றாசங்கித்து, வாஸ்தவமாகிய நிரம்சத்தன்மையை அங்கீகரித்தலின் ஆரோபிதமாகிய ஏக தேசத்தில் மாயை ஒப்புக்கொள்ளுதலால் நிரம்சத்தன்மைக்கு விரோதமில் லை யென்னும் அபிப்பிராயமாக உதாரணமாய்ச் சொல்லப்பட்ட சுருதியின் அபிப்பிராயத்தைக் கூறுகின்றார்:—

श्रोतृहितैषिणी श्रुतिः कृत्स्ने अंशे वा इति पृच्छतः तद्भाषया निरंशे अपि अंशं आरोप्य उत्तरं ब्रूते ॥

(சு-ம்.)

சுருதியானது எதனால் சுரோதாவாகிய அதிகாரியின் ஞானமும் மோக்ஷமுமான இதத்தை இச்சிப்பதாயிருக்கின்றதோ அதனால் பிரஹ்மமுழுவதினும் மாயை யிருக்கின்றதா? அல்லது பிரஹ்மத்தின் ஏகதேசத்திலிருக்கின்றதா? என்று கேட்கின்ற அதிகாரிக்கு அவனது வினவை அநுசரித்து நிரம்சப்பிரஹ்மத்தில் அம்ச (அவயவ)த்தை * கச0. ஆரோபித்துச் சுருதி விடைதருகின்றது. (௫அ)

* கச0. மாயை இருக்கிறதென்னும் ஞானமுடைய சுரோதாவிற்கு (அதிகாரிக்கு) ஆயிரம் அன்னையரைப்போல இதத்தை இச்சிக்கும் சுருதியானது வாசிட்டத்தில் மூடச்சிறுவர்களுக்குச்செவிலித்தாய் கூறிய கதையைப்போல சுலோகம் கூஅஎ-கூகூ-ல் ஆரோபி(தேசமில்லாத பிரஹ்மத்தில் தேசத்தைக் கற்பி)த்து விடை பகருகின்றது. மாயை நிலைக்கும்பொருட்டுக் கற்பிததேசத்தை அங்கீகரிக்குங்கால் அம்மாயாவடிவமாகிய தேசத்தினையே சொல்லவேண்டும். சாங்கியர் பிரபாகரர்முதலியோர் அங்கீகரித்திருக்கும் ஆத்மாவை (தன்னை விளக்கும் தன்னை)ப்போலும் நையாயிகர் ஒப்பியிருக்கும் பேதமாகிய அந்நியோந்நியாபாவத்தைப்போலும் மாயை தன்னையும் பிறவற்றையும் நிர்வகிப்பதாயிருக்கின்றது. ஆகையால் கசரு-வது பக்கத்தின் கூச-வது டிப்பணத்தில் கூறிய ஆத்மாசிரயதோஷ மில்லை. ஆனால் மத்திமர் முதலிய அதிகாரிகளுக்கு அறிவிப்பதில் உபயோகமுடையதாகிய ஜகத்தின் அத்தியாரோபம் சித்திக்கும்பொருட்டுப் பூஷணவடிவமேயாம்.

ச. சத்தாகிய பிரஹ்மத்தையும் பஞ்சமகாபூதங்களையும் விவேகித்தல் ருகூ-கoகூ.

க. சத்தியைக்கூறுதலின் பிரயோஜனவர்ணனம் ருகூ.

[கஉச] सत्तत्त्वमाश्रिता शक्तिः कल्पयेत्सति विक्रियाः ।
वर्णा भित्तिगता भित्तौ चित्रं नानाविधं यथा ॥ ५९ ॥

(அ-கை.)

எந்தப்பிரயோஜனத்தின் பொருட்டுப் பிரஹ்மத்தில் மாயை சொல்லப்பட்டதோ அந்தப்பிரயோஜனத்தை இப்போது கூறுகின்றார்:—

सत्तत्वं आश्रिता शक्तिः सति विक्रियाः कल्पयेत् ॥

(சு-ம்.)

சத்தாகிய தத்துவத்தை(பிரஹ்மத்தை)ஆசிரயித்ததாகிய சக்தியானது சத்தில் விக்கிரியையாகிய காரியவிசேஷங்களைக் கற்பிக்கின்றது.

(வி-ம்.)

வெவ்வேறுவிதமாக எது செய்யப்படுகின்றதோ அது விக்கிரியை என்னப்படும் என்பது பொருள்.

(அ-கை.)

அதில் திருஷ்டாந்தத்தைக் கூறுகின்றார்:—

यथा भित्तिगताः वर्णाः भित्तौ नानाविधं चित्रम् ॥

(சு-ம்.)

எப்படிச் சுவரிலுள்ள வர்ணங்கள் சுவரில் பலவிதமாகிய சித்திரத்தைக் கற்பிக்கின்றனவோ அதுபோல.

(வி-ம்.)

சிந்தூரமுதலிய சிவப்பும் அரிதாரமுதலிய மஞ்சளுமாகிய தாதுபேதங்கள் வர்ணங்களாம். (ருகூ)

உ. சத்து ஆகாயங்களின் விவேகம் கூo-எகூ.

க. சக்தியின் முதல்விகாரமாகிய ஆகாயத்தின் சொரூபமும் அது பிரஹ்மத்தின் காரியமாதலில் எதுவும்.

[கஉரு] आद्यो विकार आकाशः सोऽवकाशस्वरूपवान् ।
आकाशोऽस्तीति सत्तत्त्वमाकाशेऽप्यनुगच्छति ॥ ६० ॥

(அ-கை.)

அந்தச் சக்தியின் விகாரவடிவமாகிய காரியவிசேஷங்களுள் முதற் காரியவிசேஷத்தைக் காட்டுகின்றார்:—

आद्यः विकारः आकाशः॥

(சு-ம்.)

முதல்விகாரம் அதாவது சக்தியால் முதலிற் கற்பிக்கப்பட்ட காரியம் ஆகாசமாம்.

(அ-கை.)

அந்த ஆகாசத்தின் சொரூபத்தைக் கூறுகின்றார்:—

सः अवकाशस्वरूपवान्॥

(சு-ம்.)

அந்த ஆகாசம் * கசசக. அவகாச சொரூபமுடையதாம்.

(அ-கை.)

ஆகாசம் பிரஹ்மத்தின் விவர்த்தவடிவ காரியமாதலிற் காரணத்தைக் கூறுகின்றார்:—

आकाशः 'अस्ति' इति सत्तत्त्वं आकाशे अपि अनुगच्छति॥

(சு-ம்.)

ஆகாசம் இருக்கிறது என்பதாகச் சத்தத்துவமானது ஆகாசத்திலும் அநுகூதமாகின்றது. (கூ0)

உ. சத்து ஒரு சுபாவமும் ஆகாசம் இரண்டு சுபாவமு முடையவெனல்.

[கஉகூ] एकस्वभावं सत्तत्त्वमाकाशो द्विस्वभावकः।
नावकाशः सति व्योम्नि स चैषोऽपि द्वयं स्थितम्॥ ६१॥

(அ-கை.)

* கசஉ. அதனால் என்ன சித்தித்ததெனக் கூறுகின்றார்:—

---

* கசக. சிலத்தற்கும் விரிதற்கும் அநுகூலமாகிய பதார்த்தம் அவகாசமாம் அச்சொரூபமுடையது.

* கசஉ. ஆகாசம் அவகாசசொரூபமாம், ஆகாசத்தில் சத்து அநுகூதமாயிருக்கின்றது என்பதனல்.

सत्त्वं एकस्वभावं आकाशः द्विस्वभावकः ॥

(சு-ம்.)

சத்வஸ்து சத்தைவடிவ ஒரு சுபாவமுடையது. ஆகாசம் இரண்டு சுபாவமுடையது.

(அ-கை.)

கூறிய அர்த்தத்தை விரித்துக் கூறுகின்றார்:—

सति अवकाशः न व्योम्नि सः च एषः अपि द्वयं स्थितम् ॥

(சு-ம்.)

சத்தில் அவகாசமில்லை. ஆகாசத்தில் அச்சத்தையும் இவ்வவகாசமுமாகிய இரண்டும் இருக்கின்றன.

(வி-ம்.)

சத்வஸ்துவில் அவகாச மில்லை; ஆனால் சத்தியல்பு ஒன்றே யிருக்கின்றது. ஆகாயத்திலோ அச்சத்தியல்பும் இவ்வவகாசவியல்புமாகிய இரண்டு மிருக்கின்றன என்பது பொருள். (சுக)

[௧௨௭] यद्वा प्रतिध्वनिर्व्योम्नो गुणो नासौ सतीक्ष्यते ।
व्योम्नि द्वौ सद्ध्वनी तेन सदेकं द्विगुणं वियत् ॥ ६२ ॥

(அ-கை.)

சத்து ஒரு சுபாவமுடையதாம், ஆகாசம் இரண்டு சுபாவமுடையதாம் என்பதை வேறுவிதமாகக் கூறுகின்றார்:—

यद्वा प्रतिध्वनिः व्योम्नः गुणः असौ सति न इक्ष्यते । व्योम्नि सद्ध्वनी द्वौ तेन सदेकं वियत् द्विगुणम् ॥

(சு-ம்.)

அல்லது எதிரொலிவடிவ சத்தம் ஆகாயத்தின் குணமாம். அது சத்தில் காணப்படுகிறதில்லை. ஆகாயத்தில் சத்தும் சத்தமுமாகிய இரண்டு தர்மங்களும் இருக்கின்றன. அதனால் சத்து ஒரு குணமுடையதாம்; ஆகாயம் இரண்டு குணமுடையதாம்.

(வி-ம்.)

* ௧௪௩. பிரதித்தொனி ஆகாயத்தின் குண மென்பது முன் ௧௩௩-வது சுலோகத்திற் சொல்லப்படுகின்றது. இந்தப் பிரதித்தொனி சத்வஸ்

* ௧௪௩. குகைமுதலிய வெளியிடங்களில் பார்த்திவ(பிருதிவியின் காரிய) முதலிய சத்தமாகிய நிமித்தத்தால் எழுந்த சத்தம் பிரதித்தொனியாம்.

துவிற் காணப்படுகிறதில்லை. ஆகாயத்திலோ சத்தும் தொனியும் அநுப விக்கப்படுகின்றன. அக்காரணத்தால் சத்து ஒரு சுபாவமும் ஆகாயம் இரண்டு சுபாவமு முடையனவாம் என்பது பொருள். (௬௨)

௩. மாயையினுல் சத்திற்கும் ஆகாயத்திற்குமுள்ள விபரீதமான தர்மதர்மித்தன் மைகள்.

[௬௨அ] या शक्तिः कल्पयेद्व्योम सा सद्व्योम्नोरभिन्नताम् ।
आपाद्य धर्मधर्मित्वं व्यत्ययेनावकल्पयेत् ॥ ६३ ॥

(அ-கை.)

அப்படியானுல் ஆகாயம் சத்ரூபமாகிய பிரஹ்மத்தின் காரியமாகுமா யின் ஆகாயத்தின் சத்தையாகிய சத்பாவம் அதாவது இருப்பு இருக்கிற தென்று சத்திற்கு ஆகாயத்தின் தர்மத்துவம் ஏன் தோற்றுகின்றதென்று சங்கித்துக் கூறுகின்றார்:—

या शक्तिः व्योम कल्पयेत् सा सद्व्योम्नोः अभिन्नतां आपाद्य धर्मधर्मित्वं व्यत्ययेन अवकल्पयेत् ॥

(சு-ம்.)

எந்தச் சத்தியானது ஆகாயத்தைக் கற்பிக்கின்றதோ அச்சக்தி சத்து ஆகாயங்களின் ஒற்றுமையைச் சம்பாதித்துத் தர்மதர்மித்தன்மையை மாறு கக் கற்பிக்கின்றது.

(வி-ம்.)

எந்தமாயை சத்வஸ்துவில் ஆகாயத்தைக் கற்பிக்கின்றதோ அந்த மாயை முதலில் சத்து ஆகாயங்களின் கற்பிததாதான்மியசம்பந்தமாகிய அபேதத்தைக் கற்பித்துப் பின் அவற்றின் தர்மதர்மித்தன்மைகளை * கசச. விபரீதத்தன்மையாகக் கற்பிக்கின்றது. ஆகையால் ஆகாயத்திற்குச் சத்தை யிருக்கின்றதுஎன்னும் உணர்ச்சிபொருந்துகின்றது என்பதுபொருள். (௬௩)

---

* கசச. சத்தாகிய தர்மியில் (ஆதாரத்தில்) தர்ம(ஆசிரித)த்தன்மையையும், ஆகாயமாகிய தர்ம(கற்பிதமாகியஆசிரித)த்தில் தர்மி(ஆசிரய-ஆதார)த்தன்மை யையும் கற்பிக்கின்றது. இரச்சு அவச்சின்ன சேதனத்தின் ஆசிரிதமாகிய அவித் தை இரச்சுவில் சர்ப்பத்தைக் கற்பித்து, இரச்சுவிலுள்ள இதந்தை(இதுவெனுந் தன்மை)யையும் சர்ப்பத்தின் அபேத(தாதாத்மிய)த்தையுங் கற்பித்துப் பிறகு "இது சர்ப்பம்" என்று இதந்தையாகிய தர்மியில் (ஆதாரத்தில்) தர்ம(ஆசிரித)த் தன்மையும்,சர்ப்பமாகிய தர்மத்தில் தர்மித்தன்மையையும் விபரீதத்தன்மையாகக் கற் பிக்கின்றது. அதுபோலச் சத்து ஆகாயங்களின் தர்மதர்மித்தன்மைகளைச் சகல காரியங்களிலும் சாமர்த்தியமுடைய மாயை கற்பிக்கின்றது. இப்படியே வாயுமுத லிய சகலப் பிரபஞ்சங்களிலும் விசாரித்துணர்க.

[௬௨௩] सतो व्योमत्वमापन्नं व्योम्नः सत्तां तु लौकिकाः ।
तार्किकाश्चावगच्छंति मायाया उचितं हि तत् ॥ ६४ ॥

(அ-கை.)

மாயை விபரீதத்தன்மையை எப்படிச் செய்திருக்கின்றது என்றுசங்கித்துக் கூறுகின்றார்:—

लौकिकाः तु सतः व्योमत्वं आपन्नं तार्किकाः च व्योम्नः सत्तां अवगच्छान्ति ॥

(சு-ம்.)

லௌகிகஜநங்கள் சத்து ஆகாயத்தன்மையை அடைந்ததாகவும் தார்க்கிகர்களாகிய நையாயிகர்கள் ஆகாயத்திற்குச் சத்தையையும் அறிகின்றார்கள்.

(வி-ம்.)

வஸ்துவின் யதார்த்தசொரூபத்தை விசாரிக்குங்கால் மண்ணிற்குக் கடரூபத்துவத்தின் பிராப்திபோலச் சத்வஸ்துவிற்கு ஆகாசவடிவத்தன்மை கிடைத்திருக்கின்றது என்று *௧௪௫. இலௌகிகர்கள் அறிகின்றார்கள். சாஸ்திரங்களின் நடுவிலிருக்கும் நையாயிகர்கள் அந்த இலௌகிகர்களினும் விபரீதத்தன்மையாக ஆகாசமாகிய தர்மியின் சத்தையை அதாவது சத்துவடிவதர்மமயமான சத்தாஜாதியை அறிகின்றார்கள்.

(அ-கை.)

அப்படியானால் ஒன்று (சத்தாகிய தர்மியும் ஆகாயமாகிய தர்மமும்) மற்றொன்றாக(தர்மதர்மியாக)த் தோற்றுதல் பொருந்தாதென் றுசங்கித்துக் கூறுகின்றார்:—

तत् मायाया उचितं हि ॥

(சு-ம்.)

அது மாயைக்குத் தகுதியே.

(வி-ம்)

அவ்விபரீதமாகத் தோற்றுதற்குக் காரணமாதல் மாயைக்கு *௧௪௬. உசிதமாம் என்பது பொருள். (௬௫)

* ௧௪௫. இங்கே லௌகிகர்களைக் கூறினமையால் ஜகத்தைப் பிரஹ்மத்தின் பரிணாம (பால் தயிராவதைப்போன்ற விகார)மாக அங்கீகரிக்கும் பரிணாமவாதிகளாகிய சுத்தாத்வைதமுடையோர்முதலிய நவீனவைஷ்ணவர்களும் கொள்ளப்படுவர்.

* ௧௪௬. மாயை அகடிதகடன (கூடாததைக் கூட்டிவைக்கும்) சமர்த்தையா (சாமர்த்தியமுடையதா)யிருத்தலால் விபரீதத்தோற்றத்திற்குக் காரணமாதல் அதற்குத் தகுதியேயாம்.

[௬௰] यद्यथा वर्तते तस्य तथात्वं भाति मानतः ।
अन्यथात्वं भ्रमेणेति न्यायोऽयं सार्वलौकिकः ॥ ६९ ॥

(அ-கை.)

மாயை விபரீதத்தோற்றத்திற்குக் காரணமாதலை இலௌகிகநியாயமாகிய உலகப்பிரசித்த திருஷ்டாந்தத்தைக் காட்டுதலால் உணர்த்துகின்றார்:—

यत् यथा वर्तते तस्य तथात्वं मानतः भाति अन्यथात्वं भ्रमेण इति अयं न्यायः सार्वलौकिकः ॥

(சு-ம்)

எது எப்படி இருக்கின்றதோ அதன் அப்படிப்பட்டதன்மை அதாவது அந்த யதார்த்தரூபம் பிரமாணத்தினால் விளங்குகின்றது. அதன் வேற்றுத்தன்மை அதாவது அந்நிய அயதார்த்தவடிவம் பிராந்தியினால் தோற்றுகின்றது என்னும் இந்த நியாயம் சருவலோகப்பிரசித்தமாம்.

(வி-ம்.)

எந்தச் சுத்திமுதலியவை எந்தச் சுத்திமுதலியவடிவமாயிருக்கின்றனவோ அந்தச் சுத்திமுதலியவற்றின் சுத்திமுதலிய வடிவமானது பிரத்தியக்ஷமுதலிய பிரமாணத்தால் தோற்றுகின்றது. அந்தச் சுத்திமுதலியவற்றின் வேறு இரஜதமுதலிய வடிவமானது பிராந்தியினால் தோற்றுகின்றது. இத்திருஷ்டாந்தம் சகல ஜனங்களிடத்தும் பிரசித்தமாமென்பது பொருள். (சுரு)

ச. சத்தும் ஆகாசமும் விபரீதமாகத் தோற்றுதலை நீக்கும் உபாயம்.

[௬௧] एवं श्रुतिविचारात्प्राग्यथा यद्वस्तु भासते ।
विचारेण विपर्येति ततस्तच्चिंत्यतां वियत् ॥ ६६ ॥

(அ-கை.)

இப்படிப் பிராந்தியினால் விபரீதந்தோற்றுதலைக் காட்டி, அந்த விபரீதத்தோற்றத்தின் நிவிருத்தியின் உபாயமாகிய சத்து ஆகாயங்களின் விவேகத்தைக் கூறுகின்றார்:—

एवं श्रुतिविचारात् प्राक् यत् वस्तु यथा भासते विचारेण विपर्येति । ततः तत् वियत् चिंत्यतां ॥

(சு-ம்.)

இப்படிச் சுருதிவிசாரத்திற்குமுன் எந்தவஸ்துவாகிய பிரஹ்மம் எப்படி அயதார்த்தமாய்த் தோற்றுகின்றதோ அந்தப் பிரஹ்மம் விசாரத்தினுல் விபரீதம் அதாவது யதார்த்தமாகின்றது. அதனுல் அந்த ஆகாயம் சிந்திக்கத்தக்கதாம்.

(வி-ம்.)

இப்படி ௬௨-அ-வது சுலோகமுதல் ௬௫-0-வது சுலோகம்வரையிலும் சொல்லியபடி சுருதியின் அர்த்தத்தை விசாரித்தற்குமுன் அவிவேகதசையில் எந்தச் சத்தாகிய பிரஹ்மம் பிராந்தியினுலே எப்படி ஆகாயமுதலிய வடிவமாயிருக்கின்றதோ அந்தச் சத்துரூபப்பிரஹ்மம் சுருதியர்த்தத்தை விசாரித்துப்பார்த்தலால் விபரீத மாகின்றது அதாவது ஆகாயமுதலிய தன்மையைவிட்டுச் சத்துரூபப்பிரஹ்மமே யாகின்றது. ஆகையால் சுருதியின் விசாரத்தால் பிரஹ்மவடிவவஸ்து ஆகாய மென்பவற்றின் யதார்த்த சொரூபம் காணக்கிடைத்தலால் அவ்வாகாயம் * ௧௬௭. விசாரிக்கவேண்டியதாம் அதாவது சத்தினின்றும் வேறுபிரித்தறியவேண்டியதாம். (௬௬)

இ. முற்கூறிய விசாரத்தின் சொரூபம்.

[௬௭] भिन्ने वियत्सती शब्दभेदाद्बुद्धेश्च भेदतः ।
वाय्वादिष्वनुवृत्तं सन्न तु व्योमेति भेदधीः ॥ ६७ ॥

(அ-கை.)

விசாரத்தின் சொரூபமாத்திரத்தையே காட்டுகின்றுர்:—

वियत्सती भिन्ने ॥

(சு-ம்.)

ஆகாயம் சத்தென்னும் இரண்டும் பின்னமாம்.

(அ-கை.)

இப்படி ஆகாயமும் சத்தும் பின்னமா மென்று பிரதிஞ்ஞைசெய்யப்பட்ட அர்த்தத்தில் ஏதுவைக் கூறுகின்றுர்:—

शब्दभेदात् ॥

(சு-ம்.)

சத்த (பெயர்) வேற்றுமையால்.

---

* ௧௬௭. விசார மென்பது பேதஞானத்திற்காம். அதனையே விவேக மென்றும் விவேசன மென்றுங் கூறுவர்.

(வி-ம்.)

ஆகாயம் சத்து என்னும் இரண்டு சப்தங்களும் * கசஅ. அபரியாய மாயிருத்தலால் சத்தும் ஆகாயமும் பின்னமா மென்பது பொருள்.

(அ-கை.)

முற்கூறிய அர்த்தத்தில் வேறு ஏதுவைக் கூறுகின்றார்:—

बुद्धेः च भेदतः ॥

(சு-ம்.)

ஞானத்தின் பேதத்தாலும் அவ்விரண்டும் * கசகூ. பின்னமாம்.

(அ-கை.)

அந்த ஞானத்தின் பேதமாகிய ஏதுவையே விளக்குகின்றார்:—

वाय्वादिषु सत् अनुवृत्तं व्योम तु न इति भेदधीः ॥

(சு-ம்.)

வாயுமுதலியவற்றில் சத்தானது அநுசூதமாயிருக்கின்றது, ஆகாயமோ அநுசூதமன்று என்பது பேதஞானமாம்.

(வி-ம்.)

வாயுமுதலிய நான்குபூதங்களிலும் சத்தானது "வாயுவிருக்கிறது, தேயுவிருக்கிறது" என்று அநுசூதமாய் விளங்குகின்றது; ஆகாயமோ இவ்வாறு அநுசூதமாய் விளங்குகிறதில்லை என்னும் இப்படிப்பட்ட ஞானம் பேதபுத்தியா மென்பது பொருள். (சுஎ)

---

* கசஅ. ஒரு அர்த்தமுடைய பின்னபின்ன சப்தங்கள் ஒன்றற்கொன்று பரியாய மெனப்படும். அதனினும் விபரீதமானவை (பின்ன அர்த்தமுடைய பின்ன சப்தங்கள்) அபரியாய மெனப்படும். இங்கே இவ்வநுமானம் குறிப்பிக்கப்படுகின்றது:—சத்தும் ஆகாயமும் ஒன்றற்கொன்று பின்னமாம்; இரண்டின் பெயரும் அபரியாயமாயிருத்தலால்; கடபடங்களைப்போல.

* கசகூ. இங்குமிது அநுமானமாம்:—சத்தும் ஆகாயமும் பின்னமாம்; புத்தி (ஞான) பேதத்தால்; கடபடத்தைப்போல. பிரத்தியக்தத்துவவிவேகத்தின் ௬-வது சுலோகம் வரையிலும் எல்லாக்காலங்களிலும் ஞானத்திற்கு அபேதம் சொல்லப்படுகின்றது. இங்கு ஞானத்திற்குப் பேதம் சொல்லப்படுகின்றது. ஆகையால் முன்னுக்குப்பின் விரோதமாமென்றாலும் முன் (முதற் பிரகரணத்தில்) சேதனமாகிய ஞானத்திற்கு அபேதம் சொல்லப்பட்டிருக்கின்றது. இங்குப் புத்திவிருத்தியாகிய ஞானத்திற்குப் பேதம் சொல்லப்பட்டிருக்கின்றது. ஆகையால் முன்பின் விரோதமில்லை.

௬. சத்தின் தர்மித்தன்மையும் ஆகாயத்தின் தர்மத்தன்மையும்.

[௯௩] सद्वस्त्वधिकवृत्तित्वाद्धर्मि व्योम्नस्तु धर्मता ।
धिया सतः पृथक्कारे ब्रूहि व्योम किमात्मकम् ॥ ६८ ॥

(அ-கை.)

இவ்வாறு சத்தாகாயங்களின் பேதத்தைச் சாதித்து ஆகாயத்தின் சத்தையிருக்கிறது என்று பிராந்தியினால் தோற்றும் * கரு௦. தர்மதர்மித் தன்மைக்கு விசாரத்தினால் விபரீதத்தன்மையைக் காட்டுகின்றார்:—

सद्वस्त्वधिकवृत्तित्वात् धर्मि व्योम्नः तु धर्मता ॥

(க-ம்.)

சத்பதார்த்தமானது அதிகதேசத்திலிருத்தலால் தர்மியாம். ஆகாயத்திற்கோ தர்மத்துவம் அதாவது ஆசிரிதத்தன்மை இருக்கின்றது.

(வி-ம்.)

உருவம் இரசமுதலிய குணங்களில் அநுசூதமாயுள்ள திரவியமாகிய கடபடமுதலியவற்றிற்குப்போல ஆகாயம் வாயுமுதலியவற்றின் அநுசூதமாயுள்ள சத்திற்குத் * கருக. தர்மி(ஆதார)த்துவம் இருக்கின்றது. இர

* கரு௦. ஆகாயத்திற்குத் தர்மி (ஆசிரய)த்தன்மையும் சத்திற்குத் தர்ம(ஆசிரித)த்தன்மையும் பிராந்தியினால் (அவிசாரத்தினால்) தோற்றுகின்றன.

* கருக. எந்த வஸ்து அதிகதேசத்திலுள்ளதோ (மகத்தோ) அது வியாபகமாம். அதுவே ஆதார (அந்நிய அற்பவஸ்துவின் ஆசிரய) மென்னும் தர்மமாம். உருவம் இரசமுதலிய குணங்களுக்கு ஆசிரயமாகிய திரவியம் உருவமுதலிய (ஒவ்வொரு) குணத்தினும் அதிகதேசத்திருத்தலால் வியாபகமாம். ஆகையால் தர்மியாம். அல்லது இரச்சுவில் பத்துப்புருஷர்களுக்கு ஒருவனுக்குச் சர்ப்பமும், ஒருவனுக்கு மாலையும், ஒருவனுக்குப் பூமியின் பிளப்பும், ஒருவனுக்கு ஜலதாரையுமாகிய இவைமுதலிய தர்மங்கள் உண்டாகின்றன. அங்கு "இது சர்ப்பம், இது மாலை, இது பூமியின் பிளப்பு, இது ஜலதாரை" யென்பதாக இரச்சுவின் இதுவெனும் வடிவம் தோற்றுகின்றது. அது எல்லா (சர்ப்பமுதலிய)வற்றிலும் அநுசூதமா (அதிகவிடத்திலிருப்பதா)யிருத்தலால் வியாபகமாம். ஆகையால் தர்மியாம். அதுபோல "ஆகாயமிருக்கிறது; வாயுவிருக்கிறது, தேயுவிருக்கிறது, ஜலமிருக்கிறது, பிருதிவியிருக்கிறது" என்பதாக ஒவ்வொரு பூதத்திலுமிருக்கும் அவ்வியபிசாரியான சத்தாகிய பிரஹ்மம் வியாபகமாயிருக்கிறது. ஆகையால் தர்மியாம்.

சமுதலிய குணங்களுக்கு வேறாகிய உருவகுணத்திற்குப்போல வாயுமுத லியவற்றிற்கு வேறாகிய ஆகாயத்திற்குத் * ௩௦௨. தர்மத்துவம் அதாவது ஆதேயத்துவம் இருக்கின்றது என்பது பொருள்.

எ. சத்திற்கு வேறாகிய ஆகாயம் அசத்தாதல்.

(அ-கை.)

அப்படியானால் கடத்திரவியத்திற்கு வேறாகிய உருவகுணத்திற்கு எப் படி வாஸ்தவத்துவம் இருக்கின்றதோ அதுபோலச் சத்திற்கு வேறாகிய ஆகாயத்திற்கும் வாஸ்தவத்தன்மையுளதாகுமே? என்று ஆசங்கித்து, சத்தி ற்கு வேறாகிய ஆகாயம் துக்கத்தினாலும் நிரூபிக்கப்படாமையால் சத்திற்கு வேறாகிய ஆகாயத்திற்கு *௩௦௩. வாஸ்தவத்துவமுளதாகுமெனல் பொருந் தாதெனக் கூறுகின்றார்:—

धिया सतः पृथक्कारे व्योम किमात्मकं ब्रूहि ॥

(சு-ம்.)

புத்தியினால் சத்தினின்றும் வேறுபிரிக்கப்பட்டகாலத்து ஆகாயம் என்ன சொரூபமுடையதாம்? சொல்லுவாயாக. (௬அ)

[௩௩௪] अवकाशात्मकं तच्चेदसत्तदिति चिंत्यताम् ।
भिन्नं सतोऽसच्च नेति वाक्षि चेद्व्याहतिस्तव ॥ ६९ ॥

(அ-கை)

ஆகாயம் துக்கத்தினாலும் நிரூபிக்கப்படமாட்டாதெனல் பொருந்தா தென்று வாதி சங்கிக்கின்றான்:—

---

* ௩௦௨. எந்த வஸ்து அற்பதேசத்திலிருக்கின்றதோ அது வியாப்பியமாம். அதுவே ஆதேயம் அதாவது அந்நிய மகத்வஸ்துவின் ஆசிரிதம் என்னும் தர்மமாம். எங்ஙனம், உருவமுதலிய குணம் அற்பதேசத்தில் (ஒன்றற்கொன்றும் தனக்காசிரய மாகிய திரவியத்தினோடும் வியபிசாரியாயிருத்தலால்) வியாப்பிய(ஆதேய)மாம்.. ஆகையால் தர்மமாம். அல்லது எப்படி ௩௦அ-வது பக்கத்தின் ௩௦௧-வது டிப்ப ணத்தில் சர்ப்பமுதலிய அற்பகாலத்திருக்கும் (ஒன்றற்கொன்றும் தனது ஆசிரயத் தோடும் வியபிசாரியாயிருத்தலால்) வியாப்பிய(ஆதேய)மோ, அதனால் தர்மமாமோ, அதுபோல அற்பதேசத்திலுள்ள (வாயு முதலியவற்றிற்கும் சத்திற்கும் வியபிசாரி யாகிய) ஆகாயம் வியாப்பியமாம். ஆகையால் தர்மமாம்.

* ௩௦௩. ஆகாயத்தில் திருஷ்டாந்தமாகச் சொல்லப்பட்ட உருவத்திற்கும் ஆகாயத்திற்கும் தமது ஆசிரயமாகிய கடத்(திரவிய)த்தோடும் சத்தோடும் பேத அம் சத்தில் சாதிருசிய முண்டு. ஆகையால் வாஸ்தவத்தன்மையும் அவாஸ்தவத்தன்மை யுமாகிய அம்சத்தில் சாதிருசியமில்லை. ஆகையால் கடத்திலுள்ள உருவத்தைப் போல ஆகாயத்திற்கு வாஸ்தவத்தன்மையில்லை.

तत् अवकाशात्मकं चेत् ॥

(சு-ம்.)

சத்தினின்றும் வேறுபிரிக்கப்பட்ட அவ்வாகாயம் அவகாசவடிவமா மெனின்.

(அ-கை.)

அப்போது சத்திற்கு விலக்ஷணமாதலால் ஆகாயம் அசத்தேயாமெ ன்று சித்தாந்தி பரிகரிக்கின்றார்:—

तत् असत् इति चिंत्यताम् ॥

(சு-ம்)

அப்போது அவ்வாகாயம் அசத்தாம் என்று சிந்திக்கவேண்டும்.

(அ-கை.)

சத்திற்கு விலக்ஷணமாகிய ஆகாயத்திற்கு அசத்துத்தன்மையில்லை என்று கூறும் வாதிக்குத் தோஷம் கூறுகின்றார்:—

सतः भिन्नं च असत् न इति वक्षि चेत् तव व्याहतिः ॥

(சு-ம்)

சத்தினும் வேறும், அசத்துமன்று என்று சொல்லுவாயாயின் உன் வார்த்தைக்கு வியாகாதமுண்டாம். (சுக)

அ. அசத்துவடிவ ஆகாயத்தின் தோற்றம் விரோதமாமெனல்.

[கூ௩] भातीति चेद्भातु नाम भूषणं मायिकस्य तत् ।
यदसद्भासमानं तन्मिथ्या स्वप्नगजादिवत् ॥ ७० ॥

(அ-கை.)

ஆகாயம், அசத்தாயிருக்குமாயின் தோற்றலாகாதென்றுசங்கித்துத் துச்சமாகிய முயற்கோடுமுதலியவற்றிற்கு விலக்ஷண அநிர்வசநீயமாயி ருத்தலால் ஆகாயத்தின் தோற்றம் விரோதத்தை அடையாதெனக் கூறு கின்றார்:—

भाति इति चेत् भातु नाम तत् मायिकस्य भूषणम् ॥

(சு-ம்.)

ஆகாயம் தோற்றுகின்றது என்பாயாயின் தோற்றுக. அங்ஙனம் தோற்றுதல் மாயாகாரியத்திற்கு அலங்காரமாம்.

(அ-கை.)

ஆகாயத்தினது தோற்றத்தின் அவிரோதத்தன்மையைக் காட்டுதற்கு மித்தியாவஸ்துவின் இலக்ஷணத்தைத் திருஷ்டாந்தத்தோடு கூறுகின்றார்:—

यत् असत् भासमानम् तत् स्वप्नगजादिवत् मिथ्या ॥

(சு-ம்)

எது அசத்தாய்த் தோற்றிக்கொண்டிருக்கின்றதோ அது சொப்பன யானைமுதலியவற்றைப்போல மித்தையாம்.

(வி-ம்.)

எந்தவஸ்து சொரூபமாக இல்லாததாய்த் தோற்றிக்கொண்டிருக்கின்றதோ அந்தவஸ்து சொப்பனத்தின் யானைமுதலியவற்றைப்போல மித்தையா மென்பது பொருள். (எ0)

க. திருஷ்டாந்தத்தோடுகூடவே தோற்றுகின்ற சத்திற்கும் ஆகாயத்திற்கும் பேதம்.

[கஙகு] जातिव्यक्ती देहिदेहौ गुणद्रव्ये यथा पृथक् ।
वियत्सतोस्तथैवास्तु पार्थक्यं कोऽत्र विस्मयः ॥ ७१ ॥

(அ-கை.)

அப்படியானால் நியமமாகக் கூடவே தோற்றுகின்ற இரண்டு பதார்த்தங்களுக்குப் பேதங் கண்டதில்லையென்று சங்கித்துக் கூறுகின்றார்:—

यथा जातिव्यक्ती देहिदेहौ गुणद्रव्ये पृथक् तथा एव वियत्सतोः पार्थक्यं अस्तु । अत्र कः विस्मयः ॥

(சு-ம்.)

எப்படி ஜாதியும் வியக்தியும், தேகியும் தேகமும், குணமும் திரவியமும் * கஙிசு. பின்னமோ அப்படியே ஆகாயத்திற்கும் சத்திற்கும்

* கஙிசு. அநேக தர்மிகளில் அநுகூதமாயுள்ள தர்மமென்னும் ஜாதியும் ஜாதிக்கு ஆசிரயமாயுள்ள வியக்தியுமாகிய இவ்விரண்டற்கும் தர்மமாயும் தர்மியாயுமிருத்தலால் பேத முண்டு. தேகிக்(ஆத்மாவிற்)கும் தேகத்திற்கும் சத்தியமுதலிய வடிவத்தாலும் மித்தியாத்துவமுதலிய வடிவத்தாலும் பேத முண்டு. குணத்திற்கும் திரவியத்திற்கும் குணத்தன்மை குணித்தன்மைகளால் பேதமுண்டு. சித்தாந்தத்தில் வாஸ்தவமாகவோ அதிஷ்டானத்திற்கு வேறாகச் சத்தையில்லாமையால் சகல வஸ்துக்களுக்கும் அதிஷ்டான(பிரஹ்ம)ரூபமாக அபேதமே யிருக்கின்றது. என்றாலும் வியவகாரத்தின்பொருட்டுக் கற்பிதபேதம் ஒப்பப்பட்டிருக்கின்றது.

* கடுடு. வேற்றுமை இருக்குக. இதில் என்ன ஆச்சரியம்? ஆச்சரிய மொன்று மில்லை. (எக)

சo. சுலோகம் கஅக-கஅசு வரையிற் சொல்லிய பேதத்தினது நிச்சயத்தின் பொருட்டுச் சித்தாந்தி விகற்பபூர்வகமாக உத்தரஞ்சொல்லுதல்.

[கஅஎ] बुद्धोऽपि भेदो नो चित्ते निरूढिं याति चेत्तदा ।
अनैकाग्र्यात्संशयाद्वा रूढ्यभावोऽस्य ते वद ॥ ७२ ॥

(அ-கை.)

ஆகாயசத்துக்களின் பேதம் அறியப்பட்டபோதிலும் நிச்சயிக்கப் பட்டதாகிறதில்லை யென்று வாதி சங்கிக்கின்றான்:—

भेदः बुद्धः अपि चित्ते निरूढिं नो याति चेत् ॥

(சு-ம்.)

பேதமானது அறியப்பட்டதாயிருக்கினும் அது என்னுடைய சித் தத்தில் திடத்தன்மையை அடைகிறதில்லை யெனின்.

(அ-கை.)

முற்கூறிய அச்சங்கையைப் பரிகரித்தற்கு நிச்சயமில்லை என்பதில் காரணத்தைச் சித்தாந்தி கேட்கின்றார்:—

तदा ते अस्य रूढ्यभावः अनैकाग्र्यात् वा संशयात् वद ॥

(சு-ம்)

அப்போது உனக்கு இச்சத்தாகாயங்களினது பேதத்தின் நிச்சய மின்மை சித்த ஏகாக்கிரமின்மையினாலா? அல்லது சம்சயத்தினாலா? சொல். (எஉ)

[கஅஅ] अप्रमत्तो भव ध्यानादाद्येऽन्यस्मिन्विवेचनम् ।
कुरु प्रमाणयुक्तिभ्यां ततो रूढतमो भवेत् ॥ ७३ ॥

---

* கடுடு. கற்பிதத்தின் சத்தை அதிஷ்டானத்தினும் வேறாகாதென்னும் நியம மிருத்தலால் அதிஷ்டான சத்தோடு கற்பித ஆகாயத்திற்குப் பேதம் சம்பவியாது. என்றாலும் ஆகாயத்தைப் பாதஞ் செய்வதால் சத்தும் ஆகாயமும் அபேதமாகின்றது. ஆகாயத்தைப் பாதஞ்செய்தா(மித்தையென்று நிச்சயித்தா)லன்றிப் பிராந்தியின் றிய அபேதம் பொருந்தாது; ஆனால் பிராந்தியினால் கற்பிக்கப்பட்டதேயாம். விவே கித்தாலன்றி ஆகாயத்திற்குப் பாதமுண்டாகாமையால் சத்திற்கும் ஆகாயத்திற்கும் பேதம் கற்பிக்கப்பட்டிருக்கின்றது. யதார்த்தமாகவோ ஆகாயமும் இல்லையெனின் அதற்குச் சத்தோடு பேதம் எப்படிப் பொருந்தும்? எக்காரணத்தாலும் பொருந்தாது.

(அ-கை.)

சித்த ஏகாக்கிரத்தன்மையின்மையால் சத்தாகாயங்களின் பேதம் நிச்சயிக்கப்படுகிறதில்லை என்னும் முதற்பக்ஷத்தில் சமாதானத்தைக் கூறுகின்றார்:—

आद्ये ध्यानात् अप्रमत्तः भव ॥

(சு-ம்.)

முதற்பக்ஷத்தில் தியானத்தினால் ஏகாக்கிரசித்தமுடையவனுவாய்.

(வி-ம்.)

முதல்விகற்பத்தில் "प्रत्ययैकतानता ध्यानं-" பிரத்தியயமாகிய விருத்தியின் ஒருவடிவமாகும் பிரவாகத்தோடுகூடியதன்மை தியானமாம்" என்று பதஞ்சலிபகவான் யோகசூத்திரத்தில் கூறியிருக்கும் இலக்ஷணமுடைய தியானத்தால் சாவதான(ஏகாக்கிர)மனமுடையவனுவாய்.

(அ-கை.)

சமுச்சயத்தால் சத்தாகாயங்களின் பேதம் நிச்சயிக்கப்படுகிறதில்லையென்னும் இரண்டாவது பக்ஷத்தில் பரிகாரத்தைக் கூறுகின்றார்:—

अन्यस्मिन् प्रमाणयुक्तिभ्यां विवेचनं कुरु ॥

(சு-ம்)

இரண்டாவது விகற்பத்தில் பிரமாணயுக்திகளால் விவேகத்தைச் செய்.

(அ-கை.)

அந்த மனத்தின் சாவதானத்தன்மையால் அல்லது விவேசனத்தால் என்ன பிரயோஜனமாகுமெனக் கூறுகின்றார்:—

ततः रूढतमः भवेत् ॥

(சு-ம்.)

முற்கூறிய அந்த இரண்டு சாதனங்களால் சத்து ஆகாயங்களின் பேதம் அத்தியந்தம் நிச்சயிக்கப்பட்டதாகின்றது. (எங)

[கஙகூ] ध्यानान्मानाद्युक्तितोऽपि रूढे भेदे वियत्सतोः ।
न कदाचिद्वियत्सत्यं सद्वस्तु छिद्रवन्न च ॥ ७४ ॥

(அ-கை.)

அந்த ஆகாயசத்துக்களின் பேதத்தை நிச்சயத்ததலாலும் என்ன உண்டாகின்றதெனக் கூறுகின்றார்:—

ध्यानात् मानात युक्तितः वियत्सतोः भेदे रूढे वियत् कदाचित् न सत्यं च सद्वस्तु अपि छिद्रवत् न ॥

(சு-ம்.)

தியானத்தினாலும் பிரமாணத்தினாலும் யுக்தியினாலும் ஆகாயசத்துக்களின் பேதமானது நிச்சயிக்கப்படுமாயின், ஆகாயம் ஒருகாலும் சத்தியமாகாது; சத்வஸ்துவும் ஒருநாளும் அவகாசமுடையதாகாது.

(வி-ம்)

முன் ௬௩-அ-வது சுலோகத்திற்கூறிய இலக்ஷணமுடைய தியானத்தினாலும், "ஆகாயம் சத்து இரண்டும் பின்னமாம்; சப்தபேதத்தாலும் ஞான பேதத்தாலும்" என்னும் ௬௩-உ-வது சுலோகத்திற் கூறிய அநுமானப்பிரமாணத்தினாலேனும், அல்லது சுருதிப்பிரமாணத்தினாலேனும், "சத்வஸ்து வாயுமுதலியவற்றில் அதிகதேசத்திருப்பதா யிருத்தலால் தர்மியா" மென்னும் ௬௩-௩-வது சுலோகமுதல் ௬-சுலோகங்களாற் சொல்லப்பட்டிருக்கும் தியானத்தினாலும் ஆகாயசத்துக்களின் பேதம் சித்தத்திற் செவ்வையாய்ப் பதியுங்காலத்து ஆகாயம் ஒருகாலும் சத்தியமாகாது; ஆனால் எப்போதும் மித்தையாகவே விளங்கும். சத்வஸ்துவும் அவகாசமுடையதாகாது என்பது சொல்லெச்சம். (எச)

௧௧. சத்தையும் ஆகாயத்தையும் வேறுபிரித்தறிதலின் பயன்.

[௧௪௦] ज्ञस्य भाति सदा व्योम निस्तत्त्वोल्लेखपूर्वकम् ।
सद्वस्त्वपि विभात्यस्य निश्छिद्रत्वपुरःसरम् ॥ ७५ ॥

(அ-கை)

ஆகாயசத்துக்களின் விசாரத்தில் பயனைக் கூறுகின்றார்:—

ज्ञस्य व्योम सदा निस्तत्त्वोल्लेखपूर्वकं भाति । अस्य सद्वस्तु अपि निश्छिद्रत्व-पुरःसरं विभाति ॥

(சு-ம்)

ஞானிக்கு ஆகாயம் எப்போதும் மித்தியாத்துவஞானபூர்வகமாக விளங்குகின்றது. இந்த ஞானிக்குச் சத்வஸ்துவாகிய பிரஹ்மமும் அவகாசமில்லாமையோடு விளங்குகின்றது. (எ௫)

[கஎக] वासनायां प्रवृद्धायां वियत्सत्यत्ववादिनाम् ।
सन्मात्राबोधयुक्तं च दृष्ट्वा विस्मयते बुधः ॥ ७६ ॥

(அ-கை.)

ஆகாயத்தின் மித்தியாத்துவத்தையும் சத்தின் வஸ்துத்தன்மையையும் எப்போதும் சிந்திக்கும் புருஷனுக்கு என்ன உண்டாகின்றதெனக் கூறுகின்றார்:—

वासनायां प्रवृद्धायां बुधः वियत्सत्यत्ववादिनाम् सन्मात्राबोधयुक्तं च दृष्ट्वा विसयते ॥

(சு-ம்.)

* கருசா. வாசனைகள் விருத்தியடையுங்காலத்து ஞானி ஆகாயத்தைச் சத்தியமாகச் சொல்லுவோர்களையும் சன்மாத்திரத்தின் அஞ்ஞானத்தோடு கூடியவர்களையும் பார்த்து ஆச்சரியமடைகின்றான்.

(வி-ம்.)

ஆகாயசத்துக்களின் தத்துவமாகிய யதார்த்தசொரூபத்தை அறியும் புருஷர்களாகிய ஞானிகள் ஆகாயத்திற்குச் சத்தியத்துவத்தைச் சொல்லுபவர்களும் அவகாசமின்றிய சத்வஸ்துவின் ஞானமில்லாதவர்களுமாகிய அஞ்ஞானிகளைப் பார்த்து ஆச்சரியமடைகின்றார்களென்பது பொருள். எசா

ந. சத்தினையும் வாயுவையும் விவேகித்தல் கஎஉ-கருக.

க. ஆகாயத்தில் சுலோகம் கஉரு-கஎக-ல் சொன்ன கிரமத்தினை வாயுமுதலியவற்றில் அதிதேசஞ்செய்தல்.

[கஎஉ] एवमाकशमिथ्यात्वे सत्सत्यत्वे च वासिते ।
न्यायेनानेन वाय्वादेः सद्वस्तु प्रविविच्यताम् ॥ ७७ ॥

(அ-கை.)

ஆகாயத்திற்கூறிய நியாயத்தை வாயுமுதலிய வேறிடங்களிலும் மாட்டியுணர்த்துகின்றார்:—

एवं आकाशमिथ्यात्वे च सत्सत्यत्वे वासिते अनेन न्यायेन वाय्वादेः सद्वस्तु प्रविविच्यताम् ॥

---

* கருசா. ஆகாயத்தின் அசத்துத்தன்மையையும் சத்தின் சத்தியத்தன்மையையும் அடிக்கடி அநுபவித்தலாலுண்டாவதும் பின்னும் நினைத்தற் கேதுவாகுவதுமான சம்ஸ்கார மெதுவோ அது திடமாகுமாயின்.

(சு-ம்.)

இப்படி ஆகாயத்தின் மித்தியாத்தன்மையும் சத்தின் சத்தியத்தன்மையும் சித்தத்தில் ஏறுமாயின், இதேமாதிரியாக வாயுமுதலிய மற்ற நான்கு பூதங்களினின்றும் சத்வஸ்துவை விவேகித்தறியவேண்டும். (எஎ)

உ. சத்வஸ்துவோடு வாயுவிற்குப் பரம்பரையாயுள்ள தாதாத்மியசம்பந்தம்.

[கசஙூ] सद्वस्तुन्येकदेशस्था माया तत्रैकदेशगम् ।
वियत्तत्राप्येकदेशगतो वायुः प्रकल्पितः ॥ ७८ ॥

(அ-கை.)

அப்படியானால் ஆகாயத்தின் காரியம் வாயு அதற்கு அகாரணசொரூபமாகிய சத்வஸ்துவோடு தாதாத்மியமாகிய அபேதத்தோற்றம் சம்பவியாதாகையால், வாயுவினின்றும் சத்தைப் பிரித்தறிதல் பிரயோஜனமில்லாததாம் என்றாசங்கித்து, வாயுவிற்குச் சத்தோடு சாக்ஷாத்சம்பந்தம் இல்லாவிடினும் பரம்பரையாக ஆகாயவாயிலாகச் சம்பந்தமுண்டெனக் கூறுகின்றார்:—

सद्वस्तुनि एकदेशस्था माया। तत्र एकदेशगम् वियत्। तत्र अपि एकदेशगतः वायुः प्रकल्पितः॥

(சு-ம்.)

சத்வஸ்துவில் ஏகதேசத்திலுள்ளது மாயை. அந்த மாயையில் ஏகதேசத்திலுள்ளது ஆகாயம். அந்த ஆகாயத்தின் ஏகதேசத்திலுள்ள வாயு * கறுஎ. கற்பிதமாம். (எஅ)

ங. வாயுவின் நிஜதர்மம் நான்கும், காரணத்தாற் கிடைத்த மூன்றும்.

[கசச] शोषस्पर्शौ गतिर्वेगो वायुधर्मा इमे मताः ।
त्रयः स्वभावाः सन्मायाव्योम्नां ये तेऽपि वायुगाः ॥ ७९ ॥

(அ-கை.)

இப்படிச் சத்துவாயுக்களின் தர்மத்தால் பேதத்தை அறியும்பொருட்டு வாயுவில் தோற்றும் தர்மங்களைக் கூறுகின்றார்:—

शोषस्पर्शौ गतिः वेगः इमे वायुधर्माः मताः

* கறுஎ. ஆகாயம் மாயாவுபகிதசேதனத்தில் கற்பிதமாயிருத்தலால், அது வேறு கற்பிதத்திற்கு அதிஷ்டானமாதல் பொருந்தாது. ஆகையால் இங்கே ஆகாயவுபகிதசேதனத்தில் வாயு கற்பித (அத்தியஸ்த)மா மென்பது அபிப்பிராயமாம். இப்படியே எல்லாவிடத்தும் அறிந்துகொளக.

(சு-ம்.)

உலர்த்துதல், ஸ்பரிசம், வேகம், போகுதல் என்னும் இந்நான்கும் வாயுவின் தர்மங்க ளென்று ஒப்பப்பட்டிருக்கின்றன.

(அ-கை.)

இப்படி வாயுவின் தர்மங்களைச் சொல்லி இப்போது காரணத்தா லடையப்பட்ட அத்தர்மங்களைக் கூறுகின்றார்:—

सन्मायाव्योम्नां ये त्रयः स्वभावाः ते अपि वायुगाः

(சு-ம்.)

சத்து மாயை ஆகாயம் என்னும் இம்மூன்றுகாரணங்களின் யாதொரு மூன்று சுபாவங்களுண்டோ அவைகளும் வாயுவினிடத்தி லிருக்கின்றன.

(வி-ம்.)

சத்து மாயை ஆகாயங்களின் இருக்கை மித்தியாத்துவம் சப்தம் என்னும் மூன்று சுபாவங்களெனப்படும் சிலவடிவ விசேஷதர்மங்களும் வாயுவி லிருப்பனவாகக் காணப்படுகின்றன என்பது பொருள். (எகூ)

[கசூ] वायुरस्तीति सद्भावः सतो वायौ पृथक्कृते ।
निस्तत्त्वरूपता मायास्वभावो व्योमगो ध्वनिः ॥ ८० ॥

(அ-கை.)

வாயுவில் சத்து மாயை ஆகாயங்களின் தர்மங்கள் யாவையெனக் கூறுகின்றார்:—

वायुः 'अस्ति' इति सद्भावः सतः वायौ पृथक्कृते निस्तत्त्वरूपता मायास्व-भावः ध्वनिः व्योमगः

(சு-ம்.)

"காற்று இருக்கிறது" என்பது சத்தின் சுவபாவமாம். சத்தினின்றும் வாயுவை வேறுபிரிக்கின் வாயுவின் மித்தியாரூபத்துவம் மாயையின் சுபாவமும், சத்தம் ஆகாயத்தின் சுவபாவமுமாம்.

(வி-ம்.)

வாயுவிருக்கிறதென்னும் வியவகாரத்திற்கு ஏதுவாகிய சத்துரூபத்துவமென்னும் வாயுவிலுள்ள சத்வஸ்துவின் தர்மம் ஒன்று. வாயுவைச் சத்வஸ்துவினின்று வேறுபிரித்தகாலத்திலுள்ள மித்தியாத்துவ மென்னும் வாயுவிலுள்ள மாயையின் தர்மம் இரண்டாவதாம். ஆகாயத்தினின்றும்

வாயுவில் அடையப்பட்டுள்ள * கடுஅ. சப்தமென்னுந் தர்மம் மூன்றுவ தாம் என்பது பொருள். (அ0)

௪. முன்னுள்ள கஙஉ-வது சுலோகத்திற்கும் பின்னுள்ள கசடு-வது சுலோகத்திற்கும் விரோதமிருக்கின்ற தென்னும் சங்கையும் சமாதானமும்.

[கசக] सतोऽनुवृत्तिः सर्वत्र व्योम्नो नेति पुरेरितम् ।
व्योमानुवृतिरधुना कथं न व्याहतं वचः ॥ ८१ ॥

(அ-கை.)

அப்படியானல் ஆகாயத்தின் விவேசனப்பிரசங்கத்தின் "வாயுமுதலிய வற்றில் சத்து அநுசூதமாம் ஆகாயம் அநுசூதமன்று என்பது சத்தாகா யங்களின் பேதஞானமாம்" என்னும் கஙஉவது சுலோகத்தில் வாயுமுத லியவற்றில் ஆகாயத்தின் அநுசூதத்தன்மை நிவிருத்திக்கப்பட்டிருக்கின் றது. இப்போது கசடு-வது சுலோகத்தில் "ஆகாயத்தின் தர்மமாகிய சப்தம் வாயுவி லிருக்கின்றது" என்று ஆகாயத்தின் அநுசூதத்தன்மை உம்மாற் சொல்லப்படுகின்றது. ஆகையால் முன்னுக்குப்பின் விரோதமுண் டாகின்ற தென்று வாதி சங்கிக்கின்றான்:—

सतः अनुवृत्तिः सर्वत्र व्योम्नः न इति पुरा ईरितम् अधुना व्योमानुवृत्तिः वचः व्याहतं कथं न

(சு-ம்.)

சத்தின் அநுசூதத்தன்மை எங்கும் (வாயுமுதலியவற்றில்) இருக்கிறது. ஆகாயத்தின் அநுவிருத்தியில்லை என்று முன் கஙஉவது சுலோகத்தில் சொல்லப்பட்டிருக்கின்றது. இப்போது ஆகாயத்தின் அநுவிருத்தி சொல் லப்படுகின்றது. ஆகையால் உமதுவாக்கியம் ஏன் வியாகாததோஷத்தோ டுகூடியது ஆகாது?

(வி-ம்.)

ஆகாயத்தின் அநுவிருத்தி சொல்லப்படுகின்றது என்பதில் "சொல் லப்படுகின்றது" என்பது அத்தியாகார (சொல்லெச்ச)மாம் அதாவது வருவிக்கப்பட்டதாம். (அக)

---

* கடுஅ. வாயுவில் "வீசி" என்னும் சப்தமிருக்கின்றது. கூஅ-வது சுலோகத் திற் காண்க.

[கஎஎ] छिद्रानुवृत्तिर्नेतीति पूर्वोक्तिरधुना त्वियम् ।
शब्दानुवृत्तिरेवोक्ता वचसो व्याहतिः कुतः ॥ ८२ ॥

(அ-கை.)

முன் (கஙௌ-வது சுலோகத்தில்) ஆகாசத்தினது அவகாசவடிவ லக்ஷணமுடைய சொரூபத்தின் அநுவிருத்தி நிவிருத்திக்கப்பட்டிருக்கின்றது. இப்போது (கஎடு-வது சுலோகத்தில்) ஆகாயத்தினது தர்மமாகிய சப்தத்தின் அநுவிருத்தி சொல்லப்படுகின்றது; அவகாசவடிவ சொரூபத்தின் அநுவிருத்தி யன்று. ஆகையால் முன்னுக்குப்பின் விரோதமின்மையால் எமது வாக்கியத்திற்கு வியாகாதமில்லை என்று சித்தாந்தி பரிகரிக்கின்றார்:—

'छिद्रानुवृत्तिः न इति' पूर्वोक्तिः अधुना तु इयं शब्दानुवृत्तिः एव उक्ता वचसः व्याहतिः कुतः ॥

(சு-ம்.)

அவகாசத்தின் அநுவிருத்தி இல்லை யென்றிவ்வாறு முற்கூறியிருக்கின்றது. இப்பொழுதோ இந்தச் சப்தத்தின் அநுவிருத்தியே சொல்லப்பட்டிருக்கின்றது. ஆகையால் வாக்கியத்திற்கு வியாகாதம் எப்படி நிகழும்? ஒருவிதத்தாலும் நிகழாது என்பதுபொருள். (அஉ)

ரு. வாயு மாயையின் காரியமாகா தென்பதன் சங்கையும் அதன் சமாதானமும்.

[கஎஅ] ननु सद्वस्तुपार्थक्यादसत्त्वं चेत्तदा कथम् ।
अव्यक्तमायावैषम्यादमायामयताऽपि नो ॥ ८३ ॥

(அ-கை.)

அப்படியானால் சத்ரூபப்பிரஹ்மத்திற்கு விலக்ஷணமாயிருத்தலால் வாயுவிற்கு அசத்துத்தன்மைவடிவமாகிய மாயாமயத்துவம் சொல்லப்படுமாயின், அப்போது அவ்வியக்தசொரூப மாயைக்கு விலக்ஷணமா யிருத்தலால் வாயுவிற்கு மித்தியாவடிவமின்மையும் எப்படி யுண்டாகாது? என்று வாதி மூலத்தில் சங்கிக்கின்றான்:—

ननु सद्वस्तुपार्थक्यात् असत्वं चेत् तदा अव्यक्तमायावैषम्यात् अमायामयता अपि कथं नो ॥

(சு-ம்.)

அப்படியானால் சத்வஸ்துவிற்கு வேறாயிருத்தலால் வாயுவிற்கு எப்போது அசத்துத்தன்மை உண்டாகின்றதோ அப்போது அவ்வியக்தமா

மையினும் விலக்ஷணமாயிருத்தலால் வாயுவிற்கு மாயாவடிவமில்லாமையும் ஏன் உண்டாகாது? உண்டாகவே செய்யும். (அ௩)

[கசக] निस्तत्त्वरूपतैवात्र मायात्वस्य प्रयोजिका ।
सा शक्तिकार्ययोस्तुल्या व्यक्ताव्यक्तत्वभेदिनोः ॥ ८४ ॥

(அ-கை.)

மாயாமயத்தன்மையில் அவ்வியக்தத்தன்மை காரணமாகாது. தத்துவமின்மையாகிய சத்திற்கு வேறாக வாஸ்தவ சொரூப மில்லாமையே மாயாமயத்தன்மையில் காரணமாம். அத்தத்துவசொரூபமின்மை எப்படி மாயையிலிருக்கிறதோ அப்படியே வாயுமுதலியவற்றிலு மிருக்கின்றது. ஆகையால் வாயுவின் மாயாமயத்தன்மையாகிய மித்தியாத்துவத்திற்குக் கேடில்லை என்று சித்தாந்தி பரிகரிக்கின்றார்:—

अत्र निस्तत्त्वरूपता एव मायात्वस्य प्रयोजिका । सा व्याक्ताव्यव्यक्तत्वभेदिनोः शक्तिकार्ययोः तुल्या ॥

(சு-ம்.)

இங்கே வாயுவில் சத்திற்கு வேறாகச் சொரூபமில்லாமையே மித்தியா வடிவத்தன்மைக்கு ஏதுவாம். அத்தத்துவசொரூபமின்மை வியக்த அவ்வியக்தத்தன்மைப் பேதமுடைய மாயாசக்தியிலும், அதன்காரியமாகிய * கருக. வாயுவிலும் சமமாம். (அச)

[கரு0] सदसत्त्वविवेकस्य प्रस्तुतत्वात्स चिंत्यताम् ।
असतोऽवांतरो भेद आस्तां तच्चिंतयाऽत्र किम् ॥ ८५ ॥

(அ-கை.)

அப்படியானால் மாயாசக்தியும் அதன்காரியமான வாயுமுதலியனவுமாகிய இவ்விரண்டற்கும் தத்துவசொரூபமின்மை சமானமாகுமாயின், வியக்தத்தன்மையாகிய அவற்றின் பேதம் ஏன் உண்டாகின்றதென்றுசங்கித்து அவற்றின் வியக்தாவியக்தத்தன்மைகளின் விசாரம் இந்தப் பிரசங்கத்தில் உபயோகமில்லாததாமென்று பரிகரிக்கின்றார்:—

सदसत्त्वविवेकस्य प्रस्तुतत्वात् सः चिन्यताम् । असतः अवांतरः भेदः आस्तां तच्चिंतया अत्र किम् ॥

---

* கருக. வியாவகாரிகபக்ஷத்தின்படி மாயையின் பரிணாமமாகிய ஆகாயத்தின் பரிணாமமாயிருத்தலால் பரம்பரையாக வாயு மாயையின் காரியமாம்.

(சு-ம்.)

சத்தசத்துத்தன்மையின் விவேகம் பிரசங்கத்தி லடையப்பட்டதாயி ருத்தலால் அந்தச் சத்தசத்துத்தன்மைகளின் விவேகம் சிந்திக்கவேண்டிய தாம். அசத்தின் மத்தியபேதம் இருக்குக. அதனது விசாரத்தால் இங் கே சத்தசத்துத்தன்மைகளின் விசாரப்பிரசங்கத்தில் என்ன பிரயோஜ னம்?

(வி-ம்.)

அசத்தாகிய மாயைக்கும் அதன்காரியமான வாயுமுதலியவற்றிற்கு முள்ள அவாந்திரபேதமாகிய இந்திரியமுதலியவற்றிற்கு விஷயமாதல்வடிவ வியக்தத்தன்மையும், இந்திரியமுதலியவற்றிற்கு விஷயமாகாமைவடிவ அவ் வியக்தத்தன்மையும் * கசுo. இருக்குக என்பது பொருள். (அரு)

சு. பலித்த பொருள்.

[கருக] सद्वस्तु ब्रह्म शिष्टोंऽशो वायुर्मिथ्या यथा वियत् ।
वासयित्वा चिरं वायोर्मिथ्यात्वं मरुतं त्यजेत् ॥ ८३ ॥

(அ-கை.)

பலிதத்தைக் கூறுகின்றார்:—

सद्वस्तु ब्रह्म शिष्टः अंशः वायुः मिथ्या यथा वियत् । वायोः मिथ्यात्वं चिरं वासयित्वा मरुतं त्यजेत् ॥

(சு-ம்)

வாயுவிற் சத்து அம்சம் பிரஹ்மமாம். மிஞ்சிய அம்சமாகிய வாயுவா னது மித்தையாம். எப்படி ஆகாயம் மித்தையா யிருக்கிறதோ அப்படி வாயுவின் மித்தியாத்துவத்தை வெகுகாலம் வாசனையோடுகூடியதாய்ச்செய் து வாயுவை விடவேண்டும்.

(வி-ம்.)

வாயுவிலுள்ள சத்தம்சம் பிரஹ்மத்தின் வடிவமாம். மிஞ்சிய அம் சமாகிய தத்துவமின்மை * கசுக. முதலியவைகள் வாயுவின் சொரூபமாம்.

---

* கசுo. சக்தியின் அவ்வியக்தத்தன்மையிலும், காரியத்தின் வியக்தத்தன்மை யிலும் ஏது மேல் அத்வைதாநந்தத்தின் கூசு-வது சுலோகத்தில் சொல்லப்படும். ஆகையால் அது இங்கே இருக்குக.

* கசுக. இங்கே முதலியவென்னுஞ் சத்தத்தால் சத்தஸ்பரிசமுதலியவைகள் கொள்ளப்படும்.

அந்த வாயு தத்துவமில்லாததாய் அதாவது அதிஷ்டானப்பிரஹ்மத்திற்கு வேறாகிய சத்தை யில்லாததா யிருத்தலாற்றானே ஆகாயத்தைப்போல மித்தையாம். இப்படி முமுக்ஷு வாயுவின் மித்தியாத்துவத்தை வெகுகாலம் வரையிலும் நிச்சயித்து வாயுவைவிடக்கடவன் அதாவது வாயு சத்தியமா மென்னும் புத்தியை விடக்கடவ னென்பது பொருள். (அசு)

ச. சத்து அக்கினிகளின் விவேகம் கரு௨—கருரு.

க. வாயுவில் கசஉ-கருக கூறிய விசாரத்தினை அக்கினியில் அதிதேசஞ் செய்தல்.

[கரு௨] चिन्तयेद्वह्निमप्येवं मरुतो न्यूनवर्तिनम् ।
ब्रह्मांडावरणेष्वेषा न्यूनाधिकविचारणा ॥ ८७ ॥

(அ-கை.)

வாயுவிற் சொல்லப்பட்ட விசாரத்தைத் தேயுவிலும் மாட்டியுணர்த்து (பொருத்திக்காட்டு)கின்றார்:—

एवं मरुतः न्यूनवर्तिनं वह्निं अपि चिन्तयेत् ॥

(சு-ம்.)

வாயுவை விசாரித்தபடி வாயுவினும் பத்துப்பங்கு குறைந்தவிடத்தி லுள்ள அக்கினியையும் விசாரிக்கவேண்டும்.

(அ-கை.)

அப்படியானால் " சத்வஸ்துவின் ஏகதேசத்தில் மாயை யிருக்கின்றது. அதன் ஏகதேசத்தில் ஆகாய மிருக்கின்றது. அதன் ஏகதேசத்தில் வாயு கற்பிதமா யிருக்கின்றது" என்று கசா-வது சுலோகத்தில் ஆகாய முதலியவற்றிற்கு ஏற்றத்தாழ்வு கூறியிருக்கின்றது. அது உலகத்தில் ஓரிடத்துங் கண்டதில்லையென் றாசங்கித்துக் கூறுகின்றார்:—

ब्रह्माण्डावरणेषु एषा न्यूनाधिकविचारणा ॥

(சு-ம்.)

ஏற்றத்தாழ்வாகிய விசாரம் * கசா உ. பிரஹ்மாண்டத்தின் ஆவரணங்களில் சொல்லப்படுகிறது. (அஎ)

---

* கசஉ. உலகப்பிரசித்தமாகிய பதார்த்தங்களில் இவ்வேற்றத்தாழ்வின் விசார மில்லாமையால் உலகத்தில் இவ்வேற்றத்தாழ்வைக் காணுதல் பொருந்தாது என்பது அபிப்பிராயமாம்,

உ. பிரமாணத்தோடு வாயுவினும் அக்கினி பத்துமடங்கு குறைவும் வாஸ்தவமாகாமையும்.

[கஙிரு] वायोर्दशांशतो न्यूनो वह्निर्वायौ प्रकल्पितः ।
पुराणोक्तं तारतम्यं दशांशैर्भूतपंचके ॥ ८८ ॥

(அ-கை.)

வாயுவினும் எத்தனைமடங்கு அக்கினி குறைவெனக் கூறுகின்றார்:—

वायोः दशांशतः वह्निः न्यूनः ॥

(சு-ம்.)

வாயுவினும் அக்கினி பத்துமடங்கு குறைவாம்.

(அ-கை.)

அக்கினியினது சத்தியத்தன்மையின் சங்கையை நிவிருத்திக்கின்றார்:-

वायौ प्रकल्पितः ॥

(சு-ம்.)

அவ்வக்கினி * கசுரு. வாயுவில் கற்பிதமாம்.

(அ-கை.)

அப்படியானால் அவ்வேற்றத்தாழ்வு உம்முடைய கபோலகற்பிதமோ வென்றாசங்கித்துக் கூறுகின்றார்:—

भूतपंचके दशांशैः तारतम्यं पुराणोक्तम् ॥

(சு-ம்.)

பஞ்சபூதங்களில் பத்துமடங்காக ஏற்றத்தாழ்வு புராணங்களில் கூறியிருக்கின்றது. (அஅ)

ரு. அக்கினியின் சொரூபமும், அதிற்பொருந்தியுள்ள காரணத்தின் தர்மமும்.

[கஙிச] वह्निरुष्णः प्रकाशात्मा पूर्वानुगतिरत्र च ।
अस्ति वह्निः स निस्तत्त्वः शब्दवान्स्पर्शवानपि ॥ ८९ ॥

(அ-கை.)

அக்கினியின் சொரூபத்தைக் கூறுகின்றார்:—

* கசுரு. அக்கினி வாயுவுபகிதசேதனத்திற் கற்பிதமாம்.

वह्निः उष्णः प्रकाशात्मा ॥

(சு-ம்.)

அக்கினி உஷ்ணமும் பிரகாசசொரூபமுமாம்.

(அ-கை.)

இங்கும் அக்கினியிலும் வாயுவிற்போலக் காரணத்தின் தர்மம் அநுகூதமாமெனக் கூறுகின்றார்:—

अत्र च पूर्वानुगतिः ॥

(சு-ம்.)

இங்கு அக்கினியிலும் காரணமாகிய சத்து மாயை ஆகாயம் வாயு என்பவற்றின் தர்மங்களினது அநுகூதத்தன்மை யிருக்கின்றது.

(அ-கை.)

அக்கினியில் காரணத்தினின்றும் வந்தடைந்த அந்தத் தர்மங்கள் எவை என்று கேட்குமிடத்துக் கூறுகின்றார்:—

स वह्निः 'अस्ति'। निस्तत्त्वः शब्दवान् स्पर्शवान् अपि ॥

(சு-ம்.)

அவ்வக்கினியிருக்கிறது, மித்தியாவடிவினது, சத்தமுடையது, பரிசமுடையது. (அகூ)

௪. அக்கினியின் காரணதர்மமும், அதன் தர்மமும், சத்தினும் அக்கினி வேறுதலும்.

[கருரு] सन्मायाव्योमवाय्वंशैर्युक्तस्याग्नेर्निजो गुणः ॥
रूपं तत्र सतः सर्वमन्यद्बुद्ध्या विविच्यताम् ॥ ९० ॥

(அ-கை.)

இப்படி அக்கினியில் காரணத்தின் தர்மங்களைக் கிரமமாக அநுவதித்தலோடு அவ்வக்கினியின் தர்மத்தையும் காட்டுகின்றார்:—

सन्मायाव्योमवाय्वंशैः युक्तस्य आग्नेः निजः गुणः रूपम् ॥

(சு-ம்.)

சத்து மாயை ஆகாயம் வாயு வென்னும் இந்நான்கு காரணங்களின் அம்சமாகிய இருக்கை, மித்தியாத்துவம், சப்தம், ஸ்பரிசம் என்னும் தர்மங்களோடுகூடிய அக்கினிக்குத் தன்குணம் உருவமாம்.

(அ-கை.)

இப்படி மற்றவற்றினின்றும் வேறுபிரித்தறிவிக்குந் தர்மமாகிய விசேஷணத்தோடுகூடிய அக்கினியின் சொரூபத்தைக் கூறி, இப்போது சத்வஸ்துவினின்றும் அக்கினியை வேறுபிரிக்கின்றார்:—

तत्र सतः अन्यत् सर्वं बुद्ध्या विविच्यताम् ॥

(சு-ம்.)

அத்தர்மங்களுள் சத்தினின்றும் மற்ற எல்லாவற்றையும் புத்தியினால் வேறுபிரித்தறியவேண்டும்.

(வி-ம்.)

அத்தர்மங்களினுள் சத்வஸ்துவினின்றும் மற்றச் சகல தர்மசமூகங்களையும் மித்தை யென்னும் புத்தியால் விவேகித்தறியவேண்டு மென்பது பொருள். (கூ0)

ரு. சத்தினையும் ஜலத்தையும் விவேகித்தல் கருகூ-கருஎ.

க. அக்கினியினின்றும் ஜலம் பத்துமடங்கு குறைந்ததும் வாஸ்தவமல்லாததுமா மெனல்.

[கருகூ] सतो विवेचिते वह्नौ मिथ्यात्वे सति वासिते ।
आपो दशांशतो न्यूनाः कल्पिता इति चिंतयेत् ॥ ९१ ॥

(அ-கை.)

இப்படி அக்கினியின் மித்தியாத்துவநிச்சய முண்டாகியபின் ஜலத்தின் மித்தியாத்தன்மையை முமுக்ஷு சிந்திக்கவேண்டுமெனக் கூறுகின்றார்:—

सतः वह्नौ विवेचिते मिथ्यात्वे वासिते सति दशांशतः न्यूनाः आपः कल्पिताः इति चिंतयेत् ॥

(சு-ம்.)

சத்தினின்றும் அக்கினி வேறுபிரித்தறியப்பட்டு, அதன் மித்தியாத்தன்மை திடமாக நிச்சயிக்கப்பட்டகாலத்து, அக்கினியினும் பத்துமடங்கு குறைவாகிய ஜலம் அக்கினியுபகிதசேதனத்திற் கற்பிதமாம் என்று சிந்திக்கவேண்டும். (கூக

உ. ஜலத்தின் காரணதர்மங்களும் சொந்ததர்மங்களும்.

[கருஎ] संत्यापोऽमूः शून्यतत्त्वाः सशब्दस्पर्शसंयुताः ।
रूपवत्योऽन्यधर्मानुवृत्त्या स्वीयो रसो गुणः ॥ ९२ ॥

(அ-கை)

இந்த ஜலத்திற்கும் காரணத்தினின்றும் வந்தடைந்த தர்மங்களையும் தனது தர்மங்களையும் வேறுபிரித்துக்காட்டுகின்றார்:—

अन्यधर्मानुवृत्या अमूः आपः संति शून्यतत्त्वाः सशब्दस्पर्शसंयुताः रूपवत्यः स्वीयः गुणः रसः ॥

(சு-ம்.)

காரணத்தினது தர்மங்களின் வியாப்தியால் இந்த ஜலம் இருக்கிறது; மித்தியாசொரூபமாக இருக்கிறது; சத்தத்தோடு ஸ்பரிசமும் ரூபமுமுடையதாம். ஜலத்தினது சொந்தகுணம் இரசமாம். (கூ௨)

சு. சத்தினையும் பிருதிவியினையும் விவேகித்தல்- கூ௩-கூ௬.

க. ஜலத்தின் மித்தியாத்தன்மைநிச்சயமும், பிருதிவியின் பத்துமடங்கு குறைவும், வாஸ்தவமாகாமையும்.

[கூ௩] सतो विवेचितास्वप्सु तन्मिथ्यात्वे च वासिते ।
भूमिर्दशांशतो न्यूना कल्पिताप्स्विति चिंतयेत् ॥ ९३ ॥

(அ-கை.)

ஜலத்தின் மித்தியாத்துவத்தை நிச்சயித்துப் பின் பூமியின் மித்தியாத்துவத்தை விசாரிக்கவேண்டுமெனக் கூறுகின்றார்:—

सतः अप्सु विवेचितासु तन्मिथ्यात्वे च वासिते दशांशतः न्यूना भूमिः अप्सु कल्पिता इति चिंतयेत् ॥

(சு-ம்.)

சத்தினின்றும் ஜலம் வேறுபிரிக்கப்பட்டு அதனது மித்தியாத்தன்மையும் நிச்சயிக்கப்பட்டகாலத்துப் பத்துமடங்கு குறைவாகிய பூமியானது ஜலவுபகிதசேதனத்தில் கற்பிக்கப்பட்டதா மென்று விசாரிக்கவேண்டும். ()

௨. பிருதிவியின் காரணதர்மமும் நிஜதர்மமும் சத்தினை விவேகித்தலும்.

[கூ௪] अस्ति भूस्तत्त्वशून्याऽस्यां शब्दस्पर्शौ सरूपकौ ।
रसश्च परतो गंधो नैजः सत्ता विविच्यताम् ॥ ९४ ॥

(அ-கை.)

அப்பிருதிவியின் மித்தியாத்தன்மையைச் சிந்தித்தற்பொருட்டு அந்தப் பிருதிவியின் தர்மங்களை விபாகஞ் செய்கின்றார்:—

भूः अस्ति तत्त्वशून्या अस्यां शब्दस्पर्शौ सरूपकौ रसः च परतः नैजः गंधः ॥

(சு-ம்.)

*இப்பிருதிவியில் பிருதிவி இருக்கிறது, மித்தையாயிருக்கிறது, சப்தம், ஸ்பரிசம், உருவம், இரசமென்னும் இக்குணங்கள் அந்நியமாகிய சத்துமாயை ஆகாயம் வாயு தேயு ஜலம் என்னும் காரணங்களினின்றும் வந்தடைந்தனவாம். பிருதிவியின் குணம் கந்தமாம்.*

(அ-கை.)

*அச்சகல குணங்களினின்றும் சத்தைமாத்திரமே விவேகிக்கத்தக்கதாம் எனக் கூறுகின்றார்:—*

सत्ता विविच्यताम् ॥

(சு-ம்.)

*இவை எல்லாவற்றினின்றும் சத்தை விவேகிக்கத்தக்கதாம்.* (கூச)

**எ. சத்தையும், பூதங்களின் காரியமாகிய பிரஹ்மாண்டமுதலியவற்றையும் விவேகித்தலும், பிரபஞ்சத்தோற்றத்தின் அவிரோதமும் கசுo-கசுசு.**

*க. பிருதிவியினின்றும் சத்தினை வேறுபிரித்தலின் பயன்.*

[கசுo] पृथक्कृतायां सत्तायां भूमिर्मिथ्याऽवशिष्यते ।
भूमेर्दशांशतो न्यूनं ब्रह्मांडं भूमिमध्यगम् ॥ ९५ ॥

(அ-கை.)

*சத்தையினை வேறுபிரித்தலிற் பயனைக் கூறுகின்றார்:—*

सत्तायां पृथक्कृतायां भूमिः मिथ्या अवशिष्यते ॥

(சு-ம்.)

*சத்தை பிருதிவியினின்று வேறுபிரிக்கப்படின் பூமி மித்தையாக மிஞ்சுகின்றது.*

(அ-கை.)

*இப்போது பௌதிகமாகிய பிரஹ்மாண்டமுதலியவற்றினின்றும் சத்தையை விவேகித்தற்பொருட்டு அப்பிரஹ்மாண்டமுதலியவற்றின் நிலைமையைக் காட்டுகின்றார்:—*

भूमेः दशांशतः न्यूनं भूमिमध्यगं ब्रह्मांडम् ॥

(சு-ம்.)

பூமியினின்றும் பத்துமடங்கு குறைவாகிய பதினன்கு உலகமாகிய பிரஹ்மாண்டம் பிருதிவியின் மத்தியிலிருக்கிறது. (கூரு)

உ. பிரஹ்மாண்டத்தினுள்ளிருக்கும் பொருள்களைக் கூறுதல்.

[கசுக] ब्रह्मांडमध्ये तिष्ठंति भुवनानि चतुर्दश ।
भुवनेषु वसंत्येषु प्राणिदेहा यथायथम् ॥ ९६ ॥

(அ-கை.)

பிரஹ்மாண்டத்தினுள்ளிருக்கும் பதார்த்தங்களைக் கூறுகின்றார்.—

ब्रह्मांडमध्ये चतुर्दशभुवनानि तिष्ठंति । एषु भुवनेषु यथायथं प्राणिदेहाः वसंति ॥

(சு-ம்.)

பிரஹ்மாண்டத்தின் மத்தியில் * கசு௪, பதினன்கு உலகங்களிருக்கின்றன. இந்தப் பதினன்கு உலகங்களில் அதத‌ற்குரிய பிராணிகளின் தேகங்க ளிருக்கின்றன. (கூசு)

௩. சத்தினின்றும் பிரஹ்மாண்டமுதலியவற்றை வேறுபிரித்தலின் பயனும், அவை தோற்றுதலால் விரோத மின்மையும்.

[கசுஉ] ब्रह्मांडलोकदेहेषु सद्वस्तुनि पृथक्कृते ।
असतोऽडादयो भांतु तद्भानेऽपीह का क्षतिः ॥ ९७ ॥

(அ-கை.)

அந்தப்பிரஹ்மாண்டமுதலியவற்றில் சத்து விவேகிக்கப்பட்டகாலத்துப் பலிதத்தைக் கூறுகின்றார்:—

ब्रह्मांडलोकदेहेषु सद्वस्तुनि पृथक्कृते अंडादयः असतः भांतु तद्भाने अपि इह का क्षतिः ॥

(சு-ம்)

பிரஹ்மாண்டத்திலும், பதினன்கு உலகங்களிலும், பிராணிகளின் தேகங்களிலும் சத்வஸ்து வேறுபிரிக்கப்பட்டகாலத்துப் பிரஹ்மாண்ட

---

* கசு௪. அதலம் விதலம் சுதலம் தலாதலம் இரசாதலம் மகாதலம் பாதாள மென்னும் ஏழும் கீழுள்ளன. பூலோகம் புவர்லோகம் சுவர்லோகம் மகாலோகம் ஜனலோகம் தபலோகம் சத்திய(பிரஹ்ம)லோக மென்னும் ஏழும் மேலுள்ளன. இவை பதினன்கு புவன(உலக)ங்களாம்.

முதலியன மித்தையாகவே விளங்குகின்றன. அப்பிரஹ்மாண்டாதிகள் தோற்றிக்கொண்டிருக்க இங்கே * கசுரு. அத்வைதவஸ்துவில் என்ன குறை இருக்கின்றது? ஒரு குறையு மில்லை. (கூஎ)

ரு. சத்தினின்றும் பிரஹ்மாண்டமுதலியவற்றினை வேறுபிரித்தலின் பயனும், அவை தோற்றுதலால் விரோதமின்மையும்.

[கசுரு] भूतभौतिकमायानां समत्वेऽत्यंतवासिते ।
सद्वस्त्वद्वैतमित्येषा धीर्विपर्येति न क्वचित् ॥ ९८ ॥

(அ-கை.)

" அவைகள் தோற்றிக்கொண்டிருக்குமாயின் இங்கே என்ன குறை " என்று கசுஉ-வது சுலோகத்திற் கூறிய அர்த்தத்தையே விளக்குகின்றார்:-

भूतभौतिकमायानां समत्वे अत्यंतवासिते सद्वस्तु अद्वैतं इति एषा धीः क्वचित् न विपर्येति ॥

(சு-ம்)

பூதம் பௌதிகம் மாயை என்பவற்றின் சமத்தன்மையாகிய * கசுசு. மித்தியாத்தன்மை செவ்வையாய் நிச்சயிக்கப்படின் சத்வஸ்து அத்வைத மேயா மென்னும் இப்புத்தி ஒருநாளும் விபரீதத்தை யடைகிறதில்லை.

(வி-ம்.)

ஆகாயமுதலிய ஐந்து பூதங்கள், பிரஹ்மாண்டமுதலிய பௌதிகங்கள், அப்பூதபௌதிகங்களுக்குக் காரணமாகிய மாயை என்பவற்றின் மித்தியாத்தன்மை விவேகத்தினாலும் தியானத்தினாலும் சித்தத்தில் திடமாக நிச்சயிக்கப்படின், சத்வஸ்துவினது அத்வைதத்தன்மையின் ஞானம் ஒருநாளும் கெடாதென்பது பொருள். (கூஅ)

ச. பூமிமுதலியன அசத்தாயிருக்கவும் ஞானியின் வியவகாரம் குன்றாமை.

[கசுச] सदद्वैतात्पृथग्भूते द्वैते भूम्यादिरूपिणि ।
तत्तदर्थक्रिया लोके यथा दृष्टा तथैव सा ॥ ९९ ॥

---

* கசுரு. கானல்ஜலம் தோற்றுதலால் அதற்கு அதிஷ்டானமாகிய பூமி நனையாததுபோல மித்தையாகிய ஜகத்துத் தோற்றுதலால் அதிஷ்டான அத்வைதப் பிரஹ்மத்தில் கெடுதி உண்டாகிறதில்லை.

* கசுசு. அதிஷ்டானப்பிரஹ்மத்திற்கு வேறாகிய சத்தை இல்லாமையால் அதிஷ்டானவடிவத்தன்மை.

(அ-கை.)

பூமிமுதலியன அசத்தாயின் ஞானியின் வியவகாரம் லோபமா (கெடு)மே? என்றாசங்கித்து, விவேகத்தினால் பூமிமுதலியவற்றின் மித்தியாத்துவம் நிச்சயிக்கப்படினும், பூமிமுதலியவற்றின் சொரூபத்திற்குக் கேடின்மையால் ஞானியின் சொல்லுதலும் அறிதலுமாகிய வியவகாரம் நாசத்தை யடையாதெனக் கூறுகின்றார்:—

भूम्यादिरूपिणि द्वैते सदद्वैतात् पृथग्भूते तत्तदर्थक्रिया लोके यथा दृष्टा तथा एव सा ॥

(சு-ம்)

பூமிமுதலியவடிவ துவைதமாகிய ஜகத்து சத்துரூப அத்வைதத்தினின்றும் வேறுபிரிக்கப்படினும் அதாவது மித்தையாயினும், அப்பூதமுதலியவற்றில் அதனதன் பிரயோஜனத்தின்பொருட்டுள்ள கிரியையாகிய பிரவிருத்தி உலகில் எப்படி முன் அஞ்ஞானதசையில் அநுபவிக்கப்பட்டதோ அப்படியே இருக்கிறது. (௯௯)

ஓ. வியாவகாரிக ஜகத்தின் பேதத்தை அங்கீகரித்தல்.

[௧௯௫] सांख्यकाणादबौद्धाद्यैर्जगद्भेदो यथा यथा ।
उत्प्रेक्ष्यतेऽनेकयुक्त्या भवत्वेष तथा तथा ॥ १०० ॥

(அ-கை.)

அப்படியானால் சத்வஸ்து அத்வைதசொரூபமாயிருக்குமாயின் சாங்கியர்முதலிய பேதவாதிகளாற் சொல்லப்பட்ட பேதத்தை அத்வைதவாதியாகிய தாம் ஏன் நிராகரிக்கவில்லை? என்றாசங்கித்து வியாவகாரிக மித்தையாகிய பேதம் எங்களாலும் அங்கீகரிக்கப்பட்டிருத்தலால் அந்த வியாவகாரிக பேதத்தை நிஷேதித்தற்குப் பிரயத்தனஞ்செய்யவில்லையெனக் கூறுகின்றார்:—

सांख्यकाणादबौद्धाद्यैः अनेकयुक्त्या यथा यथा जगद्भेदः उत्प्रेक्ष्यते तथा तथा एषः भवतु ॥

(சு-ம்.)

* ௧௯எ. சாங்கியன், * ௧௯அ. காணாதன் * ௧௯௯. பௌத்தன்

---

* ௧௯எ. கபிலமதத்தை யநுசரித்தவன் சாங்கியன்.

*௧௯அ. கணாத(கணபுக்கு)மதத்தினது அநுசாரியாகிய வைசேஷிகன் காணாதன்.

* ௧௯௯. புத்த (பாஷண்டப்பிரவர்த்தக) அவதாரத்தின் சிஷ்யராகிய மாத்தியமிகன் (சூனியவாதி), யோகாசாரன் (க்ஷணிகவிஞ்ஞானவாதி), சௌத்திராந்திகன் (பாகியபதார்த்தங்களுக்கு அநுமேயத்தன்மையைச் சொல்லுவோன்), வைபாஷிகன் (பாகியபதார்த்தங்களின் பிரத்தியக்ஷத்தன்மையைச் சொல்லுவோன்) என்னும் இந் நால்வரும் பௌத்த ரெனப்படுவர்.

* ௧௭0. முதலிய வாதிகளால் அநேக யுக்திகளால் எப்படி எப்படி ஜகத்தின் பேதமானது கற்பனைசெய்யப்படுகின்றதோ அப்படி அப்படி இந்த ஜகத்தின் பேத மிருக்குக. (௧00)

௬. வாஸ்தவபேதத்தை ஆதரியாமையிற் கேடு.

[௧௩௬] अवज्ञातं सदद्वैतं निःशंकैरन्यवादिभिः ।
एवं का क्षतिरस्माकं तद्द्वैतमवजानताम् ॥ १०१ ॥

(அ-கை.)

பிரத்தியக்ஷமுதலிய பிரமாணங்களால் சித்தித்துள்ள வாஸ்தவ பேதத்திற்குமுன் ஆகாயமுதலியவற்றின் விவேகப்பிரசங்கத்திற் கூறிய மித்தியாபுத்தியினால் திரஸ்கரித்தலாகிய அநாதரம் அயுக்தமா மென்று ஆசங்கித்துக் கூறுகின்றார்:—

निःशंकैः अन्यवादिभिः सदद्वैतं अवज्ञातं एवं तद्द्वैतं अवजानताम् अस्माकं का क्षतिः ॥

(சு-ம்.)

சங்கையில்லாத அந்நியவாதிகளால் சத்தாகிய அத்வைதம் எப்படி அநாதரஞ்செய்யப்படுகின்றதோ அதுபோல அவர்களது துவைதத்தை அநாதரஞ்செய்கின்றவர்களாகிய எங்களுக்கு என்ன கெடுதியிருக்கின்றது?

(வி-ம்.)

சங்கையில்லாதவர்களாய் அந்நியவாதிகளாகிய சாங்கியர்முதலியோர்கள் * ௧௭௧. சுருதிமுதலியவற்றால் சித்தித்த அத்வைதத்தையும் அநாதரஞ்செய்வதுபோலச் சுருதியுக்திஅநுபவங்களின் ஆசிரயத்தால் நாங்கள் அவர்களது (அந்தத்துவைதவாதிகள் ஒப்பியிருக்கும்) துவைதத்தை அநாதரஞ்செய்வதில் எங்களுக்கென்ன கெடுதியுண்டாம்? ஒருகெடுதியுமில்லை. (௧0௧)

அ. துவைதத்தை அநாதரஞ்செய்தலின் பலத்தை உபபாதித்தல் ௧௩௭-௧௭௪.

௧. துவைதத்தை அநாதரஞ்செய்தலின் பயன்.

[௧௩௭] द्वैतावज्ञा सुस्थिता चेदद्वैते धीः स्थिरा भवेत् ।
स्थैर्ये तस्याः पुमानेष जीवन्मुक्त इतीर्यते ॥ १०२ ॥

---

* ௧௭0. முதலிய என்னுஞ் சொல்லால் கௌதமரை யநுசரித்த நையாயிகர் முதலிய மற்றப் பேதவாதிகளும் கொள்ளப்படுவர்.

* ௧௭௧. முதலிய என்னும் பதத்தால் யுக்தியநுபவங்களும் கொள்ளப்படும்.

(அ-கை)

அப்படியானால் இத்துவைதத்தின் அநாதரம் நிஷ்பிரயோஜனமா மென்றுசங்கித்து, ஜீவன்முக்தியாகிய பிரயோஜனமிருத்தலால் துவைதத்தின் அநாதரம் நிஷ்பிரயோஜனமாகாதெனக் கூறுகின்றார்:—

द्वैतावज्ञा सुस्थिता चेत् अद्वैते धीः स्थिरा भवेत् । तस्याः स्थैर्ये एषः पुमान् जीवन्मुक्तः इति ईर्यते ॥

(சு-ம்)

துவைதத்தின் அநாதரம் செவ்வையாக நிலைபெறுமாயின் அத்வைதத்தில் புத்தி நிலையுடையதாகின்றது. அவ்வத்வைதபுத்தி ஸ்திரமாகவே இந்தப் புருஷன் * கஎஉ. ஜீவன்முக்தன் என்று சொல்லப்படுகிறான். (கOஉ)

உ. பிரமாணத்தோடு துவைதத்தை அநாதரஞ்செய்தலின் பயன்.

[க்கூஅ] एषा ब्राह्मी स्थितिः पार्थ नैनां प्राप्य विमुह्यति ।
स्थित्वाऽस्यामंतकालेऽपि ब्रह्मनिर्वाणमृच्छति ॥ १०३ ॥

(அ-கை.)

ஜீவன்முக்திமாத்திரமே துவைதத்தின் அநாதரவிற்குப் பிரயோஜனமன்று, விதேகமுக்தியும் பிரயோஜனமா மென்னும் அபிப்பிராயமாகப் பகவத்கீதையின் இரண்டாவது அத்தியாயத்தின் கடைசி எஉ-வது சுலோகமாகிய ஸ்ரீகிருஷ்ணபகவானது வாக்கியத்தை உதாரணமாகக் கூறுகின்றார்:-

पार्थ एषा ब्राह्मी स्थितिः । एनां प्राप्य न विमुह्यति अस्यां अंतकाले अपि स्थित्वाब्रह्म निर्वाणं ऋच्छति ॥

(சு-ம்.)

அருச்சுனா! * கஎங. இது * கஎச. பிரஹ்மநிஷ்டையாம். இந்நிஷ்டையினை யடைந்து புருஷன் பிராந்தியை யடையான். இந்தப் பிரஹ்ம

---

* கஎஉ. பிரபஞ்சம் தோற்றிக்கொண்டிருக்க அத்வைதசொரூபத்தில் நிலைத்தல் ஜீவன்முக்தியாம். அதனையுடைய புருஷன் ஜீவன்முக்த னெனப்படுவன்.

* கஎங. கீதையின் இரண்டாவது அத்தியாயத்தின் ருகு-வது சுலோகமுதல் எஉ-வது சுலோகம்வரையிற் சொல்லப்பட்ட இது.

* கஎச. பிரஹ்மத்திலுள்ளது எதுவோ அது பிராஹ்மீ யெனப்படும். இப்படிப்பட்ட ஸ்திதி அதாவது எல்லாக் கருமங்களையும் விட்டுப் பிரஹ்மசொரூபமாக நிலைத்தல் பிராஹ்மீஸ்திதி, இதுவே பிரஹ்மநிஷ்டை.

நிஷ்டையில் அந்தியகாலத்திலும் நிலைத்துப் பிரஹ்மபாவவடிவ * களரு. விதேகமுக்திமய பிரஹ்மநிர்வாணத்தை யடைகிறான். (கOரு)

ரு. ஞானியினது அந்தியகால சத்தத்தின் இரண்டுபொருள்.

[கசுகூ] सदद्वैतेऽनृतद्वैते यदन्योऽन्यैक्यवीक्षणम् ।
तस्यांतकालस्तद्भेदबुद्धिरेव न चेतरः ॥ १०४ ॥

(அ-கை.)

முற்கூறிய கீதாவாக்கியத்தில் "அந்தியகாலம்" என்னுஞ் சத்தத்தால் வர்த்தமான தேகம் விழுதல் சொல்லப்படுகின்றது என்னும் ஆசங்கையை நிவிருத்திக்கும்பொருட்டு "அந்தியகால" பதத்திற்குச் சொல்லக்கருதிய அர்த்தத்தைக் கூறுகின்றார் :—

सदद्वैते अनृतद्वैते यत् अन्योऽन्यैक्यवीक्षणम् तस्य अंतकालः तद्भेदबुद्धिः एव च इतरः न ॥

(சு-ம்.)

சத்தாகிய அத்வைதத்திலும் மித்தையாகிய துவைதத்திலும் எந்த அந்நியோந்நிய ஐக்கியத்தின் ஞானமாகிய பிரம மிருக்கின்றதோ அந்தப் பிரமத்தின் முடிவுகாலம் அந்தத் துவைதாத்வைதத்தின் பேதஞானமே யாம்; வேறன்று.

(வி-ம்.)

சத்துவடிவமாகிய அத்வைதத்திலும் மித்தியாவடிவமாகிய துவைதத்திலும் உள்ள அந்நியோந்நியாத்தியாசமாகிய ஐக்கியத்தின் ஞானமாகிய பிரமம் எதுவோ அதன் அந்தியகாலமாவது அந்தச் சத்தாகிய அத்வைதத்தையும் மித்தையாகிய துவைதத்தையும் கிரமமாய்ச் சத்தியமாகவும் மித்தையாகவும் பேதமா யறிவதேயாம்; மற்ற வர்த்தமான தேகம் விழுதலன்று என்பது பொருள். (கOச)

[களO] यद्वांऽतकालः प्राणस्य वियोगोऽस्तु प्रसिद्धितः ।
तस्मिन्कालेऽपि न भ्रांतेर्गतायाः पुनरागमः ॥ १०५ ॥

(அ-கை.)

இப்போது அந்தியகால மென்னும் சத்தத்திற்கு உலகப்பிரசித்தமாகிய வர்த்தமான தேகம் விழுத லென்னும் அர்த்தத்தை அங்கீகரித்தலினும் தோஷமில்லை யென்னும் அபிப்பிராயமாகக் கூறுகின்றார் :—

---

* களரு. பிரபஞ்சத்தோற்றமில்லாது அத்வைதப்பிரஹ்மசொரூபமாக நிலைத்தல் விதேகமுக்தியாம்.

यद्वा प्रसिद्धितः प्राणस्य वियोगः अतंकालः अस्तु । तास्मिन् काले अपि सतायाः भ्रांतेः पुनः आगमः न ॥

(சு-ம்.)

அல்லது லோகப்பிரசித்தமாகத் தேகத்தினின்றும் பிராணப்பிரதானமாகிய இலிங்கம் பிரிவதே அந்தியகாலமாயிருக்குக. அந்தத் தேகத்தினின்றும் பிராணன் பிரியுங்காலத்திலும் முன்நீங்கிய பிராந்தியானது மறுபடியும் வருதலில்லை. (கO௫)

[கஎக] नीरोग उपविष्टो वा रुग्णो वा विलुठन्भुवि ।
मूर्छितो वा त्यजत्वेष प्राणान्भ्रांतिर्न सर्वथा ॥ १०६ ॥

(அ-கை.)

“ அந்தக்காலத்தில் பிராந்தியுண்டாகிறதில்லை ” என்னும் முற்கூறிய அர்த்தத்தினையே விரித்துக் கூறுகின்றார் :—

नीरोगः उपविष्टः वा रुग्णः वा भुवि विलुठन् मूर्च्छितः वा एषः प्राणान् त्यजतु सर्वथा भ्रान्तिः न ॥

(சு-ம்.)

ரோகமில்லாதவனாயாவது அல்லது சித்தாதி ஆசனங்களால் உட்கார்ந்துள்ளவனாயாவது அல்லது பிரஹ்மத்திலிருப்பவனாயாவது அல்லது ரோகமுடையவனாய்ப் பூமியில் புரளுகின்றவனாயாவது அல்லது மிகுந்த துக்கத்தில் மூர்ச்சித்தவனாயாவது இந்த ஞானி பிராணனை விடுக; * கஎசு. எவ்விதத்தாலும் பிராந்தியானதில்லை. (கOசு)

---

* கஎசு. “ பிரஹ்மமே நான் ” என்றாவது, ராமராம என்று சொல்லிக்கொண்டாவது, வருத்தத்தினால் வியாகூலமுடையவனாய் ஆ! ஆ! வென்றலறிக்கொண்டாவது, காசிமுதலிய பவித்திரதேசத்திலேனும், அல்லது இலங்கைமுதலிய அபவித்திரதேசத்திலேனும், உத்தராயணமுதலிய உத்தமகாலத்திலேனும், தக்ஷிணாயனமுதலிய தாழ்ந்தகாலத்திலேனும் இந்த ஞானி தேகத்தை விடுவானாயினும், “நான் தேகாதியாயிருக்கிறேன்” “ஜகத்து சத்தியம்” “பிரஹ்மத்திற்கும் எனக்குமுள்ள பேதம் வாஸ்தவம்” “நான் ஜனனமரணாதி தர்மமுடையவன்” என்றிவ்விதமாகிய பிராந்தி ஞானிக்கு எவ்விதத்தாலு முண்டாகாது. ஆனால் எல்லாவிதத்தாலும் ஞானி முக்தனாவன். ஞானியின் தேகநீக்கத்தில் தேசகாலமுதலியவற்றின் சம்பந்தமுடைய ஓர் நியமமு மில்லை. உபாசகனது (யோகியினது) தேகநீக்கத்தில் நியம முண்டென்பது நிச்சயம்.

ரு. மரணகாலத்தில் ஞானியின் வித்தை நாசமாகாமை.

[கoஎ] दिने दिने स्वप्नसुप्त्योरधीते विस्मृतेऽप्ययम् ।
परेद्युर्नानधीतः स्यात्तद्वद्विद्या न नश्यति ॥ १०७ ॥

(அ-கை)

அங்ஙனமாயின், பிராணன் நீங்குங்காலத்தில் மூர்ச்சை * கoஎ. முதலியவற்றால் பிரஹ்மாகாரவிருத்திவடிவ ஞானம் நசிக்குமாயின், ஞானிக்குப் பிராந்தியுண்டாகவே செய்யுமென் றாசங்கித்து, அந்தக் காலத்தில் ஞானத்திற்கு நாசமில்லை யென்பதில் திருஷ்டாந்தத்தைக் கூறுகின்றார்:—

दिने दिने स्वप्नसुप्त्योः अधीते विस्मृते अपि अयम् परेद्युः अनधीतः न स्यात् । तद्वत् विद्या न नश्यति ॥

(சு-ம்.)

நாள்தோறும் சொப்பன சுழுத்திகளில் அத்தியயனஞ்செய்யப்பட்ட வேதம் மறக்கப்படினும், இப்புருஷன் மறுநாள் அத்தி யயனஞ்செய்யப் படாதவனாகான். அதுபோல ஞானம் நாசமடைகிறதில்லை.

(வி-ம்.)

நாள்தோறும் அத்தியயனஞ்செய்யப்பட்ட வேதம் சொப்பனம் சுழுத்திமுதலிய அவஸ்தைகளில் மறக்கப்படினும் மறுநாள் வேதத்தின் அத்தியயனம் செய்யப்படவில்லை என்ப தில்லை. அதுபோல மரணகாலத்திலும் தத்துவாநுசந்தானவடிவப் பிரஹ்மாத்மைக்கியஸ்மரணம் இல்லாவிடினும் ஞானத்திற்கு * கoஅ. நாச மில்லை யென்பது பொருள். (கoஎ)

---

* கoஎ. முதலியவென்னும் பதத்தால் வியாகூலத்தன்மை சந்நிபாதமுதலியவைகளும் கொள்ளப்படும்.

* கoஅ. இங்கே இது இரகசியமாம்:—" अहं ब्रह्मास्मि நான் பிரஹ்மமா யிருக்கிறேன் " என்னும் திடநிச்சயமாகிய அபரோக்ஷப்பிரஹ்மநிஷ்டை ஒருக்ஷணத்தி லுதயமாய் இரண்டாவது க்ஷணத்தில் நிலைபெற்று, அவித்தையையும் அதன் காரியத்தையும் பாதிக்கத் தொடங்குகின்றது. மூன்றாவது க்ஷணத்தில் காரியத்தோடு அவித்தையின் நிவிருத்தியாகிய பாதத்தைச்செய்கின்றது; அதே க்ஷணத்தில், தேற்றாம்பொடியைப்போல விருத்திஞானத்திற்கும் மித்தியாத்துவநிச்சயம் அல்லது மூன்றுகாலத்தினு மில்லை யென்னும் நிச்சயமாகிய பாத முண்டாகின்றது. இதனாற்றான் ஞானி ஜீவன்முக்தனாவான்.

மறுபடியும் ஞானிக்கு ஜீவன்முக்தியின் விலக்ஷணாநந்தத்தின் இச்சை யிருக்குமாயின் பிரஹ்மாகாரவிருத்தியின் ஆவிருத்தியைச் செய்க. ஆனால் " தத்துவமஸி" முதலிய சுருதிப்பிரமாணத்தால் ஒருமுறை நாசமாகிய அவித்தை மறுபடியு முண்டாகாதாகையால், அவித்தை நீங்கும்பொருட்டு ஞானிக்கு மறுபடியும் பிரஹ்மாகாரவிருத்

[௧0௮] प्रमाणोत्पादिता विद्या प्रमाणं प्रबलं विना ।
न नश्यति न वेदांतात्प्रबलं मानमीक्ष्यते ॥ १०८ ॥

(அ-கை.)

ஞானத்திற்கு நாசமில்லையென்பதை உபபாதனஞ் செய்கின்றார் :—

प्रमाणोत्पादिता विद्या प्रबलं प्रमाणं विना न नश्यति । वेदांतात् प्रबलं मानं न ईक्ष्यते ॥

(சு-ம்.)

"தத்துவமஸி" முதலிய பிரமாணங்களாலுண்டாகிய வித்தையாகிய ஞானம் பிரபலமாகிய பிரமாணமின்றி நாசத்தையடையாது. உபநிஷத்தினும் பிரபலமாகிய பிரமாணம் பார்க்கப்படுவதில்லை. (௧0௮)

௯. பஞ்சமகாபூதவிவேகத்தின் பயனாகிய முத்தியின் சித்தி.

[௧0௯] तस्माद्वेदांतसंसिद्धं सदद्वैतं न बाध्यते ।
अंतकालेऽप्यतो भूतविवेकान्निर्वृतिः स्थिता ॥ १०९ ॥

---

தியினது ஆவிருத்தியாகிய அநுசந்தானத்தின் பிரயோஜனமில்லை. மறுபடியும் அநுசந்தானத்தில் வித்துவானைப் பிரேரிக்கும் பிரமாணவடிவ விதியுமில்லை. மரணகாலத்தில் ஒருக்ஷணம் அல்லது ஒருகடிகை அல்லது அதிககாலம்வரையிலும் மூர்ச்சையுமுண்டாம். அம்மூர்ச்சையில் பிரஹ்மாகாரவிருத்தியின் அப்பியாசமும் சம்பவியாது.

ஆவரண சக்தி, விக்ஷேப சக்தி யென்னுஞ் சக்திகளையுடைய அவித்தையிலுள்ள ஆவரண சக்தியாகிய சக்திக்கு ஞானசமகாலத்திலேயே நாசமும் பாதமுமாகிய இரண்டுமுண்டாகின்றன. விக்ஷேப சக்தியாகிய சக்திக்குக் காரியப்பிரபஞ்சத்தோடு ஞானசமகாலத்தில் பாதமுண்டாகின்றது. ஆனால் பிராரப்தபலத்தால் அது நாசமாகிறதில்லை. போகத்தால் பிராரப்தம் முடியுங்காலத்து விக்ஷேப சக்தியாகிய அஞ்ஞானலேசமும் நாசமாகின்றது. ஆனால் அது அவித்தையாயிருத்தலால் வித்தையின்றி யதற்கு நாசமுண்டாகாததலால் அது நசிக்கும் பொருட்டுப் பிரஹ்மநிஷ்டையாகிய வித்தையும் வேண்டியதாமென்றாலும்,மூர்ச்சைக்காலத்தில்சம்ஸ்காரவடிவமாக வித்தை நிலைத்திருத்தலால் அந்த வித்தையாகிய விருத்தியில் ஆரூடசேதனத்தினால் அவ்வவித்தையின் லேசமும், பிரபஞ்சமும், அதன்ஞானமும் அத்தியந்தம் நாசமாகின்றன. அதேசமயத்தில் கட்டையிலுள்ள அக்கினியால் வேறுகட்டைசெத்தைகளோடு அந்தக் கட்டை எரிதல்போல அந்தவித்தையின் சம்ஸ்காரமும் தன்னோடு(சம்ஸ்காரத்தோடு) கூடிய சேதனத்தினாலேயே நாசமாகின்றது. ஆகையால் ஞானமுண்டாகிய பின் ஞானிக்குக் கர்த்தவ்யமில்லை. விதேகமோக்ஷம்வரையிலும் அநுசந்தானமிருந்தாலுமில்லாவிடினும் ஞானமில்லையென்பதில்லை. ஆனால் விசேஷரூபமாகவேனும் அல்லது சாமாநியரூபமாகவேனும், அல்லது சம்ஸ்காரரூபமாகவேனும், ஞானம் நிலைத்திருக்குமாகையால் ௧௯௮-வது சுலோகத்திற் கூறிய அந்தியகாலத்திலும் பிரஹ்மநிஷ்டையின் நிலை சம்பவித்தலால் ஜீவன்முக்தனாகிய ஞானி விதேகமுக்தியையடைவன் என்னும் அர்த்தமும் சித்தமாயிற்று.

(அ-கை.)

உபபாதனஞ்செய்த அர்த்தத்தை முடிக்கின்றார் :—

तस्मात् वेदांतसंसिद्धं सदद्वैतं अंतकाले अपि न बाध्यते अतः भूतविवेकात् निर्वृतिः स्थिता ॥

(சு-ம்.)

வேதாந்தமாகிய பிரமாணங்களால் செவ்வையாக நிச்சயிக்கப்பட்ட சத்தாகிய அத்வைதப்பிரஹ்மம் மரணகாலத்திலும் பாதத்தை யடைகிற தில்லை. இதனால் பஞ்சபூதங்களின் விவேகத்தால் (சத்தினின்றும் வேறு பிரித்தறிதலால்) நிரதிசய சுகப்பிராப்தியாகிய மோக்ஷம் நிச்சயிக்கப்பட்ட தாகின்றது. (௧0௬)

பஞ்சமகாபூதவிவேகம் என்னும்

## இரண்டாம்பிரகரணம்

முற்றிற்று.

---

ஓம்தத்ஸத்பிரஹ்மணேநம:

# ஸ்ரீ பஞ்சதசி.

## ௩. $ பஞ்சகோசவிவேகம்.

### மூன்றாம்பிரகரணம்.

கிரந்தத்தின் விஷய(குகையிலுள்ள பிரஹ்ம)த்தையும் பலத்தையும் சொல்லுதல்பூர்வகமான ஆரம்பத்தின் பிரதிஞ்ஞை.

[கஎ௫] गुहाहितं ब्रह्म यत्तत्पंचकोशविवेकतः ।
बोद्धुं शक्यं ततः कोशपंचकं प्रविविच्यते ॥ १ ॥

(அ-கை.)

எசுர்வேதத்திலுள்ள தைத்திரீய உபநிஷத்தினது தாற்பரியத்தின் (ஈசுவரனாகிய வக்தாவினது இச்சையின்) வியாக்கியானமாகிய பஞ்சகோசவிவேகமென்னும் பஞ்சதசியின் மூன்றாவது பிரகரணத்தை ஆரம்பிக்கின்றவராய் ஆசாரியராகிய ஸ்ரீவித்தியாரணியசுவாமிகள் அப்பிரகரணத்தில் சுரோதாவா(கேட்பவனா)கிய அதிகாரியின் பிரவிருத்தி சித்திக்கும்பொருட்டு இந்தப் பிரகரணவடிவ கிரந்தத்தின் பிரயோசனத்தையும் விஷயத்தையும் சூசிப்பிக்கின்றவராய்த் தனது வாயினாற்றானே ஆரம்பிக்கக் கருதிய கிரந்தத்தின் பிரதிஞ்ஞையைச் செய்கின்றார்:—

गुहाहितं यत् ब्रह्म तत् पंचकोशविवेकतः बोद्धुं शक्यं ततः कोशपंचकं प्रविविच्यते ॥

(சு-ம்)

பஞ்சகோசகுகையிலுள்ள சச்சிதாநந்தப்பிரஹ்மம் எதுவோ அது எதனால் பஞ்சகோசங்களின் விவேகத்தால் அறியக்கூடியதாயிருக்கின்றதோ அதனால் பஞ்சகோசங்கள் விவேகிக்கப்படுகின்றன.

---

$ பஞ்சகோசங்களை ஆத்மாவினின்றும் வேறுபிரித்தல் அல்லது ஆத்மாவைப் பஞ்சகோசங்களினின்றும் வேறுபிரித்தல் எதில் இருக்கின்றதோ அது பஞ்சகோசவிவேகம்.

(வி-ம்.)

"यो वेद विहितं गुहायां परमे व्योमन् மிருதியாகப் பரமவியோகமாகிய அவ்வியாகிருத ஆகாயத்திலிருக்கும் பஞ்சகோசகுகையிலுள்ள பிரஹ்மத்தை எவன் அறிகிறுனே, அவன் ஞானசொரூபமாகிய பிரஹ்மத்தோடு * க. ஐக்கியமாய்ச் * உ. சகல காமங்களேயும் அநுபவிக்கின்றுன் அதாவது பூரணகாமனுகின்றுன்" என்னும் தைத்திரீயசுருதியால் குகையிலுள்ளதாகச் சொல்லப்பட்ட பிரஹ்மம் எதனுல் குகையென்னுஞ் சத்தத்திற்கு வாச்சியார்த்தமாகிய பஞ்சகோசங்களின் விவேகத்தால் அறியக்கூடியதாயிருக்கின்றதோ, அதனுல் அக்கோசங்களின் பஞ்சகம் மிருதியாகப் பிரத்தியக்கென்னும் அந்தராத்மாவினின்றும் வேறுபிரித்துக்காட்டப்படுகின்றதென்பது பொருள். (க)

க. பஞ்கோச ஆத்மாக்களின் விவேசனம் கஎசு-கஅச.

க. குகையென்னும் சத்தத்தின் பேதத்தோடுகூடிய அர்த்தம் கஎசு.

[கஎசு] देहाभ्यंतरः प्राणः प्राणादभ्यंतरं मनः ।
ततः कर्ता ततो भोक्ता गुहा सेयं परंपरा ॥ २ ॥

(அ-கை.)

அப்படியானுல் எதிலுள்ள பிரஹ்மம் பஞ்சகோசவிவேகங்களால் அறியப்படுகின்றதோ அந்தச் சுருதியிற்கூறிய குகை யாதென் றுசங்கித்துக் குகையெனுஞ் சத்தத்திற்குச்சுருதியினுற் கருதப்பட்ட அர்த்தத்தைக் கூறுகின்றுர்:

देहात् प्राणः अभ्यंतरः । प्राणात् मनः अभ्यंतरं । ततः कर्त्ता । ततः भोक्ता । सा इयं परंपरा गुहा ॥

(சு-ம்.)

தேகத்திற்குள் பிராண னிருக்கின்றது. பிராணனுக்குள் மன மிருக்கின்றது. அம்மனத்திற்குள் கர்த்தாவாகிய புத்தி யிருக்கின்றது. அந்தப் புத்தியினுள் போக்தாவாகிய ஆநந்தமய மிருக்கின்றது. அத்தன்மையை இப்பரம்பரையானது ஆத்மாவை மறைக்குங் குகையாம்.

(வி-ம்.)

தேகமாகிய அந்நமயகோசத்தினும் பிராணமயகோசம் உள்ளாம். பிராணமயத்தினும் மனோமயகோசம் உள்ளாம். அம்மனோமயத்தினும் கர்த்தாவாகிய விஞ்ஞானமயகோசம் உள்ளாம். அவ்விஞ்ஞானமயத்தினும்

* க. மகாகாயத்தோடு கடாகாயத்தினைப்போல ஐக்கிய (ஒருவடிவ)மாய்.
* உ. சக்கிரவர்த்தி இராஜாமுதற் பிரஹ்மதேவன்வரையிலு முள்ள சுகத்தை.

போக்தாவாகிய ஆநந்தமயகோசமும் முன்போல உள்ளாம். அந்த இவ் வந்நமயமுதல் ஆநந்தமயம்வரையுள்ள பஞ்சகோசங்களின் பரம்பரையானது குகை * ௩ என்னுஞ் சத்தத்தால் சொல்லப்படுகின்றது என்பது பொருள். (உ)

உ. பஞ்சகோசங்களின் சோரூபமும் அவற்றின் அநாத்மத்தன்மையும் ௧௭-௧௮௪.

க. அந்நமயகோசத்தின் சொரூபமும் அநாத்மத்தன்மையும்.

[௧௭] पितृभुक्तान्नजाद्वीर्याज्जातोऽन्नेनैव वर्धते ।
देहः सोऽन्नमयोऽनात्मा प्राक्चोर्ध्वं तदभावतः ॥ ३ ॥

(அ-கை.)

இப்போது அந்நமயகோசத்தின் சொரூபத்தையும் அதன் அநாத்மத் தன்மையினையும் காட்டுகின்றார் :—

पितृभुक्तान्नजात् वीर्यात् जातः अन्नेन एव वर्धते सः देहः अन्नमयः अनात्मा ॥

(சு-ம்.)

* ச. பிதாவினுற் புசிக்கப்பட்ட அந்நத்தாலுண்டாகிய வீரியத்தால்

---

* ௩. பருவதத்தால் வளைபட்ட ஆகாயத்திலிருக்கும் ஐந்துகதவுள்ள வாயிலோடு கூடிய குகையில் மிகுந்த தேஜோவடிவ வெளியிற் பிரகாசிக்கும் தேயுதத்துவத்தின் அவஸ்தாபேதமாகிய இரத்தினவடிவ பகவானது பிரதிமை யிருக்கின், எப்படிஅக்குகை அப்பிரதிமையை மறைப்பதா யிருக்கின்றதோ, அதுபோல ஆகாயமுதலிய எல்லாவற்றிற்கும் அவகாசங்கொடுக்கும் அவ்வியாகிருதமாயைவடிவ ஆகாயத்திலிருக்கும் பஞ்சகோசங்களில் அந்த மாயையினும் மேலான பிரகாசமுடையதாகிய பிரஹ்மமே பிரத்தியகாத்ம(பஞ்சகோசசாக்ஷி)வடிவமாக விளைத்திருக்கின்றது. அதனைப் பஞ்சகோசங்கள் மறைப்பனவா யிருக்கின்றன. ஆதலால் இவை குகை யெனப்படுகின்றன. அந்த இரத்தினமயமாகிய பிரதிமையானது சேவகர்களின் அநுக்கிரகத்தால் திறவுகோல்வாயிலாய் ஐந்து கதவுகளையும் திறத்தலால் பிரதிமையின் தரிசனமாகிய ஞான முண்டாகிறது. அதுபோலப் பிரஹ்மநிஷ்டராகிய குருவின் அநுக்கிரகத்தால் பஞ்சகோசங்களின் விவேகம் என்னும் திறவுகோல்வாயிலாகப் பஞ்சகோசங்களாகிய ஆவரணமென்னுங் கதவைத் திறத்தலால் பிரத்தியகாத்மசொரூபமாகிய பிரஹ்மத்தின் தரிசன முண்டாகின்றது. ஆகையால் இக்கோசங்களின் விவேகம் செய்யவேண்டியதாம்.

* ச. இங்கே பிதா வென்று சொல்லுதல் பரலோகத்தினின்றும் நழுவிய ஜீவனுக்குத் தானியமாகிய அந்நத்திற் பிரவேசிக்கும்வாயிலாக முதலில் பிதாவின் சரீரத்தில் பிரவேசமுண்டாகின்ற தென்னும் இவ்வபிப்பிராயத்தினுலாம். ஆனல் சரீரம் சம்பவித்தலோ பிதாமாதாக்களிருவரின் வீரியத்தினுலாம். ஆகையால் உரையாசிரியரால் இருவரும் அங்கீகரிக்கப்பட்டிருக்கின்றனர்.

உண்டானதாய் அந்நத்தினாலேயே எது விருத்தியடைகின்றதோ அந்தத் தேகமாகிய அந்நமயம் ஆத்மா வன்று.

(வி-ம்.)

மாதாபிதாக்க ளுண்ட அரிசி கோதுமைமுதலிய அந்நங்களாலுண்டாகிய சுக்கிலசுரோணிதவடிவ * ங. வீரியத்தாலுண்டாய் ஜன்மத்திற்குப் பிறகு * சு. பால்முதலிய அந்நத்தால் விருத்தியடையும் தேகம் அந்நமயமாம் அதாவது அந்நத்தின் விகாரமாம். அவ்வந்நமயகோசமாகிய தேகம் ஆத்மா வன்று.

(அ-கை.)

அவ்வந்நமயம் எதனால் ஆத்மாவன்றெனக் கூறுகின்றார் :—

प्राक् ऊर्ध्वं च तदभावतः ॥

(சு-ம்.)

முன்னும் பின்னும் அஃதில்லாமையால்.

(வி-ம்.)

பிறத்தற்கு முன்னும் மரித்தற்குப் பின்னும் அந்தத் தேகம் * எ. இல்லாமையால் என்பது பொருள்.

இங்கே இது அநுமானமாம் :— * அ. விவாதத்திற்கு விஷயமாகிய தேகம் ஆத்மா வன்று, அந்நத்தின் விகாரமாகிய காரியமாதலால் அதாவது உற்பத்தி நாசமுடையதா யிருத்தலின் அநித்தியமாகுதலால். கடமுதலிய காரியம்போல என்பது தாற்பரியம். (ரு)

* ங. மாதாவின் இரஜசா(இரக்தமா)கிய வீரியத்தால் இரத்தமும் மாம்சமும் தோக்கு முண்டாகின்றன. பிதாவின் இரேதசா(சுக்கிலமா)கிய வீரியத்தால் எலும்பு நரம்புமச்சைக ளுண்டாகின்றன.

* சு. அந்நத்தைச் சாப்பிடுதலால் பிரசவித்தவளது ஸ்தனத்தில் பாலுண்டாகின்றது. ஆதலால் பால் அந்நமாம். பிருகதாரணியக உபநிஷத்தில் சப்தாந்நப்பிராஹ்மணமென்னும் பிரகரணத்தில் பால் அந்நவடிவமாமெனல் பிரசித்தம்.

* எ. பிராகபாவப்பிரத்துவம்சாபாவங்க ளிருத்தலால்.

* அ. எந்தவஸ்துவில் சந்தேகம் (அநேகங்கோடிகளையுடைய ஞானம்) உண்டாகின்றதோ அது விவாதத்திற்கு விஷய மெனப்படும். இந்தத் தேகம் சார்வாகர் இலௌகிகர்முதலியோரால் ஆத்மாவென அங்கீகரிக்கப்பட்டிருத்தலால் சமுசயத் தோடுகூடியதாம். அதனால் விவாதத்திற்கு விஷயமாம். அதற்கு யுக்தியா(அநுமானப்பிரமாணமா)கிற மத்தியஸ்தரால் அநாத்மத்தன்மை நிச்சயிக்கப்படுகின்றது.

[கள அ] पूर्वजन्मन्यसन्नेतज्जन्म संपादयेत्कथम् ।
भाविजन्मन्यसत्कर्म न भुंजीतेह संचितम् ॥ ४ ॥

(அ-கை.)

அப்படியானால் முன் கஎஎ-வது சுலோகத்தினில் சூசிப்பிக்கப்பட்ட அநுமானத்தில் தேகமாகிய பக்ஷத்தில் "காரியமாயிருத்தலால்" என்னும் எந்த ஏதுவாகிய இலிங்கம் சொல்லப்பட்டதோ அஃதிருக்குக. "தேகம் ஆத்மா வன்று" என்று சொல்லப்பட்ட * ௯. சாத்தியம் பொருந்தாது. "தேகமே ஆத்மா" வென்னும் விபரீதபக்ஷமாகிய விபக்ஷத்தில் பாதகமாகிய தோஷமில்லாமையால் இந்தக் காரியத்தன்மையாகிய ஏது விஷ்பிரயோஜனமா மென்று சார்வாகமதாநுசாரமாக ஆசங்கித்துச் செய்யாதது வருதல் செய்தது நசித்தல் என்னும் பாதக(தோஷ)மிருத்தலால் சாத்தியமாகிய தேகத்தின் அநாத்மத்தன்மை பொருந்தா தென்ப தில்லை என்பதாகச் சார்வாகமதத்தின் சங்கையைப் பரிகரிக்கின்றார் :—

पूर्वजन्मनि असत् एतत् जन्म कथं संपादयेत् । भाविजन्मनि असत् इह संचितं कर्म न भुंजीत ॥

(சு-ம்.)

இந்தத் தேகமாகிய ஆத்மா முன்ஜன்மத்தில் இல்லாததாகிய இந்த ஜன்மத்தை எப்படிச் சம்பாதிக்கும்? வரும் ஜன்மத்தில் இல்லாத இத்தேகமாகிய ஆத்மா இந்த ஜன்மத்தில் சம்பாதிக்கப்பட்ட கர்மத்தை அநுபவியாது.

(வி-ம்.)

இந்தத் தேகமாகிய ஆத்மா பிறத்தற்கு முந்தியகாலமாகிய பூர்வஜன்மத்தில் அசத்தாயிருத்தலாலும், இந்தத் தேகத்திற்கு நிமித்தகாரணமாகிய புண்ணியபாவவடிவ அதிருஷ்டம் சம்பவியாதிருந்தும் இந்த ஜன்மத்தையும் அங்கீகரித்தலாலும் * ௧௦. அகிருதாப்பியாகமம் (செய்யாதது வருதல்) என்னும் தோஷமுண்டாம். அதுபோல வரும்ஜன்மத்திலும் அதாவது மரணகாலத்திற்குப் பின்னும் இந்தத் தேகமாகிய ஆத்மா இல்லாமையால் இந்த ஜன்மத்தில் அநுஷ்டிக்கப்பட்ட புண்ணியபாவங்களின் போக்தாவான இந்தத் தேகமாகிய ஆத்மா இல்லாமையால் போகமின்றியும் புண்ணியபாவமாகிய கர்மத்திற்கு நாசமுண்டாம். போகமின்றிச் செய்யப்பட்ட

---

* ௯. அநுமிதிப்பிரமாவின் விஷயம் சாத்தியம்.

* ௧௦. செய்யாத கர்மத்தின் பலத்தை யநுபவித்தல் அகிருதாப்பியாகமம்.

கர்மம் அழிதலாகிய இதுவே செய்தது நசித்தல் என்னும் * கக. கிருதநாச வடிவ தோஷமாம். இப்படிக் கிருதநாசம் அகிருதாப்பியாகம மென்னும் தோஷமிருத்தலால் ஆத்மாவிற்குக் காரியத்தன்மை அதாவது தேகரூபமாக அந்நம் விகாரப்படுந்தன்மை அங்கீகரிக்கத்தக்க தன்று. ஆனல் ஸ்தூலதேகத்திற்கு வேருகவே ஆத்மா அங்கீகரிக்கத்தக்கதாம் என்பது தாற்பரியம். (ச)

உ. பிராணமயகோசத்தின் சொரூபமும் அநாத்மத்தன்மையும்.

[கஎக] पूर्णो देहे बलं यच्छन्नक्षाणां यः प्रवर्तकः ।
वायुः प्राणमयो नासावात्मा चैतन्यवर्जनात् ॥ ५ ॥

(அ-கை.)

இப்படி அந்நமயகோசத்தின் அநாத்மத்தன்மையைக் காட்டி, இப்போது பிராணமயகோசத்தின் சொரூபத்தையும், அதன் அநாத்மத்தன்மையையும் காட்டுகின்றார் :—

यः देहे पूर्णः बलं यच्छन् अक्षाणां प्रवर्तकः वायुः प्राणमयः । असौ आत्मा न ॥

(சு-ம்.)

எது தேகத்தில் நிறைந்திருக்கிறதோ, சாமர்த்தியமான பலத்தைத் தருவதாய் இந்திரியங்களைப் பிரவர்த்திப்பதா யிருக்கின்றதோ, அந்தத் தேகத்திற்குள்ளிருக்கும் வாயு பிராணமயமாம். இந்தப் பிராணமயகோசம் ஆத்மா வன்று.

(வி-ம்.)

எந்த வாயு தேகத்தில் பாதமுதல் சிரசுவரையிலும் நிறைந்து வியான வடிவமாகச் சாமர்த்திய(பல)த்தைத் தருவதாய் நேத்திரமுதலிய இந்திரியங்களைப் பிரவிருத்திக்கச் செய்கின்றதோ அந்த வாயு பிராணமய மென்று சொல்லப்படுகின்றது. இந்தப் பிராணமயகோசமும் ஆத்மா வன்று.

(அ-கை.)

அந்தப் பிராணமயம் ஆத்மா வல்ல வென்பதில் ஏதுவைக் கூறுகின்றார்:—

चैतन्यवर्जनात् ॥

(சு-ம்.)

சேதனத்தன்மையில்லாமையால்.

---

* கக. செய்தகர்மத்தின் பலம் நசித்தல் கிருதவிநாசம்.

(வி-ம்.)

விவாதத்திற்கு விஷயமான பிராணவாயுவாகிய பிராணமயம் ஆத்மா வன்று, ஜடமாயிருத்தலால், கடமுதலியவற்றைப்போல என்பது பொருள்.

கூ. மனோமயகோசத்தின் சொரூபமும் அநாத்மத்தன்மையும்.

[க௮0] अहंतां ममतां देहे गेहादौ च करोति यः ।
कामाद्यवस्थया भ्रांतो नासावात्मा मनोमयः ॥ ६ ॥

(அ-கை.)

இப்போது மனோமயகோசத்தின் சொரூபத்தைக் காட்டுதலோடு அதன் அநாத்மத்தன்மையினையுங் காட்டுகின்றார்:—

देहे अहंतां गेहादौ ममतां च यः करोति कामाद्यवस्थया भ्रांतः मनोमयः। असौ आत्मा न ॥

(சு-ம்.)

எது தேகத்தில் அகந்தையையும் மனைமுதலியவற்றில் மமதையையும் செய்கின்றதோ, எது காமமுதலிய அவஸ்தைகளால் விகாரியா யிருக்கின்றதோ, அது மனோமயமாம். அது ஆத்மா வன்று.

(வி-ம்.)

தேகத்தில் யானெனுந்தன்மைவடிவ அகந்தையையும், வீடுமுதலியவற்றில் "இஃது எனது, இஃது எனது" என்னும் அபிமானவடிவ மமதையையும் எது செய்கின்றதோ அம்மனம் மனோமயகோசமாம். அம்மனோமயகோசம் ஆத்மா வன்று. ஏனெனின், காமக்குரோதமுதலியவிருத்திகளையுடையதாயிருத்தலால் நியமமில்லாத சுபாவமுடையதா யிருத்தலி னென்பது பொருள். இங்கே இது அநுமானமாம்:—மனோமயம் ஆத்மா வன்று, * கஉ. விகாரியாயிருத்தலால், * கஙு. தேகத்தைப்போல என்பது தாற்பரியம். (சு)

ச. விஞ்ஞானமயகோசத்தின் சொரூபமும் அநாத்மத்தன்மையும்.

[க௮க] लीना सुप्तौ वपुर्बोधे व्याप्नुयादानखाग्रगा ।
चिच्छायोपेतधीर्नात्मा विज्ञानमयशब्दभाक् ॥ ७ ॥

---

* கஉ. முன் அவஸ்தை(விருத்தி)யை விட்டு வேறு அவஸ்தையைக் கிரகிப்பதாயிருத்தலால் விகாரி.

* கஙு. எப்படித் தேகம் பாலியமுதலிய அவஸ்தையுடையதாய் விகாரியாயிருத்தலால் ஆத்மா வாகாதோ அதுபோல இம்மனமுமாம்.

(அ-கை.)

இப்போது கர்த்தா வென்னுஞ் சத்தத்திற்கு வாச்சியார்த்தமாகிய விஞ்ஞானமயகோசத்தின் சொரூபத்தைக் காட்டுகின்றவராய் அதன் அநாத்மத்தன்மையைக் காட்டுகின்றார்:—

चिच्छायोपेतधीः सुप्तौ लिना बोधे आनखाग्रगा वपुः व्याप्नुयात् विज्ञानमय-शब्दभाक् । आत्मा न ॥

(சு-ம்.)

சேதனத்தின் சாயையோடுகூடிய புத்தி சுழுத்தியில் ஒடுங்கியதாய் ஜாக்கிரத்தில் நகநுனிவரையிலும் தேகத்தை வியாபிக்கின்றது. அந்தப் புத்தி விஞ்ஞானமய மென்னும் சத்தத்திற்கு வாச்சியமாம். அதுவும் ஆத்மாவன்று.

(வி-ம்.)

சேதனத்தின் பிரதிபிம்பவடிவ சிதாபாஸனோடுகூடிய புத்தி சுழுத்தியில் ஒடுங்கியிருந்து ஜாக்கிரத்தில் நகம்வரையிலிருப்பதாய்ச் சரீரத்தை வியாபித்திருக்கின்றது. அந்தப் புத்தி விஞ்ஞானமய சப்தத்தினால் சொல்லப்படுகின்றது. இவ்விஞ்ஞானமயகோசமும் ஆத்மா வன்று, விலய(ஒடுக்க) முதலிய அவஸ்தைகளையுடையதா யிருந்தாலால், கடமுதலியவற்றைப் போல என்பது பொருள். (எ)

ரு. மனோமய விஞ்ஞானமயங்களின் பேதம்.

[கஅஉ] कर्तृत्वकरणत्वाभ्यां विक्रियेतांतरिंद्रियम् ।
विज्ञानमनसी अंतर्बहिश्चैते परस्परम् ॥ ८ ॥

(அ-கை.)

அப்படியானால் மனதிற்கும் புத்திக்கும் அந்தக்கரணத்தன்மையின் அபேதமிருத்தலால் ஒரே அந்தக்கரணத்தில் மனோமயம் விஞ்ஞானமயமென்ன இரண்டு கற்பனைகள் பொருந்தா வென்றாசங்கித்து, புத்திக்கும் மனதிற்கும் கிரமமாகக் கிரியைக்கு ஆசிரயமாகுந்தன்மையாகிய கர்த்திருத்துவத்தினாலும், கிரியைக்குச் சாதனமாந்தன்மையாகிய கரண தன்மையாலும் பேதமிருத்தலால் *கச. ஒரே அந்தக்கரணத்தில் மனோமயமுதலிய பேதங்கள் பொருந்து மென்று கூறுகின்றார்:—

---

* கச. எப்படி ஒரே பிராஹ்மணன் பாடஞ்செய்தலாகிய கிரியையால் பாடகனென்றும், சமயல் செய்யுங்கிரியையால் சமயற்காரனென்றும் சொல்லப்படுகின்றானோ, அதுபோல ஒரே அந்தக்கரணம் கர்த்திருத்தன்மையால் புத்தி என்றும், கரணத்தன்மையால் மன மென்றும் சொல்லப்படுகின்றது.

अन्तरिंद्रियम् कर्तृत्वकरणत्वाभ्यां विक्रियेत एते विज्ञानमनसी। एते च परस्परं अंतः बहिः ॥

(சு-ம்.)

உள்ளிந்திரிய மென்னும் அந்தக்கரணம் கர்த்திருத்தன்மை கரணத் தன்மைகளால் விகாரத்தை யடைகின்றது. இந்தக் கர்த்தா கரண மென்னு மிரண்டும் விஞ்ஞான மென்றும் மன மென்றும் சொல்லப்படும். இந்த விஞ்ஞானம் மனம் என்னு மிரண்டும் ஒன்றற்கொன்று உள்ளும் வெளியு மாய் இருக்கின்றன.

(வி-ம்.)

அந்தரிந்திரியமாகிய அந்தக்கரணம் கர்த்தாவடிவமாயும் கரணவடிவ மாயும் விகாரமாகிய பரிணாமத்தை யடைகின்ற தென்பது பொருள்.

இந்தக் கர்த்தாவும் கரணமும் விஞ்ஞான மென்னும் புத்தியும் மனமு மாம் அதாவது விஞ்ஞானம் மன மென்னும் சப்தங்களுக்கு வாச்சியமான நிச்சயரூப சம்சயரூப விருத்திக ளாகின்றன. இந்தப் புத்தியும் மனமும் *கஞ.ஒன்றற்கொன்று உள்ளும் வெளியுமா யிருக்கின்றன. ஆகையால் ஒரே அந்தக்கரணத்தில் இரண்டுகோசங்களின் கற்பனை பொருந்து மென்பது பொருள். (அ)

க. ஆநந்தமயகோசத்தின் சொரூபம்.

[கஅ] काचिदंतर्मुखा वृत्तिरानंदप्रतिबिंबभाक्।
पुण्यभोगे भोगशांतौ निद्रारूपेण लीयते ॥ ९ ॥

(அ-கை.)

இப்போது போக்தா வென்னும் சத்தத்தின் வாச்யார்த்தமாகிய ஆநந் மயகோசத்திற்கு அநாத்மத்தன்மையைக் காட்டுதற்கு அந்த ஆநந்தமயத் தின் சொருபத்தைக் காட்டுகின்றார்:—

पुण्यभोगे काचित् वृत्तिः अंतर्मुखा आनंदप्रतिबिंबभाक्। भोगशांतौ निद्रारूपेण लीयते ॥

(சு-ம்.)

புண்ணியத்தை அநுபவிக்குங்காலத்து ஓர் விருத்தி அந்தர்முகமாய் ஆநந்தத்தின் பிரதிபிம்பத்தை யடைகின்றது. போகம் நசித்தகாலத்து நித்திரைவடிவமாக ஒடுங்குகின்றது.

---

* கஞ. வெளிவிருத்தி மனமாம். அதனையபேக்ஷித்துப் புத்தி உள்ளாம். உள்வி ருத்தி புத்தியாம். அதனையபேக்ஷித்து மனம் வெளியாம்.

(வி-ம்)

புண்ணியகர்மத்தின் சுகவடிவ பலத்தை அநுபவிக்குங்காலத்து ஒரு கால் புத்திவிருத்தி அந்தர்முக (ஏகாக்கிரக)மாய் ஆத்மசொரூபமாகிற ஆநந்தத்தின் பிரதிபிம்ப(ஆபாச)த்தை யடைகின்றது. அதே விருத்தி புண்ணிய கர்மபல (சுக) அநுபவம் நீங்கியகாலத்து நித்திரைவடிவமாக ஒடுங்குகின்றது (சம்ஸ்காரவடிவமாகின்றது). அவ்விருத்தி ஆநந்தமயகோச மென்பது அபிப்பிராயம். (௬)

எ. ஆநந்தமயகோசத்தின் அநாத்மத்தன்மை.

[கஅ௪] कादाचित्कत्वतो नात्मा स्यादानंदमयोऽप्ययं ।
बिंबभूतो य आनंद आत्मासौ सर्वदा स्थितेः ॥ १० ॥

(அ-கை.)

அந்த ஆநந்தமயத்தின் அநாத்மத்தன்மையைக் கூறுகின்றார்:—

अयम् आनंदमयः अपि कादाचित्कत्वतः आत्मा न स्यात् ॥

(சு-ம்.)

ஒவ்வொரு காலத்திலிருப்பதா யிருத்தலால் ஆநந்தமயமும் ஆத்மாவன்று.

(வி-ம்.)

இந்த ஆநந்தமயமும் புண்ணியத்தை யநுபவிக்குங்காலம் அல்லது நித்திரைக்கால மென்னும் ஒவ்வோர்காலத்தி லிருப்பதாயிருத்தலால் ஆத்மாவன்று, மேகமுதலியபதார்த்தங்களைப்போல என்பது பொருள்.

௨. ஆத்மாவின் சொரூபம் கஅ௪-௨௪௦.

க. ஆத்மாவின் ஆநந்தரூபத்துவம் கஅ௪.

(அ-கை.)

அப்படியானல் இருப்பனவாகிய ஆநந்தமயமுதலிய பஞ்சகோசங்கள் எல்லாவற்றின் ஆத்மத்தன்மையையும் நிஷேதிக்குமிடத்து நிராத்மத்தன்மையாகிய சூனியத்துவம் உண்டாகின்றதென்றுசங்கித்துக் கூறுகின்றார்:—

बिंबभूतः यः आनंदः असौ आत्मा ॥

(சு-ம்.)

எது பிம்பபூதமாகிய ஆநந்தமோ அது ஆத்மாவாம்.

(வி-ம்.)

புத்திமுதலியவற்றில் பிரதிபிம்பமாயுள்ள பிரியமுதலிய சத்தங்களுக்கு வாச்சியமாயுள்ள ஆநந்தமய மெதுவோ அதற்குப் பிம்பபூதமாயுள்ள அதாவது காரணவடிவமாயுள்ள ஆநந்த மென்னு மிதுவே ஆத்மாவாம்.

(அ-கை.)

அப்படியானல் எதனல் அந்தப் பிம்பமாகிய ஆநந்தம் ஆத்மாவாம் என்பதனைக் கூறுகின்றார் :—

सर्वदा स्थितेः ॥

(சு-ம்.)

என்றும் இருத்தலால்.

(வி-ம்.)

எக்காலத்து மிருத்தலால் அதாவது நித்தியமாயிருத்தலால் அந்தப் பிம்பமாகிய ஆநந்தம் ஆத்மாவாம் என்பது பொருள். இங்கே இது அநுமானமாம் :—விவாதத்திற்கு விஷயமாகிய ஆநந்தம் ஆத்மாவாகத்தக்கதாம்; நித்தியமாயிருத்தலால்; எது ஆத்மாவன்றோ அது நித்தியமு மன்று; தேகாதிகளைப்போல. ஆகாயமுதலியன உற்பத்தியுடையனவா யிருத்தலால் அநித்தியமாதலின் பிம்பமாகிய ஆநந்தத்திற்கு ஆத்மத்தன்மையைச் சாதித்தலில் யாதொரு நித்தியத்தன்மையாகிய ஏது சொல்லப்பட்டிருக்கின்றதோ அதற்கு வியபிசாரமுடைமை அதாவது ஆகாயமுதலியவற்றினு மிருத்தற்றன்மையாகிய அதிவியாப்தியில்லை யென்பது தாற்பரியம். (க0)

உ. ஆத்மா ஞானவடிவமாமாறு கஅ௫-கக௩.

க. ஆத்மாவின் இன்மையில் வாதியின் சங்கை.

[கஅ௫] ननु देहमुपक्रम्य निद्रानंदांतवस्तुषु ।
मा भूदात्मत्वमन्यस्तु न कश्चिदनुभूयते ॥ ११ ॥

(அ-கை.)

மூலத்தில் வாதி சங்கிக்கின்றான் :—

ननु देहम् उपक्रम्य निद्रानंदांतवस्तुषु आत्मत्वं माभूत् । अन्यः तु कश्चित् न अनुभूयते ॥

(சு-ம்.)

அப்படியானல் அந்நமயமான தேகமுதற்கொண்டு ஆநந்தமயம் வரையிலுள்ள பதார்த்தங்களில் ஆத்மத்தன்மை இருக்கவேண்டாம். ஆனல்

அப்பஞ்சகோசங்களுக்கு அந்நியமாகிய ஆத்மா எதுவும் அநுபவிக்கப்படவில்லையே?

(வி-ம்.)

அந்நமயமுதல் ஆநந்தமயம்வரையிலுள்ள கோசங்களுக்குச் * கசு. சொல்லப்பட்ட ஏதுக்களால் ஆத்மத்தன்மை பொருந்தாதாயின் பொருந்தற்க. ஆனால் இக்கோசங்களுக்கு வேறாக ஆத்மா தோற்றாமையால் சம்பவியாது. (கக)

உ. சுலோகம் கஅ௱-ல் கூறிய சங்கையைச் சித்தாந்தி பரிகரித்தல்.

[கஅசு] बाढं निद्रादयः सर्वेऽनुभूयंते न चेतरः ।
तथाऽप्येतेऽनुभूयंते येन तं को निवारयेत् ॥ १२ ॥

(அ-கை.)

இப்போது வாதியின் சங்கையை அநுவதித்தலோடு சித்தாந்தி பரிகாரஞ்செய்கின்றார்:—

निद्रादयः सर्वे अनुभूयंते च इतरः न बाढम् ॥

(சு-ம்.)

ஆநந்தமயமுதலிய எல்லாக் கோசங்களும் அநுபவிக்கப்படுகின்றன, இவற்றிற்கு வேறாக ஆத்மா அநுபவிக்கப்படுவதில்லை யென்று நீ கூறியது சத்தியம்.

(வி-ம்.)

இங்கே மூலசுலோகத்தில் உள்ள நித்திரை என்னும் பதத்தால் நித்திரையிலுள்ள ஆநந்தம் இலக்ஷணையினலறியப்படுகின்றது. ஆகையால் நித்திரையாகிய ஆநந்தமயமுதல் தேகமாகிய அந்நமயம்வரையிலுள்ள பஞ்சகோசங்களும் அநுபவிக்கப்படுகின்றன அதாவது வேறாயறியப்படுகின்றன என்று வாதியே! நீ சொன்னது * கஎ சத்தியம்.

(அ-கை.)

அப்போது அக்கோசங்களுக்கு வேறாக ஆத்மா எப்படி அநுபவிக்கப்படுகின்றது? எனக் கூறுகின்றார்:—

---

* கசு. கஎஎ-வது, சுலோகத்தில் "காரியமாதலால்", கஎக-வது சுலோகத்தில் "ஜடமாயிருத்தலால்" கஅ0-வது சுலோகத்தில் "விகாரியா யிருத்தலால்", கஅக-வது சுலோகத்தில் "ஒடுக்கமுதலிய அவஸ்தைகளையுடையதா யிருத்தலால்", கஅ௨-வது சுலோகத்தில் "ஒவ்வோர்காலத்தி லிருப்பதா யிருத்தலால்" என்று சொல்லப்பட்ட இவ்வேதுக்களால் கிரமமாக அந்நமயமுதலிய ஒவ்வொன்றற்கும் ஆத்மத்தன்மை பொருந்தாது.

* கஎ. எங்கே பூர்வபக்ஷம் திடமாகின்றதோ அங்கே சத்தியம் (மெய்யே) என்று சொல்லப்படுகின்றது.

तथापि येन एते अनुभूयंते तं कः निवारयेत् ॥

(சு-ம்)

என்றாலும் எந்த அநுபவத்தால் பஞ்சகோசங்கள் அநுபவிக்கப்படு கின்றனவோ அவ்வநுபவத்தை எவன் நிஷேதஞ்செய்வான்? ஒருவனும் நிஷேதிக்கிலன்.

(வி-ம்.)

பஞ்சகோசங்களுக்கு வேறாக எதுவும் தோற்றாதிருக்கினும் எதன் பலத்தால் அந்த ஆநந்தமயமுதலிய கோசங்களின் தோற்ற முண்டாகின்ற தோ அவ்வநுபவம் உன்னால் எப்படி அங்கீகரிக்கப்படுகிறதில்லை? அவ்வநு பவவடிவ ஆத்மா அங்கீகரிக்கத்தக்கதா மென்பது பொருள். (௧உ)

௩. ஆத்மா ஞானத்திற்கு விஷயமாகாமை.

[௧௮எ] स्वयमेवानुभूतित्वाद्विद्यते नानुभाव्यता ।
ज्ञातृज्ञानांतराभावादज्ञेयो न त्वसत्तया ॥ १३ ॥

(அ-கை.)

அப்படியானால் சொல்லப்பட்ட கோசங்களுக்கு அந்நியமாக ஆத்மா இருக்குமாயின் அநுபவிக்கப்படவேண்டும்; அநுபவிக்கப்படாமையால் இல்லை என்றாசங்கித்துக் கூறுகின்றார்:—

स्वयम् एव अनुभूतित्वात् अनुभाव्यता न विद्यते ॥

(சு-ம்.)

ஆத்மா தானே அநுபவ மென்னும் நித்தியஞானவடிவமா யிருத்தலால் அதற்கு அநுபவிக்கப்படுந்தன்மை இல்லை.

(வி-ம்.)

ஆநந்தமயமுதலியவற்றின் சாக்ஷியாகிய ஆத்மா அநுபவவடிவமா யிருத் தலாற்றானே அந்த ஆத்மாவிற்கு அநுபவிக்கப்படுந்தன்மையாகிய அநுப வத்திற்கு விஷயமாத லில்லை.

(அ-கை.)

அப்படியானால் ஆத்மா அநுபவவடிவமாயிருந்தும் ஏன் அநுபவத் திற்கு விஷயமாகவில்லை யென்றாசங்கித்துக் கூறுகின்றார்:—

ज्ञातृज्ञानांतराभावात् अज्ञेयः ॥

(சு-ம்.)

வேறு ஞாதிருஞானங்க ளில்லாமையால் ஆத்மா அறியத்தகாததாம்.

(வி-ம்.)

ஆத்மாவிற்கு அந்நியமாக ஞாதாவாகிய அறிபவனும் ஞானமாகிய அறிவும் இல்லாமையால் ஆத்மா ஞானத்திற்கு விஷயமாகாததாம்.

(அ-கை.)

அப்படியானல் ஆத்மா தனக்கு அந்நியமாகிய ஞாதிருஞானங்க ளில்லாமையால் அறியப்படுகிறதில்லையா? அல்லது தானே இல்லாமையால் அறியப்படுகிறதில்லையா? இங்கே இவ்விரண்டு பக்ஷங்களில் ஒரு பக்ஷத்தை நிச்சயித்தல்வடிவ * கஅ. நிகமனத்தில் எந்த யுக்தி காரணமெனக் கூறுகின்றார்:—

असत्तया तु न ॥

(சு-ம்.)

இல்லாமையால் ஆத்மா ஞானத்திற்கு விஷயமாகாத தன்று.

(வி-ம்.)

ஆநந்தமயமுதலியவற்றிற்குச் சாக்ஷியாயிருக்கும் ஏதுவால் ஆத்மாவின் அசத்துத்தன்மை முன் கஅகூ-வது சுலோகத்திற்றுனே நிஷேதிக்கப்பட்டிருத்தலால் ஆத்மாவிற்கு அசத்துத்தன்மை பொருந்தாது. ஆகையால் ஆத்மா தனதின்மையினுலேயே ஞானத்திற்கு விஷயமாகாத தன்று. ஆனல் தானிருந்தும் தனக்கு வேருக ஞாதிருஞானங்க ளில்லாமையால் * கக. ஞானத்திற்கு விஷயமாகாததாம் (சொப்பிரகாசவடிவமாம்) என்பது தாற்பரியம். (கஙு)

* கஅ. சித்தாந்தத்தி(நிச்சயித்தபொருளி)ன் வாக்கியம் நிகமனமாம். நியாயசாஸ்திரத்தில் பிரதிஞ்ஞை, ஏது, உதாரணம், உபநயம், நிகமனம் என்று கூறியிருக்கின்றனர். அவற்றுள், கடைசியானது நிகமனமாம். "ஆகையால் அப்படியாம்" என்பது நிகமனத்தின் வடிவமாம்.

* கக. ஞானத்திற்கு விஷயமாகாதவஸ்து மூன்றுவிதமாம். ஒன்று அசத்து (மலடிமைந்தன்முதலியன); இரண்டாவது ஒவ்வொருகாலத்து விருத்திசம்பந்தமில்லாதனவாய் அஞ்ஞானசம்பந்தமுடையவை(கடம்முதலியன); மூன்ருவது சொப்பிரகாசம். அவற்றுள், ஆத்மா அசத்து மன்று; ஒவ்வொருகாலத்து விருத்திசம்பந்தமின்றியதாய் அஞ்ஞானசம்பந்தமுடையது மன்று. ஆனல் சத்தும் என்றும் விருத்தி அஞ்ஞானங்களது வாஸ்தவ சம்பந்தமில்லாததுமாம். ஆகையால் வந்தியாபுத்திரன் முதலியவற்றைப்போலும் கடமுதலியவற்றைப்போலும் ஞானத்திற்கு விஷயமாகாத தன்று. ஆனல் சொப்பிரகாசவடிவமா யிருத்தலால் ஞானத்திற்கு விஷயமாகாததாம்.

௪. ஆத்மா ஞானத்திற்கு விஷயமாகா தென்பதில் திருஷ்டாந்தம்.

[௧௮௮] माधुर्यादिस्वभावानामन्यत्र स्वगुणार्पिणाम् ।
स्वस्मिंस्तदर्पणापेक्षा नो न चास्त्यन्यदर्पकम् ॥ १४ ॥

(அ-கை.)

அநுபவவடிவமாகிய ஆத்மாவிற்கு அநுபவமாகிய ஞானத்திற்கு விஷயமாகுந்தன்மை இல்லை என்பதில் திருஷ்டாந்தங் கூறுகின்றார் :—

अन्यत्र स्वगुणार्पिणां माधुर्यादिस्वभावानां स्वस्मिन् तदर्पणापेक्षा नो च अन्यत् अर्पकं न अस्ति ॥

(சு-ம்)

மற்றவற்றில் தனது தித்திப்புமுதலியகுணங்களை அர்ப்பணஞ் செய்யும் இனிப்புமுதலிய சுபாவமுடைய வெல்லமுதலியபதார்த்தங்களுக்குத் தம்மிடத்து அம்மதுரத்தைத் தரப்பெறும் அபேக்ஷையில்லை. மதுரத்தைத் தருவதும் வேறில்லை.

(வி-ம்.)

இங்கே முதலியவென்னுஞ் சத்தத்தால் புளிப்புமுதலியவைகளும் கொள்ளப்படும். தித்திப்புமுதலியசுபாவங்களை அதாவது கூடவே உண்டாகிய தர்மவிசேஷங்களையுடைய வெல்லமுதலியவைகள் தமது சம்பந்தமுடைய கடலை கோதுமை அரிசிமுதலிய பதார்த்தங்களில் அதாவது அவற்றின் மாமுதலியவற்றில் தமது தித்திப்பு புளிப்புமுதலியகுணங்களைத் தருகின்றன. அவ்வெல்லமுதலியவற்றிற்குத் தமது சொரூபத்தில் அந்தத் தித்திப்புமுதலிய குணங்களைச் சம்பாதிக்கும் இச்சை அதாவது "நம்மிடத்து மதுரமுதலியவைகள் வேறொன்றால் சம்பாதிக்கத்தக்கனவாம்" என்னும் வடிவினதாகிய இச்சை இல்லை; அல்லது வெல்லமுதலியவற்றிற்குத் தித்திப்புமுதலியவற்றைத் தருவது வேறில்லை யென்பது பொருள். (௧௪)

௫. பலித்த பொருள்.

[௧௮௯] अर्पकांतरराहित्येऽप्यस्त्येषां तत्स्वभावता ।
मा भूत्तथाऽनुभाव्यत्वं बोधात्मा तु न हीयते ॥ १५ ॥

(அ-கை)

திருஷ்டாந்தத்தோடு சித்தித்த அர்த்தத்தைக் கூறுகின்றார் :—

अर्पकांतरराहित्ये अपि एषां तत्स्वभावता अस्ति तथा अनुभाव्यत्वं मा भूत् बोधात्मा तु न हीयते ॥

(சு-ம்)

எப்படி மதுரத்தைத்தருவது வேறில்லாவிடினும், இவ்வெல்லமுதலிய வற்றிற்கு அம்மதுரமுதலியவடிவ சுபாவமுடைமை யிருக்கின்றதோ, அப்படியே ஆத்மாவிற்கு அநுபவிக்கப்படுந்தன்மை வேண்டாம். ஆத்மாவின் அநுபவவடிவத்துவம் நாசமாகிறதில்லை.

(வி-ம்.)

வெல்லமுதலியவற்றில் தித்திப்புமுதலியகுணங்களைத் தரும் வேறு வஸ்து இல்லாதிருந்தும் இந்த வெல்லமுதலியவற்றிற்குத் தித்திப்புமுதலிய சுபாவமுடைமை யிருத்தல்போல ஆத்மாவிற்கும் அநுபவ(ஞான)த்திற்கு விஷயமாந்தன்மை யிருக்கவேண்டாம். ஆனால் ஆத்மாவின் அநுபவ வடிவத்துவம் இருக்கவே இருக்கின்றது என்பது பொருள். (கரு)

சு. இப்பிரகரணத்தின் சுலோகம் கஅஎ-கஅகூ-ல் கூறிய அர்த்தத்தில் சுருதி. பிரமாணமாதல்.

[ககூ0] स्वयंज्योतिर्भवत्येष पुरोऽस्माद्भासतेऽखिलात् ।
तमेव भांन्तमन्वेति तद्भासा भास्यते जगत् ॥ १६ ॥

(அ-கை.)

* உ0. முற்கூறிய அர்த்தத்தில் சுருதியாகிய பிரமாணத்தைக் கூறுகின்றார் :—

एषः स्वयंज्योतिः भवति अस्मात् अखिलात् पुरः भासते तं एव भांतं अन्वेति तद्भासा जगत् भास्यते ॥

(சு-ம்.)

இப்புருஷன் சுவயம்பிரகாசம். இந்த எல்லா ஜகத்திற்கும் முன் விளங்குகின்றது. அதே ஆத்மாவின் பான(விளக்க)த்தைப் பின்பற்றி எல்லாம் விளங்குகின்றன. அந்த ஆத்மாவினது பிரகாசத்தால் எல்லாப் பிரபஞ்சமும் அறியப்படுகின்றன.

(வி-ம்.)

"अत्रायं पुरुषः स्वयंज्यातिर्भवति ।" अस्मात् सर्वस्मात् पुरतः सुविभाति । "तमेव भांतमनुभाति सर्वं तस्य भासा सर्वमिदं विभाति ॥" இங்கே

* உ0. கஅஎ முதல் கஅகூ சுலோகம் வரையில் சொல்லப்பட்ட அநுபவரூபமாகிய ஆத்மாவின் அறியப்படாமை (சொப்பிரகாசத்தன்மை)யாகிய அர்த்தத்தில்.

* உக. சொப்பனவஸ்தையில் இந்தப் புருஷன் சுவயஞ்சோதி யென்னும் சொப்பிரகாசம்" "இத்தோற்றப்படுகின்ற இவ்வெல்லாஜகத்திற்கும் முன் பிரகாசிக்கின்றது" "அந்த ஆத்மாவினது தோற்றத்திற்குப் பிறகு சகலப் பிரபஞ்சமும் தோற்றுகின்றன; அந்த ஆத்மாவின் பிரகாசத்தால் இவை யாவும் விளங்குகின்றன" என்றல் முதலிய சுருதிகள் ஆத்மாவின் சொப் பிரகாசத்தன்மையை அறிவிக்கின்றன என்பது பொருள். (கசு)

[ககஎ] येनेदं जानते सर्वं तत्केनान्येन जानताम् ।
विज्ञातारं केन विंद्याच्छक्तं वेद्ये तु साधनम् ॥ १७ ॥

(அ-கை.)

"येनेदं सर्वं विजानाति तं केन विजानीयाद्विज्ञातारमरे केन विजानीयात्
எந்த ஆத்மாவினால் புருஷன் இவ்வெல்லாவற்றையும் அறிகின்றானோ அவ்வாத்மாவை எந்த வேறு ஜடத்தினால் புருஷன் அறிவான்? மைத்திரேயி! எல்லாவற்றையும் அறிபவனை எந்தத் திருசியவடிவத்தாலறிவது?"என்னுஞ் சுருதிவாக்கியத்தை அர்த்தத்தாற் கூறுகின்றார்:—

येन इदं सर्वं जानते तत् केन अन्येन जानताम् ॥

(சு-ம்)

எதனால் இவ்வெல்லாவற்றையும் அறிகிறானோ அதனை வேறு எதனால் அறியக்கூடும்?

(வி-ம்.)

எந்தச் சாக்ஷிசைதன்யமாகிய ஆத்மாவினால் இவ்வெல்லாத்திருசியங்களையும் ஜீவன் அறிகின்றானோ அந்தச் சாக்ஷியாகிய ஆத்மாவை வேறு எந்தச்

---

* உக. இப்படி ஜநகராஜனை நோக்கி யாஞ்ஞயவல்கியமுனிவர் ஸ்ரீபிருகதாரணியகத்தில் ஜாக்கிரத்தில் தோற்றுகின்ற சூரியன், சந்திரன், நக்ஷத்திரம், மின்னல், அக்கினி, வாக்கு என்னும் சு ஜோதிகளை நிரூபித்துச் சொப்பனத்தில் சுவயஞ்சோதியா(சொப்பிரகாசமா)கிய ஆத்மஜோதியை உபதேசித்திருக்கின்றார். மூன்றவஸ்தைகளிலும் சுயஞ்சோதியாகிய ஆத்மா விருக்கினும் ஜாக்கிரத்தில் சூரியன்முதலிய மற்ற ஜோதிகளால் புருஷனுடைய புத்தி மறைக்கப்படுகின்றது. அதில் சுயஞ்சோதியாகிய ஆத்மாவின் ஞானம் புருஷனுக்கு உண்டாகிறதில்லை. சுழுத்தியில் அஞ்ஞானத்தின் அநுபவவடிவ சாமானிய சேதனமாகிய சுவயம்பிரகாசவஸ்து இருக்கின்றது. அதன் ஞானம் அநுமானகர்ப்பித சூக்ஷ்மபுத்தியுடையவர்களுக் கன்றி மந்தபுத்தியுடைய புருஷர்களுக்கு வருத்தமின்றி யுண்டாகிறதில்லை. அன்றியும் சொப்பனவஸ்தையின் சூரியாதிஜோதிகளால் புத்தி தடுக்கப்படுகிறதில்லை. சொப்பனபதார்த்தங்களில் அநுபவமும் ஸ்பஷ்டமாம். இவ்வபிப்பிராயத்தால் இச்சுருதியிலுள்ள இங்கே என்னும் பதத்திற்குச் சொப்பனவஸ்தை கொள்ளப்படுகின்றது.

சாக்ஷியமாகிய திருசியஜடத்தால் புருஷன் அறிவன்? இங்கே புருஷன் என்னும் பதம் சொல்லெச்சம்.

(அ-கை.)

இதே வாக்கியத்தின் தாற்பரியத்தைக் கூறுகின்றார் :—

विज्ञातारं केन विंद्यात् ॥

(சு-ம்.)

எல்லாவற்றையும் அறிகின்றவனை எதனால் அறியக்கூடும்?

(வி-ம்.)

திருசியமாத்திரத்தை அறிகின்றவனைப் புருஷன் எந்தத்திருசியமாகிய சாதனத்தால் அறிவன்? எதனாலு மறியான் என்பது பொருள்.

(அ-கை.)

அப்படியானால் மனமாகிய சாதனத்தா லிவ்வாத்மாவைப் புருஷன் அறிவனே என்று சங்கித்துக் கூறுகின்றார் :—

साधनं तु वेद्ये शक्तम् ॥

(சு-ம்)

சாதனமோ திருசியபதார்த்தத்தில் சாமர்த்தியமுடையதாம்.

(வி-ம்.)

ஞானத்திற்குச் சாதனமாகிய மனமோ ஞானத்திற்கு விஷயமாகும் பதார்த்தங்களில் சாமர்த்தியமுடையதாம். ஆனால் * உஉ. ஞாதாவாகிய ஆத்மாவினிடத்தில் சாமர்த்தியமுடையதன்று; "नैव वाचा न मनसा வாக்கினாலும் மனதினாலும் அறியப்படுவதில்லை" என்னும் சுருதியால். அவ்வாத்மாவினால் அறியப்படுமாயினும், * உ௩. ஒன்றற்கே கருமமாகிய விஷயத்தன்மை, கர்த்திருத்தன்மையாகிய ஞாதிருத்தன்மை யென்னும் விரோதமுண்டாதலால் ஆத்மா அநுபவத்திற்கு விஷயமாகாது. ஆகையால் ஆத்மா சொப்பிரகாசமாம். (௧௭)

---

* உஉ. இங்கே புத்தி யென்னு முபாதியினால் ஆத்மாவை ஞாதா (ஞானத்திற்கு ஆசிரயம்) அதாவது விருத்திஞானமாகிய கிரியைக்குக் கர்த்தா வென்று கூறியதாம். வாஸ்தவமாகவோ நிரபேக்ஷ (அபேக்ஷையின்றிய) ஞானவடிவமே ஆத்மாவாம்.

* உ௩. குயவனுக்குத் தானே தனக்குக் கர்மமும் கர்த்தாவுமாவ னென்பதில் கர்மகர்த்திருத்தன்மையாகிய விரோதமிருத்தல்போல இங்கும் (ஆத்மாவிற்குத் தன்னையே ஞாதாவாகக் கொள்ளுமிடத்தும்) கர்மகர்த்திருத்தன்மையாகிய விரோத முண்டாம்.

[கக௨] स वेत्ति वेद्यं तत्सर्वं नान्यस्तस्यास्ति वेदिता ।
विदिताविदिताभ्यां तत्पृथग्बोधस्वरूपकम् ॥ १८ ॥

(அ-கை.)

"स वेत्ति वेद्यं न च तस्यास्ति वेत्ता ।" "अन्यदेव तद्विदिताविदितादपि" "அவ்வாத்மா விஷயத்தை யறிகின்றது அவ்வாத்மாவை யறிவதில்லை" "அந்தப் பிரத்தியக் பிரஹ்மம் அறியப்பட்டதினும் வேறும் அறியப்படாததினும் வேறும்" என்னும் இவ்விரண்டு சுருதிவாக்கியங்களும் ஆத்மாவின் சொப்பிரகாசத் தன்மையிற் பிரமாணங்களாம் என்று கருதியவராய் அவ்விரண்டு வாக்கியங் களையும் அர்த்தத்தாற் கூறுகின்றார் :—

सः तत् सर्वं वेद्यं वेत्ति तस्य वेदिता अन्यः न अस्ति तत् बोधस्वरूपकं विदिताऽविदिताभ्याम् पृथक् ॥

(சு-ம்.)

அது அவ்வெல்லாவிஷயங்களையும் அறிகிறது. அதை அறிவது வேறு இல்லை. அந்த ஞானவடிவமாகிய பிரஹ்மம் அறியப்படுபவை அறி யப்படாதவைகளினும் வேறாம்.

(வி-ம்.)

அவ்வாத்மா யாது யாது விஷயமோ அவையெல்லாவற்றையும் அறி கின்றது. அந்த ஆத்மாவை அறிவது வேறில்லை. அந்த ஞானசொரூப மாகிய பிரத்தியக்கிற்கு வேறாகாத பிரஹ்மம் அறியப்பட்ட அதாவது ஞானத்தினால் விஷயஞ்செய்யப்பட்ட வியாகிருதவடிவ வஸ்து, அறியப்ப டாத அதாவது அறியப்பட்டதினும் வேறான வியாகிருதவடிவ ஜகத்திற் குப் பீஜமாகிய அவ்வியாகிருதவஸ்து வென்னும் இவ்விரண்டற்கும் வில க்ஷணமாம் ; ஞானசொரூபமா யிருத்தலினாலே யென்பது பொருள். (க௮)

எ. அநுபவவடிவ ஆத்மாவில் அநுபவமில்லை யென்னும் சங்கைக்குச் சமாதானம்.

[கக௩] बोधेऽप्यनुभवो यस्य न कथंचन जायते ।
तं कथं बोधयेच्छास्त्रं लोष्टं नरसमाकृतिम् ॥ १९ ॥

(அ-கை.)

அப்படியானால் ஒவ்வோர்காலத்து ஞானத்திற்கு விஷயமாகும் காரிய வடிவ வஸ்துவென்னும் அறியப்பட்டதும் காரணவடிவ வஸ்துவென்னும்

அறியப்படாததும் ஆகிய இவ்விரண்டற்கும் வேருக ஞானம் அநுபவிக்கப் படவில்லையே என்ருசங்கித்து, அறியப்பட்ட வஸ்துவினை மற்ற அறியப் படாத வஸ்துவினின்றும் வேறுபிரித்தறிவிக்கும் விசேஷணமாகிய ஞானம் ஞானவடிவமாயிருத்தலால் அந்த அறியப்பட்டவஸ்துவின் விசேஷ ணமாகிய ஞானத்தின் அநுபவம் இல்லையாயின் அறியப்பட்டவஸ்துவின் அநுபவமும் இல்லை யென்னும் பிரசங்க முண்டாம். ஆகையால் ஞானத்தின் அநுபவம் அவசியம் அங்கீகரிக்கத்தக்கதா மென்று பரிகாசத்தோடு விடை கூறுகின்ருர்:—

यस्य बोधे अपि अनुभवः कथंचन न जायते तं नरसमाकृतिम् लोष्टं शास्त्रं कथं बोधयेत् ॥

(சு-ம்.)

எவனுக்கு ஞானத்திலும். எவ்விதத்தாலும் அநுபவம் உண்டாகவில் லையோ புருஷனைப்போன்றவடிவமுடைய மண்ணுங்கட்டியாகிய அவனுக் குச் சாஸ்திரமானது எப்படி அறிவுறுத்தும்?

(வி-ம்.)

எந்த அற்பபுத்தியுடைய மனிதனுகிய மந்தனுக்குக் கடமுதலியவற் றின் ஸ்புரணமாகிய சேதனசொரூபமான போதத்திலும் அநுபவம் எவ்வி தத்தாலு முண்டாகவில்லையோ, அந்த மனிதனைப்போன்றவடிவமுடைய மண் ணுங்கட்டிக்கு அதாவது மண்ணுங்கட்டிபோன்ற ஜடமாகிய மனிதனுக்குச் சாஸ்திரம் எப்படி அறிவிக்கும்? எவ்விதத்தாலு மறிவிக்கக்கூடியதாகாது என்பது பொருள். (கக)

[கக-அ] जिह्वा मेऽस्ति नवेत्युक्तिर्लज्जायै केवलं यथा ।
न बुध्यते मया बोधो बोद्धव्य इति तादृशी ॥ २० ॥

(அ-கை.)

என்ருல் ஞானம் அறியப்படவில்லை என்னும் வார்த்தையும் வியாகா தத்தோடுகூடியதாமெனத் திருஷ்டாந்தத்தோடு கூறுகின்ருர்:—

"मे जिह्वा अस्ति न वा" इति उक्तिः यथा केवलं लज्जायै । "मया बोधः न बुध्यते बोद्धव्यः" इति तादृशी ॥

(சு-ம்.)

"எனக்கு நாக்கு இருக்கிறதா? இல்லையா?" என்னும் வார்த்தை எப்படிக் கேவலம் வெட்கத்தின்பொருட்டாகுமோ, அதுபோலவே ஞானம்

என்னுல் அறியப்படவில்லை இப்போது அறியத்தக்கதாயிருக்கிறது என்னும் வாக்கியமும் அத்தன்மையதாம் அதாவது வெட்கத்தை யுண்டுபண்ணுவதேயாம்.

(வி-ம்.)

எனக்கு நாக்கிருக்கிறதா? இல்லையா? என்னும் ஓர் உன்மத்தபுருஷனது வார்த்தை கேவலம் வெட்கத்தை யுண்டுபண்ணுதற்பொருட்டேயல்லாது புத்தியுடைமையை அறிவித்தற்பொருட்டன்று; ஏனெனின், நாவின்றி "எனக்கு நாக்கிருக்கிறதா? இல்லையா?" என்று சொல்லுதல் பொருந்தாதாகையால். அதுபோலவே "என்னுல் கடமுதலியவற்றின் ஸ்புரணமாகிய *உச. ஞானம் அறியப்படுகிறதில்லை, இந்தக் காலத்திற்குப்பின் அறியக்கூடியதா" மென்னும் ஓர் மூடபுருஷனது வார்த்தையும் இப்படி வெட்கத்திற் கேதுவானதேயாம்; ஏனெனின், ஞானமின்றி "அந்தப் போதத்தை நான் அறியவில்லை" என்னும் வியவகாரம் சித்தியாதாகையால் என்பது பொருள். (உ0)

அ. பிரஹ்மத்தின் ஞானமாகிய விருத்தியைக் கூறுதல்.

[கசு] यस्मिन्यस्मिन्नस्ति लोके बोधस्तत्तदुपेक्षणे ।
यद्बोधमात्रं तद्ब्रह्मेत्येवं धीर्ब्रह्मनिश्चयः ॥ २१ ॥

(அ-கை.)

அப்படியானுல் இவ்வாறு அந்தக் கடமுதலியவற்றின் ஞான மிருக்குக. என்றுலும் பிரகிருத அதாவது இப்பிரகரணத்தின் ஆரம்பத்திற் சொல்லப்பட்ட பிரஹ்மத்தின் ஞானத்தில் என்ன வந்ததென் றுசங்கித்துக் கூறுகின்றார்:—

लोके यस्मिन् यस्मिन् बोधः अस्ति तत्तदुपेक्षणे यत् बोधमात्रं तत् ब्रह्म इति एवं धीः ब्रह्मनिश्चयः ॥

(சு-ம்.)

உலகத்தில் எதிலெதில் ஞானம் இருக்கின்றதோ அதையதை யநாதரஞ்செய்யுமிடத்து ஞானமாத்திரமா யிருப்பது எதுவோ அது பிரஹ்மம் என்னும் இப்படிப்பட்ட புத்தியாகிய ஞானம் பிரஹ்மநிச்சயமாம்.

---

* உச. ஞான மென்னுஞ் சத்தத்திற்கு முக்கியார்த்தம் சேதனமேயாம். கடமுதலிய விஷயாகாரமாகிய புத்திவிருத்தி விஷயத்திலுள்ள சேதனத்தின் அபிவியஞ்சகமாம் அதாவது சேதனத்தை வெளிப்படுத்துவதாம். ஆகையால் அந்தப் புத்திவிருத்தியும் உபசாரமாக ஞான மென்னும் சத்தத்திற்குப் பொருள் (அமுக்கியம்-கௌணம்) ஆம்.

(வி-ம்.)

உலகத்தில் எங்கெந்தக் கடமுதலிய விஷயங்களில் ஞானமிருக்கின்றதோ அந்தந்தக் கடமுதலியவிஷயங்களை அநாதரஞ்செய்யுமிடத்து (மித்தையென்றறிந்து மறக்குமிடத்து)ச் சகல வஸ்துக்களிலும் 'விளங்குகின்றது' என்னும் வடிவினதாகக் கலந்துள்ள விளக்க மெதுவோ அதுவே (ஞானமாத்திரமே) பிரஹ்மமாம் என்னுமிப்படிப்பட்ட புத்தியானது பிரஹ்மநிச்சயமென்பது பொருள். (உக)

௯. பிரஹ்மஞானத்தில் பஞ்சகோசங்களின் விவேகம் உபயோகமாதல்.

[கஃகூ] पञ्चकोशपरित्यागे साक्षिबोधावशेषतः ।
स्वस्वरूपं स एव स्याच्छून्यत्वं तस्य दुर्घटम् ॥ २२ ॥

(அ-கை.)

அப்படியானால் கடமுதலியவிஷயங்களை அநாதரஞ்செய்தலினாலேயே அந்தக் கடமுதலியவிஷயங்களின் அநுபவமாகிய பிரஹ்மம் அறியப்படுமாயின், அப்போது இந்தப் பிரகரணத்திலுள்ள பஞ்சகோசவிவேகம் நிஷ்பிரயோஜனமாமே யென்றுசங்கித்து, பிரஹ்மமாகிய பரிபூரண சேதனத்தின் பிரத்தியக்குவடிவத்தன்மைஞானமின்றிக் கர்த்திருத்துவம் போக்திருத்துவம் ஜன்மமுதலிய சோகவடிவ சம்சாரம் நிவிருத்தியாகாமையால், அவ்விதமாகிய பிரஹ்மத்தின் பிரத்தியகாத்மசொரூபத்தன்மையினது ஞானத்தில் பஞ்சகோசங்களின் விவேகம் உபயோகமுடையதா யிருத்தலால் அப்பஞ்சகோசங்களின் விவேகம் வியர்த்த மன்றெனக் கூறுகின்றார்:-

पञ्चकोशपरित्यागे साक्षिबोधावशेषतः सः एव स्वस्वरूपं स्यात् ॥

(சு-ம்.)

பஞ்சகோசங்களை நீக்கியகாலத்துச் சாக்ஷியாகிய ஞானம் மிஞ்சுதலால் அதுவே தனது சொரூப மாகின்றது.

(வி-ம்.)

அந்நமயமுதலிய பஞ்சகோசங்களை நீக்குங்கால் அதாவது புத்தியினால் அநாத்மா வென்று நிச்சயிக்குங்கால் அந்தப் பிரத்தியகாத்மாவாகிய சாக்ஷி ஞானம் மிஞ்சியிருத்தலால் அந்தச் சாக்ஷியாகிய ஞானமே சுவசொரூபமென்னும் நிஜவடிவப்பிரஹ்மமாம்.

ங. ஆத்மா சூநியமன்றென்பதனேடு சோப்பிரகாசமாமெனல் ககூ௯-உ0உ.

க. சாக்ஷியாகிய போதம் சூநியமாதலால் கூடாதெனல்.

(அ-கை.)

அப்படியானல் அநுபவசித்தமாகிய அந்நமயமுதலியபஞ்சகோசங்களும் நீங்குமிடத்துச் சூநியமே மிஞ்சுமென்றுசங்கித்துக் கூறுகின்றார்:—

तस्य शून्यत्वं दुर्घटम् ॥

(சு-ம்.)

அதனது சூநியத்தன்மை அரிதாம்.

(வி-ம்.)

அந்தச் சாக்ஷியாகிய ஞானத்தின் சூநியத்தன்மை துக்கத்தாலும் அறியத்தக்கதன்று என்பது பொருள். (உஉ)

உ. ஆத்மா சூநியமாதல் கூடாதெனல்.

[ககூஎ] अस्ति तावत्स्वयं नाम विवादाविषयत्वतः ।
स्वस्मिन्नपि विवादश्चेत्प्रतिवाद्यत्र को भवेत् ॥ २३ ॥

(அ-கை.)

ஆத்மாவிற்குச் சூநியத்தன்மை சம்பவியா தென்பதனையே யுக்தியினல் நிரூபிக்கின்றார்:—

स्वयं तावत् अस्ति नाम ॥

(சு-ம்.)

முதலில் சுவ(தன்)ரூபம் எல்லோருக்கு மிருக்கின்றது.

(வி-ம்.)

சுவயமென்னுஞ் சத்தத்திற்கு அர்த்தமாகிய தனது சொரூபம் பிராகிருதரான இலௌகீகர்களும் சாஸ்திரமுணர்ந்தவரான வைதீகர்களுமாகிய சகல ஜனங்களுக்கும் முதலில் உள்ளதேயாம்.

(அ-கை.)

எதனாலெனக் கூறுகின்றார்:—

विवादविषयत्वतः ॥

(சு-ம்.)

விவாதத்திற்கு விஷயமாகாததாயிருத்தலால்.

(வி-ம்.)

நானிருக்கிறேனா? இல்லையா? என்னும் விவாதத்திற்கு விஷயமாகாமையால் தனது சொரூபம் எல்லோருக்கும் இருக்கவே இருக்கின்றது என்பது பொருள்.

(அ-கை.)

சுவசொரூபம் விவாதத்திற்கு விஷயமாமென்னும் விபரீதபக்ஷத்தில் தோஷத்தைக் கூறுகின்றார்:—

स्वस्मिन् अपि विवादः चेत् अत्र कः प्रतिवादी भवेत् ॥

(சு-ம்)

தன்னிடத்தும் விவாத முண்டாகுமாயின் இவ்விவாதத்தில் எவன் * உடு. பிரதிவாதி யாவன்? (உங)

[ககூஅ] स्वासत्त्वं तु न कस्मैचिद्रोचते विभ्रमं विना ।
अत एव श्रुतिर्बाधं ब्रूते चासत्त्ववादिनः ॥ २४ ॥

(அ-கை.)

அப்படியானால் தனது அசத்துத்தன்மையாகிய இன்மையைச் சொல்லுகிறவனே இங்கு நானிருக்கிறேனா? இல்லையா? என்னும் விவாதத்தில் பிரதிவாதியாவனெனன்றாசங்கித்து, அப்படிப்பட்டவன் அதாவது தனது அசத்துத்தன்மையைக் கூறும் பிரதிவாதி ஒருவனுமில்லையெனக் கூறுகின்றார்:—

स्वासत्वं तु विभ्रमं विना कस्मैचित् न रोचते ॥

(சு-ம்.)

தனது அசத்துத்தன்மையோ மயக்கமின்றி ஒருவனுக்கும் உருசிக்கமாட்டாது.

---

* உடு. சுவாத்மநிரூபண மென்னும் போதாரியை நூலில் 'நானிருக்கிறேன்' என்னும் அர்த்தத்தில் எவனுக்கு விவாதத்திற் கேதுவான சமுசயமுண்டாம்? ஒருவனுக்கு முண்டாகாது. இங்கும் (தன்னிடத்தும்) சமுசயமுண்டாகுமாயின் சமுசயிப்பவனெவனோ அவனே நீ (உனது சொரூபம்)என்று ஸ்ரீமத் பகவத்பூஜ்யபாத சங்கராசாரியஸ்வாமிகளாலும் சொல்லப்பட்டிருக்கின்றது.

(வி-ம்.)

பிராந்தியொன்றைவிட்டு வேறு அவஸ்தையில் தனது அபாவம் எப்புருஷனாலும் அங்கிகரிக்கப்படுகிறதில்லை யென்பது பொருள்.

(அ-கை.)

அப்படியானால் தனது அபாவம் எவனுக்கும் உருசிக்கிறதில்லை யென்பது எதனால் நிச்சயிக்கப்படுகின்றதென் றாசங்கித்துக் கூறுகின்றார்:—

अत एव च श्रुतिः असत्ववादिनः बाधं ब्रूते ॥

(சு-ம்.)

இதனாற்றான் சுருதியானது அசத்துவாதிகளுக்குப் பாதஞ் சொல்லுகின்றது.

(வி-ம்.)

தனது அபாவம் எவனுக்கும் பிரியமாகாது என்னும் ஏதுவினாற்றான் சுருதியும் அசத்து(சூநிய)வாதிகளுக்குப் பாதமாகிய நிஷேதனத்தைச் சொல்லுகின்றது. (உச)

[ககூக] असद्ब्रह्मेति चेद्वेद स्वयमेव भवेदसत् ।
अतोऽस्य मा भूद्वेद्यत्वं स्वसत्त्वं त्वभ्युपेयताम् ॥ २९ ॥

(அ-கை.)

அசத்துவாதியின் பாதத்தைக் கூறும் சுருதி யாதென்று கேட்கும் விருப்பமுண்டாக "எவன் பிரஹ்மத்தை அசத்தென் றறிகின்றானோ அவன் தான் அசத்தே யாகின்றான்" என்பனமுதலிய பதங்களையுடைய சுருதியை அர்த்தத்தாற் சொல்லுகின்றார்:—

ब्रह्म असत् इति वेद चेत् स्वयम् एव असत् भवेत् ॥

(சு-ம்.)

பிரஹ்மம் அசத்தென்று அறிவானாயின் தானே அசத்தாவன்.

(வி-ம்.)

பிரஹ்மம் அசத்தென்றறிவானாயின், அப்போது அந்தப் பிரஹ்மத்தின் அசத்துத்தன்மையை அறியும் புருஷன் தானே அசத்தாகின்றான்; ஏனெனின் தானாகிய ஆத்மாவே பிரஹ்மவடிவமா யிருத்தலால் என்பது பொருள்.

(அ-கை.)

பலித்ததைக் கூறுகின்றார்:—

अतः अस्य वेद्यत्वं मा भूत् स्वसत्त्वं तु अभ्युपयताम् ॥

(சு-ம்.)

ஆகையால் இதற்கு அறியப்படுந்தன்மையாகிய ஞானத்திற்கு விஷயமாதல் வேண்டாம்; தனதிருக்கையோ அங்கீகரிக்கத்தக்கதாம். (உரு)

ரு. ஆத்மா எப்படி இருக்கிறதென்னும் வினவிற்கு விடை.

[உ00] कीदृक्तर्हीति चेत्पृच्छेदीदृक्ता नास्ति तत्र हि ।
यदनीदृगतादृक्च तत्स्वरूपं विनिश्चिनु ॥ २६ ॥

(அ-கை.)

இப்போது ஆத்மாவின் சொப்பிரகாசத்தன்மையைச் சொல்லக்கருதிய ஆசாரியராகிய ஸ்ரீ வித்தியாரண்ணியஸ்வாமி ஆத்மா அநுபவத்திற்கு விஷயமாகாதாயின் அதன் சொரூபம் எப்படிப்பட்டதாம் என்னும் வாதியின் பிரசினத்தை எழுப்புகின்றார்:—

कीदृक् इति पृच्छेत् चेत् ॥

(சு-ம்.)

ஆத்மா எப்படிப்பட்டதென்று கேட்பாயாயின்.

(வி-ம்.)

ஆத்மா எப்படிப்பட்டதென்னும் வாதியின் வினவிற்கு அபிப்பிராயமிதுவாம்:—ஆத்மாவிற்கு இப்படிப்பட்டதெனல்முதலிய யாதேனுமோர் *உசு. வடிவத்தோடுகூடியதன்மையை அங்கீகரிக்குமிடத்து அதுவேவடிவமாக அந்த ஆத்மா அறியக்கூடியதாம். இப்படிப்பட்டது என்றல்முதலிய வடிவத்தை அங்கீகரியாவிடின் இந்த ஆத்மாவிற்குச் சூனியத்துவ முண்டாம்.

(அ-கை.)

வாதி! நீ ஆத்மாவிற்கு இப்படிப்பட்டது என்பதுமுதலியவடிவங்களை அங்கீகரிக்குமிடத்து, ஆத்மாவிற்கு அறியப்படுந்தன்மையுண்டாமென்று கூறியது உண்மை. அப்படியே (அறியப்படுந்தன்மையே)யுண்டாம். ஆனல்

* உசு. விசேஷணமுடைமைவடிவ விசிஷ்டத்தன்மையை அங்கீகரிக்குமிடத்து.

அந்த ஆத்மாவிற்கு இப்படிப்பட்டதாமென்றல்முதலியவடிவம் அத்வைத வாதியாகிய எம்மால் அங்கீகரிக்கப்படமாட்டாதென்று கூறுகின்றார்:—

तर्हि तत्र ईदृक्ता न हि अस्ति ॥

(சு-ம்.)

அவ்வாத்மாவில் இப்படிப்பட்டதெனுந்தன்மை யில்லை.

(வி-ம்.)

இங்கே மூலத்தில் சொல்லப்பட்டிருக்கும் இப்படிப்பட்டதெனுந்தன்மையின் அபாவம் அப்படிப்பட்டதெனுந்தன்மையின் அபாவத்திற்கும் உபலக்ஷணமாம் (விடாதலக்ஷணையினலறிவிப்பதாம்).

(அ-கை.)

ஆத்மாவின் சொருபத்தில் இப்படிப்பட்டது அப்படிப்பட்டதெனுந் தன்மைக ளிரண்டு மில்லை யென்பதனைக் கூறுகின்றார்:—

यत् अनीदृक् च अतादृक् तत् स्वरूपं विनिश्चिनु ॥

(சு-ம்.)

எது இப்படிப்பட்டதும் அப்படிப்பட்டது மன்றோ அதனைத் தனது சொரூபமாக நிச்சயஞ்செய். (உசு)

[உ0க] अक्षणां विषयस्त्वीदृक्परोक्षस्तादृगुच्यते ।
विषयी नाक्षविषयः स्वत्वान्नास्य परोक्षता ॥ २७ ॥

(அ-கை.)

அப்படியானல் பிரதிஞ்ஞைமாத்திரத்தால் பதார்த்தம் சித்தியாதென்றாசங்கித்து இப்படிப்பட்டது அப்படிப்பட்டதென்னுமிவ்விரண்டுசப்தங்களின் அர்த்தங்களையும் சொல்லுகின்றவராய், ஆத்மா அந்த இப்படிப்பட்டது அப்படிப்பட்டதென்னுஞ் சப்தங்களுக்கு விஷயமாகாதென்பதனை யுக்தியோடு கூறுகின்றார் :—

अक्षणां विषयः तु ईदृक् । परोक्षः तादृक् उच्यते । विषयी अक्षविषयः न । स्वत्वात् अस्य परोक्षता न ॥

(சு-ம்.)

இந்திரியங்களின் விஷயமோ இப்படிப்பட்டதென்றும், பரோக்ஷவஸ்து அப்படிப்பட்டதென்றும் சொல்லப்படுகின்றன. விஷயி அதாவது

எல்லாவற்றையும் பிரகாசிக்கும் சாக்ஷி இந்திரியங்களுக்கு விஷயமாகாது ; சொரூபமா யிருத்தலால் அதாவது தானே தானு யிருத்தலால், இந்தச் சாக்ஷியாகிய ஆத்மாவிற்குப் பரோக்ஷத்தன்மை யில்லை.

(வி-ம்.)

பிரத்தியக்ஷமாகிய இந்திரியஜந்யஞானத்திற்கு விஷயமாகிய கடமுதலிய வஸ்துக்களுக்கு இப்படிப்பட்டதென்னும் சத்தத்தின் வாச்சியத் தன்மையினையும், பரோக்ஷமாகிய தர்மாதர்மம் சுவர்க்கமுதலிய வஸ்துக்களுக்கு அப்படிப்பட்ட தென்னும் சத்தத்தின் வாச்சியத்தன்மையையும் பார்த்திருக்கிறோம். திருஷ்டாவாகிய அதாவது இந்திரியமுதலியவற்றிற்குச் சாக்ஷியாகிய ஆத்மாவிற்கோ இந்திரியஜந்யஞானத்திற்கு விஷயமாகுந்தன்மையில்லாமையால் இப்படிப்பட்டதெனுந்தன்மை யில்லை. தனது சொரூபமா யிருத்தலினாலேயே பரோக்ஷத்தன்மை யில்லாமையால் அப்படிப்பட்ட தன்மை யில்லை யென்பது பொருள். (உஎ)

௪. ஆத்மாவின் சொப்பிரகாசத்தன்மையாகிய பலித்த அர்த்தத்தினைக் காட்டு முபாயத்தால் சூந்யத்தன்மையை நிஷேதித்தல்.

[உ0உ] अवेद्योऽप्यपरोक्षोऽतः स्वप्रकाशो भवत्ययम् ।
सत्यं ज्ञानमनंतं चेत्यस्तीह ब्रह्मलक्षणम् ॥ २८ ॥

(அ-கை)

அப்போது ஆத்மாவிற்குச் சூந்யத்தன்மை யுண்டா மென்னும் (உ00-வது சுலோகத்திற் கூறிய) * உஎ. இரண்டாவது பக்ஷத்தைப் பலிதார்த்தத்தைக் காட்டும் தந்திரத்தால் பரிகரிக்கின்றார்:—

अयम् अवेद्यः अपि अपरोक्षः अतः स्वप्रकाशः भवति ॥

(சு-ம்.)

இந்த ஆத்மா அறியப்படாதாயினும் அபரோக்ஷமாம். ஆகையால் சொப்பிரகாச மாகின்றது.

(வி-ம்.)

இந்த ஆத்மா இந்திரியஜந்யஞானத்திற்கு விஷயமாகாததாயிருந்தும் அபரோக்ஷவடிவமாம். ஆகையால் சொப்பிரகாச மென்பது பொருள் இங்கே இஃது அநுமானமாம்:—

---

* உஎ. உ00-வது சுலோகத்திற் காண்க. "அந்த இப்படிப்பட்டது என்பது முதலியவடிவத்தை அங்கீகரியாவிடின் இந்த ஆத்மாவிற்குச் சூந்யத்துவமுண்டாம்" என்னு மிரண்டாவது பக்ஷத்தை.

ஆத்மா சொப்பிரகாசமாம்; ஞானத்திற்கு விஷயமாதலின்றி அபரோக்ஷமாயிருத்தலால்; இந்திரியஜந்நிய விருத்திஞானத்தைப்போல. இவ்வநுமானத்தில் சொல்லப்பட்ட "ஞானத்திற்கு விஷயமாதலின்றி அபரோக்ஷமாயிருத்தலால்" என்னும் ஏதுவின் விசேஷணமாகிய "ஆத்மா ஞானத்திற்கு விஷயமாகாது" என்பது சித்தியா தென்ப தில்லை. ஏனெனின், ஆத்மா ஞானத்திற்கு விஷயமாகுமிடத்து ஒரே ஆத்மாவிற்குக் கர்மத்தன்மையும் கர்த்திருத்தன்மையு முண்டாதலாகிய விரோதம் வருதலால்.

அப்படியானால் ஒரே ஆத்மாவிற்குச் சேதனமாத்திர சாக்ஷிவடிவசுவசொரூபமாக ஞானத்திற்குக் கர்த்தாவாதலும், அந்தக்கரணமாகிய விசேஷணத்தோடுகூடிய வடிவமாகக் கருமமாதலுமாக இவ்வாறு விரோதமின்மையுண்டாகின்றது என்று கூறிற் பொருந்தாது. ஏனெனின், நடத்தற்கிரியையிலும் ஒரே புருஷனுக்கு ஜீவவடிவ தனது சொரூபத்தால் நடத்தற்கிரியைக்குக் கர்த்தாவாதலும், தேகவிசிஷ்டவடிவத்தால் நடத்தற்கிரியைக்கு விஷயமாகிய பிருதிவிசொரூபமாதல்வடிவ கர்மமாதலு மாகுமென்னும் மரியாதையைக் கடத்தலாகிய அதிப்பிரசங்கமாதலின்.

இந்த முற்கூறிய அநுமானத்தில் "ஞானத்தைப்போல" என்று சொல்லப்பட்டிருக்கும் திருஷ்டாந்தம் சாதனவிகலம் அதாவது சித்தியில்லாததன்று. ஏனெனின் இந்திரியஜந்நியவிருத்திஞானத்திற்குத் தனது பிரகாசத்தில் வேறு ஞானத்தின் அபேக்ஷையிருக்குமாயின், அந்த இரண்டாவதற்கு வேறு மூன்றாவதும், அந்த மூன்றாவதற்கு வேறு நான்காவதும் அபேக்ஷிக்கப்படுவதால் பிரமாணமின்றிய தாரைவடிவ அநவஸ்தையாகிய தோஷ மிருத்தலால்.

அப்படியானால் நியாயமதத்தில் கடமானது கடாகாரவிருத்தியால் விளங்குகின்றது. கடஞானம் * உஅ. அநுவியவசாயஞானத்தால் விளங்குகின்றது. இவ்வாறு "ஞானத்தைப்போல" என்னும் ஆத்மாவின் சொப்பிரகாசத்தன்மையிற் கூறிய திருஷ்டாந்தம் சாதனவிகலம் அதாவது அசித்தமாமென்று சொல்லுவாயாயின் பொருந்தாது. ஏனெனின், ஒரு இந்திரியஜந்நியவிருத்திஞானம் அந்நிய இந்திரியஜந்நியவிருத்திஞானத்தினால் விளங்குதலின்மையால் முற்கூறிய திருஷ்டாந்தம் சாதனவிகல மன்று.

ரு. ஆத்மாவில் பிரஹ்மத்தின் இலக்கணமாகிய சத்தியஞானாநந்தங்களைப் பொருத்துதல்.

(அ-கை.)

அப்படியானால் ஆத்மாவிற்குச் சொப்பிரகாசமாதல் சித்திக்கினும், அந்

* உஅ. நையாயிகர் ஞானத்தின் (கடாதிஞானத்தின்) ஞானத்தை அநுவியவசாயஞான மென்பர். அதனையே வேதாந்திகள் சாக்ஷிரூபஞான மென்பர். "இது கடம்" என்பது கடஞானத்தின் வடிவமாம், "கடத்தை நானறிகிறேன்" என்பது அநுவியவசாயஞானத்தின் வடிவமாம்.

தச் சொப்பிரகாச ஆத்மாவில் பிரஹ்மத்தின் லக்ஷணமில்லாமையால் பிரஹ்மத்தன்மை சித்தியாதென் றாசங்கித்து அந்தப்பிரஹ்மத்தின் இலக்ஷணத்தை அந்த ஆத்மாவில் பொருத்துகின்றார்:—

सत्यं ज्ञानं च अनंतं इति ब्रह्मलक्षणं इह अस्ति ॥

(சு-ம்.)

சத்தியஞானாநந்த மென்னும் பிரஹ்மத்தினிலக்கணம் இந்த ஆத்மாவிலு மிருக்கின்றது.

(வி-ம்.)

"सत्यज्ञानानन्तं ब्रह्म சத்தியஞானாநந்தம் பிரஹ்மம்" என்னும் சுருதியினாற் சொல்லப்பட்டிருக்கும் * உக. பிரஹ்மலக்ஷணம் ஆத்மாவிலு மிருக்கின்றதென்பது பொருள். (உஅ)

**ச. ஆத்மாவின் சத்தியவடிவத்தன்மை உ௦ா-உ௦அ.**

*க. சத்தியத்தன்மையின் இலக்கணம்.*

[உ௦ா] सत्यत्वं बाधराहित्यं जगद्बाधैकसाक्षिणः ।
बाधः किंसाक्षिको ब्रूहि न त्वसाक्षिक इष्यते ॥ २९ ॥

---

* உக. பிரஹ்மத்தைச் சத்தியமாத்திரமாகக் கூறின், நையாயிகர் சத்தியமாக ஒப்பியிருக்கும் ஆகாயமுதலியவற்றில் பிரஹ்மத்தின் இலக்ஷணத்திற்கு அதிவியாப்தியுண்டாம். அதனை நிவிருத்திக்கும்பொருட்டுச் சுருதியானது பிரஹ்மலக்ஷணத்தில் ஞான மென்னும் பதத்தையும் சேர்த்துக் கூறியது. ஞானமாத்திரமாகக் கூறுமிடத்து க்ஷணிகவிஞ்ஞானவாதிகள் க்ஷணிகவிஞ்ஞானபுத்தியை ஞானவடிவமாக ஒப்புகின்றார்கள். நையாயிகர் ஆத்மாவிற்குஞானவடிவகுணம் ஒப்பியிருக்கின்றனர். அன்றியும் சிலர் சத்துவகுணத்தையும் அதன் காரியமாகிய அந்தக்கரணத்தையும் ஞானவடிவமாக ஒப்பியிருக்கின்றனர். அவற்றில் அதிவியாப்தி யுண்டாம். அதனை நிவிருத்திக்கும்பொருட்டு ஞான மென்னும் பதத்தோடு அநந்த மென்பதும் சேர்க்கப்பட்டது. நையாயிகர் முதலியோர் ஆத்மாவை விபுவெனக் கூறுகின்றனர். ஆனல் அநந்தமா (தேசகாலவஸ்து பரிச்சேதமில்லாததா)யிருத்தலால் விபு வென்று கூறார்கள். உபாசகர்முதலியோர் ஆத்மாவைச் சத்திய(நித்திய)ஞான(சேதன)வடிவ மென்பர். ஆனல் விபு (அநந்தம்) எனக் கூறார். மற்றென்னெனின், சிலர் அணு வென்பர்; சிலர் மத்திமபரிமாணம் (உடலளவு) என்பர். ஆகையால் "சத்திய ஞான அநந்தம் பிரஹ்ம" மென்னும் பிரஹ்மத்தின் இலக்ஷணத்திற்கு ஓரிடத்தும் அதிவியாப்திமுதலியன இல்லை. இங்கே அநந்த மென்பதனல் ஆநந்தவடிவத்துவம் அர்த்தத்தினுற் சித்திக்கின்றது; "எது பூமாவோ (அபரிச்சின்னமோ) அது சுகவடிவாம்" என்னும் சாந்தோக்கிய சுருதியால்.

(அ-கை.)

ஆத்மாவின் சத்தியத்தன்மையைச் சம்பாதித்தற்பொருட்டு முதலில் சத்தியத்தன்மையின் இலக்ஷணத்தைக் கூறுகின்றார்:—

बाधराहित्यं सत्यत्वम् ॥

(சு-ம்.)

பாதமில்லாமை சத்தியத்தன்மையாம்.

(வி-ம்.)

பாதமில்லாமை சத்தியத்துவ மெனப்படுகின்றது. எது சத்தியமோ அது அபாத்தியமாம் அதாவது வாதிக்கத்தகாததாம், எது பாத்தியமோ அதாவது வாதிக்கத்தக்கதோ அது மித்தையாம் (அசத்தியமாம்) என்னும் இத்தன்மைய அச்சத்தியமித்தைகளின் விவேகம் பூர்வாசாரியர்களால் சொல்லப்பட்டிருக்கிறது. ஆகையால் பாதமில்லாமையே சத்தியத்துவமாம்.

உ. சாக்ஷியின் பாதமின்மை.

(அ-கை.)

அப்படியானால் சொல்லப்பட்ட சத்தியத்தன்மையின் இலக்ஷணமெதுவோ அஃதிருக்குக. இதனால் பிரகிருத ஆத்மாவினிடத்து என்ன வந்ததெனக் கூறுகின்றார்:—

जगद्बाधैकसाक्षिणः बाधः किं साक्षिकः ब्रूहि ॥

(சு-ம்.)

ஜகத்தின் பாதத்திற்கு முக்கிய சாக்ஷி எதுவோ அதன் பாதமானது எந்தச் சாக்ஷியினையுடையதாம். நீ கூறு.

(வி-ம்)

ஸ்தூல சூக்ஷ்மமுதலிய ஜகத்தின் பாதமாகிய சுழுத்திமூர்ச்சைசமாதிகளில் இல்லாதிருத்தல் எதுவோ அதன் சாக்ஷியாயிருத்தலினாலேயே இருக்கின்ற ஆத்மாவின் பாதமாகிய இன்மை எந்தச் சாக்ஷியினையுடையதாம்.

இதன் பொருள் இதுவாம்:—ஆத்மாவின் பாதத்திற்குச் சாக்ஷி யாது? ஒருசாக்ஷியுங் காணப்படவில்லை என்பது பொருள்.

(அ-கை.)

அப்படியானால் சாக்ஷியின்றிய ஆத்மாவின் பாதம் ஏன் உண்டாகாதென் றாசங்கித்துக் கூறுகின்றார்:—

असाक्षिकः तु न इष्यते ॥

(க-ம்.)

சாக்ஷியின்றிய பாதமோ அங்கீகரிக்கப்படுகிறதில்லை.

(வி-ம்)

சாக்ஷியின்றிய பாதம் அங்கீகரிக்கத்தக்கதன்று. அங்ஙனமின்றிச் சாக்ஷியின்றிய பாதத்தை அங்கீகரிக்கின் *கூ௦ அதிப்பிரசங்கமுண்டா மென்பது தாற்பரியம். (உகூ)

[உ௦ரு] अपनीतेषु मूर्तेषु ह्यमूर्तं शिष्यते वियत् ।
शक्येषु बाधितेष्वंते शिष्यते यत्तदेव तत् ॥ ३० ॥

(அ-கை.)

முற்கூறிய அர்த்தத்தைத் திருஷ்டாந்தத்தால் விளக்குகின்றார் :—

मूर्तेषु अपनीतेषु अमूर्तं वियत् हि शिष्यते शक्येषु बाधितेषु अंते यत् शिष्यते तत् एव तत् ॥

(க-ம்.)

வடிவுடைய பதார்த்தங்கள் வீட்டினின்றும் வெளிப்படுத்தப்பட்ட காலத்து வடிவமில்லாத ஆகாயம் மிஞ்சுகின்றது. அதுபோல நிராகரிக்கத் தக்க பதார்த்தங்கள் பாதிக்கப்படின் முடிவில் எது மிஞ்சுகின்றதோ அதுவே அவ்வாத்மாவாம்.

(வி-ம்.)

வீடுமுதலியவற்றிலுள்ள வடிவமுடைய கடமுதலியபதார்த்தங்களை வீடுமுதலியவற்றினின்றும் வெளிப்படுத்தினால் வெளிப்படுத்தக் கூடாத ஆகாயம் எப்படி மிஞ்சுகின்றதோ, அப்படி ஆத்மாவாகிய தனக்கு வேறான வடிவமுடையனவும் வடிவமில்லாதனவுமாகிய தேகேந்திரியமுதலிய பாதிக்கக்கூடிய பதார்த்தங்கள் "नेति नेति இப்படியல்ல இப்படியல்ல" என்னுஞ் *கூக. சுருதியால் நிராகரிக்கப்படின், முடிவில் அநாத்மபதார்த்தங்கள்

---

* கூ௦. எதன் பாத(காச)மும் சாக்ஷியில்லாததாக ஒரிடத்தும் காணப்படுகிறதில்லை யென்பது பிரசங்கமாம் (மரியாதையாம்). அதன் உல்லங்கனம் அதாவது அதனைக் கடத்தல் அதிப்பிரசங்கமாம்.

* கூக. ஓர் வனத்தின் ஓர் குகையிலிருப்பனவாகிய இரண்டு சிங்கங்கள் இரண்டு (பிதா புத்திரவடிவ) ஆடுகளில் ஒவ்வொரு ஆட்டைச் சாப்பிடுவதுபோலப் பிரஹ்மமாகிய வனத்தில் "நேதி நேதி" என்னுஞ் சுருதியாகிய குகையில் நிஷேத அர்த்தத்தின் வாசகமாகிய இரண்டு நஞ் பிரத்தியயங்கள் (அன்மைப் பொருளைப் பயக்கும் ந என்றும் இடைச்சொற்கள்) இருக்கின்றன. அவை காரணம் (அஞ்ஞானம்) காரியம் (ஸ்தூலம் சூக்ஷ்மம்) என்னுமிரண்டு பிரபஞ்சங்களையும் கிரமமாக நிஷேதிக்கின்றன.

எல்லாவற்றையும் நிராகரித்தற்குச் சாக்ஷியாக மிஞ்சுகின்ற போத மெதுவோ அதுவே பாதமின்றிய ஆத்மாவா மென்பது பொருள். (௩௦)

[உ௦௫] सर्वबाधे न किंचिच्चेद्यन्न किंचित्तदेव तत् ।
भाषा एवात्र भिद्यंते निर्बाधं तावदिष्यते ॥ ३१ ॥

(அ-கை.)

அப்படியானால் தோற்றுகின்ற பொருள்கள் எல்லாவற்றையும் நிஷேதிக்குமிடத்துச் சிறிதும் மிஞ்சுகிறதில்லை. ஆகையால் எது மிஞ்சுகின்றதோ அதுவே அவ்வாத்மா வென்று மிஞ்சிய பதார்த்தத்திற்கு ஆத்மத்துவம் சித்தாந்தியாகிய தம்மா லெப்படிச்சொல்லப்படுகின்றது ? என்று வாதி சங்கிக்கின்றான் :—

सर्वबाधे किंचित् न चेत् ॥

(சு-ம்.)

எல்லாவற்றையும் நிஷேதிக்கின் ஒன்றும் மிஞ்சுவதில்லையே யெனின்.

(அ-கை.)

"ஒன்றும் மிஞ்சுகிறதில்லை" என்று சொல்லும் சூந்யவாதிகளாகிய உங்களுக்கும் அப்படிப்பட்ட ஒன்றுமில்லை யென்னும் பிரயோகம் சித்தித்தற்பொருட்டுச் சகல பதார்த்தங்களின் அபாவத்தையும் விஷயஞ்செய்வதாகிய ஞானம் அவசியம் அங்கீகரிக்கத்தக்கதாம். ஆகையால் எல்லாவற்றின் அபாவத்தையும் விஷயஞ்செய்யும் அந்த ஞானமே எங்களால் ஒப்பப்பட்டிருக்கும் ஆத்மசொரூபமா மென்னும் அபிப்பிராயமாகச் சித்தாந்தி பரிகரிக்கின்றார் :—

न किंचित् यत् तत् एव तत् ॥

(சு-ம்.)

எது ஒன்று மில்லையோ அதுவே அந்தப் பிரஹ்மமாம்.

(வி-ம்.)

"ஒன்றுமில்லை" என்னுஞ் சொல்லாற் சொல்லப்படும் சைதன்னிய மெதுவோ அதுவே அந்தப் பிரஹ்மமாம்.

(அ-கை.)

அப்படியானால் "ஒன்றுமில்லை" யென்னும் அபாவவாசகமாகிய சத்தத்தால் பாவரூபமாகிய சைதன்னியம் எப்படிச் சொல்லப்படுகின்ற தென்றுசங்கித்து, அபாவத்தின் சாக்ஷி அவசியம் அங்கீகரிக்கத்தக்கதா யிருத்த

லால் சொல்லும் சத்தங்களாகிய வாசகங்களிற்றான் விவாதம்; அபா வத்தின் சாக்ஷியாகிய ஆத்மா வென்னும் அர்த்தமாகிய வாச்சியத்தில் விவா தமில்லை யென்று பரிகரிக்கின்றார் :—

अत्र भाषा एव भिद्यंते निर्बाधं तावत् इष्यते ॥

(சு-ம்.)

இங்கே ஆத்மாவாகிய அர்த்தத்தில். பாஷைகள்(சொற்கள்)தான் பேதத்தை யடைகின்றன. பாதமில்லாத ஆத்மாவோ இருக்கவே இருக் கின்றது.

(வி-ம்.)

எல்லாப் பாதத்திற்கும் சாக்ஷியாகிய பிரத்தியகாத்மாவில் பாஷையே (" ஒன்றுமில்லை " " சாக்ஷி " என்பனமுதலிய * ௩௨. சொற்களே) பேதத்தை யடைகின்றன. பாதமின்றிய சாக்ஷி சைதன்னியமோ இருக் கவே இருக்கின்றது. (௩௧)

(அ-கை.)

[உ0௯] अत एव श्रुतिर्बाध्यं बाधित्वा शेषयत्यदः ।
स एष नेति नेत्यात्मेत्यतद्व्यावृत्तिरूपतः ॥ ३२ ॥

முற்கூறிய அர்த்தத்தைச் சுருதியினால் திடப்படுத்துகின்றார் :—

अतः एव एषः आत्मा "न इति न इति" श्रुतिः अतद्व्यावृत्तिरूपतः बाध्यं बाधित्वा अदः शेषयति ॥

(சு-ம்.)

இதனாற்றான் அந்த இவ்வாத்மா "இப்படியன்று, இப்படியன்று" என்பதாகச் சுருதியானது ஜகத்தின் நிஷேதரூபவியாவிருத்தியாற் பாதிக் கத்தக்கவற்றைப் பாதித்து இவ்வாத்மசொரூபத்தை மிஞ்சவைக்கின்றது.

(வி-ம்.)

எதனாற் சாக்ஷிசைதன்னியம் பாதமில்லாதா யிருக்கின்றதோ அத னாற்றான் அந்த இவ்வாத்மா "நேதி நேதி" என்று சுருதி அதத்து வியாவிருத்திரூபத்தால் (அநாத்ம பதார்த்தங்களை நிஷேதிக்கும் வாயிலாக) நிராகரிக்கத்தக்க சகல அநாத்ம பதார்த்தங்களின் சமூகத்தையும் பாதித்து

---

* ௩௨. இரண்டு கண்டங்களில் வசிக்கும் மனிதர்கள் கடத்தை வித்தியாசமாகிய இரண்டு பெயர்களால் கூறுகின்றார்கள். அங்கே சத்திற்குப் பேதமேயன்றிக் கடமா கிய அர்த்தத்திற்குப் பேத மில்லை. அதுபோலச் சாக்ஷியிலு மறிந்துகொள்க.

கிராகரிக்கக்கூடாத இந்தப் பிரத்தியகாத்மசொரூபத்தை மிஞ்சவைக்கின்றது. (௩௨)

௩. பாதிக்கத்தக்கவை இவை பாதிக்கத்தகாதவை இவை யெனல்.

[௨0௭] इदं रूपं तु यद्यावत्तत्त्यक्तुं शक्यतेऽखिलम् ।
अशक्यो ह्यनिदंरूपः स आत्मा बाधवर्जितः ॥ ३३ ॥

(அ-கை.)

"நேதி நேதி" என்னுஞ் சுருதி பாதிக்கக்கூடியதைப் பாதித்து பாதிக்கக்கூடாததை மிஞ்சவைக்கின்றதென்று தாம் கூறியதில் பாதிக்கக்கூடியது யாது? பாதிக்கக்கூடாதது யாது? என்னும் விருப்பத்து அவ்விரண்டனையும் பிரித்துக் காட்டுகின்றார் :—

यत् यावत् इदं रूपं तत् तु अखिलं त्यक्तुं शक्यते । अनिदं रूपः अशक्यः हि ॥

(சு-ம்.)

யாதொரு எவ்வளவு இஃதென்னும் ரூப மிருக்கின்றதோ அது முழுவதும் விடக்கூடியதாம். இஃதெனும் வடிவமில்லாத சாக்ஷி பாதிக்கக்கூடியதன்றென்பது பிரசித்தமாம்.

(வி-ம்.)

"இஃது" எனும்வடிவமுடைய அதாவது திருசியமா யிருத்தலால் அநுபவிக்கப்படும் சொரூபமுடைய தேகாதிகள் இஃதெனும் வடிவமாம். இங்கே மூலத்திலுள்ள து-ஓ என்னுஞ் சத்தம் அவதாரண மென்னும் நிச்சயார்த்தத்திலாம். இங்குள்ள "யாதொரு எவ்வளவு" என்னும் இரண்டு பதங்களும் சகல திருசியங்களையும் கொள்ளும்பொருட்டாம். இப்படியாகவே திருசியங்கள் யாவும் தள்ளக்கூடியனவேயாம் என்னும் அர்த்தம் சித்திக்கின்றது. இஃதெனும் வடிவமில்லாதது அதாவது எல்லாவற்றினுள்ளா யிருத்தலின் இஃதெனுந்தன்மையால் அறியக்கூடாத சாக்ஷி எதுவோ அது தள்ளக்கூடியதன்றென்பது பொருள். மூலசுலோகத்துள்ள பிரசித்தம் என்னும் அர்த்தத்தை யறிவிக்கும் हि ஹி என்னும் வியாகரணசங்கேதத்தாற் கூறிய அசைச்சொல்லானது ஆத்மாவை நிஷேதஞ்செய்பவனுடைய சொரூபமாயிருத்தலால் தள்ளக்கூடியதாகா தென்பதைச் சூசிப்பிக்கின்றது.

(அ-கை.)

இப்போது பலிதத்தைக் கூறுகின்றார் :—

बाधवर्जितः आत्मा ॥

(சு-ம்.)

எது பாதமில்லாததோ அது ஆத்மாவாம்.

(வி-ம்.)

எது பாதமில்லாத சாக்ஷியோ அதுவே ஆத்மாவாம். அகங்காரமுதலிய திருசியங்கள் ஆத்மாவல்ல வென்பது பொருள். (௩௩)

௯. ஆத்மாவில் ஞானவடிவத்தன்மையை அநுவதித்தலோடு பிரஹ்மத்தின் லக்ஷணமாகிய சத்தியத்தன்மையின் சித்தி.

[உ0அ] सिद्धं ब्रह्मणि सत्यत्वं ज्ञानत्वं तु पुरेरितम् ।
स्वयमेवानुभूतित्वादित्यादिवचनैः स्फुटम् ॥ ३४ ॥

(அ-கை.)

ஆத்மாவிற்குப் பாதிக்கப்படாததன்மையாகிய அபாத்தியத்துவ மிருக்குக. அதனால் பிரகிருதமான ஆத்மாவின்கண் பிரஹ்மலக்ஷணம் சித்திப்பதில் என்ன வந்ததெனக் கூறுகின்றார்:—

ब्रह्मणि सत्यत्वं सिद्धम् ॥

(சு-ம்.)

பிரஹ்மத்திலுள்ள சத்தியத்தன்மை சித்தித்தது.

(வி-ம்.)

பிரஹ்மத்தினிலக்கணத்திற் சுருதியினாற் சொல்லப்பட்டிருக்கும் சத்தியத்துவம் ஆத்மாவிடத்தும் சித்தித்தது.

(அ-கை.)

அப்படியானால் ஆத்மாவினிடத்தில் சத்தியத்துவ மிருக்குக. ஞானவடிவத்தன்மை எப்படிச் சித்திக்கு மென்று கேட்குமிடத்து, அந்த ஞானவடிவத்துவம் முன் கஅ௫-௧௯௯-வது சுலோகங்களிலேயே உபபாதானஞ் செய்யப்பட்டிருக்கின்றதென்று கூறுகின்றார்:—

" स्वयं एव अनुभूतित्वात् " इत्यादिवचनैः ज्ञानत्वं तु पुरा स्फुटं ईरितम् ॥

(சு-ம்.)

" ஆத்மா தானே அநுபவவடிவமா யிருத்தலால் " என்றல்முதலிய வசனங்களால் ஞானவடிவத்தன்மையோ முன் தெளிவாய்ச் சொல்லப்பட்டிருக்கின்றது.

(வி-ம்.)

"தானே அநுபவவடிவமா யிருத்தலால் ஆத்மாவிற்கு அநுபவிக்கப் படுந்தன்மை அதாவது அநுபவத்திற்கு விஷயமாந்தன்மை யில்லை" என்னு மிவைமுதலிய வாக்கியங்களால் ஆத்மாவிற்குச் சேதனத்துவம் முன்னமே செவ்வையாகச் சொல்லப்பட்டிருக்கின்றது என்பது பொருள்(௩௪)

௫. ஆத்மா அநந்தமாமாறு உ0௬-உ௧0.

௧. பிரஹ்மத்தில் முதலில் மூன்றுவித அநந்தத்தன்மை சுருதியினால் சித்தித்தல்.

[உ0௬] न व्यापित्वाद्देशतोऽतो नित्यत्वान्नापिकालतः ।
न वस्तुतोऽपि सर्वात्म्यादानंत्यं ब्रह्मणि त्रिधा ॥ ३५ ॥

(அ-கை.)

அப்படியானால் சத்தியத்தன்மை ஞானவடிவத்தன்மை ஆத்மாவிடத்திற் சித்திக்கினும் அநந்தவடிவத்தன்மை ஆத்மாவினிடத்துப் பொருந்தாது. ஏனெனின், பிரஹ்மத்திலும் அந்த அநந்தத்துவம் சித்தியாமையால் என்றுசங்கித்துப் பிரஹ்மத்தினிடத்து முதலில் அந்த அநந்தவடிவத்தன்மையைச் சாதிக்கின்றார்:—

व्यापित्वात् देशतः अंतः न नित्यत्वात् कालतः अपि न सर्वात्म्यात् वस्तुतः अपि न ब्रह्मणि आनंत्यं त्रिधा ॥

(சு-ம்.)

வியாபகமாயிருத்தலால் பிரஹ்மத்திற்குத் * ௩௩. தேசத்தினால் அந்த (பரிச்சேத)மில்லை. நித்தியமாயிருத்தலால் *௩௪. காலத்தினாலும் பரிச்சேத

* ௩௩. அத்தியந்தாபாவத்தின் பிரதியோகித்தன்மை தேசபரிச்சேத மெனப்படும். எந்த வஸ்து ஓரிடத்திலிருந்து ஓரிடத்தி லில்லையோ அந்தவஸ்து தேசபரிச்சேதமுடையதாம். எங்ஙனம்: கடமுதலியன ஓர் தேசத்திருத்தலால் தேசபரிச்சேதமுடையனவாம். பிரஹ்மம் வியாபகமாயிருத்தலால் தேசபரிச்சேதமுடைய தன்று. இங்கே இது அநுமானமாம்:—பிரஹ்மம் (பக்ஷம்) தேசபரிச்சேதமில்லாததாம்; வியாபகமாயிருத்தலால்; எது தேசபரிச்சேதமில்லாததன்றோ அது வியாபகமு மன்று, கடமுதலியவற்றைப்போல.

* ௩௪. பிராகபாவப்பிரத்துவம்சாபாவங்களின் பிரதியோகித்தன்மை காலபரிச்சேத மெனப்படும். எந்தப்பதார்த்தம் ஒருகாலத்தி லிருந்து(உண்டாய்)ஒருகாலத்தி லில்லையோ அதற்குக் காலத்தினால் பரிச்சேத (அந்த) முண்டு. எங்ஙனம்: மின்னல்முதலியவைகள் ஒவ்வொருகாலத்தி லிருத்தலால் காலபரிச்சேதமுடையன (காலபரிச்சேதத்தின் பிரதியோகி)ஆம். பிரஹ்மம் உற்பத்தி நாசமில்லாததா யிருத்தலாலும் என்று மிருத்தலாலும் நித்தியமாம். ஆகையால் பிரஹ்மத்திற்குக் காலத்தினால் பரிச்சேத மில்லை. இங்கே இஃது அநுமானமாம்:—பிரஹ்மம் காலபரிச்சேதமில்லாததாம்; நித்தியமாயிருத்தலால்; எது காலபரிச்சேதமில்லாத தன்றோ அது நித்தியமு மன்று, மின்னல்முதலியவற்றைப்போல.

மில்லை. எல்லாவற்றிற்கும் சொரூபமாயிருத்தலால் * ருடு. வஸ்துவினுலும் பரிச்சேத மில்லை. இப்படிப் பிரஹ்மத்தில் மூன்றுவிதமாகிய அநந்தத் தன்மை யிருக்கின்றது.

(வி-ம்.)

"नित्यं विभुं सर्वगतं सुसूक्ष्मं" "आकाशवत् सर्वगतश्च नित्यः" "नित्यो नित्यानां चेतनश्चेतनानां" "इदं सर्वं यदयमात्मा" "सर्वं ह्येतद्ब्रह्म" "ब्रह्मैवेदं सर्वं" "நித்தியமாயும் அதாவது உற்பத்திநாசமில்லாததாயும், வியாபகமாயும், எல்லாவற்றிலு முள்ளதாயும், அதிசூக்ஷ்மமாயு மிருக்கின்றது" "ஆகாயத்தைப்போல எல்லாவற்றினும் அநுசூதமாயும் * ருசு நித்தியமாயுமிருக்கின்றது" "நித்தியமான சத்தியங்களுக்கு நித்தியமாயும் சேதனங்களுக்குச் சேதனமாயு மிருக்கின்றது" "இத்தோற்றிக்கொண்டிருக்கிற பிரபஞ்சமெல்லாம் இந்த அபரோக்ஷவடிவமாகிய ஆத்மாவாம்" "இவையாவும் பிரஹ்மமேயாம்" "பிரஹ்மமே இவையாவுமாம்" என்னுமிவைமுதலிய சுருதிகளில் பிரஹ்மத்தின் வியாபகத் தன்மையும் நித்தியத்தன்மையும் எல்லாவற்றின் சொரூபமாந்தன்மையும் சொல்லப்படுதலால் பிரஹ்மத்திற்குத் தேசகால வஸ்துக்களாலாகிய பரிச்சேதமின்மைவடிவ மூவகை அநந்தத்தன்மை அங்கீகரிக்கத்தக்கதாமென்பது பொருள். (ருடு)

உ. ஆத்மாவின் வேறாகாத பிரஹ்மத்தில் மூவகை யநந்தத்தன்மையும் யுக்தியினாற் சித்தித்தல்.

[உருo] देशकालान्यवस्तूनां कल्पितत्वाच्च मायया ।
न देशादिकृतोऽन्तोऽस्ति ब्रह्मानंत्यं स्फुटं ततः ॥ ३६ ॥

---

* ருடு. அந்நியோந்நியாபாவ(பேத)த்தின் பிரதியோகித்தன்மை வஸ்துபரிச்சேத மெனப்படும். அந்த வஸ்துபரிச்சேதம் மூன்று அல்லது ஐந்துவிதமாம். இதனைப் பிரத்தியக்தத்துவவிவேகத்தின் ருரு-வது டிப்பணத்திற் காண்க. எந்த வஸ்து மற்றவஸ்துவினும் பின்னமாகுமோ அதற்கு வஸ்துவி(பதார்த்தத்தி)னால் பரிச்சேதமுண்டு. எங்ஙனம்: ஆகாயமுதலியன மற்றவற்றினும் வேறாயிருத்தலால் வஸ்துபரிச்சேதமுடையனவாம். பிரஹ்மம் எதனால் சகல கற்பித பதார்த்தங்களுக்கும் அதிஷ்டான (விவர்த்தோபாதான) மாயிருத்தலால் எல்லாவற்றிற்கும் சொரூபமாகின்றதோ (கற்பிதத்திற்கு அதிஷ்டானத்தினும் வேறாகிய சத்தை யில்லையோ), அதனால் பிரஹ்மத்திற்கு வஸ்துவினால் பரிச்சேதம் (வேறுபட்டதன்மை) இல்லை. இங்கே இது அநுமானமாம்:—பிரஹ்மம் வஸ்துபரிச்சேதமில்லாததாம்; எல்லாவற்றின் சொரூபமாயிருத்தலால்; எது வஸ்துபரிச்சேதமில்லாதன்றோ அது எல்லாவற்றின் சொரூபமுமன்று, ஆகாயமுதலியவற்றைப்போல.

* ருசு. பிராகபாவப்பிரத்துவம்சாபாவங்களின் அப்பிரதியோகி நித்தியமாம்.

(அ-கை.)

சுருதிமாத்திரத்தினுலேயே பிரஹ்மத்திற்கு அநந்தத்தன்மை சித்திக்கின்றதென்பதில்லை. ஆனுல் யுக்தியினுலும் சித்திக்கின்றதெனக் கூறுக்கின்றுர் :—

च देशकालान्यवस्तूनां मायया काल्पितत्वात् देशादिकृतः अंतः न अस्ति ततः ब्रह्मानंत्यं स्फुटम् ॥

(சு-ம்.)

தேசமும் காலமும் அந்நிய அநாத்மபதார்த்தங்களும் மாயையினுற் கற்பிக்கப்பட்டனவாயிருத்தலால் பிரஹ்மத்திற்குத் தேசமுதலியவற்றுற் செய்யப்பட்ட பரிச்சேதமில்லை. அதனுல் பிரஹ்மத்தின் அநந்தத்தன்மை வெளிப்படையாம்.

(வி-ம்.)

பரிச்சேதமென்னும் அந்தமுடைமைக்கு ஏதுவாகிய தேசம், (பூதமுதலிய) காலம், பிரஹ்மத்தின்வேறுன பதார்த்தவடிவவஸ்து என்பவை மாயையினுல் பிரஹ்மத்திற் கற்பிக்கப்பட்டவைகளாயிருத்தலால் ஆகாயத்திற் கற்பிக்கப்பட்ட * ௩அ. கந்தர்வநகரமுதலியவற்றுலாகிய பரிச்சேதம் ஆகாயத்திற் சம்பவியாததுபோலக் கற்பிததேசமுதலியவற்றுலாகிய வாஸ்தவபரிச்சேதம் பிரஹ்மத்திற் சம்பவியாது. எதனுல் பிரஹ்மத்தில் பரிச்சேதம் சம்பவியாதோ அதனுல் பிரஹ்மத்தின் அநந்தத்தன்மையாகிய மூவித பரிச்சேதமின்மை முதலில் சுருதியுக்திகளால் விளக்கமாகவேயிருக்கின்றது. "तदेतत् सत्यमात्मा ब्रह्मैव ब्रह्मात्मैवात्र ह्येवं न विचिकित्स्यं" "ॐ सत्यमात्मैव" "नृसिंहो देवो ब्रह्म भवति" "अयमात्मा ब्रह्म" அந்த இவ்வாத்மா சத்தியமாகிய பிரஹ்மமாம். பிரஹ்மம் ஆத்மாவேயாம். இந்தப் பிரஹ்மாத்ம ஐக்கியத்தில் சந்தேகிக்கத்தக்கதில்லை." "ஓங்காரத்தின் வாச்சியமாகிய சத்தியப்பிரஹ்மம் ஆத்மாவேயாம்" "நரசிங்க * ௩அ. ஆத்மாவாகிய தேவன் பிரஹ்மமாம்" "இவ்வாத்மா பிரஹ்மமாம்" என்னுமிவைமுதலிய அநேக சுருதிகளால்'

---

* ௩எ. ஆகாயத்தில் மேகங்களின் கூட்டத்திற் ரேற்றும் நகரவடிவம், அல்லது ஆகாயத்தில் இந்திரஜாலிகனுலாக்கப்பட்ட நகரம், அல்லது மரணகாலத்தில் தோற்றும் நகரம் கந்தர்வநகரமெனப்படும். இங்கே முதலியவெனுஞ் சத்தத்தால் ஆகாயத்திற்ரேற்றும் கருமை கொப்பரைவடிவம் கூடாரவடிவமுதலியவைகளும் கொள்ளப்படும்.

* ௩அ. நૃ ஙிரு என்பது நரர்(மனிதர்)களுக்காம்; அவர்களது ஸிம் சிம் என்னும் ஜன்மமுதலிய சம்சாரமாகிய மலத்தை ஹ ஹ அதாவது தனது ஞானத்தால் நாசஞ்செய்கிறது. இப்படிப்பட்ட ஆத்மா இந்தச் சுருதியில் "नृसिंह ஙிருசிம்ஹ" எனப்படுகின்றது. ஙிருசிம்ஹம் (ஆத்மா) என்னுந் தெய்வம் அதாவது சொப்பிரகாச சைதன்னியமெதுவோ அது நிருசிம்ஹதேவனெனப்படுகின்றது.

மில்லை. எல்லாவற்றிற்கும் சொரூபமாயிருத்தலால் * ௩௫. வஸ்துவினு லும் பரிச்சேத மில்லை. இப்படிப் பிரஹ்மத்தில் மூன்றுவிதமாகிய அநந்தத் தன்மை யிருக்கின்றது.

(வி-ம்.)

"नित्यं विभुं सर्वगतं सुसूक्ष्मं" "आकाशवत् सर्वगतश्च नित्यः" "नित्यो नित्यानां चेतनश्चेतनानां" "इदं सर्वं यदयमात्मा" "सर्वं ह्येतद्ब्रह्म" "ब्रह्मैवेदं सर्वं" "நித்தியமாயும் அதாவது உற்பத்திநாச மில்லாததாயும், வியாபகமாயும், எல்லாவற்றிலு முள்ளதாயும், அதிசூக்ஷ்ம மாயு மிருக்கின்றது" "ஆகாயத்தைப்போல எல்லாவற்றிலும் அநுகூதமா யும் *௩௬ நித்தியமாயுமிருக்கின்றது" "நித்தியமான சத்தியங்களுக்கு நித்தியமாயும் சேதனங்களுக்குச் சேதனமாயு மிருக்கின்றது" "இத்தோற் றிக்கொண்டிருக்கிற பிரபஞ்சமெல்லாம் இந்த அபரோக்ஷவடிவமாகிய ஆத்மாவாம்" "இவையாவும் பிரஹ்மமேயாம்" "பிரஹ்மமே இவை யாவுமாம்" என்னுமிவைமுதலிய சுருதிகளில் பிரஹ்மத்தின் வியாபகத் தன்மையும் நித்தியத்தன்மையும் எல்லாவற்றின் சொரூபமாந்தன்மையும் சொல்லப்படுதலால் பிரஹ்மத்திற்குத் தேசகால வஸ்துக்களாலாகிய பரிச்சேதமின்மைவடிவ மூவகை அநந்தத்தன்மை அங்கீகரிக்கத்தக்கதா மென்பது பொருள். (௩௫)

௨. ஆத்மாவின் வேறாகாத பிரஹ்மத்தில் மூவகை யநந்தத்தன்மையும் யுக்தியினாற் சித்தித்தல்.

[௨௬௦] देशकालान्यवस्तूनां कल्पितत्वाच्च मायया ।
न देशादिकृतोऽन्तोऽस्ति ब्रह्मानंत्यं स्फुटं ततः ॥ ३६ ॥

---

* ௩௫. அந்நியோந்நியாபாவ(பேத)த்தின் பிரதியோகித்தன்மை வஸ்துபரிச் சேத மெனப்படும். அந்த வஸ்துபரிச்சேதம் மூன்று அல்லது ஐந்துவிதமாம். இத னைப் பிரத்தியக்தத்துவவிவேகத்தின் ௩௩-வது டிப்பணத்திற் காண்க. எந்த வஸ்து மற் றவஸ்துவினும் பின்னமாகுமோ அதற்கு வஸ்துவி(பதார்த்தத்தி)னால் பரிச்சேத முண்டு. எங்ஙனம்: ஆகாயமுதலியன மற்றவற்றினும் வேறாயிருத்தலால் வஸ்துபரிச் சேதமுடையனவாம். பிரஹ்மம் எதனால் சகல கற்பித பதார்த்தங்களுக்கும் அதிஷ் டான (விவர்த்தோபாதான) மாயிருத்தலால் எல்லாவற்றிற்கும் சொரூபமாகின்றதோ (கற்பிதத்திற்கு அதிஷ்டானத்தினும் வேறாகிய சத்தை யில்லையோ),அதனால் பிரஹ் மத்திற்கு வஸ்துவினால் பரிச்சேதம் (வேறுபட்டதன்மை) இல்லை. இங்கே இது அநு மானமாம்:—பிரஹ்மம் வஸ்துபரிச்சேதமில்லாததாம்; எல்லாவற்றின் சொரூபமாயி ருத்தலால்; எது வஸ்துபரிச்சேதமில்லாதன்றோ அது எல்லாவற்றின் சொரூபமு மன்று, ஆகாயமுதலியவற்றைப்போல.

* ௩௬. பிராகபாவப்பிரத்துவம்சாபாவங்களின் அப்பிரதியோகி நித்தியமாம்.

(அ-கை.)

சுருதிமாத்திரத்தினலேயே பிரஹ்மத்திற்கு அநந்தத்தன்மை சித்திக்கின்றதென்பதில்லை. ஆனல் யுக்தியினலும் சித்திக்கின்றதெனக் கூறுகின்றார் :—

च देशकालान्यवस्तूनां मायया कल्पितत्वात् देशादिकृतः अंतः न अस्ति ततः ब्रह्मानंत्यं स्फुटम् ॥

(சு-ம்.)

தேசமும் காலமும் அந்நிய அநாத்மபதார்த்தங்களும் மாயையினற் கற்பிக்கப்பட்டனவா யிருத்தலால் பிரஹ்மத்திற்குத் தேசமுதலியவற்றாற் செய்யப்பட்ட பரிச்சேத மில்லை. அதனல் பிரஹ்மத்தின் அநந்தத்தன்மை வெளிப்படையாம்.

(வி-ம்.)

பரிச்சேத மென்னும் அந்தமுடைமைக்கு ஏதுவாகிய தேசம், (பூதமுதலிய)காலம், பிரஹ்மத்தின்வேறான பதார்த்தவடிவவஸ்து என்பவை மாயையினல் பிரஹ்மத்திற் கற்பிக்கப்பட்டவைகளா யிருத்தலால் ஆகாயத்திற் கற்பிக்கப்பட்ட * கஎ. கந்தர்வநகரமுதலியவற்றாலாகிய பரிச்சேதம் ஆகாயத்திற் சம்பவியாததுபோலக் கற்பிததேசமுதலியவற்றாலாகிய வாஸ்தவபரிச்சேதம் பிரஹ்மத்திற் சம்பவியாது. எதனல் பிரஹ்மத்தில் பரிச்சேதம் சம்பவியாதோ அதனல் பிரஹ்மத்தின் அநந்தத்தன்மையாகிய மூவித பரிச்சேதமின்மை முதலில் சுருதியுக்திகளால் விளக்கமாகவே யிருக்கின்றது. "तदेतत् सत्यमात्मा ब्रह्मैव ब्रह्मात्मैवात्र ह्येवं न विचिकित्स्यं" "ॐ सत्यमात्मैव" "नृसिंहो देवो ब्रह्म भवति" "अयमात्मा ब्रह्म" அந்த இவ்வாத்மா சத்தியமாகிய பிரஹ்மமாம். பிரஹ்மம் ஆத்மாவேயாம். இந்தப் பிரஹ்மாத்ம ஐக்கியத்தில் சந்தேகிக்கத்தக்கதில்லை." "ஓங்காரத்தின் வாச்சியமாகிய சத்தியப்பிரஹ்மம் ஆத்மாவேயாம்" "நரசிங்க * கஅ. ஆத்மாவாகிய தேவன்·பிரஹ்மமாம்" "இவ்வாத்மா பிரஹ்மமாம்" என்னுமிவைமுதலிய அநேக சுருதிகளால்'

---

* கஎ. ஆகாயத்தில் மேகங்களின் கூட்டத்திற் றோற்றும் நகரவடிவம், அல்லது ஆகாயததில் இந்திரஜாலிகனலாக்கப்பட்ட நகரம், அல்லது மரணகாலத்தில் தோற்றும் நகரம் கந்தர்வநகர மெனப்படும். இங்கே முதலியவெனுஞ் சத்தத்தால் ஆகாயத்திற்றோற்றும் கருமை கொப்பரைவடிவம் கூடாரவடிவமுதலியவைகளும் கொள்ளப்படும்.

* கஅ. நீ ிரு என்பது நரர்(மனிதர்)களுக்காம்; அவர்களது ஸிம் என்னும் ஜன்மமுதலிய சம்சாரமாகிய மலத்தை ஹ அதாவது தனது ஞானத்தால் நாசஞ் செய்கிறது. இப்படிப்பட்ட ஆத்மா இந்தச் சுருதியில் "நூஸிஹ ிருஸிம்ஹ" எனப்படுகின்றது. ிருஸிம்ஹம் (ஆத்மா) என்னுந் தெய்வம் அதாவது சொப்பிரகாச சைதன்னிய மெதுவோ அது நிருசிம்ஹதேவ னெனப்படுகின்றது.

ஆத்மாவிற்குப் பிரஹ்மத்தோடு அபேதம் பிரதிபாதிக்கப்பட்டிருக்கின்றது. ஆகையால் முற்கூறிய அந்தப் பிரஹ்மத்தின் அநந்தத்தன்மையே அந்த ஆத்மாவிற்கும் அநந்தத்தன்மையாகச் சித்தித்தது என்பது கிரந்த கர்த்தாவின் * ௩௧. கருத்து. (௩௪)

௩. ஜீவனும் பிரஹ்மமும் அபேத மென்பதைப் பிரதிபாதித்தல் உ௧௧-உ௪௯:

௧. பிரஹ்மத்திற்கு உபாதியினால் ஜீவத்தன்மையும் ஈசுவரத்தன்மையுமா மெனல் உ௧௧-உ௧௫.

௧. பிரஹ்மத்தின் அநந்தத்தன்மையில் சங்கை சமாதானமும் ஜீவேசுரர்களின் கற்பிதத்தன்மையும்.

[உ௧௧] सत्यं ज्ञानमनंतं यद्ब्रह्म तद्वस्तु तस्य तत् ।
ईश्वरत्वं च जीवत्वमुपाधिद्वयकल्पितम् ॥ ३७ ॥

(அ-கை.)

ஜடமாகிய பிரபஞ்சம் பிரஹ்மத்தில் கற்பிதமாயிருத்தலால் அதற்குப் பிரஹ்மத்தின் பரிச்சேதகத்தன்மை அதாவது பரிச்சேதஞ்செய்யுந் தன்மை இல்லாவிடினும், சேதனமாகிய ஜீவேசுரர்களுக்கு அந்தப் பிரஹ்மத்திற் கற்பிதமாதல் இல்லாமையால் அந்த ஜீவேசுரர்களாலாகிய ஸஜாதீயபேதவடிவ பரிச்சேதமுடையதாயிருத்தலால் பிரஹ்மத்திற்கு அநந்தத்தன்மை அசங்கதமாமென் றாசங்கித்து, அந்த ஜீவேசுரர்களும் மாயை பஞ்சகோச மென்னும் உபாதிகளாலாகிய வடிவமுடையவர்களாயிருத்தலின் வாஸ்தவத்தன்மை யில்லாமையால் அந்தஜீவேசுவரர்களுக்கும் வஸ்து பரிச்சேதமென்னும் வஸ்துவினாலாகிய அந்தத்திற்கு ஏதுவாதலில்லை யென்னும் அபிப்பிராயத்தாற் கூறுகின்றார் :—

यत् सत्यं ज्ञानं अनंतं ब्रह्म तत् वस्तु तस्य ईश्वरत्वं च जीवत्वं तत् उपाधिद्वय-कल्पितम् ॥

(க-ம்)

சத்தியமாயும் ஞானமாயும் அபரிச்சின்னமாயு மிருக்கின்ற பிரஹ்மம் எதுவோ அது வஸ்துவாம். அதன் ஈசுவரத்துவமும் ஜீவத்துவமுமாகிய அவை இரண்டும் உபாதிகளாற் கற்பிக்கப்பட்டனவாம்.

---

* ௩௧. எதனால் ஆத்மாவில் பிரஹ்மத்தின் இலக்ஷணத்வதைப் பொருத்தும் பிரசங்கத்தில் பிரஹ்மத்தின் அநந்தத்தன்மை பிரதிபாதிக்கப்பட்டிருக்கின்றதோ, அதனால் அந்தப் பிரஹ்மத்தின் அநந்தத்தன்மை மகாகாசத்தினும் வேறாகாத கடாகாசத்தினைப்போலப் பிரஹ்மத்தினும் வேறாகாத ஆத்மாவினதேயாம். இப்படிப் பிரசங்கவலியால் கிரந்தகர்த்தாவின் இச்சையாகிய கருத்து அறியப்படுகின்றது.

(வி-ம்.)

சத்தியமுதலிய வடிவினதாகிய பிரஹ்மம் எதுவோ அதுவே வஸ்து வாம் அதாவது பாரமார்த்திகமாம். அந்தப் பிரஹ்மத்திற்கு உலகப்பிர சித்தமாயுள்ள ஈசுவரத்தன்மை ஜீவத்தன்மைகள் எவைகளோ அவை மேல் உகஉ-உகரு-வது சுலோகம்வரையில் சொல்லப்படும் மாயை பஞ்சகோச மென்னும் இரண்டு உபாதிகளால் கிரமமாகக் கற்பிக்கப்பட்டிருக்கின்றன. ஆதலின் கற்பிதமாயிருத்தலாற்றானே ஜடத்தைப்போல ஜீவேசுவரர்களிரு வருக்கும் அந்தப் பிரஹ்மம் பிறபதார்த்தங்களினின்றும் வேறு என்னும் வடிவ வஸ்துபரிச்சேதஞ்செய்யுந்தன்மை யில்லை என்பது கருத்து. (௩எ)

2. சக்தியின் நிரூபணம்.

[உகஉ] शक्तिरस्त्यैश्वरी काचित्सर्ववस्तुनियामिका ।
आनंदमयमारभ्य गूढा सर्वेषु वस्तुषु ॥ ३८ ॥

(அ-கை.)

அந்த ஈசுவரத்தன்மை ஜீவத்தன்மைகளைக் கற்பிக்கும் இரண்டு உபா திகளெவை?என்று கேட்குமிடத்து அவ்விரண்டு உபாதிகளையும் கிரமமாகக் காட்டக்கருதிய ஆசிரியராகிய கிரந்தகர்த்தா முதலில் ஈசுவரனது உபாதியா கிய சக்திவடிவ மாயையை நிரூபிக்கிறார்:—

ऐश्वरी काचित् सर्ववस्तुनियामिका शक्तिः अस्ति ।

(சு-ம்)

ஈசுவரசம்பந்தி என்னும் எல்லாவஸ்துக்களையும் நியமிக்கும் ஓர்சக்தி இருக்கின்றது.

(வி-ம்.)

ஈசுவரனது உபாதியாயிருத்தலால் ஈசுவரசம்பந்தியாகிய சகலவஸ்துக் களையும்(பிரகதாரணியக உபநிஷத்தின் மூன்றாவது அத்தியாயத்துள்ள அந் தர்யாமிப்பிராஹ்மணத்திற் கூறியபிருதிவிமுதலிய நியமத்தில் வைக்கத்தக்க வைகளான சகல வஸ்துக்களையும்) நியமனஞ்செய்யும் *௬0. ஓர் சக்தி யிருக் கின்றது.

* ௬0. ஓர் என்பது சத்தசத்துத்தன்மைமுதலிய வடிவாகச் சொல்லக்கூடாத தென்பதாம். இங்கே முதலியவெனுஞ் சொல்லால் சக்திக்குச் சத்து அசத்து சத்தசத் தாகிய இருவடிவம் அதிஷ்டானப்பிரஹ்மத்தினும் பின்னம் அல்லது அபின்னம் அல் லது பின்னாபின்னம் என்னும் இரண்டுவடிவம், நிரவயவம் அல்லது சாவயவம் அல் லது நிரவயவசாவயவமாகிய இருவடிவ மென்னும் எவ்வடிவமும் சம்பவியா தென் பது கொள்ளப்படும். இப்படி எத்தர்மத்தினாலும் நிரூபிக்கக்கூடாததாயிருத்தலால் சக்தி அநிர்வசநீயமாம்.

(அ-கை)

அப்படியானால் அந்தச் சக்தி எங்கே யிருக்கின்றது? ஏன் தோற்ற வில்லை? என்றாசங்கித்துக் கூறுகின்றார்:—

आनंदमयं आरभ्य सर्वेषु वस्तुषु गूढा ॥

(சு-ம்)

அது ஆநந்தமயகோசமுதற்கொண்டு சகல பதார்த்தங்களிலு மறைந் திருக்கின்றது.

(வி-ம்.)

அந்தச் சக்தி ஆநந்தமயமுதற்கொண்டு பிரஹ்மாண்டம்வரையிலுள்ள சகல பதார்த்தங்களிலும் மறைந்திருக்கின்றது; அதனால் தோற்றவில்லை என்பது பொருள். (௬அ)

[உ௧௬] वस्तुधर्मा नियम्येरञ्छक्त्या नैव यदा तदा ।
अन्योऽन्यधर्मसांकर्याद्विप्लवेत जगत्खलु ॥ ३९ ॥

(அ-கை.)

அப்படியானால் நியமமாகத் தோன்றுதிருக்கும் சக்திக்கு ஏன் அசத்துத்தன்மை யுண்டாகாதென் றாசங்கித்து, ஜகத்தை நியமஞ்செய்வது வேறுவிதமாக அதாவது சக்தியாகிய காரணமின்றிச் சம்பவியாமையால், அந்த ஜகத்தை நியமிக்கும் சக்தி அவசியம் அங்கீகரிக்கத்தக்கதாமெனக் கூறுகின்றார்:—

वस्तुधर्मा यदा शक्त्या न एव नियम्येरन् तदा अन्योऽन्यधर्मसांकर्यात् खलु जगत् विप्लवेत ॥

(சு-ம்.)

வஸ்துவின் தர்மங்கள் எப்போது சக்தியினால் நியமத்தில் வைக்கப்படவில்லையோ அப்போது ஒன்றன்தர்மம் ஒன்றிற் கலத்தலால் பிரசித்தமான ஜகத்து நாசத்தையடையும்.

(வி-ம்.)

பிருதிவிமுதலிய பதார்த்தங்களின் தர்மமாகிய கடினத்தன்மைமுதலியன மாயாசக்தியினால் வியவஸ்தை யடையாவிடின், அந்தத் தர்மங்கள் ஒன்றற்கொன்று கலத்தலால் (கலப்பால் ஓரிடத்து நிலைத்தலினால்) பிரபஞ்சம் நியமமின்றிய வியவகாரத்திற்கு விஷயமாதல்வேண்டு மென்பது பொருள்.

இங்கே மூலத்திலுள்ள பிரசித்த மென்னும் பொருளுடைய கலு கலு வென்னும் சொல் சக்தியின்றி ஜகத்து நியமமுடையதாகா தென்பது பிர சித்தமா மென்பதனை அறிவிக்கின்றது. (௩௯)

[உ௧௪] चिच्छायावेशतः शक्तिश्चेतनेव विभाति सा ।
तच्छक्त्युपाधिसंयोगाद्ब्रह्मैवेश्वरतां व्रजेत् ॥ ४० ॥

(அ-கை.)

அப்படியானல் ஜடமாகிய இந்தச் சக்திக்கு ஜகத்தின் நியாமகத்துவம் (நியமிக்குந்தன்மை) பொருந்தாதென் றாசங்கித்துக் கூறுகின்றார்:—

सा शक्तिः चिच्छायाऽऽवेशतः चेतना इव विभाति ॥

(சு-ம்)

அந்தச் சக்தி சேதனமாகிய பிரஹ்மத்தினது ஆபாசத்தின் (சாயையின்) ஆவேசத்தால் சேதனத்தைப்போல விளங்குகின்றது.

(வி-ம்.)

அந்தச் சக்தி சிதாபாசனது (சித்துப்போலியின்) பிரவேசத்தால் சேதனத்தைப்போல அதாவது சேதனத்தன்மையினை அடைந்ததுபோலத் தோற்றுகின்றது. ஆதலால் இந்தச் சக்திக்கு நியாமகத்துவம் பொருந்துகின்றது என்பது பொருள்.

௩. மாயையாகிய உபாதியினல் பிரஹ்மத்திற்கு ஈசுவரத்தன்மையாமெனல்.

(அ-கை.)

அப்படியானல் இவ்வாறு சக்திக்கு ஜகத்தின் நியாமகத்துவம் இருக்குக. இதனல் பிரஹ்மம் ஈசுவரத்தன்மை அடைவதான பிரசங்கத்தில் என்ன வந்ததெனக் கூறுகின்றார்:—

तच्छक्त्युपाधिसंयोगात् ब्रह्म एव ईश्वरतां व्रजेत् ॥

(சு-ம்.)

அந்தச் சக்தியாகிய உபாதியின் சம்பந்தத்தால் பிரஹ்மமே ஈசுவரத் தன்மையை யடைகின்றது.

(அ-கை.)

அந்தச் சிதாபாசனேடுகூடிய சக்தியே உபாதியாம். அதனேடுள்ள கற்பிததாதாத்மியசம்பந்தத்தால் சத்தியமுதலிய இலக்ஷணமுடைய பிரஹ்மமே சர்வஞ்ஞத்துவமுதலிய தர்மத்தின் சம்பந்தமுடைமையாகிய ஈசுவரத்தன்மையை யடைகின்றது. (௪0)

அ. பஞ்சகோசவடிவ உபாதியினல் பிரஹ்மத்திற்கு ஜீவத்தன்மையா மெனல்.

[உ௪௫] कोशोपाधिविवक्षायां याति ब्रह्मैव जीवताम् ।
पिता पितामहश्चैकः पुत्रपौत्रौ यथा प्रति ॥ ४१ ॥

(அ-கை.)

ஜீவத்தன்மையின் உபாதியாகிய பஞ்சகோசங்களை முன்னமே கஎசு-கஅச சுலோகங்களில் கூறியிருத்தலால் அந்தப் பஞ்சகோசவடிவ நிமித்தத்தாலாகிய பிரஹ்மத்தின் ஜீவத்தன்மையை இப்போது கூறுகின்ரூர் :—

कोशोपाधिविवक्षायां ब्रह्म एव जीवतां याति ॥

(சு-ம்.)

பஞ்சகோசமாகிய உபாதியின் பார்வையால் பிரஹ்மமே ஜீவத்தன்மையை யடைகின்றது.

(வி-ம்.)

பஞ்சகோசமாகிய உபாதியெனப்படும் விசேஷணத்தைப் பரியாலோசனை செய்யுங்கால், சக்தியாதி லக்ஷணமுடைய பிரஹ்மமே ஜீவத்தன்மையை அதாவது "ஜீவ" னென்னும் வியவகாரத்திற்கு விஷயமாகுந்தன்மையை யடைகின்றது.

ஞ. ஒரேபிரஹ்மத்திற்கு ஜீவேசுவரத்தன்மைகள் திருஷ்டாந்தத்தாற் சம்பவித்தல்.

(அ-கை.)

அப்படியானல் ஒரேவஸ்து விரோதமுடைய இரண்டு தர்மங்களின் சம்பந்தமுடையதாதல் ஒருகாலத்தும் ஓரிடத்துங் கண்டதில்லையே யென்று சங்கித்துக் கூறுகின்ரூர் :—

यथा एकः पुत्रपौत्रौ प्रति पिता च पितामहः ॥

(சு-ம்.)

எப்படி ஒரே புருஷன் புத்திரனையும் பௌத்திரனையும் நோக்கித் தகப்பனும் பாட்டனு மாகின்ரூனே அதுபோலவாம்.

(வி-ம்.)

எப்படி ஒரே தேவதத்தன் ஒரேகாலத்தில் புத்திரனைக்குறித்துப் பிதாவும் பௌத்திரனைக்குறித்துப் பாட்டனு மாகின்ரூனே, அதுபோலப்

பிரஹ்மமும் கோசமாகிய உபாதியைக்குறித்து ஜீவனும், சக்திவடிவமாயையாகிய உபாதியைக்குறித்து ஈசுவரனு மாகின்றது என்பது பொருள். (சக)

உ. பிரஹ்மத்திற்கு வாஸ்தவமான ஜீவத்தன்மைஈசுவரத்தன்மைகள் இல்லையெனல் உகசு-உகஎ.

க. திருஷ்டாந்தத்தினால் பிரஹ்மத்திற்கு உபாதியின்றி ஜீவேசுவரத் தன்மைகளில்லையெனல்.

[உகசு] पुत्रादेरविवक्षायां न पिता न पितामहः ।
तद्वन्नेशो नापि जीवः शक्तिकोशाविवक्षणे ॥ ४२ ॥

(அ-கை.)

வாஸ்தவமாகவோ ஜீவத்தன்மையும் ஈசுவரத்தன்மையும் பிரஹ்மத்திற்கு இல்லை என்பதைத் திருஷ்டாந்தத்தோடு கூறுகின்றார் :—

पुत्रादेः अविवक्षायां पिता न पितामहः न । तद्वत् शक्तिकोशाविवक्षणे ईशः न ज़ीवः अपि न ॥

(சு-ம்)

புத்திரபௌத்திரர்களை நோக்காதபோது அத்தேவதத்தன் பிதாவுமாகான் ; பாட்டனுமாகான். அதுபோலச் சக்தியையும் பஞ்சகோசங்களையும் நோக்காதவிடத்துப் பிரஹ்மம் ஈசுவரனு மாகாது ; ஜீவனு மாகாது. (சஉ)

உ. சுலோகம் உகசு-ல் கூறிய பிரஹ்மஞானத்தின் பயன்.

[உகஎ] य एवं ब्रह्म वेदैष ब्रह्मैव भवति स्वयम् ।
ब्रह्मणो नास्ति जन्मातः पुनरेष न जायते ॥ ४३ ॥

(அ-கை.)

இப்போது முற்கூறிய ஜீவப்பிரஹ்மங்களின் அபேதநிச்சயவடிவ ஞானத்தின் பலத்தைக் கூறுகின்றார் :—

यः एवं ब्रह्म वेद एषः स्वयं ब्रह्म एव भवति ॥

(சு-ம்.)

எவன் இப்படிப் பிரஹ்மத்தை யறிகிறானோ அவன் தான் பிரஹ்மமே யாகின்றான்.

(வி-ம்.)

எந்தவிவேகமுடைய நான்கு சாதனத்தோடுகூடிய அதிகாரி இப்படி முற்கூறியவண்ணம் பஞ்சகோசவிவேகபூர்வகமாகப் பிரத்தியகாத்மாவிற்கு அபின்னமாகிய சச்சிதாநந்தலக்ஷணப்பிரஹ்மத்தை அறிகிறானோ அதாவது சாக்ஷாத்கரிக்கின்றானோ அவன் தான் பிரஹ்மமே யாகின்றான். "स यो ह वै तत्परमं ब्रह्म वेद ब्रह्मैव भवति " " ब्रह्मविदाप्नोति परम् " என்தப் புருஷன் நிச்சய

மாக இந்த மேலான பிரஹ்மத்தை யறிகின்றானோ அவன் பிரஹ்மமே யாகிறான்." "பிரஹ்மவித்து பர(பிரஹ்ம)த்தை அடைகிறான்." என்னும் இவைமுதலியசுருதிகளால் இந்த ஞானிக்கு பிரஹ்மப்பிராப்தியாகிய அர்த்தம் சித்திக்கின்றது.

(அ-கை.)

அந்தப் பிரஹ்மப்பிராப்தியால் என்ன உண்டாகின்றதெனக் கூறுகின்றார்:—

**ब्रह्मणः जन्म नास्ति अतः एषः पुनः न जायते ॥**

(சு-ம்.)

பிரஹ்மத்திற்குப் பிறப்பில்லை. ஆகையால் இவன் (பிரஹ்மவித்து) மறுபடியும் பிறக்கிறதில்லை.

(வி-ம்.)

" न जायते म्रियते वा विपश्चित् விபச்சித்து அதாவது எல்லாவற்றிற்கும் சாக்ஷியாகிய பிரஹ்மம் பிறக்கிறது மில்லை; இறக்கிறது மில்லை." என்பன முதலிய சுருதியால் முதலிற் பிரஹ்மத்திற்கு ஜன்ம மில்லை. இதனாற்றானே வித்துவானாகிய ஞானியும் தன்னைப் பிரஹ்மரூபமாக அறிதலால் * சக. பிறக்கிறதில்லை; " न स पुनरावर्तते அந்த ஞானி ஜன்மமுதலிய சம்சாரத்தில் மறுபடியும் வருதலாகிய புநராவிருத்தியை யடைகிறதில்லை" என்னுஞ் சுருதியால். (சங)

## பஞ்சகோசவிவேக மென்னும்
## மூன்றும்பிரகரணம்.
## முடிந்தது.

---

சக. எப்படி நிர்விகார குந்திபுத்திரனாகிய கர்ணனிடத்தில் இராதாபுத்திரனென்னும் அடிமைத்தன்மையின் தோற்ற முண்டாயிற்றோ, அதுபோல நிர்விகார சிதாநந்தகனமாகிய பிரஹ்மத்தில் அவித்தையினால் ஜீவத்தன்மையின் தோற்றமுண்டாகின்றது. ஆகையால் எல்லோரும் எப்போதும் பிரஹ்மவடிவமாயிருத்தலால் வாஸ்தவமாக ஜன்மமுதலிய சம்சாரம் இல்லவே யில்லை. என்றாலும், அவித்தையினாலாகிய ஜீவத்தன்மையால் அஞ்ஞானிகளுக்குத் தம்மில் பிறப்புமுதலியவற்றின் தோற்ற முண்டாகின்றது. சூரியனது வசனத்தால் கர்ணனுக்குக் குந்திபுத்திரத்தன்மையின் ஞானத்தால் இராதாபுத்திரனென்னுந்தன்மை நீங்கியதுபோல ஞானிக்குக் குருவுபதேசத்தால் நிர்விகாரமாகிய தனது பிரஹ்மத்தன்மையின் ஞானத்தால் நேத்திரத்தை மறைக்குந் தோஷத்தைப்போலத் தன்னை மறைக்கும் அவித்தையின் அம்சம் நீங்கும் வாயிலாக ஜன்மமுதலிய சம்சாரத்தின் நிவிருத்தி தோற்றுகின்றதென்பது தாற்பரியம்.

ஓம்தத்ஸத்பிரஹ்மணேநம:

# ஸ்ரீ பஞ்சதசி.

## ௪. $ துவைதவிவேகம்.

### நான்காம்பிரகரணம்.

கிரந்தாரம்பத்தின் பிரதிஞ்ஞையும் பிரயோஜனமும்.

[௨௧௮] ईश्वरेणापि जीवेन सृष्टं द्वैतं प्रपंच्यते ।
विवेके सति जीवेन हेयो बंधः स्फुटीभवेत् ॥ १ ॥

(அ-கை.)

செய்யக்கருதிய நூல் இடையூறின்றி இனிதுமுடியும்பொருட்டு இஷ்டதேவதையாகிய பரமேசுவரனது தத்துவத்தை ஸ்மரித்தலாகிய மங்கலத்தை ஆசரிக்கின்றவராகிய ஆசாரியர், இந்தத் துவைதவிவேகம் வேதாந்த சாஸ்திரமாகிய சாரீரகமுதலியவற்றின் பிரகரணமாயிருத்தலால் வேதாந்த சாஸ்திரத்தின் நான்கு அநுபந்தங்களே இந்தத் துவைதவிவேகத்திற்குமாமென்பதனால் வேதாந்தசாஸ்திரத்தின் நான்கு அநுபந்தங்களும் இதிற்சித்தித்துள்ளதாக அறிந்து கிரந்தாரம்பத்தைப் பிரதிஞ்ஞைசெய்கின்றார்:—

ईश्वरेण जीवेन अपि सृष्टं द्वैतं प्रपंच्यते ॥

(சு-ம்.)

ஈசுவரனாலும் ஜீவனாலும் உண்டாக்கப்பட்ட பிரபஞ்சம் விவேகிக்கப்படுகின்றது.

(வி-ம்.)

மாயைவடிவ காரணவுபாதியுடைய அந்தரியாமியாகிய ஈசுவரனாலும், அந்தக்கரணவடிவ காரியவுபாதியுள்ள நானென்னும் பிரத்தியயமுடைய ஜீவனாலும் உண்டாக்கப்பட்ட துவைதமான ஜகத்து விவேகிக்க(வேறுபிரித்துக்காட்ட)ப்படுகின்றது.

---

$இரண்டுவிதத்தினையடைவது எதுவோ அது துவைதமாம்(ஜகத்தாம்). அதன் விவேகம் அதாவது ஜீவனாற்செய்யப்பட்ட ஜகத்து ஈசுவரனாற்செய்யப்பட்ட ஜகத்து என்றல்முதலிய பேதமாக விவேகித்தல் எதிலிருக்கின்றதோ அது துவைதவிவேகமாம்.

(அ-கை.)

இத்துவைதவிவேகம் காகத்தின் பற்களைப் பரீக்ஷித்தல்போல நிஷ்பிரயோஜனமா மென்பதை நிவிருத்திக்கின்றார் :—

विवेके सति जीवेन हेयः बंधः स्फुटीभवेत् ॥

(சு-ம்.)

வேறுபிரித்தறிந்தால் ஜீவனால் தள்ளத்தக்க ஜநந்துவடிவபந்தம் வெளிப்படையாகின்றது.

(வி-ம்.)

விவேகிக்கின் அதாவது ஜீவேசுவரர்களால் உண்டாக்கப்பட்ட இரண்டு துவைதப்பிரபஞ்சத்தையும் வேறுபிரித்தறியின், * க. முற்கூறிய ஜீவனாற் றள்ளத்தக்க பந்தம் அதாவது சுகதுக்கவடிவ பந்தத்திற்கே ஏதுவாகிய துவைதம் (ஜகத்து) ஸ்பஷ்டத்தன்மை யடைகின்றது. இதன் பொருள் :- இவ்வளவு துவைதந்தான் ஜீவனுக்கு விடத்தக்கதா மென்று நிச்சயிக்கப்படுகின்றது. (க)

க. ஈசுவரனும் ஜீவனும் ஜகத்திற்குக் கர்த்தாவாமாறு. உ௧௧—உ௫௧.

க. ஈசுவரனால் உண்டாக்கப்பட்ட பிரபஞ்சம் உ௧௧—உ௩0.

க. ஈசுவரன் ஜகத்தைப் படைப்பவ னென்பதில் சுருதிப்பிரமாணம்.

[உ௧௧] मायां तु प्रकृतिं विद्यान्मायिनं तु महेश्वरम् ।
स मायी सृजतीत्याहुः श्वेताश्वतरशाखिनः ॥ २ ॥

(அ-கை.)

அப்படியானால் அதிருஷ்டமாகிய தர்மாதர்மவாயிலாக ஜீவர்களுக்கே ஜகத்காரணத்துவத்தைச் சிலமீமாம்ஸகர்முதலிய வாதிகள் வர்ணிக்கின்றார்கள். ஆகையால் உம்மால் ஜகத்து ஈசுவரனால் உண்டாக்கப்பட்டதென்று எப்படிச் சொல்லப்படுகின்றதென் றாசங்கித்து, அநேக சுருதிகளுக்கு விரோதமா யிருத்தலால் இந்த ஜகத்து ஜீவனா லுண்டாக்கப்பட்டதேயாம்; ஈசுவரனாலுண்டாக்கப்பட்ட தன்று என்னும் அற்புதமாகிய வினா எழுப்பத்தக்கதன்று என்னும் அபிப்பிராயமாகக் கிருஷ்ணயஜுர்வேதத்திலுள்ள சுவேதாசுவதர உபநிஷத்தின் வாக்கியத்தை முதலில் அர்த்தரூபமாகச் சொல்லுகின்றார் :—

---

* க. முன் பஞ்சகோசவிவேகப்பிரகரணத்திற் சொல்லப்பட்ட பஞ்சகோசவடிவ உபாதியுடைய ஜீவனால்.

"मायां तु प्रकृतिं विद्यात् मायिनं तु । महेश्वरं सः मायी सृजति" इति श्वेताश्वतरशाखिनः आहुः ॥

(சு-ம்)

மாயையை உபாதானகாரணமான பிரகிருதியாகவும், மாயைக்கு அதிஷ்டானமாகிய பிரஹ்மத்தை நிமித்தகாரணமான மகேசுவரனாகவும் அறிய வேண்டும். அந்த மாயையையுபாதியாகவுடைய பரமேசுவரன் ஜகத்தையுண்டாக்குகின்றார் என்று சுவேதாசுவதரசாகையை உடையவர்கள் சொல்லுகின்றார்கள்.

(வி-ம்.)

மாயையைப் பிரகிருதியாகவும் மாயியை மகேசுவரனாகவும் அறிக என்று மாயையை உபாதியாகவுடைய ஈசுவரனைப் பிரசங்கத்தில் வந்ததாகச் செய்து "இக்காரணத்தால் மாயி அதாவது மாயாவி ஈசுவரன் இந்த ஜகத்தைச் சிருஷ்டிக்கின்றான்" என்று அந்த மாயாவிசிஷ்ட ஈசுவரனுக்கே ஜகத்தின் சிருஷ்டிகர்த்திருத்துவத்தைச் சுவேதாசுவதரசாகையையுடைய பிராஹ்மணர் வர்ணிக்கின்றனர் என்பது பொருள். (உ)

[உஉ0] आत्मा वा इदमग्रेऽभूत्स ईक्षत सृजा इति ।
संकल्पेनासृजल्लोकान्स एतानिति बह्वृचाः ॥ ३ ॥

(அ-கை.)

இப்போது இருக்குவேதத்திலுள்ள ஐதரேயவுபநிஷத்தின் வாக்கியத்தை அர்த்தத்தால் கிரமந்தவறாது கூறுகின்றார் :—

"इदं अग्रे आत्मा वा अभूत् सः सृजै इति ईक्षत । सः संकल्पेन एतान् लोकान् असृजत्" इतिः बह्वृचाः ॥

(சு-ம்.)

"இது முன் ஆத்மாவாகவே இருந்தது. அவர் யான் உலகங்களைச் சிருஷ்டிப்பேன் என்று ஆலோசித்தார். அவர் சங்கற்பத்தால் இந்த உலகங்களைச் சிருஷ்டித்தார்" என்று இருக்குசாகையுடையவர் சொல்லுகிறார்கள்.

(வி-ம்.)

"अत्मा वा इदम् एक एव अग्रे आसीन्नान्यत्किंचनमिषत् स ईक्षत लोकान् नु सृजै इति स इमान् लोकान् असृजत ॥ சிருஷ்டிக்கு முன் இந்த ஜகத்து நிச்சயமாக ஒரே ஆத்மாவாயிருந்தது. கிரியையுடைய மற்றது யாதுமிருந்ததில்லை. 'அப்பர

மாத்மா உலகமாகிய பிரஜைகளை நான் சிருஷ்டிப்பே'னென்று ஆலோசனையாகிய சங்கற்பஞ்செய்தார். அவர் இவ்வுலகங்களைச் சிருஷ்டித்தார்.'' என்னு மிவ்வாக்கியத்தால் அத்துவிதீயபரமாத்மாவிற்கே ஜகத்கர்த்திருத்துவத்தினை இருக்குவேதத்தின் சாகையை அத்தியயனஞ்செய்யும் பிராஹ்மணர் கூறுகின்றனர் என்பது பொருள். (௩)

[உஉ௧] खं वाय्वग्निजलोर्व्योषध्यन्नदेहाः क्रमादमी ।
संभूता ब्रह्मणस्तस्मादेतस्मादात्मनोऽखिलाः ॥ ४ ॥

(அ-கை.)

ஈசுவரன் ஜகத்திற்குக் காரண மென்பதில் கிருஷ்ணயஜுர்வேதத்தினுள்ள தைத்திரீயசுருதியும் பிரமாணமா மென்னும் அபிப்பிராயமாக அந்தத் தைத்திரீயவுபநிடத்தின் வாக்கியத்தை இரண்டு சுலோகங்களால் அர்த்தத்தாற் சொல்லுகின்றார் :—

खं वाय्वग्निजलोर्व्योषध्यन्नदेहाः अमी अखिलाः क्रमात तस्मात् एतस्मात आत्मनः ब्रह्मणः संभूताः ॥

(சு-ம்.)

ஆகாயம் வாயு அக்கினி ஜலம் பிருதிவி ஓஷதி அந்நம் தேகம் என்னும் யாவும் கிரமமாக * உ. அந்த அல்லது * ௩. இந்த ஆத்மாவாகிய பிரஹ்மத்தினின்றும் உண்டாயின. (௪)

[உஉஉ] वहु स्यामहमेवातः प्रजायेयेति कामतः ।
तपस्तप्त्वाऽसृजत्सर्वं जगदित्याह तित्तिरिः ॥ ५ ॥

(அ-கை.)

இதுவுமது.

"अहम् एव वहुस्यां अतः प्रजायेय इति कामतः तपः तप्त्वा सर्वं जगत् असृजत्" इति तित्तिरिः आह ॥

(சு-ம்.)

"நானே அநேகமாக ஆகக்கடவேன்; ஆகையால் பிருதியாக ஆகக்கட

* உ. வேதத்தின் அளவுபட்ட அக்ஷரவடிவ மந்திரத்தின் பாகத்தால் பிரதிபாதிக்கப்பட்ட.

* ௩. வேதத்தின் அளவுபடாத அக்ஷரவடிவப் பிராஹ்மணபாகத்தால் பிரதிபாதிக்கப்பட்ட.

வேன் என்னும் விருப்பத்தால் தபத்தைத் தபித்துச் சகல ஜகத்தையும் சிருஷ்டித்தார்" என்று தைத்திரீய உபநிஷதஞ் சொல்லுகின்றது.

(வி-ம்.)

தைத்திரீயசுருதியில் सत्यं ज्ञानमनंतं ब्रह्म சத்தியஞான அநந்தவடிவம் பிரஹ்மமாம்" என்று ஆரம்பித்துப் பிரஹ்மத்தின் இலக்ஷணத்தைச் சொல்லி, " तस्मात् वा एतस्मादात्मनः आकाशः संभूतः அந்த அல்லது இந்த ஆத்மாவிற் கபின்னமாகிய பிரஹ்மத்தினின்றும் ஆகாயமுண்டாயிற்று" என்பதுமுதல் " अन्नात्पुरुषः அந்நத்தினின்று வீரியவாயிலாகப் புருஷனாகிய தேக முண்டாயிற்று" என்பது வரையிலும் உள்ள வாக்கியங்களால் பஞ்சகோச குகையிலிருத்தலால் பிரத்தியகாத்மாவிற்கு வேறாகப் பிரஹ்மத்தினின்றும் ஆகாயமுதல் தேகபரியந்தமாயுள்ள ஜகத்துண்டாயிற் றென்று முன் ௨௨௧-வது சுலோகத்திற் சொல்லி, அதன் மேலும் " सोऽकामयत बहुस्यां प्रजायेय इति स तपो तप्यत स तपस्तप्त्वा इदं सर्वमसृजत यदिदं किंचन। அநேகமாக ஆவிர்ப் பவிப்பேன் மிகுதியாக ஆகக்கடவேன் என்று அப்பரமேசுரன் இச்சித் தார். மறுபடியும் அப்பரமேசுரன் தபத்தை அதாவது விசாரத்தினால் பார்த்தலாகிய பரியாலோசனையைச் செய்தார். அவர் தபத்தைச் செய்து யாதொன்று (ஜகத்து) இருக்கிறதோ இவ்வெல்லாவற்றையும் சிருஷ்டித் தார்" என்னும் வாக்கியத்தால் அதே பிரத்தியகபின்ன பிரஹ்மம் ஜகத் தைச் சிருஷ்டிக்கும் இச்சாபூர்வகமாகிய * ச. பரியாலோசனையால் ஜகத்திற் குச் சிருஷ்டிகர்த்தாவாதலைத் தைத்திரீயசுருதி கூறுகின்றதென்பது பொருள். (௫)

[௨௨௫] इदमग्रे सदेवासीद्बहुत्वाय तदैक्षत।
तेजोऽबन्नांडजादीनि ससर्जेति च सामगाः ॥ ६ ॥

(அ-கை.)

சாமவேதத்திலுள்ள சாந்தோக்கிய மென்னும் உபநிஷத்திலும் பிரஹ் மத்திற்கே சிருஷ்டிக்குந்தன்மை கேட்கப்பட்டிருக்கின்றதென்று கூறுகின் றார்:—

अग्रे इदं सत् एव आसीत् तत् बहुत्वाय ऐक्षत च तेजोऽबन्नांडजादीनि ससर्ज " इति सामगाः ॥

(சு-ம்.)

" சிருஷ்டிக்குமுன் இந்த ஜகத்து சத்தாகிய பிரஹ்மமாகவே இருந்

---

* ச. பரியாலோசனை மாயையின் பரிணாமமாகிய ஞானதிருஷ்டி.

தது. அந்தப்பிரஹ்மமாகிய ஈசன் அநேகமாவதற்கு ஆலோசித்தார். அவர் அக்கினி ஜலம் அந்நரூப பிருதிவி அண்டஜம்முதலியவற்றைச் சிருஷ்டித்தார்" என்று சாமவேதிகள் சொல்லுகின்றனர்.

(வி-ம்.)

சாந்தோக்கிய உபநிஷத்தில் " सदेव सोम्येदमग्र आसीत् एकमेवाद्वितीयम् । காட்சிக்கினிய சுவேதகேதுவே! முன் இந்த ஜகத்து ஒரே அத்துவிதீய விவர்த்தோபாதானசத்துவடிவமாக இருந்தது" என்று சத்துரூபமாகிய அத்துவிதீயப்பிரஹ்மத்தை ஆரம்பித்து, " तदैक्षत बहुस्यां प्रजायेयेति तत्तेजोऽसृजत அநேகமாவேன், மிகுதியாக ஆவேன் என்று அந்தச்சத்துரூபப் பிரஹ்மம் ஈக்ஷித்தது அதாவது ஆலோசனைசெய்தது; தேயுவைப் படைத்தது." என்பதுமுதல் அந்தப் பிரஹ்மத்திற்கே ஞானதிருஷ்டிவடிவ ஈக்ஷணபூர்வகமாகத் தேயு அப்பு அந்நங்களுக்குச் சிருஷ்டா(சிருஷ்டிகர்த்தா)வாதலைக் கூறி, " तेषां खल्वेषां भूतानां त्रीण्येव बीजानि भवंत्यंडजं जरायुजमुद्भिज्जम् " அந்தப் பிரசித்த இந்தப்பூதங்களாகிய பிராணிசரீரங்களின் * ௩. மூன்று பீஜங்களே உண்டாகின்றன. அவை அண்டஜமான பக்ஷி பாம்புமுதலியனவும், ஜராயுஜமான மனிதர் பசுமுதலியனவும், உற்பிஜ்ஜமான விருக்ஷமுதலியனவுமாம்" என்பவைகளால் அண்டஜமுதலிய சரீரங்களையுண்டாக்கும் கர்த்தாவாதலைச் சாமவேதத்தைக் கானஞ்செய்யும் பிராஹ்மணர்கள் வர்ணிக்கின்றனர் என்பது பொருள். (சு)

[உஉசு] विस्फुलिंगा यथा वह्नेर्जायंतेऽक्षरतस्तथा ।
विविधाश्चिज्जडा भावा इत्याथर्वणिका श्रुतिः ॥ ७॥

(அ-கை.)

அதர்வணவேதத்திலுள்ள முண்டகமென்னும் உபநிஷத்திலும் " तदेतत्सत्यं यथा सुदीप्तात्पावकाद्विस्फुलिंगाः सहस्रशः प्रभवंते सरूपास्तथाऽक्षराद्विविधाः सोम्य भावाः प्रजायंते तत्र चैवापियंति அந்த இந்தப் பிரஹ்மம் சத்தியமாம். எப்படிச் சொலிக்கின்ற அக்கினியினின்றும் அநேகமாயிரம் பொறிகள் மிகுதியாக உண்டாகின்றனவோ அதுபோலச் சௌமியனே! அக்ஷரப் பிரஹ்மத்தினின்றும் வடிவத்தோடு பலவித பாவபதார்த்தங்கள் மிகுதியாக உண்டாகின்றன. மறுபடியும் அந்த அக்ஷரசப்தத்திற்கு அர்த்தமாகிய பிரஹ்மத்தினிடத்திலேயே இலயமாகின்றன" என்றிவ்வாறு அக்ஷரசப்

* ௩. இங்கே மூன்றெனும் பதம் நான்காவதாகிய சுவேதஜ மென்னும் வியர்வையாலுண்டாகும் பேன்முதலியவற்றிற்கும் உபலக்ஷணமாம்.

தத்திற்கு வாச்சியார்த்தமாகிய பிரஹ்மத்தினின்றும் ஜகத்தின் உற்பத்தி கேட்கப்படுகின்றது எனக் கூறுகின்றார்:—

" यथा वह्नेः विस्फुलिंगाः जायंते । तथा अक्षरतः विविधाः चिज्जडाः भावाः " इति आथर्वणिका श्रुतिः ॥

(சு-ம்.)

* சு. எப்படி அக்கினியினின்றும் பொறிகளாகிய சூக்ஷ்ம அம்சங்கள் உண்டாகின்றனவோ, அதுபோல அவிநாசியாகிய பிரஹ்மத்தினின்றும் நாநாவிதமாகிய ஜங்கமஸ்தாவரங்களாகிய பதார்த்தங்கள் உண்டாகின்றன என்று அதர்வணவேதத்தின் முண்டகோபநிஷத்து சொல்லுகின்றது. (எ)

[உஉ௬] जगदव्याकृतं पूर्वमासीद्व्याक्रियताधुना ।
दृश्याभ्यां नामरूपाभ्यां विराडादिषु ते स्फुटे ॥ ८ ॥

(அ-கை.)

இவ்வாறு சுக்கில எஜுர்வேதத்திலுள்ள பிரகதாரண்யக மென்னும் உபநிஷத்திலும் அவ்வியாகிருத மென்னுஞ் சொல்லிற்கு வாச்சியார்த்தமாகிய பிரஹ்மத்தினின்றும் நாமரூபஜகத்து உண்டாயிற்று என்பதாகக் கேட்கப்பட்டிருக்கின்றது என்று இரண்டு சுலோகங்களாற் கூறுகின்றார் :—

---

* சு. மகாதேஜசாகிய அக்கினிக்கு ஒன்று சாமானியவடிவம்; மற்றொன்று விசேஷவடிவம். அவற்றுள், நிரூபாதிகம் அக்கினியின் சாமாநியவடிவம். அது ஜலத்தினும் சூக்ஷ்மமும், பத்துமடங்கு வியாபகமுமாம். காஷ்டமுதலிய உபாதிகளையுடையது அக்கினியின் விசேஷவடிவும். அது உபாதிகளின் பேதத்தால் பலவகையும் பரிச்சின்னமுமாம். இங்கே சோபாதிக அக்கினியின் புஞ்சமாகிய கூட்டத்தினின்றும் உபாதியின் அம்சங்களால் பொறி என்னும் அம்சம் உண்டானதுபோல அம்சங்களுண்டாகின்றன. மறுபடியும் உபாதியினது அம்சங்களின் இலயத்தால் இலயமாவதுபோல இலயமாகின்றன. வாஸ்தவமாகிய அக்கினிக்கு நாநாவிதமாகிய உற்பத்தியும் நாசமு மில்லை. அதுபோலச் சேதனத்திற்கும் சாமாநியம் விசேஷம் என்னும் பேதத்தால் இரண்டுவடிவ முண்டு. அவற்றுள், நிரூபாதிகப் பிரஹ்மம் சேதனத்தின் சாமான்யவடிவவாம். அது ஏகமும் வியாபகமுமாம். மாயை அவித்தை என்னும் உபாதிகளை விசேஷமாகவுடைய சிதாபாசன் சேதனத்தின் விசேஷவடிவமாம். அச்சிதாபாசன் நாநாவும் பரிச்சின்னமுமாம். அந்த விசேஷ அம்சத்திற்கு உபாதி அம்சத்தின் நாநாத்துவத்தால் நாநாவிதத்தன்மையும் உற்பத்தி இலயமுதலியவைகளுமுண்டு. வாஸ்தவசேதனத்திற்கு நாநாத்துவத்தால் உற்பத்தி இலயமுதலியவைகளில்லை. ஆகையால் ஜீவப்பிரஹ்மங்களுக்கு வாஸ்தவ அம்சாம்சிபாவ மில்லை. இது பிரசங்கத்தா லறிவிக்கப்பட்டது.

அம்சாம்சிபாவம்—அம்சம்=கூறு, அம்சி=கூறுடையது, பாவம்=தன்மை.

पूर्वं जगत् अव्याकृतं आसीत् । अधुना दृश्याभ्यां नामरूपाभ्यां व्याक्रियत । ते विराडादिषु स्फुटे ॥

(சு-ம்)

சிருஷ்டிக்குமுன் அவ்வியாகிருதமான பிரபஞ்சம் பிரஹ்மமா யிருந்தது. இப்போது சிருஷ்டிக்குப்பின் திருஷ்டாவின் விஷயமான திருசியங்களாகிய நாமரூபங்களால் வெளிப்பட்டது. அந்த நாமரூபங்கள் விராட்டு முதலிய காரியங்களில் பிரசித்தமா யிருக்கின்றன.

(வி-ம்.)

“ तद्धीदं तर्हि अव्याकृतमासीत् तत् नामरूपाभ्यां एव व्याक्रियता असौ नामायमिदँ रूपम् மாயையினுல் மறைக்கப்பட்ட சம்ஸ்காரமாகிய இப்பிரபஞ்சம் அப்போது சிருஷ்டிக்குமுன் அவ்வியாகிருதமாய் அதாவது மாயையை உபாதியாகவுடைய பிரஹ்மமா யிருந்தது. அந்த ஜகத்து நாமரூபங்களாலேயே இது (ஆகாயமுதலிய பதார்த்தம்) இப்பெயருடையது, இது இதற்கு வடிவம் என்றிப்படி வியாகிருதமா (வெளியா)யிற்று” என்னும் வாக்கியத்தால் சிருஷ்டிக்குமுன் வெளிப்படையில்லாத நாமரூபங்களோடுகூடி யிருத்தலால் அவ்வியாகிருத மென்னும் சப்தத்திற்கு வாச்சியமாகிய மாயையை உபாதியாகவுடைய பிரஹ்மத்தினின்றும் நாமரூபங்களை வெளிப்படுத்தலாகிய சிருஷ்டி (ஜகத்தினுற்பத்தி) சொல்லப்பட்டது. அந்த நாமரூபங்களுக்கு விராட்டுமுதலிய பஞ்சீகிருதபூதங்களினின்று முண்டாகிய ஸ்தூலகாரியங்களில் ஸ்பஷ்டத்தன்மை யிருக்கின்றது; அந்த ஸ்பஷ்டத்துவம், “तदिदमप्येतर्हि नामरूपाभ्यामेव व्याक्रियतेऽसौ नामायमिदं रूपम् அந்த இச்சகத்தும் சிருஷ்டிக்குப் பிந்தியகாலத்தில் ‘இது’ (கடாதி) இப்பெயருடையது; இது இதற்கு வடிவம்; என்று நாமரூபங்களினுலேயே ஸ்பஷ்டத்தன்மை யடைகின்றது” என்னும் வாக்கியத்தால் சொல்லப்பட்டிருக்கின்றது. அன்றியும், அந்த விராட்டுமுதலிய ஸ்தூலகாரியங்கள் “आत्मैवेदमग्र आसीत्पुरुषविध இந்த ஜகத்து முன்னே புருஷனென்னும் விசேஷணமுடைய ஆத்மாவாகவே யிருந்தது” என்பதுமுதல் “ एवमेव यदिदं किंच मिथुनमापिपीलिकाभ्यस्तत्सर्वमसृजत இப்படியே எறும்புமுதல் உள்ளனவாகிய இந்த ஸ்திரீபுருஷமய ஜகத்துவடிவ மிதுனமெல்லாவற்றையும் சிருஷ்டித்தார்” என்பது வரையிலுள்ள வாக்கியங்களால் ஸ்தூலகாரியங்கள் காட்டப்பட்டிருக்கின்றன வென்பது பொருள். (அ)

[௨௨௬] विराण्मनुर्नरो गावः खराश्वाजावयस्तथा ।
पिपीलिकावधि द्वंद्वमिति वाजसनेयिनः ॥ ९ ॥

(அ-கை.)

விராட்டுமுதலிய சிருஷ்டியைப் பிரதிபாதிக்கும் முன் உஉ௫-வது சுலோகத்திற் கூறிய சுருதியின் அர்த்தத்தைக் கூறுகின்றார் :—

विराट् मनुः नरः गावः खराश्वाजावयः तथा पिपीलिकावधि द्वंद्वम् इति वाजसनेयिनः ॥

(சு-ம்.)

விராட்டு சுவயம்புமுதலிய மனுக்கள், மனிதர், பசுக்கள், கழுதைகள், குதிரைகள், ஆடுகள், பக்ஷிகள், அப்படியே எறும்புவரையிலுமுள்ள த்வைத மென்னும் ஸ்திரீபுருஷரூப மிதுனமாகிய ஜகத்தைச் சிருஷ்டித்தார் என்று வாஜஸநேயசாகையினையுடைய பிராஹ்மணர்கள் கூறுகின்றார்கள். (௯)

உ. பிரஹ்மம் ஜீவரூபமாக அந்தத் த்வைதத்திற் பிரவேசித்தல்.

[உஉ௭] कृत्वा रूपांतरं जैवं देहे प्राविशदीश्वरः ।
इति ताः श्रुतयः प्राहुर्जीवत्वं प्राणधारणात् ॥ १० ॥

(அ-கை.)

உதாகரணமாகச் சொல்லப்பட்ட சுருதிகளால் த்வைதமாகிய ஜகத்தின் சிருஷ்டி சொல்லியபின் பிரஹ்மத்திற்கு ஜீவரூபமாக அந்த விராட் சரீரமுதலிய ஜகத்தின் *எ. பிரவேசமும் சொல்லப்பட்டிருக்கின்றதென்று கூறுகின்றார் :—

ईश्वरः जैवं रूपांतरं कृत्वा देहे प्राविशत् । इति ताः श्रुतयः प्राहुः

(சு-ம்.)

" ஈசுவரன் ஜீவசம்பந்தமுள்ள வேறு சிதாபாசவடிவமாகத் தேகத்தில் பிரவேசித்தார்." என்று அந்தச் சிருஷ்டியைப் பிரதிபாதிக்கும் முற்கூறிய சுருதிகள் சொல்லுகின்றன.

(வி-ம்.)

சுருதிகள், ஜீவசம்பந்தமுள்ள அந்நிய அதாவது விகாரமில்லாத பிரஹ்மத்திற்கு விலக்ஷணமாகிய விகாரவடிவத்தைச் செய்துகொண்டு பரமேசுவரன் தேகசமூகத்திற் பிரவேசித்தார் என்று கூறுகின்றன வென்பது பொருள்.

---

* எ. தேகம் இந்திரிய முதலியவற்றின் அபிமானம் பிரவேச மெனப்படுகின்றது.

(அ-கை.)

அந்த விகாரிவடிவத்திற்கு ஜீவத்தன்மை எதனாலிருக்கின்றதெனக் கூறுகின்றார் :—

प्राणधारणात् जीवत्वं ॥

(சு-ம்)

பிராணனைத் தரித்தலால் ஜீவத்தன்மையாம்.

(வி-ம்.)

பிராணனாகிய இந்திரியமுதலியவைகளின் அபிமானிவடிவ எஜமானனாயிருத்தலாலாகும் பிரேரகத்தன்மையே பிராணதாரண மெனப்படுகின்றது. அதனால் இப்பரமேசுவரனுக்கு ஜீவத்தன்மை யுண்டு அதாவது ஜீவசம்பந்தமுள்ள உருவத்தாற் பிரவேசித்தார் என்று கூறியிருக்கின்றது. (க0)

௬. ஜீவனது சொரூபம்.

[உஉஅ] चैतन्यं यदधिष्ठानं लिंगदेहश्च यः पुनः ।
चिच्छाया लिंगदेहस्था तत्संघो जीव उच्यते ॥ ११ ॥

(அ-கை.)

அச்சீவத்தன்மை யாதென்று கேட்குமிடத்துக் கூறுகின்றார் :—

यत् अधिष्ठानं चैतन्यं । पुनः यः च लिंगदेहः । लिंगदेहस्था चिच्छाया । तत्संघः जीवः उच्यते ॥

(சு-ம்.)

யாதொரு அதிஷ்டானமாகிய சைதன்னிய முண்டோ அதுவும், யாதொரு இலிங்கதேக முண்டோ அதுவும், மறுபடியும் யாதொரு இலிங்கதேகத்திலுள்ள சேதனத்தின் சாயை யுண்டோ அதுவும் ஆகிய இம்மூன்றனது சேர்க்கையும் ஜீவனென்று சொல்லப்படுகின்றது.

(வி-ம்.)

இலிங்கதேகத்தின் கற்பனைக்கு ஆதாரமாகிய அதிஷ்டான மெனும் சைதன்னியமும் அதாவது கடாகாசஸ்தானத்திலுள்ள கூடஸ்தனும், அக்கூடஸ்தனிற் கற்பிக்கப்பட்ட இலிங்கதேகமும் அதாவது ஜலம் நிரம்பியகடஸ்தானத்திலுள்ளதும், அவ்விலிங்கதேகத்திலிருக்கும் சிதாபாசனும் அதாவது மகாகாயத்தின் பிரதிபிம்பஸ்தானத்திலுள்ள பிரஹ்மத்தின் பிரதிபிம்பமுமாகிய இம்மூன்றனது கூட்டமும் ஜீவசப்தத்தினால் சொல்லப்படுகின்றது என்பது பொருள். (கக)

ச. ஜீவனுக்கு மாயையினால் அஞ்ஞானமுடைமை துக்கமுடைமைமுதலிய மோகமுடைமை யுளதாதல்.

[உஉகூ] माहेश्वरी तु माया या तस्या निर्माणशक्तिवत्।
विद्यते मोहशक्तिश्च तं जीवं मोहयत्यसौ ॥ १२ ॥

(அ-கை.)

அப்படியானால் ஈசுவரன் ஜீவரூபமாகத் தேகங்களில் பிரவேசித்திருப்பாராயின் அந்த ஜீவரூபமாகிய ஈசுவரனுக்கு அஞ்ஞானமுடைமை, துக்கமுடைமைமுதலிய விரோதிதர்மங்களோடுகூடியதன்மை எப்படியாமென்றாசங்கித்துக் கூறுகின்றார்:—

माहेश्वरी तु या माया तस्या निर्माणशक्तिवत् मोहशक्तिः च विद्यते ॥

(சு-ம்.)

மாகேசுவரியாகிய மாயை எதுவோ அதற்கு நிர்மாணசக்தியைப்போல மோகசக்தியு மிருக்கின்றது.

(வி-ம்.)

"मायिनं तु महेश्वरं மாயையுடையவரை மகேசுவரனென்றறிக" என்னுஞ் சுருதியால் சொல்லப்பட்ட மாகேசுவரி (மகேசுவரசம்பந்தி)என்னும் மாயையாகிய பிரகிருதிக்கு ஜகத்தைச் சிருஷ்டிக்கும் சாமர்த்தியமான நிர்மாணசக்தியினைப்போல மோகஞ்செய்யும் சாமர்த்தியமும் இருக்கின்றது. तदेतज्जडं मोहात्मकम् அந்த இவ்வஞ்ஞானத்தின் காரியம் ஜடமாயும் மோகவடிவமாயு மிருக்கின்றது" என்னுஞ் சுருதியால்.

(அ-கை)

மாயையின் மோகசக்தியால் என்ன சித்திக்கின்றதெனக் கூறுகின்றார்:—

असौ तं जीवं मोहयति ॥

(சு-ம்.)

இந்த மோகனசக்தி அந்த ஜீவனை மோகிக்கச் செய்கின்றது.

(வி-ம்.)

இந்த மாயையின் மோகனசக்தி எதுவோ அது அந்த முன் உஉ0-உஉஅ. சுலோகங்களிற் கூறிய ஈசுவரனது அம்சியவடிவமாகிய ஜீவனை

மோகிக்கச் செய்கின்றது அதாவது ஞானாநந்தமுதலிய சொரூபத்தின் ஞானமில்லாததாகச் செய்கின்றது. (கஉ)

ரு. மோகத்தினால் ஜீவனுக்கு அநீசுவரத்தன்மையாகிய தீனத்தன்மை யுளதாதல்.

[உகூo] मोहादनीशतां प्राप्य मग्नो वपुषि शोचति ।
ईससृष्टमिदं द्वैतं सर्वमुक्तं समासतः ॥ १३ ॥

(அ-கை.)

மாயையின் மோகனசக்தி அந்த ஜீவனை மோகிக்கச் செய்தலாலும் என்ன சித்திக்கின்றதெனக் கூறுகின்றார் :—

मोहात् अनीशतां प्राप्य वपुषि मग्नः शोचाति ॥

(சு-ம்.)

மோகத்தினால் அநீசுவரத்தன்மையை அடைந்து தேகத்தில் மக்கினமாய்த் துக்கிக்கிறான்.

(வி-ம்.)

முன் உஉகூ-வது சுலோகத்திற் கூறிய மோகத்தினால் அநீசுவரத்தன்மையை அடைந்து அதாவது இச்சைக்கு விஷயமாம் அநுகூலவஸ்துவாகிய இஷ்டத்தின் பிராப்தி, பிரதிகூலமாகிய அப்பிரியவஸ்துவான அநிஷ்டத்தின் நிவிருத்தி என்பவற்றின் சாமர்த்தியமின்மையை அடைந்து சரீரத்தில் தாதாத்மிய அபிமானத்தை யடைந்தவனாய்ச் சோகிக்கிறான் அதாவது "நான் துக்கியாயிருக்கிறேன்" என்றபிமானிக்கிறான் ; "समाने वृक्षे पुरुषो निमग्नोऽनीशया शोचति मुह्यमानः சமான விருக்ஷமாகிய தேகத்தில் மக்கினமாகிய புருஷனான ஜீவன் மோகத்தையடைந்தவனாய்ச் சாமர்த்தியமின்மைவடிவ அநீசத்தன்மையினால் துக்கமுடைமைமுதலியவற்றின் அபிமானத்தைச் செய்கிறான்" என்னுஞ் சுருதியால் என்பது பொருள்.

(அ-கை.)

மேல் உகூக-வது சுலோகத்தில் சொல்லப்படும் ஜீவனாலாகிய துவைதமெதுவோ அதனோடுள்ள ஈசுவரனாலாகிய துவைதத்தின் சேர்க்கையை நிவிருத்திக்கும்பொருட்டு முற்கூறிய ஈசுவரத்துவைதத்தைக் கூறுகின்றார்:—

इदं ईशसृष्टं सर्वं द्वैतं समासतः उक्तम् ॥

(சு-ம்)

இப்படி ஈசுவரனாற் சிருஷ்டிக்கப்பட்ட இந்தப் பிரபஞ்சம் யாவும் சுருக்கமாகச் சொல்லப்பட்டன.

(வி-ம்.)

இப்படி உ௧அ-உ௩௦-வது சுலோகம்வரையிலும் ஈசுவரனாலுண்டாக்கப்பட்ட ஜடசேதனவடிவ த்வைதமான சகல ஜகத்தும் சுருக்கமாய்ச் சொல்லப்பட்டது. (௧௩)

உ. ஜீவனாலுண்டாக்கப்பட்ட த்வைதம் உ௩௧-உ௩௪.

௧. சப்தான்னமாகிய ஜீவத்வைதத்தில் பிருகதாரணியகசுருதியின் பிரமாணம.

[உ௩௧] सप्तान्नब्राह्मणे द्वैतं जीवसृष्टं प्रपंचितम् ।
अन्नानि सप्त ज्ञानेन कर्मणाऽजनयत्पिता ॥ १४ ॥

(அ-கை.)

அப்படியானால் ஜீவன் த்வைதத்திற்குக் கர்த்தாவாவதில் பிரமாணம் யாதென்றாசங்கித்துக் கூறுகின்றார்:—

सप्तान्नब्राह्मणे जीवसृष्टं द्वैतं प्रपंचितम् ॥

(சு-ம்.)

* அ. சப்தான்னப்பிராஹ்மணத்தில் ஜீவனால் உண்டாக்கப்பட்ட பிரபஞ்சம் விஸ்தாரமாய்ச் சொல்லப்பட்டிருக்கின்றது.

(அ-கை.)

அப்படியானால் அந்தச் சப்தான்னப்பிராஹ்மணத்தில் ஜீவனால் உண்டாக்கப்பட்ட த்வைதம் எப்படி வியவகரிக்கப்பட்டிருக்கின்றதென்றாசங்கித்து,சப்தான்னமென்னுஞ் சப்தத்திற்கு வாச்சியார்த்தவடிவ த்வைதமாகிய காரியமாத்திரத்தின் சிருஷ்டியைப் பிரதிபாதிக்கும் "यत्सप्तान्नानि मेधया तपसाऽजनयत्पिता சப்தான்னத்தை மேதையாகிய ஞானத்தினாலும் தபசாகிய கர்மத்தால் பிதாவாகிய ஜீவன் சிருஷ்டித்தான்." என்னும் வாக்கியத்தை அர்த்தரூபமாகச் சொல்லுகின்றார்:—

पिता सप्त अन्नानि ज्ञानेन कर्मणा अजनयत् ॥

---

* அ. பிருகதாரணியக உபநிஷத்தின் முதல் அத்தியாயத்திலுள்ள ஐந்தாவது பிராஹ்மண மென்னும் பிரகரணத்தில்.

(சு-ம்.)

ஜீவனாகிய பிதா ஏழு அந்நங்களை ஞானமாகிய சிந்தனையினாலும் கர்மத்தினாலும் பெற்றான்.

(வி-ம்.)

தனது அதிருஷ்டமான புண்ணியபாபவாயிலாக ஜகத்தை உண்டாக்குவதால் எல்லா உலகங்களையும் பாலிக்கும் ஜீவன் இங்கே சுருதிவாக்கியத்தில் பிதா எனப்படுகின்றான் என்பது பொருள். (கச)

உ. சப்தாந்நம் அதிகாரிபேதத்தா லுபயோகமாதல்.

[உகஉ] मर्त्यान्नमेकं देवान्ने द्वे पश्वन्नं चतुर्थकम् ।
अन्यत्रितयमात्मार्थमन्नानां विनियोजनम् ॥ १५ ॥

(அ-கை.)

அப்படியானால் சப்தாந்நத்தை உண்டாக்குதல் எதன் பொருட்டாமென்றாசங்கித்து, " एकमस्य साधारणं द्वे देवानभाजयत् त्रीण्यात्मनेऽकुरुत पशुभ्य एकं प्रायच्छत् ஒன்று மநுஷ்யனாகிய ஜீவனுக்குச் சாதாரண அந்நமாம். இரண்டு தேவதைகளுக்குக் கொடுத்தான். மூன்றை ஜீவனாகிய தன்பொருட்டுச் செய்தான். ஒன்றைப் பசுக்களின்பொருட்டுக் கொடுத்தான்." என்னும் வாக்கியத்தால் சப்தாந்நமாகிய அவற்றின் உபயோகமும் சொல்லப்பட்டிருக்கின்றதெனக் கூறுகின்றார்:—

एकं मर्त्यान्नं । द्वे देवान्ने । चतुर्थकं पश्वन्नं । अन्यत् त्रितयम् आत्मार्थं । अन्नानां विनियोजनम् ॥

(சு-ம்.)

அரிசிமுதலியனவாகிய ஒன்று மனிதர்களின் அந்நமாம். தர்சபூர்ணமாசமென்னும் இரண்டு தேவர்களின் அந்நமாம். பாலென்னும் நான்காவது பசுக்களின் அந்நமாம். மனம் வாக்குப் பிராணனென்னும் மூன்று ஜீவனாகிய தன்பொருட்டாம். இப்படி அந்நங்களின் உபயோகமானது சொல்லப்பட்டிருக்கின்றது. (கரு)

ங. சப்தாந்நங்களின் பெயர்.

[உகங] व्रीह्यादिकं दर्शपूर्णमासौ क्षीरं तथा मनः ।
वाक्प्राणाश्चेति सप्तत्वमन्नानामवगम्यताम् ॥ १६ ॥

(அ-கை.)

"एकमस्य साधारणमितीदमेवास्य तत्साधरणमन्नं यदिदमद्यते தண்டுல முதலியன வாகிய ஒன்று இம்மனிதனது * ௯. சாதாரண அந்நமாம். எது இவனால் புசிக்கப்படுகிறதோ அதுவே இவனுக்கு அந்தச் சாதாரண அந்நமாம்." என்பதுமுதல் "अयमात्मा वाङ्मयमनोमयः प्राणमयः இவ்வாத்மாவான ஜீவன் வாக்குமயமாயும் மனோமயமாயும் பிராணமயமாயு மிருக்கின்றான்." என் பதுவரையிலுள்ள கொஞ்சங்குறைந்த இரண்டு கண்டிகைவடிவ வாக்கியங் களால் அவ்வந்நங்கள் காட்டப்பட்டிருக்கின்றன எனக் கூறுகின்றார் :—

व्रीह्यादिकं दर्शपूर्णमासौ क्षीरं तथा मनः वाक् च प्राणाः इति अन्नानां सप्तत्वं अवगम्यताम् ॥

(சு-ம்.)

அரிசிமுதலியவைகள் * ௧௦. தரிசம், * ௧௧. பூர்ணமாசம், பால், அப்ப டியே மனம், வாக்கு, பிராணன் என்று அந்நங்கள் ஏழென்பதை யறிய வேண்டும். (௧௬)

௭. சப்தாந்நங்கள் போக்கியத்தன்மைவடிவமாக ஜீவனு லாக்கப்பட்டவையெனல்.

[உ௩௭] ईशेन यद्यप्येतानि निर्मितानि स्वरूपतः ।
तथापि ज्ञानकर्मभ्यां जीवोऽकार्षीत्तदन्नताम् ॥ १७ ॥

(அ-கை.)

அப்படியானால் முற்கூறிய ஏழந்நங்களும் ஜகத்தி லடங்கியிருத்த லால் ஈசுவரனு லுண்டாக்கப்பட்டவைகளாம். ஆகையால் அவற்றை ஜீவனு லுண்டாக்கப்பட்டவை யென்று கூறுதல் பொருந்ாதென் றாசங்கித்து, அவற்றின் சொரூபம் ஈசுவரனு லுண்டாக்கப்பட்டவைகளா யிருக்கினும், அவற்றின் போக்கியத்தன்மையாகிய வடிவம் ஜீவனு லாக்கப்பட்டதா யிருத் தலால் சப்தாந்நங்களை ஜீவனு லுண்டாக்கப்பட்டவை யெனல் பொருந்தா தென்று கூறுதல் கூடா தென்று கூறுகின்றார் :—

---

* ௯. சகலப் பிராணிகளுக்கும் விபாகஞ்செய்யத்தக்கது; அந்த விபாகம் பஞ்ச சூனு என்னும் கிருகஸ்தனது பாபத்தை நிவிருத்திப்பதாகிய பிராயச்சித்தரூப பஞ்ச மகாயஞ்ஞங்களில் கணக்கிடப்பட்ட பூதயஞ்ஞத்தில் பிரசித்தமாம்.

* ௧௦. அக்கினிஹோத்திரியானவன் பிரதமையின் தினம் எப்போதும் எந்த யாகத்தைச் செய்கின்றானோ அது தரிச மெனப்படும்.

* ௧௧. பூர்ணமாச மென்பது ஓர் யாகவிசேஷம்.

यद्यपि एतानि स्वरूपतः ईशेन निर्मितानि । तथापि जीवः ज्ञानकर्मभ्यां तद्भन्नतां अकार्षीत् ॥

(சு-ம்.)

ஈசுவரனால் இச்சப்தாந்நங்கள் சொரூபமாக உண்டாக்கப்பட்டவைக ளாம். என்றாலும் ஜீவனானவன் ஞானகர்மங்களால் அவற்றின் போக்கியத் தன்மையைச் செய்தான்.

(வி-ம்.)

விஷயங்களின் தியானமாகிய ஞானம் விதிக்கப்பட்டது விலக்கப்பட் டது என்னும் பேதத்தால் இரண்டுவகையாம். அவற்றுள், தேவதைமுத லிய வடிவங்களின் தியானமாகிய உபாசனை விதிக்கப்பட்டதாம் பரஸ்திரீ முதலிய விஷயங்களின் தியானம்(சிந்தித்தல்)நிஷித்தமாம். இவ்வாறு ஞான மாகிய விஷயங்களின் தியானம் இரண்டுவகையாம. கர்மம் யஞ்ஞாதிவிகி தம், ஹிம்சைமுதலிய நிஷித்தம் என்னும் பேதத்தால் இரண்டுவகையாம். ஞானம் கர்மம் என்னும் அவ்விரண்டினாலும் ஜீவன் அந்த அரிசிமுதல் பிராணன்வரையிலுள்ள ஏழுந்நங்களும் தனது போகத்திற்குச் சாமக்கிரி யாகுந்தன்மையாகிய அந்நத்தன்மையைச் செய்தான் (கற்பித்தான்) என் பது பொருள். (கஎ)

ந. முற்கூறிய சப்தாந்நவடிவ ஜகத்திற்கு ஜீவன் ஈசன் என்னும் இருவ ரோடும் சிருஷ்டிக்குந்தன்மையாலுள்ள சம்பந்தம் உ௬ரு-உ௬அ.

க. ஒரு ஜகத்து ஈசன் ஜீவ னென்னும் இரண்டனோடும் சம்பந்தமாதலில் திருஷ்டாந்தம.

[உ௬ரு] ईशकार्यं जीवभोग्यं जगद्वाभ्यां समन्वितम् ।
पितृजन्या भर्तृभोग्या यथा योषित्तथेष्यताम् ॥ १८ ॥

(அ-கை.)

இவ்வளவு சுலோகங்களாலும் என்ன சொல்லப்பட்டதெனக் கூறு கின்றார் :—

ईशकार्यं जीवभोग्यं जगत् द्वाभ्यां समन्वितम् ॥

(சு-ம்)

ஈசுவரனுடைய காரியமும், ஜீவனுடைய போக்கியமுமாகிய இப்பிர பஞ்சம் ஜீவன் ஈசுவர னென்னு மிரண்டனோடும் சம்பந்தமாம்.

(வி-ம்.)

சப்தாந்நமாகச் சொல்லப்பட்ட நெல்முதலியவடிவ ஜகத்து ஈசுவரனது காரியமா யிருத்தலாலும் ஜீவனது போக்கியமாயும் அதாவது போக்கியத்தின் சாமக்கிரியாயு மிருத்தலால் ஈசஜீவர் இருவரோடும் சம்பந்தமுடையதா யிருக்கின்றது என்பது பொருள்.

(அ-கை.)

ஒன்றற்கு இரண்டனோடு சம்பந்த மிருத்தலில் திருஷ்டாந்தத்தைக் கூறுகின்றார் :—

यथा योषित् पितृजन्या भर्तृभोग्या । तथा इष्यताम् ॥

(சு-ம்)

எப்படி ஒரு ஸ்திரீயே பிதாவினின்றுண்டானவளும் பதியோடு போகித்தற்குரியவளு மாகின்றாளோ அப்படியே ஜகத்துமா மென்று அறியத்தக்கது. (கஅ)

உ. ஜீவஈசர்களுக்கு ஜகத்தையாக்குதலிற் சாதனம்.

[உ௫௬] मायावृत्त्यात्मको हीशसंकल्पः साधनं जनौ ।
मनोवृत्त्यात्मको जीवसंकल्पो भोगसाधनम् ॥ १९ ॥

(அ-கை.)

ஈசுவரனுக்கும் ஜீவனுக்கும் ஜகத்தைச் சிருஷ்டிப்பதில் சாதனமான சாமக்கிரி யாதெனக் கூறுகின்றார் :—

मायावृत्त्यात्मकः हि ईशसंकल्पः जनौ साधनं मनोवृत्त्यात्मकः जीवसंकल्पः भोगसाधनम् ॥

(சு-ம்.)

மாயையின் விருத்திவடிவமாகிய ஈசுவரனது சங்கற்பம் ஜகத்தின் உற்பத்தியில் சாதனமாம். அந்தக்கரணத்தின் * கஉ விருத்திவடிவமாகிய ஜீவனது சங்கற்பம் சுகமுதலியவற்றின் அநுபவமாகிய போகத்திற்குச் சாதனமாம். (கக)

௩. ஈசுவரன் சிருஷ்டித்த ஒருவடிவத்தில் ஜீவனாலாக்கப்பட்ட அநேகவடிவம்.

[உ௫எ] ईशनिर्मितमण्यादौ वस्तुन्येकविधे स्थिते ।
भोक्तृधीवृत्तिनानात्वात्तद्भोगो बहुधेष्यते ॥ २० ॥

---

* கஉ. விருத்திவடிவ = பரிணாமவடிவ.

(அ கை.)

அப்படியானல் ஈசுவரனு லுண்டாக்கப்பட்ட வஸ்துவின் சொரூபத்திற்குவேறாகவஸ்துவின் போக்கியத்தன்மையாகிய வடிவமே யில்லையெனின், ஜீவனு லுண்டாக்கப்பட்ட வடிவம் யாதென் ருசங்கித்துக் கூறுகின்றார் :—

ईशनिर्मितमण्यादौ एकविधे वस्तु निस्थिते भोक्तृधीवृत्तिनानात्वात् तद्भोगः बहुधा इष्यते ॥

(சு-ம்.)

ஈசுவரனு லுண்டாக்கப்பட்ட மணிமுதலிய வஸ்துக்கள் ஒரேவிதமாயிருக்கினும், போக்தாவாகிய ஜீவனது புத்திவிருத்தி நாநாவாயிருத்தலால் அம்மணிமுதலியவற்றின் போகமும் அநேகவிதமாக அங்கிகரிக்கப்படுகின்றது.

(வி-ம்.)

மணிமுதலிய ஒரே விஷயத்தில் காணப்படும் பலவிதமாகிய போகங்கள் எவையோ அப்போகங்களின் பேதங்கள் அப்போகபேதங்களின் பிரயோஜக மென்னும் நிமித்தகாரணமாகிய போக்கியங்களினது வடிவத்தின் பேதத்தை அறிவிக்கின்றன என்பது பொருள். (உ0)

[உருஅ] हृष्यत्येको मणिं लब्ध्वा क्रुद्ध्यत्यन्यो ह्यलाभतः ।
पश्यत्येव विरक्तोऽत्र न हृष्यति न कुप्यति ॥ २१ ॥

(அ-கை.)

அப்படியானல் போகத்தின் பேதமிருக்கின் போக்கியமான விஷயத்தின்பேதம் கற்பிக்கப்படும், அந்தப் போகத்தின் பேதமே இல்லையெனின் ருசங்கித்துப் போகததின் பேதம் காணப்படுதலால போகத்தின் பேதம் இல்லை யென்று சொல்லுதல் பொருந்தாதென்று கூறுகின்றார் :—

एकः मणिं लब्ध्वा हृष्यति हि। अन्यः अलाभतः क्रुध्यति। अत्र विरक्तः पश्यति एव। न हृष्यति न कुप्यति ॥

(சு-ம்.)

ஒருபுருஷன் இரத்தினத்தை அடைந்து சந்தோஷிக்கிறான். வேறொருவன் அது கிட்டாமையால் கோபத்தை யடைகிறான். இங்கே வைராக்கியமுடைய ஒருவன் பார்க்கின்றானேயொழிய சந்தோஷிக்கிறது மில்லை; கோபிக்கிறதுமில்லை.

(வி-ம்.)

மணியை விரும்பிய ஓர் புருஷன் அம்மணியை யடைந்து சந்தோஷிக்கிறான். அவ்வியல்பினனாகிய மணியின் விருப்பமுள்ள மற்றொருவன் அம்மணி கிடையாமையால் துவேஷிக்கிறான். இங்கே மணியினிடத்து வைராக்கியமுள்ள மூன்றாவது புருஷன் அந்த மணியைப் பார்க்கிறானேயொழிய அதன் இலாபநஷ்டங்களைக்குறித்துச் சந்தோஷத்தையும் கோபத்தையுமடைகிற தில்லை யென்பது பொருள். (உக)

[உ௩௯] प्रियोऽप्रिय उपेक्ष्यश्चेत्याकारा मणिगास्त्रयः ।
सृष्टा जीवैरीशसृष्टं रूपं साधारणं त्रिषु ॥ २२ ॥

(அ-கை.)

அப்படியானால் அந்தப் போகபேதங்களின் அதீனமாயுள்ள ஜீவனாலுண்டாக்கப்பட்ட வடிவங்களின் பேதம் யாதெனக் கூறுகின்றார்:—

मणिगाः प्रियः अप्रियः च उपेक्ष्यः इति त्रयः आकाराः जीवैः सृष्टाः। त्रिषु साधारणं रूपं ईशसृष्टम् ॥

(சு-ம்.)

மணியிலுள்ள பிரியம் அப்பிரியம் உபேக்ஷியம் என்னும் மூன்றுவடிவங்களும் ஜீவர்களால் சிருஷ்டிக்கப்பட்டவைகளாம். மூன்று வடிவங்களிலுமுள்ள சாதாரணமாகிய வடிவம் ஈசுவரனாலுண்டாக்கப்பட்டதாம்.

(வி-ம்.)

மணியிலுள்ள பிரியத்தன்மை அப்பிரியத்தன்மை *௧௩. உபேக்ஷியத்தன்மை என்னும் ரூபமுடைய ஆகாரங்களின் பேதம் ஜீவனாலுண்டாக்கப்பட்டவைகளாம். பிரியத்தன்மைமுதலிய மூன்றுவடிவங்களிலும் அநுகூதமாயுள்ள சாதாரண மணி என்னும் வடிவம் ஈசுவரனா லுண்டாக்கப்பட்டதாம் என்பது பொருள். (உஉ)

[உ௪0] भार्या स्नुषा ननांदा च याता मातेत्यनेकधा ।
प्रतियोगिधिया योषिद्भिद्यते न स्वरूपतः ॥ २३ ॥

---

* ௧௩. இராகத்துவேஷமில்லாத விருத்தியை உபேக்ஷை யென்பர். அதற்கு விஷயமாகும் (உபேக்ஷைசெய்யத்தக்க) வஸ்து உபேக்ஷிய மெனப்படும். இப்படி விரக்தனுக்கு மணியின் வடிவ மிருக்கின்றது.

(அ-கை.)

முற்கூறிய ஜீவனுலாக்கப்பட்ட வடிவத்தின் பேதத்தை வேறு உதாரணத்தினுல் விளக்குகின்ருர் :—

भार्या स्नुषा ननांदा याता च माता इति अनेकधा योषित् प्रतियोगिधिया भिद्यते । न स्वरूपतः ॥

(சு-ம்.)

ஒரு ஸ்திரீயே பத்தினி, மருமகள் (புத்திரனது மனைவி), நநாந்தா (கணவனேடு பிறந்தவள்), யாதா (கணவனேடு பிறந்தவன் மனைவி) தாய் என்று அநேகவிதமாகப் பிரதியோகிகளின் புத்தியால் பேதத்தை யடைகின்ருள் ஈசுவரனுலுண்டாக்கப்பட்ட ஸ்திரீவடிவத்தால் வேறுபடுகிறதில்லை.

(வி-ம்.)

பிரதியோகிகளின் புத்தியால் அதாவது கணவன் மாமனுர்முதலிய பிரதியோகிகளாகிய சம்பந்திகளை விஷயஞ்செய்யும் புத்தியின் பேதத்தால் அந்தந்தச் சம்பந்திகளின் *கச. அபேக்ஷையால் ஈசுவரனுலுண்டாக்கப்பட்ட ஒரு ஸ்திரீயே பேதத்தையடைகிருளென்பது பொருள். (உ௩)

ச. சுலோகம் உ௩எ முதல் உச௩ வரையிற் கூறிய அர்த்தத்திற் சங்கை.

[உசக] ननु ज्ञानानि भिद्यंतामाकारस्तु न भिद्यते ।
योषिद्वपुष्यतिशयो न दृष्टो जीवनिर्मितः ॥ २४ ॥

(அ-கை.)

அப்படியானுல் ஸ்திரீயை விஷயஞ்செய்யும் "மனைவி" "மருமகள்" என்னுமிவைமுதலிய ஞானங்களே வேருகக் காணப்படுகின்றன. அந்த ஞானங்களுக்கு விஷயமாகிய ஸ்திரீயின் சொரூபத்தில் பேதம் காணப்படவில்லை. ஆகையால் "பிரதியோகியின் (அவ்வச்சம்பந்தியின்) புத்தியால் ஸ்திரீ பேதத்தை யடைகிருள்" என்று உச0-வது சுலோகத்தில் நீர் கூறியது பொருந்தாதென வாதி சங்கிக்கின்ருன் :—

ननु ज्ञानानि भिद्यंतां आकारः तु न भिद्यते। योषिद्वपुषि जीवनिर्मितः अतिशयः न दृष्टः ॥

---

* கச. ஒரு ஸ்திரீயே கணவனை யபேக்ஷித்துப் பத்தினியாகின்ருள்; மாமனுரை யபேக்ஷித்து மருமகளாவள்; சகோதரன் பெண்ஜாதியை யபேக்ஷித்து நநாந்தாவாகின்ருள்; கணவனது மூத்தசகோதரன் பத்தினியை யபேக்ஷித்து யாதாவாகின்ருள்.

(சு-ம்.)

அப்படியானால் ஞானங்களே பேதத்தை யடைக. ஸ்திரீயின் வடிவமோ பேதத்தையடைகிறதில்லை யாகலின் ஸ்திரீயின் சரீரத்தில் ஜீவனாலாக்கப்பட்ட அதிசய ரூபமாகிய பேதம் காணப்படவில்லை. (உச)

ரு. சுலோகம் உசக-ற் கூறிய சங்கையின் சமாதானம்.

[உசஉ] मैवं मांसमयी योषित्काचिदन्या मनोमयी ।
मांसमय्या अभेदेऽपि भिद्यते हि मनोमयी ॥ २५ ॥

(அ-கை.)

ஞானத்தின் பேதம் ஞேயமாகிய விஷயத்தினது பேதத்தின் அதீனமாயிருத்தலால் ஞேயத்தினது வடிவத்தின் பேதம் அங்கீகரிக்கத்தக்கதேயாம் என்னும் அபிப்பிராயமாய்ச் சித்தாந்தி பரிகரிக்கின்றார் :—

मा एवम् । काचित् मांसमयी योषित् । अन्या मनोमयी । मांसमय्याः अभेदे अपि मनोमयी हि भिद्यते ॥

(சு-ம்.)

* கரு. இப்படியில்லை. ஏனெனின், ஒருத்தி மாம்சமயமாகிய ஈசுவரனாலுண்டாக்கப்பட்ட ஸ்திரீயாவள். மற்றொருத்தி மனோமயமாகிய ஜீவனாலுண்டாக்கப்பட்ட ஸ்திரீயாவள். அவர்களுள், மாம்சமயமாகிய ஸ்திரீயோடு ஒருமை யிருக்கினும் மனோமயமுடைய ஸ்திரீயே பேதத்தை யடைகின்றாள். (உரு)

சு. பிரமைக்கு விஷயமாகிய வெளிப்பொருள் மனோமய மாதலிற் சங்கை.

[உசங] भ्रांतिस्वप्नमनोराज्यस्मृतिष्वस्तु मनोमयम् ।
जाग्रन्मानेन मेयस्य न मनोमयतेति चेत् ॥ २६ ॥

(அ-கை.)

அப்படியானால் பிராந்திமுதலிய இடங்களில் பாகிய விஷயங்களில்லாமையால் அங்கே மனோமய வஸ்து இருக்குக. எதார்த்த ஞானமாகிய பிரமாஸ்தானத்திலோ அம்மனோமயம் பொருந்தாது; பாகிய மனத்திற்கு வேறாகிய பாகியவஸ்துவிருத்தலால் என்று வாதி சங்கிக்கின்றான் :—

* கரு. ஸ்திரீயின் சரீரத்தில் ஜீவனாலாக்கப்பட்ட அதிசய (அதிகமான) வடிவமில்லை என்பதில்லை.

भ्रांतिस्वप्नमनोराज्यस्मृतिषु मनोमयम् अस्तु । जाग्रन्मानेन मेयस्य मनोमयता न इति चेत् ॥

(சு-ம்.)

பிராந்தி சொப்பனம் மனோராச்சியம் நினைவு என்பவைகளில் மனோமய வஸ்து இருக்குக. ஜாக்கிரப்பிரமாணத்தால் பிரமேயத்திற்கு மனோமயத் தன்மை யில்லை என்பையாயின்.

(வி-ம்.)

ஜாக்கிரத்தின் மானத்தால் அதாவது பிரத்தியக்ஷமுதலிய பிரமாணங் களால் மேய மெனப்படும் பிரமேயமாகிய பாகிய வஸ்துவிற்கு மனோமயத் தன்மை பொருந்தா தென்று வாதி சங்கிக்கின்றான். (உசா)

எ. பிரமாஸ்தலத்தில் பாகியவிஷய மிருக்கின்ற தென் றங்கீகரித்தலும், அதன் பிரமாணத்தோடுகூடிய மனோமயத்தன்மையும் (சமாதானம்).

[உசச] बाढं माने तु मेयेन योगात्स्याद्विषयाकृतिः ।
भाष्यवार्तिककाराभ्यामयमर्थ उदीरितः ॥ २७ ॥

(அ-கை.)

சித்தாந்தி பிரமாஞானஸ்தலத்தில் பாகிய விஷயம் உண்டென்பதை அங்கீகரிக்கின்றார் :—

बाढम् ॥

(சு-ம்)

* ககூ. சத்தியம்.

(அ-கை.)

அப்படியானால் அப்போது அந்தப் பிரத்தியக்ஷமுதலிய பிரமாணங்க ளின் விஷயத்திற்கு மனோமயத்துவம் உம்மால் எப்படிச் சொல்லப்படுகின் றது எனக் கூறுகின்றார் :—

माने विषयाऽऽकृतिः तु मेयेन योगात् स्यात् ॥

---

* ககூ. எங்கே பூர்வபக்ஷம் இட மாகின்றதோ அங்கே சத்தியமென்று சொல்லப் படுகின்றது. இங்கே பூர்வபக்ஷம் யதார்த்தமாம். அதை இஷ்டாபத்தியால் (வியா வகாரிகபக்ஷத்தில் அநுகூலமாயிருத்தலால்) அங்கீகரிக்கும்பொருட்டுச் சித்தாந்தி "சத்திய" மென்று கூறினார்.

(சு-ம்.)

பிரமாணத்தில் விஷயவடிவம் பிரமேயத்தோடு சேருதலால் ஆகின்றது.

(வி-ம்.)

* கஎ. பிரமாணத்தில் விஷயங்களின் வடிவமாகிய மனோமயசொரூபம் அந்தப்பிரமாணத்திற்கு விஷயத்தோடுள்ள சம்பந்தத்தா லுண்டாகின்றது.

(அ-கை.)

அப்படியானால் இந்த விருத்திவடிவப்பிரமாணத்தில் விஷயங்களின் வடிவத்தைக் கூறுதல் தமது கபோலகற்பிதமாம் என்றுசங்கித்துக் கூறுகின்றார் :—

भाष्यवार्तिककाराभ्यां अयं अर्थः उदीरितः ॥

(சு-ம்.)

பாஷியகாரராகிய ஸ்ரீசங்கராசாரியர் வார்த்திககாரராகிய ஸ்ரீசுரேசுவராசாரிய ரென்னும் இருவர்களாலும் இந்த அர்த்தமானது சொல்லப்பட்டிருக்கின்றது. (உஎ)

அ. பிரமாவின் விஷயம் மனோமயமா மென்பதில் பாஷியகாரர் வசனம் பிரமாணமாதல்.

[உசு௫] मूषासिक्तं यथा ताम्रं तन्निभं जायते तथा ।
रूपादीन्व्याप्नुवच्चित्तं तन्निभं दृश्यते ध्रुवम् ॥ २८ ॥

(அ-கை.)

இவ்விரண்டு வாக்கியங்களுள் முதலாவது பாஷியகாரரது உபதேசஸஹஸ்ரி என்னும் நூலிலுள்ள இரண்டு சுலோகமாகிய வசனத்தைக் கூறுகின்றார்:—

यथा ताम्रं मूषासिक्तं तन्निभं जायते । तथा रूपादीन् व्याप्नुवत् चित्तं ध्रुवम् तन्निभं दृश्यते ॥

(சு-ம்.)

எப்படி அச்சில் வார்க்கப்பட்ட தாமிரம் அதன் சமானவடிவமுடைய

* கஎ. இந்திரியவாயிலாக வெளிப்போந்து விஷயம்வரையிலும் பொருந்திய வாய்க்காலுக்குச் சமானவடிவமுள்ள மனோவிருத்தியில்.

தாகின்றதோ அதுபோல உருவமுதலியவற்றை வியாபித்துள்ள சித்தமானது அவசியமாக அதன் சமானவடிவமுடையதாய்க் காணப்படுகின்றது.

(வி-ம்.)

எப்படி உருக்கிய தாமிரம் அச்சில் வார்க்கப்பட்டதாய் அதன் சமானவடிவமுடைய தாகின்றதோ அதுபோல உருவமுதலிய விஷயங்களை வியாபித்த சித்தம் அவசியமாக அவ்வுருவமுதலியவற்றின் சமான (மனோமய)வடிவமுடையதாகக் காணப்படுகின்றது என்பது பொருள். (உஅ)

[உசகூ] व्यंजको वा यथाऽऽलोको व्यंग्यस्याकारतामियात् ।
सर्वार्थव्यंजकत्वाद्धीरर्थाकारा प्रदृश्यते ॥ २९ ॥

(அ-கை)

அப்படியானால் அக்கினியின் சேர்க்கையா லுருக்கப்பட்டு அச்சில் வார்க்கப்பட்ட தாமிரமுதலியவைகள் கடினமாகிய அச்சுமுதலியவைகளின் சேர்க்கையால் குளிர்ச்சியை யடைந்து அவ்வச்சினுகாரத்தை யடைந்த போதிலும், வடிவமில்லாததும் தாமிரமுதலியவற்றிற்கு விலக்ஷணமுமான புத்தியானது விஷயத்தில் வியாபிக்கப்பட்டதாயினும், எப்படி அவ்விஷயத்தின் ஆகாரத்தையடையும் என்றுசங்கித்து வேறு திருஷ்டாந்தத்தைக் கூறுகின்றார்:—

यथा वा व्यंजकः आलोकः व्यंग्यस्य आकारतां इयात् । धीः सर्वार्थव्यंजकत्वात् अर्थाकारा प्रदृश्यते ॥

(சு-ம்.)

அல்லது பிரகாசிப்பதாகிய சூரியன்முதலியவற்றின் பிரகாசம் எப்படிப் பிரகாசிக்கப்படுவதின் வடிவத்தை அடைகின்றதோ, அதுபோலப் புத்தியும் எல்லா விஷயங்களையும் விளக்குவதா யிருத்தலால் அர்த்தவடிவமாகக் காணப்படுகின்றது.

(வி-ம்.)

அல்லது எப்படிப் பிரகாசஞ் செய்யும் வெயில்முதலியன பிரகாசஞ் செய்யத்தக்க கடமுதலியவடிவத்தன்மையை அடைகின்றனவோ, அதுபோலப் புத்தியும் சகல பதார்த்தங்களையும் பிரகாசிப்பதா யிருத்தலால் *கஅ.அர்த்தாகாரமாக மிகவும் காணப்படுகின்றது என்பது பொருள் (உகூ)

* கஅ. கடமுதலிய பொருள்களின் வடிவத்தைப்போல எதன் வடிவ மிருக்கின்றதோ அப்படிப்பட்டது.

௯. முற்கூறிய அர்த்தத்திலேயே வார்த்திககாரரது வசனம் பிரமாணமாதல்.

[உ௩எ] मातुर्मानाभिनिष्पत्तिर्निष्पन्नं मेयमेति तत् ।
मेयाभिसंगतं तच्च मेयाऽऽभत्वं प्रपद्यते ॥ ३० ॥

(அ-கை.)

இப்போது வார்த்திககாரரது ஒரு சுலோகவடிவ வசனத்தைக் கூறுகின்றார் :—

मातुः मानाभिनिष्पत्तिः। निष्पन्नं तत् मेयम् एति च । तत् मेयाभिसंगतं मेयाभत्वं प्रपद्यते ॥

(சு-ம்.)

பிரமாதாவினின்றும் பிரமாண முண்டாகின்றது. உண்டாகிய அந்தப்பிரமாணம் பிரமேயத்தோடு சம்பந்தித்துப் பிரமேயத்தின் சமானவடிவத்தை யடைகின்றது.

(வி-ம்.)

அதிஷ்டானகூடஸ்தனோடுகூடிய புத்தியிலுள்ள சிதாபாசனோடு கூடிய பிரமாதா வென்னும் பிரமாஞானத்தின் கர்த்தாவாகிய ஜீவனினின்றும் சிதாபாசனோடுகூடிய அந்தக்கரணத்தின் விருத்தியாகிய பிரமாண முண்டாகின்றது. அங்ஙனமுண்டாகிய அந்தப் பிரமாணம் கடாதிவடிவப் பிரமேயத்தை யடைந்து அந்தப் பிரமேயத்தோடு சம்பந்தத்தை யடைந்ததாய்ப் பிரமேயத்தின் சமானாகாரத்தை அடைகின்றது என்பது பொருள்.

௧௦. விஷயத்தின் வடிவம் இரண்டாதலும் அதனைக் கவர்வது இரண்டாதலும்.

[உ௩அ] सत्येवं विषयौ द्वौ स्तो घटौ मृन्मयधीमयौ ।
मृन्मयो मानमेयः स्यात्साक्षिभास्यस्तु धीमयः ॥ ३१ ॥

(அ-கை.)

அப்படியே பிரமாணத்திற்குச் சமானாகாரத்தோடுகூடியதன்மையிருக்குக. இதனால் இங்கே விஷயங்களின் பேதவடிவப்பிரசங்கத்தில் என்ன வந்ததெனக் கூறுகின்றார் :—

एवं सति मृन्मयधीमयौ घटौ विषयौ द्वौ स्तः ॥

(சு-ம்.)

இப்படியே யிருந்தால் மண்வடிவம் மனோமயவடிவமெனக் கடமென்னும் விஷயம் இரண்டாகின்றது.

(அ-கை.)

அப்படியானால் மண்வடிவமாகிய கடத்தைப்போல மனோமயமாகிய கடமும் அதேமனதால் கிரகிக்கக்கூடாததா யிருத்தலாலும், அதனை விஷயஞ்செய்வது வேறொன்றில்லாமையாலும் அந்த மனோமயமாகிய கடம் சித்தியாதென் றாசங்கித்து, மனதிற்கர்மியமாகக் கிரகிப்பதொன்று இல்லை யெனல் சித்தியாதென்று கூறுகின்றார்:—

मृन्मयः मानमेयः धीमयः तु साक्षिभास्यः स्यात् ॥

(சு-ம்.)

மண்வடிவம் பிரமாணத்தா லறியத்தக்கதாகின்றது. மனோமயம் சாக்ஷியினா லறியத்தக்கதாம்.

(வி-ம்)

மண்வடிவ கடம் பிரமாணமாகிய மனோவிருத்தியால் மேயமாம் அதாவது பிரமாஞானத்திற்கு விஷயமாகத்தக்க தென்னும் * ௧௯. பிரமாதாபாஸியமாம். அதுபோல மனோமயகடம் * ௨௦. சாக்ஷிபாஸியமாம் அதாவது சாக்ஷியினால் பிரகாசிக்கத்தக்கதாம் என்பது பொருள். (௩௧)

௪. ஜீவனலாக்கப்பட்ட துவைதம் பந்த(சுகதுக்கரூப)த்திற்கு ஏதுவாதல் ௨௪௯-௨௫௯.

௧. ஜீவத்வைதம் பந்தத்திற்கு ஏதுவாதலில் அந்வயவியதிரேகம்.

[௨௪௯] अन्वयव्यतिरेकाभ्यां धीमयो जीवबंधकृत् ।
सत्यस्मिन्सुखदुःखे स्तस्तास्मिन्नसति न द्वयम् ॥ ३२ ॥

(அ-கை.)

இப்படி ஈசுவரனாலுண்டாக்கப்பட்டது ஜீவனாலுண்டாக்கப்பட்ட தென்னும் பேதத்தால் துவைதம் இரண்டுவகையா யிருக்குக. அவற்

* ௧௯. பிரமாணவிருத்திவாயிலாக எவற்றைச் சாக்ஷி பிரகாசிக்கின்றதோ அப்படிப்பட்ட பாகிய கடமுதலியவைகள் பிரமாதாபாஸிய மெனப்படுகின்றன.

* ௨௦. அவித்தையின் விருத்திவாயிலாக அல்லது உள்ளேயே உண்டாகிய விருத்திவாயிலாக எவற்றைச் சாக்ஷி பிரகாசிக்கின்றதோ அப்படிப்பட்ட சொப்பனம் சுகம் துக்கம் காமமுதலிய மனோமயபதார்த்தங்கள் சாக்ஷிபாஸிய மெனப்படுகின்றன.

றுள், எது தள்ளத்தக்கதாகும், எது தள்ளத்தக்கதாகாது என்றறியப்படவில்லையே யென்றாசங்கித்து, ஜீவனுலுண்டாக்கப்பட்ட த்வைதமே தள்ளத்தக்கதா மென்னும் அபிப்பிராயமாக அந்த ஜீவனுலுண்டாக்கப்பட்ட த்வைதம் பந்தத்திற் கேதுவாருந்தன்மையைக் காட்டுகின்றார் :—

अन्वयव्यतिरेकाभ्यां धीमयः जीवबंधकृत् ॥

(சு-ம்.)

அந்வயவியதிரேகங்களால் மனோமயவிஷயம் ஜீவனுக்குப் பந்தத்தைச் செய்வதாகின்றது.

(அ-கை.)

அந்வயவியதிரேகங்களையே காட்டுகின்றார் :—

अस्मिन् सति सुखदुःखे स्तः । असति तस्मिन् न द्वयम् ॥

(சு-ம்.)

இந்த மனோமயத்வைத மிருந்தால் சுகதுக்கங்க ளிருக்கின்றன. அவைக ளில்லாவிட்டால் சுகதுக்க மிரண்டு மில்லை.

(வி-ம்.)

இந்த ஜீவனுலுண்டாக்கப்பட்ட மனோமயப்பிரபஞ்ச மிருந்தால் சுகதுக்கங்க ளிருக்கின்றன. இது அந்வயமாம். அந்த மானஸத்த்வைத மில்லாவிடின் சுகதுக்கங்க ளிரண்டு மில்லை. இது வியதிரேகமாம்.

[உ௬0] असत्यपि च बाह्यार्थे स्वप्नादौ बद्धचते नरः ।
समाधिसुप्तिमूर्च्छासु सत्यप्यस्मिन्न बद्धचते ॥ ३२ ॥

(அ-கை.)

அப்படியானல் சொல்லப்பட்ட அந்வயவியதிரேகங்களென்னு மவ்விரண்டும் ஏன் பாகியார்த்தமான ஈசுவரனுலுண்டாக்கப்பட்ட பிரபஞ்சத்தை * உக. விஷயஞ்செய்பவைகளாகா? வெனக் கூறுகின்றார் :—

नरः स्वप्नादौ बाह्यार्थे च असति अपि बद्धचेत । समाधिसुप्तिमूर्छासु अस्मिन् सति अपि न बद्धचते ॥

* உக. ஈசுவரனுலுண்டாக்கப்பட்ட பிரபஞ்சம் இருந்தால் சுகமுதலியவைக ளிருக்கும். அஃதில்லாவிடின் சுகாதிக ளிரா. இவ்வாறு ஈசுவரனுலாக்கப்பட்ட த்வைதத்தின் சம்பந்தி.

(சு-ம்.)

சொப்பனமுதலியவற்றில் புறப்பொருள்கள் இல்லாவிடினும் புருஷன் பந்தத்தை யடைகிறான். சமாதி சுழுத்தி மூர்ச்சைகளில் பாகியபதார்த்த மாகிய இவைக ளிருந்தும் பந்தத்தை யடைகிறதில்லை.

(வி-ம்.)

* உஉ. மனிதன், சொப்பனம் நினைவு மனோராச்சியம் பிராந்திமுதலிய காலங்களில் அநுகூலமான சுகமும் அதன் சாதனமான ஸ்திரீமுதலியவடிவினவும், பிரதிகூலமான துக்கமும் அதன் சாதனமான புலிமுதலிய பாகிய பதார்த்தவடிவினவுமாகிய பாரமார்த்திகவிஷயங்கள் இல்லாதிருந்தும் பந்தத்தை யடைகிறான் அதாவது சுகதுக்கங்களோடு பொருந்துகிறான். சமாதிமுதலியவற்றிலோ இந்தப் பாகியபதார்த்தங்க ளிருந்தும் மனிதன் பந்தத்தை யடைகிறதில்லை அதாவது சுகதுக்கமுதலியவற்றை அநுபவிக்கிறதில்லை. ஆகையால் அந்வயவியதிரேகங்கள் அந்த ஈசுவரனாலுண்டாக்கப்பட்ட பாகியப்பிரபஞ்சத்தை விஷயஞ்செய்பவைகளாகா. ஆனால் அவ்வந்வயவியதிரேகங்கள் ஜீவனாலுண்டாக்கப்பட்ட மனோமயப்பிரபஞ்சத்தை விஷயஞ்செய்வனவாய் சுகமுதலியவடிவ பந்தத்தின் ஏதுத்தன்மையைச் சாதிப்பனவாகின்றன என்பது பொருள். (ருரு)

உ. சுலோகம் உசகூ-உருo-ல் கூறிய அந்வயவியதிரேகங்களின் உதாரணம்.

[உருக] दूरदेशं गते पुत्रे जीवत्येवात्र तत्पिता ।
विप्रलंभकवाक्येन मृतं मत्वा प्ररोदिति ॥ ३४ ॥

(அ-கை.)

மனோமயப்பிரபஞ்சம் பந்தமாகிய சுகதுக்கங்களைச் செய்வதாயிருத்தலால் அதன் அந்வயவியத்ரேகங்களை உதாரணத்தால் இரண்டு சுலோகங்களால் விளக்குகின்றார்:—

दूरदेशं गते पुत्रे जीवति एव अत्र तत्पिता विप्रलंभकवाक्येन मृतं मत्वा प्ररोदिति ॥

(சு-ம்)

தூரதேசத்திற்குச் சென்ற புத்திரனிடத்தில் அவன் அங்கு உயிரோடிருந்தும் இங்கே அவன் பிதாவானவன் வஞ்சகனது வாக்கியத்தால் அவனை இறந்தவனாக மதித்து அழுகிறான்.

(வி-ம்.)

அந்நியதேசத்தையடைந்த புத்திரன் அங்கே பரதேசத்தில் உயிரோ

* உஉ. இங்கே மனிதனென்னும் சொல் தேவர்முதலியோருக்கும் உபலக்ஷணமாம்.

டிருந்தும் இங்கே தன்வீட்டில் உள்ள அவன்பிதா, பொய்வார்த்தைகளால் பிறரைவஞ்சிக்கும் ஓர்புருஷன் "உன்புத்திரன் இறந்துபோனான்" என்று கூறும் வாக்கியத்தால் தனது புத்திரனை இறந்தவனாகக் கற்பித்து மிக அழுகிறான். (௩௪)

[உ௫உ] मृतेऽपि तस्मिन्वार्तायामश्रुतायां न रोदिति ।
अतः सर्वस्य जीवस्य बंधकृन्मानसं जगत् ॥ ३५ ॥

(அ-கை.)

இதுவுமது.

तस्मिन् मृते अपि वार्तायां अश्रुतायां न रोदिति ॥

(சு-ம்.)

அப்புத்திரன் இறந்திருந்தும் அவ்வார்த்தையைக் கேளாதபோது அழுகிறதில்லை.

(வி-ம்)

அதே புத்திரன் அங்குப் பரதேசத்தில் மரித்திருந்தும் அவனது மரணவார்த்தையைக் கேளாதகாலத்து அழுகிறதில்லை.

௩. பலிதார்த்தம்.

(அ-கை.)

பலிதத்தைக் கூறுகின்றார்:—

अतः सर्वस्य जीवस्य मानसं जगत् बंधकृत् ॥

(சு-ம்.)

ஆகையால் சகலஜீவர்களுக்கும் மானஸப்பிரபஞ்சமே பந்தத்தைச் செய்வதாம். (௩௫)

௪. மனோமயம் பந்தத்திற்கு ஏதுவாதலில் சங்கையும் சமாதானமும்.

[உ௫௩] विज्ञानवादो बाह्यार्थे वैयर्थ्यात्स्यादिहेतिचेत् ।
न ह्याकारमाधातुं बाह्यस्यापेक्षितत्वतः ॥ ३६ ॥

(அ-கை.)

மானஸப்பிரபஞ்சம் பந்தத்திற்கு ஏதுவாதலை அங்கீகரிக்குமிடத்துப் பாகியார்த்தங்களில்லாமையால் தமது வேதாந்தசித்தாந்தத்தின் பங்கவடிவ அபசித்தாந்த முண்டாகுமே யென்று வாதி சங்கிக்கின்றான்:—

बाह्यार्थे वैयर्थ्यात् इह विज्ञानवादः स्यात् इति चेत् ॥

(சு-ம்.)

பாகியபதார்த்தங்கள் வியர்த்தமாகுதலால் இங்கே * உ௩. விஞ்ஞான வாதம் உண்டாகும் என்பையாயின்.

(அ-கை.)

சித்தாந்தி விஞ்ஞானவாதத்தினடைவுண்டாகு மென்னுஞ்சங்கையைப் பரிகரிக்கின்றார்:—

न हृदि आकारं आधातुं बाह्यस्य अपेक्षितत्वतः ॥

(சு-ம்.)

அப்படியல்ல; புத்தியில் வடிவத்தைத் தரித்தற்குப் பாகியபதார்த்தம் எங்கள் மதத்தில் விரும்பத்தக்கதாயிருத்தலால்.

(வி-ம்.)

மானஸப்பிரபஞ்சமே பந்தத்திற்கு ஏதுவாயிருக்கினும், அம்மானஸப்பிரபஞ்சத்திற்கு ஏதுவாகப் பாகியபதார்த்தமும் அங்கீகரிக்கப்படுதலால், எங்கள் சித்தாந்தத்தில் விஞ்ஞானவாதம் வந்தடையாது என்பது தாற்பரியம். (௩சு)

இ. பாகியப்பிரபஞ்சம் பயனில்லாததா மென்பதை யங்கீகரித்தல்.

[ உ௫௪] वैयर्थ्यमस्तु बाह्यं न वारयितुमीश्महे ।
प्रयोजनमपेक्षंते न मानानीति हि स्थितिः ॥ ३७ ॥

(அ-கை.)

அப்படியானால் அந்தக்கரணத்தில் வடிவங்களைக் கொள்ளுதற்பொருட்டுப் பாகியபதார்த்தங்களின் அபேக்ஷை யில்லை. ஏனெனின், முன் முன் மானஸப்பிரபஞ்சத்தின் சம்ஸ்காரமே பின்பின் மானஸப்பிரபஞ்சத்திற்கு ஏதுவாதல் சம்பவித்தலால் என்று இவ்வாறுசங்கித்து * உ௪. பிரௌடிவாதத்தால் அந்தப்பாகியவஸ்துவின் பயனின்மையை அங்கீகரிக்கின்றார்:—

वा वैयर्थ्यम् अस्तु ॥

---

* உ௩. க்ஷணிகவிஞ்ஞானவாதியின் மதத்தில் பாகியபதார்த்த(புத்திக்கு வேறாகியவிஷய)ங்களின் அபாவம் ஒப்பப்பட்டிருக்கின்றது. அதன் பிரசங்கம் இங்கே (சித்தாந்தத்தில்) ஒப்பப்பட்டிருக்கின்றது.

* உ௪. துர்ச்சனதோஷ மென்னும் நியாயத்தால் தனது மேன்மையைக் குறித்துச் சொல்லுதல் எதுவோ அது பிரௌடிவாதமாம். இங்கே பாகியவஸ்துக்களுக்கு வியர்த்தத்தன்மையிருந்தும் அதை அங்கீகரித்தல் பிரௌடிவாதமாம்.

(சு-ம்.)

அல்லது பாகியபதார்த்தத்தின் வியர்த்தத்தன்மை இருக்குக.

(அ-கை.)

அப்படியானால் பாகியபதார்த்தத்திற்கு வியர்த்தத்தன்மையை அங்கீகரிக்குமிடத்து க்ஷணிகவிஞ்ஞானவாதமாகிய பௌத்தமதத்திலும் பேதம் யாதெனக் கூறுகின்றார்:—

बाह्यं वारयितुं न ईश्महे ॥

(சு-ம்.)

பாகியபதார்த்தங்களை நிஷேதிக்கச் சாமர்த்தியமுடையேமல்லேம்.

(வி-ம்.)

யோகாசாரனை அநுசரித்தவர்கள் புத்திக்குவேறான விஷயங்களை நிஷேதிக்கின்றார்கள். யாம் அப்படிப் பாகியபதார்த்தங்களின் நிஷேதஞ் செய்கிறதில்லை. ஆனால் பாகியபதார்த்தங்களின் வியர்த்தத்தன்மையாகிய பிரயோஜனமின்மையை மாத்திரம் ஒப்புக்கொண்டோம். இதுவே விஞ்ஞானவாதத்திற்கும் எங்கள் மதத்திற்கும் உள்ள பேதம் என்பது பொருள்.

(அ-கை.)

அப்படியானால் பாகியபதார்த்தங்கள் பிரயோஜன மில்லாதிருத்தலால் அவற்றை அங்கீகரித்தலும் அயுக்தமேயா மென்றாசங்கித்துக் கூறுகின்றார்:—

मानानि प्रयोजनम् न अपेक्षंते इति हि स्थितिः ॥

(சு-ம்.)

பிரத்தியக்ஷமுதலிய பிரமாணங்கள் பிரயோஜனத்தை யபேக்ஷிக்கிறதில்லை என்பது உலகப்பிரசித்தமாகிய மரியாதையாம். அதனால் பாகியபதார்த்தங்களை ஒப்புதல் பொருத்தமல்லாத தன்று.

(வி-ம்.)

பிரமாணவசனத்தால் வஸ்துக்கள் சித்திக்கின்றன ; பிரயோஜனத்தின் வசனத்தால் சித்திக்கிறதில்லை; ஏனெனின், பிரத்தியக்ஷமுதலிய பிரமாணங்களால் நிச்சயிக்கப்பட்ட பாகியவஸ்துக்களுக்குப் பிரயோஜனமின்மையாத்

திரத்தால் அசத்துத்தன்மை இலௌகிகஜனங்களாலும் வாதிகளாலும் * உ௫. அங்கீகரிக்கப்படாதிருத்தலால் என்பது தாற்பரியம். (௩௭)

௬. பிரஹ்மஞானத்தோடு பந்தநிவிருத்திக்கு விரோதமா மெனுஞ் சங்கை.

[உ௫௫] बंधश्चेन्मानसं द्वैतं तन्निरोधेन शाम्यति ।
अभ्यसेद्योगमेवातो ब्रह्मज्ञानेन किं वद ॥ ३८ ॥

(அ-கை.)

அப்படியானால் மானஸப்பிரபஞ்சமே பந்தத்திற்கு ஏதுவாமாயின், மனதையடக்குவதாகிய யோகசமாதியினாலேயே அம்மானஸத்துவைதம் நிவர்த்தியாகுதலால் பிரஹ்மஞானம் பந்தத்தை நிவிருத்திப்பதாமென் றங்கீகரித்தது விருத்தமா மென்பதாக வாதியாகிய யோகமதாநுசாரி சங்கிக்கின்றான்:—

मानसं द्वैतं बंधः चेत् । तत् निरोधेन शाम्यति । अतः योगम् एव अभ्य-
सेत् । ब्रह्मज्ञानेन किं वद ॥

(சு-ம்.)

மனோமயப்பிரபஞ்சம் பந்தமாகுமாயின் அதனைத் தடுத்தலாலேயே பாதிக்கப்படும். ஆகையால் முமுக்ஷு சித்தநிரோதமாகிய யோகத்தையே அப்பியாசிக்கவேண்டும். பிரஹ்மஞானத்தால் என்ன பிரயோஜனம்? அதனைச் சொல்லுக. (௩௮)

௭. சுலோகம் உ௫௫-ல் கூறிய சங்கைக்குச் சமாதானம்.

[உ௫௬] तात्कालिकद्वैतशांतावप्यागामिजनिक्षयः ।
ब्रह्मज्ञानं विना न स्यादिति वेदांतडिंडिमः ॥ ३९ ॥

(அ-கை.)

வாதி! யோகத்தால் துவைதம் * உசு. தாற்காலிக நிவிருத்தியாகுமா? அல்லது * உ௭. ஆத்தியந்திகநிவிருத்தியாகுமா? வென்று விகற்பித்து, சித்

* உ௫. வழியிற்கிடக்கும் புல் முள்முதலிய பதார்த்தங்கள் பிரயோஜனமில்லாதவைகளாயினும்,அவற்றை இல்லையென்று இலௌகீகர்களேனும் வாதிகளேனும் அங்கீகரியார்கள். ஆகையால் பிரயோசனமின்றியும் புறப்பதார்த்தங்களை அங்கீகரிக்கினும் தோஷ மில்லை.

* உசு. எந்தக்காலத்துச் சித்தத்தின் நிரோதம் உண்டாகின்றதோ அந்தக் காலத்திற்றான் துவைதத்தின் நிவிருத்தி யுண்டாகின்றது. அது தாற்காலிகநிவிருத்தியாம்.

* உ௭. துவைதம் நிவிருத்தியாகியபின் உண்டாகாம லிருப்பது அதாவது காரணத்தோடு துவைதம் நீங்குதல் ஆத்தியந்திகநிவிருத்தியாம்.

தாந்தி முதல்விகற்பத்தை அங்கீகரித்து இரண்டாவது விகற்பத்தைத் தூஷிக்கிறார்:—

तात्कालिकद्वैतशांतौ अपि "आगामिजनिक्षयः ब्रह्मज्ञानं विना न स्यात्" इति वेतांतडिंडिमः ॥

(சு-ம்)

யோகத்தால் அந்தச் சித்தநிரோதகாலசம்பந்தியாகிய த்வைதத்தின் நிவிருத்தி யுண்டானாலும் வரும் ஜன்மத்தின் ஆத்தியந்திகநிவிருத்தி பிரஹ்ம ஞானமின்றி யுண்டாகாதென்பது வேதாந்தமாகிய உபநிஷத்துக்களின் முரசாம்.

(வி-ம்.)

"ज्ञात्वा देवं मुच्यते सर्वपाशैर्ज्ञात्वा शिवं शांतिमत्यंतमेति சொப்பிரகாசப்பிரஹ்மமாகிய தெய்வத்தை யறிந்து சகலபாபங்களினின்றும் முக்தனாகிறான். சிவ (மங்களவடிவ)மாகிய பிரஹ்மத்தை யறிந்து ஆத்தியந்திக அநர்த்தநிவிருத்தியாகிய முக்தியை யடைகிறான்" என்பது அந்வயம். "यदा चर्मतवदाकाशं वेष्टयिष्यंति मानवाः तदा देवमविज्ञाय दुःखस्यांतो भविष்யति மனிதன் தோலைப்போல * உஅ. ஆகாயத்தைச் சுருட்டுவானாயின் அப்போது பிரஹ்மாபின்ன ஆத்மாவாகிய தெய்வத்தை அறியாமலே ஜனனமுதலியதுக்கங்கள் நாசமாம்" என்பது வியதிரேகம். இவை * உக. முதலியசுருதிகளில் அந்வயவியதிரேகங்களால் பிரஹ்மஞானத்தினாலேயே பந்தநிவிருத்தி கூறப்பட்டிருக்கின்றதென்பது தாற்பரியம். (௩௯)

அ. பாகியத்துவைதம் நாசமாகாமல் மித்தியாத்தன்மையின் ஞானத்தினாலேயே பிரஹ்மஞானம் சித்திக்குமெனல்.

[௨௬௭] अनिवृत्तेऽपीशसृष्टे द्वैते तस्य मृषात्मताम् ।
बुद्ध्वा ब्रह्माद्वयं बोद्धुं शक्यं वस्त्वैक्यवादिनः ॥ ४० ॥

(அ-கை.)

ஈசுவரனாலுண்டாக்கப்பட்ட பாகியத்துவைதத்தின் நிவிருத்தியின்றி

---

* உஅ. ஆகாயம் நிரவயவமாயிருத்தலாலும் விபுவாயிருத்தலால் மனிதனாற் பற்றப்படாததாயிருத்தலாலும் அதைச் சுருட்டுதல் ஒரு காலத்திலுமாகாது. அது போலப் பிரஹ்மவடிவமாக ஆத்மதெய்வத்தை அறிந்தாலன்றி ஜன்மமுதலிய துக்கம் நிவிருத்தியாகாது என்பது பொருள்.

* உக. இங்கே முதலிய வெனுஞ்சொல்லால் "ஞானமின்றி முக்தி யில்லை" "ஞானத்தினாலேயே கைவல்யமாகிய முக்தியாம்" "அந்தப்பிரத்தியகபின்னபரமாத்மாவினையே அறிந்து மிருத்தியுவைக் கடக்கின்றான். மோட்சத்திற்குப்போக ஞானத்தைவிட வேறுவழியில்லை" என்னுமிவை முதலிய அநேகம் சுருதி ஸ்மிருதிகளும் கொள்ளப்படும்.

அத்வைதப்பிரஹ்மத்தின் ஞானம் உண்டாகாதென் றசங்கித்து, அது நிவி ருத்தியாகாதிருந்தும் அதன் மித்தியாத்துவஞானமாகிய * ௯0 பாதரூப ஞானத்தினலேயே பாரமார்த்திக அத்வைதரூபப்பிரஹ்மம் அறியத்தக்க தாமெனக் கூறுகின்றார்:—

ईशसृष्टे द्वैते अनिवृत्ते अपि तस्य मृषात्मतां बुध्वा वस्त्वैक्यवादिनः अद्वयं ब्रह्म बोद्धुं शक्यम् ॥

(க-ம்.)

ஈசுவரனாலுண்டாக்கப்பட்ட பிரபஞ்சம் நீங்காதிருக்கினும், அதனது மித்தியாத்தன்மையை அறிந்து வாஸ்தவமாகிய அத்வைதவாதிகளுக்கு அத்வைதப்பிரஹ்மம் அறியத்தக்கதாகின்றது. (௪0)

[உ௫அ] प्रलये तन्निवृत्तौ तु गुरुशास्त्राद्यभावतः ।
विरोधिद्वैताभावेऽपि न शक्यं बोद्धुमद्वयम् ॥ ४१ ॥

(அ-கை.)

துவைதத்தின் மித்தியாத்துவஞானம் அத்வைதஞானத்திற்குக் காரணமாகாது. ஆனல் அந்தத் துவைதத்தின் நிவிருத்தியே அத்வைத ஞானத்திற்குப் பிரயோஜகமா மென்னும் ஆக்கிரகமுடைய வாதியை நோக் கிக் கூறுகின்றார்:—

प्रलये तन्निवृत्तौ तु विरोधिद्वैताभावे अपि गुरुशास्त्राद्यभावतः अद्वयं बोद्धुं शक्यं न ॥

(க-ம்.)

பிரளயத்தில் அந்தத்துவைதம் நீங்குங்காலத்து விரோதியாகிய துவை தமில்லாதிருந்தும் குருசாஸ்திரமில்லாமையால் அத்வைதப்பிரஹ்மம் அறி யக்கூடியதன்று.

(வி-ம்.)

பிரளயாவஸ்தையில் அவ்வீசுவரனாலாக்கப்பட்ட துவைதம் நிவிருத்தி யாகுங்கால் விரோதியாகிய துவைதமில்லாதிருந்தும் அதாவது அத்வை

* ௯0. வைரத்தினிடத்தும் சூரியனிடத்தும் தோற்றும் கிரணம் அவற்றைவிட வேறாகாததுபோலும், பழுதை, சுத்தி, பாலைநிலம், கண்ணாடி, ஆகாயமுதலியவற்றில் கிரமமாகத் தோற்றும் பாம்பு, வெள்ளி, கானல்ஜலம், பிரதிபிம்பம், கருமைமுதலிய வைகள் அவற்றைவிட வேறாகாததுபோலும் ஈசுவரனாலுண்டாக்கப்பட்ட ஜகத்தும் அதிஷ்டானப் பிரஹ்மத்தைவிட வேறன்று; ஆனல் மித்தையாம். இப்படி ஈசுவரத்து வைதத்தைப் பாதித்து வாஸ்தவமாய் என்றும் அத்வைதமாயுள்ள பிரஹ்மம் அறியத் தக்கதாம்.

தஞானத்திற்கு விரோதியாயிருத்தலால் உன்னால் ஒப்பப்பட்ட த்வைதம் நிவிருத்தியாயிருந்தும் குருசாஸ்திரமுதலிய ஞானசாதனங்களில்லாத ஏது வால் அத்வைதவஸ்து அறியக்கூடியதாகாது. ஆகையால் அந்த ஈசு வரத்துவைதம் அத்வைதஞானத்திற்குக் காரணமாகாதென்பது தாற் பரியம். (சக)

க. ஈசுவரனுலாக்கப்பட்டதுவைதம் அத்வைதஞானத்தைப் பாதியாமையும் சாதக மாதலால் துவேஷிக்கத்தகாமையும்.

[உருக] अबाधकं साधकं च द्वैतमीश्वरनिर्मितम् ।
अपनेतुमशक्यं चेत्यास्तां तद्द्विष्यते कुतः ॥ ४२ ॥

(அ-கை.)

*௯க. அப்படியானல் துவைதமிருக்க அத்துவைதத்தின் ஞானம் எப் படியுண்டாம்? என்றுசங்கித்துக் கூறுகின்றார்:—

ईश्वरनिर्मितं द्वैतं अबाधकं च साधकं च अपनेतुं अशक्यं इति तत् आस्तां । कुतः द्विष्यते ॥

(சு-ம்.)

ஈசுவரனுலுண்டாக்கப்பட்ட பிரபஞ்சம் பாதமில்லாததும் சாதகமு மாம்; தள்ளுதற்குக் கூடாததாயுமிருக்கின்றது. ஆகையால் அது இருக் குக. ஏன் அது துவேஷிக்கப்படுகின்றது ?

(வி-ம்.)

ஈசுவரனு லுண்டாக்கப்பட்ட துவைதம் அத்வைதஞானத்திற்குப் * ௯உ. பாதமில்லாததாம் ; ஏனெனின், அந்தத்துவைதத்தின்மித்தியாத் துவஞானத்தினுலேயே அத்வைதஞானத்தின் உற்பத்தி சுருதிகளிற் சொல்லப்பட்டிருத்தால். அன்றியும் அவ்வீசுவரத்துவைதம் அத்வைத ஞானத்திற்குச் சாதகமாம்; ஏனெனின், குருசாஸ்திரமுதலிய வடிவின தாகிய அவ்வீசுவரனுலுண்டாக்கப்பட்ட துவைதம் ஞானத்திற்குச் சாதன மாயிருத்தலாலும், ஆகாயமுதலிய துவைதம் எங்களால் நிவிருத்திக்கக்

---

* ௯க. ஈசுவரத்துவைதத்தின் நாசம் அத்வைதஞானத்திற்குக் காரணமன்றெ னினும்.

* ௯உ. எப்படிக் கடம் குண்டலமுதலியவற்றின்வடிவம் மண் பொன்முதலிய வற்றின் ஞானத்திற்குப் பாதகமல்லவோ, அப்படிக் கண்ணுடியிலுள்ள பிரதிபிம்பம் ஆகாயத்திலுள்ள கருமை, கானலிலுள்ள ஜலம், சொப்பனப்பிரபஞ்சம், இரமமாக முகம், ஆகாயம், மருபூமி, புருஷனது அத்வைதஞானம் என்பவற்றைப் வாதிப் பனவாகாவோ, அதுபோல ஈசுவரத்துவைதமும் அத்துவைதப்பிரஹ்மஞானத்தின் பாதக மன்று. ஆனல் மித்தையாயிருத்தலால் பாதகமில்லாததாம்,

கூடியதன்று என்னும் ஏதுவாலும், அந்தத்துவைதம் எப்படியிருக்கவேண்டுமோ அப்படியிருக்குக. அதனிடத்தில் ஏன் உங்களால் துவேஷம் செய்யப்படுகின்றது என்பது பொருள். (௪உ)

உ. ஜீவத்துவைதத்தினைப் பேதத்தோடு நீக்குதல் உ௬0-உ௬௩.

க. ஜீவனாலாகிய சாஸ்திரப்பிரபஞ்சத்தினை, வியவஸ்தையோடு கொள்ளுதலும் தள்ளுதலும் உ௬0-உ௬௫.

க. ஜீவனாலாக்கப்பட்ட இரண்டு த்வைதங்களின் பெயர்.

[உ௬0] जीवद्वैतं तु शास्त्रीयमशास्त्रीयमिति द्विधा।
उपाददीत शास्त्रीयमातत्त्वस्यावबोधनात् ॥ ४२ ॥

(அ-கை.)

இப்போது ஜீவனுலுண்டாக்கப்பட்ட துவைதமாகிய மானஸப்பிரபஞ்சத்தைப் பிரிக்கின்றார்:—

जीवद्वैतं तु शास्त्रीयं अशास्त्रीयं इति द्विधा ॥

(சு-ம்.)

ஜீவனுலுண்டாக்கப்பட்ட பிரபஞ்சம் சாஸ்திரீயம் அதாவது சாஸ்திரத்தில் விதிக்கப்பட்டது, அசாஸ்திரீயம் அதாவது சாஸ்திரத்தில் நிஷேதிக்கப்பட்டது என்று இரண்டுவகையாம்.

உ. ஞானத்திற்குமுன் சாஸ்திரீயத்தை யங்கீகரித்தல்.

(அ-கை.)

அப்படியானல் அவ்விரண்டுவகை ஜீவனாலாகிய துவைதமும் எப்போதும் விடத்தக்கனவா? அல்லவா? என: இரண்டும் எப்போதும் விடத்தக்கனவாகாவென்று கூறுகின்றார்:—

तत्त्वस्य अवबोधनात् आ। शास्त्रीयं उपाददीत ॥

(சு-ம்.)

தத்துவத்தின் ஞானம்வரையிலும் சாஸ்திரப்பிரபஞ்சத்தைக் கொள்ளல்வேண்டும்.

(வி-ம்.)

आ (ஆ) என்பதற்குத் தத்துவஞானம் வரையிலும் என்பது பொருள்.

௩. சாஸ்திரீயப்பிரபஞ்சத்தின் சொரூபம்.

[உசுக] आत्मब्रह्मविचाराख्यं शास्त्रीयं मानसं जगत् ।
बुद्धे तत्त्वे तच्च हेयमिति श्रुत्यनुशासनम् ॥ ४४ ॥

(அ-கை.)

அந்தச் சாஸ்திரீயப்பிரபஞ்சம் யாதென்று கேட்குமிடத்துக் கூறு கின்றார்:—

आत्मब्रह्मविचाराख्यं शास्त्रीयं मानसं जगत् ॥

(சு-ம்.)

ஆத்மாவிற் கபின்னமாகிய பிரஹ்மத்தின் விசாரம் என்னும் பெயருள்ள சிரவணாதிகள் சாஸ்திரீயமானஸமாம் அதாவது ஜீவனாலாக்கப் பட்ட பிரபஞ்சமாம்.

(வி-ம்.)

பிரத்தியகாத்மாவாகிய பிரஹ்மத்தின் விசார மென்னும் பெருடைய * ௩௩. சிரவணமுதலியவைகள் சாஸ்திரத்திற் சொல்லப்பட்ட மானஸப் பிரபஞ்சமாம் என்பது பொருள்.

௪. ஞானத்திற்குப்பின் சாஸ்திரீயப்பிரபஞ்சத்தை விடவேண்டுமெனல்.

(அ-கை.)

அப்படியானால் "தத்துவஞானம்வரையிலும் சாஸ்திரீயத்துவைதத்தைக் கொள்ளவேண்டும்" என்று நீர் உசுO-வது சுலோகத்திற் கூறியது பொருந்தாது; "சுழுத்திவரையிலும் மரணபரியந்தமும் காலத்தை வேதாந்தசாஸ்திரவிசாரத்தால் கழிக்கவேண்டும்" என்று சாஸ்திரங்களிற் சொல்லப்பட்டிருத்தலால் என்றாசங்கித்துக் கூறுகின்றார்:—

तत्त्वे बुद्धे तत् च हेयं इति श्रुत्यनुशासनम् ॥

(சு-ம்)

"தத்துவத்தையறிந்தபின் அச்சாஸ்திரீயத்துவைதம் விடத்தக்கதாம்" என்பது சுருதியின் ஆணையாம்.

(வி-ம்.)

பிரஹ்மாத்ம ஐக்கியமாகிய தத்துவத்தைச் சாக்ஷாத்கரித்தபின் அந்

* ௩௩. சிரவண மனனமுதலிய விசாரம் மனதின் கற்பனைவடிவமாயிருத்தலால் அது ஜீவனாலாகிய த்வைதமாம்.

தச்சாஸ்திரப்பிரபஞ்சம் தள்ளத்தக்கதாம் என்பது பொருள். அப்படியானால் "சுழுத்திவரையிலும்" என்னும் வாக்கியத்திற்குக் * ௩௪. கதியாதென்று கேட்பாயாயின், உரையிலேயே சொல்லுகிறேன் கேட்பாயாக. "ஜீவன்முக்திசுகத்திற்கு விரோதமான காமமுதலியவற்றிற்கு ஒருகாலும் கொஞ்சமும் சித்தத்திற் கிடந்தரலாகாது" என்று "சுழுத்திவரையிலும" என்பதாக முற்கூறிய சாஸ்திரவாக்கியத்தின் முற்பாதியில் காமமுதலியவற்றிற் கிடந்தருதல் நிஷேதிக்கப்பட்டிருத்தலால் முற்கூறிய வாக்கியம் காமமுதலியவற்றிற்கு இடந்தருதலை நிஷேதிக்கும் தாற்பரியமுடையதேயாம், வித்துவானுக்குச் சிரவணுதிவடிவ வேதாந்தவிசாரத்தை விதித்தற்பொருட்டாகியதன்று என்று முற்கூறிய வாக்கியத்திற்கு யாம் வியவஸ்தை கூறுகின்றேமாகலின் "தத்துவஞானம்வரையிலும் சாஸ்திரத்துவைதத்தைக் கொள்ளவேண்டும்" என்று யாம் கூறியதும் பொருந்துமென்பது தாற்பரியம். (௪௪)

இ. சாஸ்திரீயத்துவைதத்தை ஞானத்திற்குப்பின் விடவேண்டுமென்பதில் சுருதிப்பிரமாணம்.

[உ௬உ] शास्त्राण्यधीत्य मेधावी अभ्यस्य च पुनः पुनः ।
परमं ब्रह्म विज्ञाय उल्कावत्तान्यथोत्सृजेत् ॥ ४५ ॥

(அ-கை.)

தத்துவஞானத்திற்குப் பிற்காலத்தில் அச்சாஸ்திரீயத்துவைதம் விடத்தக்கதா மென்று கூறுவதிற் றாற்பரியமுடைய சுருதிகளை நான்கு சுலோகங்களால் உதகரிக்கின்றார்:—

मेधावी शास्त्राणि अधीत्य च पुनः पुनः अभ्यस्य परमं ब्रह्म विज्ञाय अथ उल्कावत् तानि उत्सृजेत्

(சு-ம்.)

விவேகமுதலியவற்றோடுகூடிய புத்திமானாகிய அதிகாரி சாஸ்திரங்களைக் குருமுகமாகக் கேட்டு, அவற்றை அடிக்கடி அப்பியசித்து அதாவது விசாரித்தலாகிய மனனஞ்செய்து, மேலாகிய பிரஹ்மத்தை விசேஷமாக அதாவது சம்சயமுதலியவைகளில்லாமல் அறிந்து, பின் அச்சாஸ்திரங்களைக் * ௩௫. கொள்ளிக்கட்டையைப்போலத் தள்ளவேண்டும். (௪௫)

---

* ௩௪. கதி=வியவஸ்தை.

* ௩௫. சமையல்செய்யவேண்டிய புருஷன் சமையலைச் செய்தபின் எரிந்த கட்டைகளைத் தள்ளிவிடுதல்போல் முமுக்ஷுவானவன் பரப்பிரஹ்மத்தை யறிந்தபின் சாஸ்திரத்தை (சாஸ்திரவாசனையை) விடவேண்டும்; ஞானத்திற்குமுன் விடலாகாது. ஏனெனின், பிரஹ்மத்தை அறிதலே சாஸ்திரத்திற்குப் பிரயோசனமாம்; வேறில்லை. அதனை ஸ்ரீ சங்கராசாரியசுவாமிகளும் விவேகசூடாமணி யென்னும் நூலில் "பரத்துவத்தை யறியாமல் வித்தையைப் படித்தல் பிரயோஜனமில்லாததாம். பரத்துவத்தை யறிந்தபின்னும் வித்தையைப் படித்தல் பிரயோஜனமில்லாததாம்" எனக் கூறியிருக்கின்றார்கள்.

[௨௬௩] ग्रंथमभ्यस्य मेधावी ज्ञानविज्ञानतत्परः ।
पलालमिव धान्यार्थी त्यजेद्ग्रंथमशेषतः ॥ ४६ ॥

(அ-கை.)

இதுவுமது:—

मेधावी ग्रंथम् अभ्यस्य ज्ञानविज्ञानतत्परः सन् धान्यार्थी पलालम् इव अशेषतः ग्रंथम् त्यजेत् ॥

(சு-ம்)

புத்திமான் சாஸ்திரத்தை அப்பியசித்து *௩௬. ஞான *௩௭. விஞ்ஞானங்களில் தற்பரனாய்த் தானியம் விரும்பியவன் *௩௮. வைக்கோலைத் தள்ளுவதுபோலச் சாஸ்திரத்தை முழுவதும் விடக்கடவன். (௪௬)

[௨௬௪] तमेव धीरो विज्ञाय प्रज्ञां कुर्वीत ब्राह्मणः ।
नानुध्यायाद्बहूञ्छब्दान्वाचो विग्लापनं हि तत् ॥ ४७ ॥

(அ-கை.)

இதுவுமது:—

धीरः ब्राह्मणः तम् एव विज्ञाय प्रज्ञां कुर्वीत । बहून् शब्दान् न अनुध्यायात् हि तत् वाचः विग्लापनम् ॥

(சு-ம்)

பிரஹ்மசரியமுதலிய சாதனசம்பன்னபரனை பிரஹ்மமாக இச்சையுள்ள முமுக்ஷுவானவன் பிரத்தியகபின்ன பரமாத்மாவாகிய அஃதொன்றனையே விசேஷமாக அறிந்து அதில் நிலைத்தலாகிய *௩௯. பிரஞ்ஞையைச் செய்யவேண்டும். அநேக சப்தங்களைத் *௪0. தியானிக்கலாகாது.

* ௩௬. பரோக்ஷ அநுபவம். அல்லது சிரவணமனனங்களால் உண்டாகியது, அல்லது குரு சாஸ்திரங்களால் உண்டாகியது, அல்லது ஜகத்தின் மித்தியாத்துவபூர்வகமாக பிரஹ்மாத்ம ஐக்கியத்தை நிச்சயித்தல் ஞானமெனப்படும்.

* ௩௭. அபரோக்ஷாநுபவம், அல்லது நிதித்தியாசனத்தாலுண்டாகியது, அல்லது குருசாஸ்திரவாயிலாக நிச்சயிக்கப்பட்ட அர்த்தம் தனக்கு உள்ளபடியே அநுபவமாதல் விஞ்ஞானமெனப்படும்.

* ௩௮. வைக்கோல்முதலியனவாகிய குப்பை கூளங்களைக் குடியானவன் தள்ளிவிடுவதுபோலத் தள்ளிவிடல்வேண்டும்.

* ௩௯. இடைவிடாது பிரஹ்மத்திலிருக்கும் விருத்தியாகிய ஏகாக்கிரத்தன்மையைச் செய்யவேண்டும்.

* ௪0. இங்கே தியானமென்னும் சப்தம் சொல்லுதற்கும் உபலக்ஷணமாம். ஆகையால் அநேக சப்தங்களைச் சொல்லுதலும் கூடாது.

அப்படிச் சப்தங்களைத் தியானித்தல் * ௪௧. வாக்கின் பரிசிரமத்திற்கு ஏது வேயாம். (௪௭)

[௨௯௫] तमेवैकं विजानीथ ह्यन्या वाचो विमुंचथ ।
यच्छेद्वाङ्मनसी प्राज्ञ इत्याद्याः श्रुतयः स्फुटाः ॥ ४८ ॥

(அ-கை.)

இதுவுமது:—

एकं तम् एव विजानीथ हि । अन्याः वाचः विमुंचथ । प्राज्ञः वाङ्मनसी यच्छेत् इत्याद्याः श्रुतयः स्फुटाः ।

(சு-ம்.)

பிரஹ்மாபின்ன ஆத்மாவாகிய அஃதொன்றனையே அறிக; மற்ற வாக்குகளாகிய சாஸ்திரங்களை விடுக. ஞானி * ௪௨. வாக்கை மனதில் அடக்க வேண்டுமென்பனமுதலிய அநேகசுருதிகள் ஞானமுண்டாயபின் சிரவணுதிவடிவ சாஸ்திரப்பிரபஞ்சம் விடத்தக்கதாமென்பதில் வெளிப்படையான பிரமாணமா யிருக்கின்றன.

(வி-ம்.)

“அஃதொன்றனையே விசேஷமாக அறிக மற்ற அநாத்மவடிவ வாக்குகளை விடுக” என்றதனால் “तमेवैकं जानथ । आत्मानं अन्या वाचो विमुंचथ अमृतस्यैष सेतुः அவ்வாத்மா ஒன்றனையே அறிக. மற்ற வாக்குகளை விடுக. இவ்வாத்மா அமிருதமாகிய மோக்ஷத்திற்கு ஸேதுவென்னும் அணையாம்” என்னும் சுருதி இங்கே அர்த்தரூபமாகச் சொல்லப்பட்டது. (௪௮)

* ௪௧ வாக்கெனனும் சத்தம் மனதிற்கும் உபலக்ஷணமாம். ஆகையால் சப்தங்களைச் சொல்லுதல் வாக்கிற்குத் துக்க ஏதுவாதல்போலச் சப்தமும் சப்தார்த்த வடிவ அநாத்மசிந்தனமும் மனதின் பரிசிரம(துக்க)த்திற் கேதுவேயாம்

* ௪௨. வாக்கென்னுஞ் சத்தத்தால் தசேந்திரியங்களுங் கொள்ளப்படுகின்றன. ஆகையால் “சுரோத்திரமுதலிய தசேந்திரியங்களை விஷயங்களினின்றும் தடுத்தலோடு மனதில் ஒடுக்கவேண்டும். அம்மனதைச் சங்கற்பமின்றியதன்மையால் ஞாதாவாகிய நிச்சயவடிவ புத்தியில் ஒடுக்கவேண்டும். அந்த ஞானமாகிய புத்தியை अहं ब्रह्मास्मि । நான் பிரஹ்மமென்னும் விருத்திவடிவ உபாயத்தால் மகதாத்மாவாகிய அவ்வியக்தத்தில் ஒடுக்கவேண்டும். அந்த நிருவிகற்பமகாத்மாவைச் சாந்தாத்மாவில் (தன்னினும் வேறாகிய வஸ்துக்களின்றும் சாந்தமாகிய நிருபாதிக பரமாத்மாவில்) ஒடுக்கவேண்டும் (பரமாத்மாமாத்திரமாக மிஞ்சவைக்கவேண்டும்).” என்பது மேற்கூறிய சுருதியின் அர்த்தமாம்.

௨. ஜீவனுற்செய்யப்பட்ட இரண்டு அசாஸ்திரீயத் துவைதத்தின் சொரூபமும் அவற்றை விடுவதின் பிரயோஜனமும் ௨௫௯-௨௬௦.

௧. தீவிரமந்தபேதத்தால் அசாஸ்திரீயத்துவைதம் இருவகையாதல்.

[௨௫௯] अशास्त्रीयमपि द्वैतं तीव्रं मंदमिति द्विधा ।
कामक्रोधादिकं तीव्रं मनोराज्यं तथेतरत् ॥ ४९ ॥

(அ-கை.)

அப்போது அசாஸ்திரீயப்பிரபஞ்சத்தின் அவாந்தரபேதத்தைக் கூறுகின்றார்:—

अशास्त्रीयं द्वैतं अपि तीव्रं । मंदं इति द्विधा ।

(சு-ம்)

அசாஸ்திரீயமாகிய ஜீவத்துவைதமும் தீவிரம் மந்தம் என இரண்டு வகையாம்.

(அ-கை.)

இருவகை ஜீவத்துவைதத்தையும் கிரமமாக உதாகரிக்கின்றார்:—

कामक्रोधादिकं तीव्रं । तथा मनोराज्यं इतरत् ॥

(சு-ம்.)

காமக்குரோதமுதலியவைகள் தீவிரமாம். அப்படியே மனோராச்சியம் அந்நியமாகிய மூன்றுவதாம் அதாவது மந்தமாம். (௪௧)

௨. இரண்டு துவைதங்களும் ஞானத்திற்கு முன் ஞானத்தின்பொருட்டு விடவேண்டியனவாமெனல்

[௨௬௦] उभयं तत्त्वबोधात्प्राङ्निवार्यं बोधसिद्धये ।
शमः समाहितत्वं च साधनेषु श्रुतं यतः ॥ ५० ॥

(அ-கை.)

அப்படியானால் இந்த இரண்டு அசாஸ்திரீயத்துவைதங்களும் சாஸ்திரீயத்துவைதத்தைப்போலத் தத்துவஞானத்திற்குப் பிந்தியகாலத்திலேயே தள்ளத்தக்கவைகளாகுமோவென அங்ஙனமல்லவென்று கூறுகின்றார்:—

उभयं तत्त्वबोधात् प्राक् निवार्यम् ॥

(சு-ம்.)

அசாஸ்திரீயத்துவைதம் இரண்டும் தத்துவஞானத்திற்கு முன் நிவிருத்திக்கத்தக்கனவாம்.

(அ-கை.)

தத்துவஞானத்திற்கு முன் அவற்றை நிவிருத்தித்தல் எதன்பொருட்டெனக் கூறுகின்றார்:—

बोधसिद्धये ॥

(சு-ம்.)

ஞானம் சித்திக்கும்பொருட்டாம்.

(அ-கை.)

ஞானம் சித்திக்கும்பொருட்டு அவை முன்னமே தள்ளத்தக்கனவாமென்பதில் சுருதியிற் கூறப்பட்ட இலிங்கமாகிய ஏதுவைக் கூறுகின்றார்:—

यतः शमः च समाहितत्वं साधनेषु श्रुतम् ॥

(சு-ம்.)

எதனால் சமம் சமாதானஞ் செய்யப்படுந்தன்மையாகிய இரண்டும் சாதனங்களில் கேட்கப்பட்டிருக்கின்றனவோ அதனால்.

(வி-ம்.)

தத்துவஞானத்திற்குமுன் அந்த அசாஸ்திரீயத்துவைதங்கள் இரண்டும் தள்ளத்தக்கவைகளாயிருத்தலினாலேயே நித்தியாநித்தியவஸ்துக்களின் விவேகமுதலிய பிரஹ்மஞானசாதனங்களுள் "சாந்தன், சமாகிதன்" என்னும் பதங்களால் சமம், சமாதானம் என்பன சுருதியிற் *சங. கேட்கப்பட்டிருக்கின்றன என்பது பொருள். (ரு0)

௯. ஞானத்திற்குப்பின்னும் இரண்டு அசாஸ்திரீயத்துவைதங்களும் ஜீவன்முத்தியின்பொருட்டு விடவேண்டியவாமெனல்.

[உகூஅ] बोधादूर्ध्वं च तद्धेयं जीवन्मुक्तिप्रसिद्धये ।
कामादिक्लेशबंधेन युक्तस्य न हि मुक्तता ॥ ५१ ॥

(அ-கை)

அப்படியானல் "தத்துவஞானத்திற்கு முன் இரண்டு துவைதங்க

* சங. இங்கே சமத்தைச் சொல்லுதலால் காமமுதலியனவாகிய தீவிர ஜீவத்துவைதத்தின் நிஷேதமும், சமாதியைச் சொல்லுதலால் மனோராச்சியவடிவமாந்த ஜீவத்துவைதத்தின் நிஷேதமும் சொல்லப்படும்.

களும் நிவிருத்திக்கத்தக்கவைகளாம்" என்று சொல்லுதலால் தத்துவஞா னத்திற்குப் பிந்தியகாலம் இந்த அசாஸ்திரீயத்துவைதத்தை அங்கிகரித் தல் தகுதியாகுமோ என்றுசங்கித்துக் கூறுகின்றார்:—

च बोधात् ऊर्ध्वं जीवन्मुक्तिप्रसिद्धये तत् हेयम् ॥

(சு-ம்.)

ஞானத்திற்குப் பின்னும் அந்த அசாஸ்திரீயத்துவைதம் ஜீவன்முக்தி பிரசித்தியாகும்பொருட்டுத் தள்ளத்தக்கதாம்.

(அ-கை.)

முற்கூறிய ஜீவன்முக்தியின் பிரசித்திவடிவ அர்த்தத்தை வியதிரேக முகத்தால் திடஞ்செய்கின்றார்:—

कामादिक्लेशबंधेन युक्तस्य मुक्तता न हि ॥

(சு-ம்.)

எதனால் காமமுதலிய கிலேசமாகிய பந்தத்தோடுகூடியவனுக்கு ஜீவ ன்முக்தத்தன்மை யில்லையோ (அதனால்).

(வி-ம்.)

காமமுதலிய கிலேசங்களே பந்தமாம். அந்தப் பந்தத்தோடுகூடிய புருஷனுக்கு ஜீவன்முக்தத்தன்மை யில்லை யென்பது பொருள். (௩௧)

௪. ஜீவன்முக்தியினடைவிற் சங்கைசமாதானம்.

[உசுக] जीवन्मुक्तिरियं माभूज्जन्माभावे त्वहं कृती ।
तर्हि जन्मापि तेऽस्त्वेव स्वर्गमात्रात्कृती भवान् ॥ ५२ ॥

(அ-கை.)

அப்படியானால் ஜனனமனனமுதலிய சமுசாரத்தால் தாபத்தை யடைந்தவனுக்கு அத்தியந்திக அதாவது அபாவமின்றிய புருஷார்த்தமா கிய நித்தியாநந்த மென்னும் மறுபிறப்பின்மைவடிவ விதேகமுக்தியினு லேயே பூரணத்துவ முண்டு. க்ஷணிகசுகவடிவ இந்த ஜீவன்முக்தியினுல் என்ன பிரயோஜன மென்று வாதி மூலத்தில் சங்கிக்கின்றான்:—

इयं जीवन्मुक्तिः माभूत् । तु जन्माभावे अहं कृती ॥

(சு-ம்.)

இந்த ஜீவன்முக்தியானது எனக்கு உண்டாகவேண்டாம். மறுபிறப் பில்லாமையால் நான் கிருதார்த்தனுகின்றேன்.

(அ-கை.)

இவ்வுலகத்தின் போகத்தை நிவர்த்திக்கப் பயந்து ஜீவன்முக்தியை விடுவாயாயின், சுவர்க்கமுதலியவற்றின் போகத்தை நிவிருத்திக்கும் பயத்தால் விதேகமுக்தியும் உன்னால் விடத்தக்கதாம் என்னும் வாக்கியத்தால் கட்டுப்படுத்திச் சித்தாந்தி பரிகரிக்கின்றார்:—

तर्हि जन्म अपि ते अस्तु एवा । स्वर्गमात्रात् भवान् कृती ॥

(சு-ம்.)

அப்போது ஜன்மமும் உனக்குண்டாகுக. சுவர்க்கப்பிராப்திமாத்திரத்தினால் நீ கிருதார்த்தனாகக் கடவாய். (௯உ)

௯. காமமுதலியவற்றை விடுதல் தகுதியாதலில் சங்கை சமாதானம்.

[உஎ0] क्षयातिशयदोषेण स्वर्गो हेयो यदा तदा ।
स्वयं दोषतमात्मायं कामादिः किं न हीयते ॥ ५३ ॥

(அ-கை.)

வாக்கியக்கட்டுப்பாட்டை விடுவித்தற்கு வாதி சங்கிக்கின்றான்:—

क्षयातिशयदोषेण स्वर्गः हेयः यदा ॥

(சு-ம்.)

* சச. நாசம் * சரு. மேன்மை என்னும் தோஷங்களால் சுவர்க்கம் தள்ளத்தக்கதாகின்றதென்று கூறின்.

(அ-கை.)

தோஷத்தோடுகூடியனவாயிருத்தலால் சுவர்க்கமுதலியனவைகள் தள்ளத்தக்கனவாகுமாயின், அப்போது தர்மாதிவடிவ சகல புருஷார்த்தங்களையும் கெடுப்பனவாயிருத்தலால் மிகவும் தோஷவடிவமாகிய காமமுதலியவைகள் நிரந்தரம் தள்ளத்தக்கனவாமென்று சித்தாந்தி கூறுகின்றார்.—

तदा स्वयं दोषतमाऽऽत्मा अयं कामादिः किं न हीयते ॥

(சு-ம்.)

அப்போது சொரூபமாகத் தோஷவடிவமாகிய இந்தக் காமமுதலியவைகள் உன்னால் ஏன் தள்ளப்படா. (௯௩)

* சச. புண்ணியக்குறைவால் சுவர்க்கத்தினின்றும் விழுதல் அல்லது பிரளயகாலத்தில் அழிதல் க்ஷயதோஷமாம்.

* சரு. தனக்கு அந்நியமாகிய தேவர்களுக்கும் புண்ணியமேம்பாட்டால் அதிக ஐசுவரியமிருத்தல் அதிசயதோஷமாம்.

ரு. ஜீவனுலாகிய தீவிர அசாஸ்திரீயத்துவைதம் அநர்த்தத்திற்குக் காரணமா
யிருத்தலால் விடத்தக்கதாமெனல் உஎக—உஎரு.

க. காமாதிகளை விடாததினுல் ஞானிக்கு இஷ்டப்படி நடத்த லுண்டாமெனல்.

[உஎக] तत्त्वं बुद्ध्वापि कामादीन्निःशेषं न जहासि चेत् ।
यथेष्टाचरणं ते स्यात्कर्मशास्त्रातिलंघिनः ॥ ५४ ॥

(அ-கை.)

அப்படியானுல் வைராக்கியமுதலியவற்றைச் சம்பாதித்தலால் அத்தி யந்த * சசு. அநர்த்தத்திற்கு ஏதுவாகிய காமமுதலியவற்றைவிட்டு, இவ் வுலகசம்பந்தமுள்ள சாஸ்திரத்தில் விலக்கப்படாத விஷயசுகத்தின் அநு பவமாகிய போகமாத்திரத்தால் உபயோகமுள்ள * சஎ. காம முதலிய வற்றை அங்கீகரிப்பதில் குற்றம் யாதென்று ஆசங்கித்துக் கூறுகின்றார்:—

तत्त्वं बुद्ध्वा अपि निःशेषं कामादीन् न जहासि चेत् कर्मशास्त्रातिलंघिनः ते यथेष्टाचरणं स्यात् ॥

(சு-ம்.)

தத்துவத்தை யறிந்தும் சகல * சஅ. காமாதிகளையும் விடாதிருப்பா யாயின், அப்போது கர்மசாஸ்திரத்தை அதிக்கிரமித்த உனக்கு இஷ்டப்படி (விரும்பியவண்ணம்) நடத்தல் உண்டாகும்.

---

* சசு. சொரூபத்தினின்றும் நழுவுதல்வ யிலாக ஜனனமுதலிய அநர்த்தத் திற்கு ஏதுவ கிய சுவர்க்காதிபோக சம்பந்தமுள்ள காமமும் குரு பிதா முதலியோ ரின் சம்பந்தமாகிய குரோதமும்; அல்லது உலகநிந்தை அடிமுதலிய அநர்த்தங்க ளுக்கு ஏதுவாகும் உலகசம்பந்தமாகிய பரஸ்திரீமுதலிய விஷயத்தினதாகிய காம மும், அபராதமில்லாத பிராணிகளை முன்னிட்டுவரும் கோபமுமாகிய அவற்றை விட்டு.

* சஎ. அவ்வுலகசம்பந்தமுள்ள வலியக்கிடைத்த ஸ்திரீமுதலியவற்றை விஷ யிக்கும் காமத்தையும், அபராதமுள்ள (சத்துருவாகிய) பிராணிகளை விஷயிக்கும் குரோதத்தையும் அதாவது பிராரப்தபோகத்திலுபயோகமுள்ள காமக்குரோதங்களை யும் அங்கீகாரஞ்செய்யின் என்ன தோஷம்?

* சஅ. பிராரத்தம் என்னும் முன் புருஷார்த்தம் இந்த ஜன்மத்திலுள்ள புரு ஷார்த்தம் என்னுமிவற்றில் எது வலியுடையதோ அதற்கு ஜயமுண்டாகும் ஆகை யால் இந்த ஜன்மத்திலுள்ள அதிக புருஷார்த்தத்தால் பிராரப்தத்திலாகிய காம முதலியவற்றிற்கும ஜயமுண்டாகும். இந்த நிச்சயம் வாசிஷ்டத்தின் இரண்டாவது முமுக்ஷுப்பிரகரணத்தில் தெளிவாம். ஆதலால் பிராரப்தத்தின் வஞ்சிப்பால் முயற்சி தளர்ந்து வித்துவான் ஜீவன்முக்திக்கு விரோதமாகிய காம முதலியவற்றில் அழுந்துதல் பொருந்தாது.

(வி-ம்.)

"நான் தத்துவஞானி யாயிருக்கிறேன். எனக்கென்ன தோஷமிருக்கின்றது ?" என்று தத்துவஞானித்தன்மையின் அபிமானத்தால் விதிநிஷேதசாஸ்திரத்தை அதிக்கிரமித்துக் சுய்மமுதலியவற்றின் வசமாயிருக்குமனக்கு எதேஷ்டாசரணம் அதாவது பசுவையும் பாமரனையும்போல இஷ்டப்படி நடத்தலாகிய *சக. பிரமாதம் உண்டாகும் என்பது பொருள்.

உ. இஷ்டப்படிநடத்தலைப் பிரமாணத்தோடு அநிஷ்டமெனல்.

[உ௭உ] बुद्धाद्वैतसतत्त्वस्य यथेष्टाचरणं यदि ।
शुनां तत्त्वदृशां चैव को भेदोऽशुचिभक्षणे ॥ ५५ ॥

(அ-கை.)

ஞானிக்கு இஷ்டப்படி நடத்தல் இருக்குக, அதனால் என்னதோஷமென்றுசங்கித்து, அவ்விஷ்டப்படி நடத்தலின் தோஷவடிவத்தன்மையைப் பிரதிபாதித்தலில் தாற்பரியமுடைய சுரேசுவராசாரியரது வாக்கியத்தை உதாகரிக்கின்றார்:—

बुद्धाद्वैतसतत्त्वस्य यथेष्टाचरणं यदि । अशुचिभक्षणे । शुनां च एव तत्त्वदृशां कः भेदः ॥

(சு-ம்.)

அத்வைததத்துவத்தை யறிந்தவனுக்கு இஷ்டப்படி நடத்தல் உண்டாகுமாயின், அசுத்தத்தைப் புசிப்பதில் நாய்க்கும் தத்துவஞானிக்கும் என்ன பேதம்?

---

* சக. விஷயங்களில் பரவசமாதல் பிரமாதமாம். அல்லது கர்த்தவ்வியத்தை மறத்தற்குப் பிரமாத மென்று பெயர். ஞானிக்கு மோக்ஷத்தின்பொருட்டாவது அல்லது தத்துவஞானத்தின்பொருட்டாவது இகலோக பரலோகங்களின்பொருட்டாவது கர்த்தவ்வியம் (செய்யத்தக்கது) ஒன்று மில்லை என்றாலும் லோகசங்கிரகார்த்தமாய் (உலகத்திலுள்ளாரைக் கெட்டவழியில் பிரவிருத்தித்தலினின்றும் நீக்கும்பொருட்டு)ச்சாஸ்திரத்திற் கூறியபடி நடத்தல் தகுதியாம். அல்லது ஜீவன்முக்திக்கு விலக்ஷணமாகிய ஆநந்தத்தின்பொருட்டுப் பிரஹ்மவிசாரம் கர்த்தவ்வியமாம். அதை மறந்து (விட்டு) வேறுவிதமாயிருத்தல் பிரமாதமாம். அந்தப்பிரமாதம் காமாசாரம் (காம ஒழுக்கம்) காமவாதம் (காமக்கூற்று) காமபக்ஷணம் (காமநுகர்ச்சி) என்னும் பேதத்தால் அநேகவிதமாம். அது விதிநிஷேதமின்றியவனாயினும் வித்துவானுக்குண்டாகாது இதில் பாகவதத்தின் ஏகாதசஸ்கந்தத்தின் ஏழாவது அத்தியாயத்திலுள்ள வாக்கியம் பிரமாணமாம். "(விதிநிஷேதங்கள் இரண்டுமில்லாத ஞானியானவன் தோஷபுத்தியினால் நிஷேதத்தினின்றும் நிவிருத்தியாகிறதில்லை. அறைல்

(வி-ம்.)

அத்வைதசொரூபமாகிய பிரஹ்மத்தை யறிந்த தத்துவஞானிக்கு இஷ்டப்படிநடத்தல் உண்டாகுமாயின், மலமுதலிய அசுத்தபதார்த்தங்களைப் புசித்தல்முதலியனவும் உண்டாம். அப்படியாகுமாயின், நாய்க்கும் ஞானிக்கும் யாதொரு வேற்றுமையும் உண்டாகாதென்பது பொருள். ()

[உஎ௬] बोधात्पुरा मनोमात्रदोषात्क्लिश्नास्यथाधुना ।
अशेषलोकनिंदा चेत्यहो ते बोधवैभवम् ॥ ५६ ॥

(அ-கை.)

அப்படியானால் இவ்வளவினால் என்ன அப்பிரியம் உண்டாயிற்று என்றாசங்கித்துப் பரிகாசத்தோடு உத்தரத்தைக் கூறுகின்றார்:—

बोधात् पुरा मनोमात्रदोषात् क्लिश्नासि । अथ अधुना च अशेषलोकनिंदा । इति ते बोधवैभवं अहो ! ॥

(சு-ம்.)

ஞானத்திற்குமுன் மனதின் குற்றமாத்திரத்தால் கிலேசத்தை யடைந்திருந்தாய். இப்பொழுது எல்லா உலகநிந்தையுமாமெனின் உனது ஞானவைவரியம் பெரிதே!

(வி-ம்.)

தத்துவஞானம் உண்டாவதற்குமுன் அஞ்ஞானதசையில் காமக்குரோதமுதலிய சித்ததோஷங்களினாலேயே உனக்கிந்தத்துக்கம் உண்டாயிருந்தது. இப்போது ஞானதசையிலோ சர்வ உலகநிந்தையையும் சகிப்பாயாக. இப்படி இரட்டிப்புக்கிலேச முண்டாயிற்று என்பது பொருள்.

௬. புத்தியின் காமாதிதோஷங்களெல்லாவற்றையும் விடுதல் கர்த்தவ்வியமாமெனல்.

---

முற்சுபசம்ஸ்காரத்தினாலேயே புண்ணியகர்மத்தைச் செய்கிறான்; குழந்தைகள் குணதோஷபுத்தியில்லாமலே நடத்தல்போல." வேறு ஸ்மிருதிப்பிரமாணம்:—"புருஷர்களுக்குப் பாபகர்மக்ஷயத்தினாலேயே ஞானம் உண்டாகின்றது. சொச்சமாகிய கண்ணாடியில் முகத்தைப்பார்த்தல்போல ஆத்மாவாகிய சொச்சபுத்தியில் ஆத்மாவாகிய தன்னைக் காண்கின்றான்." இங்கே இது இரகசியமாம்:—துராசாரத்தில் பிரவிருத்தியுண்டாவது பூர்வியபாபகர்மத்தாலாம் (பாபமிகுதியாலாம்). அந்தப் பாபம் ஞானியை அனுகாதாகையால் அவனுக்குத் துராசாரமாகிய நிஷித்தகர்மத்தில் பிரவிருத்தி யுண்டாகாது.

[உ௭௪] विद्वूराहादितुल्यत्वं मा कांक्षीस्तत्त्वविद्भवान् ।
सर्वधीदोषसंत्यागाल्लोकैः पूज्यस्व देववत् ॥ ५७ ॥

(அ-கை.)

அப்படியானால் அப்போது செய்யவேண்டியது யாதெனக் கூறுகின்றார்:—

तत्त्ववित् भवान् विद्वूराहादितुल्यत्वं मा कांक्षीः सर्वधीदोषसंत्यागात् लोकैः देववत् पूज्यस्व ॥

(சு-ம்.)

தத்துவஞானியாகிய நீ ஊர்ப்பன்றிமுதலியவற்றின் சமானத்தன்மையை விரும்பவேண்டாம். எல்லாப் புத்திதோஷங்களையும் விடுதலால் உலகத்தாரால் தெய்வத்தைப்போலப் பூசிக்கப்படுபவனாவாயாக.

(வி-ம்.)

எல்லாவற்றினும் மேன்மையடைதற்கு ஏதுவாகிய ஞானத்தையுடைய நீ காமமுதலியவற்றை விடுதலிற் சாமர்த்தியமில்லாததினால் எல்லாவற்றினும் இழிவாகிய ஊர்ப்பன்றிமுதலியவற்றின் சமத்தன்மையை இச்சிக்கவேண்டாம். ஆனால் காமமுதலிய சகல மனதின் தோஷங்களையும் விட்டு எல்லோராலும் விஷ்ணுமுதலிய தெய்வங்களைப்போலப் பூசைசெய்யத்தக்கவனாவாய் என்பது பொருள். (௫௭)

௪. காமாதிகளை விடுதலின் உபாயம்.

[உ௭௫] काम्यादिदोषदृष्ट्याद्याः कामादित्यागहेतवः ।
प्रसिद्धा मोक्षशास्त्रेषु तानन्विष्य सुखी भव ॥ ५८ ॥

(அ-கை.)

அவற்றை விடும் உபாயத்தைக் கூறுகின்றார்:—

काम्यादिदोषदृष्ट्याद्याः कामादित्यागहेतवः ॥

(சு-ம்.)

காமியமான போகசாதனமுதலியவற்றிலுள்ள தோஷதிருஷ்டிமுதலியவைகள் காமமுதலியவற்றை விடுதற்கேதுக்களாம்.

(வி-ம்.)

காமியமெனப்படும் காமத்திற்கு விஷயமாம் மாலை சந்தனம் ஸ்திரீமுதலியவைகள் எவற்றிற்கு ஆதியாயிருக்கின்றனவோ அப்படிப்பட்ட துவேஷத்திற்கு விஷயமாம் துவேஷிய *௫௦. முதலிய பதார்த்தங்கள் காமியாதிகளெனப்படுகின்றன. அவற்றின் அநித்தியத்தன்மை சாதிசயத்தன்மை (மேம்பாடுடைமை) முதலிய தோஷங்களின் திருஷ்டி எவற்றிற்கு முதலாயிருக்கின்றதோ, அப்படிப்பட்ட கோபத்தின் சொரூபத்தை விசாரித்தல் முதலியவை எவையோ அவை காமியமுதலியவற்றிலுள்ள தோஷதிருஷ்டி முதலியவைகளாம். அவை காமக்குரோத*௫௧. முதலியவற்றை விடுதற் கேதுக்களாம்.

(அ-கை.)

காமியவிஷயத்தில் தோஷதிருஷ்டியும், கோபத்தின் சொரூபத்தை விசாரித்தல் முதலியனவும் கிரமமாகக் காமக்குரோதமுதலியவற்றை விடுதற்குக் காரணமா மென்பதிற் பிரமாணத்தைக் கூறுகின்றார்:—

---

* ௫௦. முதலியவெனுஞ் சத்தத்தால் உலோபம் பயமுதலிய அநேக இராசததாமதவிருத்திகளின் விஷயங்களும் கொள்ளப்படும்.

* ௫௧. முதலியவெனுஞ் சத்தத்தால் உலோபம் பயமுதலியனவும் கொள்ளப்படும். அவற்றுள், காமத்தின்விஷயமான ஸ்திரீமுதலியவற்றில் உள்ள தோஷதிருஷ்டி காமத்தை விடுதற்கு ஏதுவாம். குரோதத்தின் சொரூபத்தை அநர்த்தவடிவமாக விசாரித்தல் கோபத்தை விடுதற்கேதுவாம். தோஷதிருஷ்டி சொல்லிவரப்பட்டது.

கோபத்தின் சொரூபத்தை விசாரித்தல் வேறு சாஸ்திரவாக்கியங்களிற் சொல்லப்பட்டிருக்கின்றது:—"இராக்ஷதர்கள் அந்நியர் இரத்தத்தைக் குடிக்கின்றார்கள். குரோதமுடையவன் தன்னிரத்தத்தையும் அந்நியர் இரத்தத்தையும் குடிக்கின்றான். இராக்ஷதன் நிசாசரனானையால் நிசியாகிய இராத்திரியில் கிருத்தியஞ் செய்கிறான். குரோதமுடையன் இரவும்பகலு மாடுகின்றான். இராக்ஷதன் அந்நியரை பயப்படுத்துகின்றான். குரோதமுடையவன் தன்னையும் பிறரையும் தன்னால் பயப்படுத்துகின்றான். ஆகையால் குரோதமுடைய புருஷனுக்கிருக்கும் குரூரம்போல இராக்ஷசனுக்கில்லை." "அந்நியரை அடித்தல் அல்லது வைதல் என்னும் பலத்தோடுகூடியதாய் அறம், புகழ், பொருள் என்பவற்றைக் கெடுக்கின்றது. அன்றியும் அந்தக் குரோதம் வியர்த்தமாகி அந்நியரையும் தன்சரீரத்தையும் தபிக்கச்செய்கின்றது; இகலோக பரலோகங்களின் இதத்திற்கு ஏதுவுமன்று. இப்படிப்பட்ட குரோதம் சத்புருஷர்களின் மனத்தை எப்படியாசிரயிக்கும்?" "அபகாரியாகிய சத்துருவினிடத்துக்கோபம் உண்டாகுமாயின், அறம் பொருளின்பம் வீடென்னும் நான்கு புருஷார்த்தங்களையும் வலிந்து கெடுக்கும். கோபமாகிய சத்துருவினிடம் உனக்கு க்ஷமைவடிவ கோபம் ஏன் உண்டாகவில்லை?" இப்படி அநர்த்தவடிவமாகிய கோபத்தின் சொரூபத்தை விசாரித்தல் கோபத்தை நீக்குதற் கேதுவாம்.

मोक्षशास्त्रेषु प्रसिद्धाः ॥

(சு-ம்.)

காமமுதலியவற்றை விடுதற்கு ஏதுவாதல் * ருஉ. மோக்ஷசாஸ்திரங்களிற் பிரசித்தமாம்.

(அ-கை.)

அவ்வாறு மோக்ஷத்தை உபதேசிக்கும் சாஸ்திரங்களில் உபாயம் இருக்குக. அதனால் இங்குக் காமமுதலியவற்றை விடும் உபாயவடிவப்பிரசங்கத்தில் என்ன வந்ததெனக் கூறுகின்றார்.

तान् अन्विष्य सुखी भव ॥

(சு-ம்.)

அந்தக் காமமுதலியவற்றை நீக்கும் உபாயங்களை விசாரித்துச் சுகமடைவாய். (ருஅ)

ச. ஜீவனுற் செய்யப்பட்ட மந்தமாகிய அசாஸ்திரீயத்துவைதம் நீக்கப்படுமாறும், அதை நீக்கும் உபாயமும் உஎகூ—உஅசா.

க. மந்த அசாஸ்திரீயத்துவைதத்தை விடுதலில் சங்கை சமாதானம்.

[உஎகூ] त्यज्यतामेष कामादिर्मनोराज्ये तु का क्षतिः ।
अशेषदोषबीजत्वात्क्षतिर्भगवतेरिता ॥ ५९ ॥

(அ-கை.)

அப்படியானால் காமமுதலியவைகள் அநர்த்தமாகிய புருஷார்த்தமின்மைக்கு ஏதுவாயிருத்தலால் அவைகள் தள்ளத்தக்கவைகளாகுக. மனோராச்சியம் அவ்வாறு அநர்த்த ஏதுவாகாமையால் அதனை விடவேண்டியதில்லை என்று வாதி மூலத்தில் சங்கிக்கின்றான்:—

---

* ருஉ. ஸ்ரீமத்பாகவதம், ஆத்மபுராணம், வாசிஷ்டமுதலிய சாஸ்திரங்களில் விலக்ஷணயுக்திகளால் பிரகடமாயிருக்கின்றன. பாகவதத்தின் ஏழாவது ஸ்கந்தத்தில் "சங்கற்பமின்றியதன்மையால் காமத்தை ஜயிக்கவேண்டும். காமத்தை நீக்குதலால் குரோதத்தை ஜயிக்கவேண்டும் தனமுதலிய அர்த்தங்களின் அநர்த்தத்தைக் காணுதலால் உலோபத்தை ஜயிக்கவேண்டும். தத்துவமான பிரஹ்மாத்மவிசாரத்தால் பயத்தை ஜயிக்கவேண்டும்." என்று காமமுதலியவற்றை விடுதற்கு உபாயம் கூறப்பட்டிருக்கின்றது. மோக (அவிவேக) வடிவ வித்தால் குணபுத்தியும் இரமணீயபுத்தியும் (சங்கற்பங்களின் வாயிலாகக் காமமும்) உண்டாகின்றன. அதனாற் குரோதமுண்டாகின்றது. விவேகமெனும் தோஷதிருஷ்டியால் மோகமுதலியவைகள் கெடுதல்வாயிலாகக் காமநாசமும், அதனால் குரோதநாசமும் முண்டாகின்றன. இதுவும் காமமுதலியவைகள் கெடுதற்கு உபாயமாம்.

एषः कामादिः त्यज्यतां । तु मनोराज्ये का क्षतिः ॥

(சு-ம்.)

காமமுதலியவைகள் விடத்தக்கவைகளாம். ஆனால் மனோராச்சியத்தில் என்ன கெடுதியிருக்கின்றது?

(அ-கை.)

மனோராச்சியம் நேரே அநர்த்தத்திற்கு ஏதுவாகாவிடினும் பரம்பரையாக அதாவது காமமுதலியவற்றின்வாயிலாக அவ்வநர்த்தத்திற்கு ஏதுவாதலால் மனோராச்சியமான விஷயசிந்தனம் தள்ளத்தக்கதேயாம் என்னும் அபிப்பிராயமாகப் பரிகரிக்கின்றார்:—

अशेषदोषबीजत्वात् भगवता क्षतिः ईरिता ॥

(சு-ம்.)

மனோராச்சியம் காமமுதலிய சகல தோஷங்களுக்கும் காரணமாயிருத்தலால் அம்மனோராச்சியத்தில் கெடுதி ஸ்ரீகிருஷ்ணபகவானால் சொல்லப்பட்டிருக்கின்றது. (௫௯)

உ. மனோராஜ்யம் பரம்பரையாக அநர்த்தத்திற்கு ஏதுவாதலிற் பிரமாணம்.

[உ௭௭] ध्यायतो विषयान्पुंसः संगस्तेषूपजायते ।
संगात्संजायते कामः कामात्क्रोधोऽभिजायते ॥ ६० ॥

(அ-கை.)

மனோராச்சியம் பரம்பரையாக அநர்த்தத்திற்கு ஏதுவாலைக் காட்டும் அபிப்பிராயமுள்ள ஸ்ரீகிருஷ்ணபகவானது கீதையின் இரண்டாவது அத்தியாயத்திலுள்ள அறுபத்துமூன்றாவது சுலோகமாகிய வாக்கியத்தை உதாரணமாகக் கூறுகின்றார்:—

विषयान् ध्यायतः पुंसः तेषु संगः उपजायते । संगात् कामः संजायते । कामात् क्रोधः अभिजायते ॥

(சு-ம்.)

விஷயங்களைக் குணபுத்தியாகச் சிந்திக்கும் புருஷனுக்கு அவ்விஷயங்களில் சங்கம் (ஆசை) உண்டாகின்றது. சங்கத்தினால் இச்சையாகிய காமமுண்டாகின்றது. எவராலேனும் கெடுக்கப்படுங்காலத்துக் காமத்தால் கோபம் உண்டாகின்றது. (௬௦)

௯. மனோராச்சியநிவிருத்தியின் இருவகையுபாயம்.

[உ௭௮] शक्यं जेतुं मनोराज्यं निर्विकल्पसमाधितः ।
सुसंपादः क्रमात्सोऽपि सविकल्पसमाधिना ॥ ६१ ॥

(அ-கை.)

அப்போது இம்மனோராச்சியத்தைப் பரிகரிக்கும் உபாயம் யாதெனக் கூறுகின்றார்:—

निर्विकल्पसमाधितः मनोराज्यं जेतुं शक्यं ॥

(சு-ம்.)

மனோராச்சியமானது நிருவிகற்பசமாதியினால் ஜயிக்கக்கூடியதாம்.

(அ-கை.)

அப்படியானால் அந்நிருவிகற்பசமாதியும் எதனால் சித்திக்குமெனக் கூறுகின்றார்:—

सः अपि क्रमात् सविकल्पसमाधिना सुसंपादः ॥

(சு-ம்.)

அதுவும் சவிகற்பசமாதியினால் கிரமமாகச் சுகமாகச் சம்பாதிக்கப்படுகின்றது. (சுக)

[உ௭௯] बुद्धतत्त्वेन धीदोषशून्येनैकांतवासिना ।
दीर्घं प्रणवमुच्चार्य मनोराज्यं विजीयते ॥ ६२ ॥

(அ-கை.)

அப்படியானால் இயமமுதல் சவிகற்பசமாதிபரியந்தமான அஷ்டாங்கயோகத்தோடுகூடியவனுக்கு அப்படி மனோராச்சியத்தை ஜயிக்கும் உபாயமான நிருவிகற்பசமாதி இருக்குக. அந்த அஷ்டாங்கயோகமில்லாதவனுக்கு மனோராச்சியத்தை ஜயிக்கும் உபாயமான கதி யாதெனக் கூறுகின்றார்:-

बुद्धतत्त्वेन धीदोषशून्येन एकांतवासिना दीर्घं प्रणवम् उच्चार्य मनोराज्यं विजीयते ॥

(சு-ம்.)

தத்துவத்தை யுணர்ந்தவனும் புத்திதோஷமில்லாதவனும் ஏகாந்தத்தில் வசிப்பவனுமாகிய புருஷனால் நீண்ட பிரணவத்தை உச்சரித்தலால் மனோராச்சியமானது ஜயிக்கப்படுகிறது.

(வி-ம்.)

பிரஹ்மாத்ம ஐக்கியமாகிய ஞேயத்தை அறிந்தவனும், காமக்குரோத முதலிய புத்தியின் தோஷங்களில்லாதவனும், * ௫௩. ஏகாந்தவாசியு (ஜனங்களில்லாத பிரதேசத்தில் வசிக்கும் இயல்புடையவனு) மாகிய புருஷனால் நீண்ட அதாவஃது ஆறு, பன்னிரண்டுமுதலிய மாத்திரையாகிய க்ஷணங்களோடுகூடிய பிரணவமாகிய ஓங்காரத்தை உச்சரித்தலால் மனோராச்சியம் விசேஷமாய் ஜயிக்கப்படுகின்றது என்பது பொருள். (௬௨)

ச. மனோராச்சியத்தின் ஜயத்திற்கு உதாசீனத்தன்மையாகிய பயன்.

[உ௮௦] जिते तस्मिन्वृत्तिशून्यं मनास्तिष्ठति मूकवत् ।
एतत्पदं वसिष्ठेन रामाय बहुधेरितम् ॥ ६३ ॥

(அ-கை.)

மனோராச்சியத்தை ஜயிப்பதில் என்ன பிரயோஜனம்? எனக் கூறுகின்றார்:—

तस्मिन् जिते मनः वृत्तिशून्यं मूकवत् तिष्ठति ॥

(சு-ம்.)

அம்மனோராச்சியம் ஜயிக்கப்படின் மனமானது விருத்திசூந்யமாய் ஊமையைப்போல நிற்கின்றது.

(வி-ம்.)

ஊமையின் வாக்கு வியவகாரங்கள் யாவும் ஒழிந்திருத்தல்போல மனமும் சகலவியவகாரங்களும் இல்லாததாய் நிலைத்திருக்கின்றது என்பது பொருள்.

---

* ௫௩. இங்கு இது இரகசியமாம்:—மனதிற்கு வாக்கு, சுரோத்திரம், சக்ஷு, சங்கற்பவிகற்பமுதலிய உட்கற்பனை என்று நான்கு பாதங்களுண்டு. அவற்றுள், ஏகாந்தத்தில் வசித்தலால் வாக்கு, சுரோத்திரம், சக்ஷு என்னும் மூன்றும் தத்தம் விஷயங்களாகிய வசனம் சிரவணம் தரிசனம் என்பவைகளில்லாமையால் தடைப்படுகின்றன. இம்மூன்று பாதமும் தடைப்படவே வரவின்றிய தடாகஜலம்போல நான்காவது பாதமாகிய ஆந்தரகற்பனையும் நிவிருத்தியாகின்றது.

(அ-கை.)

விருத்தியின்றிய மனதின் நிலையே புருஷார்த்தமென்பதில் பிரமாணத்தைக் கூறுகின்றார்:—

एतत् पदं वसिष्ठेन रामाय बहुधा ईरितम् ॥

(சு-ம்.)

இந்த நிலையாகிய பதம் வசிஷ்டரால் இராமருக்கு அநேகவிதமாகச் சொல்லப்பட்டிருக்கிறது. (சுங)

ரு. சுலோகம் உஅ௦-ல் கூறிய பொருளில் ஸ்ரீவசிஷ்டர்வாக்கியம் பிரமாணமாதல்.

[உஅக] दृश्यं नास्तीति बोधेन मनसो दृश्यमार्जनम् ।
सपन्नं चेत्तदुत्पन्ना परा निर्वाणनिर्वृतिः ॥ ६४ ॥

(அ-கை.)

வாசிஷ்டத்தின் இரண்டு சுலோகமாகிய வாக்கியங்களை உதாரணமாகக் கூறுகின்றார்:—

"दृश्यं नास्ति" इति बोधेन मनसः दृश्यमार्जनं संपन्नं चेत् तत् परा निर्वाणनिर्वृतिः उत्पन्ना ॥

(சு-ம்.)

காணப்படும் பொருள் இல்லையென்னும் ஞானத்தால் மனதினின்றும் திருசியத்தின் துடைப்பு (நீக்கம்) சம்பாதிக்கப்படுமாயின் அப்போது மேலாகிய மோக்ஷசுகம் உண்டாயிற்று.

(வி-ம்.)

"नेह नानास्ति किंचन இந்த நாநாவல்லாத பிரஹ்மத்தில் நாநாவென்பது சிறிது மில்லை" என்னுஞ் சுருதியால் அத்துவிதீயப்பிரஹ்மத்திற்கு வேறாக ஜகத்தில்லை என்னும் ஞானத்தினால் மனதினின்றும் திருசியத்தின் நிவிருத்தியுண்டாகுமாயின் நிரதிசயமாகிய மோக்ஷசுகம் உண்டாயிற்றெனவறிக வென்பது பொருள். (சுச)

[உஅஉ] विचारितमलं शास्त्रं चिरमुद्ग्राहितं मिथः ।
संत्यक्तवासनान्मौनादृते नास्त्युत्तमं पदम् ॥ ६५ ॥

(அ-கை.)

இதுவுமது.

शास्त्रं अलं विचारितं । मिथः चिरं उद्ग्राहितम् ॥

(சு-ம்.)

சாஸ்திரம் போதுமானவரையில் விசாரிக்கப்பட்டும் ஒருவருக்கொருவர் வெகுகாலம்வரையில் கிரகிக்கப்பட்டு மிருக்கின்றது.

(வி-ம்.)

அல்லது அத்வைதசாஸ்திரத்தை மிக்கவிசாரித்தும், அப்படியே ஒருவருக்கொருவர் குருசிஷ்யர்முதலியோரின் சம்வாதவாயிலாக வெகுகாலம் வரையிலு பறிவித்து மிருக்கின்றார்கள்.

(அ-கை.)

இப்படிச் செய்ததினால் என்ன நிச்சயிக்கப்பட்டதெனக் கூறுகின்றார்:-

संत्यक्तवासनात् मौनात् ऋते उत्तमं पदं न अस्ति ॥

(சு-ம்.)

வாசனை செவ்வையாக விடப்பட்ட மௌனத்தை அதாவது தூஷ்ணீம்பாவமாகிய விருத்தியின்மையைவிட மேலாகிய புருஷார்த்தம் இல்லை.

(வி-ம்.)

காமக்குரோதவடிவ வாசனைகளைச் செவ்வையாக விட்ட மனதின் தூஷ்ணீம்பூதாவஸ்தையைவிட வேறு மேலாகிய புருஷார்த்த மென்னும் சுகமில்லை என்று நிச்சயிக்கப்பட்ட தென்பது பொருள். (சுரு)

சு. உதாசீனனுக்கு யதேனு மோர்காலத்துண்டாகும் விக்ஷேபத்தை நிவர்த்திக்கும் உபாயம்.

[உ அஎ] विक्षिप्यते कदाचिद्धीः कर्मणा भोगदायिना ।
पुनः समाहिता सा स्यात्तदैवाभ्यासपाटवात् ॥ ६६ ॥

(அ-கை.)

இப்படி விருத்தியின்மையை அடைந்த சித்தத்திற்குப் பிராரப்தகர்மத்தால் விக்ஷேபமுண்டாகுமாயின் அப்போது அதை நீக்கும் உபாயம் யாதென்று கேட்குமிடத்துக் கூறுகின்றார்:—

भोगदायिना कर्मणा धीः कदाचित् विक्षिप्यते तदा सा अभ्यासपाटवात् पुनः समाहिता स्यात् ॥

(சு-ம்.)

போகத்தைத்தரும் கர்மத்தால் புத்தியானது எப்போதாவது கலக்கத்தையடையின், அக்கலக்கம் பழக்கமுதிர்ச்சியால் அப்பொழுதே மறுபடியும் ஏகாக்கிரமுடையதாகின்றது.

(வி-ம்.)

போகத்தைத்தரும் பிராரப்தகர்மத்தால் புத்தி ஒவ்வொருகாலத்து விக்ஷேபத்தை யடைகின்றது. அது அப்பியாசத்தின் திடத்தன்மையால் அதே காலத்தில் மறுபடியும் ஏகாக்கிரமாகின்றது என்பது பொருள் (௬௬)

எ. சித்தவிக்ஷேபமின்றிய புருஷன் பிரஹ்மவடிவமாதல்.

[௨௮௭] विक्षेपो यस्य नास्त्यस्य ब्रह्मवित्त्वं न मन्यते ।
ब्रह्मैवायमिति प्राहुर्मुनयः पारदर्शिनः ॥ ६७ ॥

(அ-கை.)

எப்பொழுதும் சித்தத்தில் விக்ஷேபமில்லாத புருஷனுக்குப் பிரஹ்மவித்துத்தன்மையும் ஆரோபவடிவ உபசாரத்தா னிருக்கின்றதெனக் கூறுகின்றார்:—

यस्य विक्षेपः न अस्ति अस्य ब्रह्मवित्त्वं न मन्यते । पारदर्शिनः मुनयः "अयम् ब्रह्म एव" इति प्राहुः ॥

(சு-ம்.)

எவனுக்கு விக்ஷேபமில்லையோ அவனுக்குப் பிரஹ்மவித்துத்தன்மை ஒப்பப்படுகிறதில்லை. ஆனல் வேதாந்தத்தைக் கரைகண்ட முனிவர்கள் இந்தப் பிரஹ்மவித்து பிரஹ்மமே யென்று கூறியிருக்கின்றார்கள். (௬௭)

அ. சுலோகம் ௨௮௭ல் கூறிய அர்த்தத்தில் வாசிஷ்டம் பிரமாணமாதல்.

[௨௮௮] दर्शनादर्शने हित्वा स्वयं केवलरूपतः ।
यस्तिष्ठति स तु ब्रह्मन्ब्रह्म न ब्रह्मवित्स्वयम् ॥ ६८ ॥

(அ-கை.)

இங்கும் வசிஷ்டரது வாக்கியத்தை உதாரணமாகக் கூறுகின்றார்:—

यः दर्शनादर्शने हित्वा स्वयं केवलरूपतः तिष्ठति । सः तु ब्रह्मन् स्वयं ब्रह्म । ब्रह्मवित् न ॥

(சு-ம்)

பிராஹ்மணரே! எவன் ஞான அஞ்ஞானங்க ளிரண்டையும் விட்டுத் தான் ஞானவடிவமாத்திரமாக நிற்கின்றானோ அவன்தான் பிரஹ்மமேயாகின்றான்; பிரஹ்மத்தை யுணர்ந்தவனுகான்.

(வி-ம்.)

எவன் பிரஹ்மத்தை "அறிகிறேன் அறியவில்லை" என்னும் வியவகாரமிரண்டையும் விட்டுத் தான் அத்துவிதீயசைதன்னியவடிவமாத்திரமாக நிலக்கின்றானோ அவன் தான் பிரஹ்மமேயாவன், பிரஹ்மவித்தாகானென்பது பொருள். (சுஅ)

கூ. துவைதவிவேகத்தைப் பயனோடு முடித்தல்.

[உஅகா] जीवन्मुक्तेः परा काष्टा जीवद्वैतविवर्जनात् ।
लभ्यतेऽसावतोऽत्रेदमीशद्वैताद्विवेचितम् ॥ ६९ ॥

(அ-கை.)

சகல துவைதவிவேகத்தையும் முடிக்கின்றார்:—

असौ जीवन्मुक्तेः परा काष्टा जीवद्वैतविवर्जनात् लभ्यते अतः अत्र इदं ईशद्वैतात् विवेचितम् ॥

(சு-ம்.)

இந்த ஜீவன்முக்தியின் மேலான நிலை மனோமயப்பிரபஞ்சமாகிய ஜீவத்துவைதத்தை நீக்குதலால் அடையப்படுகின்றது. ஆகையால் இங்கு இந்த ஜீவத்துவைதம் ஈசத்துவைதத்தினின்றும் வேறுபிரித்தறியப்பட்டது.

(வி-ம்.)

இம்முற்கூறியவிதமான ஜீவன்முக்தியின் மேலான நிலை எதுவோ அது மனோமயப்பிரபஞ்சவடிவ ஜீவத்துவைதத்தினை விடுதலால் அடையப்படுகின்றது. இக்காரணத்தால் இந்த ஜீவனுலாக்கப்பட்ட ஜகத்தானது ஈசனுலாக்கப்பட்ட ஜகத்தினின்றும் வேறுபிரித்தறிவிக்கப்பட்டது. (சுகூ)

துவைதவிவேகமென்னும்

நான்காம் பிரகரணம்.

முடிந்தது.

---

ஒம்தத்ஸத்பிரஹ்மணேநம:

# ஸ்ரீ பஞ்சதசி.

## ரு. $ மகாவாக்கியவிவேகம்.

### ஐந்தாம்பிரகரணம்.

க. இருக்குவேதத்தின் ஐதரேய உபநிஷத்திலுள்ள "प्रज्ञानं ब्रह्म பிரஞ்ஞானம் பிரஹ்மம்" என்னும் மகாவாக்கியத்தின் பொருள் உ௲௭-உ௲௯.

க. "प्रज्ञानं பிரஞ்ஞானம்" என்னும் பதத்தின்பொருள் உ௲௭.

[உ௲௭] येनेक्षते शृणोतीदं जिघ्रति व्याकरोति च ।
स्वाद्वस्वादू विजानाति तत्प्रज्ञानमुदीरितम् ॥ १ ॥

(அ-கை.)

முமுக்ஷுக்களுக்கு மோக்ஷசாதனமாகிய பிரஹ்மாத்ம ஐக்கியத்தின் ஞானம் சித்திக்கும்பொருட்டு நான்குவேதங்களிலும் பிரசித்தமாகிய நான்கு மகாவாக்கியங்களின் அர்த்தத்தைக் கிரமமாக நிரூபிக்கும் பரமதயாநிதியாகிய ஆசாரியர் ஸ்ரீ வித்தியாரண்ணியசுவாமிகள் ஆதியில், முதல் இருக்குவேதத்தின் ஐதரேயாரணியகத்திலுள்ள "प्रज्ञानं ब्रह्म" பிரஞ்ஞானம் பிரஹ்மம்" என்னும் வாக்கியத்திலுள்ள 'प्रज्ञानं பிரஞ்ஞானம்' என்னும் பதத்தின் அர்த்தத்தைக் கூறுகின்றார் :—

यने इदं ईक्षते शृणोति जिघ्रति व्याकरोति च स्वाद्वस्वादू विजानाति । तत् 'प्रज्ञानं' उदीरितम् ।

(சு-ம்.)

எதனால் புருஷன் இந்த உருவமுதலியவற்றைக் காண்கின்றானோ, சப்தத்தைக் கேட்கின்றானோ, கந்தத்தை முகருகின்றானோ, சொற்களைச் சொல்லுகின்றானோ, உருசி அருசிகளை அறிகின்றானோ, அந்த விருத்தியுபலக்ஷிதசைதன்னியம் பிரஞ்ஞானமென்று சொல்லப்பட்டிருக்கின்றது.

(வி-ம்.)

சங்காதமாகிய புருஷன் எந்த நேத்திரேந்திரியவாயிலாக வெளிப்பட்ட அந்தக்கரணத்தின் விருத்தியை உபாதியாகவுடைய சாக்ஷிசைதன்னியத்

---

$ நான்கு மகாவாக்கியங்களில் விவேகம் அதாவது வாச்சிய லக்ஷியவடிவ அர்த்தங்களின் விபாகம்(பிரிவு)எதன்கண் ணிருக்கின்றதோ அது மகாவாக்கியவிவேகம்.

தால் பார்க்கத்தக்கனவாகிய இவ்வுருவமுதலியவற்றைப் பார்க்கின்றானோ, அப்படியே சுரோத்திரேந்திரியவாயிலாக வெளிப்பட்ட அந்தக்கரணவிருத்தியாகிய உபாதியையுடைய எந்தச் சைதன்னியத்தால் புருஷன் சப்தசமூகங்களைக் கேட்கின்றானோ, அப்படியே நாசியின்வாயிலாக வெளிப்பட்ட அந்தக்கரணத்தின் விருத்தியாகிய உபாதியையுடைய எந்தச் சைதன்னியத்தால் புருஷன் கந்தசமூகங்களை முகருகின்றானோ, எந்த வாக்கிந்திரிய உபாதியையுடைய சைதன்னியத்தால் புருஷன் சொற்களைச் சொல்லுகின்றானோ, இரசனேந்திரியவாயிலாக வெளிப்பட்ட அந்தக்கரணவிருத்தியை உபாதியாகவுடைய எந்தச் சைதன்னியத்தால் உருசி அருசி என்னும் இருவகை இரசத்தையும் அறிகின்றானோ, எது மூலசுலோகத்திலுள்ள "ச" என்னும் சத்தத்தால் கொள்ளப்படும் சொல்லப்பட்டனவும் சொல்லப்படாதனவுமாகிய சகல இந்திரிய அந்தக்கரண விருத்திகளாலும் உபலக்ஷிக்கப்பட்ட கூடஸ்தசைதன்னியமோ, அதுவே இங்குப்"பிரஞ்ஞானம் பிரஹ்மம்" என்னும் மகாவாக்கியத்தில் "பிரஞ்ஞானம்" என்று சொல்லப்படுகிறது என்பது பொருள். இவ்வாறு கூறுவதனால் "எதனால் பிரசித்தமாய்க் காண்கின்றானோ" என்பதை முதலாகவுடையதும் "இவை யாவும் பிரஞ்ஞானத்தின் பெயர்களே" என்பதை அந்தமாகவுடையதுமாகிய ஆத்மசொரூபத்தை யறிவிக்கும் *க.அவாந்தரவாக்கியசமூகத்திற்கு அர்த்தம் சுருக்கமாய்க் காட்டப்பட்டது. (க)

---

* க. ஐதரேய ஆரணியகத்தில் ஆறுவது அத்தியாயத்திலுள்ள மேற்கூறிய அவாந்தரவாக்கியங்களின் சமூக மிவ்வாறிருக்கின்றது:—

"வினா:—சில முமுக்ஷுக்கள் விசாரஞ் செய்கின்றவர்களாய் ஒருவருக்கொருவர் பிரசினை செய்துகொண்டார்கள். எதனை இது ஆத்மா வென்று யாம் உபாசிக்கின்றோமோ அதாவது அறிகின்றோமோ அவ்வாத்மா யாது?"

"விடை:— (க) எதனால் உருவத்தைக்காண்கின்றானோ"
(உ) எதனால் சத்தத்தைக் கேட்கின்றானோ,
(ஙூ) எதனால் கந்தத்தை முகருகின்றானோ,
(ச) எதனால் வார்த்தையை வசனிக்கின்றானோ,
(ரு) எதனால் உருசி அருசிகளை அறிகின்றானோ"

(க) இருதயம்
(உ) மனம்,
(ஙூ) சஞ்ஞானம் (சேதனத்தன்மை),
(ச) ஆஞ்ஞானம் (ஈசுவரத்தன்மை),
(ரு) விஞ்ஞானம் (சுச-கலைமுதலிய ஞானம்),
(சா) பிரஞ்ஞானம் (தற்கால சம்பந்தமுள்ள பிரதிபை),
(எ) மேதை (சாஸ்திரதாரணையில் சாமர்த்தியம்),
(அ) திருஷ்டி (இந்திரியவாயிலாகச் சகல விஷயங்களையும் அறிதல்),
(கூ) திருதி (தைரியவடிவ தாரணம்),

உ. " ब्रह्म பிரஹ்மம் " என்னும் பதத்தின் அர்த்தமும் ஐக்கியலக்ஷணவாக்கியார்த்தமும் உ௮௮.

[உ௮௮] चतुर्मुखेंद्रदेवेषु मनुष्याश्वगवादिषु ।
चैतन्यमेकं ब्रह्मातः प्रज्ञानं ब्रह्म मय्यपि ॥ २ ॥

(அ:கை.)

இப்படி " प्रज्ञानम् பிரஞ்ஞானம் " என்னும் பதத்தின் பொருளைக் கூறி " ब्रह्म பிரஹ்மம் " என்னும் பதத்தின் அர்த்தத்தைக் கூறுகின்றார்:—

चतुर्मुखेन्द्रदेवेषु मनुष्याश्वगवादिषु एकं चैतन्यं ब्रह्म ॥

(சு-ம்.)

பிரஹ்மா இந்திரன் என்னும் தேவர்களிடத்தும் மனிதன் குதிரை முதலியவைகளிடத்துமுள்ள சைதன்னியம் ஒன்றே பிரஹ்மம்.

(வி-ம்.)

உத்தமமாகிய தேவர்முதலியோரும், மத்திமமாகிய மனிதர்களும், அதமமாகிய குதிரை முதலியவைகளுமாகிய அவ்வெல்லாத்தேகதாரிகளிடத்தும் ஆகாயமுதலிய பூதங்களிடத்தும் ஜகத்தின் ஜன்மம் ஸ்திதி லயம் என்பவற்றிற்கு ஏதுவாகிய ஒரு சைதன்னியமே பரப்பிரஹ்மமென்பது பொருள். இதனால் " இந்த ஞானவடிவமாகிய ஆத்மா பிரஹ்மாவாம்.

---

(௧௦) மதி (மனனம்),
(௧௧) மனீஷா (மனனத்தில் சுதந்திரத்தன்மை),
(௧௨) ஜூதி (சித்தத்திற்கு ரோகமுதலியவற்றாலாகிய துக்கமுடைமை),
(௧௩) ஸ்மிருதி (நினைவு),
(௧௪) சங்கற்பம் (சாமானியமாக அடைந்த உருவமுதலியவற்றை வெண்மை முதலிய வடிவமாக கற்பித்தல்),
(௧௫) கிரது (நிச்சயம்),
(௧௬) அசு (உயிர்த்தல்முதலிய ஜீவக்கிரியையின் பொருட்டாகிய விருத்தி),
(௧௭) காமம் (சமீபத்திலில்லாத விஷயத்தை யிச்சித்தலாகிய ஆசை),
(௧௮) வசம் (ஸ்திரீசம்பந்தமுதலியவற்றின் அபிலாஷை),

என்பவையாவும் இந்தப்பிரஞ்ஞானசத்தின்[மிகுந்த ஞானமாத்திரமாகிய சேதனமென்னும் உபலப்தாவி(காண்போ)னது] பெயர் (அந்தந்த விருத்தியாகிய உபாதியை விசேஷணமாக வுடைமையால் உபசாரமாகப் பெயர்களாகின்றன). " உ.

இவ்வாக்கியசமூகங்களால் சகல கரணங்களுக்கும் அவற்றின் விருத்திகளுக்கும் அப்பாற்பட்டதும், சொப்பிரகாசவடிவமும், எல்லாவற்றிற்கும் சாக்ஷியும், சகலவிருத்திகளிலும் உட்கலந்ததும், ஏகமுமாகிய ஆத்மாவே சோதிக்கப்பட்டது.

இது இந்திரன்." என்பதை முதலாகவுடையதும், "பிரதிஞ்ஞை அதாவது ஞானவடிவமாகிய சைதன்னியம் பிரதிஷ்டையாம் அதாவது எல்லாவற்றிற்கும் அதிஷ்டானமாம்." என்பதை அந்தமாகவுடையதுமாகிய பிரஹ்மத்தின் சொரூபத்தை அறிவிக்கும் * உ. அவாந்தரவாக்கியசமூகம் எதுவோ அதன் அர்த்தம் சுருக்கமாய்க் காட்டப்பட்டது.

(அ-கை)

இப்படி "प्रज्ञानं ब्रह्म பிரஞ்ஞானம் பிரஹ்மம்" என்னுமிரண்டுபதங்களின் அர்த்தத்தைச் சொல்லி இப்போது பதசமுதாயமான வாக்கியத்தின் அர்த்தத்தைக் கூறுகின்றார்.—

अतः मयि अपि प्रज्ञानं ब्रह्म ॥

(சு-ம்.)

ஆகையால் என்னிடத்திலும் உள்ள பிரஞ்ஞானமானது பிரஹ்மமாம்.

(வி-ம்.)

எதனால் தேவர்கள், மனிதர்கள், பசு, ஆகாயமுதலிய எல்லாவற்றிலுமுள்ள பிரஞ்ஞானம் பிரஹ்மமாகின்றதோ அதனால் என்னிடத்திலுமுள்ள பிரஞ்ஞானம் பிரஹ்மமாம், பிரஞ்ஞானத்தன்மைக்குப் பேதமில்லாமையால் என்பது பொருள் (உ)

---

*உ. ஐதரேய ஆரணியகத்தின் ஆறுவது அத்தியாயத்தில் ஆத்மசொரூபத்தை உபதேசிக்கும் வாக்கியத்திற்குப் பின்னரே பிரஹ்மத்தைப் போதிக்கும் இவ்வவாந்தர வாக்கியம் இவ்வாறிருக்கின்றது:—' இந்தப் பிரஞ்ஞானவடிவமாகிய ஆத்மா பிரஹ்மாவாம். இஃது இந்திரனும். இது பிரஜாதியாம். இது சகலதேவர்களுமாம். இது பஞ்சமகாபூதமாகிய பிருதிவி வாயு ஆகாயம் அப்பு தேயுவாம். இது க்ஷுத்திரமும் (அற்பமும்), மிசிரமும் (சர்ப்பமுதலியவைகளும்), பீஜமும் (காரணவடிவமும்), இதரமும் (ஸ்தாவரமும்),இதரமும் (ஜங்கமமும்),அண்டஜமும் (பக்ஷிமுதலியவைகளும்), ஜராயுஜமும் (மனிதர்முதலியோரும்), சுவேதஜமும் (பேன்முதலியவைகளும்), உற்பிஜமும் (விருக்ஷாதிகளும்) குதிரை, பசு, புருஷன், யானை என்பவைகளுமாம். ஜங்கமமாகிய காலால் நடப்பவைகளும், பக்ஷிகளும், ஸ்தாவர(அசல)மும் மற்ற எவ்வளவு பிராணிகளுண்டோ அவையாவும்பிரஞ்ஞையை பிரஹ்மத்தை)நேத்திர(பிரவர்த்தக)மாகவுடையனவாம்.பிரஞ்ஞான(பிரஹ்ம)த்தில் பிரதிஷ்டிக்கப்பட்டவைகளாம்.பிரஞ்ஞையை நேத்திரமாகவுடையது(பிரஹ்மமாகிய நேத்திரமுடையது) உலகமாம் (சகல ஜகத்துமாம்). பிரஞ்ஞை பிரதிஷ்டையாம் (சருவஜகத்தின் முடிவான பூமியாகிய எஞ்சியபொருளாம்). ஆகையால் "பிரஞ்ஞானம் (பிரத்தியகாத்மா) பிரஹ்மமாம்." என்பது மகாவாக்கியத்தின் அர்த்தமாம். இவ்வாக்கியங்களுக்குப் பாஷியத்திலும் ஆநந்தகிரிவியாக்கியானத்திலும் சங்கைசமாதான பூர்வகமாக அதிக அர்த்தமிருக்கின்றது. அதனை விரிவஞ்சி ஈண்டு விடுத்தனம்.

## உ எஜுர்வேதத்தின் பிரகதாரணியகவுபநிஷத்திலுள்ள " अहं ब्रह्मास्मि நான் பிரஹ்மமாயிருக்கிறேன் " என்னும் வாக்கியத்தின் பொருள் உஅகூ-உகூ0.

### க. " अहम् நான் " என்னும் பதத்தின் பொருள் உஅகூ.

[உஅகூ] परिपूर्णः परात्मास्मिन्देहे विद्याधिकारिणि ।
बुद्धेः साक्षितया स्थित्वा स्फुरन्नहमितीर्यते ॥ ३ ॥

(அ-கை.)

*இப்படி இருக்குவேதத்தின் சாகையிலுள்ள வாக்கியத்தின் அர்த்தத்தை நிரூபித்து, இப்போது எஜுர்வேதத்தின் சாகைகளின் மத்தியிலுள்ள பிரகதாரணியக உபநிஷதத்திலுள்ள* " अहं ब्रह्मास्मि *நான் பிரஹ்மமாயிருக்கிறேன் " * ங. என்னும் மகாவாக்கியத்தின் அர்த்தத்தைப் பிரகடஞ் செய்தற்பொருட்டு* " अहं *நான்" என்னும் சப்தத்தின் அர்த்தத்தைக் கூறுகின்றார்:—*

परिपूर्णः परात्मा अस्मिन् विद्याधिकारिणि देहे बुद्धेः साक्षितया स्थित्वा स्फुरन् " अहं " इति ईर्यते ॥

---

** ங. பிரகதாரணியகத்தின் மூன்றாவது பிரபாடக(அத்தியாய)த்திலுள்ள நான்காவது பிராஹ்மணத்தினது பத்தாவது கண்டிகையின்கண் இம்மகாவாக்கியம் அடங்கியுள்ளது. அக்கண்டிகை இதுவாம்:— " முன் (ஞானத்திற்குமுன்) இது (சரீரத்திலுள்ள புருஷன்)பிரஹ்மமாகவே யிருந்தது.அது ஆத்மாவை(தன்னை)யே* "अहं ब्रह्मास्मि *நான் பிரஹ்மம்" என்றறிந்தது. ஆகையால் அது எல்லாம் (சர்வாத்மா)ஆயிற்று. தேவர்களுள் எவனெவன் அதையறிந்தானோ அவனே (மிக்கஅறிவுள்ள ஆத்மாவே) அது(பிரஹ்மம்) ஆனான். அப்படியே இருஷிகளுள்ளும் மனிதர்களுள்ளும் அறிக. அந்தப் பிரசித்தமாகிய இதனையறிந்து வாமதேவரிஷி யடைந்தார். ' நான் மனுவானேன் சூரியனானேன் ' என்று அந்த இதனையே(ஆத்மாவையே) இப்போது (நிகழ்காலத்திலும்) எவன்* 'अहं ब्रह्मास्मि *நான் பிரஹ்மம்' என்றறிகின்றானோ அவன் இவ்வெல்லாமும் (சர்வாத்மா) ஆகின்றான். அவனை நிச்சயமாகத் தேவாகள் பிரஹ்மத்தன்மையாகிய ஐசுவரியத்தினின்று நிவிருத்திக்கும்பொருட்டுச் சமர்த்தர்களாகார்கள்.(அப்போது மற்றப் பயன்களைக் கெடுப்பதில் சமர்த்தராகா ரென்பதில் என்ன சொல்லவேண்டியிருக்கிறது?) அவர்கள் இவர்களது (தேவர்களது) ஆத்மாவாகின்றமையால், எவன் அந்நிய (தனக்கு,வேறாகிய) தேவதையை "இது வேறு" " நான் வேறு" என்று உபாசிக்கின்றானோ அவன் அறிகிறதில்லை. எப்படிப் பசுவிருக்கிறதோ அப்படியே அவன் தேவர்களுக்காகின்றான். எப்படிப் பிரசித்தமாகிய அநேகம் பசுக்கள் மனிதர்களைப் பாலிக்கின்றனவோ அதுபோல ஒவ்வொரு புருஷனும் தேவர்களைப் பாலிக்கின்றான். ஒரு. பசுவைக் கொண்டுபோவதால் (சிங்கமுதலியவைகள் எடுத்துக்கொண்டுபோனால்) அப்பிரியம் (பிரியமின்மை) உண்டாகுமாயின் அநேகங்களைக் கொண்டுபோவதில் (அப்பிரியத்தன்மையில்) என்ன சொல்லவேண்டியிருக்கிறது? ஆகையால் யாதொன்றை (தனது சொரூபத்தை) இந்தமனிதன் அறிகின்றானோ அவன் இவர் (தேவர்) களுக்குப் பிரியமுடையவனாகான்."*

(சு-ம்.)

பரிபூரணமாகிய பரமாத்மா ஞானதிகாரமுள்ள இந்தச் சரீரத்தில் புத்திக்குச் சாக்ஷியாக நிலைத்து விளங்குகிறதாய் நான் என்று சொல்லப் படுகின்றது.

(வி-ம்)

பரிபூரண அதாவது சுபாவமாகத் தேசகாலவஸ்துக்களால் பரிச்சின்னமில்லாத பரமாத்மா இம்மாயையினாற் கற்பிக்கப்பட்ட ஜகத்தில் ஞானதிகாரமுள்ள சமமுதலிய சாதனங்களோடு கூடியிருத்தலாற் பிரஹ்ம வித்தையைச் சம்பாதிக்கத்தக்க இந்தச் சிரவணமுதலிய அநுஷ்டானமுடைய மனிதராதியர் சரீரத்தில் புத்தியினாலுபலக்ஷிக்கப்பட்ட சூக்ஷ்மசரீரத்தினை அவிகாரித்தன்மையாக விளக்குவதான சாக்ஷியாதலால் நிலைத்திருந்து பிரகாசிக்கிற தெதுவோ, அது இலக்ஷணையினால் "அஹ் நான்" என்னும் பதத்தால் சொல்லப்படுகின்ற தென்பது பொருள். (௩)

௨. "ब्रह्म பிரஹ்ம" மென்னும் பதத்திற்கு அர்த்தமும், "अस्मि அஸ்மி" என்னும் பதத்தின் அர்த்தத்தால் ஐக்கியமாகிய வாக்கியார்த்தமும் ௨கூ௦.

[௨கூ௦] स्वतः पूर्णः परात्माऽत्र ब्रह्मशब्देन वर्णितः ।
अस्मीत्यैक्यपरामर्शस्तेन ब्रह्म भवाम्यहम् ॥ ४ ॥

(அ-கை.)

"ब्रह्म பிரஹ்ம" மென்னும் சத்தத்தின் அர்த்தத்தைக் கூறுகின்றார்:—

स्वतः पूर्णः परात्मा अत्र ब्रह्मशब्देन वर्णितः ॥

(சு-ம்.)

சுவயம் பூரணமாயிருக்கின்ற பரமாத்மா இங்கே பிரஹ்ம மென்னுஞ் சத்தத்தால் வர்ணிக்கப்பட்டிருக்கின்றது.

(வி-ம்.)

சுபாவமாகத் தேசகாலமுதலியவற்றால் பரிச்சின்னமில்லாத முன் ௨௮கூ-வது சுலோகத்திற் கூறப்பட்ட பரமாத்மா எதுவோ அது இங்கே "अहं ब्रह्मास्मि அஹம் பிரஹ்மாஸ்மி" என்னும் மகாவாக்கியத்தில் "பிரஹ்ம" மென்னுஞ் சத்தத்தால் இலக்ஷணையினால் கூறப்பட்டிருக்கின்றது என்பது பொருள்.

(அ-கை.)

இவ்வாக்கியத்திலுள்ள "अस्मि இருக்கிறேன்" என்னும் பதத்தால் 'अहं ब्रह्म நான் பிரஹ்மம்' என்னு மிரண்டுபதங்களின் * ௪. சாமானாதிகரணியத்தால் அடையப்படும் ஜீவப்பிரஹ்மங்களின் ஏகத்துவம் (ஜீவனும் பிரஹ்மமும் ஒன்றெனுந்தன்மை) ஸ்மரணஞ்செய்யப்படுகின்றதென்று கூறுகின்றார்:—

"अस्मि" इति ऐक्यपरामर्शः ॥

(சு-ம்.)

"இருக்கிறேன்" என்னும் பதம் ஐக்கியத்தை நினைப்பூட்டுவதா யிருக்கின்றது.

(அ-கை.)

வாக்கியார்த்தத்தினைக் கூறுகின்றார் :—

तेन अहं ब्रह्म भवामि ॥

(சு-ம்.)

அக்காரணத்தால் நான் பிரஹ்மமாயிருக்கின்றேன். (௪)

௩. சாமவேதத்தின் சாந்தோக்கிய உபநிஷதத்திலுள்ள "तत्त्वमसि தத்துவமஸி" என்னும் மகாவாக்கியத்தின்பொருள் உ௬௧-உ௬௨.

க. "तत् தத்" பதத்தின் பொருள் உ௬௧.

[உ௬௧] एकमेवाद्वितीयं सन्नामरूपविवर्जितम् ।
सृष्टेः पुराधुनाऽप्यस्य तादृक्त्वं तदितीर्यते ॥ ५ ॥

* ௪. வேற்றுப்பொருள்களுள்ள (பரியாயமல்லாத) பதங்களுக்குச் சமானவிபத்தி (ஒருவேற்றுமை)யின் வலியால் ஒரே அர்த்தத்தில் உண்டாகும் பிரவிருத்தி (சம்பந்தம்) சாமானாதிகரணிய மெனப்படும். இங்கு(இவ்வாக்கியத்தில்)"अहं நான்" "ब्रह्म பிரஹ்மம்" என்னும் இரண்டுபதங்களும் ஆத்மா பிரஹ்மம் என்னும் அர்த்தத்தை அறிவிப்பனவாம். ஆகையால் வெவ்வேறு பொருளுடையனவாய்ப் பரியாயமல்லாதனவா யிருக்கின்றன. (பரியாயம்=ஒருபொருட்கிளவி.)ஆனால் சமான(முதல்)வேற்றுமையின் வலியால் அவ்விரண்டு பதங்களுக்கும் அகண்டைகரசத்தன்மையாகிய ஒரே அர்த்தத்தில் இருக்கும் பிரவிருத்தி (இலக்ஷணைவடிவசம்பந்தம்) சாமானாதிகரணியமாம். அதனாலேயே பிரஹ்மாத்மஐக்கியம் சித்திக்கின்றது. அதனை "अस्मि அஸ்மி= இருக்கிறேன்"என்னும் பதம் நினைப்பூட்டுவதாம்; வேறுபொருளை அறிவிப்பதன்று.

(அ-கை.)

இப்போது சாமவேதத்தின் சாந்தோக்கிய உபநிஷதத்திலுள்ள * ௫ " तत्त्वमसि அது நீயாயிருக்கின்றாய் " என்னும் மகாவாக்கியத்தின் அர்த்தத்தை விளக்கும்பொருட்டு 'तत् அது' என்னும் பதத்தின் இலக்ஷணாவிருத்திக்கு விஷயமாகும் இலக்ஷியார்த்தத்தைக் கூறுகின்றார் :—

**सृष्टेः पुरा एकं एव अद्वितीयं नामरूपविवर्जितम् सत् । अस्य अधुना अपि ताद्दक्त्वं "तत्" इति ईर्यते ॥**

(சு-ம்.)

சிருஷ்டிக்குமுன் ஒரே இரண்டாவதில்லாத நாமரூபங்களின்றிய சத்தானது இருந்தது. இதற்கு (சத்திற்கு) இப்போதும் அதாவது சிருஷ்டிக்குப் பின்னும் அப்படிப்பட்டதன்மை"அது"என்று சொல்லப்படுகின்றது.

(வி-ம்.)

"सदेव सोम्येदमग्र आसीत् एकमेवाद्वितीयम् சௌமியனே ! இந்த ஜகத்து முன் ஒரே அத்விதீயவடிவ சத்தாக இருந்தது " என்னும் சுருதி வாக்கியத்தால் சிருஷ்டிக்குமுன் சுவகதமுதலிய பேதமில்லாததும் நாமரூபமில்லாததுமாகிய எந்தச் சத்துப்பொருள் பிரதிபாதிக்கப்பட்டிருக்கின்றதோ இச்சத்துப்பொருட்குச் சிருஷ்டிக்குப்பிந்திய இக்காலத்தும் விசாரதிருஷ்டியால் யாதொரு அப்படிப்பட்டதன்மை அதாவது சுவகதமுதலிய பேதமில்லாததும் நாமரூபமில்லாததுமாகிய சத்துத்தன்மை"तत् தத்=அது" என்னும் பதத்தால் இலக்ஷணையினலறியப்படுகின்றது என்பதுபொருள் (௫)

**௬. "त्वं துவம்=நீ" என்னும் பதத்தின் அர்த்தமும் "असि அஸி=இருக்கிறாய்" என்னும் பதத்தினர்த்தத்தால் ஐக்கியமாகிய வாக்கியார்த்தமும் ௨௬௨.**

[௨௬௨] **श्रोतुर्देहेंद्रियातीतं वस्त्वत्र त्वंपदेरितम् ।**
**एकता ग्राह्यतेऽसीति तदैक्यमनुभूयताम् ॥ ६ ॥**

(அ-கை.)

துவம்பதத்தின் இலக்ஷியார்த்தத்தைக் கூறுகின்றார்:—

---

* ௫. "तत्त्वमसि தத்துவமஸி" என்பது சாமவேதத்திலுள்ள சாந்தோக்கிய உபநிஷத்தின் ஆறாவது பிரபாடக (அத்தியாய)த்திலுள்ள மகாவாக்கியமாம். அது ஒன்பதுமுறை உபதேசிக்கப்பட்டிருக்கின்றது. அவ்வொன்பதுமுறை உபதேசமும் எம்மாற் செய்யப்பட்ட தத்துவமஸிமகாவாக்கியவுபதேச மென்னும் நூலில் விரிவாய்க் கூறப்பட்டிருக்கின்றது: அது முமுக்ஷுக்களுக்கு அத்தியந்த உபயோகமுள்ளதெனச் சிலவருஷங்களுக்கு முன்னரே பதிப்பிக்கப்பட்டுளது. அறியவிரும்புவோர் ஆங்குக் காண்க.

श्रोतुः देहेंद्रियातीतं वस्तु अत्र त्वंपदेरितम् ॥

(சு-ம்.)

கேட்பவனது தேகேந்திரியங்களுக்கு அதீதமாகிய பொருள் அதாவது சத்ரூப ஆத்மா இங்கே "त्वं நீ" என்னும் பதத்தால் சொல்லப்படுகின்றது.

(வி-ம்.)

சிரவணமுதலியவற்றின் அநுஷ்டானத்தால் மகாவாக்கியத்தின் அர்த்தத்தை நிச்சயஞ்செய்பவனாகிய *சு. சுரோதாவினது தேகேந்திரியங்களுக்கதீதமான அதாவது தேகேந்திரியங்களால் உபலக்ஷிக்கப்பட்ட ஸ்தூல சூக்ஷ்மகாரண மென்னும் மூன்று சரீரங்களுக்கும் சாக்ஷியாயிருத்தலால் அவற்றிற்கு வேறாகிய சத்துப்பொருள் மகாவாக்கியத்திலுள்ள "त्वं துவம்= நீ" என்னும் பதத்தால் இலக்ஷணையினாலறியப்பட்டதாம் என்பதுபொருள்.

(அ-கை.)

இவ்வாக்கியத்திலுள்ள *எ. "असि அஸி=இருக்கிறாய்" என்னும் பதத்தால் "தத்" "துவம்" என்னும் இரண்டுபதங்களின் சாமானாதிகரணியத்

---

* சு. ஜீவசாக்ஷி உபாதிபேதத்தால் ஆரோபதசையில் ஆபாஸவாதமுதலியவற்றின்படி நாநா வெனப்படும். ஆகையால் ஒவ்வொரு சங்காதத்திலும் "துவம்" பதத்தின் அர்த்தம் சொல்லக்கூடியதாம். என்றாலும் அதிகாரிக்கே மகாவாக்கியத்தினது அர்த்தத்தின் ஞானத்தில் உபயோகமுள்ள பதார்த்தங்களின் ஞானம் அபேக்ஷிக்கப்படுவதாம்; மற்றவர்களுக்கன்று. ஆகையால் இங்குச் சுரோதாவின் சங்காதத்திற்கு வேறாகிய சாக்ஷியே துவம்பதத்திற்கு அர்த்தமாக அறிவிக்கப்பட்டது. இப்படியே முன் உ௮சு-வது சுலோகத்திற் கூறிய எஜுர்வேதத்தின் "अहं ब्रह्मास्मि அகம் பிரஹ்மாஸ்மி" என்னும் மகாவாக்கியத்திலுள்ள 'அஹம்' பதத்தின் அர்த்தத்திலும் அறிந்துகொள்க.

* எ. இந்த மகாவாக்கியத்திலுள்ள "असि அஸி" என்னும் பதம் "தத்" பத "துவம்" பதங்களின் சாமானாதிகரணியத்தால் அதாவது ஒரு அர்த்தத்தில் தாற்பரியத்தால் சித்தித்த ஜீவப்பிரஹ்மஐக்கியத்தின் அநுவாதமாத்திரத்தைச் செய்கின்றது; வேறுஅர்த்தத்தை அறிவிக்கிறதில்லை. சம்ஸ்கிருதவித்தையின் ஞானமில்லாத சில இக்காலத்துத்தமிழ்நூலாசிரியரும் அவர்களை அநுசரித்தவர்களும் "असि அஸி" என்னும் பதத்திற்குப் பிரஹ்மத்தைக் கூறுகின்றார்கள். அது முற்றிலும் விரோதமாம். ஏனெனின், வியாகரணத்தின்படி "असि அஸி" என்னும் பதத்திற்கு வாச்சியார்த்தம் "இருக்கிறாய்" அல்லது ஆகிறாய் என்பது மாத்திரமேயாம். இலக்ஷணையின் பிரவிருத்தியோ "தத்" பத "துவம்" பதார்த்தங்களிற்றானிருக்கின்றது. "அஸி" பதத்திலில்லை. ஆகையால் "அஸி" பதத்தின் இலக்ஷியார்த்தமும் பிரஹ்மமாதல் பொருந்தாதெனின், அப்போது "அஸி" எனும் பதம் எப்படிப் பிரஹ்மமாம்; ஒருவிதத்தாலுமாகாது. இவ்வாறே "अस्मि அஸ்மி" என்னும் பதத்திலு மறிந்துகொள்க.

தால் அடையப்பட்ட இரண்டுபதங்களினது அர்த்தமாகிய பிரஹ்மாத்மாக்களின் ஐக்கியம் சிஷ்யனுக்கு அறிவிக்கப்படுகின்றதென்று கூறுகின்றார் :—

"असि" इति एकता आह्यते ॥

(சு-ம்.)

"असि இருக்கிறாய்" என்னும் பதத்தால் ஐக்கியம் அறிவிக்கப்படுகின்றது.

(அ-கை.)

இந்த நிரூபணத்தால் சித்தித்தவாக்கியார்த்தைக் கூறுகின்றார்:—

तदैक्यम् अनुभूयताम् ॥

(சு-ம்.)

ஆகையால் அவற்றின் ஐக்கியம் அநுபவிக்கவேண்டியதாம்.

(வி-ம்.)

ஆகையால் அந்தத் "தத்" "துவம்" என்னும் பதங்களின் பிரஹ்மாத்மவடிவ அர்த்தத்தினது பிரமாணசித்தமாகிய ஐக்கியம் முமுக்ஷுக்களால் அநுபவிக்கவேண்டியதாம் (சாக்ஷாத்கரிக்கப்படவேண்டியதாம்) என்பது பொருள். (சு)

ஏ. அதர்வணவேதத்தின் மாண்டூக்கிய உபநிஷத்திலுள்ள "अयमात्मा ब्रह्म இவ்வாத்மா பிரஹ்மம்" என்னும் வாக்கியத்தின் பொருள் உகஎ-உகஅ.

க. "अयमात्मा இவ்வாத்மா" என்னும் பதங்களின் பொருள் உகஎ.

[உகஎ] स्वप्रकाशापरोक्षत्वमयमित्युक्तितो मतम् ।
अहंकाराऽऽदिदेहांतात्प्रत्यगात्मेति गीयते ॥ ७ ॥

(அ-கை.)

இப்போது கிரமமாக அடையப்பட்ட அதர்வணவேதத்தின் மாண்டூக்கிய உபநிஷத்திலுள்ள अयमात्मा "* அ. அயமாத்மா பிரஹ்மம் (இந்த

---

* அ. இஃது அதர்வணவேதத்தின் மாண்டூக்கிய உபநிஷத்திலுள்ள மகாவாக்கியமாம். எதனால் "முற்கூறிய ஓங்காரமாத்திர ஜகத்தாகிய இவையாவும் பிரஹ்மமோ" அதனால் "அந்த இவ்வாத்மா பிரஹ்மம்." "அந்த இவ்வாத்மா நான்குபாதமுடையதாம்." இங்கே இலேசாய் அறியும்பொருட்டுத் தானியத்தினளவி லுபயோகமுள்ள கரிசை மரக்கால்முதலியவைகளைப் போலவாம் பாதகற்பனை; பசுவின் பாதம்போலவன்று.

ஆத்மா பிரஹ்மம்)" என்னும் மகாவாக்கியத்தின் அர்த்தத்தை வியாக்கியானஞ்செய்யக்கருதிய ஆசாரியர் ஆதியில் "अयं அயம்=இது" "आत्मा ஆத்மா" என்னும் இரண்டு பதங்களாலும் கருதப்பட்ட அர்த்தத்தைக் கிரமமாகக் காட்டுகின்றார்:—

"अयम्" इति उक्तितः स्वप्रकाशापरोक्षत्वं मतम् ॥

(சு-ம்.)

இஃது என்னும் பதத்தால் ஆத்மாவிற்குச் சொப்பிரகாசத்தன்மையோடுகூடிய அபரோக்ஷத்துவம் ஒப்பப்பட்டிருக்கின்றது.

(வி-ம்.)

"அயம்=இது" என்னுஞ் சத்தத்தால் சாக்ஷியின் சொப்பிரகாசத்தன்மையோடுகூடிய அபரோக்ஷத்துவம் ஒப்பப்பட்டிருக்கின்றது. அதிருஷ்டமாகிய தர்மாதர்மமுதலியவற்றைப்போல நித்தியபரோக்ஷத்தன்மையும், கடமுதலியவற்றைப்போலத் திருசியத்தன்மையும் அதாவது பரப்பிரகாசத்தோடுகூடிய அபரோக்ஷத்தன்மையுமாகிய இவ்விரண்டு அநாத்மதர்மங்களையும் ஆத்மாவினின்றும் நிராகரிக்க மூலத்தில் "சொப்பிரகாசம்" "அபரோக்ஷத்தன்மை" என்னும் இரண்டுவிசேஷணங்களிருக்கின்றன என்றறிக.

(அ-கை.)

தேகமுதலியவற்றிலும் ஆத்மசப்தத்தின் பிரயோகத்தைக் காணுதலால் இந்த மகாவாக்கியத்தில் ஆத்மசப்தத்தால் சொல்லக் கருதியது யாதென்று கேட்குமிடத்துக் கூறுகின்றார்:—

अहंकारादिदेहांतात् प्रत्यक् आत्मा इति गीयते ॥

(சு-ம்.)

அகங்காராதி தேகாந்தமாயுள்ளவற்றினும் உள்ளாயிருப்பது ஆத்மா என்று சொல்லப்படுகின்றது.

(வி-ம்.)

எந்தப் பிராணன் மனம் இந்திரியம் தேகமென்னும்வடிவ சங்காதத்திற்கு அகங்காரம் ஆதியாயிருக்கின்றதோ அது அகங்காராதியாம், அதுபோல எந்தச் சங்காதத்திற்குத் தேகம் அந்தமாயிருக்கின்றதோ அது தேகாந்தமெனப்படும். அந்த அகங்காராதி தேகாந்தமான சங்காதத்தைவிட எது பிரத்தியக்காயிருக்கின்றதோ அதாவது அச்சங்காதத்திற்கு அதிஷ்டானமாயும்

சாக்ஷியாயு மிருத்தலால் ஆந்தரமாயிருக்கின்றதோ அது(சேதனம்)இம்மகா வாக்கியத்தில் "ஆத்மா" வென்று சொல்லப்படுகின்றது என்பது பொருள்.

௨. "ब्रह्म பிரஹ்ம" பதத்தின் அர்த்தமும் ஐக்கியவடிவ வாக்கியார்த்தமும் ௨௯௪.

[௨௯௪] दृश्यमानस्य सर्वस्य जगतस्तत्त्वमीर्यते ।
ब्रह्मशब्देन तद्ब्रह्म स्वप्रकाशात्मरूपकम् ॥ ८ ॥

(அ-கை.)

பிராஹ்மணர்முதலியோரிடத்தும் பிரஹ்மசப்தத்தின் பிரயோகம் காணப்படுதலால் அந்தப் பிராஹ்மணர்முதலியோரினின்றும் வேறுபிரித் தறிவிக்கும்பொருட்டு இம்மகாவாக்கியத்தில் "ब्रह्म பிரஹ்மம்" என்னுஞ் சத்தத்திற்குக் கருதப்பட்ட அர்த்தத்தைக் கூறுகின்றார்:—

दृश्यमानस्य सर्वस्य जगतः तत्त्वम् ब्रह्मशब्देन ईर्यते ॥

(சு-ம்)

தோற்றுகின்ற சகல ஜகத்திற்கும் உண்மைவடிவம் எதுவோ அது "பிரஹ்ம" மென்னும் சத்தத்தால் சொல்லப்படுகிறது.

(வி-ம்.)

திருசியமாயிருத்தலால் மித்தையாகிய சகல ஆகாயமுதலிய ஜகத்துக்கும் தத்துவமாய் அதாவது அதிஷ்டானப்பிரஹ்மமா யிருத்தலாலும், முற்கூறிய அந்த ஜகத்தினது பாதத்தின் எல்லையா யிருத்தலாலும் பாரமார்த்திக சச்சிதாநந்தலக்ஷணத்தோடுகூடிய சொரூபம் எதுவோ அது இம்மகாவாக்கியத்தில் "ब्रह्म பிரஹ்ம" மென்னும் சத்தத்தாற் சொல்லப்படுகின்றது என்பது பொருள்.

(அ-கை.)

பதசமுதாயமாகிய வாக்கியத்தின் அர்த்தத்தைக் கூறுகின்றார்:—

तत् ब्रह्म स्वप्रकाशात्मरूपकम् ॥

(சு-ம்.)

அந்தப் பிரஹ்மம் சுவப்பிரகாச ஆத்மவடிவமாம்.

(வி-ம்.)

முற்கூறிய இலக்ஷணமுடைய பிரஹ்மம் எதுவோ அதுவே சுவப்பிரகாச ஆத்மாவாம். இது பிரஹ்மாத்ம ஐக்கியமாகிய வாக்கியார்த்த

மாம். * ௯ இவ்வாறு சொல்லப்பட்ட நான்கு மகாவாக்கியங்களின் பிரஹ்மாத்ம ஐக்கியமாகிய அர்த்தத்தை எந்தெந்தப் பிரகிரியையில் உருசி உண்

* ௯. வாக்கியார்த்தத்தின் ஞானத்தில் பதார்த்தத்தின் ஞானம் உபயோகமுடையதாம். பதார்த்தத்தின் ஞானத்தில் சத்தத்தினது விருத்தியின்(சத்தி இலக்ஷணைகளின்)ஞானம் உபயோகமுள்ளதாம். பதத்திற்கு அர்த்தத்தோடுள்ள சம்பந்தம் விருத்தி எனப்படும். அந்த விருத்தி சக்திவிருத்தி, இலக்ஷணாவிருத்தி என இரண்டு வகையாம்.

(க) பதத்திலுள்ள பொருளைத் தெரிவிக்கும் சாமர்த்தியம் எதுவோ அது பதத்தின் சக்தியாம். கடம் என்னும் பதத்தைக் கேட்பவனுக்குக் கலசவடிவப் பொருளின் ஞானத்தை யுண்டுபண்ணும் கடமென்னும் பதத்திலுள்ள சாமர்த்தியமே கடபதத்தின் சக்தியாம். இப்படியே எல்லாப்பதங்களிலு மறிந்துகொள்க. பதத்தின் சக்திவிருத்தியால் எந்தப்பொருளின் ஞானம் உண்டாகின்றதோ அந்தப்பொருள் சக்தியார்த்த மெனப்படும். அதனையே வாச்சியார்த்த மென்றும் கூறுவர்.

(உ) சக்கியமாகிய வாச்சியார்த்தத்தின் சம்பந்தம் இலக்ஷணாவிருத்தி எனப்படும். அந்த இலக்ஷணாவிருத்தி [க]ஜகத்திலக்ஷணை, [உ]அஜகத்திலக்ஷணை, [௩]பாகத்தியாகலக்ஷணை என மூன்றுவகையாம்.

[க] எங்கே சகலவாச்சியார்த்தமும் விடுபட்டு வாச்சியார்த்தத்தின் சம்பந்தமுள்ளது தோற்றுகின்றதோ அங்கு ஜகத்திலக்ஷணை (விட்டலக்கணை) சொல்லப்படுகின்றது. எங்ஙனம்: "கங்கையில் கிராம மிருக்கின்றது" என்னுமிடத்துக் கங்கை என்னும் பதத்திற்குக் கரையில் ஜகத்துதிலக்ஷணையாம். ஏனெனின், கங்கை என்னும் பதத்திற்கு வாச்சியார்த்தமாகிய தேவநதியின் பிரவாகத்தில் கிராமத்தின் இருப்புச் சம்பவியாதாகையால் வாச்சியார்த்தம் முழுவதையும் விட்டுக் கரையில் கங்கையெனும் பதத்திற்கு ஜகத்திலக்ஷணையாம்.

[உ] எங்கே வாச்சியார்த்தத்தோடு வாச்சியசம்பந்தியின் ஞான முண்டாகின்றதோ அங்கே அஜகத்திலக்ஷணை(விடாதலக்கணை) சொல்லப்படுகின்றது. எங்ஙனம்: "சிவப்பு ஓடுகின்றது" என்னுமிடத்துச் சிவப்பென்னும் பதத்திற்குச் செந்நிறமுடைய குதிரையில் அஜகத்திலக்ஷணை யிருக்கின்றது; செந்நிறமாத்திரத்தில் ஓடுதல் பொருந்தாமையால். இதனால் சிவப்பெனும் பதத்திற்கு வாச்சியமாகிய சிவப்புநிறத்தன்மையோடுகூடிய குதிரையில் சிவப்பெனும் பதத்திற்கு அஜகத்திலக்ஷணையாம்.

[௩] எங்கே வாச்சியார்த்தத்தினுள் (விரோதமுள்ள) ஒரு பாகத்தை விட்டு (விரோதமில்லாத) ஒருபாகம் கொள்ளப்படுகின்றதோ அங்கே பாகத்தியாகலக்ஷணை (விட்டுவிடாதலக்கணை) சொல்லப்படுகின்றது. எங்ஙனம்: முன்கண்ட வஸ்துவை வேறிடத்திற் கண்டு ஒருவன் "அதுவே இது" வென்று சொல்லுமிடத்துப் பாகத்தியாகலக்ஷணையாம். ஏனெனின், பூதகாலத்திலும் அந்நியதேசத்திலுமுள்ள வஸ்துவை "அது" வென்பர். ஆகையால் பூதகால அந்நியதேசங்களோடுகூடிய வஸ்து "அது"வெனும் பதத்திற்கு வாச்சியார்த்தமாம். வர்த்தமானகாலசமீப தேசங்களிலுள்ள வஸ்துவினை "இது" வென்பர். ஆதலால் வர்த்தமானகால சமீபதேசத்தோடு கூடியவஸ்து "இது" வென்னும் பதத்திற்கு வாச்சியமாம். பூதகால அந்நிய

டாகுமோ அந்தந்தப் பிரக்கிரியையின்படி விவேக வைராக்கியமுதலிய நான்கு சாதனங்களோடுகூடினவர்களான முமுக்ஷுக்கள் வேதாந்தசாஸ்

தேசங்களோடுகூடிய வஸ்து எதுவோ அதுவே வர்த்தமானகால சமீபதேசங்களோடு கூடியதா யிருக்கின்றது என்பது முழுவாக்கியமாகிய சமுதாயத்தின் வாச்சியார்த்தமாகின்றது. அது பொருந்தாது. ஏனெனின், பூதகாலத்திற்கும் வர்த்தமானகாலத்திற்கும் விரோத மிருக்கின்றது. அதுபோல அந்நியதேசத்திற்கும் சமீபதேசத்திற்கும் விரோதமிருக்கின்றது. ஆகையால் இரண்டு பதங்களிலுமுள்ள தேசகாலங்களாகிய வாச்சியபாகத்தைவிட வஸ்துமாத்திரத்தில் இரண்டு பதங்களுக்கும் பாகத்தியாக லக்ஷணையாம்.

சத்தத்தின் இலக்ஷணாவிருத்தியால் எந்த அர்த்தத்தில் ஞான முண்டாகிறதோ அவ்வர்த்தம் இலக்ஷியார்த்த மெனப்படும். பலாசவிருக்ஷத்தின் ஒரே சிறியகிளையில் மூன்று இலைகளிருப்பதுபோல ஒரே வேதாந்தசித்தாந்தத்தில் உத்தம மத்திம கனிஷ்ட அதிகாரிகளுக்கு அறிவிக்கும்பொருட்டு மூன்று பக்ஷங்க ளிருக்கின்றன. அவை யாவன:— (க) அஜாதவாதம். (உ) திருஷ்டிசிருஷ்டிவாதம். (ஈ) வியாவகாரிகபக்ஷ மென்னும் சிருஷ்டிதிருஷ்டிவாதம் என்பனவாம்.

(க) எதில் ஒரே பாரமார்த்திக சத்தையாகிய சேதனம் அங்கீகரிக்கப்படுகின்றதோ அது வித்வான்களது திருஷ்டிக்கு விஷயமாகும் முக்கிய அஜாதவாதமெனப்படும்.

(உ) எதில் பாரமார்த்திகசத்தை பிராதிபாஸிகசத்தை என்னு மிரண்டும் அங்கீகரிக்கப்படுகின்றனவோ, அது திருஷ்டிசிருஷ்டிவாத மெனப்படும்.

(ஈ) எதில் பரமார்த்தம் பிராதிபாஸிகம் வியாவகாரிக மென்னும் மூன்றுசத்தைகளும் ஒப்பப்பட்டிருக்கின்றனவோ அது வியாவகாரிகபக்ஷம் அல்லது சிருஷ்டிதிருஷ்டிவாத மெனப்படும்.

அவற்றுள்,

(க) முக்கிய அஜாதவாதத்திலோ ஆரோப அபவாதங்க ளில்லாமையால் வாச்சியார்த்த லக்ஷியார்த்தங்களின் கற்பனை பொருந்தாது.

(உ) திருஷ்டிசிருஷ்டிவாதத்தில் சொப்பனகற்பித இராஜாவைப்போல ஜீவகற்பிதமாகிய ஈசுவரன் 'தத்' பதத்திற்கு வாச்சியார்த்தமாம். அவித்தையினால் மறைக்கப்பட்ட அஞ்ஞாத(அறியப்படாத) பிரஹ்மரூபஜீவன் 'துவம்' பதத்தின் வாச்சியார்த்தமாம். இவ்விரண்டு பதங்களுக்கும் சுத்தப்பிரஹ்மம் இலக்ஷியார்த்தமாம்.

(ஈ) வியாவகாரிகபக்ஷத்தில் [க] பிம்பப்பிரதிபிம்பவாதம், [உ] காரியகாரண உபாதிவாதம், [ஈ] அவச்சின்ன அநவச்சின்னவாதம், [ச] அவச்சேதவாதம், [ரு] ஆபாசவாதம் என்னும் ஐந்துபக்ஷங்களும் அடங்கியிருக்கின்றன.

அவற்றுள்,

[க] பிம்பப்பிரதிபிம்பவாதத்தின்படி அஞ்ஞானவுபஹித சுத்தப்பிரஹ்மமாகிய பிம்பம் ஈசுவரனும், அது 'தத்' பதத்திற்கு வாச்சியார்த்தமாம். சமஷ்

திரவாயிலாகவும், பிரஹ்மநிஷ்ட குருவின்வாயிலாகவும் வாச்சியார்த்த இல க்ஷியார்த்தங்களை விசாரித்துப் பதார்த்தசோதனைபூர்வகமாக உண்மையினை

---

டியஞ்ஞானசம்பந்தத்தால் பிராந்தியினால் பிரதிபிம்பத்தன்மையை அடைந்த பிரஹ்மமாகிய ஒருஜீவனே "துவம்" பதத்திற்கு வாச்சியார்த்தமாம். பிம்பப்பிரதி பிம்பத்தன்மைகளின் கற்பனையின்றிய அசங்க சுத்தசைதன்னியம் அவ்விரண்டு பதங் களுக்கும் இலக்ஷியார்த்தமாம்.

[௨] காரியகாரணவுபாதிவாதத்தின்படி மாயையாகிய காரணவுபாதியை யுடைய சேதனம் ஈசுவரனும் (தத்பதத்தின் வாச்சியமாம்), அந்தக்கரணமாகிய காரிய வுபாதியையுடைய சேதனம் ஜீவனும் (துவம்பதத்தின் வாச்சியமாம்). இரண்டு உபாதி களுமின்றிய சுத்தப்பிரஹ்மம் அவ்விரண்டு பதங்களுக்கும் இலக்ஷியார்த்தமாம்.

[௩] அவச்சின்ன அநவச்சின்னவாதத்தின்படி அந்தக்கரண அநவச்சின்ன சேதனம் ஈசுவரனும்(தத்பதத்தின் வாச்சியமாம்). அந்தக்கரண அவச்சின்னசேதனம் ஜீவனும் (துவம்பதவாச்சியமாம்). அவச்சின்னத்தன்மை அநவச்சின்னத்தன்மைக ளென்னும் உபாதிகளின்றிய சுத்தப்பிரஹ்மம் இரண்டுபதங்களுக்கும் இலக்ஷியார்த்த மாம்.

[௪] அவச்சேதவாதத்தின்படி மாயையினால் அவச்சின்ன(விசிஷ்ட)சேதனமா கிய ஈசுவரன் "தத்" பதத்தின் வாச்சியார்த்தமாம். மாயா அநவச்சின்ன பிரஹ்ம சேதனம் "தத்" பதத்தின் இலக்ஷியார்த்தமாம். அந்தக்கரணம் அல்லது வியஷ்டி அஞ்ஞானத்தால் அவச்சின்ன (விசிஷ்ட) சேதனமாகிய ஜீவன் "துவம்" பதத்தின் வாச்சியார்த்தமாம். அந்தக்கரண அல்லது வியஷ்டி அஞ்ஞான அநவச்சின்ன கூடஸ் தசேதனம்"துவம்"பதத்தின் லக்ஷியார்த்தமாம். அவ்விரண்டு லக்ஷியார்த்தத்திற்கும் (பிரஹ்மகூடஸ்தருக்கு) அக்கண்டைகரசத்துவ முண்டு.

[௫] இந்நூலிற்கூறிய ஆபாசவாதத்தின்படி ஸாபாச சிதாபாசனோடுகூடிய மாயாவிசிஷ்டசேதனமாகிய ஈச்வரன் "தத்" பதத்தின் வாச்சியார்த்தமாம். ஸாபாச மாயாபாகத்தைவிட்டு மிஞ்சிய சுத்தப்பிரஹ்மம் இலக்ஷியார்த்தமாம். ஸாபாச அந்தக் கரண அல்லது வியஷ்டி அஞ்ஞானம்சவிசிஷ்ட சேதனமாகிய ஜீவன் "துவம்"பதத் தின் வாச்சியார்த்தமாம். ஸாபாச அந்தக்கரணம் அல்லது வியஷ்டி அஞ்ஞானம்ச மென்னும் உபாதி (விசேஷண) பாகத்தைவிட்டு மிஞ்சியசேதனம் (கூடஸ்தன்) இல க்ஷியார்த்தமாம். இவ்விரண்டுஇலக்ஷியார்த்தங்களுக்கும் அகண்டைகரசத்துவ முண்டு.

முற்கூறிய சகலப் பிரக்கிரியைகளுக்கும் ஜீவத்தன்மை ஈசுவரத்தன்மை ஜகத்து என்பவற்றை ஆரோபித்து,அவற்றின் அபவாதவாயிலாக அத்துவிதீயப்பிரஹ்மத்தை யறிவிப்பதில் தாற்பரியமாம். ஆகையால் எந்த முமுக்ஷுவுக்கு எந்தப் பிரக்கிரியை யின்படி அத்வைதப்பிரஹ்மத்தின் ஞான முண்டாகுமோ அவனுக்கு அதே பிரக்கி ரியை நலமுடையதாம். இப்படித் "தத்துவமஸி" மகாவாக்கியத்தில் காட்டப்பட்ட வாச்சியலக்ஷியங்களின் கிரமம் மற்ற மூன்றுமகாவாக்கியங்களிலும் அறிந்துகொள் ளத்தக்கதாம். இந்த மகாவாக்கியவிவேகப்பிரகரணத்தில் சகல மகாவாக்கியங்களி

யுணர்ந்து, சிரவணமனனமுதலியவற்றின் வழியாகச் சமுசயவிபரீதங் களைப் போக்கித் திட அபரோக்ஷநிஷ்டையினால் அஞ்ஞானமும் அதன்

லும் இரண்டிரண்டு பதங்களின் இலக்ஷியார்த்தங்களைக் கூறி அவற்றின் ஐக்கியம் பரஸ்பரம் அறிவிக்கப்பட்டிருக்கின்றது. அதுவே முமுக்ஷுக்களுக்குக் கொள்ளத் தக்கதாம். அவ்வாறாயினும், வாச்சியார்த்தஞானமின்றி வாச்சியார்த்தத்தில் பிரவே சித்துள்ள இலக்ஷியார்த்தத்தின் தெளிவாகிய ஞானம் உண்டாகாதாகையால், இந் தப்பிரகரணத்தில் முன்னும்பின்னும் அநேகஇடங்களில் வாச்சியஇலக்ஷியங்களிரண் டும் சொல்லப்பட்டிருக்கின்றன. அதனை யறியாமல் முமுக்ஷுக்களுக்குப் பிரஹ்மாத்ம ஐக்கிய நிச்சயமாகிய தத்துவஞானம் உண்டாகாது.

இங்குச் சங்கைசமாதானமாகிய விவாத மநேக மிருக்கின்றது. அது சுத்தபுத்தி யுடைய ஜிஞ்ஞாசுக்களுக்கு உபயோகமில்லாமையாலும், நூல் விரியு மென்னும் பயத் தாலும் எழுதப்படவில்லை. ஆனால் அதன் தன்மைமாத்திரம் காட்டப்பட்டது. முற் கூறிய நான்கு மகாவாக்கியங்களிலும் கிரமமாக இருக்கும் ''प्रज्ञानं பிரஞ்ஞானம்'' ''अहं அகம்'' ''त्वं துவம்'' ''अयं இது என்பதை விசேஷணமாகவுடையआत्मा ஆத்மா'' என்னும் நான்குபதங்களுக்கும் வாச்சியார்த்தம் சகல மதத்தின்படி ஜீவனாம். இவ் வாறே ''ब्रह्म பிரஹ்மம்'' ''ब्रह्मபிரஹ்மம்'' तत् தத்'' ''ब्रह्म பிரஹ்மம்'' என்னும் நான்கு பதங்களுக்கும் வாச்சியார்த்தம் ஈசுவரனாம். இச்சீவேசுவர ரிருவருக்கும் சிற்றறி வுடைமைமுதலியனவும் பேரறிவுடைமைமுதலியனவுமாகிய விரோததர்மம் இருத் தலால் அவ்விருவரின் ஐக்கியம் கடாகாச (கடவிசிஷ்ட ஆகாச) மடாகாச (மடவிசி ஷ்ட ஆகாச)க்களின் ஐக்கியத்தைப்போலச் சம்பவியாது. என்றாலும் கடமடதிருஷ் டிகளை விட்டு அவ்விரண்டிலுமுள்ள ஆகாயமாத்திரத்தில் ஐக்கியம் சம்பவித்தல் போல இலக்ஷணையினால் தர்மத்தோடு உபாதிபாகத்தைவிட்டு ஜீவேசுவரர்க ளிரு வரிடத்துமுள்ள இலக்ஷியார்த்தமாகிய சேதனமாத்திரத்திற்கு ஐக்கியம் சம்பவிக் கின்றது.

(க) இங்கு மகாவாக்கியங்களின் இரண்டிரண்டு பதங்களுக்கு ஜகத்திலக்ஷணை சம்பவியாது. ஏனெனின், இலக்ஷியார்த்தமாகிய ஆத்மாவும் பிரஹ்மமும் வாச்சி யார்த்தத்தில் (ஜீவேசுவரரிருவர்களிடத்துப்) பிரவேசித்திருக்கின்றன. ஜகத்திலக்ஷ ணையின்படி வாச்சியார்த்தமுழுவதையும் விட்டால் அதனோடு இலக்ஷியார்த்தமும் விடுபடும்.

(உ) அஜகத்திலக்ஷணையும் பொருந்தாது. ஏனெனின், அஜகத்திலக்ஷணை யின்படி வாச்சியார்த்தத்தை விடாவிடின் விரோதமிருத்தலால் இலக்ஷணை வியர்த் தமா மென்னும் பிரசங்கமுண்டாம்.

(ரு) ஆகையால் ''सोयं देवदत्तः அவன் இந்தத் தேவதத்தன்'' என்று முன் ருஅ-வது பக்கத்தின் கசஎ-வது விளக்கவுரையில் கூறிய திருஷ்டாந்தத்தைப்போல விரோ தமில்லாத பாகத்தைக் கொள்ளுதலால் ஐக்கியம் சம்பவித்தலின் இங்குப் பாகத்தி யாகலக்ஷணையே பொருந்துகின்றது. இப்படி ஆசாரியர் ஐக்கியத்தால் அறிவித்த இரண்டு பதங்களின் இலக்ஷியார்த்தத்திலும் அதிகாரிக்கு யதார்த்த ஐக்கியஞான மில்லாமையால் ஐக்கியாம்சத்திலுள்ள மாயை அவித்தை என்னும் காரணத்தாலுண் டாகும் பரோக்ஷத்தன்மை பரிச்சின்னத்தன்மையாகிய பிராந்தியை நிவிருத்திக்கும்

காரியமுமாகிய அநர்த்தம் நிவிருத்தியாதலும் பரமாநந்தம் பிராப்தியாதலுமாகிய ஜீவன்முக்தியையும் விதேகமுக்தியையும் அநுபவித்தல் தகுதியாம். (அ)

## மகாவாக்கியவிவேகமென்னும்
## ஐந்தாம்பிரகரணம்
## முற்றிற்று.

---

பொருட்டு ஓதப்புரோதபாவம் (குறுக்குநெடுக்குத்தன்மை) கர்த்தவ்வியமாம் (செய்யவேண்டியதாம்).

அந்த ஓதப்புரோதபாவத்தின் கிரமம் இதுவாம்:—"தத்" பதத்தின் அர்த்தத்தின் பரோக்ஷத்தன்மையாகிய பிராந்தியை நிவிருத்திக்கும்பொருட்டு "तत् त्वं அது நீ" என்று "தத்" பதத்தின் அர்த்தத்தை உத்தேசித்துத் "துவம்" பதத்தின் அர்த்தரூபத்துவம் விதேயமாம். துவம்பதத்தின் அர்த்தத்தில் பரிச்சின்னத்தன்மையாகிய பிராந்தியை நிவிருத்திக்கும்பொருட்டு "त्वं तत् நீ அது" என்று "துவம்" பதத்தின் அர்த்தத்தை உத்தேசித்துத் "தத்" பதத்தின் அர்த்தரூபத்துவம் விதேயமாம். ஏனெனின், தத்பதத்தின் அர்த்தமாகிய பிரஹ்மத்திற்குத் துவம்பதத்தின் அர்த்தமாகிய நித்தியாபரோக்ஷசாக்ஷிரூபத்தன்மையால் பரோக்ஷத்தன்மையாகிய பிராந்தி கெடுகின்றது. "துவம்" பதார்த்தமாகிய சாக்ஷிக்குத்"தத்"பதத்தின் அர்த்தமாகிய வியாபகப்பிரஹ்மரூபத்தன்மையால் பரிச்சின்னத்தன்மையாகிய பிராந்தி நீங்குகின்றது.

அதுபோல,"अहं ब्रह्म நான் பிரஹ்மம்""प्रज्ञानं ब्रह्म பிரஞ்ஞானம் பிரஹ்மம்"आत्मा ब्रह्म ஆத்மா பிரஹ்மம்" என்று அறிதலால் பரிச்சின்னத்தன்மையும், "ब्रह्म अहं பிரஹ்மம் நான்" "ब्रह्म प्रज्ञानं பிரஹ்மம் பிரஞ்ஞானம்" "ब्रह्म आत्मा பிரஹ்மம் ஆத்மா" என்றறிதலால் பரோக்ஷத்தன்மையும் கெடுகின்றன.

இவ்வாறு ஓதப்புரோதத்தன்மை சொல்லப்பட்டது. அது ஸ்ரீமத் பாகவதத்தின் ௧௨-வது ஸ்கந்தத்திலுள்ள ௫-வது அத்தியாயத்தின் ௧௧-வது சுலோகத்தில் ஸ்ரீ சுகதேவரால் "நான் பரமதாம (நிரதிசய சொரூப)ப் பிரஹ்மமாயிருக்கின்றேன். பரமபத (நிரதிசய சொரூப)ப் பிரஹ்மம் நான் என்று செவ்வையாகக் காண் (விசாரிக்)கின்றவனும் ஆத்மாவை (மனதை) நிஷ்கள (நிருபாதிக) ஆத்மாவில் (பிரஹ்மத்தில்)தாரணைசெய்து (தேகமுதலிய சகலத்தையும் தனக்கு வேருகப் பாரான்)." என்று பரீக்ஷித்துராஜாவை நோக்கிச் சொல்லியிருக்கின்றார். ஆசாரியர்களும் அந்தந்த மகாவாக்கியத்தின் பிரசங்கத்தில் எழுதியிருக்கின்றார்கள். ஆகையால் ஜீவனது பரிச்சின்னத்தன்மைமுதலியனவும் பிரஹ்மத்தின் பரோக்ஷத்தன்மைமுதலியனவுமாகிய பிராந்தி நிவிருத்தியாதற்பொருட்டு முற்கூறிய ஓதப்புரோதத்தன்மை அவசியம் செய்யவேண்டியதாம்.

முற்கூறியபிரகாரம் முமுக்ஷுக்கள்,சத்சாஸ்திர சத்குரு கிருபையால் விரும்பிய பிரக்கிரியையின் ஞானத்தால் மூன்றுவித பரிச்சேதமில்லாததும், அகண்ட சச்சிதாநந்தமுதலிய விசேஷணத்தோடுகூடியதும், சமஷ்டி வியஷ்டி என்னும் சகலப்பிரபஞ்சத்திற்கும் அதிஷ்டானமும், மாயை அவித்தை அதன்காரியமென்னும் பிரபஞ்சமில்லாததும், உபாதியினுலாகிய ஜீவேசுவரபேதமுதலிய ஐந்துபேதமில்லாததும் பந்தமோக்ஷம் அதன் சாதன மென்பவற்றின் கற்பனையில்லாததும், பிரவிருத்தி நிவிருத்தியில்லாததும், சுத்தமும், ஏகரசமும், பரமார்த்ததத்துவமுமாகிய தன்னை யதார்த்த திட அபரோக்ஷமாக அறிந்து கிருதார்த்தர்களாகுக.

ஓம்தத்ஸத்பிரஹ்மணே நம:

# ஸ்ரீ பஞ்சதசி.

## சா. $ சித்திரதீபம்.

### ஆரும்பிரகரணம்

க. ஆரோபிதமாகிய ஜகத்தின் ஸ்திதியும் ஞானத்தால் நிவிருத்தியாகுந் தன்மையும் உகூ௫-௬௯௦.

க. ஜகத்தின் ஆரோபத்தில் படருபதிருஷ்டாந்த சேதனருபசித்தாந்தங்களின் நான்கு அவஸ்தைகள் உகூ௫-உகூ௮.

க. முற்கூறிய திருஷ்டாந்தசித்தாந்தங்களினது நான்கு அவஸ்தைகளின் பிரதிஞ்ஞை.

[உகூ௫] यथा चित्रपटे दृष्टमवस्थानां चतुष्टयम् ।
परमात्मनि विज्ञेयं तथाऽवस्थाचतुष्टयम् ॥ १ ॥

(அ-கை.)

செய்யக்கருதிய சித்திரதீபமென்னும் கிரந்தம் நிர்விக்கினமாய் முடியும் பொருட்டுப் * க "பரமாத்மாவினிடத்து" என்னும் பதத்தால் இஷ்டதேவதையான பிரத்தியகபின்ன பிரஹ்மத்தின் சொரூபமாகிய தத்துவத்தை ஸ்மரித்தல் அதாவது நினைத்தல்வடிவ மங்கலத்தை ஆசரிக்கின்றவராகிய ஆசாரியர் இந்தக் கிரந்தம் வேதாந்தசாஸ்திரத்தின் பிரகரணமாயிருத்தலால் அந்த வேதாந்தசாஸ்திரத்தின் விஷயமுதலிய நான்கு அநுபந்தங்களால் அவ்வநுபந்தமுடைமை சித்திப்பதை மனதிற்கொண்டு * உ "அத்தியாரோப * ௩ அபவாதங்களால் நிஷ்பிரபஞ்சப்பிரஹ்மத்தை வர்ணிக்

$ அதிஷ்டான சேதனவடிவ வஸ்திரத்தில் ஜகத்துவடிவ சித்திரதீபம்போல் பிரகாசஞ்செய்யும் நூலாகிய பிரகரணம் சித்திரதீப மெனப்படும்.

க. சுலோகத்திலுள்ள "परमात्मनि பரமாத்மாவில்" என்னும் சொல் ஏதுவேர் அது வேறுகாரியத்தின்பொருட்டுச் செய்யப்படும் மங்கலத்திற்குக் காரணமாயுள்ளமிருதங்கத்தொனியைப்போலப் பிரசங்கத்தாற் கிடைத்த அர்த்தம் மங்கல மென்னும் இரண்டற்கும் காரணமாம்.

உ. சர்ப்பமில்லாதவடிவ இர்ஜ்ஜுவில் சர்ப்பத்தின் ஆரோபம்போல வஸ்துவாகிய பிரஹ்மத்தில் அவஸ்துவாகிய அஞ்ஞானத்தையும் அதன் காரியத்தையும் ஆரோபித்தல் அத்தியாரோப மெனப்படும்.

௩. இர்ஜ்ஜுவின் விவர்த்தமாகிய சர்ப்பத்தின் இர்ஜ்ஜுமாத்திரத்தன்மையினைப்போல அவஸ்துவடிவ அஞ்ஞானமுதலிய பிரபஞ்சத்தின் பிரஹ்மவடிவ வஸ்துமாத்திரத்தன்மை அபவாத மெனப்படும்.

கின்றார்." என்னும் நியாயத்தை ஆசிரயித்துப் பரமாத்மாவினிடத்து ஆரோபிதமாகிய ஜகத்து நிலைத்திருக்குந்தன்மையைத் திருஷ்டாந்தத்தோடு பிரதிஞ்ஞைசெய்கின்றார் :—

चित्रपटे यथा अवस्थानां चतुष्टयं दृष्टं । तथा परमात्मनि अवस्थाचतुष्टयं विज्ञेयम् ॥

(சு-ம்)

எப்படிச் சித்திரபடத்தில் நான்கு அவஸ்தைகள் காணப்படுகின்றனவோ, அதுபோலப் பரமாத்மாவினிடத்து நான்கு அவஸ்தைகளை யறிய வேண்டும்.

(வி-ம்.)

சித்திரத்தோடுகூடிய வஸ்திரத்தில் மேல் உகூகூ-உகூஅ சுலோகங்களில் சொல்லப்படும் நான்கு அவஸ்தைகளைப்போல, பரமாத்மாவினிடத்தும் மேல் உகூகூ-உகூஅ சுலோகங்களில் சொல்லப்படும் நான்கு அவஸ்தைகளும் அறியத்தக்கனவாம். (க)

உ. முதற்சுலோகத்தில் கூறிய நான்கு அவஸ்தைகளின் தனித்தனிப் பெயர்கள்.

[உகூகூ] यथा धौतो घट्टितश्च लांछितो रंजितः पटः ।
चिदंतर्यामी सूत्रात्मा विराडात्मा तथेर्यते ॥ २ ॥

(அ-கை.)

அந்நான்கு அவஸ்தைகள் யாவை? என்று கேட்குமிடத்துத் திருஷ்டாந்தமாகிய படம் தார்ஷ்டாந்தமாகிய சேதனம் என்னு மிரண்டிலுமுள்ள நான்கு அவஸ்தைகளையும் கிரமமாக உபதேசஞ்செய்கின்றார் அதாவது பெயராற் கூறுகின்றார் :—

यथा धौतः घट्टितः लांछितः च रंजितः पटः तथा चित् अंतर्यामी सूत्रात्मा विराट् आत्मा ईर्यते ॥

(சு-ம்.)

எப்படிப் படம் வெளுப்பு, பசைபூசியது, அச்சுக்கட்டியது, வர்ணந்தீர்ந்தது என்று நான்குவிதமா யிருக்கின்றதோ அப்படிச் சித்தாகிய சுத்தசேதனம், அந்தரியாமி யென்னும் ஈசுவரன், இரணியகர்ப்பனென்னும் சூத்திராத்மா, விராட்டாத்மா என்று நான்குவிதமாகப் பரமாத்மா சொல்லப்படுகின்றது.

(வி-ம்.)

வெளுப்பு, பசைபூசியது, அச்சுக்கட்டியது, வர்ணந்தீர்ந்தது என்று நாலவஸ்தை சித்திரபடத்தில் காணப்படுவதுபோலப் பரமாத்மாவினிடத்தும் சித்து, அந்தரியாமி, சூத்திராத்மா, விராட்டு என்னும் நான்கு அவஸ்தைகளும் அறியத்தக்கனவாம் என்பது பொருள். (உ)

ங. திருஷ்டாந்தத்தினது நான்கு அவஸ்தைகளின் பொருள்.

[உகள] स्वतः शुभ्रोऽत्र धौतः स्याद्घट्टितोऽन्नविलेपनात् ।
मष्याकारैर्लांछितः स्याद्रंजितो वर्णपूरणात् ॥ ३ ॥

(அ-கை.)

படவடிவ திருஷ்டாந்தத்திலுள்ள அவஸ்தைகளின் சொரூபத்தைக் கிரமமாகச் சொல்லுகின்றார் :—

अत्र स्वतः शुभ्रः धौतः । अन्नविलेपनात् घट्टितः स्यात् । मष्याकारैः लांछितः वर्णपूरणात् रंजितः स्यात् ॥

(சு-ம்.)

சொரூபமாகச் சுத்தமாகிய படம் இங்கே வெளுத்தபட மாகின்றது. கஞ்சிபூசுவதினால் பசைப்பட மாகின்றது. மையினால் உருவம் எழுதுவதினால் அச்சுக்கட்டியபட மாகின்றது. வர்ணத்தை நிரப்புதலால் வர்ணந்தீர்ந்தபட மாகின்றது.

(வி-ம்.)

இந்த நான்கு அவஸ்தைகளுள் தானாகவே அதாவது வேறு திரவியங்களின் சம்பந்தமின்றியே வெண்மையாயிருக்கும் படம் வெளுத்த படமெனப்படும். அந்நத்தினால் (கஞ்சிப்)பூச்சையடைந்த படம் பசைப்பட மெனப்படும். மைவடிவமாகிய தேவர் மனிதர்முதலிய உருவங்களோடுகூடிய படம் அச்சுக்கட்டியபட மெனப்படும். அதற்குரிய (கருமைசெம்மைமுதலிய) வர்ணங்களால் நிரப்பப்பட்ட படம் வர்ணந்தீர்ந்தபட மெனப்படும். (ங)

ச. சித்தாந்தத்தினது நான்கு அவஸ்தைகளின் பொருள்.

[உகஅ] स्वतश्चिदंतर्यामी तु मायावी सूक्ष्मसृष्टितः ।
सूत्रात्मा स्थूलसृष्टचैव विराडित्युच्यते परः ॥ ४ ॥

(அ-கை)

இப்போது சேதனமாகிய தார்ஷ்டாந்தத்தில் அந்நான்கு அவஸ்தைகளையும் கூறுகின்றார் :—

परः स्वतः तु चित् । मायावी अंतर्यामी । सूक्ष्मसृष्टितः सूत्रात्मा स्थूलसृष्ट्या विराट् एव इति उच्यते ॥

(சு-ம்.)

பரமாத்மா இயல்பாகவே சித்தென்றும் மாயையோடுகூடுவதனால் அந்தரியாமி யென்றும், சூக்ஷ்மசிருஷ்டியினால் சூத்திராத்மா வென்றும், ஸ்தூல சிருஷ்டியினாலேயே விராட் டென்றுஞ் சொல்லப்படுகின்றது.

(வி-ம்.)

பரமாத்மா மாயை அதன்காரிய மென்பவற்றின் சம்பந்தமின்றிச் சித் தென்றும், * ௪. மாயாயோகத்தால் அந்தரியாமி யென்றும், அபஞ்சீகிருத பஞ்சபூதங்களின் காரியமாகிய சமஷ்டிசூக்ஷ்மசரீரத்தின் சம்பந்தத் தால் சூத்திராத்மா வென்றும், பஞ்சீகிருதபஞ்சபூதங்களின் காரியமாகிய * ௫. சமஷ்டிஸ்தூலசரீரமாகிய உபாதியின் சம்பந்தத்தால் விராட் டென் றும் சொல்லப்படுகின்றது. (௪)

௨. சேதனத்தில் ஆரோபிக்கப்பட்ட சித்திரத்தின் வர்ணனம் ௨௧௧-௩௦௩.
௧. பிரஹ்மாதிவடிவ சித்திரத்தைக் கூறுதல்.

[௨௧௧] ब्रह्माद्याः स्तंबपर्यंताः प्राणिनोऽत्र जडा अपि ।
उत्तमाधमभावेन वर्तंते पटचित्रवत् ॥ ५ ॥

(அ-கை.)

அப்படியானால் பரமாத்மா சித்திரபடஸ்தானத்திலுள்ளதாகவே அத னுசிரிதமாகச் சித்திரத்தைச் சொல்லவேண்டுமெனக் கூறுகின்றார்:—

अत्र उत्तमाधमभावेन ब्रह्माद्याः स्तंबपर्यंताः प्राणिनः जडाः अपि पटचित्रवत् वर्तंते ॥

(சு-ம்.)

பிரஹ்மாமுதல் ஸ்தம்பபரியந்தமான பிராணிகளாகிய சேதனங்களும் ஜடபதார்த்தங்களும் உத்தம அதமத்தன்மைகளால் இங்குப் பரமாத்மா வில் படத்தின் சித்திரத்தைப்போல இருக்கின்றன.

---

* ௪. தாதாத்மியசம்பந்தத்தால்.

* ௫. பிரஹ்மாண்டமாகிய.

(வி-ம்.)

இந்தப் பரமாத்மாவினிடத்து உத்தம அதமத்தன்மைகளாயிருக்கும் பிரஹ்மாமுதல் *௬. ஸ்தம்பபரியந்தமான சேதநாசேதனமாகிய ஜங்கமஸ்தாவரங்களும் மலை ஆறுமுதலிய ஜடவஸ்துக்களும் சித்திரஸ்தானத்தி லுள்ளனவாம். (இ)

௨. படதிருஷ்டாந்தத்தால் பிரஹ்மாதிகள் சேதனவடிவா மென்பதிற் காரணம்.

[௩௦௦] चित्रार्पितमनुष्याणां वस्त्राभासाः पृथक् पृथक् ।
चित्राधारेण वस्त्रेण सदृशा इव कल्पिताः ॥ ६ ॥

(அ-கை.)

பிரஹ்மாமுதலியன ஜகத்தின் சேதனத்தன்மையில் காரணத்தைச் சொல்லுதற்குத் திருஷ்டாந்தத்தைக் கூறுகின்றார்:—

चित्रार्पितमनुष्याणाम् पृथक् पृथक् वस्त्राभासाः चित्राधारेण वस्त्रेण सदृशा इव कल्पिताः ॥

(சு-ம்.)

சித்திரத்தில் எழுதிய மனிதர்களுக்கிருக்கும் வேறுவேறு வஸ்திராபாசங்கள் சித்திரத்தின் ஆதாரவடிவ வஸ்திரத்தோடு சமானமுள்ளவைபோற் கற்பிக்கப்பட்டிருக்கின்றன.

(வி-ம்.)

சித்திரத்திலெழுதப்பட்ட மனிதர்முதலிய சரீரங்களுக்கே பலவர்ணமுள்ள வேறுவேறுவகை வஸ்திரங்கள் எழுதப்பட்டிருக்கின்றன. அவ்வஸ்திரங்களின் பேதம் குளிர்முதலியவற்றை நிவிருத்தியாததாயிருத்தலால் * ௭. வஸ்திராபாசமேயாம். (சு)

[௩௦௧] पृथक्पृथक्चिदाभासाश्चैतन्याध्यस्तदेहिनाम् ।
कल्प्यंते जीवनामानो बहुधा संसरंत्यमी ॥ ७ ॥

(அ-கை.)

தார்ஷ்டாந்தத்தைக் கூறுகின்றார்:—

---

* ௬. வேரினின்றே இலை உண்டாக்கப்படும் அற்ப விருக்ஷங்களாகிய தர்ப்பைமுதலியன கோசமாகிய கிகண்டில் ஸ்தம்ப மெனப்படுகின்றன.

* ௭. வஸ்திரத்தின் இலக்ஷணமாகிய குளிர்முதலியவற்றைப் போக்குந்தன்மை இல்லாததாய் வஸ்திரத்தினைப்போலத் தோற்றுவது வஸ்திராபாச மெனப்படும். இதனையே ஆடைப்போலி யென்பர்.

चैतन्याध्यस्तदेहिनां पृथक् पृथक् जीवनामानः चिदाभासाः कल्प्यंते ॥

(சு-ம்.)

இப்படியே சைதந்நியத்தில் அத்தியாசஞ்செய்யப்பட்ட பிராணிகளுக்கு வேறுவேறு ஜீவனென்னும் பெயருள்ள சிதாபாசன் கற்பிக்கப்படுகின்றது.

(வி-ம்.)

இப்படிப் பரமாத்மாவினிடத்து ஆரோபிக்கப்பட்ட தேவர்முதலிய சரீரங்களுக்கு ஜீவனென்னும் பெயருடைய சிதாபாசன் ஒவ்வொரு தேகத்திற்கும் ஒவ்வொன்று கற்பிக்கப்படுகின்றது. மலைமுதலிய ஜடபதார்த்தங்களுக்குச் * அ. சிதாபாசன் கற்பிக்கப்படவில்லை.

(அ-கை.)

அந்தத்தேவர்முதலிய சரீரங்களின் சிதாபாசகற்பனையிற் காரணத்தைக் கூறுகின்றார்:—

अमी बहुधा संसरंति

(சு-ம்.)

இந்த ஜீவர்கள் அநேகவிதமாய்ச் சம்சாரத்தை யடைகின்றார்கள்.

(வி-ம்.)

இந்த ஜீவர்களாகிய சிதாபாசர்கள் தேவர் * க. திரியக்கு மனிதர் முதலிய சரீரங்களின் அடைவால் வெகுவிதமாக ஜனனமரணாதிவடிவ சம்சாரத்தை அடைகின்றார்கள். பரமாத்மா நிர்விகாரமாயிருத்தலால் சம்சாரத்தை அடைகிறதில்லை என்பது அபிப்பிராயம். (எ)

க. சாக்ஷியாகிய ஆத்மாவில் சம்ஸ்காரம் தோற்றுதற்குக் காரணம் அஞ்ஞானமாதல்.

[௲0உ] वस्त्राभासस्थितान्वर्णान्यद्वदाधारवस्त्रगान् ।
वदंत्याज्ञास्तथा जीवसंसारं चिद्गतं विदुः ॥ ८ ॥

(அ-கை.)

அப்படியானால் நையாயிகர்முதலிய சகலவாதிகளும் இலௌகீகரும் ஆத்மாவிற்கே சம்சாரமுண்டெனக் கூறுவதிற் காரணம் யாதென்றாசங்

---

* அ. சித்தின் இலக்ஷணமில்லாததாய்ச் சித்தைப்போலத் தோற்றுவது சிதாபாசனும். இதனையே சித்துப்போலி யென்பர்.

* க. பசுபக்ஷி சர்ப்பமுதலியன.

கித்து, அஞ்ஞானமே காரணமென்று திருஷ்டாந்தத்தோடு கூறுகின்றார்:—

वस्त्राभासस्थितान् वर्णान् यद्वत् आधारवस्त्रगान् वदंति । तथा अज्ञाः जीवसंसारं चिद्गतं विदुः ।

(சு-ம்.)

வஸ்திரத்திலுள்ள நிறங்களை எப்படி ஆதாரவஸ்திரத்திலுள்ளனவாகச் சொல்லுகின்றார்களோ, அப்படியே அஞ்ஞானிகள் ஜீவனிடத்துள்ள சம்சாரத்தைச் சாக்ஷிசேதனத்திலுள்ளதாக அறிகின்றார்கள். (அ)

௪. கடதிருஷ்டாந்தத்தினால் பர்வதமுதலியவற்றிற்குச் சிதாபாசகற்பனை யில்லை யெனல்.

[௩0௩] चित्रस्थपर्वतादीनां वस्त्राभासो न लिख्यते ।
सृष्टिस्थमृत्तिकादीनां चिदाभासस्तथा न हि ॥ ९ ॥

(அ-கை.)

மலை ஆறுமுதலியவற்றிற்குச் சிதாபாசகற்பனை இல்லை யென்பதைத் திருஷ்டாந்தபூர்வகமாகக் கூறுகின்றார்:—

चित्रस्थपर्वतादीनां वस्त्राभासः न लिख्यते तथा सृष्टिस्थमृत्तिकादीनां चिदाभासः न हि ॥

(சு-ம்.)

எப்படிச் சித்திரத்திலுள்ள மலைமுதலியவற்றிற்கு வஸ்திராபாசம் எழுதப்படுகிறதில்லையோ, அப்படிச் சிருஷ்டியிலுள்ள மண்முதலியவற்றிற்குச் சிதாபாசன் கற்பிக்கப்படுகிறதில்லை.

(வி-ம்.)

மண்முதலிய ஜடபதார்த்தங்களுக்குச் சிதாபாசனைக் கற்பித்தலில் பிரயோஜனம் அதாவது சம்சாரமாகிய பலமில்லாமையால் என்பது தாற்பரியம். (௯)

**௩. அவித்தையின் சொரூபபூர்வகமாகச் சாதனத்தோடு அதனை நிவிருத்திக்கும் வித்தையின் சொரூபம் ௩0௪-௩௧0.**

௧. அவித்தையின் சொரூபமும் அதன் வித்தையாகிய நிவிருத்தியுபாயமும்.

**[௩0௪] संसारः परमार्थोऽयं संलग्नः स्वात्मवस्तुनि ।
इति भ्रांतिरविद्या स्याद्विद्ययैषा निवर्तते ॥ १० ॥**

(அ-கை.)

இப்படி ஆத்மாவினிடத்து ஆரோபிக்கப்பட்ட சம்சாரத்திற்கு ஞானத்தால் நிவிருத்தியாகத்தக்கதன்மை சித்திக்கும்பொருட்டு அச்சம்சாரத்திற்குக் காரணமாகிய அவித்தையைக் கூறுகின்றார் :—

अयं संसारः परमार्थः स्वात्मवस्तुनि संलग्नः इति भ्रांतिः अविद्या स्यात् । एषा विद्यया निवर्तते ॥

(சு-ம்.)

"இந்தச் சம்சாரம் (கர்த்திருத்துவாதிவடிவ சம்சாரம்) பரமார்த்தமாம். அது சுவாத்மவஸ்துவில் செவ்வையாய்ப் பொருந்தி யிருக்கின்றது அதாவது ஆத்மாவின் தர்மமாம்." என்னும் விபரீதஞானம் காரியவடிவ அஞ்ஞானமாகிய அவித்தையாகின்றது. இந்த அவித்தை ஞானத்தால் நீங்குகின்றது. (௧0)

உ. வித்தையின் சொரூபமும் அதனைப் பெறும் உபாயமும்.

[௩0௬] आत्माभासस्य जीवस्य संसारानात्मवस्तुनः ।
इति बोधो भवेद्विद्या लभ्यतेऽसौ विचारणात् ॥ ११ ॥

(அ-கை.)

அப்படியானால் அந்த வித்தையாகிய ஞானம் யாது ? அதனைப் பெறும் உபாயம் யாதென்று கேட்குமிடத்து, வித்தையின் சொரூபத்தையும் அதனைப் பெறும் உபாயத்தையும் கூறுகின்றார் :—

आत्माभासस्य जीवस्य संसारः आत्मवस्तुनः न इति बोधः विद्या भवेत् । असौ विचारणात् लभ्यते ॥

(சு-ம்.)

ஆத்மாவின் ஆபாசனாகிய ஜீவனுக்கே சம்சாரமாம்; ஆத்மவஸ்துவிற்கு இல்லை என்னும் ஞானம் வித்தையாகின்றது. இந்த வித்தை விவேகத்தாலடையப்படுகின்றது. (௧௧)

௩. விசாரத்தின் விஷயமும் உபயோகமும்.

[௩0௭] सदा विचारयेत्तस्माज्जगज्जीवपरात्मनः ।
जीवभावजगद्भावबाधे स्वात्मैव शिष्यते ॥ १२ ॥

(அ-கை.)

அப்படியானால் "விசாரத்தினால் வித்தை யடையப்படுகின்றது" என்று ௩0டு-வது சுலோகத்தில் சொல்லப்பட்டது. எதனை விசாரித்தலால் அந்த ஞானம் உண்டாகும் என்றுசங்கித்துக் கூறுகின்றார்:—

तस्मात् जगज्जीवपरात्मनः सदा विचारयेत् ॥

(சு-ம்.)

ஆகையால் ஜகத்து, ஜீவன், பரமாத்மா என்னும் மூன்றையும் முமுக்ஷு எப்போதும் விசாரிக்கவேண்டும்.

(அ-கை.)

அப்படியானால் பரமாத்மாவே விசாரிக்கத்தக்கதாம். ஏனெனின், மோக்ஷ அவஸ்தையில் பிரயோஜனவடிவமாக அது நிலைத்திருத்தலால் ஜீவன் ஜகத்து என்னும் இரண்டன் விசாரமும் எங்கே உபயோகமாகின்றது என்றுசங்கித்து, அந்த ஜகத்து ஜீவர்களின் பாதவடிவ அபவாதத்தால் உண்டாகும் பரமாத்மாவின் அவசேஷத்தோடு ஜகஜீவர்களின் விசாரம் உபயோகப்படுகின்றதெனக் கூறுகின்றார்:—

जीवभावजगद्भावबाधे स्वात्मा एव शिष्यते ॥

(சு-ம்.)

ஜீவத்தன்மை ஜகத்துத்தன்மைகள் பாதமாகவே பிரஹ்மத்திற்கு அபின்னமாகிய சுவாத்மாவே மிஞ்சுகின்றது. (௧௨)

௪. பாதமென்னும் சொல்லின் பொருள்.

[௩0எ] नाप्रतीतिस्तयोर्बाधः किंतु मिथ्यात्वनिश्चयः ।
नो चेत्सुषुप्तिमूर्च्छादौ मुच्येतायत्नतो जनः ॥ १३ ॥

(அ-கை.)

அப்படியானால் "விசாரத்தில் ஜீவத்தன்மை ஜகத்துத்தன்மைகள் பாதமாகவே பிரஹ்மத்திற்கு அபின்னமாகிய சுவாத்மாவே மிஞ்சுகின்றது." என்று ௩0சு-ல் கூறியது பொருந்தாது. ஏனெனின், விசாரத்தினால் ஜீவனும் ஜகத்தும் பாதமாகுமாயின், அந்த ஜீவனும் ஜகத்தும் தோற்றாமையால் விவகாரலோபமுண்டா மென்றுசங்கித்துப் பாதமெனுஞ் சத்தத்திற்குக் கருதிய அர்த்தத்தையும், விபக்ஷமாகிய இவ்வர்த்தத்தை ஒப்பாதவிடத்து அநிஷ்டத்தைத் தரும் தர்க்கவடிவதண்டத்தையும் கூறுகின்றார்:—

अप्रतीतिः तयोः बाधः न किंतु मिथ्यात्वनिश्चयः । नो चेत् सुषुप्तिमूर्छादौ जनः अयत्नतः मुच्येत ॥

(சு-ம்.)

ஜீவன் ஜகத்து என்னும் அவ்விரண்டினது தோற்றமை பாதமாகாது. ஆனால் *௪௦. மித்தியாத்துவ நிச்சயமே பாதமாம். அப்படியில்லை யெனின், சுழுத்தி மூர்ச்சைமுதலியவற்றில் ஜனங்கள் பிரயத்தனமின்றி முக்தரா கின்றார்கள்.

(வி-ம்.)

சுழுத்தி மூர்ச்சைமுதலியவைகளில் தானாகவே அதாவது முயற்சி யின்றியே துவைதத்தோற்ற மில்லாமையால் தத்துஞானமின்றியும் முக்தி யுண்டாகும் என்பது பொருள். இங்கு முதலியவென்னுஞ் சொல்லால் மர ணமும் பிரளயமும் கொள்ளப்படும். (௧௩)

ரு. ஆத்மா மிஞ்சுகின்றது என்பதன் பொருள்.

[௯௦அ] परमात्मावशेषोऽपि तत्सत्यत्वविनिश्चयः ।
न जगद्विस्मृतिर्नो चेज्जीवन्मुक्तिर्न संभवेत् ॥ १४ ॥

(சு-ம்.)

"சுவாத்மாவே மிஞ்சுகின்றது" என்று ௯௦சு-ல் கூறியதினாலும் பர மாத்மாவினது சத்தியத்தன்மையின் ஞானமே சொல்லக்கருதியதாம். அந் தப் பரமாத்மாவின் சத்தியத்தன்மையின் ஞானத்திற்கு வேறாகிய ஜகத் தின் விஸ்மிருதி அதாவது ஜகத்துத்தோற்றமை சொல்லக்கருதிய தன்று; ஏனெனின், ஜீவன்முக்தியின் அபாவம் வாய்த்தலால் என்று கூறுகின்றார்:—

परमात्मावशेषः अपि तत्सत्यत्वविनिश्चयः जगद्विस्मृतिः न । नो चेत् जीवन्मुक्तिः न संभवेत् ॥

பரமாத்மாவின் அவசேஷமும் (மிச்சமும்) அந்தப் பரமாத்மாவினது சத்தியத்தன்மையின் நிச்சயமேயாம்; ஜகத்தின் விஸ்மிருதியன்று. இப் படிக்கொள்ளாவிடின் ஜீவன்முக்தியானது சம்பவியாது. (௧௪)

* ௪௦. பாதமாகியபின் ஜகத்தின் தோற்றமுண்டாகின்றது. அ௬௯-வது சுலோ கத்திற் காண்க. இந்தப்பாதத்தின் (நிவிருத்தியின்) இலக்ஷணம் ௧௩௨௨-வது சுலோ கத்திற் காண்க.

௬. வித்தையின் பேதத்தோடு விசாரத்தின் எல்லை.

[௩௦௯] परोक्षा चापरोक्षेति विद्या द्वेधा विचारजा ।
तत्रापरोक्षविद्याप्तौ विचारोऽयं समाप्यते ॥ १५ ॥

(அ-கை.)

"எப்போது விசாரிக்கவேண்டும்" என்று ௩௦௬-வது சுலோகத்திற் கூறியதனால் தேகம் விழும்வரையில் விசாரத்தினடைவுண்டாகுதலால் அந்த விசாரத்தின் அவதியைக் கூறுகின்றார்:—

विचारजा विद्या परोक्षा च अपरोक्षा इति द्वेधा । तत्र अपरोक्षविद्याप्तौ अयं विचारः समाप्यते ॥

(சு-ம்.)

விசாரத்தினாலுண்டாகிய வித்தை பரோக்ஷம் அபரோக்ஷம் என்று இரண்டுவகையாம். அவற்றுள் அபரோக்ஷவித்தையின் அடைவில் இந்த விசாரமானது முடிகின்றது. (௧௫)

எ. விசாரஜந்திய பரோக்ஷ அபரோக்ஷ ஞானங்களின் சொரூபம்.

[௩௧௦] अस्ति ब्रह्मेति चेद्वेद परोक्षज्ञानमेव तत् ।
अहं ब्रह्मेति चेद्वेद साक्षात्कारः स उच्यते ॥ १६ ॥

(அ-கை.)

"விசாரத்தினாலுண்டாகிய வித்தை பரோக்ஷத்தன்மை அபரோக்ஷத் தன்மையென இரண்டுவகையாம்." என்று ௩௦௯-ல் கூறிய அவ்விரண்டன் சொரூபத்தையும் கிரமமாகக் காட்டுகின்றார்:—

"ब्रह्म अस्ति" इति चेत् वेद तत् परोक्षज्ञानं एव । "अहं ब्रह्म" इति चेत् वेद सः साक्षात्कारः उच्यते ॥

(சு-ம்.)

"பிரஹ்மம் இருக்கிறது" என்று அறிந்தால் அது பரோக்ஷஞானமாம். "நான் பிரஹ்மம்" என்று அறிந்தால் அது சாக்ஷாத்காரமென்னும் அபரோக்ஷஞானம் எனப்படும். (௧௬)

(ஆத்மதத்துவ விவேசனம் ௪௧௧—௫௦௪)

ஆத்மதத்துவ விவேசனத்தில் ஜீவகூடஸ்தரின் விவேசனம் ௪௧௧—௪௫௪.

௧. திருஷ்டாந்தவடிவமாகிய ஆகாயம் தார்ஷ்டாந்தமாகிய சேதன மென்பவற்றின் பேதம் ௪௧௧—௪௧௭.

௧. ஆத்மதத்துவத்தை விவேகித்தலின் பிரதிஞ்ஞை.

[௪௧௧] तत्साक्षात्कारसिद्ध्यर्थमात्मतत्त्वं विविच्यते ।
येनायं सर्वसंसारात्सद्य एव विमुच्यते ॥ १७ ॥

(அ-கை.)

௪௧0-ல் கூறிய இவ்வித ஆத்மசாக்ஷாத்காரத்தின் அசாதாரணகாரணமான ஆத்மதத்துவத்தின் விவேசனத்தைப் பிரதிஞ்ஞை செய்கின்றார் :—

येन अयं सर्वसंसारात् सद्य एव विमुच्यते । तत्साक्षात्कारसिद्ध्यर्थं आत्मतत्त्वं विविच्यते ॥

(சு-ம்.)

எந்தச் சாக்ஷாத்காரத்தால் இந்த ஜீவன் சர்வசம்சாரத்தினின்றும் உடனே விடுபடுகின்றானோ, அந்தச் சாக்ஷாத்காரம் சித்திக்கும்பொருட்டு ஆத்மதத்துவம் விவேகிக்கப்படுகின்றது.

(வி-ம்.)

எந்தச் சாக்ஷாத்காரத்தால் புருஷன் அப்பொழுதே அதாவது சாக்ஷாத்கார முண்டாகும் சமயத்திலேயே முக்தனாகின்றானோ, அந்தச் சாக்ஷாத்காரசித்தியின்பொருட்டு ஆத்மாவின் சொரூபம் விசாரிக்கப் படுகின்றதென்பது சுலோகத்தின் முற்பாதியோடு அந்வயமாம். (௧௭)

௨. நான்குசேதன நான்குஆகாயங்களின் பெயர்கள்

[௪௧௨] कूटस्थो ब्रह्मजीवेशावित्येवं चिच्चतुर्विधा ।
घटाकाशमहाकाशौ जलाकाशाभ्रखे यथा ॥ १८ ॥

(அ-கை.)

சிதாத்மாவின் பாரமார்த்திக ஐக்கியத்தை நிச்சயிக்க வியவகாரதசையாகிய சம்சார அவஸ்தையில் தோற்றிக்கொண்டிருக்கும் சைதந்நியபேதத்தைச் சொல்லுகின்றார் :—

कूटस्थः ब्रह्मजीवेशौ इति एवं चित् चतुर्विधा ॥

(சு-ம்.)

கூடஸ்தர், பிரஹ்மம், ஜீவன், ஈசுவரன் என்று இப்படிச் சைதந்நியம் * கக. நான்குவகையாம்.

(அ-கை.)

ஒரு சைதந்நியம் நான்குவகையாதலில் திருஷ்டாந்தத்தைக் கூறுகின்றார் :—

यथा घटाकाशमहाकाशौ जलाकाशाभ्रखे ॥

(சு-ம்.)

கடாகாசம், மகாகாசம், ஜலாகாசம், மேகாகாசம் என்று ஆகாயம் நாலுவகை யாகின்றதோ அதுபோலவாம். (கஅ)

௩. ஜலாகாசத்தின் சொரூபம்.

[௩கக] घटावच्छिन्नखे नीरं यत्तत्र प्रतिबिंबितः ।
साभ्रनक्षत्र आकाशो जलाकाश उदीर्यते ॥ १९ ॥

---

* கக. சிலர் அத்வைதமதத்தை அநுசரித்துள்ள பக்ஷங்களில் ஜீவன் ஈசுவரன் சுத்தப்பிரஹ்மம் என மூன்றுவகை சேதனம் ஒப்பப்பட்டிருக்கின்றது. இதனுற்றான் வார்த்திகத்தில், க. சுத்தசேதனம், உ. ஈசுவரசேதனம், ௩. ஜீவசேதனம், ச. அவித்தை, ரு. அவித்தைக்கும் சேதனத்திற்கும் ஒன்றற்கொன்றுள்ள சம்பந்தம், சு. இவ்வைந்திற்கும் ஒன்றற்கொன்றுள்ள பேதம் என்னும் ஆறுபதார்த்தங்களும் உற்பத்தியில்லாதவைகளா யிருத்தலால் அநாதி எனப்படுகின்றன. அவற்றுள், சேதனத்திற்கு மூன்றுபேதமே சொல்லப்பட்டிருக்கின்றது. ஈண்டு வித்தியாரண்ணியசுவாமிகள் சேதனத்திற்கு நான்குபேதம் கூறியிருத்தல் வார்த்திகவசனத்திற்கு விரோதமாம். அன்றியும், மூன்றுசேதனங்களை ஒப்புதலாலும் முமுக்ஷுவிற்குப் பிரஹ்மஐக்கியஞானம் சம்பவிக்க அதிகமாகிய கூடஸ்தசேதனத்தைக் கற்பித்தலால் கௌரவதோஷமுமுண்டாம். அவ்வாறாயினும், கூடஸ்தனுக்கும் பிரஹ்மத்திற்கும் பெயர்மாத்திரமன்றி வேறு சிறிதும் வேற்றுமை யில்லை. அல்லது வித்தியாரண்ணியசுவாமிகள் திருக்குத்திருசியவிவேக மென்னும் கிரந்தத்தில் கூடஸ்தன் பாரமார்த்திகஜீவன், ஜாக்கிரத்திலுள்ள அந்தக்கரணப்பிரதிபிம்பிதன் வியாவகாரிகஜீவன், வியாவகாரிக ஜீவனிடத்து அத்தியஸ்தமாகிய சொப்பனத்திலுள்ளவன் பிராதிபாசிகஜீவன் என்றிவ்வாறு கூடஸ்தனிடத்து அந்தர்ப்பாவம் கூறியிருக்கின்றனர். ஆகையால் மூன்று சேதனங்களின் சித்தியால் வார்த்திகவசனத்திற்கு விரோத மில்லை. "மாயையாகிய பிரகிருதி ஜீவேசுவரர்களை ஆபாசமாகச் செய்கின்றது. மாயையும் அவித்தையும் தானே அதாவது பிரகிருதியே ஆகின்றது" என்பவைமுதலிய சுருதியர்த்தம் சம்பவித்தற்பொருட்டு நான்கு ஆகாயத்தின் திருஷ்டாந்தத்தால் நான்குவிதமாகிய சேதனத்தை ஒப்பிச் சுலபமாகச் ஜீவேசுவரர்களையும் அவற்றின் அதிஷ்டானத்தின் சொரூபத்தையுமறிவித்துப் பிரஹ்மாத்மஐக்கியம் நிச்சயிக்கப்பட்டிருக்கின்றது. ஆகையால் முற்கூறிய கௌரவதோஷம் அங்கீகரிக்கத்தக்கதன்று.

(அ-கை.)

* கஉ. கடாவச்சின்ன கடாகாசமும் அந்தக் கடத்தால் வரையப்படாத மகாகாசமுமாகிய இரண்டும் பிரசித்தமாயிருத்தலால் அவற்றைவிட்டு அப் பிரசித்தமாகிய ஜலாகாசத்தைக் கூறுகின்றார் :—

घटावच्छिन्नखे यत् नीरं तत्र प्रतिबिंबितः साभ्रनक्षत्रः आकाशः जलाकाशः उदीर्यते ॥

(சு-ம்.)

கடத்தால் வளைபட்ட ஆகாசத்தில் எந்த ஜல மிருக்கின்றதோ, அதில் பிரதிபிம்பித்த * கங. மேகம் நக்ஷத்திரங்களோடுகூடிய ஆகாயம் ஜலாகாய மென்று சொல்லப்படுகின்றது.

(வி-ம்.)

கடமாகிய உபாதியையுடைய ஆகாயத்திலுள்ள ஜலத்தில் பிரதிபிம் பித்த மேகநக்ஷத்திரங்களோடுகூடிய ஆகாயம் ஜலாகாய மெனப்படும். (கங)

ச. மேகாகாயத்தின் சொரூபம்.

[௬கச] महाकाशस्य मध्ये यन्मेघमंडलमीक्ष्यते ।
प्रतिबिंबतया तत्र मेघाकाशो जले स्थितः ॥ २० ॥

(அ-கை.)

மேகாகாயத்தைக் கூறுகின்றார் :—

महाकाशस्य मध्ये यत् मेघमंडलं ईक्ष्यते तत्र जले प्रतिबिंबतया स्थितः मेघाकाशः ॥

---

* கஉ. இப்படிச் சொல்லுதலால் கடத்திற்குள் உள்ள ஆகாயமும் எவ்வளவு ஆகாயத்தில் கட மிருக்கின்றதோ அதுவும் கடாகாயமெனச் சித்தித்தது.

* கங. ஜலத்தினால் நிரம்பிய கடத்திலுள்ள ஆகாயத்தின் பிரதிபிம்பம் கடத்திற்குள்ளிருக்கும் கடாகாயத்தினதாம் என்னுஞ் சங்கையை நிவிருத்திக்கும்பொருட்டு மேகநக்ஷத்திரங்களோடுகூடிய பிரதிபிம்பம் கொள்ளப்படும். மேகநக்ஷத்திரங்களோடுகூடிய ஆகாயத்தின் பிரதிபிம்பம் உண்டாகுதலால் வெளியிலுள்ள மகாகாயத்தினது பிரதிபிம்பமேயாம். அல்லது, முழங்காலளவு கடஜலத்தில் ஆழமுடைமை தோற்றுகின்றது. அவ்வாழமுடைமை கடத்தினுள்ளிருக்கும் ஆகாயத்திலில்லை ; ஆனால் வெளியிலுள்ள ஆகாயத்திலேயே இருக்கின்றது. இதனாலும் மகாகாயத்தின் பிரதிபிம்ப மெனப்படுகின்றதென் றறிக (கங)

(சு-ம்.)

மகாகாயத்தின் மத்தியில் எந்த மேகமண்டலம் காணப்படுகின்றதோ அம்மேகமண்டலத்திலுள்ள ஜலத்தில் பிரதிபிம்பத்தன்மையாக நிலைத்திருக்கும் ஆகாயம் மேகாகாயமெனப்படும். (உ0)

[௬உ௬] मेघांशरूपमुदकं तुषाराकारसंस्थितं ।
तत्र खप्रतिबिंबोऽयं नीरत्वादनुमीयते ॥ २१ ॥

(அ-கை.)

மேகஜலம் தோற்றுததா யிருத்தலால் அதில் ஆகாயத்தின் பிரதிபிம்பமுண்டாகு மென்னும் ஞானம் எப்படி யுண்டாகுமென் றாசங்கித்துக் கூறுகின்றார் :—

तुषाराकारसंस्थितं मेघांशरूपं उदकं तत्र अयं खप्रतिबिंबः नीरत्वात् अनुमीयते ॥

(சு-ம்.)

சூக்ஷ்மமான நீர்த்துளியாகிய மழைவடிவமாகச் செவ்வையாக நிலைத்துள்ள மேகத்தின் அம்சமாகிய ஜலம் எதுவோ அதிலுள்ள இந்த ஆகாயத்தின் பிரதிபிம்பம் ஜலத்தன்மையால் அநுமானஞ் செய்யப்படுகின்றது.

(வி-ம்.)

மேகத்திலுள்ள ஜலம் பிரத்தியக்ஷமாகத் தோற்றாவிடினும், மழைவடிவமாகிய காரியத்தால் மேகத்தில் அந்த மழையின் உபாதானமாகிய சூக்ஷ்ம அவயவமான துளிவடிவ ஜலமிருக்கின்றதென்று * கச. அநுமானத்தா லறியப்படுகின்றது. நீரின் இருப்பாகிய இலிங்கத்தினாலேயே அந்த ஜலம் பிரதிபிம்பமுடையதாம் என்பதும் அநுமானத்தினாலறியப்படுகின்றது. அவ்வநுமான மிதுவாம் :—விவாதத்திற்கு விஷயமாகிய மேகஜலம் ஆகாயத்தின் பிரதிபிம்பமுடையதாகத்தக்கதாம் ; ஜலமாயிருத்தலால் ; கடத்திலுள்ள ஜலத்தைப்போல என்பதாம். இவ்வநுமானத்தால் மேகத்தினம்சமாகிய ஜலத்திலும் ஆகாயத்தினது பிரதிபிம்பத்தின் இருப்பு அறியப்படுகின்றது என்பது பொருள். (உக)

---

* கச. இவ்வநுமானம் இதுவாம் :—மேகங்களில் ஜலமுண்டு ; மழையாகிய காரியமுடையனவா யிருத்தலால் ; எங்கெங்கே மழையுண்டோ அங்கங்கே அவசியம் ஜலமுண்டு; மலையுருவியினின்றும் விழாநின்ற நீர்த்துளிகளோடுகூடிய பருவத்தைப் போல என்பது.

௫. கூடஸ்தனது சொரூபம்.

[௩௧௬] अधिष्ठानतया देहद्वयावच्छिन्नचेतनः ।
कूटवन्निर्विकारेण स्थितः कूटस्थ उच्यते ॥ २२ ॥

(அ-கை.)

இப்படித் திருஷ்டாந்தவடிவ நான்கு ஆகாயங்களையும் கூறி, இப்போது தார்ஷ்டாந்தசேதனத்தில் முதலிற் சொல்லப்பட்ட கடஸ்தானத்துக் கூடஸ்தசேதனத்தைக் கூறுகின்றார் :—

अधिष्टानतया देहद्वयावच्छिन्नचेतनः ॥

(சு-ம்.)

அதிஷ்டானமா யிருத்தலால் இரண்டு தேகங்களாலும் வரைந்து கொள்ளப்பட்ட சேதனம் கூடஸ்த னெனப்படும்.

(வி-ம்.)

பஞ்சீகிருத அபஞ்சீகிருத பூதங்களின் காரியமாயிருத்தலால் ஸ்தூல சூக்ஷ்மமாகும் அவித்தையினாற் கற்பிக்கப்பட்ட இரண்டு தேகங்களுக்கும் ஆதாரமாயிருத்தலால் அவற்றால் வரையப்பட்ட ஆத்மா ஜீவசாக்ஷியாகிய கூடஸ்த னெனப்படுகின்றது.

(அ-கை.)

அந்த ஆத்மாவில் கூடஸ்தனென்னும் சத்தம் பிரவிருத்தித்தற்கு ஏதுவைக் கூறுகின்றார் :—

कूटवत निर्विकारेण स्थितः कूटस्थः उच्यते ॥

(சு-ம்.)

கூடமாகிய கொல்லன்சம்மட்டியைப்போல விகாரமில்லாமல் நிலைத்திருக்கின்றது. ஆகையால் கூடஸ்த னென்று சொல்லப்படுகின்றது. (௨௨)

௬. சம்சாரியாகிய ஜீவனது சொரூபம்.

[௩௧௭] कूटस्थे कल्पिता बुद्धिस्तत्र चित्प्रतिबिंबकः ।
प्राणानां धारणाज्जीवः संसारेण स युज्यते ॥ २३ ॥

(அ-கை.)

இப்படிக் கூடஸ்தனைச் சொல்லி, ஜீவன் கூடஸ்தனிடத்திற் கற்பிக்கப்பட்ட புத்தியிற் பிரதிபிம்பமா யிருத்தலின் அந்தக் கூடஸ்தனுக்குச் சமா

னமுள்ளதா யிருத்தலால் அந்த ஜலாகாசஸ்தானத்து ஜீவனைச் சொல்லு கின்றார் :—

कूटस्ते कल्पिता बुद्धिः तत्र चित्प्रतिबिंबकः ॥

(௬-ம்.)

கூடஸ்தனிடத்துக் கற்பிக்கப்பட்ட புத்தி யாதோ அதிலிருக்கும் பிர ஹ்மசேதனத்தின் பிரதிபிம்பமாகிய * கடு. சிதாபாசன் ஜீவனும்.

---

* கடு. கடாகாசத்தை ஆசிரயித்துள்ள ஜலம்நிரம்பியகடத்தில் மகாகாயத்தின் பிரதிபிம்பம்போலக் கூடஸ்தனிடத்தில் கற்பிக்கப்பட்ட ஸ்தூலதேகமாகிய கடத்தி லுள்ள அந்தக்கரணம் அல்லது அவித்தையின் கூறென்னும் ஜலத்திலுள்ள வியாபக சேதனத்தின் பிரதிபிம்பமாகிய சிதாபாசன் அதிஷ்டானகூடஸ்தனோடு ஜீவனெனப் படுவன்.

இங்கே சிலர் சங்கிக்கின்றார்கள்:—உருவமில்லாத ஆகாயத்தின் பிரதிபிம்பம் உருவமுள்ள ஜலத்திலும் உருவமுள்ள சிவப்புக்குணத்தின் பிரதிபிம்பம் உருவமுள்ள கண்ணாடிமுதலியவற்றிலும் காணப்படுகின்றது. என்றாலும் உருவமில்லாத உபாதி யில் பிரதிபிம்பம் காணப்படுகிறதில்லை. ஆகையால் உருவமில்லாத அதாவது சக்ஷு இந்திரியத்திற்கு விஷயமாகாத அந்தக்கரணத்திலாவது அல்லது அவித்தையின் அம் சத்திலாவது உருவமில்லாத சேதனத்தின் பிரதிபிம்பம் சம்பவியாது.

இச்சங்கைக்கு இது சமாதானமாம்:—உருவமுள்ள வஸ்துவில் அவசியம் பிரதி பிம்ப முண்டாகு மென்பது நியமமன்று;ஏனெனின்,நீலமுதலிய உருவமுள்ள கடமுத லியவற்றில்பிரதிபிம்பம் காணப்படாமையால்,சொச்சத்திரவியத்தில் அவசியம் பிரதி பிம்ப முண்டா மென்பது நியமமாம். ஆகையால் உருவமுள்ளவஸ்து பிரதிபிம்பமுடை யதாகத்தக்கதாம், உருவமுடையதாயிருத்தலால் என்னும் அநுமானம் உருவமுடைய வஸ்துவில் பிரதிபிம்பத்திற்குச் சாதகமன்று; ஏனெனின், யாது யாது உருவமுடை யதோ அது அது பிரதிபிம்பமுடையதாம் என்னும் வியாப்தி கருமைமுதலிய உருவமுடைய கடமுதலியவற்றில் பிறழ்தலால். சொச்சவஸ்து பிரதிபிம்பமுடைய தாகத்தக்கதாம்; சொச்சமாயிருத்தலால் என்னும் அநுமானம் சொச்சத்தில் பிரதி பிம்பமுடைமைக்குச் சாதகமாம். ஏனெனின், யாது யாது சொச்சமோ அது அது பிரதிபிம்பமுடையதாம் என்னும் வியாப்திக்கு வியபிசாரமில்லாமையால்.

இப்படி அந்தக்கரணம் அல்லது அவித்தையின் அம்சம் உருவமில்லாததாயினும், சத்துவகுணத்தோடுகூடியதன்மையால் சொச்சமாம்; ஆதலால் சேதனத்தின் பிரதிபிம்பமுடையதாம். இங்கே இது அநுமானமாம்:—அந்தக்கரணம் அல்லது அவித்தையின் அம்சம் சேதனத்தின் பிரதிபிம்பமுடையதாகத்தக்கதாம்; சொச்ச மாயிருத்தலால்; கண்ணாடிமுதலியவற்றைப்போல.

அன்றியும், விசாரித்துப்பார்க்குமிடத்துச் சுருதியிற் பிரதிபாதிக்கப்பட்ட அர்த் தத்தில் தர்க்கஞ்செய்தல் தகுதியின்மையேயாம்; திருஷ்டகற்பனையாகிய யுக்தியா னது புருஷனது புத்திகற்பனையாயிருத்தலால் அதைச் சுருதி அர்த்தத்தில் பொருத் துதல் பொருந்தாது. ஏனெனின், சுருதியிற் பிரதிபாதிக்கப்பட்ட சுவர்க்கமுதலிய

(அ-கை.)

அந்தச் சேதனத்தின் பிரதிபிம்பம் ஜீவனென்னும் சத்தத்திற்கு வாச்சியமாவதில் ஏதுவைக் கூறுகின்றார் :—

प्राणानां धारणात् जीवः ॥

(சு-ம்.)

* கசு. பிராணன்களைத் தரித்தலால் ஜீவ னென்று சொல்லப்படுகின்றது.

(அ-கை.)

அப்படியானால் கூடஸ்தருக்கு வேறாக ஜீவனைக் கற்பித்தல் பிரயோஜனமின்மையாமென் றாசங்கித்து, விகாரமில்லாத கூடஸ்தருக்குச் சம்சாரம் சம்பவியாமையால் தோற்றுகின்ற சம்சாரத்தை நிருவகித்தற்பொருட்டு அந்த ஜீவன் அங்கிகரிக்கத்தக்கதாம் என்று கூறுகின்றார் :—

सः संसारेण युज्यते ॥

(சு-ம்)

அந்த ஜீவன் ஜனனமரணமுதலிய சம்சாரத்தோடு கூடுகிறான். (உ௩)

க. ஜீவகூடஸ்தர்களின் அந்நியோந்நியாத்தியாசம் ௩௧அ—௩௩க.

க. திருஷ்டாந்த தார்ஷ்டாந்தங்களில் அத்தியாசத்தின் சொரூபம்.

[௩௧அ] जलव्योम्ना घटाकाशो यथा सर्वस्तिरोहितः ।
तथा जीवेन कूटस्थः सोऽन्योऽन्याध्यासं उच्यते ॥ २४ ॥

---

வற்றில் திருஷ்டகற்பனை இல்லை. ஆகையால் "ஜீவேசுவரர்களை ஆபாசமாகச் செய்கின்றது." "நிழல் வெயில்களைப்போல அதாவது பிரதிபிம்பத்தையும் சூரியனையும் போல விலக்ஷணமாக ஜீவனையும் பரமாத்மாவையும் பிரஹ்மவித்துக்கள் சொல்லுகின்றனர்." "உருவங்கள்தோறும் அதாவது உபாதிகள்தோறும் பிரதி உருவம் (பிரதிபிம்பம்) உண்டாயிற்று" "ஒரே பூதாத்மா பூதங்கள்தோறும் உள்ளதாய் ஜலசந்திரனைப்போல ஒருவிதமாகவும் பலவிதமாகவுங் காணப்படுகின்றது." என்னும் இவைமுதலிய சுருதியாற் கூறியதும், "இதனுற்றான் (ஜலத்தின்கணுள்ள) சூரியன் முதலியவற்றைப்போல் உவமையாம்." என்னுஞ் சூத்திரத்திற்கூறியதுமாகிய சிதாபாசன் ஆரோபத்தில் ஒப்பவேண்டியதாம்.

*கசு. பிராணதாரணத்திற்கு ஜீவன மென்று பெயராம். பிராணன் வெளிப்பட்டால் நிலைக்கக்கூடாதனவும், பிராணனைச் சரணமடைந்து பிராணனென்னும் பெயரையடைந்தனவுமாகிய வாக்குமுதலிய இந்திரியங்கள் சரீரத்தில் நிலைத்தற்கு ஏதுவாகுந்தன்மை பிராணதாரணமாம். இந்தப்பிராண இந்திரியசம்வாதம் பிராஹ்மண மென்னும் பிரகதாரணியகத்தின் பிரகரணத்தில் ஸ்பஷ்டமாம். அந்தப் பிராணனது அதாவது இந்திரியங்களினது தாரணமாகிய பிராணனது வியாபாரத்தின் சந்நிதிமாத்திரத்தினுல் பிரேரகத்தன்மை கூடஸ்தனிடத்தில் கற்பிதமாகிய புத்தியில் பிரதிபிம்பமாகிய சிதாபாசனுக் கிருக்கின்றது. ஆதலின் பிராணதாரணத்தால் இந்தச் சிதாபாசன் ஜீவ னெனப்படுவன்.

(அ-கை.)

அப்படியானால் ஜீவனுக்கு வேறாகக் கூடஸ்த னிருக்கும்பக்ஷத்தில் ஏன் தோற்றவில்லை என்றாசங்கித்து, ஜீவனால் மறைக்கப்பட்டிருத்தலால் தோற்றவில்லை யென்று திருஷ்டாந்தத்தோடு கூறுகின்றார் :—

यथा जलव्योम्ना घटाकाशः सर्वः तिरोहितः तथा जीवेन कूटस्थः ॥

(சு-ம்.)

எப்படி ஜலாகாயத்தினால் கடாகாயமுழுவதும் மறைக்கப்பட்டிருக்கின்றதோ அப்படியே ஜீவனால் கூடஸ்தன் மறைக்கப்பட்டிருக்கின்றது.

(அ-கை.)

அப்படியானால் இந்தச் சிதாபாசனால் கூடஸ்தரின் திரோதானம் சாஸ்திரங்களில் ஓரிடத்துஞ் சொல்லப்படவில்லையே என்றாசங்கித்து, அந்த முற்கூறிய திரோதானம் அந்நியோந்நியத்தியாசசப்தத்தால் சாஸ்திரங்களிற் சொல்லப்பட்டிருத்தலால் இந்தத் திரோதானம் ஓரிடத்துஞ் சொல்லப்படவில்லை யென்று சொல்லுதல் பொருந்தாதென்று கூறுகின்றார் :—

सः अन्योऽन्याध्यासः उच्यते ॥

(சு-ம்.)

அந்த ஜீவனாலாம் கூடஸ்தனது திரோதானம் சாரீரகபாஷியமுதலிய சாஸ்திரங்களில் அந்நியோந்நியாத்தியாச மென்று சொல்லப்படுகின்றது. (௨௪)

௨. அத்தியாசத்திற்குக் காரணமான அவித்தை.

[௬௧௯] अयं जीवो न कूटस्थं विविनक्ति कदाचन ।
अनादिरविवेकोऽयं मूलाविद्येति गम्यताम् ॥ २५ ॥

(அ-கை.)

அப்படியானால் இந்த ஜீவனால் கூடஸ்தர் திரோதானமாதலே அத்தியாசமாகுமாயின், இவ்வத்தியாசத்திற்குக் காரணமாகிய அவித்தை சொல்லவேண்டியதாகுமே என்றாசங்கித்துச் சம்சாரதசையில் ஜீவகூடஸ்தர்களின் பேதம் தோற்றாமையே அவித்தையா மென்று கூறுகின்றார் :—

अयं जीवः कदाचन कूटस्थं न विविनक्ति अयं अनादिः अविवेकः मूलाविद्या इति गम्यताम् ॥

(சு-ம்.)

இந்த ஜீவன் ஒருகாலும் கூடஸ்தனது சொரூபத்தை விவேகிக்கிற தில்லை அதாவது தன்னினின்றும் வேறுபிரித்தறிகிறதில்லை. இந்த அநாதி காலத்து அஞ்ஞானம் *௧௭. மூலாஞ்ஞான மென்று அறியத்தக்கது.(௨௫)

௩. அவித்தையின் இரண்டுபிரிவும், ஆவரணத்தின் சொரூபமும்.

[௩௨0] विक्षेपावृतिरूपाभ्यां द्विधाऽविद्या व्यवस्थिता ।
न भाति नास्ति कूटस्थ इत्यापादनमावृतिः ॥ २६ ॥

(அ-கை.)

முன் ௩௧௭-வது சுலோகத்திற் கூறிய ஜீவனுக்கு அவித்தையினால் கற்பிக்கப்பட்டதன்மையை விளக்குதற்பொருட்டு அவித்தையை விவாதஞ் செய்கின்றார் :—

विक्षेपाऽऽवृतिरूपाभ्यां द्विधा अविद्या व्यवस्थिता ॥

(சு-ம்.)

விக்ஷேபம் ஆவிருதி என்னும் வடிவமாக இரண்டுவகையாக அவித்தை நிலைத்திருக்கின்றது.

(அ-கை.)

* ௧அ. விக்ஷேபத்திற்கு ஏதுத்தன்மையாக அங்கீகரிக்கப்பட்டிருத்தலால் ஆவிருதியாகிய ஆவரணத்தை முதலில் அறிவிக்கின்றார் :—

---

*௧௭. விசாரிக்குமிடத்து எது இருக்கிறதில்லையோ, அல்லது எது ஆவரண விக்ஷேபசக்திகளையுடைய அநாதி உண்மைவடிவமா யிருக்கிறதோ அது அவித்தை எனப்படும். அந்த அவித்தை மூலாவித்தை தூலாவித்தை என இரண்டுவகையாம். பிரஹ்மாத்மசொரூபத்தை மறைக்கும் அவித்தை மூலாவித்தையாம். கடமுதலிய வற்றால் அவச்சின்னசேதனத்தை மறைக்கும் அதாவது சுத்திவெள்ளிமுதலியவற்றின் உபாதானமாகிய அவித்தை தூலாவித்தையாம். அவற்றுள் காரியகாரணபேதத்தால் மூலாவித்தை இரண்டுவகையாம், ஒன்றில் மற்றொன்றன் ஞானமுதலியவற்றை யுண்டாக்குவது காரணவடிவ மூலாவித்தை. ஒன்றில் மற்றொன்றன் ஞான முதலிய சொரூபம் காரியவடிவ மூலாவித்தை. அக்காரியவடிவமும் அவித்தை, அஸ்மிதை, இராகம், துவேஷம், அபிநிவேசம் என்னும் பஞ்சக்கிலேசவடிவமாம். இந்த மேற்சொன்ன அவிவேகவடிவ மூலாவித்தை எதுவோ அது முதற்கிலேசவடிவ காரியாவித்தையாம். அது காரணவடிவ மூலாவித்தையின்றி யமையாததாம்; ஆதலால் அதனை முன்னிட்டதேயாம். பஞ்சக்கிலேசத்தின் இலக்ஷணம் மேல் ௩௯௯-வது சுலோகத்தின் டிப்பணத்தில் சொல்லப்படும். இக்குச் சொல்லப்பட்ட மூலாவித்தை பிரத்தியக்ஷ அநர்த்தத்திற்கு ஏதுவாயிருத்தலால் காரியவடிவமேயாம்.

*௧அ. கர்த்திருத்தன்மை போக்திருத்தன்மைமுதலிய சோகவடிவ சம்சாரத்தோடுகூடிய தேகாதிப்பிரபஞ்சமும் அதன் ஞானமும் விக்ஷேப மெனப்படும்.

कूटस्थः "न भाति" "न अस्ति" इति आपादनं आवृतिः ॥

(சு-ம்.)

கூடஸ்தன் தோற்றமில்லை, இல்லை என்றிவ்வாறு சம்பாதித்தல் ஆவரணமாம்.

(வி-ம்.)

கூடஸ்தன் தோற்றமில்லை, இல்லை என்னும் வியவகாரத்திற்கு ஏது ஆவரண மென்பது பொருள். (உசு)

ச. அவித்தை ஆவரணங்களின் இருப்பில் சுவாநுபூதிப்பிரமாணம்.

[௩உக] अज्ञानी विदुषा पृष्टः कूटस्थं न प्रबुध्यते ।
न भाति नास्ति कूटस्थ इति बुद्ध्वा वदत्यपि ॥ २७ ॥

(அ-கை.)

அப்படியானால் அவித்தையும் அதனாலாகிய ஆவரணமும் இருக்கின்றன வென்பதில் பிரமாணம் யாதென் றாசங்கித்து,உலகத்தாரின் அநுபவமே பிரமாண மென்று கூறுகின்றார்:—

विदुषा पृष्टः अज्ञानी "कूटस्थं न प्रबुध्यते। कूटस्थः न भाति न अस्ति" इति बुद्ध्वा वदति अपि ॥

(சு-ம்.)

அஞ்ஞானியானவன் ஞானியினால் வினவப்பட்டவனாய்க் "கூடஸ்தனை அறியேன், கூடஸ்தன் தோற்றமில்லை, இல்லை" யென்றறிந்து சொல்லுகிறான்.

(வி-ம்.)

ஞானியினால் "கூடஸ்தனை அறிவாயா?" என்று கேட்கப்பட்ட அஞ்ஞானி "அந்தக் கூடஸ்தனை அறியேன்" என்று அஞ்ஞானத்தை அநுபவித்துச் சொல்லுகிறான். இது அவித்தையின் அநுபவமாம். அஞ்ஞானத்தின் அநுபவத்தைமாத்திரமே சொல்லுகிறானென்றில்லை ;"கூடஸ்தன் இல்லை, தோற்றமில்லை" என்று கூடஸ்தனது அபாவத்தையும் தோற்றமின்மையையும் அநுபவித்துக் கூறுகின்றான். இது ஆவரணத்தின் அநுபவமாம். ஆகையால் அவித்தை ஆவரணம் இரண்டிலும் அநுபவவடிவப்பிரமாண மிருக்கின்றது. (உஎ)

[௩௨௨] स्वप्रकाशे कुतोऽविद्या तां विना कथमावृतिः ।
इत्यादितर्कजालानि स्वानुभूतिर्ग्रसत्यसौ ॥ २८ ॥

(அ-கை.)

அப்படியானால் உங்கள் வேதாந்தமதத்தில் ஆத்மா சொப்பிரகாசமாயிருத்தலால் அந்தச் சொப்பிரகாச ஆத்மாவில் அவித்தை பொருந்தாது; ஏனெனின், ஒளி இருளென்னு மிரண்டையும்போல ஒன்றற்கொன்று விரோதசுபாவமுடையனவா யிருத்தலின் அவ்வாத்மாவிற்கும் அவித்தைக்கும் சம்பந்தமில்லாமையால். அன்றியும், அவித்தை யில்லாமற்போகவே அதனாலாகிய ஆவரணம் தக்கத்தினாலும் நிரூபிக்கத்தகாததாம். அந்த ஆவரணம் இல்லாமற்போகவே அந்த ஆவரணவடிவமாகிய காரணத்தையுடைய விக்ஷேபமாகிய சம்சாரம் இல்லாமற்போகும். விக்ஷேப மில்லாமற்போகவே ஞானத்தினால் நிவிருத்திக்கத்தக்க அநர்த்தமில்லாமையால் ஞானத்தின் வியர்த்தத்தன்மையுண்டாகும். அந்த ஞானத்தின் வியர்த்தத்தன்மையால் அந்த ஞானத்தைப் பிரதிபாதிக்கும் வேதாந்தசாஸ்திரம் அப்பிரமாணமாம் என்று சங்கித்து, இவையாவும் முன் ௩௨௧-வது சுலோகத்தில் முற்கூறிய லோகாநுபவத்தால் பாதிக்கப்பட்டனவாமென்று கூறுகின்றார்:—

स्वप्रकाशे अविद्या कुतः तां विना आवृतिः कथं इत्यादितर्कजालानि असौ स्वानुभूतिः ग्रसति ॥

(சு-ம்.)

சுவப்பிரகாச ஆத்மாவினிடத்தில் அவித்தை * ௧௧. சூரியனிடத்து இருள்போல எங்கிருந்துண்டாகும்? அந்த அவித்தையின்றி ஆவரணம் எப்படியுண்டாம்? என்னும் இவைமுதலிய தர்க்கக்கூட்டங்களை இந்தச் சுவாநுபூதி (௩௨௧-ல் கூறிய அநுபவப்பிரமாணம்) விழுங்குகின்றது.

---

* ௧௧. "சூரியனிடத்திருள்போல" என்னும் திருஷ்டாந்தம் சித்தாந்தத்திற்குச் சரியானதன்று. ஏனெனின், சூரியன்முதலிய பிரகாசங்கள் அக்கினியின் விசேஷவடிவமாம். ஆதலால் அவற்றிற்கோ விருத்தியாரூட விசேஷசைதந்நியத்தோடு அஞ்ஞானத்திற்கு விரோதமிருத்தல்போல அந்தகாரத்தோடு விரோத முண்டு. அங்ஙனமாயினும், கட்டை முதலிய பொருள்களில் அநுகதமாயுள்ள அக்கினியின் சாமாந்நியவடிவத்திற்குச் சுழுத்திமுதலியவற்றிற் பிரகாசிக்கும் சாமாந்நியசைதந்நியத்தோடு அஞ்ஞானத்திற்கு விரோதமில்லாததுபோல விரோத மில்லை. ஆதலால் திருஷ்டாந்தம் ஒப்புமையில்லாததாம். சொப்பிரகாசத்தில் அவித்தை சம்பவிக்குமென்பதில் சுவாநுபூதிவடிவப் பிரபலப்பிரமாண மிருக்கின்றது.

(வி-ம்.)

"திருஷ்டமாகிய அநுபவிக்கப்பட்ட வஸ்துவில் அசம்பவமில்லை" என்னும் ஞானவலியால் அநுபூதி விகற்பக்கூட்டங்களை விநாசஞ்செய்கின்றது என்பது தாற்பரியம். (உ௮)

௫. அநுபவவிருத்த தருக்கம் ஆதரிக்கத்தக்கதாகாமை.

[௩உ௩] स्वानुभूतावविश्वासे तर्कस्याप्यनवस्थितेः ।
कथं वा तार्किकंमन्यस्तत्त्वनिश्चयमाप्नुयात् ॥ २९ ॥

(அ-கை.)

அப்படியானால் ௩உ௧-ல் கூறியஅநுபவம் ௩உஉ-ல் கூறிய தர்க்கத்தின் விரோதத்தால் ஆபாசவடிவமாயிருத்தலின் அந்த அநுபவத்தால் தத்துவ நிச்சயம் உண்டாகாதென் றாசங்கித்து, அநுபவத்திற்குப் பிரமாணத்தன்மையை அங்கீகரியாவிடத்துத் தர்க்கமாத்திரத்திற்கு நிச்சயிக்குந்தன்மை உன்னால் மாத்திரம் அங்கீகரிக்கப்பட்டிருத்தலால் தார்க்கிகனாகிய உனக்குத் தத்துவநிச்சயம் ஓரிடத்து முண்டாகா தென்று கூறுகின்றார்:—

स्वानुभूतौ अविश्वासे तर्कस्य अपि अनवस्थितेः तार्किकंमन्यः तत्त्वनिश्चयं कथं वा आप्नुयात् ॥

(சு-ம்.)

சுவாநுபூதியில் விசுவாசமில்லாதபோது தர்க்கமும் நிலையாமையால், தன்னைத் தர்க்கமதாநுசாரி யென்று மதிக்கும் நீ வஸ்துசொரூபத்தின் நிச்சயத்தை எப்படி அடைவாய்? (உ௯)

௬. அநுபவத்தை அநுசரித்த தருக்கத்தினை ஆதரித்தல்.

[௩உ௪] बुद्ध्यारोहाय तर्कश्चेदपेक्षेत तथा सति ।
स्वानुभूत्यनुसारेण तर्क्यतां मा कुतर्क्यताम् ॥ ३० ॥

(அ-கை.)

அப்படியானால் அநுபவம் தத்துவத்தின் நிச்சயம் செய்வதாகவே இருக்கின்றது. அவ்வாறாயினும், அநுபவிக்கப்பட்ட அர்த்தமாகிய தத்துவம் சம்பவமாதலை அறியும்பொருட்டுத் தர்க்கமும் அங்கீகரிக்கத்தக்கதாமென்னும் ஆசங்கையை அநுவதித்து, அப்போது அநுபவத்தை அநுசரித்தே தர்க்கம் வர்ணிக்கத்தக்கதா மன்றி அவ்வநுபவத்திற்கு விரோதமாக வன்றென்று கூறுகின்றார்:—

बुद्ध्यारोहाय तर्कः अपेक्षेत चेत् तथा सति स्वानुभूत्यनुसारेण तर्क्यतां मा कुतर्क्यताम् ॥

(சு-ம்.)

புத்தியிற் பதியும்பொருட்டுத் தர்க்கம் அபேக்ஷிக்கப்படுமே யெனின், அப்படியிருக்கினும் தனது அநுபவாநுசாரமாகத் தர்க்கம் செய்யவேண்டும்; குதர்க்கம் செய்யலாகாது. (௩௦)

எ. அவித்தையின் அநுபவத்தின் ஸ்மரணத்தோடு பலிதார்த்தம்.

[௩௨௫] स्वानुभूतिरविद्यायामावृतौ च प्रदर्शिता ।
अतः कूटस्थचैतन्यमविरोधीति तर्क्यतां ॥ ३१ ॥

(அ-கை.)

அப்படியானல் எதனை அநுசரித்துத் தர்க்கம் வர்ணிக்கத்தக்கதாமோ அவ்வநுபவம் யாதென்று கேட்கும்விருப்பத்தில் முன் ௩௨௧-வது சுலோகத்தில் கூறிய அவித்தை ஆவரணங்களைக் கோசரிக்கும் அதாவது விஷயஞ் செய்யும் அநுபவத்தை நினைப்பூட்டுகின்றான் :—

स्वानुभूतिः अविद्यायां च आवृतौ प्रदर्शिता ॥

(சு-ம்.)

சுவாநுபவம் அவித்தையிலும் ஆவணரத்திலும் முன் காட்டப்பட்டது.

(அ-கை.)

சித்தித்த அர்த்தத்தைக் கூறுகின்றார் :—

अतः "कूटस्थचैतन्यं अविरोधि" इति तर्क्यताम् ॥

(சு-ம்.)

ஆகையால் கூடஸ்தசைதந்நியம் அவித்தை ஆவரணங்களோடு விரோதமில்லாததாம் என்று தர்க்கம் செய்யவேண்டும். (௩௧)

அ. சுலோகம் ௩௨௪-ல் கூறிய தர்க்கத்தின் சொரூபமும் அவ்வித்தையின் விரோதமும் விவேகமும்.

[௩௨௬] तच्चेद्विरोधि केनेयमावृतिर्ह्यनुभूयताम् ।
विवेकस्तु विरोध्यस्यास्तत्त्वज्ञानिनि दृश्यताम् ॥ ३२ ॥

(அ-கை.)

அவ்வநுபவாநுசாரமாகிய தர்க்கத்தையே உருவகஞ்செய்து காட்டுகின்றார் :—

तत् विरोधि चेत् । इयम् आवृतिः केन अनुभूयताम् हि ॥

(சு-ம்.)

அந்தக் கூடஸ்தசைதந்யம் விரோதமுள்ளதா யிருந்தால் இந்த ஆவரணம் எதனால் அநுபவிக்கப்படுகின்றது.

(வி-ம்.)

அவித்தை ஆவரணங்களுக்குச் சாதகசைதந்யமே அந்த அவித்தை ஆவரணங்களுக்கு விரோதியாயிருக்கின், கூடஸ்தனை நான் அறியேன் என்னும் வடிவமுள்ள அவித்தையின் தோற்றம் உண்டாகாது. தோற்றுகின்றமையால் கூடஸ்தன் அவித்தைக்கு விரோதியாகா தென்பது தாற்பரியம்.

(அ-கை.)

அப்படியானால் அவித்தைக்கு விரோதி யாது ? எனக் கூறுகின்றார் :—

विवेकः तु अस्याः विरोधी ॥

(சு-ம்.)

விவேகமோ இந்த அவித்தைக்கு விரோதமுள்ளதாம்.

(வி-ம்.)

உபநிஷத்துக்களின் விசாரத்தாலுண்டாகிய ஞானம் அவித்தைக்கு விரோதியாம்.

(அ-கை.)

அங்ஙனமாயின், விவேகம் அவித்தைக்கு விரோதமுடையதாதல் எவ்விடத்துக் காணப்படுகின்றதெனக் கூறுகின்றார் :—

तत्त्वज्ञानिनि दृश्यताम् ॥

(சு-ம்

தத்துவஞானியினிடத்து அந்த விவேகம் அவித்தைக்கு விரோதமுடையதாதலைக் கண்டுகொள்க. (௩௨)

௯. சுத்திதிருஷ்டாந்தத்தோடுகூடிய விக்ஷேபத்தினது அத்தியாசத்தின் சொரூபம்.

[௩௨௭] अविद्यावृतकूटस्थे देहद्वययुता चितिः ।
शुक्तौ रूप्यवदध्यस्ता विक्षेपाध्यास एव हि ॥ ३३ ॥

(அ-கை.)

இப்படி அவித்தையையும் ஆவரணத்தையுங்காட்டி விக்ஷேபத்தின் அத்தியாசத்தைக் கூறுகின்றார் :—

अविद्यावृतकूटस्थे शुक्तौ रूप्यवत् अध्यस्ता देहद्वययुता चितिः विक्षेपाध्यास एव हि ॥

(சு-ம்.)

அவித்தையினால் மறைக்கப்பட்ட கூடஸ்தனிடத்தில் சுத்தியில் வெள்ளிபோல அத்தியஸ்தமாகிய இரண்டு தேகங்களோடுகூடிய சிதாபாசன் விக்ஷேபத்தின் அத்தியாசமேயாம்.

(வி-ம்.)

முன் ௩௨௧-ல் கூறிய அவித்தையையும் ஆவரணத்தையுமுடைய கூடஸ்தனாகிய பிரத்யகாத்மாவினிடத்து ஆரோபிக்கப்பட்ட ஸ்தூலசூக்ஷ்ம சரீரங்களோடுகூடிய சிதாபாசன் விக்ஷேபாத்தியாசமா மென்பது பொருள். (௩௩)

௧௦. விக்ஷேபாத்தியாசம் சுத்தியிலுள்ள அத்தியாசத்தோடு சமமாதல் அதாவது சாமாந்யாம்சம் தோற்றுதல்.

[௩௨அ] इदमंशश्च सत्यत्वं शुक्तिगं रूप्य ईक्ष्यते ।
स्वयंत्वं वस्तुता चैवं विक्षेपे वीक्ष्यतेऽन्यगम् ॥ ३४ ॥

(அ-கை.)

இப்படி விக்ஷேபத்தின் அத்தியாசவடிவத்தன்மை சித்திக்கும்பொருட்டுச் சுத்திரஜதத்தின் அத்தியாசத்தினது சமத்தன்மையைக் காட்டுகின்றார் :—

शुक्तिगं इदमंशः च सत्यत्वं रूप्ये ईक्ष्यते । एवं अन्यगं स्वयंत्वं च वस्तुता विक्षेपे वीक्ष्यते ॥

(சு-ம்.)

சுத்தியிலுள்ள இது என்னும் அம்சமும், சத்தியத்துவமும் வெள்ளியில் காணப்படுகின்றன. இப்படி வேறிடமாகிய கூடஸ்தனிடத்திலுள்ள தானென்னுந்தன்மையும், வாஸ்தவத்தன்மையும் விக்ஷேபத்தில் காணப்படுகின்றன.

(வி-ம்.)

சுத்தியிலுள்ள எதிரிட வர்த்தமானகாலங்களோடு *௨௦. சம்பந்தத்தன்மை பாதிக்கப்படாமை என்பவை ஆரோபிக்கப்பட்ட வெள்ளியில் தோற்றுவதுபோலத் தானுகுந்தன்மையும் வாஸ்தவத்தன்மையும் கூடஸ்தனிடத்தி லிருக்கின்றன. அவை ஆரோபிக்கப்பட்ட சிதாபாசனிடத்தில் தோற்றுகின்றன என்பது பொருள். (௩௪)

௧௧. விக்ஷேபாத்தியாசத்திற்குச் சுத்தியிலுள்ள இரஜதாத்தியாசத்தோடு விசேஷாம்சத்தின் தோற்றமின்மையால் சமத்தன்மை.

[௩௨௧] नीलपृष्ठत्रिकोणत्वं यथा शुक्तौ तिरोहितम् ।
असंगानंदताद्येवं कूटस्थेऽपि तिरोहितम् ॥ ३५ ॥

(அ-கை.)

இப்படிச் *௨௧. சாமாநிய அம்சத்தினது தோற்றத்தின் சமத்தன்மையைச் சுத்தியும் கூடஸ்தனுமாகிய இரண்டு இடத்தைக் காட்டி விசேஷ *௨௨. அம்சத்தினது தோற்றமின்மையின் சமத்தன்மையைக் காட்டுகின்றார்:—

नीलपृष्ठत्रिकोणत्वं यथा शुक्तौ तिरोहितम् । एवं कूटस्थे अपि असंगाऽऽनंदतादितिरोहितम् ॥

(சு-ம்.)

கருப்புமுதுகு முக்கோணம் என்னும் இவற்றோடுகூடியதன்மையாகிய விசேஷஅம்சம் எப்படிச் சுத்தியில் அவித்தையினுல் மறைக்கப்பட்டிருக்கின்றதோ, அப்படிக் கூடஸ்தனிடத்தும் அசங்கத்தன்மை ஆநந்தத்தன்மைமுதலிய விசேஷஅம்சம் மறைக்கப்பட்டிருக்கின்றது. (௩௫)

---

*௨௦. இதுவெனும் வடிவ இதம் (இது) அம்சம்.

*௨௧. எது பிராந்தியோடு தோற்றுகின்றதோ எதன் தோற்றமின்றிப் பிராந்தி உண்டாகிறதில்லையோ அப்படிப்பட்ட அம்சம் சாமாநிய அம்ச மெனப்படும். அதனையே ஆதார மென்றும் கூறுவர். இப்படிப்பட்டது திருஷ்டாந்தத்தில் இதந்தை (இதுவெனும்) அம்சமும் அபாத்தியத்தன்மையுமாம். தார்ஷ்டாந்தத்தில் தானெனுந்தன்மையும் வாஸ்தவத்தன்மையும் சாமாநிய அம்சமாம்.

*௨௨. எது பிராந்திகாலத்தில் தோற்றுகிறதில்லையோ, எது தோற்றுவதனுல் பிராந்தி நீங்குகின்றதோ அது விசேஷ அம்ச மெனப்படும். அதனையே அதிஷ்டான மென்றும் கூறுவர். இப்படிச் சுத்திதிருஷ்டாந்தத்தில் நீலமுதுகுடைமை திரிகோணத்துவம் சுக்கித்துவமுதலியன விருக்கின்றன. சித்தாந்தத்தில் சேதனத்தன்மை ஆநந்தத்தன்மை அசங்கத்தன்மை அத்வைதத்தன்மைமுதலியன விருக்கின்றன. அவை விசேஷ அம்ச மெனப்படும்.

௬௨. விக்ஷேபாத்தியாசத்திற்குச் சுத்தியிலுள்ள ரஜதாத்தியாசத்தோடு நாம கற்பனையின் சமத்தன்மை.

[௫௫௦] आरोपितस्य दृष्टांते रूप्यं नाम यथा तथा ।
कूटस्थाध्यस्तविक्षेपनामाहमिति निश्चयः ॥ ३६ ॥

(அ-கை.)

வேறு சமத்தன்மையைக் காட்டுகின்றார்:—

दृष्टांते आरोपितस्य रूप्यं नाम यथा । तथा कूटस्थाध्यस्तविक्षेपनाम 'अहं" इति निश्चयः ॥

(சு-ம்.)

எப்படித் திருஷ்டாந்தசுத்தியில் ஆரோபிதத்திற்கு வெள்ளி யென்று பெயரிருக்கின்றதோ, அப்படிக் கூடஸ்தனிடத்தில் அத்தியஸ்தமாகிய விக்ஷேபத்திற்குப் பெயர் நான் என்பது நிச்சயம்.

(வி-ம்.)

திருஷ்டாந்தசுத்தியில் ஆரோபிக்கப்பட்ட பதார்த்தத்திற்கு வெள்ளி யென்று பெயரிருத்தல்போலத் தார்ஷ்டாந்தகூடஸ்தனிடத்துக் கற்பிக்கப் பட்ட முன் ௫௨௭-ல் கூறிய சிதாபாச னென்னும் விக்ஷேபத்திற்கு "அகம் அதாவது நான்" என்பது பெய ரென்பது பொருள். (௫௬)

௬௩. சித்தாந்தத்தில் சாமாந்யவிசேஷ அம்சத்தினது பேதத்தின் சங்கைக்குச் சமாதானம்.

[௫௫௧] इदमंशं स्वतः पश्यन्रूप्यमित्याभिमन्यते ।
तथा स्वं च स्वतः पश्यन्नहमित्याभिमन्यते ॥ ३७ ॥

(அ-கை.)

எதிரிடத்திலுள்ள சுத்தியின் துண்டாகிய திருஷ்டாந்தத்தில் இந்திரியங்களின் சம்பந்த முண்டாகியபோது "இது வெள்ளி" யென்று அச்சுத்திக்கு வேறாகிய வெள்ளியின் அபிமானம் பொருந்துகின்றது. இதுபோலத் தார்ஷ்டாந்தகூடஸ்தாத்மாவில் ஆத்மாவிற்கு வேறாகிய வஸ்துவின் அபிமானம் பொருந்தாதென் றாசங்கித்து, இங்குத் தார்ஷ்டாந்தத்திலும் சொப்பிரகாசத்தன்மையால் சிதாத்மாவாகிய கூடஸ்தர் தோற்றிக்கொண்டிருக்க; அந்தக் கூடஸ்தருக்கு வேறாக நான் என்னும் அபிமானம் தோற்றுகின்றதாகையால் திருஷ்டாந்ததார்ஷ்டாந்தங்களுக்கு வேறுபாடில்லை என்னும் அபிப்பிராயமாகக் கூறுகின்றார் :—

इदमंशं स्वतः पश्यन् रूप्यम् इति अभिमन्यते । तथा स्वं च स्वतः पश्यन् अहम् इति अभिमन्यते ॥

(சு-ம்.)

எப்படி இதம் அம்சத்தைப் புருஷன் சொரூபமாகப் பார்க்கின்றவனாய் வெள்ளி யிருக்கிறது என்று மதிக்கிறானோ, அப்படியே சுவசொரூபமாகிய தன்னைத் தானாகப் பார்க்கின்றவனாய் நான் என்று மதிக்கின்றான். (௩௭)

௩. ஸ்வயம்(தான்), ஆத்மா என்னும் சத்தங்களினது அர்த்தங்களின் அபேதத்தோடு கூடஸ்தசிதாபாசர்களின் பேதம் ௩௩௨-௩௫௩.

க. ஸ்வயம் அகம் என்னும் சத்தங்களினது அர்த்தபேதத்தின் சங்கைக்குச் சமாதானம்.

[௩௩௨] इदंत्वरूप्यते भिन्ने स्वत्वाहंते तथेष्यताम् ।
सामान्यं च विशेषश्च उभयत्रापि गम्यते ॥ ३८ ॥

(அ-கை.)

அப்படியானால் தான் நான் என்னுஞ் சத்தங்களிரண்டும் ஒரே அர்த்தமுடையனவா யிருத்தலால் சுத்திதிருஷ்டாந்தத்திற்கும் ஆத்மாவாகிய தார்ஷ்டாந்தத்திற்கும் எப்படிச் சமத்தன்மை யுண்டாமென் றாசங்கித்து,இஃது, வெள்ளி,என்னும் சத்தங்களுக்கும் 'தான், நான்' என்னும் சத்தங்களுக்கும் கிரமமாகச் சாமானியவடிவம் விசேஷவடிவமாதல் திருஷ்டாந்ததார்ஷ்டாந்தமாகிய இரண்டிடத்திலும் சமமாயிருத்தலால் திருஷ்டாந்ததார்ஷ்டாந்தங்களுக்குச் சமத்தன்மை எப்படி யுண்டா மென்னும் சங்கை பொருந்தாதென்று கூறுகின்றார் :—

इदंत्वरूप्यते भिन्ने तथा स्वत्वाहंते इष्यताम् सामान्यं च विशेषः च उभयत्र अपि गम्यते ॥

(சு-ம்.)

எப்படி இஃதெனுந்தன்மை வெள்ளித்தன்மையாகிய இரண்டும் வேறாமோ, அப்படியே தானெனுந்தன்மை நானெனுந்தன்மை இரண்டும் வேறாக அங்கீகரிக்கவேண்டியனவாம். ஏனெனின், சாமானியமும் விசேஷமும் எதனால் திருஷ்டாந்ததார்ஷ்டாந்தங்க ளிரண்டிலும் அறியப்படுகின்றனவோ அதனால். (௩௮)

உ. சுவயம்சப்தத்தினது அர்த்தத்தின் சாமானியவடிவத்தன்மையில் இலௌகிக வியவகாரம்.

[௩௩௯] देवदत्तः स्वयं गच्छेत्त्वं वीक्षस्व स्वयं तथा ।
अहं स्वयं न शक्नोमीत्येवं लोके प्रयुज्यते ॥ ३९ ॥

(அ-கை.)

தானென்னும் சப்தத்தின் அர்த்தம் சாமானியவடிவமாதலை விளக்குதற்கு இலௌகிக அதாவது உலகப்பிரசித்தப் பிரயோகத்தை முதலில் காட்டுகின்றார் :—

"देवदत्तः स्वयं गच्छेत्" तथा "त्वं स्वयं वीक्षस्व" "अहं स्वयं न शक्नोमि" इति एवं लोके प्रयुज्यते ॥

(சு-ம்.)

"தேவதத்தன்தான் போகின்றான்." அதுபோல "நீதான் பார்க்கின்றாய்." "நான்தான் சமர்த்தனல்லன்." என்றிப்படி உலகத்தில் பிரயோகிக்கப்படுகின்றது. (௩௯)

ங. தான் என்னும் சத்தத்தினது அர்த்தத்தின் சாமானியவடிவத்தன்மை இதுவெனுஞ் சொல்வடிவ உதாரணத்தாற் சித்தித்தது.

[௩௪௦] इदं रूप्यमिदं वस्त्रमिति यद्वदिदं तथा ।
असौ त्वमहमित्येषु स्वयमित्यभिमन्यते ॥ ४० ॥

(அ-கை.)

இப்படி உலகத்தில் பிரயோக மிருக்குக. இவ்வளவினால் தானென்னுஞ் சத்தத்தின் அர்த்தத்திற்குச் சாமானியவடிவத்துவம் எப்படி யுண்டாமென்றாசங்கித்து, இதுவெனுஞ் சத்தத்தின் அர்த்தத்திற் குண்டாதல்போலத் தானென்னும் சத்தத்தின் அர்த்தத்திற்கும் சாமானியவடிவத்துவ முண்டாம் என்று கூறுகின்றார் :—

"इदं रूप्यं । इदं वस्त्रं" इति यद्वत् । तथा "असौ । त्वं । अहं" । इति एषु "स्वयं" इति अभिमन्यते ॥

(சு-ம்.)

"இது வெள்ளி, இது வஸ்திரம்" என்னுமிடத்து எப்படி இதுவெனுஞ் சத்தத்தின் பிரயோக மிருக்கின்றதோ, அப்படியே "இது, நீ, நான்" என்பவற்றில் "தான்" என்னும் பிரயோகம் ஒப்பப்படுகின்றது.

(வி-ம்.)

வெள்ளி வஸ்திரமுதலியவற்றில் எல்லாவிடங்களிலும் இதுவெனுஞ் சத்தத்தின் பிரயோக மிருத்தலால், அந்த இதுவெனுஞ் சத்தத்தின் அர்த்தத்திற்குச் சாமாந்யவடிவத்துவ மிருத்தல்போல, "இது, நீ, நான்" என்பவைகளில் எங்கும் "தான்" என்னுஞ் சத்தம் பிரயோகமாதலால் அந்தத் "தான்" என்னும் சத்தத்தின் அர்த்தத்திற்கும் * ௨௩. சாமாந்யவடிவத்துவம் அறியப்படுகின்றது என்பது பொருள். (௪0)

௪. தான் என்னும் சத்தத்தினது அர்த்தத்திற்குக் கூடஸ்தவடிவத்தன்மை.

[௩௩௫] अहंत्वाद्भिद्यतां स्वत्वं कूटस्थे तेन किं तव ।
स्वयं शब्दार्थ एवैष कूटस्थ इति मे भवेत् ॥ ४१ ॥

(அ-கை.)

தான் நான் என்னுஞ் சத்தங்களுக்கு உலகத்தில் வேற்றுமை இருக்குக. இவ்வளவினால் கூடஸ்தராகிய ஆத்மாவிடத்து என்ன வந்ததென்று வாதி சித்தாந்தியைக் கேட்கின்றான்:—

अहंत्वात् स्वत्वं भिद्यतां तेन कूटस्थे तव किम् ॥

(சு-ம்.)

அகந்தையினும் தானெனுந்தன்மை வேறுபடுக. அதனால் கூடஸ்தரிடத்து உனக்கு என்ன வந்தது?

(அ-கை.)

சாமாந்யவடிவ தான் என்னும் சத்தத்தின் அர்த்தமே கூடஸ்தராமென்னு மிஃது எனக்குக் கூடஸ்தரிடத்து வந்தது என்று சித்தாந்தி கூறுகின்றார்:-

---

* ௨௩. இங்கு இது தாற்பரியமாம்:—புத்தியிலுள்ள சிதாபாசனுக்கும் கூடஸ்தனுக்கும் அந்யோந்யாத்தியாச மிருக்கின்றது. ஏனெனின், சிதாபாசவிசிஷ்ட புத்திக்கு அதிஷ்டானம் கூடஸ்தனும். நான் என்னும் தோற்றத்திற்கு விஷயம் சிதாபாசவிசிஷ்ட புத்தியாம். தானெனும் தோற்றத்திற்கு விஷயம் கூடஸ்தன்; முன் ௩௩௩-வது சுலோகத்தில் கூறியபடி சகலதோற்றத்திலும் அநுகதமாயுள்ளது தானெனுஞ் சத்தத்திற்கு அர்த்தமாம். நான் நீ முதலிய சத்தங்களினர்த்தம் வியபிசாரியாம். தானெனுஞ் சத்தத்திற்கு அர்த்தமாகிய கூடஸ்தன் முழுவதினும் அநுகதமா யிருத்தலால் அதிஷ்டானமாம். நான் நீ முதலிய சத்தங்களுக் கர்த்தமாகிய சிதாபாசவிசிஷ்ட புத்தி எனும்ஜீவன் வியபிசாரியா யிருத்தலால் அத்தியஸ்தமாம். கூடஸ்தனிடத்தில் ஜீவனுக்குச் சொரூபாத்தியாசமாம். ஜீவனிடத்தில் கூடஸ்தனுக்குச் சம்பந்தாத்தியாசமாம். ஆதலால் அஞ்ஞானிக்குக் கூடஸ்தஜீவர்களுக்கு அந்யோந்யாத்தியாச மிருத்தலால் பரஸ்பரம் விவேக முண்டாகிறதில்லை. ஆனால் கூடஸ்தன் சிதாபாசன் இரண்டும் பின்னமாம்.

"स्वयं शब्दार्थः एव एषः कूटस्थः" इति मे भवेत् ॥

(சு-ம்.)

தானெனுஞ் சத்தத்தினர்த்தமே இந்தக் கூடஸ்தர் என்பது எனக்கு உண்டாகின்றது. (௪௧)

ரு. தானென்னுந்தன்மைக்குக் கூடஸ்தத்தன்மையில் சங்கை சமாதானம்.

[௩௩௬] अन्यत्ववारकं स्वत्वमिति चेदन्यवारणं ।
कूटस्थस्यात्मतां वक्तुरिष्टमेव हि तद्भवेत् ॥ ४२ ॥

(அ-கை.)

அப்படியானால் தானெனுந்தன்மையாகிய தர்மம் வேறெனுந்தன்மையை நிவிருத்திக்கின்றது, கூடஸ்தத்தன்மையை அறிவிக்கிறதில்லை யென்று வாதி சங்கிக்கின்றான் :—

"अन्यत्ववारकं स्वत्वं" इति चेत् ॥

(சு-ம்.)

தானெனுந்தன்மை வேறெனுந்தன்மையை நிவிருத்திப்பதாமெனின்.

(அ-கை.)

தானெனுஞ் சத்தத்திற்கு அர்த்தமாகிய கூடஸ்தரே ஆத்மாவாய் அதாவது தானே தானு யிருத்தலால் தானெனுந்தன்மையால் அந்நியத்தன்மையை நிவிருத்தித்தல் எங்களுக்கு இஷ்டமேயாம் என்று சித்தாந்தி பரிகரிக்கின்றார் :—

कूटस्थस्य आत्मतां वक्तुः तत् अन्यवारणं इष्टं एव हि भवेत् ॥

(சு-ம்.)

கூடஸ்தருக்கு ஆத்மத்தன்மையைச் சொல்லுகின்ற சித்தாந்தியாகிய எனக்கு அந்நியத்தின் நீக்கம் இஷ்டமே யாகின்றது. (௪௨)

சு. தான் ஆத்மா என்னுஞ் சத்தங்களின் பரியாயத்தன்மையும் பலிதமும்.

[௩௩௭] स्वयमात्मेति पर्यायौ तेन लोके तयोः सह ।
प्रयोगो नास्त्यतः स्वत्वमात्मत्वं चान्यवारकं ॥ ४३ ॥

(அ-கை.)

அப்படியானல் பின்னைப்பிரவிருத்தியின்பொருட்டுள்ள "தான்" ஆத்மா, வெனுஞ் சத்தங்கட்குப் பசு குதிரைமுதலிய சத்தங்களைப்போல ஒருபொருளுடைமை யின்மையால் தானெனுஞ் சத்தத்திற்குப்பொருளாகிய கூடஸ்தருக்கு ஆத்மவடிவத்தன்மை எப்படி யுண்டாகும்? என்றுசங்கித்து, கை கரம்முதலிய பரியாயசத்தங்களைப்போலத் தான் ஆத்மா வென்னுஞ் சத்தங்களுக்கு ஒருபொருள் சம்பவித்தலால் "தானென்னும் பதத்திற்கு அர்த்தமாகிய கூடஸ்தருக்கு ஆத்மத்தன்மை எப்படி யுண்டாம்" என்னுஞ் சங்கை பொருந்தா தென்று பரிகரிக்கின்றார்:—

स्वयं आत्मा इति पर्यायौ ॥

(சு-ம்.)

தான் ஆத்மா என்னு மிரண்டும் பரியாயசத்தங்களாம்.

(அ-கை.)

இரண்டு சத்தங்களுக்கும் பரியாயத்தன்மை யிருக்கக் கூடவே பிரயோக மில்லாதிருத்தலில் ஏதுவைக் கூறுகின்றார்:—

तेन लोके तयोः सह प्रयोगः न अस्ति ॥

(சு-ம்.)

அதனல் உலகத்தில் தான் ஆத்மா என்னு மிரண்டு சத்தங்களுக்கும் கூடவே பிரயோக மில்லை.

(அ-கை.)

பலிதத்தைக் கூறுகின்றார்:—

अतः स्वत्वं च आत्मत्वं अन्यवारकम् ॥

(சு-ம்.)

ஆகையால் தானெனுந்தன்மையும் ஆத்மத்தன்மையும் அந்நியத்தை நிஷேதிப்பனவாம். (௪௩)

எ. கடமுதலியவற்றில் தான் என்னுஞ் சத்தத்தைப் பிரயோகித்தலால் தான் எனுந்தன்மையில் சங்கை சமாதானம்.

[௩௩அ] घटः स्वयं न जानातीत्येवं स्वत्वं घटादिषु ।
अचेतनेषु दृष्टं चेद्दृश्यतामात्मसत्त्वतः ॥ ४४ ॥

(அ-கை.)

அப்படியானால் அசேதனமாகிய கடமுதலியவற்றிலும் தானெனும் சத்தத்தின் பிரயோகம் காணப்படுதலால், தானெனுந்தன்மை ஆத்மத்தன்மைகளுக்கு ஐக்கியம் பொருந்தாதென்று வாதி சங்கிக்கின்றான் :—

"घटः स्वयं न जानाति" इति एवं अचेतनेषु घटादिषु स्वत्वं दृष्टं चेत् ॥

(சு-ம்.)

கடம்தான் அறிகிறதில்லை என்றிப்படி அசேதனமாகிய கடமுதலியவற்றிலும் தானெனுந்தன்மை காணப்படுகின்றதே யெனின்.

(அ-கை.)

கடமுதலியவற்றிலும் விளக்கவடிவமாக ஆத்மசைதன்னிய மிருத்தலால் அந்தக் கடமுதலியவற்றிலும் தானெனுஞ் சத்தத்தின் பிரயோகம் விரோதத்தை அடையாதென்று சித்தாந்தி கூறுகின்றார் :—

आत्मसत्त्वतः दृश्यताम् ॥

(சு-ம்.)

ஆத்மா இருத்தலால் கடமுதலியவற்றிலும் தானெனுந்தன்மை காணப்படுகின்றது. (௪௪)

அ. ஜடசேதனங்களின் பேதம் சிதாபாசனது காரியமாதல்.

[௫௫௧] चेतनाचेतनभिदा कूटस्थात्मकृता न हि ।
किंतु बुद्धिकृताभासकृतैवेत्यवगम्यताम् ॥ ४५ ॥

(அ-கை.)

அப்படியானால் கடமுதலியவற்றிலும் ஆத்மசைதந்நிய மிருக்கின், சேதனசேதனங்களாகிய ஜங்கமஸ்தாவரங்களின் விபாகம் நிமித்தமில்லாததாமென் றாசங்கித்துச் சேதனசேதனங்களின் விபாகத்திற்குக் காரணமான சிதாபாசனுடைய இருப்பும் இருப்பின்மையும் யாதோ அதன் இருப்பால் "சேதனசேதனங்களின் விபாகம் நிர்நிமித்தகமாம்" என்று கூறுதல் பொருந்தா தென்று பரிகரிக்கின்றார் :—

चेतनाचेतनभिदा कूटस्थात्मकृता न हि किंतु बुद्धिकृताऽऽभासकृता एव इति अवगम्यताम् ॥

(சு-ம்.)

சேதநாசேதனங்களின் வேற்றுமை கூடஸ்தாத்மாவினாலாகிய தன்று; ஆனால் புத்தியினாலாகியதே அதாவது புத்தியினாதீனமாகிய சேதனப்பிரதிபிம்பத்தினா லாகியதேயாமென் றறியவேண்டும். (௪௫)

௬. கூடஸ்தனிடத்துச் சிதாபாசனைப்போலக் கடாதிகளும் கற்பிதமாமெனல்.

[௩௪௦] यथा चेतन आभासः कूटस्थे भ्रांतिकल्पितः ।
अचेतनो घटादिश्च तथा तत्रैव कल्पितः ॥ ४६ ॥

(அ-கை.)

அப்படியானால் சேதநாசேதனவிபாகம் சிதாபாசனது சத்பாவ அசத்பாவ மென்னுங் காரணத்தாலாகியதாக அங்கீகரிக்குமிடத்து, அசேதனத்தில் ஆத்மாவின் சத்பாவத்தை அங்கீகரித்தல் நிஷ்பிரயோஜனமாமென் றாசங்கித்து, சேதநாசேதனங்க ளிரண்டினது விபாகத்திற்கு ஏதுவாயிருப்பதனால் கூடஸ்தனை அங்கீகரியாவிடினும், அசேதனத்தினது கற்பனைக்கு அதிஷ்டானமா யிருத்தலால் கூடஸ்தனை அங்கீகரித்தல் தகுதியா மென்னு மபிப்பிராயமாகக் கடமுதலியவற்றிற்கு அக்கூடஸ்தனிடத்துள்ள கற்பிதத் தன்மையை திருஷ்டாந்தத்தோடு கூறுகின்றார் :—

यथा चेतनः आभासः कूटस्थे भ्रांतिकल्पितः तथा अचेतनः घटादिः च तत्र एव कल्पितः ॥

(சு-ம்.)

எப்படிச் சேதனமாகிய ஆபாசம் கூடஸ்தனிடத்துப் பிராந்தியினாற் கற்பிக்கப்பட்டதோ, அப்படியே அசேதனமாகிய கடமுதலியவைகளும் கூடஸ்தசைதன்னியத்திலேயே கற்பிக்கப்பட்டவைகளாம். (௪௬)

௧௦. தானென்னுந்தன்மை ஆத்மத்தன்மைகளின் ஏகத்துவத்தில் அதிப்பிரசங்கமா மென்னும் சங்கை.

[௩௪௧] तत्तेदंते अपि स्वत्वमिव त्वमहमादिषु ।
सर्वत्रानुगते तेन तयोरप्यात्मतेति चेत् ॥ ४७ ॥

(அ-கை.)

தானெனுந்தன்மை ஆத்மத்தன்மைகளின் ஐக்கியத்தில் உண்டாகும் மரியாதையைக் கடத்தலாகிய அதிப்பிரசங்கத்தை வாதி மூலத்தில் சங்கிக்கின்றான் :—

स्वत्वं इव तत्तेदंते अपि त्वमहमादिपु सर्वत्र अनुगते तेन तयोः अपि आत्मता इति चेत् ॥

(சு-ம்.)

தானெனுந்தன்மைபோல அஃதெனுந்தன்மை இஃதெனுந்தன்மை என்னு மிரண்டு தர்மங்களும் " நீ நான் " முதலியவற்றில் எல்லாவிடத்தும் அநுருதமா யிருக்கின்றன. அதனால் அஃதெனுந்தன்மை யுண்டாகின்றது என்று சொல்லின்.

(வி-ம்.)

" நீ நான் " முதலியவற்றில் எங்கும் அநுருதமாயுள்ள தானெனுந்தன்மையைப்போல எல்லாவிடத்தும் அநுருதமாயுள்ள அஃதெனுந்தன்மை இஃதெனுந்தன்மைகளுக்கும் ஏன் ஆத்மசொரூபத்தன்மை உண்டாகாதென்பது தாற்பரியம். (௪௭)

௧௧. தானென்னுந்தன்மை ஆத்மத்தன்மைகளின் ஏகத்துவத்தில் அதிப்பிரசங்கத்தின் சங்கை சமாதானம்.

[௩௪௨] ते आत्मत्वेऽप्यनुगते तत्तेदंते ततस्तयोः ।
आत्मत्वं नैव संभाव्यं सम्यक्त्वादेर्यथा तथा ॥ ४८ ॥

(அ-கை.)

அஃதெனுந்தன்மை இஃதெனுந்தன்மை இரண்டற்கும் ஆத்மத்தன்மையிலும் அதிக இடத்திலிருப்பனவா யிருத்தலால் ஆத்மத்தன்மை சம்பவியா தென்று சித்தாந்தி கூறுகின்றார் :—

ते तत्तेदंते आत्मत्वे अपि अनुगते ततः तयोः आत्मत्वं संभाव्यं न एव ॥

(சு-ம்.)

அஃதெனுந்தன்மை இஃதெனுந்தன்மை இரண்டும் ஆத்மத்தன்மையிலும் அநுருதமாயிருக்கின்றன. அதனால் அவ்விரண்டற்கும் ஆத்மத்தன்மை சம்பவிக்கத்தக்கதன்று.

(வி-ம்.)

அஃதெனுந்தன்மை இஃதெனுந்தன்மைக ளிரண்டும் தானெனுந்தன்மையைப்போல " நீ நான் " முதலியவஸ்துக்களில் அநுருதமா யிருந்தபோதிலும், அந்த நீ நான் முதலியவற்றில் அநுருதமா யிருக்கும் ஆத்மத்தன்மையிலும், அந்த அது இதுவெனுந்தன்மைகள் அநுருதமா யிருக்கின்றன.

ஏனெனின், "அது ஆத்மத்தன்மையாம்." "இது ஆத்மத்தன்மையாம்." என்பவைமுதலிய வியவகாரம் சம்பவிக்கின்றது. ஆகையால் அந்த அது இதுவெனுந்தன்மைகளுக்கு ஆத்மத்தன்மையினும் அதிகதேசத்தி லிருத்தலால் ஆத்மசொரூபத்தன்மை தோற்றுவிக்கப்படவில்லை.

(அ-கை.)

அதில் திருஷ்டாந்தத்தைக் கூறுகின்றார் :—

यथा सम्यक्त्वादेः तथा ॥

(சு-ம்.)

எப்படி நன்மைமுதலியவற்றிற்கு ஆத்மத்தன்மை சம்பவிக்கிறதில்லையோ அதுபோல.

(வி-ம்.)

"ஆத்மத்தன்மை நன்றாயிருக்கிறது; ஆத்மத்தன்மை நன்றாயில்லை." என்னும் வியவகாரவசத்தால் ஆத்மத்தன்மையினும் அநாரூதமாயிருக்கும் நன்மை நன்மையின்மைகளைப்போல அது இதுவெனுந்தன்மைகளு மிருக்கின்றன என்பது பொருள். (௪௮)

கஉ. பிரதியோகிவடிவ உலகவியவகாரத்தால் சித்தித்த பொருளின் அநுவாதம்.

[௬௪௬] तत्तेदंते स्वताऽन्यत्वे त्वंताऽहंते परस्परम् ।
प्रतिद्वंद्वितया लोके प्रसिद्धे नास्ति संशयः ॥ ४९ ॥

(அ-கை)

இப்படிப் பிரசங்கத்தால் வாய்த்த பொருளை முடித்துப் பலித்த பொருளைக் காட்டுதற்பொருட்டு உலகவியவகாரத்தால் சித்திக்க அர்த்தத்தை அநுவாதஞ் செய்கின்றார் :—

तत्तेदंते स्वतान्यत्वे त्वंताऽहंते परस्परं प्रतिद्वंद्वितया लोके प्रसिद्धे संशयः न अस्ति ॥

(சு-ம்.)

அது இதுவெனுந்தன்மைகள், தான் பிறரெனுந்தன்மைகள், நீ நான் எனுந்தன்மைகள் என்னு மிவை ஒன்றற்கொன்று பிரதியோகித்தன்மையாக உலகத்திற் பிரசித்தமுள்ளனவாம்; இதிற் சந்தேகமில்லை.

(வி-ம்.)

"அஃதிருக்கிறது. இஃதிருக்கிறது." என்று அதுவெனுந்தன்மைக்கு இதுவெனுந்தன்மையின் பிரதியோகித்தன்மையும், "தானிருக்கிறேன். அந்நியமிருக்கிறது." என்று தானெனுந்தன்மைக்கு அந்நியத்தன்மையின் பிரதியோகித்தன்மையும், "நீ இருக்கிறாய். நான் இருக்கிறேன்." என நீ எனுந்தன்மைக்கு நான் எனுந்தன்மையின் பிரதியோகிபு மிருக்கின்றன. இவ்வாறு உலகத்தில் இந்தச் சப்தங்களுக்குப் பிரதித்துவந்துவித்தன்மையாக அதாவது நேரான பிறிதின்றன்மையாகப் பிரயோகம் காணப்படுதலால் இவற்றிற்கு ஒன்றற்கொன்று பிரதியோகித்தன்மை பிரசித்த மென்பது தாற்பரியம். (௪௯)

௯௬. ஜீவகூடஸ்தர்களின் பேதவடிவ பலித்த பொருள்.

[௬௪௪] अन्यतायाः प्रतिद्वंद्वी स्वयं कूटस्थ इष्यतां ।
त्वंतायाः प्रतियोग्येषोऽहमित्यात्मनि कल्पितः ॥ ५० ॥

(அ-கை.)

இங்ஙனம் உலகத்தில் வியவகார மிருக்குக. இதனால் பிரகிருதமாகிய ௬௬௨-வது சுலோகத்தில் கூறிய ஜீவகூடஸ்தர்களின் பேதத்தில் என்ன வந்ததெனக் கூறுகின்றார் :—

अन्यतायाः प्रतिद्वंदी स्वयं कूटस्थः इष्यताम् त्वंतायाः प्रतियोगी एषः अहं इति आत्मनि कल्पितः ॥

(சு-ம்.)

தானென்பது கூடஸ்த னென்று அங்கீகரிக்கவேண்டும். நீயெனுந் தன்மைக்குப் பிரதியோகியாகிய அதாவது நேரான மற்றொன்றாகிய இந்த நான் என்பது ஆத்மாவினிடத்துக் கற்பிதமாம் என்பது பொருள்.

(வி-ம்.)

அந்நியத்தன்மையின் பிரதியோகி தானென்னும் பதத்திற்கு அர்த்தமான கூடஸ்தனும், நீயெனுந்தன்மைக்குப் பிரதியோகி நானெனுந்தன்மைக்கு அர்த்தமாகிய சிதாபாசனும். அந்தச் சிதாபாசன் கூடஸ்தனிடத்துக் கற்பிதமாம் என்பது பொருள். (௫௦)

கச. ஜீவகூடஸ்தருக்குப் பேதமிருந்தும் ஒருமையுணர்ச்சியில் பிராந்திக்குக் காரணம்.

[கூசரு] अहंतास्वत्वयोर्भेदे रूप्यतेदंतयोरिव ।
स्पष्टेऽपि मोहमापन्ना एकत्वं प्रतिपेदिरे ॥ ९१ ॥

(அ-கை.)

அப்படியானால் கூகூஉ-கூசச சுலோகம் வரையில் சொல்லியவிதமாக ஜீவகூடஸ்தர்களுக்குப் பேதமிருக்கவும் சகல ஜீவர்களும் ஏன் இவ்வாறு அறியவில்லை யென்றாசங்கித்துக் கூறுகின்றார் :—

रूप्यतेदंतयोः इव अहंतास्वत्वयोः भेदे स्पष्टे अपि मोहं आपन्नाः एकत्वं प्रतिपेदिरे ॥

(சு-ம்.)

வெள்ளியெனுந்தன்மை இஃதெனுந்தன்மைகளின் பேதம்போல, நான் தான் எனுந்தன்மைகளின் வேற்றுமை வெளிப்படையாயிருந்தும் மயக்கத்தை யடைந்தவர்களாகிய ஜீவர்கள் ஐக்கியத்தை அறிகின்றார்கள்.

(வி-ம்.)

புத்திக்குச் சாக்ஷியாகிய கூடஸ்தர் புத்தியினால் பிரத்தியக்ஷமாகக்கூடாதவரா யிருத்தலால் * உச. நானெனும் விருத்தியில் தோற்றிக்கொண்டிருக்கும் ஜீவகூடஸ்தர்களிருவரின் ஐக்கியத்தைப் பிராந்தியினால் அஞ்ஞானிகள் அறிகின்றார்கள், பேதத்தை அறிகிறதில்லை என்பது பொருள். (ருக)

கரு. சுலோகம் கூசரு-ல் கூறிய ஒருமைப்பிராந்தியின் காரணம் (அவித்தை).

[கூசகூ] तादात्म्याध्यास एवात्र पूर्वोक्ताविद्यया कृतः ।
अविद्यायां निवृत्तायां तत्कार्यं विनिवर्तते ॥ ९२ ॥

---

* உச. "நான்" என்னும் விருத்தியில் ஓரேகாலத்தில் சிதாபாசகூடஸ்தர்களென்னும் இருவரின் ஞானமும் உண்டாகின்றது; ஆனால் இவ்வளவுபேதமுண்டு:—சிதாபாசனே கூடஸ்தனுக்கு விஷயமாய்த் தோற்றுகின்றது. கூடஸ்தனாகிய ஆத்மா நான் என்னும் விருத்தியோடு சிதாபாசனைப் பிரகாசித்துக்கொண்டு தான் சுவயம்பிரகாசத்தன்மையில் விளங்குகின்றது.

(அ-கை.)

அப்படியானால் இந்த ஜீவகூடஸ்தர்களினது ஐக்கியத்தின் பிராந்திக்குக் காரணம் யாதெனக் கூறுகின்றார் :—

तादात्म्याध्यासः एव अत्र पूर्वोक्ताविद्याकृतः ॥

(சு-ம்.)

இந்தத் *உரு. தாதாத்மிய அத்தியாசம் இப்பிரகரணத்தின் முன் கக-௯௪-ல் கூறிய அவித்தையினால் செய்யப்பட்டதாம்.

(வி-ம்.)

இச்சித்திரதீபநூலில் "இவ்வநாதிகாலத்து அவிவேகம் மூலாவித்தையாம்." என்னும் ௯௪-வது சுலோகமாகியவிடத்தில் சொல்லப்பட்ட அவித்தையினா லாக்கப்பட்ட அதன்காரியம் ஜீவகூடஸ்தர்களின் ஐக்கியத்தின் பிராந்தியாம் என்பது பொருள்.

(அ-கை.)

இந்த ௯௪௫-ல் கூறிய பிராந்தி அவித்தையின் காரியமாதலால் அவித்தையை நிவிருத்திசெய்யும் ஞானத்தினாலேயே அந்தப் பிராந்தியின் நிவிருத்தி உண்டாமென்று கூறுகின்றார் :—

अविद्यायां निवृत्तायां तत्कार्यं विनिवर्तते ॥

(சு-ம்.)

அவித்தை நீங்குங்கால் அதன்காரியமான ௯௪௫-ல் கூறிய பிராந்தியும் நீங்குகின்றது. (௫௨)

கக. அவித்தை நீங்கியபின் அதன் காரியம் தோற்றுதலின் சங்கை சமாதானம்.

[௯௪௭] अविद्यावृत्तितादात्म्ये विद्ययैव विनश्यतः ।
विक्षेपस्य स्वरूपं तु प्रारब्धक्षयमीक्षते ॥ ५२ ॥

(அ-கை.)

அப்படியானால் "அத்தியாசம் அவித்தையின் காரியமா யிருத்தலால் அவ்வவித்தையின் நிவிருத்தியால் அது நிவிருத்தியாகின்றது." என்று

* உரு. ஜீவகூடஸ்தர்களினது ஒருமையின் மயக்கத்தைத் தாதாத்மியாத்தியாச மென்பர்.

ரு௪௬-ல் கூறியது பொருந்தாது. ஏனெனின், பிரஹ்மாத்மஐக்கியஞானம் உண்டாகியும் அவித்தையின் காரியமாகிய தேகமுதலியவைகள் தோற்றிக்கொண்டிருத்தலால் என்று கூறுகின்றார் :—

अविद्यावृत्तितादात्म्ये विद्यया एव विनश्यतः विक्षेपस्य स्वरूपं तु प्रारब्धक्षयं ईक्षते ॥

(சு-ம்.)

அவித்தையினாலாகிய ஆவரணம் தாதாத்மியமெனு மிரண்டும் வித்தையினாலேயே நாசத்தை யடைகின்றன. விக்ஷேபத்தின் சொரூபமோ பிராரப்தத்தின் க்ஷயத்தை எதிர்பார்க்கின்றது.

(வி-ம்.)

அவித்தைமாத்திரத்தைக் காரணமாகவுடைய ஆவரணமும் ஜீவகூடஸ்தர்களின் ஐக்கியப்பிராந்திவடிவ தாதாத்மியமும் ஆகிய இவ்விரண்டும் ஞானத்தினாலேயே நிவிருத்தியாகின்றன. பிராரப்தகர்மமாகிய உபாதியோடு அவித்தையினாலாகிய *௨௬. விக்ஷேபத்தினது சொரூபம் கர்மத்தின் முடிவுவரை நிலைத்திருக்கும். இவ்வாற்றால் தேகமுதலியவற்றின் தோற்றத்திற்கு விரோதமில்லை என்பது தாற்பரியம். (ருங)

௧எ. உபாதானம் நாசமாகியும் க்ஷணமாத்திரம் காரியம் விலைத்தலில் நையாயிகருக்குச் சம்மதமான திருஷ்டாந்தம்.

[௩௪அ] उपादाने विनष्टेऽपि क्षणं कार्यं प्रतीक्षते ।
इत्याहुस्तार्किकास्तद्वदस्माकं किन्न संभवेत् ॥ ५४ ॥

(அ-கை.)

அப்படியானால் பிராரப்தகர்மம் நிமித்தமாத்திரமாயிருத்தலால் அந்தப் பிராரப்தகர்மத்தி னிருப்புமாத்திரத்தால் உபாதானம் நாசமாகியும், எப்படிக் காரியமான விக்ஷேபத்தின் அநுவிருத்தி அதாவது பாதமாகியபின்னிருத்தல் உண்டாகு மென்றாசங்கித்து, அந்நியமான நியாயசாஸ்திரத்தில் சித்தித்த திருஷ்டாந்தத்தால் அந்தக் காரியத்தின் அநுவிருத்தியைத் தோற்றுவிக்கின்றார் :—

उपादाने विनष्टे अपि क्षणं कार्यं प्रतीक्षते इति तार्किकाः आहुः । तद्वत् अस्माकं किं न संभवेत् ॥

---

* ௨௬. ஸ்தூலசூக்ஷ்மசரீரங்களோடுகூடிய சிதாபாசன் விக்ஷேப மெனப்படும்.

(அ-கை.)

அப்படியானால் இந்த ஜீவகூடஸ்தர்களினது ஐக்கியத்தின் பிராந்திக்குக் காரணம் யாதெனக் கூறுகின்றார் :—

तादात्म्याध्यासः एव अत्र पूर्वोक्ताविद्याकृतः ॥

(சு-ம்.)

இந்தத் *உ௫. தாதாத்மிய அத்தியாசம் இப்பிரகரணத்தின் முன் ௧௬-௩௪-ல் கூறிய அவித்தையினால் செய்யப்பட்டதாம்.

(வி-ம்.)

இச்சித்திரதீப நூலில் "இவ்வநாதிகாலத்து அவிவேகம் மூலாவித்தையாம்." என்னும் ௩௪-வது சுலோகமாகியவிடத்தில் சொல்லப்பட்ட அவித்தையினா லாக்கப்பட்ட அதன்காரியம் ஜீவகூடஸ்தர்களின் ஐக்கியத்தின் பிராந்தியாம் என்பது பொருள்.

(அ-கை.)

இந்த ௩௪௫-ல் கூறிய பிராந்தி அவித்தையின் காரியமாதலால் அவித்தையை நிவிருத்திசெய்யும் ஞானத்தினாலேயே அந்தப் பிராந்தியின் நிவிருத்தி உண்டாமென்று கூறுகின்றார் :—

अविद्यायां निवृत्तायां तत्कार्यं विनिवर्तते ॥

(சு-ம்.)

அவித்தை நீங்குங்கால் அதன்காரியமான ௩௪௫-ல் கூறிய பிராந்தியும் நீங்குகின்றது. (௫௨)

௧௬. அவித்தை நீங்கியபின் அதன் காரியம் தோற்றுதலின் சங்கை சமாதானம்.

[௩௪௭] अविद्यावृत्तितादात्म्ये विद्ययैव विनश्यतः ।
विक्षेपस्य स्वरूपं तु प्रारब्धक्षयमीक्षते ॥ ५३ ॥

(அ-கை.)

அப்படியானால் "அத்தியாசம் அவித்தையின் காரியமாயிருத்தலால் அவ்வவித்தையின் நிவிருத்தியால் அது நிவிருத்தியாகின்றது." என்று

* உ௫. ஜீவகூடஸ்தர்களினது ஒருமையின் மயக்கத்தைத் தாதாத்மியாத்தியாசமென்பர்.

௩௪௯-ல் கூறியது பொருந்தாது. ஏனெனின், பிரஹ்மாத்மஐக்கியஞானம் உண்டாகியும் அவித்தையின் காரியமாகிய தேகமுதலியவைகள் தோற்றிக்கொண்டிருத்தலால் என்று கூறுகின்றார் :—

अविद्यावृत्तितादात्म्ये विद्यया एव विनश्यतः विक्षेपस्य स्वरूपं तु प्रारब्ध-क्षयं ईक्षते ॥

(சு-ம்.)

அவித்தையினாலாகிய ஆவரணம் தாதாத்மியமெனு மிரண்டும் வித்தையினாலேயே நாசத்தை யடைகின்றன. விக்ஷேபத்தின் சொரூபமோ பிராரப்தத்தின் க்ஷயத்தை எதிர்பார்க்கின்றது.

(வி-ம்.)

அவித்தைமாத்திரத்தைக் காரணமாகவுடைய ஆவரணமும் ஜீவகூடஸ்தர்களின் ஐக்கியப்பிராந்திவடிவ தாதாத்மியமும் ஆகிய இவ்விரண்டும் ஞானத்தினாலேயே நிவிருத்தியாகின்றன. பிராரப்தகர்மமாகிய உபாதியோடு அவித்தையினாலாகிய *உகூ. விக்ஷேபத்தினது சொரூபம் கர்மத்தின் முடிவுவரை நிலைத்திருக்கும். இவ்வாற்றால் தேகமுதலியவற்றின் தோற்றத்திற்கு விரோதமில்லை என்பது தாற்பரியம். (௫௩)

கஎ. உபாதானம் நாசமாகியும் க்ஷணமாத்திரம் காரியம் நிலைத்தலில் நையாயிகருக்குச் சம்மதமான திருஷ்டாந்தம்.

[௩௫௪] उपादाने विनष्टेऽपि क्षणं कार्यं प्रतीक्षते ।
इत्याहुस्तार्किकास्तद्वदस्माकं किन्न संभवेत् ॥ ५४ ॥

(அ-கை.)

அப்படியானால் பிராரப்தகர்மம் நிமித்தமாத்திரமாயிருத்தலால் அந்தப் பிராரப்தகர்மத்தி னிருப்புமாத்திரத்தால் உபாதானம் நாசமாகியும், எப்படிக் காரியமான விக்ஷேபத்தின் அநுவிருத்தி அதாவது பாதமாகியபின்னிருத்தல் உண்டாகுமென்றுசங்கித்து, அந்நியமான நியாயசாஸ்திரத்தில் சித்தித்த திருஷ்டாந்தத்தால் அந்தக் காரியத்தின் அநுவிருத்தியைத் தோற்றுவிக்கின்றார் :—

उपादाने विनष्टे अपि क्षणं कार्यं प्रतीक्षते इति तार्किकाः आहुः । तद्वत् अस्माकं किं न संभवेत् ॥

---

* உகூ. ஸ்தூலசூக்ஷ்மசரீரங்களோடுகூடிய சிதாபாசன் விக்ஷேபமெனப்படும்.

(சு-ம்.)

உபாதானம் நஷ்டமாகியும் க்ஷணமாத்திரம் காரியம் இருக்கின்றது என்று தார்க்கிகர் கூறுகின்றனர். அதுபோல வேதாந்திகளாகிய எங்களுக்கு ஏன் சம்பவியாது ? (௫௪)

௧அ. அநாதி சம்சாரப்பிராந்திக்கு யோக்கியமான க்ஷணத்தைக் கூறுதல்.

[௩௪௧] तंतूनां दिनसंख्यानां तैस्तादृक्क्षण ईरितः ।
भ्रमस्यासंख्यकल्पस्य योग्यः क्षण इहेष्यताम् ॥ ५५॥

(அ-கை)

அப்படியானால் தார்க்கிகர்களாகிய நையாயிகர்களால் காரியத்திற்கு க்ஷணமாத்திர அவஸ்தானம் அதாவது உபாதானம் நாசமாகியபின் காரியம் ஒருகணமிருத்தல் அங்கீகரிக்கப்பட்டிருக்கின்றது ; வெகுகால மில்லையே யென்றாசங்கித்துக் கூறுகின்றார் :—

दिनसंख्यानां तंतूनां तैः तादृक् क्षणः ईरितः । इह असंख्यकल्पस्य भ्रमस्य योग्यः क्षणः इष्यताम् ॥

(சு-ம்.)

நாட்கணக்குள்ள அதாவது கணக்கிடத்தக்க நாட்களால் உற்பத்தியுடைய நூல்களுக்கு அந்த நையாயிகர்களால் அப்படிப்பட்ட அதாவது அதற்குரிய க்ஷணம் சொல்லப்பட்டிருக்கின்றது. இங்கு எங்கள் சித்தாந்தத்தில் அளவிறந்த கற்பங்களினது பிராந்திக்குத்தக்க கணம் அங்கீகரிக்க வேண்டியதாம்.

(வி-ம்.)

சம்சாரம் அநாதிகாலந்தொட்டு இருப்பதா யிருத்தலால், அந்தச் சம்சாரத்தின் சம்ஸ்காரவசத்தால் குலாலசக்கரத்தின் சுழற்சிபோலப் பிரமவடிவ சம்சாரத்தின் வெகுகாலம்வரையிலும் அதாவது பிராரப்தம்வரையிலுமுள்ள அவித்தையாகிய உபாதானம் நாசமாகிய பின்னிருத்தலாகிய அநுவிருத்தி விரோதத்தை யடையாது என்பது தாற்பரியம். (௫௫)

௧௯. சுலோகம் ௩௪௧-ல் கூறிய அர்த்தம் பொருந்தா தென்பதன் சங்கைசமாதானம்.

[௩௫0] विना क्षोदक्षमं मानं तैर्वृथा परिकल्प्यते ।
श्रुतियुक्त्यनुभूतिभ्यो वदतां किंतु दुःशकम् ॥ ५६ ॥

(அ-கை.)

அப்படியானால் நையாயிகர் அயுக்தமென்று கூறியதுபோல நீரும் அயுக்தமென்று கூறினீர் என்றாசங்கித்துச் சித்தாந்தி தனது வார்த்தையில் அந்த நையாயிகரது வேற்றுமையைக் காட்டுகின்றார் :—

क्षोदक्षमं मानं विना तैः वृथा परिकल्प्यते श्रुतियुक्त्यनुभूतिभ्यः वदतां किं नु दुःशकम् ॥

(சு-ம்.)

விசாரத்தில் சாமர்த்தியமுள்ள அதாவது விசாரத்தைச் சகிக்கும் பிரமாணமின்றி அந்த நையாயிகர்களால் வீணாக க்ஷணம் கற்பிக்கப்படுமாயின், சுருதியுக்தி அநுபவப்பிரமாணங்களால் சொல்லுகின்ற எங்களுக்குக் கூடாதது யாது ?

(வி-ம்.)

"तस्य तावदेव चिरं यावन्न विमोक्ष्येऽथ संपत्स्ये அந்த ஞானிக்கு எதுவரையிலும் தேகம் விழவில்லையோ அதுவரையிலுமே மோக்ஷத்தில் அவகாசமிருக்கின்றது." என்னும் சாந்தோக்கியசுருதி, குலாலசக்கரத்தின் சுழற்சி முதலிய திருஷ்டாந்தரூப யுக்தி, அநுபூதி அதாவது வித்வான்களது அநுபவம் என்னும் இந்தமூன்று பிரமாணங்களால் நமக்குச் சொல்லக் கூடாதது யாது? எதுவுமில்லை. (௫௬)

௨௦. தான் யான் என்பவற்றின் ஒருமை பிராந்தியினாற் சித்தித்ததெனல்.

[௯௫௧] आस्तां दुस्तार्किकैः साकं विवादः प्रकृतं ब्रुवे ।
स्वाहमोः सिद्धमेकत्वं कूटस्थपरिणामिनोः ॥ ५७ ॥

(அ-கை.)

இப்போது பிரகிருதத்தை அதாவது ௯௪௫-ல் தொடங்கிய பிரசங்கத்தை அநுசரிக்கின்றார் :—

दुस्तार्किकैः साकं विवादः आस्तां । प्रकृतं ब्रुवे । कूटस्थपरिणामिनोः स्वाहमोः एकत्वं सिद्धम् ॥

(சு-ம்.)

குதர்க்கஞ்செய்யும் நையாயிகர்களோடு விசேஷவாதம் இருக்குக. இப்போது பிரகிருதத்தைக் கூறுகின்றோம். விகாரமில்லாததும் விகாரமுடையதுமாகிய தான் நானெனும் இரண்டற்கும் ஐக்கியம் சித்தித்தது.

(வி-ம்.)

தான் நான் என்னுஞ் சப்தங்களின் அர்த்தமாகிய கூடஸ்தன் அதாவது நிர்விகாரசாக்ஷி பரிணாமி அதாவது விகாரியாகிய சிதாபாசன் என்னுமிரண்டற்கும் ஐக்கியம் பிராந்தியினால் சித்தித்தது. (௫௭)

உக. பிராந்தியை அறியாததில் சுருதிதாற்பரியத்தை விசாரியாமையாகிய காரணம்.

[டுறுஉ] भ्राम्यंते पंडितंमन्याः सर्वे लौकिकतैर्थिकाः ।
अनादृत्य श्रुतिं मौर्ख्यात्केवलां युक्तिमाश्रिताः ॥ ५८ ॥

(அ-கை.)

அப்படியானால் கூடஸ்தஜீவர்களின் ஐக்கியம் பிராந்தியினால் சித்தித்த தாயின் "இது பிராந்தி" என்று சில புருஷர்கள் ஏன் அறியவில்லை யென்றாசங்கித்துச் சுருதிதாற்பரியவிசாரமில்லாதவர்களா யிருத்தலால் அறியவில்லையெனக் கூறுகின்றார்:—

पंडितंमन्याः लौकिकतैर्थिकाः सर्वे मौर्ख्यात् श्रुतिं अनादृत्य केवलां युक्तिं आश्रिताः भ्राम्यंते ॥

(சு-ம்.)

பண்டிதர்களல்லாத தம்மைப் பண்டிதர்களாக மதிக்கும் இலௌகிகர்களும் நையாயிகர்முதலிய சாஸ்திரமுணர்ந்தவர்களுமாகிய எல்லோரும் மூடத்தன்மையால் சுருதியை ஆதரிக்காமல் கேவலபுருஷகற்பனையாகிய யுக்தி மாத்திரத்தை ஆசிரயிக்கின்றவர்களாய்ப் பிரமிக்கின்றார்கள். (ருஅ)

[டுறுரு] पूर्वापरपरामर्शविकलास्तत्र केचन ।
वाक्याभासान्स्वस्वपक्षे योजयंत्यप्यलज्जया ॥ ५९ ॥

(அ-கை.)

அப்படியானால் சுருதியர்த்தத்தைக் கூறும் சில புருஷர்களும் இப்படி அதாவது கூடஸ்தஜீவர்களின் ஐக்கியம் பிராந்திவடிவ மென்று ஏன் அறியவில்லையென்றாசங்கித்து, அவர்கள் சுருதியர்த்தம் முழுவதும் விசாரியாமையால் அறியவில்லை யென்று கூறுகின்றார்:—

तत्र पूर्वापरपरामर्शविकलाः केचन स्वस्वपक्षे वाक्याभासान् अपि अलज्जया योजयंति ॥

(சு-ம்.)

அவர்களுள் முன்பின் விசாரணையில்லாதவர்களாகிய சிலர் அதாவது சிறிது சுருதியர்த்த முணர்ந்தவர்கள் தங்கள்தங்கள் பக்ஷத்தில் * உஎ. வாக்கியாபாசங்களையும் வெட்கமில்லாமல் சேர்க்கின்றார்கள். (ருசு)

---

* உஎ. முன்பின் விரோதத்தால் வேறு அர்த்தத்தில் தாற்பரியமுடைய வாக்கியம் வாக்கியாபாச மெனப்படும்.

௩. ஆத்மதத்துவவிவேகத்தால் ஆத்மாவினிடத்து விவாதம் ௩௫௪-௩௬௫.

௧. ஆத்மாவின் சொரூபத்தில் விவாதம் ௩௫௪-௩௭௧.

௧. லோகாயதபாமரர்களது மதம் (சங்காதம் ஆத்மா).

[௩௫௪] कूटस्थादिशरीरांतसंघातस्यात्मतां जगुः ।
लोकायताः पामराश्च प्रत्यक्षाभासमाश्रिताः ॥ ६० ॥

(அ-கை.)

அவ்வாதிகளுள் பிரத்தியக்ஷப்பிரமாணம் ஒன்றையே அங்கீகரித்தலால் மிக ஸ்தூலமா யிருத்தலின் லோகாயதர்முதலியோர்களது மதத்தை முதலில் அநுவாதஞ் செய்கின்றார்:—

लोकायताः च पामराः कूटस्थादिशरीरांतसंघातस्य आत्मतां जगुः ॥

(சு-ம்.)

உலோகாயதராகிய சார்வாகாநுசாரிகளான நாஸ்திகர்களும், பாமரர்களும் கூடஸ்தர்முதல் சரீரம்வரையிலுள்ள சங்காதமாகிய சமூகத்திற்கு ஆத்மதன்மையைச் சொல்லுகின்றனர்.

(அ-கை.)

அப்படியானால் பிரத்தியக்ஷசித்தமா யிருத்தலால் தேகமுதலிய சங்காதங்களுக்கு ஆத்மதன்மை பாரமார்த்திகமாம் என்று ஆசங்கித்துக் கூறுகின்றார்:—

प्रत्यक्षाभासं आश्रिताः ॥

(சு-ம்.)

அவர்கள் பிரத்தியக்ஷப்பிரமையின் * உ-அ. ஆபாசத்தை ஆசிரயித்திருக்கின்றார்கள்.　(௬௦)

[௩௫௫] श्रौतीकर्तुं स्वपक्षं ते कोशमन्नमयं तथा ।
विरोचनस्य सिद्धांतं प्रमाणं प्रतिजज्ञिरे ॥ ६१ ॥

---

* உ-அ. தேகத்தில் நானென்னும் தோற்றத்தால் பிரத்தியக்ஷஞானம் உண்டாகின்றது. அதுபோல இந்திரியமுதலியவற்றிற்கும் நானென்னும் தோற்றத்தால் பிரத்தியக்ஷஞானம் உண்டாகிறது. ஆகையால் தேகத்தை விஷயஞ்செய்யும் பிரத்தியக்ஷஞானம் வியபிசாரமுடையதா யிருத்தலால் இந்தப் பிரத்தியக்ஷஞானத்திற்கு ஆபாசரூபத்துவ முண்டு.

உக. பிராந்தியை அறியாததில் சுருதிதாற்பரியத்தை விசாரியாமையாகிய காரணம்.

[௫௦௨] भ्राम्यंते पंडितंमन्याः सर्वे लौकिकतैर्थिकाः ।
अनादृत्य श्रुतिं मौर्ख्यात्केवलां युक्तिमाश्रिताः ॥ ५८ ॥

(அ-கை.)

அப்படியானால் கூடஸ்தஜீவர்களின் ஐக்கியம் பிராந்தியினால் சித்தித்த தாயின் "இது பிராந்தி" என்று சில புருஷர்கள் ஏன் அறியவில்லை யென்றாசங்கித்துச் சுருதிதாற்பரியவிசாரமில்லாதவர்களா யிருத்தலால் அறியவில்லையெனக் கூறுகின்றார்:—

पंडितंमन्याः लौकिकतैर्थिकाः सर्वे मौर्ख्यात् श्रुतिं अनादृत्य केवलां युक्तिं आश्रिताः भ्राम्यंते ॥

(சு-ம்.)

பண்டிதர்களல்லாத தம்மைப் பண்டிதர்களாக மதிக்கும் இலௌகிகர்களும் நையாயிகர்முதலிய சாஸ்திரமுணர்ந்தவர்களுமாகிய எல்லோரும் மூடத்தன்மையால் சுருதியை ஆதரிக்காமல் கேவலபுருஷகற்பனையாகிய யுக்திமாத்திரத்தை ஆசிரயிக்கின்றவர்களாய்ப் பிரமிக்கின்றார்கள். (௫௮)

[௫௦௩] पूर्वापरपरामर्शविकलास्तत्र केचन ।
वाक्याभासान्स्वस्वपक्षे योजयंत्यप्यलज्जया ॥ ५९ ॥

(அ-கை.)

அப்படியானால் சுருதியர்த்தத்தைக் கூறும் சில புருஷர்களும் இப்படி அதாவது கூடஸ்தஜீவர்களின் ஐக்கியம் பிராந்திவடிவ மென்று ஏன் அறியவில்லையென்றாசங்கித்து, அவர்கள் சுருதியர்த்தம் முழுவதும் விசாரியாமையால் அறியவில்லை யென்று கூறுகின்றார்:—

तत्र पूर्वापरपरामर्शविकलाः केचन स्वस्वपक्षे वाक्याभासान् अपि अलज्जया योजयंति ॥

(சு-ம்.)

அவர்களுள் முன்பின் விசாரணையில்லாதவர்களாகிய சிலர் அதாவது சிறிது சுருதியர்த்த முணர்ந்தவர்கள் தங்கள்தங்கள் பக்ஷத்தில் * உஎ. வாக்கியாபாசங்களையும் வெட்கமில்லாமல் சேர்க்கின்றார்கள். (௫௯)

---

* உஎ. முன்பின் விரோதத்தால் வேறு அர்த்தத்தில் தாற்பரியமுடைய வாக்கியம் வாக்கியாபாச மெனப்படும்.

௩. ஆத்மதத்துவவிவேகத்தால் ஆத்மாவினிடத்து விவாதம் ௩௫௪-௩௯௫.

க. ஆத்மாவின் சொரூபத்தில் விவாதம் ௩௫௪-௩௭௧.

க. லோகாயதபாமரர்களது மதம் (சங்காதம் ஆத்மா).

[௩௫௪] कूटस्थादिशरीरांतसंघातस्यात्मतां जगुः ।
लोकायताः पामराश्च प्रत्यक्षाभासमाश्रिताः ॥ ६० ॥

(அ-கை.)

அவ்வாதிகளுள் பிரத்தியக்ஷப்பிரமாணம் ஒன்றையே அங்கீகரித்தலால் மிக ஸ்தூலமா யிருத்தலின் லோகாயதர்முதலியோர்களது மதத்தை முதலில் அநுவாதஞ் செய்கின்றார்:—

लोकायताः च पामराः कूटस्थादिशरीरांतसंघातस्य आत्मतां जगुः ॥

(சு-ம்.)

உலோகாயதராகிய சார்வாகாநுசாரிகளான நாஸ்திகர்களும், பாமரர்களும் கூடஸ்தர்முதல் சரீரம்வரையிலுள்ள சங்காதமாகிய சமூகத்திற்கு ஆத்மத்தன்மையைச் சொல்லுகின்றனர்.

(அ-கை.)

அப்படியானால் பிரத்தியக்ஷசித்தமா யிருத்தலால் தேகமுதலிய சங்காதங்களுக்கு ஆத்மத்தன்மை பாரமார்த்திகமாம் என்று ஆசங்கித்துக் கூறுகின்றார்:—

प्रत्यक्षाभासं आश्रिताः ॥

(சு-ம்.)

அவர்கள் பிரத்தியக்ஷப்பிரமையின் * உ-அ. ஆபாசத்தை ஆசிரயித்திருக்கின்றார்கள். (௬0)

[௩௫௫] श्रौतीकर्तुं स्वपक्षं ते कोशमन्नमयं तथा ।
विरोचनस्य सिद्धांतं प्रमाणं प्रतिजज्ञिरे ॥ ६१ ॥

---

* உ-அ. தேகத்தில் நானென்னும் தோற்றத்தால் பிரத்தியக்ஷஞானம் உண்டாகின்றது. அதுபோல இந்திரியமுதலியவற்றிற்கும் நானென்னும் தோற்றத்தால் பிரத்தியக்ஷஞானம் உண்டாகிறது. ஆகையால் தேகத்தை விஷயஞ்செய்யும் பிரத்தியக்ஷஞானம் வியபிசாரமுடையதா யிருத்தலால் இந்தப் பிரத்தியக்ஷஞானத்திற்கு ஆபாசரூபத்துவ முண்டு.

௨௯. பிராந்தியை அறியாததில் சுருதிதாற்பரியத்தை விசாரியாமையாகிய காரணம்.

[௫௱௨] भ्राम्यंते पंडितंमन्याः सर्वे लौकिकतैर्थिकाः ।
अनादृत्य श्रुतिं मौर्ख्यात्केवलां युक्तिमाश्रिताः ॥ ५८ ॥

(அ-கை.)

அப்படியானால் கூடஸ்தஜீவர்களின் ஐக்கியம் பிராந்தியினால் சித்தித்த தாயின் "இது பிராந்தி" என்று சில புருஷர்கள் ஏன் அறியவில்லை யென்றாசங்கித்துச் சுருதிதாற்பரியவிசாரமில்லாதவர்களா யிருத்தலால் அறியவில்லையெனக் கூறுகின்றார்:—

पंडितंमन्याः लौकिकतैर्थिकाः सर्वे मौर्ख्यात् श्रुतिं अनादृत्य केवलां युक्तिं आश्रिताः भ्राम्यंते ॥

(சு-ம்.)

பண்டிதர்களல்லாத தம்மைப் பண்டிதர்களாக மதிக்கும் இலௌகிகர்களும் நையாயிகர்முதலிய சாஸ்திரமுணர்ந்தவர்களுமாகிய எல்லோரும் மூடத்தன்மையால் சுருதியை ஆதரிக்காமல் கேவலபுருஷகற்பனையாகிய யுக்திமாத்திரத்தை ஆசிரயிக்கின்றவர்களாய்ப் பிரமிக்கின்றார்கள். (௫௮)

[௫௱௩] पूर्वापरपरामर्शविकलास्तत्र केचन ।
वाक्याभासान्स्वस्वपक्षे योजयंत्यप्यलज्जया ॥ ५९ ॥

(அ-கை.)

அப்படியானால் சுருதியர்த்தத்தைக் கூறும் சில புருஷர்களும் இப்படி அதாவது கூடஸ்தஜீவர்களின் ஐக்கியம் பிராந்திவடிவ மென்று ஏன் அறியவில்லையென் றாசங்கித்து, அவர்கள் சுருதியர்த்தம் முழுவதும் விசாரியாமையால் அறியவில்லை யென்று கூறுகின்றார்:—

तत्र पूर्वापरपरामर्शविकलाः केचन स्वस्वपक्षे वाक्याभासान् अपि अलज्जया योजयंति ॥

(சு-ம்.)

அவர்களுள் முன்பின் விசாரணையில்லாதவர்களாகிய சிலர் அதாவது சிறிது சுருதியர்த்த முணர்ந்தவர்கள் தங்கள்தங்கள் பக்ஷத்தில் *௨௭. வாக்கியாபாசங்களையும் வெட்கமில்லாமல் சேர்க்கின்றார்கள். (௫௯)

---

*௨௭. முன்பின் விரோதத்தால் வேறு அர்த்தத்தில் தாற்பரியமுடைய வாக்கியம் வாக்கியாபாச மெனப்படும்.

௩. ஆத்மதத்துவவிவேகத்தால் ஆத்மாவினிடத்து விவாதம் ௩௫௪-௩௯௫.

க. ஆத்மாவின் சொரூபத்தில் விவாதம் ௩௫௪-௩௭௧.

க. லோகாயதபாமரர்களது மதம் (சங்காதம் ஆத்மா).

[௩௫௪] कूटस्थादिशरीरांतसंघातस्यात्मतां जगुः ।
लोकायताः पामराश्च प्रत्यक्षाभासमाश्रिताः ॥ ६० ॥

(அ-கை.)

அவ்வாதிகளுள் பிரத்தியக்ஷப்பிரமாணம் ஒன்றையே அங்கீகரித்தலால் மிக ஸ்தூலமாயிருத்தலின் லோகாயதர்முதலியோர்களது மதத்தை முதலில் அநுவாதஞ் செய்கின்றார்:—

लोकायताः च पामराः कूटस्थादिशरीरांतसंघातस्य आत्मतां जगुः ॥

(சு-ம்.)

உலோகாயதராகிய சார்வாகாநுசாரிகளான நாஸ்திகர்களும், பாமரர்களும் கூடஸ்தர்முதல் சரீரம்வரையிலுள்ள சங்காதமாகிய சமூகத்திற்கு ஆத்மத்தன்மையைச் சொல்லுகின்றனர்.

(அ-கை.)

அப்படியானால் பிரத்தியக்ஷசித்தமாயிருத்தலால் தேகமுதலிய சங்காதங்களுக்கு ஆத்மத்தன்மை பாரமார்த்திகமாம் என்று ஆசங்கித்துக் கூறுகின்றார்:—

प्रत्यक्षाभासं आश्रिताः ॥

(சு-ம்.)

அவர்கள் பிரத்தியக்ஷப்பிரமையின் * உ-அ. ஆபாசத்தை ஆசிரயித்திருக்கின்றார்கள். (௬0)

[௩௫௫] श्रौतीकर्तुं स्वपक्षं ते कोशमन्नमयं तथा ।
विरोचनस्य सिद्धांतं प्रमाणं प्रतिजज्ञिरे ॥ ६१ ॥

---

* உ-அ. தேகத்தில் நானென்னும் தோற்றத்தால் பிரத்தியக்ஷஞானம் உண்டாகின்றது. அதுபோல இந்திரியமுதலியவற்றிற்கும் நானென்னும் தோற்றத்தால் பிரத்தியக்ஷஞானம் உண்டாகிறது. ஆகையால் தேகத்தை விஷயஞ்செய்யும் பிரத்தியக்ஷஞானம் வியபிசாரமுடையதாயிருத்தலால் இந்தப் பிரத்தியக்ஷஞானத்திற்கு ஆபாசரூபத்துவமுண்டு.

(அ-கை.)

அந்தத் தேகாத்மவாதிகளாகிய பிரத்தியக்ஷப்பிரமாண மொன்றையே கொள்ளும் சார்வாகர்முதலிய வாதிகளும் அந்நியபுருஷர்களைப் பிரமிக்கச் செய்தற்பொருட்டுத் தமது மதம் சுருதிசித்தமா மென்று காட்ட வாக்கியத்தையும் உதாகரிக்கின்றார்கள் என்று கூறுகின்றார்:—

ते स्वपक्षं श्रौतीकर्तुं अन्नमयं कोशं तथा विरोचनस्य सिद्धांतं प्रमाणं प्रतिजज्ञिरे ॥

(சு-ம்.)

அவர்கள் தமது பக்ஷத்தைச் சுருதிசித்தமாகச் செய்தற்கு அந்நமய கோசத்தையும், அப்படியே பிரகலாதரது புத்திரராகிய அசுரசுவாமி என்னும் விரோசனரது சித்தாந்தத்தையும் பிரதிஞ்ஞையாகச் சொல்லுகின்றார்கள்:—

(வி-ம்.)

" அந்நமயகோசத்தை " யென்று சொல்லுதலால் அந்நமயகோசத்தைப் பிரதிபாதிக்கும் "स वा एष पुरुषोऽन्नरसमयः அந்த இப்புருஷன் அந்நரசமயன் " என்னும் வாக்கியங்கள் கொள்ளப்படுகின்றன. " விரோசனரது சித்தாந்தத்தை " என்றதனால் அந்த விரோசனரது சித்தாந்தத்தைப் பிரதிபாதிக்கும் " आत्मैव देहमयः ஆத்மாவே தேகமயன் "[1] என்னும் வாக்கியங்கள் இலக்ஷணையினால் அறியப்படுகின்றன. இந்த அந்நமயகோசத்தையும் விரோசனரது சித்தாந்தத்தையும் பிரதிபாதிக்கும் இரண்டு சுருதிவாக்கியங்களையும் பிரமாணமாகப் பிரதிஞ்ஞைசெய்கின்றார்களே தவிர நிரூபித்தற்குச் சமர்த்தரல்லர்; பிரசங்கவிரோதமிருத்தலால் *உகூ. என்பது தாற்பரியம். (கூக)

*உகூ. இங்கு இது விசேஷமாம்:—சார்வாகலோகாயதமதாநுசாரிகள் முறையே வாயுமுதலிய நான்கு பூதங்களின் சங்காதமாகிய அல்லது ஆகாயமுதலிய ஐந்து பூதங்களின் சங்காதமாகிய தேகத்தை ஆத்மா வென்று மதித்து இந்த யுக்தியைக் கூறுகின்றனர்: —

(க) எது யானென்னும் புத்திக்கு விஷயமாகின்றதோ அது ஆத்மாவாம். "நான் மனிதன் பருத்தவன்; இளைத்தவன் பிராஹ்மணன்." என்னும் இவைமுதலிய அநுபவத்தால் மனிதத்தன்மைமுதலிய தர்மவிசிஷ்ட ஸ்தூலதேகமே நானென்னும் ஞானத்திற்கு விஷயமாகின்றது. ஆகையால் தேகம் ஆத்மாவாம்.

(உ) அல்லது எது மிகுந்தபிரியத்திற்கு விஷயமோ அது ஆத்மாவாம். இந்தத் தேகத்திற்கு உபகாரஞ்செய்தலாகிய நிமித்தத்தால் ஸ்திரீபுத்திரதனாதிகளே பிரியமாகக் காணப்படுகின்றன. அந்தத் தேகமே மிகுந்த பிரியத்திற்கு விஷயமாம். ஆகையால் மிகுந்த பிரியமாதல்வடிவ இலக்ஷணத்தாலும் ஸ்தூலதேகமே ஆத்மாவாம்.

௨. சுலோகம் ௩௰௪-௩௰௫ ல் கூறிய மதத்தில் தோஷத்தோடு இந்திரியாத்மவாதியின் மதம் (இந்திரியம் ஆத்மா).

[௩௰௪] जीवात्मनिर्गमे देहमरणस्यात्र दर्शनात् ।
देहातिरिक्त एवात्मेत्याहुर्लोकायताः परे ॥ ६२ ॥

---

(௩) அந்தத் தேகமாகிய ஆத்மாவிற்கு ஸ்நாநம் மஞ்சனம் அதாவது குளித்தல் அஞ்சனம் (மைதீட்டல்) வஸ்திரம் பூஷணம் என்பவைகளாலும், நாநாவித போஜனங்களாலும், அலங்கரித்தல் போஷித்தல்களாலு முண்டாகும் போகமே பரமபுருஷார்த்தமாம்.

(௪) மரணமே மோக்ஷமாம். பிரத்தியக்ஷம் ஒன்றே பிரமாணம். வேறு பிரமாணங்க ளில்லை.

இது சார்வாகர்முதலியோரது மதம்.

இச்சார்வாகமதம் அசங்கதமாம்.

[க] ஏனெனின், "நான் காண்கிறேன்" "கேட்கிறேன்" "பேசுகிறேன்" என்றிவ்வாறு இந்திரியமும் நானென்னும் ஞானத்திற்கு விஷயமாகத் தோற்றுகின்றது. அன்றியும், "எனது தேகம் பருத்திருக்கின்றது அல்லது இளைத்திருக்கின்றது." என்றிவ்வாறு தேகத்தில் மமதைக்கு விஷயமாகுந்தன்மையும் காணப்படுகின்றது. எது மமதைக்கு விஷயமாகின்றதோ அது அகந்தைக்கு விஷயமாகிற தில்லை. ஆகையால் ஸ்தூலதேகத்திற்கும் நானென்னும் தோற்றத்திற்கும் விஷயமாகுந்தன்மை வியபிசாரமுடையதாம். ஆகையால் ஸ்தூலதேகம் ஆத்மாவாதல் பொருந்தாது.

[௨] ஸ்திரீ புத்திர தனமுதலியவற்றைப் பார்க்கிலும் தேகத்தில் அதிகப்பிரியம் காணப்படுவதுபோலத் தேகத்தைவிட இந்திரியங்களில் அதிகப்பிரியம் தோற்றுகின்றது. ஆகையால் தேகத்தில் எல்லாவற்றிற்கும் அதிகப்பிரியமில்லாமையால் தேகம் மேலாகிய பிரியத்திற்கு விஷய மன்று. அதனாலும் ஸ்தூலதேகம் ஆத்மா வன்று.

அல்லது சேதனமே ஆத்மாவாம். ஜடபூதங்களின் சங்காதமாகிய தேகத்தில் சேதனத்தன்மை யில்லை. இதனாலும் தேகம் ஆத்மா வன்று.

சார்வாகர்முதலியோர் கூறுவதாவது:—வெற்றிலை பாக்கு சுண்ணம்புமுதலியவற்றோடுகூடிய தாம்பூலத்தில் சிவப்புநிறமாகிய சக்தியுண்டாதல்போலப் பூதசமுதாயமாகிய தேகத்தில் ஞானசக்தி யுண்டாகின்றது என்பதாம்; அது பொருந்தாது. ஏனெனின், அப்படியானல் பூதங்களின் சமுதாயமாகிய கடத்திலும் சேதனத்துவமுண்டாகவேண்டும்; அங்ஙனமாகிறதில்லை. அன்றியும், சுழுத்தி மூர்ச்சை மரணமுதலிய அவஸ்தையில் கடத்தைப்போலத் தேகம் ஜடமாயிருத்தல் பிரசித்தமாம். ஆகையால் ஜடமாயிருத்தலாலும் தேகம் ஆத்மாவாதல் பொருந்தாது.

அல்லது,தேகம் ஆத்மாவா யிருக்குமாயின் பாலியசரீரத்திற்கு வேருகிய யௌவனசரீரத்திலும் 'அதுவே நான்' என்னும் பிரத்தியபிஞ்ஞை உண்டாகலாகாது; உண்டாகின்றது. இதனாலும் தேகம் ஆத்மா வன்று.

அல்லது எதனால் தேகம் ஜன்மமரணமுடையதா யிருத்தலால் பிறத்தற்கு முன்னும் மரித்தற்குப் பின்னும் தேகமில்லாதிருக்கின்றதோ அதனாலும் தேகம் ஆத்மா

(அ-கை.)

இந்தத் தேகாத்மவாதியின் மதத்தில் தோஷத்தைக் காட்டுதல்பூர்வக மாக அந்நிய இந்திரியாத்மவாதியின் மதத்தை எழுப்புகின்றார்:—

जीवात्मनिर्गमे अत्र देहमरणस्य दर्शनात् देहातिरिक्तः एव आत्मा इति परे लोकायताः आहुः ॥

---

வன்று. ஏனெனின், முன் கஎஅ-வது சுலோகத்தில் கூறிய கிருதநாசம் அகிருதாப் பியாகமம் அதாவது செய்வது கெடுதல் செய்யாதது வருதல் என்னும் தோஷமிருத் தலால் அந்தத்தோஷங்களை அங்கீகரித்தலும் அசங்கதமாம். ஏனெனின், மரணத் திற்குப்பின் போக்தாவாகிய ஆத்மாவில்லாமையால் செய்யப்பட்ட கர்மங்கள் நாசமா குமாயின் எவரும் வேதத்திற்கூறிய கர்மங்களை அநுஷ்டிக்கலாகாது; செய்யக் காண் கின்றோம். உண்டாகிய பாலியமுதலிய அவஸ்தைகளின் பேதத்தால் சரீரமாகிய ஆத்மா வேறாயிருத்தலால் பாலர்முதலியோரால் செய்யப்பட்ட வேதாத்தியயனமுத லிய கர்மங்களின் பலன்கள் யௌவன விருத்த சரீரங்களால் அநுபவிக்கத்தகாமை யால் இவ்வுலகத்திற் செய்த கர்மமும் வியர்த்தமாகும். ஆகையால் கிருதநாசத்தை அங் கீகரித்தல் அநிஷ்டமாம் அதாவது விரும்பத்தக்கதன்று. முன் ஜன்மத்தில் கர்த்தா வின்மையால் செய்யப்படாத கர்மத்தின் போகம் வர்த்தமான ஜன்மத்தில் உண்டாக லாமாயினும், சகலஜனங்களுக்கும் போகத்தின் வேறுபாடு உண்டாகலாகாது; வேறு பாடோ காணப்படுகின்றது. ஆகையால் அகிருதாப்பியாகமம் (செய்யாதது வருதல்) என்பதை அங்கீகரித்தல் பொருந்தாது. அதனாற்றான் தேகம் ஆத்மா வன்று.

இப்படித் தேகத்தின் அநாத்மத்தன்மையைப் பிரதிபாதிக்கும் மற்றும் அநேக யுக் திக ளிருக்கின்றன. அவற்றினை விரிவஞ்சி விடுத்தனம்.

[௬] சார்வாகர்முதலியோர் தேகத்தை அலங்கரித்தல் போஷித்தலாகிய போகத் தைப் பரமபுருஷார்த்த மென்பர். அதுவும் பொருந்தாது. ஏனெனின், புருஷனது இச்சைக்கு எது விஷயமோ அது புருஷார்த்த மெனப்படும். சுகத்தினடைவும் துக்கத் தின் நிவிருத்தியும் சகல புருஷர்களின் இச்சைக்கும் விஷயமாம். அதுவே புருஷார்த் தமாம். எல்லாவற்றினும் அதிக சுகமும் அத்தியந்ததுக்கமின்மையுமே பரமபுரு ஷார்த்தமாம். அதுவே சித்தாந்தத்தில் மோக்ஷமாம். போகம் அதிசயத்தன்மை முதலிய தோஷங்களால் விழுங்கப்பட்டதா யிருத்தலால் பரமபுருஷார்த்த மாகாது.

[௭] மரித்தபின் எரிதல்முதலியவற்றோடு கூடியிருக்கும் தேகமாகிய ஆத்மாவே யில்லாமையால் மரணம் மோக்ஷமாமெனல் பிதற்றுதல்மாத்திரமாம். சாப்பிடாத போஜனம் திருப்திக்கு ஏதுவாதல் அநுமானப்பிரமாணத்தால் சித்தித்திருத்தலாலும், அந்நியதேசத்தில் இறந்த பிதாவின் மரணம் சத்தப்பிரமாணத்தால் சித்தித்தலாலும் இவைமுதலிய வேறு பிரமாணங்களாலும் வியவகாரம் சித்திக்கின்றது. ஆகையால் பிரத்தியக்ஷப்பிரமாணம் ஒன்றையே அங்கீகரித்தல் ஹடமாத்திரமாம்.

இவ்வாற்றால் தேகாத்மவாதிகளாகிய சார்வாகர் மதம் அசங்கதமாம்.

(சு-ம்.)

ஜீவாத்மா தேகத்தினின்றும் வெளிப்பட்டபோது இவ்வுலகத்தில் தேகத்தின் மரணத்தைக் காணுதலால் தேகத்திற்கு வேறாகியதே ஆத்மாவாம் என்று அந்நிய இந்திரியாத்மவாதிகளாகிய சார்வாகர்களின் ஏகதேசிகளாகிய லோகாயதர் சொல்லுகின்றார்கள். (௬௨)

[௫௱௭] प्रत्यक्षत्वेनाभिमताहंधीर्देहातिरेकिणम् ।
गमयेदिंद्रियात्मानं वच्मीत्यादिप्रयोगतः ॥ ६३ ॥

(அ-கை.)

அப்படியானால் தேகத்திற்கு வேறாகிய ஆத்மா எப்படியிருக்கின்றது? எந்தப் பிரமாணத்தா லறியப்படுகின்றது? என்னும் ஆசங்கை யுண்டாகக் கூறுகின்றார்:—

प्रत्यक्षत्वेन अभिमता अहं धीः वच्मि इत्यादिप्रयोगतः देहातिरेकिणं इंद्रियात्मानं गमयेत् ॥

(சு-ம்.)

பிரத்தியக்ஷத்தன்மையாக ஒப்பப்பட்டிருக்கும் நான் என்னும் ஞானம் நான் பேசுகிறேன் என்று இவைமுதலிய வியவகாரத்தால் தேகத்திற்கு வேறாகிய இந்திரியமாகிய ஆத்மாவை அறிவிக்கின்றது.

(வி-ம்.)

"நான் பேசுகிறேன் நான் பிரார்த்திக்கிறேன்" என்று இவைமுதலிய பிரயோகங்கள் காணப்படுதலால் தேகத்திற்கு வேறாகிய நான் என்னும் புத்தியினால் அறியத்தக்க இந்திரியம் ஆத்மாவாமென்பது பொருள். (௬௩)

[௫௱௮] वागादीनामिंद्रियाणां कलहः श्रुतिषु श्रुतः ।
तेन चैतन्यमेतेषामात्मत्वं तत एव हि ॥ ६४ ॥

(அ-கை.)

அப்படியானால் அசேதனமாகிய இந்திரியங்களுக்கு ஆத்மரூபத்துவம் எப்படி யுண்டாமென்றாசங்கித்துச் சுருதிகளில் இந்திரியங்களின் சம்வாதம் கேட்கப்படுதலின் இந்திரியங்களுக்கு அசேதனத்தன்மை சித்தியாதென்று கூறுகின்றார்:—

वागादीनां इंद्रियाणं कलहः श्रुतिषु श्रुतः तेन एतेषां चैतन्यम् ॥

(சு-ம்.)

வாக்குமுதலிய இந்திரியங்களின் கலகமாகிய சம்வாதம் வேதங்களில் கேட்கப்பட்டிருக்கின்றது. அதனால் இவ்விந்திரியங்களுக்குச் சேதனத் தன்மை யுண்டு.

(அ-கை.)

சேதனத்தன்மையே ஆத்மாவின் இலக்ஷணமா யிருத்தலால் சேதனமாகிய இந்திரியங்களுக்கு ஆத்மரூபத்துவம் உசிதமா மென்று கூறுகின்றார்:—

ततः आत्मत्वं एव हि ॥

(சு-ம்.)

அதனாற்றான் அதாவது இந்திரியம் சேதனமா யிருத்தலாற்றான் இவற்றிற்கு ஆத்மத்தன்மை யிருக்கின்றது. (௬௪)

௩. சுலோகம் ௬௫—௬௮-ல் கூறிய மதத்தில் தோஷத்தோடு பிராணாத்மவாதியின் மதம் (பிராணன் ஆத்மா).

[௬௫] हैरण्यगर्भाः प्राणात्मवादिनस्त्वेवमूचिरे ।
चक्षुराद्यक्षलोपेऽपि प्राणसत्त्वे तु जीवति ॥ ६५ ॥

(அ-கை.)

அந்நியமதத்தை எழுப்புகின்றார்:—

हैरण्यगर्भाः प्राणात्मवादिनः तु एवम् ऊचिरे चक्षुराद्यक्षलोपे अपि प्राणसत्वे तु जीवति ॥

(சு-ம்.)

சமஷ்டிப்பிராணவடிவ இரணியகர்ப்ப உபாசகர்களாகிய பிராணாத்மவாதிகள் இப்படிச் சொல்லியிருக்கின்றனர்:—நேத்திரமுதலிய இந்திரியங்கள் நாசமானாலும் பிராணனிருக்குமாயின் புருஷன் பிழைத்திருக்கின்றான். ஆகையால் பிராணன் ஆத்மாவாம்; * ௬௦. இந்திரியம் ஆத்மாவன்று. (௬௫)

---

* ௬௦. சார்வாகர்களது ஏகதேசியாகிய இந்திரியாத்மவாதி மதம் அசங்கதமாம், ஏனெனின், எஃதின்றிச் சரீரம் இருக்கமாட்டாதோ அஃது ஆத்மாவாம். நேத்திரமுதலிய ஒவ்வொரு இந்திரியமும் நாசமாயினும் குருடு செவிடுமுதலியனவாகச் சரீரம் நிலைக்கின்றது. ஆகையால் இந்திரியம் ஆத்மா வன்று.

[௩௯௦] प्राणो जागर्ति सुप्तेऽपि प्राणश्रैष्ठ्यादिकं श्रुतम् ।
कोशः प्राणमयः सम्यग्विस्तरेण प्रपंचितः ॥ ६६ ॥

(அ-கை.)

*பிராணனது ஆத்மசொரூபத்தன்மையில் சுருதியிற் சொல்லிய இலிங்கமாகிய ஏதுவைக் கூறுகின்றார்:—*

---

" நான் பார்க்கிறேன் கேட்கிறேன்" என்றிவ்வாறு நானெனும் ஞானத்திற்கு விஷயமாதலால் இந்திரியம் ஆத்மாவாமென்று இந்திரியாத்மாவாதிகள் கூறுகின்றனர்.

அதுவும் பொருந்தாது. இங்கு " நேத்திரமுடையவனாய் நான் பார்க்கிறேன்." "சுரோத்திரமுடையவனாய்க் கேட்கின்றேன்." என்பது புருஷனது அபிப்பிராயமாம்; "நேத்திரமாகிய நான் பார்க்கிறேன், சுரோத்திரமாகிய நான் கேட்கிறேன்."என்பது புருஷனது அபிப்பிராயமன்று. ஆகையால் இந்த நானென்னும் ஞானத்திற்கு விஷயம் இந்திரியத்திற்கு வேறாகச் சித்திக்கின்றது; இந்திரியமன்று.

" என் பார்வை மந்தமாயிருக்கின்றது, என் வாக்கு ஸ்பஷ்டமாயிருக்கின்றது." என்று இந்திரியங்களின் மமதைக்கு விஷயமாகுந்தன்மை காணப்படுதலால் அவை நான் என்னும் ஞானத்திற்கு விஷயமாதல் வியபிசாரமாகின்றது. ஆகையால் இந்திரியம் ஆத்மா வன்று. எவன் எதை அறிகின்றானோ அவன் கடதிருஷ்டாவைப்போல அதனினும் வேறானவன் என்னும் நியமத்தால் இந்திரியங்களின் மந்தத்தன்மையையும் தெளிவையும் அறியும் ஆத்மா அவற்றினும் வேறாகச் சித்திக்கின்றது.

மனது வியாகுலமுதலியவற்றை அடையுங்காலத்து இந்திரியங்களால் சிரவண முதலிய தத்தம் வியாபாரங்களும் சித்தியாமையால் இந்திரியங்களும் ஜடமாதல் அநுபவசித்தமாம். இவ்வாறு ஜடமாயிருத்தலாலும் இந்திரியம் ஆத்மா வன்று. இப்படி இருந்தும் இந்திரியங்களுக்குச் சேதனத்தன்மை உண்டென்று ஹடஞ்செய்யும் வாதி இது கேட்கத்தக்கவனாவன்:—

(க) ஒரு இந்திரியமே சேதனமா? (உ)அல்லது இந்திரியங்களின் சமுதாயமே சேதனமா ? (௩) அல்லது எல்லா இந்திரியங்களும் தனித்தனி சேதனமா? என்னும் இவை மூன்று விகற்பமாம். இவற்றுள்,

(க) ஒரு இந்திரியமே சேதனமா மென்னும் முதற்பக்ஷம் பொருந்தாது.

ஏனெனின், சுரோத்திரேந்திரியமுதலியவற்றினின்றும் எந்த இந்திரியத்தைச் சேதனமென்று சொல்லுவாயோ அந்த இந்திரியமில்லாமலும் ஞானமும் ஜீவனும் காணப்படுதலால் ஒரு இந்திரியமே சேதனமாகாது.

(உ) இந்திரியங்களின் சமுதாயம் சேதனமென்னும் இரண்டாவது பக்ஷமும் பொருந்தாது. ஏனெனின், ஒரு இந்திரியம் நாசமானால் சமுதாயத்தன்மை கெடும். கெடவே ஞானமும் ஜீவனமும் உண்டாகலாகாது; உண்டாகின்றமையால் இந்திரியங்களின் சமுதாயமும் சேதனமன்று.

सुप्ते अपि प्राणः जागर्ति प्राणश्रैष्ट्यादिकं श्रुतम् प्राणमयः कोशः सम्यक् विस्तरेण प्रपंचितः ॥

(சு-ம்.)

இந்திரியங்களின் உறக்கத்திலும் பிராணன் விழித்திருக்கின்றது. பிராணனது சிரேஷ்டத்தன்மைமுதலியன சுருதியிற் கேட்கப்பட்டிருக்கின்றன. பிராணமயகோசம் நன்றாய் விரிவாகச் சுருதியில் விரிக்கப்பட்டிருக்கின்றது.

(வி-ம்.)

"प्राणदय एवैतस्मिन् पुरे जाग्रति பிராணன்முதலிய பஞ்சவாயுக்களே இந்தத் தேகமாகிய புரத்தில் விழித்திருக்கின்றன." என்னும் இவைமுதலிய சுருதி வாக்கியங்களால் பிராணனது விழிப்புக் கேட்கப்பட்டிருக்கின்றது. "तत् प्राणे प्रपन्न उदतिष्ठत् तदुक्थमभवत्तदेतदुक्थम् அவ்விந்திரியகணங்கள் சுழுத்தியில் பிராணனில் லயமாய் ஜாக்கிரத்தில் பிராணனின்றும் எழுந்தன. ஆகையால் எதனினின்றும் இந்திரியகணங்கள் எழுகின்றனவோ அது உக்தமாமென்னும் அர்த்தத்தோடுகூடிய பெயருடையதாயிற்று. அதனாற்றான் இந்தப் பிராணன் * ௬௧. உக்தமாம்." என்பதாகப் பிராணனது சிரேஷ்டத்தன்மைமுதலியன கேட்கப்பட்டிருக்கின்றன. "अन्योऽतर अत्मा प्राणमयः அந்நமயத்திற்கு வேறாகிய அந்தராத்மா பிராணமயமாம்." என்னும் இவை முதலிய சுருதிவாக்கியங்களால் பிராணமயகோசம் விஸ்தாரமாகச் சொல்லப்பட்டிருக்கின்றது. மூலத்தில் "பிராணனது சிரேஷ்டத்தன்மைமுதலியன கேட்கப்பட்டிருக்கின்றன" என்னுமிடத்துள்ள முதலியனவென்னும் சொல்லால் பிராணனது சம்வாதம், சரீரத்திற்பிரவேசித்தல் முதலியவற்றைக் கொள்ளவேண்டும்.

---

(௩) எல்லா இந்திரியங்களும் தனித்தனி சேதனமாமென்னும் மூன்றாவது பக்ஷமும் பொருந்தாது. ஏனெனின், அப்படியிருந்தால் ஒரு சரீரத்தில் பத்து சேதனமா (ஆத்மாவா)ம். அவை எல்லாவற்றிற்கும் தனித்தனி இச்சை யுண்டாதலால் ஒரு வாழைமரத்திற் கட்டிய பத்து யானைகளால் வாழைமரம் நாசமாதல் போலச் சரீரம் பங்கமாகும். ஆகையால் சகல இந்திரியங்களும் தனித்தனி சேதன மன்று.

இப்படி அசேதனமா யிருத்தலால் இந்திரியம் ஆத்மா வன்று. இந்திரியங்களுக்குச் சுருதியில் கேட்கப்பட்டிருக்கும் சம்வாதம் இந்திரியாபிமானிகளாகிய தேவர்களதேயாம். அதனாலும் இந்திரியங்களுக்குச் சேதனத்துவ மில்லை. ஆகையால் இந்திரியாத்மாவாதிகளின் மதம் அசங்கதமாம்.

* ௬௧. உத்தம்-சிரேஷ்டம்.

௭. சுலோகம் ௫௰௧-௫௯௦-ல் கூறிய மதத்தில் தோஷத்தோடு உபாசகர்களது மதத்தைக் கூறுதல் (மனம் ஆத்மா).

[௫௯௧] मन आत्मेति मन्यंत उपासनपरा जनाः ।
प्राणस्याभोक्तृता स्पष्टा भोक्तृत्वं मनसस्ततः ॥ ६७ ॥

(அ-கை.)

பிராணனைப் பார்க்கிலும் உள்ளாகிய மனதிற்கு ஆத்மத்தன்மையைக் கூறும் வாதிகளாகிய நாரதபாஞ்சராத்திராநுசாரிகளின் மதத்தைக் காட்டுகின்றார்:—

उपासनपराः जनाः मनः आत्मा इति मन्यंते ॥

(சு-ம்.)

உபாசனபரர்களாகிய ஜனங்கள் மனது ஆத்மா என்று மதிக்கின்றார்கள்.

(அ-கை.)

பிராணன் ஆத்மாவன்றென்பதில் யுக்தியைக் கூறுகின்றார்:—

प्राणस्य अभोक्तृता स्पष्टा ततः मनसः भोक्तृत्वम् ॥

(சு-ம்.)

எதனால் * ௫௨. போக்திருத்துவமில்லாமை வெளிப்படையாயிருக்கின்றதோ அதனால் மனதிற்குப் போக்திருத்துவமிருக்கின்றது. (௬௭)

---

* ௫௨.

(௧) பிராணன் ஆத்மா வன்று; வாயுவாகையால்; வெளிவாயுவைப்போல.

(௨) பிராணன் தோன்றாமையால் நியமமாக மரண முண்டாகிற தில்லை ஏனெனின், விருக்ஷமுதலியவற்றில் பிராணன் தோன்றாதிருந்தும் மரணம் காணப்படவில்லை. மனிதர்முதலிய பிராணிகளிடத்தும் மூர்ச்சைமுதலியகாலங்களில் பிராணன் காணப்படுகிற தில்லை. அப்படித் தோற்றாவிடினும் அப்பிராணிகள் இறக்கிற தில்லை; ஜீவித்துக்கொண்டிருக்கிறார்கள். ஆகையால் பிராணன் ஆத்மா வன்று.

(௩) நித்திரைக்காலத்தில் பிராணன் விழித்துக்கொண்டிருக்கினும், அப்போது எவனாவது சரீரத்திலுள்ள ஆபரணமுதலியவற்றை எடுத்துக்கொண்டு போனாலும் தடுக்கிறதில்லை; சம்பந்தியாகிய ஒருவன் வந்திருந்தால் அவனை உபசரிக்கிறது மில்லை. ஆகையால் பிராணன் ஜடமாம். அதனாற்றான் ஆத்மா வன்று.

(௪) **பிராணாத்மவாதிகள்** பிராணன் வெளிப்படுதலால் தேகத்திற்கு மரண முண்டாகின்றமையால் பிராணன் ஆத்மா வென்று கூறுதலும் அசங்கதமாம். ஏனெனின், ஜடராக்கினி வெளிப்படுதலாலும் தேகத்திற்கு மரணம் உண்டாகின்றது. அங்கே வியபிசார மிருக்கின்றது. ஆகையால் ஆத்மா வன்று.

[ந-கூஉ] मन एव मनुष्याणां कारणं बंधमोक्षयोः ।
श्रुतो मनोमयः कोशस्तेनात्मेतीरितं मनः ॥ ६८ ॥

(அ-கை.)

மனது ஆத்மா வென்பதில் யுக்தியைப் பிரதிபாதிக்கும் சுருதியைக் கூறுகின்றார்:—

मनुष्याणां बंधमोक्षयोः कारणं मनः एव ॥

(சு-ம்.)

மனிதர்களுக்குப் பந்தமோக்ஷ மிரண்டற்கும் காரணம் மனமேயாம்.

(அ-கை.)

" तस्माद्वा एतस्मात्प्राणमयादन्योऽतर आत्मा मनोमयः அந்த மந்திரபாகத்திற் கூறிய அல்லது இந்த பிராஹ்மணபாகத்திற் கூறிய பிராணமயனைவிட வேறு அந்தராத்மா மனோமயம்." என்னும் அந்நிய சுருதியைக் காட்டுகின்றார்:—

मनोमयः कोशः श्रुतः ॥

(சு-ம்.)

மனோமயகோசம் கேட்கப்பட்டிருக்கின்றது.

---

(௫) சுருதியில் சொல்லியிருக்கும் பிராணனது சிரேஷ்டத்தன்மைமுதலியவை பிராணோபாசனையில் பிரவிருத்திக்கும்பொருட்டுத் துதிமாத்திரமேயாம். ஆகையால் அது அர்த்தவாதரூபமாம். அன்றியும் சுருதியில் பிராணமயகோசத்திற்கு ஆத்மத்தன்மையைப் பிரதிபாதிக்கும் வசனங்களால் பாதமாகுதலால் அந்தக் கோசங்களுக்கு ஆத்மத்தன்மையைப் பிரதிபாதிக்கும் சுருதிவசனங்களுக்குத் தூலாருந்ததி நியாயத்தால் அதிஷ்டானப் பிரத்தியகபின்ன பிரஹ்மத்தை அறிவித்தலிலேயே தாற்பரியமாம். இதனை எல்லாக்கோசங்களுக்கும் ஆத்மத்தன்மையைப் பிரதிபாதிக்கும் சுருதிகளிற் காண்க. இந்திரியங்களோடு பிராணனுக்குச் சம்வாதமும் சரீரத்திற் பிரவேசமும் சொல்லப்பட்டிருக்கின்றது. அதுவும் வாயுவின் அபிமானியாகிய தேவதைக்காம்.

(௬) "பசியினால் என் பிராணன் போய்விடும்." அல்லது "போஜனத்தால் என் பிராணன் சந்தோஷ மடைந்தது." என்றிப்படிப் பிராணனிடத்து மமதைக்கு விஷயமாகுந்தன்மை காணப்படுதலால் நான் என்னும் தோற்றத்திற்கு விஷயமாகுந்தன்மை இல்லை. இதனாலும் பிராணன் ஆத்மா வன்று.

(௭) தன் பிராணனது போக்குவரவுமுதலியன தன்னாலறிய(அநுபவிக்க)ப்படுதலால் பிராணனை அறியும் ஆத்மாவாகிய தான் பிராணனைவிட வேறும்.

(அ-கை.)

பலிதத்தைக் கூறுகின்றார்:—

तेन मनः आत्मा इति ईरितम् ॥

(சு-ம்.)

அதனால் * ௩௩. மனம் ஆத்மா என்று சொல்லப்பட்டிருக்கிறது. (சு-அ)

ரு. க்ஷணிக விஞ்ஞானவாதியின் மதம் (புத்தி ஆத்மா).

[௩௫௩] विज्ञानमात्मेति पर आहुः क्षणिकवादिनः ।
यतोविज्ञानमूलत्वं मनसो गम्यते स्फुटम् ॥ ६९ ॥

---

* ௩௩.

மனம் ஆத்மா வன்று; கரணமாய் அதாவது சாதனமா யிருத்தலால்; வாச்சு முதலியவற்றைப்போல.

(உ) சுழுத்திமுதலியவற்றில் சாமானியசேதன மிருத்தலால் 'மனமிருந்தால் சேதனத்தன்மையிருக்கும், மனமில்லாவிட்டால் இராது, என்னும் அந்வயவியதிரேகம் பங்கமாதலால் மனம் சேதன மன்று; ஆனால் ஜடமாம். இதனாலும் மனம் ஆத்மா வன்று.

(௩) "முன் என் மனம் வேறிடத்திற் சென்றிருந்தது." "இப்பொழுது என் மனம் ஸ்திரமாயிருக்கின்றது." என்றுமனதினிடத்து மமதைக்கு விஷயமாகுந்தன்மையிருத்தலால் நானென்னுந் தோற்றத்திற்கு விஷயமாகுந்தன்மை இல்லை. ஆகையால் மனதின் நிலையையும் நிலையின்மையினையும் அறியும் ஆத்மா மனதைவிட வேறாகச் சித்திக்கின்றது.

(௪) சேதனத்தின் ஆபாசவிசிஷ்டமா யிருத்தலால் மனதிற்குப் போக்திருத்துவ முண்டு; சுதந்தரமா யில்லை. ஆதலால் போக்திருத்தன்மையினாலும் மனதிற்கு ஆத்மத்தன்மை யில்லை.

(ரு) "மனிதர்களுக்குப் பந்தமோக்ஷத்திற்குக் காரணம் மனமேயாம். விஷயத்தில் ஆசக்தியாகிய மனம் பந்தத்தின்பொருட்டாம். நிர்விஷயமாகிய அதாவது விஷயவாசனையின்றிய மனம் முக்தியின்பொருட்டாம்." என்னும் சுருதி மனதிற்கு ஞானப்பிராப்திவாயிலாக மனதின் பாதத்தால் மோக்ஷத்திற்கு ஏதுவாகுந்தன்மையினையும், விஷயவாசனையால் மோக்ஷசாதனத்தைப் பிரதிபந்திக்கும்வாயிலாக அத்தியாசமிருத்தலால் பந்தத்திற்கு ஏதுவாகுந்தன்மையினையும் கூறுகின்றது; மனதின் ஆத்மரூபத்தன்மையைக் கூறுகிறதில்லை. ஆகையால் இந்தச் சுருதி மனம் ஆத்மா வென்பதில் பிரமாண மன்று; ஆனால் பந்தத்தினது சாதனங்களினின்றும் நீங்குதலையும் மோக்ஷத்தின் சாதனங்களில் பிரவிருத்தித்தலையும் போதிப்பதாம்.

(சு) சுருதியில் மனோமயகோசத்திற்கு ஆத்மத்தன்மை சொல்லப்பட்டிருக்கிறது. அதன் நிராகரணம் இதற்கு முந்திய டிப்பணத்திலேயே கூறப்பட்டிருக்கின்றது. இவ்வாற்றால் மனதிற்கு ஆத்மத்தன்மை அசங்கதமாம்.

(அ-கை.)

மனத்திலும் ஆந்தரமான புத்தியாகிய விஞ்ஞானத்தை ஆத்மா வென்று கூறும் பௌத்தன் அதாவது புத்தரது சிஷ்யனுகிய யோகாசாரனென்னும் நாஸ்திகனது மதத்தைக் காட்டுகின்ருர்.—

परे क्षणिकवादिनः विज्ञानं आत्मा इति आहुः ॥

(சு-ம்.)

அந்நியமாகிய க்ஷணிகவாதிகள் க்ஷணிகஞானவடிவ புத்தியாகிய
ஃ௩௩. விஞ்ஞானமே ஆத்மா வென்று சொல்லுகிருர்கள்.

(அ-கை.)

புத்தி மனத்திலும் ஆந்தரமா மென்பதில் யுக்தியைக் கூறுகின்ருர்:—

यतः मनसः विज्ञानमूलत्वं स्फुटं गम्यते ॥

(சு-ம்.)

எதனுல் மனதிற்கு விஞ்ஞானமாகிய காரணமுடைமை தெளிவாய் அறியப்படுகின்றதோ அதனுல் என்று அறிக. (௬௯)

[௩௬௪] अहंवृत्तिरिदंवृत्तिरित्यंतःकरणं द्विधा ।
विज्ञानं स्यादहंवृत्तिरिदंवृत्तिर्मनो भवेत् ॥ ७० ॥

(அ-கை.)

அப்படியானுல் விஞ்ஞானம் மனம் என்னும் சப்தங்களுக்கு வாச்சியமாகிய அந்தக்கரணம் ஒன்ருயிருத்தலால் மனவிஞ்ஞானங்களுக்குக் கிரமமாகக் காரியகாரணத்தன்மை எப்படி யுண்டாமென் ருசங்கித்து, அந்த மனவிஞ்ஞானங்களின் காரியகாரணத்தன்மையை உபபாதனஞ்செய்தற்கு அந்த மனவிஞ்ஞானங்களின் பேதத்தை முதலில் காட்டுகின்ருர்:—

अहंवृत्तिः इदंवृत्तिः इति अंतःकरणं द्विधा । अहंवृत्तिः विज्ञानं स्यात् इदंवृत्तिः मनः भवेत् ॥

(சு-ம்.)

அகம் (யானெனும்) விருத்தி இஃதெனும் விருத்தி என்று அந்தக்கரணம் இரண்டுவகையாம். அவற்றுள், அகம்விருத்தி புத்தி யாகின்றது. இஃதெனும் விருத்தி மன மாகின்றது. (எ௦)

[ருகூ௬] अहंप्रत्ययबीजत्वमिदंवृत्तेरिति स्फुटम् ।
अविदित्वा स्वमात्मानं बाह्यं वेत्ति न तु क्वचित् ॥ ७१ ॥

(அ-கை.)

அந்த மனபுத்திகளின் காரியகாரணத்தன்மைகளைக் கூறுகின்றார் :—

अहंप्रत्ययबीजत्वं इदंवृत्तेः इति स्फुटम् ॥

(சு-ம்.)

நானெனும் விருத்தியாகிய காரணத்தினையுடைமை இஃதெனும் விருத்திக்கு மிக ஸ்பஷ்டமா யிருக்கின்றது.

(அ-கை.)

அந்த நானெனும் விருத்தியிலுள்ள இஃதெனும் விருத்தியின் காரணத்தன்மையினையே உபபாதனஞ்செய்கின்றார்:—

स्वं आत्मानं अविदित्वा क्वचित् बाह्यं न तु वेत्ति ॥

(சு-ம்.)

தன்சொரூபத்தை அறியாமல் புருஷன் ஓரிடத்தும் வெளிப்பொருள்களாகிய அநாத்மவஸ்துக்களை அறிகிறதில்லை.

(வி-ம்.)

நானெனும் விருத்தியுண்டாகாமல் இஃதெனும் விருத்தி உண்டாகாமையால், இந்த இஃதெனும் விருத்தியாகிய மனதிற்கும் அகம்விருத்தியாகிய புத்திக்கும் கிரமமாகக் காரியகாரணத்தன்மை யிருக்கின்றதென்பது பொருள். (எக)

[ருகூகூ] क्षणे क्षणे जन्मनाशावहंवृत्तेर्मितौ यतः ।
विज्ञानं क्षणिकं तेन स्वप्रकाशं स्वतो मितेः ॥ ७२ ॥

(அ-கை.)

அந்த விஞ்ஞானம் க்ஷணிக மென்பதில் அநுபவத்தைப் பிரமாணமாகக் கூறுகின்றார்:—

यतः क्षणे क्षणे अहंवृत्तेः जन्मनाशौ मितौ तेन विज्ञानं क्षणिकम् ॥

(சு-ம்.)

எதனால் கணத்திற்குக் கணம் அகம்விருத்தியின் உற்பத்திநாசங்கள் அளக்கப்படுகின்றனவோ அதனால் விஞ்ஞானம் க்ஷணிகமாம்.

(அ-கை.)

விஞ்ஞானத்தின் க்ஷணிகத்தன்மையை உபபாதனஞ்செய்து சொப்பிரகாசத்தன்மையை உபபாதனஞ்செய்கின்றார்:—

स्वतः मितेः स्वप्रकाशम् ॥

(சு-ம்.)

தானாகவே அளக்கப்பட்டிருத்தலால் விஞ்ஞானம் சொப்பிரகாசமாம். (எ௨)

[௫௬௭] विज्ञानमयकोशोऽयं जीव इत्यागमा जगुः ।
सर्वसंसार एतस्य जन्मनाशसुखादिकः ॥ ७३ ॥

(அ-கை.)

விஞ்ஞானம் ஆத்மா வென்பதில் ஆகமம் (வேதம்) பிரமாணமாமென்று கூறுகின்றார்:—

"विज्ञानमयकोशः अयं जीवः जन्मानाशसुखादिकः सर्वसंसारः एतस्य" आगमाः जगुः ॥

(சு-ம்.)

விஞ்ஞானமயகோசம் இந்த ஜீவனும். பிறப்பு, இறப்பு, சுகமுதலிய சகல சம்சாரமும் இந்த விஞ்ஞானத்திற்கேயாம் என்று வேதங்கள் கூறுகின்றன.

(வி-ம்.)

" तस्माद्वा एतस्मान्मनोमयादन्योऽतर अत्मा विज्ञानमयः அந்த அல்லது மனோமயனினும் அந்நியமாகிய அந்தராத்மா விஞ்ஞானமயன் " विज्ञानं यज्ञं तनुते விஞ்ஞானம் யஞ்ஞத்தை விஸ்தரிக்கின்றது " இவை முதலிய சுருதிவாக்கியங்கள் விஞ்ஞானத்தின் ஆத்மத்தன்மையைப் பிரதிபாதிப்பவைகளாம் என்பது தாற்பரியம். (எ௩)

சு. சுலோகம் ௫௬௫-௫௬௭-ல் கூறிய மதத்தில் தோஷத்தோடு மாத்தியமிகர் மதத்தைக் கூறுதல் (சூனியம் ஆத்மா).

[௫௬௮] विज्ञानं क्षणिकं नात्मा विद्युदभ्रनिमेषवत् ।
अन्यस्यानुपलब्धत्वाच्छून्यं माध्यमिका जगुः ॥ ७४ ॥

(அ-கை.)

இப்பொழுது (புத்தரது) சிஷ்யர்களாகிய பௌத்தரது அவாந்தரபேத மாகிய சூநியவாதியான (மாத்தியமிக னென்னும் நாஸ்திகனது) மதத்தைக் காட்டுகின்றார்:—

विद्युदभ्रनिमेषवत् क्षणिकं विज्ञानं आत्मा न । अन्यस्य अनुपलब्धत्वात् माध्यमिकाः शून्यं जगुः ॥

(சு-ம்.)

மின்னல் மேகம் கண்ணிமைகளைப்போல * ருச. க்ஷணிகவிஞ்ஞானம்

---

* ருச. க்ஷணிகவிஞ்ஞானவாதிகளாகிய யோகாசாராநுசாரிகள் புத்தியை ஆத்மாவாக மதிக்கின்றனர். அவர்களது அபிப்பிராய மிதுவாம் :—உள்ளும் வெளியுமாகிய சகலபதார்த்தங்களும் விஞ்ஞானத்தின் வடிவமேயாம். அந்த விஞ்ஞானம் மின்னல் மேகம் கண்ணிமைகளைப்போல் கணத்திற்குக் கணம் உற்பத்திநாசத்தை யடைகின்றமையால் க்ஷணிகமாம்; தன்னையும் பிறவற்றையும் பிரகாசிக்கும் ஞான வடிவமா யிருத்தலால் சோப்பிரகாசமாம்.

முதல் விஞ்ஞானத்திற்குச் சமானமாக வேறு விஞ்ஞான முண்டாகவே அம்முதல் விஞ்ஞானம் கெடுகின்றது. மூன்றாவது விஞ்ஞானம் உண்டாகவே இரண்டாவது விஞ்ஞானம் கெடுகின்றது. இவ்வாறு தீபச்சோதி போலவும், ஆற்றின் பிரவாகம் போலவும் விஞ்ஞானத்தின் தாரை பொருந்தியிருக்கின்றது. ஆலயவிஞ்ஞானதாரை பிரவிருத்திவிஞ்ஞானதாரை என்று விஞ்ஞானதாரை இரண்டுவகையாம். 'நான் நான்' என்னும் வடிவுடையது ஆலயவிஞ்ஞானதாரையாம். அது புத்திவடிவமாம். 'இது கடம்; இது தேகம்.' என்று இதுவெனும் வடிவுடையது பிரவிருத்திவிஞ்ஞான தாரையாம். அது மனமுதலிய பாகியபதார்த்தவடிவமாம். முதலில் ஆலயவிஞ்ஞானதாரை யுண்டானபிறகு பிரவிருத்திவிஞ்ஞானதாரை யுண்டாகின்றமையால் ஆலயவிஞ்ஞானதாரையாகிய புத்திக்குப் பிரவிருத்திவிஞ்ஞானதாரை காரியமாம். அந்த ஆலயவிஞ்ஞானதாரையாகிய புத்தியே ஆத்மாவாம். அதில் பிரவிருத்தி விஞ்ஞானதாரையாகிய மனமுதலியவற்றின் பாதத்தைச் சிந்தித்து ஏகரசமாகிய க்ஷணிகவிஞ்ஞானதாரையின் நிலையே மோக்ஷமாம். இந்த விஞ்ஞானவாதியின் மதம் அசங்கதமாம். ஏனெனின், உருவமுதலிய ஞானவடிவமாகிய காரியத்திற்குக் கரணமாகிய நேத்திரமுதலிய இந்திரியங்களைப் போல நிச்சயமாகிய காரியத்திற்குக் கரண(சாதன)மா யிருத்தலால் புத்தி ஆத்மா வாகாது. ஆனால் சகல பதார்த்தங்களையும் நிச்சயஞ்செய்யும் புத்தியை எது அறிகிறதோ அது ஆத்மா. அவ்வாத்மா பிரகாசரூபமாக எப்போதும் பிரகாசித்துக்கொண்டிருக்கிறது. ஆகையால் பிரகாசிக்கப்படுவது (உருவம்) பிரகாசிப்பது (சூரியன்முதலிய பிரகாசம்) என்பவற்றின் பேதம்போலப் பிரகாசிக்கப்படும் புத்திக்கு வேறாகப் பிரகாசிப்பது ஆத்மாவாம். தீப முதலியவற்றின் பிரகாசம் கடமுதலிய ஆகாரத்தையடைந்து கலப்புத்தன்மையாகப் பிரகாசித்துக்கொண்டிருக்கினும் வஸ்துவாகப் (பொருட்டன்மையால்) பின்ன சொரூபமுடையதேயாம். அதுபோல ஞானசொரூபமாகிய ஆத்மா புத்திவிருத்தி

ஆத்மா வன்று. வேறென்று தோற்றுதிருத்தலால் மாத்தியமிகமதாநுசாரி கள் சூநியத்தை ஆத்மா வென்று கூறுகின்றனர். (எச)

களோடு ஏகவடிவத்தன்மையை யடைந்து கலப்புத்தன்மையாகத் தோற்றிக்கொண் டிருக்கினும், வஸ்துவாகப் புத்திவிருத்திகளுக்கு வேறாகிய நித்தியசுத்தமேயாம். ஒரு பிராஹ்மணனே படிக்குங்கிரியையால் பாடக னென்றும், பாகஞ்செய்யுங்கிரியையால் பாசக (சமையற்கார) னென்றுஞ் சொல்லப்படுவதுபோல அபஞ்சீகிருதபூதங்க ளின் கலப்பாகிய சத்துவகுணம்சங்களின் காரியமாகிய அந்தக்கரணம் நிச்சயிக்கும் கிரியையால் புத்தி என்றும், சங்கற்பவிகற்பமாகிய கிரியையால் மன மென்றும் சொல்லப்படுகின்றது. ஆகையால் நானென்னும் வடிவுடைய ஆந்தரவிருத்தியாகிய புத்திக்கும் இதுவென்னும் வடிவுடைய பாகியவிருத்தியாகிய மனதிற்கும் அந்தக்கர ணத்தைவிட வேற்றுமை சித்திக்கிற தில்லை. இப்படிப் பௌதிகமாயிருத்தலால் தேகேந்திரியமனங்களைப்போல் புத்தி அநாத்மாவாம்.

கடவல்லி உபநிஷத்தின் மூன்றாவது வல்லியில் "ஆத்மாவை இரதிகனாகவும், சரீரத்தை இரதமாகவும், புத்தியைச் சாரதியாகவும், மனதைக் கடிவாளமாகவும், இந்திரியங்களைக் குதிரையாகவும், அந்தக் குதிரையாகிய இந்திரியங்களில் உருவமுதலிய விஷயங்களைக் கோசர(மார்க்க)மாகவும், சரீரேந்திரிய மனதோடு கூடிய ஆத்மாவைப் போக்தாவாக(சம்சாரியாக)வும் அறிக வென்று (பண்டிதர்கள்) கூறியிருக்கின்றனர்." என்னுஞ் சுருதியிற் கூறிய உருவகத்தில் புத்தியின் அநாத்மத் தன்மை அதாவது சாரதிவடிவத்தால் ஆத்மாவிற்கு வேறாகுந்தன்மை பிரசித்தமாம்.

விஞ்ஞானவாதிகள் ஆத்மாவிற்கு க்ஷணிகவடிவம் அங்கீகரிக்கின்றனர். அதுவும் அசங்கதமாம். ஏனெனின், ஆத்மா க்ஷணிகமாயின், முன் பணங்கொடுத்தல்முத லிய காரியங்களைச் செய்தவனாகிய ஆத்மா நாசமாகவே, சில ஆண்டுதினங்களுக்குப் பின் அப்பணத்தை வாங்குதல்முதலிய காரியம் சம்பவியாது. அன்றியும், முதல் க்ஷணத்தில் போஜனஞ் செய்கின்றவனுக்கு இரண்டாவது க்ஷணத்தில் தனது நாசத் தால் போஜனத்திற்குப் பிறகு "போஜனஞ்செய்து உட்கார்ந்த நானே இப்போது திருப்தியடைந்திருக்கிறேன்." என்று பிரத்தியபிஞ்ஞை உண்டாகின்றது. அஃது உண்டாகலாகாது. அன்றியும், நஷ்டமாகிய மனிதன் உத்தரக்ஷணத்தில் பசுவாவன். போஜனஞ்செய்தற்குக் கொண்ட பால்முதலியன உத்தரக்ஷணத்தில் விஷமாகும்.

க்ஷணிகவிஞ்ஞானவாதிகள் "பிராந்தியினால் பிரத்தியபிஞ்ஞை யுண்டாகின்றது. முன் நஷ்டமாகிய ஆத்மாமுதலியவற்றின் சம்ஸ்காரத்தால் இரண்டாவது ஆத்மா முதலியன உண்டாகின்றன. ஆகையால் முற்கூறிய பிரத்தியபிஞ்ஞையும் முன்னை யதற்குச் சமானமாகிய வேறுபதார்த்தத்தின் உற்பத்தியும் சம்பவிக்கு" மென்று கூறு தல் பொருந்தாது. ஏனெனின், விஞ்ஞானவாதியின் மதத்தில் க்ஷணிகமாகிய ஆத்மா அடுத்தக்ஷணத்தில் நாசமுடையதா யிருத்தலால் பிராந்தியின் திருஷ்டாவும் அதிஷ் டானமு மில்லாமையால் பிராந்தி சம்பவியாது. விஞ்ஞானம் நிர்விசேஷமா யிருத்த லால் சம்ஸ்காரத்தின் அங்கீகாரமும் பொருத்தமுடைய தன்று. சமாதானவிருப் பத்தால் சம்ஸ்காரத்தை அங்கீகரிக்கினும், சம்ஸ்காரத்தின் ஆசிரயத்தை அங்கீகரிக்க வேண்டும். அவ்வாசிரயத்தை விஞ்ஞானவடிவமாகக் கூறின் நிர்விசேஷசித்தாந்தத் திற்குப் பங்க முண்டாகும். விஞ்ஞானத்திற்கு வேறாகிய பதார்த்தங்க ளில்லை. ஆகையால் சம்ஸ்காரம் விஞ்ஞானவடிவமா யிருத்தலால் ஆத்மாசிரயதோஷத்தி னடைவுண்டாகும்.

[௫௬௯] असदेवेदमित्यादाविदमेव श्रुतं ततः ।
ज्ञानज्ञेयात्मकं सर्वं जगद्भ्रांतिप्रकल्पितम् ॥ ७५ ॥

(அ-கை.)

அந்தச் சூநியம் ஆத்மா வென்பதில் சுருதியைக் கூறுகின்றார்:—

इदं असत् एव इत्यादौ इदं एव श्रुतं ततः ॥

(சு-ம்.)

"இந்த ஜகத்து முன் அசத்தாகவே இருந்தது" என்னும் இவைமுதலிய சுருதிவாக்கியங்களில் இந்தச் சூநியமே கேட்கப்பட்டிருக்கின்றது. ஆகையால் சூநியம் ஆத்மாவாம்.

(அ-கை.)

அப்படியானால் சூநியமே ஆத்மாவா யிருக்குமாயின் தோற்றிக்கொண்டிருக்கும் ஜகத்திற்கு என்ன *௫டு. கதி யெனக் கூறுகின்றார்:—

ज्ञानज्ञेयात्मकं सर्वं जगत् भ्रांतिप्रकल्पितम् ॥

(சு-ம்.)

ஞானஞேயவடிவமான சகலஜகத்தும் அந்தச் சூநியத்தில் பிராந்தியினால் கற்பிக்கப்பட்டதாம். (எடு)

எ. சுலோகம் ௫௬அ-௫௬௯-ல் கூறிய மதத்தில் தோஷத்தோடு பட்டர்முதலியோரது மதம் (ஆநந்தமயகோசம் ஆத்மா).

[௫எ0] निरधिष्ठानविभ्रांतेरभावादात्मनोऽस्तिता ।
शून्यस्यापि ससाक्षित्वादन्यथा नोक्तिरस्य ते ॥ ७६ ॥

---

ஆத்மா க்ஷணிகமா யிருத்தலால் முதல் க்ஷணத்திலிருக்கும் தான் அடுத்தக்ஷணத்திலில்லாமையால் மோக்ஷத்தின்பொருட்டுக் கூறிய வைராக்கியமுதலிய சாதனங்களில் பிரவிருத்தி யுண்டாகாது. ஆனால் பாப ஒழுக்கத்தால் பிரவிருத்தியுண்டாய் அவர்களுக்கு நரகப்பிராப்தி யுண்டாம். க்ஷணிகவிஞ்ஞானதாரையின் விலயாகிய அவர்களது மோக்ஷத்தில் விசிராந்தியும் தனது இருப்பு மில்லாமையால் யாதொரு குசலத்தின் இச்சையும் உண்டாகாது.

அன்றியும், "எனது புத்தி மந்தமா யிருக்கின்றது. அலலது தீவிரமா யிருக்கின்றது." என்று மமதைக்கு விஷயமாகும் புத்தியின் மந்தத்தன்மைமுதலியவற்றை அறியும் ஆத்மா பின்னமாகச் சித்தித்திருக்கின்றது. ஆகையால் புத்தி சொப்பிரகாச மன்று; ஆனால் பரப்பிரகாசமாம். இவ்வாற்றால் விஞ்ஞானவாதியின் மதம் அசங்கதமாம்.

* ௫டு. வியவஸ்தை.

(அ-கை.)

*அந்தச் சூநியவாதிகள்தான் இம்மதத்தைத் தூஷிக்கின்றார்:—*

**निरधिष्ठानविभ्रांतेः अभावात् शून्यस्य अपि ससाक्षित्वात् आत्मनः अस्तिता । अन्यथा अस्य उक्तिः ते न ॥**

(சு-ம்.)

*அதிஷ்டானமின்றிய பிராந்தியில்லாமையால் சூநியமும் ஆத்மாவாகிய சாக்ஷியுடையதா யிருத்தலால் ஆத்மாவிற்கு இருக்கையாகிய சத்தை ஒப்ப வேண்டியதாம். வேறுவிதமாக இச்சூநியத்தைக் கூறுதலும் சூநியவாதியாகிய உனக்குப் பொருந்தாது.*

(வி-ம்.)

*வந்தியாபுத்திரன்முதலியவற்றிற்குச் சமானமாகிய சொரூபமின்றிய சூநியத்திற்கு அதிஷ்டானத்தன்மை பொருந்தாமையாலும், அதிஷ்டானமின்றிப் பிராந்தி சம்பவியாமையாலும் ஜகத்தின் கற்பனைக்கு அதிஷ்டானமாகிய ஆத்மாவி னிருப்பு அங்கீகரிக்கவேண்டியதாம். அல்லது சூநியவாதிகளுக்கும் சூநியத்தன்மையின் சாக்ஷித்தன்மையாக அவசியம் ஆத்மா அங்கீகரிக்கத்தக்கதாம். அச்சூநியத்திற்கு வேறாகிய ஆத்மாவை அங்கீகரியா விடின், இச்சூநியத்தின் வார்த்தை அதாவது "சூநியம் இருக்கிறது" என்று சொல்லுதல் உன் மாத்தியமிகமதத்தில் சித்தியா *௩௬. தென்பது தாற்பயம்.* (௭௬)

---

*௩௬. புத்தனது சிஷ்யராகிய மாத்தியமிகமதாநுசாரிகள் சூநியத்தை ஆத்மாவெனக் கொள்ளுகின்றனர். அவர்களது அபிப்பிராயம் இதுவாம்:—ஆத்மாவும் ஆத்மாவுக் கந்நியமாயுள்ள சகலபதார்த்தங்களும் சூநியவடிவமாம். அச்சூநியமே எல்லாவற்றிற்கும் பீஜவடிவமா யிருத்தலால் பரமதத்துவமாம். சுழுத்தியில் சகல பதார்த்தங்களு மில்லாதிருத்தலால் எனக்கொன்றும் தெரியவில்லை என்னும் தோற்றத்திற்கு விஷயமும் வித்வான்களது திருஷ்டிக்குத் துச்சமுமாகிய அஞ்ஞான மென்னும் ஆநந்தமயகோசம் எஞ்சியிருக்கின்றது. அதுவே சூநியவடிவமாகிய ஆத்மாவாம். இப்படி அங்கீகரிக்கும் சூநியவாதிகளைக் கேட்கின்றார்:— (க) இந்தச் சூநியம் சாக்ஷியுள்ளதா? (உ) அல்லது சாக்ஷியில்லாததா? (௩) அல்லது சொப்பிரகாசமா? இவை மூன்று விகற்பமாம். அவற்றுள்,

(க) முதற்பக்ஷத்தைக் கூறின், சூநியத்திற்குச் சாக்ஷி எதுவோ அது சூநியத்திற்கு விலக்ஷணமாகிய ஆத்மாவாகச் சித்திக்கும்.

(உ) இரண்டாவது பக்ஷத்தைச் சொல்லுமிடத்துச் சாக்ஷியின்றிய சூநியம் சித்தியாது.

[௬௭௧] अन्यो विज्ञानमयत आनंदमय आंतरः ।
अस्तीत्येवोपलब्धव्य इति वैदिकदर्शनम् ॥ ७७ ॥

(அ-கை.)

அப்படியானால் ஆத்மா யாதென நையாயிகப் பிரபாகர பட்டமதாநுசாரிகளாகிய அந்நியவாதிகள் கூறுகின்றனர்:—

विज्ञानमयतः अन्यः आंतरः आनंदमयः "अस्ति" इति एव उपलब्धव्यः" इति वैदिकदर्शनम् ॥

(சு-ம்.)

விஞ்ஞானமயத்தினும் வேறாக ஆந்தரமாகிய ஆத்மா "இருக்கிறது" என்றே அறியத்தக்கதா மென்பது வேதத்தின் சித்தாந்தம்.

(வி-ம்.)

"तस्माद्वा एतस्माद्विज्ञानमयादन्योऽतर आत्मा आनंदमयः अस्तीत्येवोपलब्धव्यस्तत्त्वभावेन அந்த அல்லது இந்த விஞ்ஞானமயனுக்கு வேறாகிய அந்தராத்மா ஆநந்தமயனும். "இருக்கிறது" என்பதாகவே ஆத்மா தத்துவத்தன்மையாக அதாவது பரமார்த்தவடிவமாக அறியத்தக்கதாம்." என்னுஞ் சுருதி யிருத்தலால் ஆநந்தமயகோசமே ஆத்மாவென் றங்கீகரிக்கத்தக்கதாம். இவ்வாறாகிய இது வைதீகதரிசனமாம் அதாவது வேதத்தின் சித்தாந்தமாம். இவ்வாறு நையாயிகர்முதலியோர் கூறுகின்றனர். (௭௭)

௨. ஆத்மாவின் பரிமாணத்தில் அதாவது அளவில் விவாதம் ௬௭௨-௬௮0.

க. மூவிதபரிமாணங்களைச் சாதாரணமாகக் கூறுதல்.

[௬௭௨] अणुर्महान्मध्यमो वेत्येव तत्रापि वादिनः ।
बहुधा विवदंते हि श्रुतियुक्तिसमाश्रयात् ॥ ७८ ॥

---

(௬) மூன்றாவது பக்ஷத்தைச் சொல்லுமிடத்துச் சொப்பிரகாசத்தன்மையாக எங்களால் கருதப்பட்டிருக்கும் பிரஹ்மமே சூந்நிய மென்னும் வேறு பெயரால் சித்தித்தலால் சூந்நிய மென்பது சித்திக்கவில்லை.

அன்றியும், " இது(ஜகத்து)முன் அசத்தாகவே யிருந்தது." என்னும் சாந்தோக்கியசுருதியின் வாக்கியம் முன்னுக்குப்பின் விரோதப்படுதலால் சூந்நியத்தைப் பிரதிபாதிக்குந் தாற்பரிய முடைய தன்று. ஆனால் நையாயிக வைசேஷிக பௌத்தர்முதலிய வாதிகள் பிராகபாவமுதலியவற்றை ஜகத்திற்குக் காரணமாக ஒப்புகின்றனர். அவற்றை அநுவாதஞ்செய்து அவ்விபரீதக்கொள்கையை நிவிருத்திப்பதிலேயே முற்கூறிய சுருதிக்குத் தாற்பரியமாம். இவ்விதத்தால் சூந்நியவாதியின் மதம் அசங்கதமாம்.

(அ-கை.)

இப்படி ஆத்மாவின் சொரூபத்தில் விவாதத்தைக் காட்டி இப்போது அதன் பரிமாணவிசேஷத்திலும் வாதிகளின் விவாதத்தைக் கூறுகின்றார்:—

अणुः महान् वा मध्यमः इति एवं तत्र अपि वादिनः श्रुतियुक्तिसमाश्रयात् बहुधा विवदंतीह ॥

(சு-ம்.)

அணுவா? அல்லது மகத்தா? அல்லது மத்திமமா? என்று இப்படி அந்த ஆத்மாவின் பரிமாணத்திலும் வாதிகள் சுருதியுக்திகளின் ஆசிரயத்தால் வெகுவிதமாக விவாதஞ்செய்கின்றனர். (௭௮)

உ. அணுபரிமாணவாதியாகிய ஆந்தராளர் மதம் (அணு ஆத்மா).

[௩௭௩] अणुं वदंत्यांतरालाः सूक्ष्मनाडिप्रचारतः ।
रोम्णः सहस्रभागेन तुल्यासु प्रचरत्ययम् ॥ ७९ ॥

(அ-கை.)

இந்தப் பரிமாணபேதவாதிகளுள் அணுபரிமாணவாதியின் மதத்தை முதலில் காட்டுகின்றார்:—

आंतरालाः अणुं वदंति ॥

(சு-ம்.)

ஆந்தராளர்கள் ஆத்மாவை அணுபரிமாணமாகக் கூறுகின்றனர்.

(அ-கை.)

ஆத்மாவிற்கு அணுத்தன்மையைச் சொல்லுதலில் ஏதுவைக் கூறுகின்றார்:—

सूक्ष्मनाडिप्रचारतः ॥

(சு-ம்.)

அந்தச் சூக்ஷ்மநாடிகளில் சஞ்சரித்தலால்.

(அ-கை.)

அந்தச் சூக்ஷ்மநாடிகளில் ஆத்மா பிரவிருத்தித்தலை உபபாதனஞ்செய்கின்றார்:—

रोम्णः सहस्रभागेन तुल्यासु अयं प्रचरति ॥

(சு-ம்.)

உரோமத்தின் ஆயிரமடங்குக்குச் சமானமாகிய சூக்ஷ்மநாடிகளில் இந்த ஆத்மா சஞ்சரிக்கின்றது.

(வி-ம்.)

ஆத்மாவிற்கு அணுபரிமாணமின்றிச் சூக்ஷ்மநாடிகளில் சஞ்சரித்தல் பொருந்தாதாகையால் ஆத்மா அணு என்பது தாற்பரியம். (௭௯)

[௩௭௪] अणोरणीयानेषोऽणुः सूक्ष्मात्सूक्ष्मतरं त्विति ।
अणुत्वमाहुः श्रुतयः शतशोऽथ सहस्रशः ॥ ८० ॥

(அ-கை.)

அப்படியானால் ஆத்மா அணுவென்பதில் பிரமாணம் யாதெனக் கூறுகின்றார்:—

अणोः अणीयान् । एषः अणुः सूक्ष्मात् शूक्ष्मतरं तु इति शतशः अथ सहस्रशः श्रुतयः अणुत्वं आहुः ॥

(சு-ம்.)

"அணுவைப்பார்க்கிலும் மிகுந்த அணுவாம்." "இந்த ஆத்மா அணுவாம்." "சூக்ஷ்மத்திலும் அத்தியந்த சூக்ஷ்மமாம்." என்று நூற்றுக்கணக்காயும், ஆயிரக்கணக்காயுமுள்ள சுருதிகள் அணுத்தன்மையைச் சொல்லுகின்றன.

(வி-ம்.)

अणोरणीयान् महतो महीयान् " "एषोऽणुः आत्मा चेतसा वेदितव्यः" "सूक्ष्मात्सूक्ष्मतरं नित्यं" "அணுவினும் அத்தியந்த அணுவாயும் மகத்திலும் அத்தியந்த மகத்தாயும் இருக்கின்றது." "இவ்வணுவா (சூக்ஷ்மமா) கிய ஆத்மா சுத்தமான மனதால் அறியத்தக்கதாம்." "சூக்ஷ்மத்திலும் சூக்ஷ்மமாயும் நித்தியமாயுமிருக்கின்றது." இவை முதலிய அநேக சுருதிகள் ஆத்மா அணுவென்பதில் பிரமாணமாம் என்பது பொருள். (௮0)

[௩௭௫] वालाग्रशतभागस्य शतधा कल्पितस्य च ।
भागो जीवः स विज्ञेय इति चाहापरा श्रुतिः ॥ ८१ ॥

(அ-கை.)

ஆத்மா அணுவென்பதிலேயே வேறு சுருதியை உதாரணமாகக் கூறுகின்றார்:—

वालाग्रशतभागस्य च शतधा कल्पितस्य भागः सः जीवः विज्ञेयः इति च अपरा श्रुतिः आह ॥

(சு-ம்.)

மயிர் நுனியின் நூற்றிலொருபங்கும், அந்நூறுபங்கும் நூறுவிதமாகச் செய்யப்பட்டதுமாகிய அதன் ஒரு பங்கு அளவு சூக்ஷ்மமாக அந்த ஜீவன் அறியத்தக்கதாம் என்று-வேறு வேதம் ஆத்மாவின் * ௩௭. அணுத்தன்மையைக் கூறுகின்றது. (௮௧)

௩. மத்திமபரிமாணவாதி திகம்பரர்களது மதம் (தேகவளவினது ஆத்மா).

[௩௭௬] दिगंबरा मध्यमत्वमाहुरापादमस्तकम् ।
चैतन्यव्याप्तिसंदृष्टेरानखाग्रश्रुतेरपि ॥ ८२ ॥

(அ-கை)

இப்போது மத்திமபரிமாணவாதிகளாகிய திகம்பரர் என்னும் நாஸ்திகர்களது மதத்தைக் கூறுகின்றார்:—

दिगंबराः मध्यमत्वं आहुः ॥

(சு-ம்.)

திகம்பரர்கள் ஆத்மாவின் மத்திமபரிமாணத்தைச் சொல்லுகின்றனர்.

(அ-கை.)

அந்த ஆத்மாவின் மத்திமபரிமாணத்தன்மையில் யுக்தியைக் கூறுகின்றார்:—

आपादमस्तकं चैतन्यव्याप्तिसंदृष्टेः ॥

(சு-ம்.)

பாதமுதல் சிரசுபரியந்தம் சைதந்யவியாப்தியான நிறைவைச் செவ்வையாய்க் காணுதலால்.

(அ-கை.)

"स एष इह प्रविष्ट आनखाग्रेभ्यः அந்த இவ்வாத்மா இச்சரீரத்தில் நகநுனிவரையில் பிரவேசித்தது." என்னுஞ் சுருதியும் இந்த ஆத்மாவின் மத்திமபரிமாணத்தில் பிரமாணமாமென்று கூறுகின்றனர்:—

---

* ௩௭. ஆத்மாவின் அணுபரிமாணவாதிகளாகிய ஆந்த்ராளர்முதலியோர் மதம் அசங்கதமாம். ஏனெனின், ஆத்மா அணுவாயிருக்குமாயின் ஞாதாவாகிய ஆத்மா அணுவடிவமாயிருப்பதால் சரீரத்தின் ஏகதேசத்தில் நிலைத்திருக்கின்றது. அதனால் பாதம் சிரசு என்னுமிரண்டிடங்களிலும் உண்டாகும் துக்கத்தின் அல்லது சுகத்தின் ஞானம் ஒரேகாலத்திலுண்டாகலாகாது.

आनखाग्रश्रुतेः अपि ॥

(சு-ம்.)

"நகநுனிவரையிலும் பிரவேசித்தது." என்னும் சுருதியினாலும் ஆத்மா மத்திமபரிமாணமுடையதாம். (அ௨)

[௩௭௭] सूक्ष्मनाडीप्रचारस्तु सूक्ष्मैरवयवैर्भवेत् ।
स्थूलदेहस्य हस्ताभ्यां कंचुकप्रतिमोकवत् ॥ ८३ ॥

(அ-கை.)

அப்படியானால் ஆத்மா மத்திமபரிமாணமுடையதாயின்; சுருதிசித்தமாக நாடியில் சஞ்சரித்தல் யாதொன்று ௩௭௩-ல் சொல்லப்பட்டதோ அது பொருந்ாதென் றாசங்கித்துக் கூறுகின்றார்:—

---

ஓரிடத்திலுள்ள புஷ்பமுதலியவற்றின் வாசனை அநேகவிடங்களில் பரவுதல்போலச் சரீரத்தின் ஓரிடத்திலுள்ள அணுவாகிய ஆத்மாவின் ஞானகுணம் சரீரமுழுவதிலும் வியாபிக்குமாகையால் கால்தலைகளில் உண்டாகும் துக்கத்தின் அல்லது சுகத்தின் ஞானம் ஏககாலத்தில் சம்பவிக்குமென்று அணுவாதிகள் கூறுதல் அடாது. ஏனெனின், கடமுதலியவற்றிலுள்ள நீலமுதலிய குணங்களைப்போலக் குணியைவிட்டு வெளியில் குணமிராது என்னும் நியமத்தால் ஆத்மாவிற்கு வெளியே ஞானகுணமிராது.

சரீரத்தின் ஏகதேசத்தில் பரிசத்தையடைந்த சந்தனத்தின் குளிர்ச்சி சரீரமுழுவதிலும் வியாபித்தல்போலச் சரீரத்தின் ஏகதேசத்திலுள்ள அணுவடிவமாகிய ஆத்மாவின் ஞானம் சரீரமுழுவதினும் வியாபிக்கிறதென்று அணுவாதிகள் கூறுதலும் பொருந்தாது. ஏனெனின், சரீரத்தின் ஏகதேசத்தில் சந்தனத்தின் பரிசத்தால் சரீரமுழுவதினும் வியாபித்த ஜலாம்சத்தினது தடிப்பின் எழுச்சி உண்டாகின்றது. அதனால் சரீரமுழுவதினும் குளிர்ச்சி யுண்டாகின்றது. அக்குளிர்ச்சி சந்தனத்தினதன்று. ஆகையால் இந்தத் திருஷ்டாந்தம் தார்ஷ்டாந்தத்தினும் விஷமமாம்.

ஏகதேசத்திலுள்ள பிரகாசம் வீடுமுழுவதும் பிரகாசித்தல்போல ஏகதேசத்திலுள்ள ஆத்மாவின் ஞானம் சரீரமுழுவதினும் வியாபிக்கிறதென்று அவ்வணுவாதிகள் கூறுதலும் பொருந்தாது. ஏனெனின், தீபம்போல் ஆத்மா அவயவமுடையதும் வேறொன்றால் பிரகாசிக்கப்படுவது மாகுதலால் திருசியமும் விநாசமுடையதுமாம். ஆகையால் ஆத்மாவை அணுவடிவமாக ஒப்புதலால் வட்டிக் காசைப்படுகிறவன் முதலையிழந்தாற்போல ஆத்மாவே இல்லாமையாகிய பெரிய அநர்த்த முண்டாகும். ஆத்மாவிற்கு அணுத்தன்மையைக் கூறியிருக்கும் சுருதிகளும் ஸ்தூலபுத்தியுடைய புருஷர்களுக்கு ஆத்மா அணுவைப்போல அறிதற்கரியதென்பது தாற்பரியமாம். ஏனெனின், உபநிஷத்துக்களில் அநேக இடங்களில் ஆத்மா வியாபகவடிவமாக வர்ணிக்கப்பட்டிருக்கின்றது. அதனால் ஆத்மா அணுவடிவமன்று. இவ்வாற்றால் அணுவாதிகளாகிய உபாசகர்முதலியோர் மதம் அசங்கதமாம்.

सूक्ष्मनाडीप्रचारः तु स्थूलदेहस्य हस्ताभ्यां कंचुकप्रतिमोकवत् सूक्ष्मैः अवयवैः भवेत् ॥

(சு-ம்.)

சூக்ஷ்மநாடிகளில் சஞ்சரித்தலோ ஸ்தூலதேகத்திற்கு இரண்டு கைக ளால் சட்டையில் பிரவேசித்த லுண்டாவதுபோலச் சூக்ஷ்மமாகிய ஆத்மா விற்கு அவயவங்களால் உண்டாகும.

(வி-ம்.)

தேகத்தின் அவயவமாகிய இரண்டு கைகள் சட்டையிற் பிரவேசித் தலால் தேகத்திற்குச் சட்டையிற் பிரவேசம் சொல்லப்படுதல்போலச் சூக்ஷ மமாகிய ஆத்மாவின் அவயவங்கள் நாடிகளில் சஞ்சரித்தலால் ஆத்மாவிற் கும் பிரவேசம் உபசாரமாகச் சொல்லப்படுகின்றது. (ஆ-ட)

[௧௭அ] न्यूनाधिकशरीरेषु प्रवेशोऽपि गमागमैः ।
आत्मांशानां भवेत्तेन मध्यमत्वं विनिश्चितम् ॥ ८४ ॥

(அ-கை.)

அப்படியானால் ஆத்மாவிற்கு நியமிக்கப்பட்ட மத்திமபரிமாண மிருக் குமாயின், கர்மவசத்தால் எறும்புமுதலிய சிறியனவும் யானைமுதலிய பெரி யனவுமாகிய சரீரங்களில் பிரவேசித்தல் பொருந்தாதென் றாசங்கித்து, ஆத் மாவின் அவயவங்களின் உற்பத்திநாசத்தால் ஆத்மா நியமிக்கப்பட்ட மத் திமபரிமாணமுடையதா யிருத்தலால் தேகத்தைப்போலச் சிறிதிற் பிரவே சித்தல் பெரிதில் பிரவேசித்தல் என்னும் இரண்டும் விரோதத்தை அடையா வென்று கூறுகின்றார்:—

न्यूनाधिकशरीरेषु प्रवेशः अपि आत्मांशानां गमागमैः भवेत् ॥

(சு-ம்.)

முன்னதினும் சிறிதும் பெரிதுமாகிய சரீரங்களில் ஆத்மாவின் பிரவே சமும் ஆத்மாவினது அம்சங்களின் போக்குவரத்துக்களால் உண்டாகின் றது.

(அ-கை.)

சித்தித்த அர்த்தத்தைக் கூறுகின்றார்:—

तेन मध्यमत्वं विनिश्चितम् ॥

(சு-ம்.)

அதனால் ஆத்மாவின் மத்திமத்தன்மையாகிய சரீரசமானத்தன்மை விசேஷமாக நிச்சயிக்கப்பட்டிருக்கின்றது. (அச)

௪. ஆத்மாவின் மத்திமபரிமாணத்தில் தோஷத்தோடு விபுபரிமாணவாதியாகிய பிராசீனநையாயிகர்முதலியோர்மதம் (விபு ஆத்மா).

[௩௭௯] सांशस्य घटवन्नाशो भवत्येव तथा सति ।
कृतनाशाकृताभ्यागमयोः को वारको भवेत् ॥ ८५ ॥

(அ-கை.)

ஆத்மா அவயவமுடையதா யிருத்தலின் கடமுதலிய அவயவமுடைய வஸ்துக்களைப்போல அநித்தியமா மென்று இந்த மத்திமபரிமாணவாதியாகிய திகம்பரனது மதத்தைத் தூஷிக்கின்றார்:—

सांशस्य घटवत् नाशः भवति एव ॥

(சு-ம்.)

அவயவமுள்ளதற்குக் கடத்தைப்போல நாசம் உண்டாகவேசெய்யும்.

(அ-கை.)

அவயவமுள்ளதா யிருத்தலால் கடத்தைப்போல ஆத்மாவிற்கு நாசமுண்டாகுக. அதனால் என்ன தோஷமெனக் கூறுகின்றார்:—

तथा सति कृतनाशाकृताभ्यागमयोः वारकः कः भवेत् ॥

(சு-ம்.)

அப்படி ஆத்வாவிற்கு நாசமுண்டாகுமாயின் செய்தது நசித்தல் செய்யாதது வருத லென்னும் இரண்டு தோஷங்களையும் எவன் நிவிருத்திப்பவனுவன்?

(வி-ம்.)

செய்த புண்ணியபாபங்கள் அநுபவமின்றி நசித்தல், கிருதநாசமாம். செய்யப்படாத புண்ணியபாபங்கள் அகஸ்மாத்தாய்ப் பலத்தைத் தருதல் அகிருதாப்பியாகமமாம். ஆத்மா அநித்தியமென் றங்கீகரிக்கின் இவ்விரண்டு தோஷங்களு முண்டாம் என்பது தாற்பரியம். (அ௫)

[௩௮0] तस्मादात्मा महानेव नैवाणुर्नापि मध्यमः ।
आकाशवत्सर्वगतो निरंशः श्रुतिसंमतः ॥ ८६ ॥

(அ-கை.)

ஆத்மாவிற்கு அணுபரிமாணத்துவம் மத்திமபரிமாணத்துவம் என்னு மிரண்டு பக்ஷங்களிலும் தோஷ மிருத்தலால் பரிசேஷத்தால் ஆத்மாவிற்கு விபுத்துவம் (மகத் பரிமாணத்துவம்) சித்தித்த தென்று கூறுகின்றார்:—

तस्मात् आत्मा महान् एव अणुः न एव मध्यमः अपि न ॥

(சு-ம்.)

ஆகையால் ஆத்மா வியாபகமேயாம்; அணுவு மன்று; மத்திமமாகிய சரீர அளவு மன்று.

(அ-கை.)

அந்த ஆத்மாவின் விபுத்தன்மையில் பிரமாணத்தைக் கூறுகின்றார்:—

आकाशवत् सर्वगतः निरंशः श्रुतिसंमतः ॥

(சு-ம்.)

ஆகாயத்தைப்போல எல்லாவற்றிலுமுள்ளதும் அம்சமில்லாததுமா மென்பது வேதசம்மதமாம்.

(வி-ம்.)

"आकाशवत् सर्वगतश्च नित्यः" "निष्कलं निष्क्रियम्" ஆகாயத்தைப்போல எல்லாவற்றிலு முள்ளதும் நித்தியமுமாம்." "நிரவயவமும் கிரியையில்லாததுமாம்." என்னுமிவைமுதலிய வேதவாக்கியங்கள் ஆத்மா மகத் தென்பதில் பிரமாண மென்பது பொருள். (அசு)

ந. ஆத்மாவின் விசேஷ அதாவது விலக்ஷணவடிவத்தில் விவாதம் ந௲அக-ந௲கூரு.

க. ஆத்மாவின் மூவகை விசேஷவடிவத்தைக் கூறுதல்.

[ந௲அக] इत्युक्त्वा तद्विशेषे तु बहुधा कलहं ययुः ।
अचिद्रूपोऽथ चिद्रूपश्चिदचिद्रूप इत्यपि ॥ ८७ ॥

(அ-கை.)

இப்படி ஆத்மாவின் விபுத்தன்மையைச் சாதித்து அந்த ஆத்மாவின் சித்துருபத்தன்மையை நிச்சயித்தற்பொருட்டு முதலில் வாதிகளின் விவாதத்தைக் காட்டுகின்றார்:—

इति उक्त्वा तद्विशेषे तु अचिद्रूपः अथ चिद्रूपः चिदचिद्रूपः इति अपि बहुधा कलहं ययुः ॥

(சு-ம்.)

இப்படி ஆத்மாவின் மகத்துத்தன்மையைச் சொல்லி அவ்வாத்மாவின் விசேஷமாகிய வேற்றுமையிலோ ஆத்மா ஜட மென்றும்,சேதன மென்றும், ஜடசேதனமென்று மிரண்டுவடிவ மென்றும் இப்படி வெகுவிதமாக வாதிகள் கலகத்தை யடைகின்றனர். (அஎ)

உ. பிரபாகரதார்க்கிகர்களின் மதம் (ஆத்மா ஜடவடிவம்).

[௩அஉ] प्राभाकरास्तार्किकाश्च प्राहुरस्याचिदात्मताम् ।
आकाशवद्द्रव्यमात्मा शब्दवत्तद्गुणश्चितिः ॥ ८८ ॥

(அ-கை.)

ஆத்மா ஜட மென்று கூறும் வாதிகளாகிய பிரபாகரநையாயிகர்களது மதத்தைக் காட்டுகின்றார்:—

प्राभाकराः च तार्किकाः अस्य अचिदात्मतां प्राहुः ॥

(சு-ம்.)

பிரபாகரராகிய பட்டரது சிஷ்யரை அநுசரித்தவர்களும் நையாயிகர்களும் இந்த ஆத்மாவிற்கு ஜடவடிவத்தன்மையைச் சொல்லுகின்றனர்.

(அ-கை.)

அவர்களது பிரக்கிரியையை அநுவாதஞ் செய்கின்றார்:—

आकाशवत् आत्मा द्रव्यम् । शब्दवत् । तद्गुणः चितिः ॥

(சு-ம்.)

ஆகாயத்தைப்போல ஆத்மா திரவியமாம் அதாவது குணத்தின் ஆசிரயமாம். சத்தத்தைப்போல அதாவது ஆகாயத்தின் குணத்தைப்போல அவ்வாத்மாவின் குணம் சைதந்நியமாகிய ஞானமாம்.

(வி-ம்.)

ஆத்மா திரவியம் அதாவது குணாசிரயமாகத்தக்கதாம்; குணமுடையதாயிருத்தலால்; ஆகாயத்தைப்போல என்னும் அநுமானம் குறிப்பிக்கப்பட்டிருக்கின்றது. ஆத்மா பிருதிவிமுதலிய அந்நிய திரவியங்களினும் பேதத்தை யடைகின்றது; ஞானகுணமுடையதா யிருத்தலால்; எது பிருதிவிமுதலியவற்றினின்றும் பேதத்தை யடைகிறதில்லையோ அது ஞானகுணமுடையது மாகாது, பிருதிவிமுதலியவற்றைப்போல என்னும் அநுமானத்தையும் கண்டுகொள்க. (அஅ)

[௩௮௯] इच्छाद्वेषप्रयत्नाश्च धर्माधर्मौ सुखासुखे ।
तत्संस्काराश्च तस्यैते गुणाश्चितिवदीरिताः ॥ ८९ ॥

(அ-கை.)

*அந்த ஞானகுணமுடைய ஆத்மாவின் விசேஷமாகிய அந்நியகுணங்களைக் கூறுகின்றார்:—*

इच्छाद्वेषप्रयत्नाः च धर्माधर्मौ सुखासुखे च तत् संस्काराः एते चितिवत् तस्य गुणाः ईरिताः ॥

(சு-ம்.)

*விருப்பு, வெறுப்பு, முயற்சி, புண்ணியம், பாவம், சுகம், துக்கம், அவற்றின் பாவனையாகிய சம்ஸ்காரம் என்னு மிவையெட்டும் ஞானத்தைப்போல அவ்வாத்மாவின் குணங்களாகச் சொல்லப்படுகின்றன.* (௮௯)

[௩௯௦] आत्मनो मनसा योगे स्वादृष्टवशतो गुणाः ।
जायंतेऽथ प्रलीयंते सुषुप्तेऽदृष्टसंक्षयात् ॥ ९० ॥

(அ-கை.)

*இந்த ஞானமுதலிய குணங்களின் உற்பத்திநாசங்களின் காரணத்தைக் கூறுகின்றார்:*

स्वादृष्टवशतः आत्मनः मनसा योगे गुणाः जायंते अथ सुषुप्ते अदृष्टसंक्षयात् प्रलीयंते ॥

(சு-ம்.)

*தனது பிராரப்தகர்மவடிவ அதிருஷ்டவசத்தால் ஆத்மாவிற்கு மனதோடு சையோக முண்டாகுங்கால் குணங்கள் உண்டாகின்றன. பின் சுழுத்தியில் அதிருஷ்டத்தின் க்ஷயத்தால் ஆத்மாவிற்கும் மனதிற்கும் சையோகமில்லாமையால் குணங்கள் ஒடுங்குகின்றன.* (௯0)

[௩௯௧] चितिमत्त्वाच्चेतनोऽयमिच्छाद्वेषप्रयत्नवान् ।
स्याद्धर्माधर्मयोः कर्ता भोक्ता दुःखादिमत्त्वतः ॥ ९१ ॥

(அ-கை.)

*ஆத்மா ஜடமாயிருக்க அதற்குச் சேதனத்துவம் எப்படி அங்கீகரிக்கின்றீர்? என்றுசங்கித்து, ஆத்மா ஞானகுணமுடையதா யிருத்தலால் சேதனத்தன்மை அங்கீகரிக்கப்படு மென்று கூறுகின்றார்:—*

चितिमत्त्वात् अयं चेतनः ॥

(சு-ம்.)

ஞானகுணமுடையதா யிருத்தலால் இந்த ஆத்மா சேதனமாம்.

(அ-கை.)

ஆத்மாவின் சேதனத்தன்மையில் வேறு காரணத்தைக் கூறுகின்றார்:-

इच्छाद्वेषप्रयत्नवान् ॥

(சு-ம்.)

அவ்வாத்மா விருப்பு வெறுப்பு உற்சாகவிசேஷமாகிய முயற்சி என்ப வற்றை யுடையதாம்.

(அ-கை)

அவ்வாத்மா ஈசுவரனினும் வேறு மென்பதைக் காட்டுகின்றார்:—

धर्माधर्मयोः कर्त्ता दुःखादिमत्त्वतः भोक्ता स्यात् ॥

(சு-ம்.)

தர்மாதர்மங்க ளிரண்டற்கும் கர்த்தாவும் துக்கமுதலியவற்றை யுடையதா யிருத்தலால் போக்தாவு மாகின்றது. (௯௧)

[௯௮௬] यथाऽत्र कर्मवशतः कादाचित्कं सुखादिकम् ।
तथा लोकांतरे देहे कर्मणेच्छादि जन्यते ॥ ९२ ॥

(அ-கை)

அப்படியானல் ஆத்மா விபுவா யிருக்குமாயின், அதற்குப் பரலோகத் திற்குப் போகுதல் முதலியன எப்படிப் பொருந்துமென் றசங்கித்து, இந் தத் தேகத்தில் கர்மவசத்தால் இச்சைமுதலியவை யுண்டாய் இவ்வுலகத் தில் ஆத்மாவின் நிலைமுதலிய வியவகாரம் எப்படி யுண்டாகின்றதோ, அது போலக் கர்மவசத்தால் லோகாந்தரத்தில் அந்யதேகத்தின் உற்பத்தியுண் டாய், அந்தத் தேகாவச்சின்ன ஆத்மாவின் பிரதேசத்தில் சுகதுக்கமுதலிய வற்றின் உற்பத்திவசத்தால் அப்பரலோகத்தில் ஆத்மாவினது போக்கு முதலியவற்றின் வியவகாரம் உண்டாகுமென்று உபசாரத்தா லாகியனவாம் ஆத்மாவின் கமனமுதலியவை என்னும் அபிப்பிராயத்தைக் கூறுகின்றார்:—

यथा अत्र कर्मवशतः कादाचित्कं सुखादिकं तथा लोकांतरे देहे कर्मणा इच्छादि जन्यते ॥

(சு-ம்.)

எப்படி இவ்வுலகத்தில் கர்மவசத்தால் யாதேனுமோர்காலத்தி லுண்டாகும் சுகமுதலியவைகள் உண்டாகின்றனவோ அப்படியே லோகாந்தரத்தில் அடையப்பட்ட தேகத்தில் கர்மத்தால் இச்சைமுதலியவைகள் உண்டாகின்றன. (௯௨)

[௫அ௭] एवं च सर्वगस्यापि संभवेतां गमागमौ ।
कर्मकांडः समग्रोऽत्र प्रमाणमिति तेऽवदन् ॥ ९३ ॥

(அ-கை.)

இதுவுமது :—

एवं च सर्वगस्य अपि गमागमौ संभवेताम् ॥

(சு-ம்.)

இப்படி ௫அசு-ல் கூறியபடியாயின் எல்லாவற்றிலு முள்ளதான வியாபக ஆத்மாவிற்கும் போக்குவரத்துக்கள் சம்பவிக்கும்.

(அ-கை.)

அப்படியானால் ஆத்மா கர்த்திருத்துவமுதலிய தர்மமுடையதா மென்பதில் பிரமாணம் யாதெனக் கூறுகின்றார்:—

समग्रः कर्मकांडः अत्र प्रमाणं इति ते अवदन् ॥

(சு-ம்.)

சகல கர்மகாண்டமும் இதில் பிரமாணமா மென்று அந்தப் பிரபாகர நையாயிகர்கள் கூறுகின்றனர். (௯௩)

[௫அஅ] आनंदमयकोशो यः सुषुप्तौ परिशिष्यते ।
अस्पष्टचित्स आत्मैषां पूर्वकोशोऽस्य ते गुणाः ॥ ९४ ॥

(அ-கை.)

அப்படியானால் " விஞ்ஞானமயத்திற் கந்நியமான ஆநந்தமயன் ஆந்தரமாம்." என்னும் ௩௪௧-வது சுலோகத்தில் ஆநந்தமயகோசத்திற்கு ஆத்மத்தன்மை கூறப்பட்டிருக்கின்றது. இப்போதோ இச்சைமுதலியவற்றையுடைய ஆநந்தமயகோசனுக்கு வேறாகிய ஆத்மா உம்மாற் சொல்லப்பட்டிருக்கின்றது. ஆகையால் முன்னுக்குப்பின் விரோதமாமென் றாசங்கித்துக் கூறுகின்றார்:—

सुषुप्तौ अस्पष्टचित् यः आनंदमयकोशः परिशिष्यते सः पूर्वकोशः एषां आत्मा अस्य ते गुणाः ॥

(சு-ம்.)

சுழுத்தியில் ஸ்பஷ்டமில்லாத சேதனமா யிருக்கின்றதாகிய எந்த ஆநந்தமயகோசம் மிஞ்சுகின்றதோ, அம்முதற்கோசம் இவ்வாதிகளுக்கு ஆத்மாவாம். இவ்வாத்மாவிற்கு அவை குணங்களாம்.

(வி-ம்.)

சுழுத்தியவஸ்தையில் ஸ்பஷ்டமில்லாத அதாவது ஒடுங்கிய சேதனமாகிய ஞானகுணமுடைய ஆநந்தமயகோசம் மிஞ்சி யிருக்கின்றது. சுருதியிற்கூறிய பஞ்சகோசங்களில் முதற்கோசமாகிய அது இந்தப் பிரபாகர நையாயிகர்களுக்கு ஆத்மாவாம். இவ்வாத்மாவிற்கு முன் ௩௮௩-ல் கூறிய ஞானமுதலியவை குணங்களாம் என்பது * ௩௮. பொருள். (௯௪)

---

* ௩௮. இந்த நையாயிகப்பிரபாகரர்களது மதம் அசங்கதமாம். ஏனெனின், இவர்கள் "சுழுத்தியில் ஞானமில்லாமையால் ஆத்மா ஜடவடிவமாக மிஞ்சுகின்றது." என்று கூறுகின்றனர்; அது சுழுத்தியில் னின்றும் எழுந்த புருஷனுக்கு "நான் ஒன்றும் தெரியாமல் சுகமாய்த் தூங்கினேன்."என்று உண்டாகும் சுழுத்திகாலத்தில் அநுபவிக்கப்பட்ட சுகஅஞ்ஞானங்களின் ஸ்மிருதியால் பாதிக்கப்படுகின்றது. ஆத்மா ஜடமாயிருக்குமாயின் முற்கூறிய ஸ்மிருதி யுண்டாகலாகாது; ஸ்மிருதியோ உண்டாகின்றது. ஆகையால் ஆத்மா ஜடவடிவ மன்று;சேதனவடிவாம்.

சுருதியில் ஆத்மா னிர்க்குண மென்று சொல்லப்பட்டிருக்கின்றமையால் ஆத்மா இச்சைமுதலிய குணங்களுடைய தன்று. ஆனல் அந்தக்கரணத்தின் தர்மமாகிய இச்சைமுதலியன ஆத்மாவினிடத்து அத்தியாசமாகத் தோற்றுகின்றன. இச்சைமுதலியன அந்தக்கரணத்தின் தர்ம மென்பது சுருதியில் பிரசித்தம். ஜாக்கிரசொப்பனங்களில் அந்தக்கரண முள்ளபோது இச்சைமுதலியன தோற்றுகின்றன. சுழுத்தியில் அந்தக்கரணம் ஒடுங்கியிருத்தலால் இச்சைமுதலியவைகளு மில்லை என்னும் யுக்தியினுலும் இச்சைமுதலியன அந்தக்கரணத்தின் தர்மங்களெனச் சித்திக்கின்றன; ஆத்மாவினுடைய வன்று. நையாயிகர்முதலியோர் ஆத்மாவை நாநா வென்றும் விபு வென்றும் அங்கீகரித்திருத்தலால் எல்லா ஆத்மாவிற்கும் சகலதேக சகலகர்ம சகல போக சர்வமனங்களோடும் சம்பந்த முண்டாகின்றது. உண்டாகவே எந்த ஆத்மாவிற்கு எந்தத் தேகாதிக ளென்னும் வியவஸ்தை துர்லபமா மென்னும் இவைமுதலிய அநேக தோஷங்களோடு கூடியிருத்தலால் நையாயிகப்பிரபாகரர்களது மதம் அசங்கதமாம்.

௧. சுலோகம் ௯௮-௯௪-ல் கூறிய மதத்தின் தோஷத்தோடு பட்டர்மதம் கூறல்
(ஆத்மா சிற்சடவடிவம்.)

[௯௪௧] गूढं चैतन्यमुत्प्रेक्ष्य जडबोधस्वरूपताम् ।
आत्मनो ब्रुवते भाट्टाश्चिदुत्प्रेक्षोत्थितस्मृतेः ॥ ९५ ॥

(அ-கை.)

இப்போது இந்த ஆநந்தமயகோசவடிவமாகிய ஆத்மாவிற்கே ஜடசே தனமாகிய இரண்டுவடிவமு முண்டென பூர்வமீமாம்ஸையின் வார்த்திக காரராகிய பட்டரது மதாநுசாரிகளாகிய பாட்டர் வர்ணிக்கின்றனர் என்று கூறுகின்றனர்:—

भाट्टाः गूढं चैतन्यं उत्प्रेक्ष्य आत्मनः जडबोधस्वरूपतां ब्रुवते ॥

(சு-ம்.)

பட்டமதாநுசாரிகள் வெளிப்படையில்லாத சைதன்னியத்தைக் கற்பித்து ஆத்மாவிற்கு ஜடசேதனவடிவத்தைக் கூறுகின்றன.

(வி-ம்.)

பட்டமதாநுசாரிகள் ஆத்மாவிற்கு வெளிப்படையின்றிய சேதனத் தன்மையைக் கற்பித்து ஆத்மா சித்து ஜடமென இருவடிவமா மென்று வர்ணிக்கின்றனர்.

(அ-கை.)

சைதன்னியத்தின் கற்பனையில் காரணத்தைக் கூறுகின்றார்:—

उत्थितस्मृतेः चिदुत्प्रेक्षा ॥

(சு-ம்.)

சுழுத்தியினின்றும் எழுந்தவனது ஸ்மிருதியால் சேதனத்தின் கற்பனை யுண்டாகின்றது.

(வி-ம்.)

சுழுத்தியினின்று மெழுந்த புருஷனுக்குண்டாகிய நினைவு எதுவோ அதனால் சுழுத்தியிலுள்ள சைதந்நியத்தின் கற்பனை யுண்டாகின்றதென் பது பொருள். (௯௫)

[௫௯0] जडो भूत्वा तदास्वाप्समिति जाड्यस्मृतिस्तदा ।
विना जाड्यानुभूतिं न कथंचिदुपपद्यते ॥ ९६ ॥

(அ-கை.)

சேதனகற்பனையின்றன்மையினையே விளக்குகின்றார்:—

तदा जडः भूत्वा अस्वाप्सं इति जाड्यस्मृतिः तदा जाड्यानुभूतिं विना कथंचित् न उपपद्यते ॥

(சு-ம்.)

அப்பொழுது சுழுத்தியில் நான் ஜடமாய்த் தூங்கினேன் என்று ஜாக்கிரத்தி லுண்டாகும் ஜடத்தன்மையின் நினைவு ஜடத்தன்மையின் அநுபவமின்றி எவ்விதத்தினுலு முண்டாகாது.

(வி-ம்.)

“ அப்போது சுழுத்திகாலத்தில் நான் ஜடமாய்த் தூங்கினேன் ” என்னும் வடிவினதாய்ச் சுழுத்தியினின்றும் எழுந்த புருஷனுக்கு ஜடத்தன்மையின் ஸ்மிருதி யுண்டாகின்றது. அந்த ஸ்மிருதி சுழுத்திகாலத்து ஜடத்தன்மையின் அநுபவமின்றி உண்டாகாததாய் அக்காலத்து ஜடத்தன்மையின் அநுபவத்தைக் கற்பிக்கின்றதென்பது கருத்து. (௯௬)

[௫௯௧] द्रष्टुर्दृष्टेरलोपश्च श्रुतः सुप्तौ ततस्त्वयम् ।
अप्रकाशप्रकाशाभ्यामात्मा खद्योतवद्युतः ॥ ९७ ॥

(அ-கை.)

சுழுத்தியில் சைதந்நியலோப மில்லை என்பதில் பிரமாணமாகிய சுருதியைக் கூறுகின்றார்:—

सुप्तौ द्रष्टुः दृष्टेः अलोपः च श्रुतः ततः तु अयम् आत्मा खद्योतवत् अप्रकाशप्रकाशाभ्यां युतः ॥

(சு-ம்.)

சுழுத்தியில் காண்பான் காட்சிகளின் லோபமின்மையும் கேட்கப்பட்டிருக்கின்றது. ஆகையால் இந்த ஆத்மா மின்மினியைப்போல் பிரகாச அப்பிரகாசங்க ளிரண்டுனேடும் கூடியதா யிருக்கின்றது.

(வி-ம்.)

"न हि द्रष्टुर्दृष्टेर्विपरिलोपो विद्यते अविनाशित्वात्। திருஷ்டாவினது திருஷ்டி (காட்சி) நாசமாகிறதில்லை; அவிநாசியாயிருத்தலால்." என்னுஞ் சுருதியில் திருஷ்டாவாகிய ஆத்மாவின் சொரூபமான திருஷ்டியாகிய ஞானத்திற்கு நாச மில்லை; ஏனெனின், ஆத்மா நாசமின்றிய சொரூபமுடையதாயிருத்தலால். வேறுவிதமாயின் அதாவது சைதந்நியலோபத்தை அங்கீகரிக்கின், லோபத்தைக் கூறுபவனுக்கும் சாக்ஷியின்றிய லோபம் சொல்லக்கூடாததா யிருத்தலால் சுழுத்தியில் சைதந்நியலோபமின்மை கேட்கப்பட்டிருக்கின்றது. அதனாலும் இந்த ஆத்மா மின்மினிபோல அப்பிரகாசம் பிரகாசம் என்னு மிரண்டனோடும் கூடியதா மென்பது பொருள். (௬எ)

ச. சுலோகம் ௯அ௬–௯௬௬-ல் கூறிய மதத்தில் தோஷத்தோடு சாங்கியமதத்தைக் கூறுதல் (ஆத்மா சித்ரூபம்).

[௯௬உ] निरंशस्योभयात्मत्वं न कथंचिद्घटिष्यते ।
तेन चिद्रूप एवात्मेत्याहुः सांख्या विवेकिनः ॥ ९८ ॥

(அ-கை.)

இந்தப் பட்டமதத்தில் தோஷத்தைச் சொல்லுதலோடு சாங்கியமதத்தை எழுப்புகின்றார்:—

विवेकिनः सांख्याः निरंशस्य उभयात्मत्वं कथंचित् न घटिष्यते तेन आत्मा चिद्रूपः एव इति आहुः ॥

(சு-ம்.)

பிரகிருதி புருஷவிவேசனஞ் செய்வோர்களாகிய விவேகிகள் என்னும் சாங்கியர்கள் அதாவது கபிலமதானுசாரிகள் நிரவயவமாகிய ஆத்மாவிற்கு ஜடசேதனமாகிய இரண்டுவடிவத்தன்மை எவ்விதத்தாலும் *௯௬. பொருந்தாது, அதனால் ஆத்மா சேதனவடிவமேயாம் என்று கூறுகின்றனர். ()

---

*௯௬. ஆத்மாவிற்கு ஜடசேதனமாகிய இரண்டுவடிவத்தை ஒப்பும் பட்டர் மதம் அசங்கதமாம். ஏனெனின், ஒளியு மிருளும்போலவாவது இம்மனிதன் கடமென்பதைப்போலவாவது ஒரு வஸ்துவில் ஜடசேதனமாகிய இரண்டுவடிவம் விருத்தமாம். இரண்டம்சங்களையும் அங்கீகரிக்கின், ஜடாம்சம் கோசரமாம்; சேதனாம்சம் அகோசரமாம். இரண்டம்சங்களும் அநுபவகோசரமாகா. ஒரே ஆத்மாவினிடத்து இவ்வேறுபாடு சம்பவியாது. தண்டமொன்றைப் பார்த்தே தண்டி என்று சொல்லுகிற தில்லை. தண்டம் புருஷன் என்னு மிரண்டையும் பார்த்தால் தண்டியென்று சொல்லுத லுண்டு. அதுபோல ஒரே ஜடாம்சத்தின் ஞானத்தால் ஆத்மா உபயவடிவமெனச் சித்தியாது. சேதனாம்சத்தையும் அநுபவகோசர மென்று ஒப்பினல் அது ஜடமும் கற்பிதமுமாம்.

[௩௯௩] जाड्यांशः प्रकृते रूपं विकारि त्रिगुणं च तत् ।
चितो भोगापवर्गार्थं प्रकृतिः सा प्रवर्तते ॥ ९९ ॥

(அ-கை.)

அப்படியானல் சேதனவடிவமே ஆத்மாவாகுமாயின், முன் ௩௯0-ல் கூறிய ஜடத்தன்மையின் ஸ்மிருதிக்குக் கதியாதென் றசங்கித்துக் கூறுகின்றார்:—

जाड्यांशः प्रकृतेः रूपं तत् विकारि च त्रिगुणम् ॥

(சு-ம்.)

ஜடத்தன்மையாகிய அம்சம் பிரகிருதியின் வடிவமாம். அந்தப் பிரகிருதியின் வடிவம் விகாரமுள்ளதும் முக்குணவடிவமுமாம்.

(வி-ம்.)

அந்தப் பிரகிருதியின்வடிவம் சத்துவரஜதமோகுணவடிவமாம்.

(அ-கை.)

பிரகிருதியைக் கற்பித்தலிற் பிரயோஜனத்தைக் கூறுகின்றார்:—

---

பட்டமதஸ்தர்களைக் கேட்கின்றார்:— ஆத்மாவின் ஜடசேதனமாகிய இரண்டம்சங்களுக்கும் சம்பந்தம் யாது?

(க) சையோகமா?

(உ) அல்லது தாதாத்மியமா?

(௩) அல்லது விஷயவிஷயித்தன்மையா?

(க) முதற்பக்ஷத்தில் ஆத்மா அநித்தியவடிவமாம்; ஏனெனின், அநித்தியமாகிய இரண்டு திரவியங்களுக்கே சையோகம் நியமமாதலால்.

(உ) இரண்டாவது பக்ஷத்தில் சித்து ஜடமென்னும் இரண்டம்சங்களுக்கும் ஒரு வடிவமாகுந்தன்மை யிருத்தலால் ஜடாம்சம் சேதனமாகும்; சேதனம்சம் ஜடமாகும்.

(௩) மூன்றவது பக்ஷத்தில் இரண்டும் கடத்தைப்போல அநாத்மாவாகும்.

சுருதியில் ஆத்மா விஞ்ஞானகனமென்றே சொல்லப்பட்டிருத்தலால் ஆத்மா பாதிஜடமா மென்பதில் பிரமாண மில்லை. ஆத்மாவிற்கு ஜடத்தன்மையைச் சம்பாதிக்கும் யாதொரு ஸ்மிருதி சொல்லப்பட்டதோ அது சுழுத்தியி லுள்ள அஞ்ஞான அம்சத்தையே விஷயஞ் செய்கின்றது. ஆத்மாவின் ஜடத்தன்மையை விஷயஞ் செய்கிறதில்லை. இவ்வாற்றல் ஆத்மா ஜடசேதன மென்னு மிரண்வேடிவமா மென்பது அசங்கதமாம்.

सा प्रकृतिः चितः भोगापवर्गार्थं प्रवर्तते ॥

(சு-ம்.)

அந்தப்பிரகிருதி சேதனமாகிய புருஷனது போகமோக்ஷங்களுக்காகப் பிரவிருத்திக்கின்றது. (௯௯)

[௫௯௪] असंगायाश्चितेर्बंधमोक्षौ भेदाग्रहान्मतौ ।
बंधमुक्तिव्यवस्थार्थं पूर्वेषामिव चिद्भिदा ॥ १०० ॥

(அ-கை.)

அப்படியானல் சேதனபுருஷன் அசங்கமாயிருத்தலின் பிரகிருதி புருஷர்கள் அத்தியந்தம் விவேகிக்கப்பட்டிருத்தலால் பிரகிருதியின் பிரவிருத்தியால் புருஷனுக்குப் போகமோக்ஷமிரண்டும் எப்படி யுண்டாமென்ருசங்கித்து, அந்தப் பிரகிருதி புருஷர்கள் இருவர்களின் பேதவடிவ விவேகம் கிரகிக்கப்படாமையால் புருஷனிடத்துப் போகமோக்ஷங்களின் வியவகார முண்டாகின்றதென்று கூறுகின்ருர்:—

असंगायाः चितेः भेदाग्रहात् बंधमोक्षौ मतौ ॥

(சு-ம்.)

அசங்கபுருஷனுகிய சேதனத்தின் பேதக்கிரகணமின்மையாகிய பிராந்தியினுல் பந்தமோக்ஷங்களை ஒப்பியிருக்கின்றனர்.

(அ-கை.)

நையாயிகர்முதலியோரைப்போலச் சாங்கியவாதிகளாலும் ஆத்மாவின் பேதம் அங்கீகரிக்கப்படுகின்றதென்று கூறுகின்ருர்:—

बंधमुक्तिव्यवस्थार्थं पूर्वेषां इव चिद्भिदा ॥

(சு-ம்.)

பந்தமோக்ஷங்களின் வியவஸ்தையின்பொருட்டு முற்கூறிய வாதிகளாகிய நையாயிகர்முதலியோர்களைப்போல சாங்கியமத்திலும் சேதனமாகிய ஆத்மாவிற்குப் பேதம் ஒப்பப்பட்டிருக்கின்றது. (௧00)

[௫௯௫] महतः परमव्यक्तमिति प्रकृतिरुच्यते ।
श्रुतावसंगता तद्वदसंगो हीत्यतः स्फुटा ॥ १०१ ॥

(அ-கை.)

பிரகிருதி உண்டென்பதிலும், புருஷன் அசங்க மென்பதிலும் சுருதியை உதாரணமாகக் கூறுகின்றார்:—

महतः परम् अव्यक्तं इति श्रुतौ प्रकृतिः उच्यते तद्वत् असंगः हि इति अतः असंगता स्फुटा ॥

(சு-ம்.)

"காரணமாயிருத்தலால் மகதத்துவத்தினும் சிரேஷ்டமாயும் வேறுயுமிருப்பது அஞ்ஞானமா" மென்று சுருதியில் பிரகிருதியானது அவ்வியக்த சப்தத்தால் சொல்லப்படுகின்றது. அதுபோல "இந்தப் புருஷன் அசங்கனே" என்னும் சுருதியால் புருஷனுக்கு அசங்கத்தன்மை ஸ்பஷ்டமாகின்றது. இஃது * ௬௦. சாங்கியர்களின் மதமாம். (௩௦௧)

௬. ஆத்மதத்துவவிவேகத்தில் ஈசுவரசொரூபத்தில் விவாதம் ௩௩௩-௬௧௫.

௧. அந்தரியாமியினின்றும் விராட்பரியந்தமாகிய ஈசுவரனிடத்தில் விவாதம் ௩௩௩-௬௦௮.

௧. யோகமதம் (அசங்கசேதனம் ஈசுவரன்).

[௩௩௩] चित्सन्निधौ प्रवृत्तायाः प्रकृतेर्हि नियामकम् ।
ईश्वरं ब्रुवते योगाः स जीवेभ्यः परः श्रुतः ॥ १०२ ॥

---

* ௬௦. சாங்கியர்களது மதத்தில் பிரகிருதியை ஜகத்காரணமாகக் கொண்டு புருஷனது போகமோக்ஷங்களுக்குக் காரணமாகச் சொல்லப்பட்டிருக்கின்றது. அது பொருந்தாது. ஏனெனின், பிரளயகாலத்தில் சத்துவமுதலிய குணங்களின் சாம்மிய (கலப்பு) அவஸ்தையைப் பிரதான மென்பர். அது சிருஷ்டிகாலத்தில் சாம்யாவஸ்தையை விடுமாயின் அப்போது ஜகத்தின் உற்பத்தி யுண்டாகின்றது. பிரதானம் ஜடமா யிருத்தலால் சாம்யாவஸ்தையை விடுவதில் சாமர்த்தியமுடைய தாகாது. சேதனமாகியபுருஷன் அசங்கமாயிருத்தலால் அதற்குப் பிரதானத்தோடு சம்பந்தமில்லை. சேதனசம்பந்தமின்றி ஜடத்தினுல் காரிய உற்பத்தி யுண்டாகாது. ஆகையால் பிரதானத்தினின்றும் சிருஷ்டி சம்பவியாது. அதனுல் பிரதான மென்னும் மாயாவிசிஷ்டசேதனம் அந்தரியாமியாகிய ஈசுவரனும். அவரே ஜகத்திற்கு கர்த்தா.

சாங்கியமதத்தில் விபுசேதனமாகிய ஆத்மாவிற்கு நாநாத்துவம் ஒப்பியிருக்கின்றனர். அது நிஷ்பலமாம். ஏனெனின், ஒரே வியாபகசேதனத்தை அங்கீகரிக்கின் நாநா அந்தக்கரண உபாதிகளால் போகமுதலியவற்றிற்குக் கலப்பின்றிய வியவஸ்தையுண்டாகும். மீண்டும் அந்த வியவஸ்தையின்பொருட்டே ஆத்மாவின் நாநாத்துவத்தை அங்கீகரித்தல் வியர்த்தமாம்.

ஆத்மாவின் நாநாத்துவத்தையும் பிரகிருதியின் நித்தியத்தன்மையையும் அங்கீகரித்தலால் ஆத்மாவினிடத்துச் சஜாதீய விஜாதீய சம்பந்தங்கள் வந்தடைதலால் நாநாவாகிய ஆத்மாவிற்கு அசங்கத்தன்மையைக் கூறுவதிலும் வியாகாததோஷ முளதாம். இவ்வாற்ருல் சாங்கியர்கள்மதம் அசங்கதமாம்.

(அ-கை.)

இப்படிச் சிவனை விஷயஞ்செய்யும் வாதிகளது விருத்த அபிப்பிராயங்களாகிய விவாதத்தினைக் காட்டி, ஈசுவரனை விஷயஞ்செய்யும் அந்த விருத்தாபிப்பிராயத்தைக் காட்டுதற்கு ஈசுவரனது வடிவத்தை முதலில் ஸ்தாபிக்கின்றார்:—

योगाः चित्सन्निधौ प्रवृत्तायाः प्रकृतेः नियामकं हि ईश्वरं ब्रुवते ॥

(சு-ம்.)

யோகமதாநுசாரிகள் சைதன்னியத்தின் சமீபத்தில் பிரவிருத்தித்துள்ள பிரகிருதியைச் செலுத்தும் புருஷவிசேஷத்தை ஈசுவரனென்று சொல்லுகின்றனர்.

(அ-கை.)

அப்படியானால் பிரகிருதிபுருஷர்களுக்கு வேறான ஈசுவரனைக் கற்பித்தல் அப்பிரமாணமாமென்றாசங்கித்துக் கூறுகின்றார்:—

सः जीवेभ्यः परः श्रुतः ॥

(சு-ம்.)

அந்த ஈசுவரன் ஜீவர்களைவிட வேறென்று கேட்கப்பட்டிருக்கின்றார். (கOஉ)

[ருகஎ] प्रधानक्षेत्रज्ञपतिर्गुणेश इति हि श्रुतिः ।
आरण्यके संभ्रमेण ह्यंतर्याम्युपपादितः ॥ १०३ ॥

(அ-கை.)

அந்த ஈசுவரனது இருப்பைப் பிரதிபாதிக்கும் சுருதியைப் படிக்கின்றார்:—

प्रधानक्षेत्रज्ञपतिः गुणेशः इति हि श्रुतिः ॥

(சு-ம்.)

பிரகிருதிபுருஷர்களுக்குப் பதியும் குணங்களுக்கு ஈசுவரனுமாவர் என்று சுருதியானது ஈசுவரசொரூபத்தைக் கூறுகின்றது.

(வி-ம்.)

குணங்களின் சாமியா(கலப்ப)வஸ்தையாகிய பிரதானத்திற்கும், க்ஷேத்திரஞ்ஞனுக்கும் அதாவது சரீரவடிவ க்ஷேத்திரத்தை அறிபவனாகிய ஜீவனுக்கும் பதியாவர்; சத்துவாதி குணங்களுக்கு ஈசுவரனாவர் என்பது பொருள்.

(அ-கை.)

இந்தச் சுருதிமாத்திரமே ஈசுவரனைப் பிரதிபாதிப்பதாமென்பதில்லை. ஆனால் அந்தரியாமிப் பிராஹ்மணமான பிரகதாரண்ணியக உபநிஷத்தின் பிரகரண முழுவதும் ஈசுவரனைப் பிரதிபாதிப்பதாமென்று கூறுகின்றார்:—

आरण्यके संभ्रमेण हि अंतर्यामी उपपादितः ॥

(சு-ம்.)

பிரகதாரணியக உபநிஷத்தில் ஆதரவாக அந்தரியாமியான ஈசுவரன் உபபாதனஞ் செய்யப்பட்டிருக்கின்றனர். (௧0௩)

[௫௬அ] अत्रापि कलहायंते वादिनः स्वस्वयुक्तिभिः ।
वाक्यान्यपि यथाप्रज्ञं दार्ढ्योयोदाहरंति हि ॥ १०४ ॥

(அ-கை.)

அந்த ஈசுவரனை விஷயஞ்செய்யும் வாதிகளின் விவாதத்தைப் பிரதிஞ்ஞை செய்கின்றார்:—

अत्र अपि वादिनः स्वस्वयुक्तिभिः कलहायंते । दार्ढ्याय वाक्यानि अपि यथाप्रज्ञं उदाहरंति हि ॥

(சு-ம்.)

இவ்வீசுவரனிடத்தும் வாதிகள் தங்கள் தங்கள் யுக்திகளால் ஒருவருக்கொருவர் கலகஞ் செய்கின்றனர். தங்கள் தங்கள் பக்ஷத்தின் திடத்தன்மையின்பொருட்டுச் சுருதிவாக்கியங்களையும் புத்திக்கேற்றபடி உதகரிக்கின்றனர். (௧0௪)

[௫௬௯] क्लेशकर्मविपाकैस्तदाशयैरप्यसंयुतः ।
पुंविशेषो भवेदीशो जीववत्सोऽप्यसंगचित् ॥ १०५ ॥

(சு-ம்.)

இப்போது பதஞ்சலிபகவானால் சொல்லப்பட்ட ஈசுவரனைப் பிரதிபாதிக்கும் "क्लेशकर्मविपाकैस्तदाशैरपरामृष्टः पुरुषविशेष ईश्वरः॥ கிலேசம், கர்மம், விபாகம் அதாவது பலம், அவற்றின் ஆசயம் அதாவது சம்ஸ்காரம் என்பவற்றோடு சம்பந்தமில்லாத புருஷவிசேஷன் ஈசுவரனும்." என்னுஞ் சூத்திரத்தை அர்த்தத்தாற் சொல்லுகின்றார்:—

क्लेशकर्मविपाकैः तदाशयैः अपि असंयुतः पुंविशेषः ईशः भवेत् । सः अपि जीववत् असंगचित् ॥

(சு-ம்.)

*கிலேசகர்மவிபாகங்களோடும் அவற்றின் வாசனைகளோடும் சம்பந்தமில்லாத புருஷவிசேஷன் ஈசுவரனாவன். அவ்வீசுவரனும் ஜீவனைப்போல அசங்கசேதனமாம்.*

(வி-ம்.)

*அவித்தை, அஸ்மிதை, இராகம், துவேஷம், அபிநிவேசம் என்னுமிவை * சக. பஞ்சக்கிலேசங்களாம். "*कर्माणि कर्माशुक्लकृष्णं योगिनस्त्रिविधमितरेषाम् ॥ *யோகிகளுக்கு அசுக்கிலகிருஷ்ணம் அதாவது சுபாசுபங்களுக்கு வேறாகிய கர்மமாம். அந்நிய ஜீவர்களுக்குப் புண்ணியம் பாபம் மிசிரம் என்று மூன்றுவிதமாம்" இக்கர்மம் பதஞ்சலிபகவான் கூறிய சூத்திரத்தின்படியாம். "*सति मूले तद्विपाका जात्यायुर्भोगाः ॥ *கர்மமாகிய காரணமிருத்தலால் அக்கர்மத்தின் பயன் ஜாதி ஆயுள்போகங்களாம்." என்னும் பதஞ்சலிசூத்திரத்தில் கர்மத்தின் விபாகமாகிய பலவிசேஷம் கூறப்பட்டிருக்கின்றது. அந்தக்கிலேசமுதலியவற்றின் ஆசயமாம் சம்ஸ்காரமாகிய அக்கிலேசமுதலியவற்றோடு சம்பந்தமில்லாத புருஷவிசேஷன் ஈசுவரனும். அவ்வீசுவரனும் * சஉ. ஜீவனைப்போல அசங்கசித்துரூபனாவனென்பது பாருள்.* (கOரு)

---

* சக.

(க) *அநித்தியமாகிய சுவர்க்கமுதலிய ஜகத்தில் நித்தியத்தன்மையின் கியாதி (புத்தி),*

(உ) *அசுசியாகிய சரீரத்திலாவது புத்திரர்களது முகசும்பனாதிகளி (முகத்தில் முத்தமிடுதல் முதலியவற்றி)லாவது சுசிபுத்தி(பவித்திரத்தன்மையின் கியாதி),*

(ரு) *துக்கமாகிய தனமுதலிய போகசாதனங்களில் சுகத்தின் கியாதி,*

(ச) *அநாத்மாவாகிய தேகமுதலியவற்றில் ஆத்மபுத்தி,*

[க] இவ்வாறு அவித்தை நான்குவிதமாம்.

[உ] *திருக்கு (புருஷசக்தி) தரிசனம் (திருசியசக்தி) என்னுமிவ்விரண்டன் ஒருவடிவாகுந்தன்மை (தாதாத்மிய அத்தியாசம்)* அஸ்மிதையாம்.

[ரு] *சுகத்தின் பின்னிருப்பது அல்லது அநுகூல பதார்த்தத்தின் ஞானத்தினுலுண்டாகியது* ராகமாம்.

[ச] *துக்கத்தின் பின்னிருப்பது அல்லது பிரதிகூல பதார்த்தத்தின் ஞானத்தினு லுண்டாகியது* துவேஷமாம்.

[௪00] तथापि पुंविशेषत्वाद्घटतेऽस्य नियंतृता ।
अव्यवस्थौ बंधमोक्षवापतेतामिहान्यथा ॥ १०६ ॥

(அ-கை.)

அப்படியானால் ஈசுவரனுக்கு அசங்கசித்ரூபத்தன்மையிருக்கின் நியாமகத்துவம் எப்படிப் பொருந்தும் எனக் கூறுகின்றார்:—

तथापि पुंविशेषत्वात् अस्य नियंतृता घटते ॥

(சு-ம்.)

அப்படியானாலும் புருஷவிசேஷனா யிருத்தலால் இவ்வீசுவரனுக்குப் பிரேரகத்துவம் பொருந்துகின்றது.

(அ-கை.)

ஈசுவரனுக்கு நியாமகத்தன்மையை அங்கீகரியாவிடத்துத் தோஷத்தைக் கூறுகின்றார்:—

अन्यथा इह बंयमोक्षौ अव्यवस्थौ आपतेताम् ॥

(சு-ம்.)

அப்படிக் கில்லையாயின் அதாவது இவ்வீசுவரனது நியாமகத்துவத்தை அங்கீகரியாவிடின், இங்கே ஜகத்தில் பந்தமோக்ஷங்க ளிரண்டும் *௪௬. வியவஸ்தையின்மையை அதாவது நியமமில்லாமையை அடையும். (௧0௬)

---

[ரு] அநுபவித்த மரணமுதலியவற்றினின்றும் பயமுண்டாகின்றது. வித்வானுக்கும் தனது இரசத்தில் செலுத்துவதாகிய அநுபவிக்கப்பட்ட மரணமுதலிய பயவேதுவால் சரீரத்தை இரக்ஷிப்பதிலுண்டாகும் ஆக்கிரகம் அபிநிவேசமாம்.

இவை பஞ்சக்கிலேசங்களாம்.

* ௪௨. சாங்கியமதத்தில் ஜீவன் அசங்கசொப்பிரகாச கூடஸ்த சேதனவடிவமாகக் கொண்டிருத்தல்போல யோகமதத்திலும் கொண்டிருக்கின்றனர். அந்த ஜீவன் போக்தாமாத்திரமேயாம்; கர்த்தா வன்று. புத்தியின் தர்மமாகிய சுகதுக்கங்கள் புத்தியோடு தனது அவிவேகத்தால் உபலக்ஷிக்கப்பட்ட அநுபவ சொரூபமாகிய போக்திருத்துவம் அதற்குண்டு. புத்தியே கர்த்தாவாம். அந்தப்புத்தியின் அவிவேகத்தால் ஆத்மாவிற்குக் கர்த்திருத்துவ வியவகார முண்டு. அந்தப் போக்தாவாகிய ஆத்மாவிற்குச் சம்பிரஞ்ஞாத (சவிகற்ப) அசம்பிரஞ்ஞாத (நிருவிகற்ப)சமாதியின் பரிபாகம் வரையில் புத்தியின் விவேகஞானத்தால் அவிவேகநிவிருத்திவாயிலாகத் துக்கத்திற்கு அத்தியந்தநிவிருத்தி யுண்டாகின்றது. அது யோகமதத்தில் மோக்ஷமாம். நிரீசுவர சாங்கியமதத்தில் ஈசுவரனது அங்கீகார மில்லை; யோகமதத்தில் அங்கீகாரமாம். அவ்வீசுவரனும் ஜீவனைப்போல அசங்கசேதனமாம்.

* ௪௬. ஜகத்திற்கு நியந்திருத்துவமில்லாவிடின் இராஜாவின்றிய பிரஜைகளுக்குச் சுபகர்மத்தால் உத்தமமான பதவியும் அசுபகர்மத்தால் பந்தமுதலியதண்டமுமாகிய இவற்றிற்கு விவஸ்தையில்லாமைபோல இந்த ஜீவனுக்குப் பந்த முண்டாகும், இதனுக்கே மோக்ஷ முண்டாகு மென்பதாக வியவஸ்தையாகிய மரியாதையைச் செய்பவனில்லாமையால் பந்தமோக்ஷம் வியவஸ்தையில்லாதனவாகும். இது யோகமதத்தின் அபிப்பிராயமாகும்.

[௧0௭] भीषाऽस्मादित्येवमादावसंगस्य परात्मनः ।
श्रुतं तद्युक्तमप्यस्य क्लेशकर्माद्यसंगमात् ॥ १०७ ॥

(அ-கை.)

அசங்கமாகிய ஈசுவரனுக்கு நியந்திருத்துவம பிரமாண மில்லாததா மென்றாசங்கித்துக் கூறுகின்றார்:—

"अस्मात् भीषा" इति एवमादौ असंगस्य परपात्मनः तत् श्रुतम् ॥

(சு-ம்.)

"இந்த ஈசுவரனின்றும் பயத்தால் வாயு அசைகின்றது." இவைமுதலிய சுருதியில் அசங்கனாகிய பரமாத்மாவிற்கு அந்த நியாமகத்தன்மை கேட்கப்பட்டிருக்கின்றது.

(அ-கை.)

அப்படியானால் ஈசுவரனுக்கு நியந்திருத்துவம் கேட்கப்பட்டிருந்தும் உம்மால் அயுக்த மென்று எப்படி அங்கீகரிக்கப்பட்டிருக்கின்றது எனக் கூறுகின்றார்:—

अस्य क्लेशकर्माद्यसंगमात् युक्तम् अपि ॥

(சு-ம்.)

இப்பரமாத்மாவிற்குக் கிலேசகர்மமுதலியனவாகிய ஜீவதர்மங்களில் லாமையால் நியாமகத்தன்மை பொருத்தமுள்ளதேயாம். (௧0௭)

[௧0௮] जीवानामप्यसंगत्वात्क्लेशादिर्न ह्यथापि च ।
विवेकाग्रहतः क्लेशकर्मादि प्रागुदीरितम् ॥ १०८ ॥

(அ-கை.)

அப்படியானால் ஜீவனும் அசங்கசித்ரூபமும் கிலேசமுதலியவை இல்லாததேயாம். அப்போது ஈசுவரனிடத்து என்ன விசேஷம் என்றாசங்கித்து ,ஜீவர்கள்தாமே கிலேசமுதலியவைகள் இல்லாதிருந்தவர்களா யிருக்கினும் புத்தியினின்றும் பேதத்தைக் கிரகியாமையால் கிலேசாதிக ளிருக்கின்றன வென்று முன் ௩௲௪-ல் கூறியதை நினைப்பூட்டுகின்றார்:—

जीवानां अपि असंगत्वात् क्लेशादिः न हि अथ अपि च विवेकाग्रहतः क्लेश-कर्मादि भाक् उदीरितम् ॥

(சு-ம்.)

ஜீவர்களும் அசங்கமா யிருத்தலால் அவர்களுக்குக் கிலேசமுதலிய வைக ளில்லை. அப்படியாயினும் பேதத்தைக் கிரகியாமையால் கிலேசகர்ம முதலியன முன் ௩௬௪-ல் சொல்லப்பட்டிருக்கின்றன. (௧0௮)

உ. சுலோகம் ௩௬௬-௪0௨-ல் கூறிய மதத்தில் தோஷத்தோடு நையாயிகமதத்தைக் கூறுதல்.

[௪0௩] नित्यज्ञानप्रयत्नेच्छागुणानीशस्य मन्यते ।
असंगस्य नियंतृत्वमयुक्तमिति तार्किकाः ॥ १०९ ॥

(அ-கை.)

தார்க்கிகர்(நையாயிகர்)களோ அசங்கத்திற்கு நியாமகத்தன்மையைச் சகியாதவர்களாய் ஈசுவரன் ஜீவனைவிட வேறெனும்பொருட்டு ஈசுவரனது ஞானமுதலிய மூன்று குணங்களையும் நித்தியமென் றங்கீகரிக்கின்றன ரென்று கூறுகின்றனர்:—

तार्किकाः ईशस्य नित्यज्ञानप्रयत्नेच्छागुणान् मन्वते असंगस्य नियंतृत्वं अयुक्तं इति ॥

(சு-ம்.)

தார்க்கிகர் அவ்வீசுரனுக்கு நித்தியமாகிய ஞானம், தொழில், இச்சை யென்னுங் குணங்களை நித்தியமாகக் கொள்ளுகின்றனர். அசங்கனுக்கு நியாமகத்தன்மை பொருந்தாது என்று கூறுகின்றனர். (௧0௯)

[௪0௪] पुंविशेषत्वमप्यस्य गुणैरेव न चान्यथा ।
सत्यकामः सत्यसंकल्प इत्यादिश्रुतिर्जगौ ॥ ११० ॥

(அ-கை.)

அப்படியானால் இச்சைமுதலிய குணங்களையுடைய அவ்வீசுவரனுக்கு ஜீவனைவிட எப்படி வேறுபாடுண்டாமென் றாசங்கித்து, ஈசுவரனது குணங் கள் நித்தியமா யிருத்தலால் ஈசுவரனுக்கு ஜீவர்களைவிட வேறுபாடுண் டென்று பரிகரிக்கின்றார்:—

अस्य पुंविशेषत्वं अपि गुणैः एव च अन्यथा न ॥

(சு-ம்.)

இவ்வீசுவரனுக்கு விலக்ஷணமாகிய புருஷத்தன்மையும் நித்தியஞான முதலிய குணங்களினாலேயாம்; வேறுவிதமாக வன்று.

(அ-கை.)

ஈசுவரனது குணங்கள் நித்தியமா மென்பதில் பிரமாணத்தைக் கூறுகின்றார்:—

"सत्यकामः सत्संकल्पः" इत्यादि श्रुतिः जगौ ॥

(சு-ம்.)

"நித்தியமாகிய இச்சையுடையவனும் நித்திய ஆலோசனைவடிவ ஞானமுடையவனு மாவன்." இவைமுதலிய சுருதிகள் ஈசவரனது குணங்களின் நித்தியத்தன்மையைக் கூறுகின்றன. (௧௧0)

௫. சுலோகம் ௨0௫-௨0௪-ல் கூறிய மதத்தில் தோஷத்தோடு இரணியகர்ப்போபாசகர்களது மதத்தைக் கூறுதல் (ஹிரணியகர்ப்பன் ஈசுவரன்).

[௨0௫] नित्यज्ञानादिमत्त्वेऽस्य सृष्टिरेव सदा भवेत् ।
हिरण्यगर्भ ईशोऽतो लिंगदेहेन संयुतः ॥ १११ ॥

(அ-கை.)

அந்த நையாயிகமதத்திலும் தோஷ மிருத்தலால் அந்நிய இரணியகர்ப்ப உபாசகர்களது பக்ஷத்தைக் கூறுகின்றார்:—

अस्य नित्यज्ञानादिमत्त्वे सदा एव सृष्टिः अतः भवेत् हिरण्यगर्भः ईशः ॥

(சு-ம்.)

இவ்வீசுவரன் நித்தியஞானமுதலியவற்றை யுடையவனுயின் எப்போதுமே ஜகத்திற்கு * ௨௨. உற்பத்தியுண்டாம். ஆகையால் இரணியகர்ப்பன் ஈசுவரனும்.

(அ-கை.)

அப்படியானுல் அந்த இரணியகர்ப்பனுக்கு வடிவம் யாதெனக் கூறுகின்றார்:—

* ௨௨. ஈசுவரனது ஞானமுதலியன நித்தியமெனக் கூறின், சுருதியில் சிருஷ்டியினாரம்பகாலத்தில் ஈசுவரனது ஞானத்திற்கு உற்பத்தி கூறப்பட்டிருக்கின்றது. அதற்கும் சுருதியிற்சொல்லப்பட்ட அத்வைதசித்தாந்தத்திற்கும் விரோத முண்டாகின்றது. "சத்தியகாமன் சத்தியசங்கற்பன்" என்னும் சுருதியில் 'சத்திய' மென்னுஞ் சத்தத்திற்கு யதார்த்தம் அல்லது பிரளயபரியந்தமுள்ளது என்பது அர்த்தமாம்; நித்திய மென்பது அர்த்த மன்று. ஆகையால் நையாயிகர்மதம் அசங்கதமாம்.

लिंगदेहेन संयुतः ॥

(சு-ம்.)

*அவ்விரணியகர்ப்பன் இலிங்கதேகத்தோடுகூடியவனாவன்.*

(வி-ம்.)

*மாயாவுபாதியுடைய பரமாத்மாவே இலிங்கசரீரத்தின் சமஷ்டியபிமானத்தால் இரணியகர்ப்ப னெனப்படுவன் என்பது பொருள்.* (௧௧௧)

[௪0௬] उद्गीथब्राह्मणे तस्य माहात्म्यमतिविस्तृतम् ।
लिंगसत्त्वेऽपि जीवत्वं नास्य कर्माद्यभावतः ॥ ११२ ॥

(அ-கை.)

*இரணியகர்ப்பன் ஈசுவரன் என்பதில் பிரமாணம் யாதெனக் கூறுகின்றார்:—*

उद्गीथ ब्राह्मणे तस्य माहात्म्यं अतिविस्तृतम् ॥

(சு-ம்.)

*உத்கீதப்பிராஹ்மணத்தில் அவ்விரணியகர்ப்பனது மகிமை மிக விரிவாயிருக்கின்றது.*

(அ-கை.)

*அப்படியானால் இலிங்கசரீரத்தின் சம்பந்த மிருத்தலால் அவ்விரணிய கர்ப்பர் ஜீவனாவர் என்றாசங்கித்து, அவித்தை காமம் கர்மம் என்பவை இல்லாமையால் அவர் ஜீவனல்லரெனக் கூறுகின்றார்:—*

अस्य लिंगसत्त्वे अपि कर्माद्यभावतः जीवत्वं न ॥

(சு-ம்.)

*இவ்விரணியகர்ப்பருக்கு இலிங்கசரீர மிருக்கினும் காமகர்மமுதலியன இல்லாமையால் ஜீவத்தன்மை யில்லை.* (௧௧௨)

*௪. சுலோகம் ௪0௫-௪0௬-ல் கூறிய மதத்தில் தோஷத்தோடு விராட்போசகர் மதத்தைக் கூறல் (விராட்டு ஈசுவரன்.)*

[௪0௭] स्थूलदेहं विना लिंगदेहो न क्वापि दृश्यते ।
वैराजो देहो ईशोऽतः सर्वतो मस्तकादिमान् ॥ ११३ ॥

(அ-கை.)

ஸ்தூலசரீரத்தைவிட்டு இலிங்கசரீரமாத்திரம் தோற்றாமையால் ஸ்தூல சரீரத்தின் சமஷ்டிஅபிமானியாகிய விராட்டு ஈசுவரனும் என்று அந்நிய விராட்டுபாசகர் கூறுகின்றனர்:—

स्थूलदेहं विना लिंगदेहः क अपि न दृश्यते अतः सर्वतः मस्तकादिमान् वैराजः देहः ईशः ॥

(சு-ம்.)

ஸ்தூலதேகமின்றி இலிங்கதேகம் ஓரிடத்தும் காணப்படுகிறதில்லை. ஆகையால் எங்கும் சிரசுமுதலியவற்றையுடைய விராட்புருஷனது தேகம் ஈசுவரனும். (௧௧௩)

[௨0அ] सहस्रशीर्षेत्येवं च विश्वतश्चक्षुरित्यपि ।
श्रुतमित्याहुरनिशं विश्वरूपस्य चिंतकाः ॥ ११४ ॥

(அ-கை.)

அவ்விராட்டாகிய ஈசுவரன் உண்டென்பதில் பிரமாணத்தைக் கூறுகின்றார்:—

सहस्रशीर्षे इति । एवं च विश्वतश्चक्षुः इति अपि श्रुतं इति अनिशं विश्वरूपस्य चिंतकाः आहुः ॥

(சு-ம்.)

“ஆயிரம் சிரமுடையவர்.” “எங்கும் கண்ணுடையவர்.” என்று இவ்வாறும் சுருதிவாக்கியம் கேட்கப்பட்டிருக்கின்றது. என்று இடைவிடாது விராட்வடிவத்தைச் சிந்திக்கின்ற உபாசகர் கூறுகின்றனர். (௧௧௪)

உ. பிரஹ்மாமுதல் ஸ்தாவரபரியந்தம் ஈசுவரனிடத்து விவாதம் ௨0௯-௨௧௫.

௧. சுலோகம் ௨0எ-௨0அ-ல் கூறிய மதத்தில் தோஷத்தோடு பிரஜாபதிகளின் மதத்தைக் கூறுதல் (பிரஹ்மா ஈசுவரன்.)

[௨0௯] सर्वतः पाणिपादत्वे कृम्यादेरपि चेशता ।
ततश्चतुर्मुखो देव एवेशो नेतरः पुमान् ॥ ११५ ॥

(அ-கை.)

இந்த விராட்டுபாசகர்களது மதத்தில் தோஷதிருஷ்டியால் சிலர் பிரஹ்மாவடிவ அந்நிய தேவதையை ஆசிரயிக்கின்றனரென்று கூறுகின்றார்:—

सर्वतः पाणिपादत्वे क्रम्यादेरपि च ईशता ततः चतुर्मुखः देवः एव ईशः इतरः पुमान् न ॥

(சு-ம்.)

எங்கும் கை கால்முதலியவைகளுடையவராயின் புழுமுதலியவற்றிற்கும் ஈசுவரத்துவ முண்டாம். ஆகையால் நான்குமுகமுடைய தேவனே (பிரஹ்மாவே) ஈசுவரனுவன்; அந்நியபுருஷன் ஈசுவரனல்லன். (௧௧௫)

[௪௧0] पुत्रार्थं तमुपासीना एवमाहुः प्रजापतिः ।
प्रजा असृजतेत्यादिश्रुतिं चोदाहरंत्यमी ॥ ११६ ॥

(அ-கை.)

இப்படி யாரால் சொல்லப்பட்டதெனக் கூறுகின்றார்:—

पुत्रार्थं तम् उपासीनाः एवम् आहुः ॥

(சு-ம்.)

புத்திரன்பொருட்டு அந்தப் பிரஹ்மதேவனை உபாசிக்கின்றவர்கள் இவ்வாறு கூறுகின்றனர்.

(அ-கை.)

"प्रजापतिः प्रजा असृजत பிரஜாபதியாகிய பிரஹ்மா பிரஜைகளை உண்டாக்கினார்." இவைமுதலிய சுருதிவாக்கியங்கள் அந்தப் பிரஹ்மாவின் ஈசுவரத்தன்மையில் பிரமாணமாமென்று கூறுகின்றார்கள் என்று கூறுகின்றனர்:-

च "प्रजापतिः प्रजाः असृजत" इत्यादि श्रुतिं अमी उदाहरंति ॥

(சு-ம்.)

பிரஜாபதி பிரஜைகளை உண்டாக்கினார் என்னு மிவைமுதலிய சுருதியைப் புத்திரவிச்சையுடைய இவர்கள் உதாகரிக்கின்றார்கள். (௧௧௬)

உ. வைஷ்ணவர்களின் மதம் (விஷ்ணு ஈசுவரன்).

[௪௧௧] विष्णोर्नाभेः समुद्भूतो वेधाः कमलजस्ततः ।
विष्णुरेवेश इत्याहुर्लोके भागवता जनाः ॥ ११७ ॥

(அ-கை.)

*பகவத்பக்தர்களாகிய பாகவதர்கள்மதத்தைக் கூறுகின்றார்:—*

क्रमलजः वेधाः विष्णोः नाभेः समुद्भूतः ततः विष्णुः एव ईशः इति लोके भागवताः जनाः आहुः ॥

(சு-ம்.)

*தாமரையிற்றோன்றிய பிரஹ்மா விஷ்ணுவின் கமலவடிவ நாபியினின்றும் உண்டாயிருக்கின்றார், அதனால் விஷ்ணுவே ஈசுவரனவர் என்று உலகத்தில் வைஷ்ணவர்கள் கூறுகின்றனர்.* (௧௧௭)

*௩. சைவர்களின் மதம் (சிவன் ஈசுவரன்).*

[௪௧௨] शिवस्य पादावन्वेष्टुं शार्ङ्ग्यशक्तस्ततः शिवः ।
ईशो न विष्णुरित्याहुः शैवा आगममानिनः ॥ ११८ ॥

(அ-கை.)

*சிவபக்தர்களாகிய சைவர்களது மதத்தைக் கூறுகின்றார்:—*

शिवस्य पादौ अन्वेष्टुं शार्ङ्गी अशक्तः ततः शिवः ईशः । विष्णुः न इति आगममानिनः शैवाः आहुः ॥

(சு-ம்.)

*சிவனது இரண்டு பாதங்களையும் தேடுதற்கு விஷ்ணு அசக்தரானார், ஆகையால் விஷ்ணு ஈசுவரனாகார் என்று சைவசாஸ்திரவிசேஷமாகிய ஆகமத்தை ஒப்பியிருக்கும் சைவர்கள் கூறுகின்றனர்.* (௧௧௮)

*௪. கணபதி பக்தர்களின் மதம்(கணபதி ஈசுவரன்).*

[௪௧௩] पुरत्रयं सादयितुं विघ्नेशं सोऽप्यपूजयत् ।
विनायकं प्राहुरीशं गाणपत्यमते रताः ॥ ११९ ॥

(அ-கை.)

*கணபதியின் பக்தர்களாகிய காணபத்தியர் மதத்தைக் கூறுகின்றார்:-*

सः अपि पुरत्रयं सादयितुं विघ्नेशं अपूजयेत् गाणपत्यमते रताः विनायकं ईशं प्राहुः ॥

(சு-ம்.)

அந்தச் சிவனும் முப்புரங்களையும் ஜயித்தற்குக் கணபதியைப் பூசித்தார், ஆகையால் கணபதியின் மதத்தில் பிரியமுள்ளவர்கள் கணபதியை ஈசுவரனாகக் கூறுகின்றனர். (௧௧௯)

ஒ. ஸ்தாவர(ஜட ஈசுவர)வாதிகளின் கூற்று.

[௪௧௪] एवमन्ये स्वस्वपक्षाभिमानेनान्यथाऽन्यथा ।
मंत्रार्थवादकल्पादीनाश्रित्य प्रतिपेदिरे ॥ १२० ॥

(அ-கை.)

முன் ௩௯௯-௪௧௩-ல் கூறிய நியாயத்தை அந்நியமதத்திலும் அதிதேசஞ்செய்கின்றார்:—

एवम् अन्ये ॥

(சு-ம்.)

இப்படிப் பைரவமைராலமுதலிய தேவதைகளின் உபாசகர்களாகிய மற்றவர் வேறு வேறு விதமாகச் சொல்லுகின்றனர்.

(அ-கை.)

அவர்கள் வேறு வேறு விதமாகக் கூறுவதிற் காரணத்தைக் கூறுகின்றார்:—

स्वस्वपक्षाभिमानेन अन्यथा अन्यथा ॥

(சு-ம்.)

தங்கள் தங்கள் பக்ஷத்தின் அபிமானத்தால் வேறு வேறு விதமாகக் கூறுகின்றனர்.

(அ-கை)

அந்தந்த மதத்திலும் பிரமாணம் உண்டெனக் காட்டுகின்றார்:—

मंत्रार्थवादकल्पादीन् आश्रित्य प्रतिपेदिरे ॥

(சு-ம்.)

மந்திரம் அர்த்தவாதம் கற்ப * சு. முதலியவற்றை ஆசிரயித்துச் சொல்லுகின்றனர். (௧௨0)

* சு. மாரணம் உச்சாடனம் வசீகரணமுதலிய சித்திகளுக் கேதுவாகிய தத்தம் இஷ்டதெய்வமாகும் பைரவர்முதலியோர்களின் மந்திரம், லோகப்பிரசித்தமான பைரவர்முதலிய தேவர்களின் துதி அல்லது அந்நியதேவர்களின் நிந்தையாகிய அர்த்தவாதம், மந்திரதந்திரங்களிற் பிரதிபாதிக்கும் கற்ப மென்னும் பெயருடைய தற்காலத்து நூல்கள் என்னும் இவைமுதலிய பிரமாணங்களை ஆசிரயித்து வேறு வேறு விதமாகக் கூறுகின்றனர்.

[௪௧௫] अंतर्यामिणमारभ्य स्थावरांतेशवादिनः ।
संत्यश्वत्थार्कवंशादेः कुलदैवत्वदर्शनात् ॥ १२१ ॥

(அ-கை.)

அப்படியானுல் இப்படி எத்தனை மதங்களிருக்கின்றன என்றுசங்கித்து, அளவிறந்த மதங்களிருக்கின்றன வென்று கூறுகின்றார்:—

अंतर्यामिणं आरभ्य स्थावरांतेशवादिनः संति ॥

(சு-ம்.)

அந்தரியாமிமுதல் ஸ்தாவரம்வரையிலும் ஈசுவரனைக் கூறும் வாதிகள் இருக்கின்றனர்.

(அ-கை.)

அப்படியானுல் ஸ்தாவரம் ஈசுவரனென்னும் வாதம் ஒரிடத்தும் காணப்படவில்லையே என்றுசங்கித்துக் கூறுகின்றார்:—

अश्वत्थार्कवंशादेः कुलदैवत्वदर्शनात् ॥

(சு-ம்.)

உலகத்தில் அரசு எருக்கு மூங்கில்முதலியவற்றிற்குக் குலதெய்வத்தன்மை காணப்படுதலால். (௧௨௧)

ரு. ஆத்மதத்துவவிவேகத்தில் சர்வமதத்திற்கும் விரோதமின்றிய ஈசுவர நிர்ணயம் ௪௧௯-௫௦௯.

௧. ஈசுவரத்தன்மைக்கு உபாதியாகிய (ஜகத்திற்கு உபாதானமாகிய) மாயையின் வர்ணனம் ௪௧௯-௪௪௯.

க. சர்வமதத்தோடும் விரோதிக்காத ஈசுவரசம்மதியின் பிரதிஞ்ஞை.

[௪௧௯] तत्त्वनिश्चयकामेन न्यायागमविचारिणाम् ।
एकैव प्रतिपत्तिः स्यात्साऽप्यत्र स्फुटमुच्यते ॥ १२२ ॥

(அ-கை.)

இப்படி மதங்கள் பேதமாயிருக்குமாயின் எது கொள்ளத்தக்கது எது தள்ளத்தக்கது என்று கேட்குமிடத்துக் கூறுகின்றார்:—

तत्त्वनिश्चयकामेन न्यायागमविचारिणां प्रतिपत्तिः एका एव स्यात् ॥

(சு-ம்.)

தத்துவநிச்சய விருப்பத்தால் நியாயாகமங்களை விசாரிக்கின்றவர்களுக்கு நிச்சயம் ஒன்றேயாகும்.

(வி-ம்.)

எதார்த்த ஈசுவரசொரூபமான தத்துவநிச்சயவிருப்பத்தால் நியாயமாகிய யுக்தி ஆகமமாகிய சாஸ்திரம் என்னுமிரண்டையும் விசாரிக்குமியல்புடைய புருஷர்களுக்கு நிச்சயம் ஒன்றேயாம்.

(அ-கை.)

அந்த ஒரேநிச்சயம் எப்படி இருக்கின்றது எனக் கூறுகின்றார்:—

सा अत्र अपि स्फुटं उच्यते ॥

(சு-ம்.)

அந்த நிச்சயம் இந்தப் பிரகரணத்திலும் விளங்கும்படியாகச் சொல்லப்படுகின்றது. (கஉஉ)

உ. சுலோகம் ௧௨௧-ல் கூறிய சம்மதிக்கு அநுகூலமான சுருதி.

[௧௨௩] मायां तु प्रकृतिं विद्यान्मायिनं तु महेश्वरम् ।
अस्यावयवभूतैस्तु व्याप्तं सर्वमिदं जगत् ॥ १२३ ॥

(அ-கை.)

அந்த ௧௨௧-ல் கூறிய நிர்ணயத்தினைக் காட்டுதற்கு அந்த நிர்ணயத்திற்கு அநுகூலமாகிய சுருதியைச் சொல்லுகின்றார்:—

मायां तु प्रकृतिं विद्यात् मायिनं तु महेश्वरं । अस्य अवयवभूतैः तु सर्वं इदं जगत् व्याप्तम् ॥

(சு-ம்.)

மாயையைப் பிரகிருதியாக அறிக. மாயாவுபாதிகனை மகேசுவரனாக அறிக. இம்மாயாவுபாதிகனுடைய சேதனத்தின் அவயவவடிவ ஜீவர்களால் இந்த சகலஜகத்தும் வியாபிக்கப்பட்டிருக்கின்றது.

(வி-ம்.)

மாயையினையே ஜகத்தின் உபாதானகாரணமான பிரகிருதியாக அறிக. மாயையை உபாதியாகவுடைய அந்தரியாமியினையே மகேசுவரன் அதாவது

மாயையின் அதிஷ்டானரூப நிமித்தகாரணம் என்றறிக. இந்த மாயை உபாதியாகவுடைய மகேசுவரனது அவயவங்களென்னும் சராசர அதாவது ஸ்தாவரஜங்கம சொரூபமாகிய ஜீவர்களால் இந்தச் சகல ஜகத்தும் வியாபிக்கப்பட்டிருக்கின்றது என்பது சுலோகத்தின் பிற்பாதியாற் கூறியது. இது சுலோகத்தின் முற்பாதியிற்கூறிய சுருதியின் அர்த்தமாம். (௧௨௩)

௩. சுலோகம் ௭௧௨-ல்கூறிய சுருதியநுசாரமான ஈசுவரநிச்சயம் தகுதியுடையதெனல்.

[௪௧௮] इति श्रुत्यनुसारेण न्याय्यो निर्णय ईश्वरे ।
तथा सत्यविरोधः स्यात्स्थावरांतेशवादिनाम् ॥ १२४ ॥

(அ-கை.)

இந்த ௭௧௨-ல்கூறிய சுருதியநுசாரமாக ஈசுவரன் விஷயஞ்செய்யும் நிச்சயம் பொருத்தமாமெனக் கூறுகின்றார்:—

इति श्रुत्यनुसारेण ईश्वरे निर्णयः न्याय्यः ॥

(சு-ம்.)

இவ்வித சுருதியநுசாரமாகிய ஈசுவரனிடத்துள்ள நிச்சயம் பொருத்தமுள்ளதாம்.

(அ-கை.)

இந்த நிச்சயம் எதனாற் பொருந்தியதா மென்றாசங்கித்து எங்கும் அதாவது அந்தரியாமிமுதல் ஸ்தாவரபரியந்தமுள்ள ஈசுவரவாதிகளின் மதங்களில் விரோதமில்லாதிருத்தலால் பொருத்தமுடையதாமெனக் கூறுகின்றார் :—

तथा सति स्थावरान्तेशवादिनां अविरोधः स्यात् ॥

(சு-ம்.)

அப்படியாகவே ஸ்தாவரபரியந்த ஈசுவரவாதிகளுக்கு விரோதமில்லாததாகின்றது.

(வி-ம்.)

ஸ்தாவர ஜங்கமமுதலிய சகலஜகத்தையும் ஈசுவரத்தன்மையாக அங்கீகரித்தலால் எந்த வாதியோடும் விரோதமில்லை என்பதுதாற்பரியம்(௧௨௪)

௪. மாயையின் வடிவமும் (அஞ்ஞானமும்) அதிற் பிரமாணமும்.

[௪கரு] माया चेयं तमोरूपा तापनीये तदीरणात् ।
अनुभूतिं तत्र मानं प्रतिजज्ञे श्रुतिः स्वयम् ॥ १२५ ॥

(அ-கை.)

அப்படியானல் ஜகத்தின் உபாதானகாரணமாகிய மாயையாகிய பிரகிருதிக்கு வடிவம் யாதெனக் கூறுகின்றார்:—

इयं च माया तमोरूपा ॥

(சு-ம்.)

இந்த மாயையும் * ௪௬. அஞ்ஞானவடிவமாம்.

(அ-கை.)

மாயை அஞ்ஞானவடிவமென்று எதனல் அறியப்படுகிறதெனக் கூறுகின்றார் :—

तापनीये तदीरणात् ॥

(சு-ம்.)

தாபநீயத்தில் அது சொல்லப்பட்டிருத்தலால்.

(வி-ம்.)

"माया च तमोरूपा மாயை தமோவடிவமாம்." என்று நிருசிம்மதாபநீய உபநிஷத்தில் மாயைக்குத் தமோர்வடிவத்துவம் கூறியிருத்தலால்.

(அ-கை.)

மாயை தமோவடிவமா மென்பதில் பிரமாணம். யாதென்று கேட்குமிடத்து, "अनुभूतेः அநுபூதியால்" என்னுஞ் சுருதியே இம்மாயையின் தமோவடிவத்தில் அநுபவப்பிரமாணமா மென்று பிரதிஞ்ஞை செய்கின்றதென்று கூறுகின்றார் :—

तत्र अनुभूतिं मानं श्रुतिः स्वयं प्रतिजज्ञे ॥

---

* ௪௬. உலகத்தில் இந்திரஜாலகாரனது மந்திர ஔஷதமுதலியவற்றால் பார்க்கும் புருஷனது அஞ்ஞானத்தின் கலகத்தினலேயே அந்தந்தவடிவமாக இந்திரஜாலம் காணப்படுதலால் மாயை அஞ்ஞானமேயாம். ஒரேஅஞ்ஞானம் கூடாததையும் கூட்டுவிக்கின்றது; ஆகையால் மாயை யெனப்படும். பிரஹ்மாத்மசொரூபத்தை மறைத்தலாலேனும் அல்லது ஞானத்திற்கு விரோதியா யிருத்தலினலேனும் அஞ்ஞான மெனப்படுகின்றது. ஆகையால் மாயை அஞ்ஞானத்தினும் வேறன்று.

(சு-ம்.)

அதில் அநுபூதிவடிவப் பிரமாணத்தைச் சுருதியானதுதான் பிர திஞ்ஞை செய்கின்றது. (௧௨௫)

௫. மாயை அஞ்ஞானவடிவமென்பதில் சுருதியநுசரித்த உலகாநுபவம்.

[௬௨௦] जडं मोहात्मकं तच्चेत्यनुभावयति श्रुतिः ।
आबालगोपं स्पष्टत्वादानंत्यं तस्य साऽब्रवीत् ॥ १२६ ॥

(அ-கை.)

அப்படியானல் அந்தமாயை தமோவடிவமா மென்பதில் இந்தச் சுருதியிற்கூறிய அநுபவம் யாதென்று கேட்குமிடத்து, "तदेतज्जडं मोहात्मकं அத்தன்மைய மாயையின் காரியம் ஜடமும் மோகவடிவமுமாம்." என்னுஞ் சுருதியே இம்மாயை தமோவடிவ மென்பதில் அநுபவத்தை விளக்குகின்றதென்று கூறுகின்ருர் :—

तत् जडं च मोहात्मकं इति श्रुतिः अनुभावयति ॥

(சு-ம்.)

அது ஜடமும் மோகவடிவமுமா மென்று சுருதி அநுபவமாக்குகின்றது.

(அ-கை.)

"अनन्तं அநந்தமாம்" என்னுஞ் சுருதியால் எல்லோரநுபவத்தாலும் சித்தமா மெனப்படுகின்றது என்று கூறுகின்ருர் :—

आबालगोपं स्पष्टत्वात् तस्य आनंत्यं सा अब्रवीत् ॥

(சு-ம்.)

வெளிப்படையா யிருத்தலால் குழந்தை இடையன்வரையிலும் அந்த ஜடமோகவடிவமாகிய மாயாகாரியத்திற்கு அநந்தத்தன்மையினை அந்தச் சுருதி கூறியிருக்கின்றது.

(வி-ம்.)

'ஜடமும் மோகமும் பிரகிருதியின் காரியமாம்.' என்பது பாலன்கோபாலன்முதலிய சகல ஜனங்களினது அநுபவமாம் என்பது பொருள். ()

௬. மாயையின் விசேஷணமாகிய ஜடமோகங்களின் அர்த்தம்.

[௬௨௧] अचिदात्मघटादीनां यत्स्वरूपं जडं हि तत् ।
यत्र कुंठीभवेद्बुद्धिः समोह इति लौकिकाः ॥ १२७ ॥

(அ-கை.)

ஜடசப்தார்த்தத்தினைக் கூறுகின்றார் :—

अचिदात्मघटादीनां यत् स्वरूपं तत् हि जडम् ॥

(சு-ம்.)

அசேதனவடிவ கடாதிகளுக்கு எது சொரூபமோ அதுவே ஜடமாம்.

(அ-கை.)

மோகசப்தத்தினர்த்தத்தைக் கூறுகின்றார் :—

यत्र बुद्धिः कुंठीभवेत् सः मोहः इति लौकिकाः ॥

(சு-ம்.)

எதில் புத்தியானது மழுங்குகின்றதோ அதாவது அறியாது பின்னடைகின்றதோ அது மோகமாம் என்று இலௌகிகர்கள் மதிக்கின்றார்கள்.()

௭. யுக்தியினாலும் சுருதியினாலும் மாயை அநிர்வசநீயமெனல்.

[௪௨௨] इत्थं लौकिकदृष्ट्यैतत्सर्वैरप्यनुभूयते ।
युक्तिदृष्ट्या त्वनिर्वाच्यं नासदासीदिति श्रुतेः ॥ १२८ ॥

(அ-கை.)

சுலோகம் ௪௧௯—௪௨0-ல் கூறியவிதமாகச் சகலஜனங்களது அநுபவத்தாலும் சித்தமாகும்வடிவ மாயையின் அஞ்ஞானவடிவத்துவம் சித்தித்திருக்கிறதென்று கூறுகின்றார் :—

इत्थं लौकिकदृष्ट्या एतत् सर्वैः अपि अनुभूयते ॥

(சு-ம்.)

இலௌகிகதிருஷ்டியால் இந்த ஜடத்துவ மோகலக்ஷணமாகிய மாயையின் தமோவடிவத்துவமும் எல்லோர்களாலும் அநுபவிக்கப்படுகின்றது.

(அ-கை.)

இப்படி மாயை எல்லோருடைய அநுபவத்தாலும் சித்திக்குமாயின் கடமுதலியவற்றைப்போல ஞானத்தால் நிவிருத்தியாகத்தக்கதாமென்றாசங்கித்துக் கூறுகின்றார் :—

युक्तिदृष्ट्या तु अनिर्वाच्यम् ॥

(சு-ம்.)

யுக்தியால் பார்க்குமிடத்து அநிர்வாச்சியமாம்.

(வி-ம்.)

மூலசுலோகத்திலுள்ள ஒகாரப்பொருளைத்தரும் து-து என்னுஞ் சொல் மாயையின் தமோவடிவம் அநிர்வசநீயமா மென்பதில் சங்கையை நிவிருத்திக்கும்பொருட்டாம். சத்தாகவாவது அசத்தாகவாவது சொல்லக் கூடாதது எதுவோ அது அநிர்வாச்சிய மெனப்படும்.

(அ-கை.)

அந்தமாயையின் அஞ்ஞானவடிவம் அநிர்வாச்சிய மென்பதில் பிரமாணம் யாதெனக் கூறுகின்றார் :—

न असत् आसीत् इति श्रुतेः ॥

(சு-ம்.)

அசத்தானது இருந்ததில்லை யென்னுஞ்சுருதியால். (கஉஅ)

அ. சுலோகம் சஉஉ-ல் கூறிய மாயையின் அநிர்வசநீயத்தன்மையைப் பிரதிபாதிக்கும் சுருதியின் அபிப்பிராயம்.

[சஉக] नासदासीद्विभातत्वान्नो सदासीच्च बाधनात् ।
विद्यादृष्ट्या श्रुतं तुच्छं तस्य नित्यनिवृत्तितः ॥ १२९ ॥

(அ-கை.)

இந்த சஉஉ-வது சுலோகத்தில் கூறிய சுருதியின் அபிப்பிராயத்தைக் கூறுகின்றார் :—

न असत् आसीत् विभातत्वात् च नो सत् आसीत् बाधनात् ॥

(சு-ம்.)

அசத்திருந்ததில்லை; பிரகாசித்துக்கொண்டிருத்தலால். சத்தாக இருந்ததில்லை ; பாதிக்கப்படுதலால்.

(வி-ம்.)

பாதிக்கப்படுதலால் என்பது "नेह नानाऽस्ति किंचन இந்த நாநாவல்லாத பிரஹ்மத்தில் நாநா வென்பது சிறிதுமில்லை." என்னுஞ் சுருதியால் அஞ்ஞானம் நிஷேதிக்கப்படுதலால் என்பதாம். மாயையின்வடிவமாகிய அஞ்ஞானம் சத்தசத்தெனும் இரண்டுவடிவமாமெனிலோ இருளுமொளியும்போல விரோதமுடையதா யிருத்தலால் அயுக்தமாம் அதாவது விகற்

பஞ்செய்பவுந் தகாததா மென்பதை யறிந்து சுருதியானது அவ்விரண்டு வடிவமா மென்பதை உபேக்ஷித்தது.

(அ-கை.)

இப்படி யுக்திதிருஷ்டியால் அஞ்ஞானம் அநிர்வசநீயமா (மித்தையா) மென்பதைக் காட்டி " तुच्छामिदंरूपमस्य இவ்வஞ்ஞானத்தின் வடிவம் துச்சமாம் " என்னுஞ் சுருதி வித்வான் (ஞானி)களது அநுபவத்தால் அந்த மாயை துச்சமா மென்பதைக் காட்டுகின்றதென்று கூறுகின்றார் :—

विद्यादृष्ट्या तुच्छं श्रुतम् ॥

(சு-ம்.)

ஞானதிருஷ்டியால் துச்சமென்று கேட்கப்பட்டிருக்கின்றது.

(அ-கை.)

அஞ்ஞானம் முயற்கொம்புபோலச் சொரூபமின்மைவடிவ துச்சமா மென்பதில் ஏதுவைக் கூறுகின்றார் :—

तस्य नित्यनिवृत्तितः ॥

(சு-ம்.)

அந்த மாயையாகிய அஞ்ஞானத்தின் * சள நித்தியநிவிருத்தியால் அவ்வஞ்ஞானம் துச்சமாம்.

---

* சள. நிவிருத்தி யென்பது பாதத்திற்காம். அந்தப் பாதமாகிய மித்தியாத்துவ நிச்சயம் (க) விஷயம் (உ) விஷயி யென்னும் பேதத்தால் இரண்டுவகையாம். அவற்றுள்,

(க) அவித்தையும் அதன்காரியமும் இரச்சுவில் சர்ப்பம் மூன்றுகாலத்திலும் வியாவகாரிகமா யில்லாததுபோல அதிஷ்டானப்பிரஹ்மத்தில் பாரமார்த்திகமாக மூன்றுகாலத்திலும் இல்லாமை விஷயவடிவபாதமாம்.

(உ) எப்போதுமே இருக்கும் அவித்தைமுதலியவற்றின் முற்சொல்லிய இல்லாமையை நிச்சயித்தலாகிய பாதம் விஷயிவடிவபாதமாம்.

எதன் பிரகாச முண்டாகின்றதோ அது விஷய மெனப்படும். எது பிரகாசஞ் செய்வதோ அது விஷயி யெனப்படும்.

"அகம் பிரஹ்மாஸ்மி" என்னும் நிச்சயமாகிய தத்துவஞானத்திற்குப் பிற்கணத்திலுண்டாகும் " என்னிடத்தில் மூன்றுகாலத்திலும் அவித்தையும் பிரபஞ்சமுமில்லை." என்னும் வடிவினதாகிய விருத்திவடிவபாதம் எதனால் முன்னமே சித்தித்துள்ள அவித்தைமுதலியவற்றின் அபாவத்தைப் பிரகாசிக்கின்றதோ அதனால் அந்த விருத்தி விஷயிவடிவபாதமாம். அந்தவிஷயவடிவ பாதமின்றிக் கேவலம் அதன் நிச்சயமாகிய விஷயிபாதத்தை அங்கீகரிக்கின், ஒன்றில் மற்றொன்றன் புத்தி ஆகுதலால் அந்த நிச்சயமும் பிரமவடிவமாம். ஆகையால் விஷயவடிவமாகிய பாதம் அவசியம் அங்கீகரிக்கவேண்டியதாம். ஆதலால் இங்கு நித்தியநிவிருத்தி என்னுஞ் சொல்லால் விஷயவடிவ பாதமே கொள்ளப்படும்.

க. மாயையின் மூவகைத்தன்மையைக் கூறிச் சுலோகம் சஉகூ-ல் கூறிய அர்த்தத்தினை முடித்தல்.

[சஉச] तुच्छानिर्वचनीया च वास्तवी चेत्यसौ त्रिधा ।
ज्ञेया माया त्रिभिर्बोधैः श्रौतयौक्तिकलौकिकैः ॥ १३० ॥

(அ-கை.)

உபபாதானஞ்செய்த அர்த்தத்தை முடிக்கின்ருர்:—

श्रौतयौक्तिकलौकिकैः त्रिभिः बोधैः असौ माया तुच्छा अनिर्वचनीया च वास्तवी इति त्रिधा ज्ञेया ॥

(சு-ம்.)

சிரௌதம் யௌக்திகம் இலௌகிக மென்னும் மூன்று ஞானத்தால் இந்த மாயை துச்சை அநிர்வசநீயை வாஸ்தவி என்று மூன்றுவிதமாக அறியத்தக்கதாம்.

(வி-ம்.)

சுருதியினுற்றோன்றியதான சிரௌதஞானத்தால் துச்சை அதாவது மூன்றுகாலத்திலும் அசத்து என்றும், யுக்திஜந்யமான யௌதிகஞானத்தால் அநிர்வசநீயை அதாவது சத்தசத்துவிலக்ஷணமாகிய மித்தை என்றும், இலௌகிகமாகிய உலகப்பிரசித்தஞானத்தால் வாஸ்தவி அதாவது சத்தியை என்றும் மாயை மூன்றுவிதமாக அறியத்தக்கதாம். (கஙo)

கo. மாயையின்காரியம். (ஜகத்தின் சத்தசத்துத்தன்மையைக் காட்டல்.)

[சஉரு] अस्य सत्त्वमसत्त्वं च जगतो दर्शयत्यसौ ।
प्रसारणाच्च संकोचाद्यथा चित्रपटस्तथा ॥ १३१ ॥

(அ-கை.)

"अस्य सत्वमसत्वं च दर्शयति இந்த ஜகத்தின் இருப்பையும் இல்லாமையையும் மாயை காட்டுகின்றது." என்னுஞ்சுருதியின் அர்த்தமாகிய இந்த மாயையின் செய்கையைக் கூறுகின்ருர் :—

असौ अस्य जगतः सत्त्वं च असत्त्वं दर्शयति ॥

(சு-ம்.)

இந்த மாயை இந்த ஜகத்தின் இருப்பையும் இல்லாமையையுங் காட்டுகின்றது.

(அ-கை.)

ஒரே மாயைக்கு ஜகத்தின் இருப்பையும் இல்லாமையையும் காட்டுதலில் திருஷ்டாந்தத்தைக் கூறுகின்றார் :—

प्रसारणात् च संकोचात् यथा चित्रपटः तथा ॥

(சு-ம்.)

விரிதலாலும் சுருங்குதலாலும் எப்படிச் சித்திரபடம் சித்திரத்தின் இருப்பையும் இல்லாமையையும் காட்டுவதாய் இருக்கின்றதோ அப்படியே மாயையு மிருக்கின்றது. (௧௩௧)

௧௧. யுக்தியினால் மாயையின் சுதந்திரத்தன்மையையும் சுதந்திரத்தன்மையின்மையையும் கூறுதல்.

[௬௨௩] अस्वतंत्रा हि माया स्यादप्रतीतेर्विना चितिम् ।
स्वतंत्राऽपि तथैव स्यादसंगस्यान्यथाकृतेः ॥ १३२ ॥

(அ-கை.)

“ स्वतंत्रास्वतंत्रत्वेन சுதந்திரத்தன்மை சுவதந்திரத்தன்மையின்மை என்பவற்றால் மாயை இருக்கின்றது.” என்னுஞ் சுருதியினால் மாயையின் சுவதந்திரத்துவம் அசுவதந்திரத்துவ மிரண்டும் காட்டப்பட்டன. அவ்விரண்டிலும் யுக்தியைக் கூறுகின்றார் :—

माया चितिं विना अप्रतीतेः अस्वतंत्रा हि स्यात् । तथा एव असंगस्य अन्यथाकृतेः स्वतन्त्रा अपि स्यात् ॥

(சு-ம்.)

மாயை சேதனமின்றித் தோற்றாமையால் சுவதந்திரமில்லாததாம் அதாவது பராதீனமாம். அப்படியே அசங்கமாகிய ஆத்மாவை வேறுவிதமாகச் செய்வதால் சுவதந்திரமுள்ளதாம் அதாவது சுவாதீனமுள்ளதாம்.

(வி-ம்.)

தன்னைவிளக்கும் சைதன்னியத்தைவிட்டு விளங்காமையால் மாயை சுவதந்திரமில்லாததாம்; அசங்கம் அதாவது மாயாசம்பந்தமில்லாத ஆத்மாவை வேறுவிதமாகச் செய்தலில் சுவதந்திரமுள்ளதுமாம். (௧௩௨)

௧௨. மாயையினால் ஆத்மா வேறுவிதமாக்கப்படுந்தன்மையை வெளிப்படுத்துதல்.

[௬௨௪] कूटस्थासंगमात्मानं जगत्त्वेन करोति सा ।
चिदाभासस्वरूपेण जीवेशावपि निर्ममे ॥ १३३ ॥

(அ-கை.)

மாயை ஆத்மாவை வேறுவிதமாகச் செய்தலையே விளக்குகின்றார் :—

सा कूटस्थासंगं आत्मानं जगत्त्वेन करोति ॥

(சு-ம்.)

அந்த மாயை நிர்விகாரமும் அசங்கமுமாகிய ஆத்மாவை அகங்கார முதலிய பிரபஞ்சவடிவமாகச் செய்கின்றது.

(அ-கை.)

“ जीवेशावा भासेन करोति ஜீவேசுவரர்களை ஆபாசமாகச் செய்கின்றது.” என்னுஞ் சுருதியிற்கூறிய ஜீவேசுவரவியாபகத்தை மாயை செய்கின்றதென்று கூறுகின்றார் :—

चिदाभासस्वरूपेण जीवेशौ अपि निर्ममे ॥

(சு-ம்.)

சிதாபாசசொரூபமாக ஜீவேசுரர்களிருவரையும் மாயை உண்டாக்குகின்றது. (௧௩௩)

௧௩. சுலோகம் ௪௨௭-ல் கூறிய அர்த்தத்தில் சங்கைக்குச் சமாதானத்தோடு மாயையின் செய்தற்கரியதைச் செய்யுந்தன்மை.

[௪௨அ] कूटस्थमनुपद्रुत्य करोति जगदादिकम् ।
दुर्घटैकविधायिन्यां मायायां का चमत्कृतिः ॥ १३४ ॥

(அ-கை.)

ஆத்மாவை வேறுவிதமாகச் செய்தலில் கூடஸ்தத்தன்மைக்கு அதாவது நிர்விகாரத்தன்மைக்குக் கேடுண்டாகுமென்றாசங்கித்துக் கூறுகின்றார் :—

कूटस्थं अनुपद्रुत्य जगदादिकं करोति ॥

(சு-ம்.)

கூடஸ்தனைக் கெடுக்காமல் ஜகத்துமுதலியவற்றைச் செய்கின்றது.

(அ-கை.)

அப்படியானால் கூடஸ்தத்தன்மையைக் கெடுக்காமல் ஜகத்துமுதலியவற்றின் அதாவது ஜகத்து ஜீவேசுவரத்தன்மைகளின் சொரூபத்தன்மையைச் சம்பாதித்தல் அரிதாமென்றாசங்கித்துக் கூடாததொன்றைக்

கூட்டுவித்தலாகிய முக்கிய காரியத்தைச் செய்வதா யிருத்தலால் மாயை யினிடத்தில் செய்தற்கரியதைச் செய்தலாகிய இஃது ஆச்சரியத்திற்குக் காரண மன்றெனக் கூறுகின்றார்:—

दुर्घटैकविधायिन्यां मायायां का चमत्कृतिः ॥

(சு-ம்.)

செய்தற்கரிய ஒன்றை அதாவது முக்கியகாரியத்தைச் செய்யும் மாயை யினிடத்து என்ன ஆச்சரியமுளது?

(வி-ம்.)

மாயை செய்தற்கரியதைச் செய்யாவிடின் மாயையெனுந்தன்மையே பங்கமாகும் என்பது தாற்பரியம்　　　　(௧௩௪)

௧௪. மாயை செய்தற்கரியதைச் செய்வதா மென்பதில் திருஷ்டாந்தம்.

[௪௨௯] द्रवत्वमुदके वह्नावौष्ण्यं काठिन्यमश्मनि ।
मायायां दुर्घटत्वं च स्वतः सिद्ध्यति नान्यतः ॥ १३५ ॥

(அ-கை.)

மாயைக்குச் செய்தற்கரியதைச் செய்யுந்தன்மை யியல் பென்பதில் திருஷ்டாந்தம் கூறுகின்றார்.—

उदके द्रवत्वं वह्नौ औष्ण्यं अश्मनि काठिन्यं च मायायां दुर्घटत्वं स्वतः सिद्ध्यति अन्यतः न ॥

(சு-ம்.)

நீரில் நெகிழ்ச்சியும், நெருப்பில் சூடும், கல்லில் வன்மையும், மாயையில் செய்தற்கரியதைச் செய்யுந்தன்மையும் இயல்பாகவே சித்திக்கின்றன; வேறுவிதமா யில்லை.

(வி-ம்.)

நீர்முதலியவற்றிற்கு நெகிழ்ச்சிமுதலியன இயல்பாயிருப்பதுபோல மாயைக்கும் செய்தற்கரியதைச் செய்யுந்தன்மை இயல்பா மென்பது பொருள்.　　　　(௧௩௫)

௧௫. மாயை செய்தற்கரியதைச் செய்வ தென்பதில் சங்கைசமாதானம்.

[௪௩௦] न वेत्ति लोको यावत्तां साक्षात्तावच्चमत्कृतिम् ।
धत्ते मनसि पश्चात्तु मायैषेत्युपशाम्यति ॥ १३६ ॥

(அ-கை.)

அப்படியானால் "மாயைக்குச் செய்தற்கரியதைச் செய்யுந்தன்மை ஆச்சரியத்திற்குக் காரணமன்று" என்றிப்படி முன் ௬௨௮-ல் கூறியது பொருந்தாது. ஏனெனின், மாயையின் ஆச்சரியத்திற் கேதுவாகுந்தன்மை உலகத்தில் காணப்படுதலா லென்றாசங்கித்து, உலகத்தில் மாயையைப் பிரயோகஞ் செய்பவனாகிய இந்திரஜாலகாரனது சாக்ஷாத்காரம் அதாவது இவன் இந்திரஜாலகாரன் என்னும் ஞானம்வரையிலுமே இந்த மாயைக்கு ஆச்சரியகாரணத்துவ முண்டு; பிறகு இல்லையெனக் கூறுகின்றார்:—

लोकः यावत् तं साक्षात् न वेत्ति तावत् मनसि चमत्कृतिं धत्ते पश्चात् तु एषा माया इति उपशाम्यति ॥

(சு-ம்.)

உலகம் எதுவரையிலும் அந்த மாயையின் பிரேரகத்தை நேரே அறியவில்லையோ அதுவரையிலுமே மனதில் ஆச்சரியத்தைக் கொள்ளுகின்றது; மாயாவியை அறிந்தபின் இது மாயையா மென்று ஆச்சரியநிவிருத்தியை யடைகின்றது. (௧௩௬)

[௬௩௭] प्रसरंति हि चोद्यानि जगद्वस्तुत्ववादिषु ।
न चोदनीयं मायायां तस्याश्चोद्यैकरूपतः ॥ १३७ ॥

(அ-கை.)

அல்லது ஜகத்து சத்திய மென்னும் வாதிகளாகிய நையாயிகர்முதலியோரை நோக்கி இப்படி ௬௩௦-ல் கூறியபடி பிரசினை செய்யத்தக்கதாம். வேதாந்தியாகிய எங்களை இந்த வினு வினவத்தக்கதன்று என்று கூறுகின்றார்:—

जगद्वस्तुत्ववादिषु चोद्यानि प्रसरंति हि मायायां चोदनीयं न तस्याः चोद्यैकरूपतः ॥

(சு-ம்.)

ஜகத்து வாஸ்தவ மென்னும் வாதிகளிடத்தில் பிரசினங்கள் பிரவிருத்தித்தலால் மாயையினிடத்தில் பிரசினை செய்யத்தக்கதன்று; ஏனெனின் அந்த மாயை பிரசினைவடிவமாகவே யிருத்தலால். (௧௩௭)

[சஙஉ] चोद्येऽपि यदि चोद्यं स्यात्त्वच्चोद्ये चोद्यते मया ।
परिहार्यं ततश्चोद्यं न पुनः प्रतिचोद्यताम् ॥ १३८ ॥

(அ-கை.)

மாயாவாதியை நோக்கிப் பிரசினஞ்செய்தலில் அதிப்பிரசங்கத்தைக் கூறுகின்றார்:—

चोद्ये अपि यदि चोद्यं स्यात् त्वच्चोद्ये मया चोद्यते ॥

(சு-ம்.)

பிரசினவடிமாகிய மாயையிலும் பிரசினமுண்டாகுமாயின், அப்போது உனது பிரசினத்தில் என்னால் பிரசினஞ் செய்யப்படுகின்றது.

(அ-கை.)

அப்போது செய்யத்தக்கது யாதெனக் கூறுகின்றார்:—

ततः चोद्यं परिहार्यं पुनः प्रतिचोद्यतां न ॥

(சு-ம்.)

அதனால் வினை நிவிருத்திக்கத்தக்கதாம். மறுபடியும் எதிர்வினை செய்யத்தக்கதன்று. (கஙஅ)

[சஙங] विस्मयैकशरीराया मायायाश्चोद्यरूपतः ।
अन्वेष्यः परिहारोऽस्या बुद्धिमद्भिः प्रयत्नतः ॥ १३९ ॥

(அ-கை.)

சுலோகம் சஙஉ-ல் கூறிய அர்த்தத்தையே கூறுகின்றார்:—

विस्मयैकशरीरायाः मायायाः चोद्यरूपतः अस्याः परिहारः बुद्धिमद्भिः प्रयत्नतः अन्वेष्यः ॥

(சு-ம்.)

ஆச்சரியமே முக்கிய சரீரமாகவுடைய மாயை பிரசினவடிவமா யிருத்தலால் இந்தமாயையாகிய பிரசினத்தின் பரிகாரம் அதாவது நிவிருத்தியுபாயமான ஞானம் புத்திமான்களால் முயற்சியால் தேடத்தக்கதாம். ()

கக. மாயையின் லக்ஷணம் சித்தியாமையின் சங்கையும் சமாதானமும்.

[சஙச] मायात्वमेव निश्चेयमिति चेत्तर्हि निश्चिनु ।
लोकप्रसिद्धमायाया लक्षणं यत्तदीक्षताम् ॥ १४० ॥

(அ-கை.)

மாயை யென்னுந்தன்மை நிச்சயமாயின் அம்மாயைத்தன்மையின் நிவிருத்தியுபாயத்தைத் தேடுதல் உசிதமாம். அந்த மாயையெனுந்தன்மைநிச்சயமே இதுவரையிலும் சித்திக்கவில்லை யென்று வாதி மூலத்தில் சங்கிக்கின்றான் :—

मायात्वं एव निश्चेयं इति चेत् ॥

(சு-ம்.)

மாயையெனுந்தன்மையே நிச்சயிக்கத்தக்கதாமெனின்,

(அ-கை.)

மாயையின் இலக்ஷணமிருத்தலால் மாயையெனுந்தன்மை நிச்சயிக்கத்தக்கதாம் என்னு மபிப்பிராயமாகக் கூறுகின்றார் :—

तर्हि निश्चिनु ॥

(சு-ம்.)

அப்போது நிச்சயஞ்செய்.

(அ-கை.)

மாயைக்கு இலக்ஷணம் யாதெனக் கூறுகின்றார் :—

लोकप्रसिद्धमायायाः यत् लक्षणं तत् ईक्षताम् ॥

(சு-ம்.)

உலகப்பிரசித்த இந்திரஜாலவடிவ மாயையின் இலக்ஷணம் எதுவோ அது இந்தமாயையிலும் காணத்தக்கதாம். (௧௪0)

௧எ. இந்திரஜாலவடிவ இலௌகிகமாயையின் லக்ஷணம்.

[௪௬௫] न निरूपयितुं शक्या विस्पष्टं भासते च या ।
सा मायेतींद्रजालादौ लोकाः संप्रतिपेदिरे ॥ १४१ ॥

(அ-கை.)

இந்த உலகப்பிரசித்தமாயைக்கும் இலக்ஷணம் யாதெனக் கூறுகின்றார் :—

या निरूपयितुं शक्या न । च विस्पष्टं भासते सा माया इति इंद्रजालादौ लोकाः संप्रतिपेदिरे ॥

(சு-ம்.)

எது நிரூபிக்கக்கூடாததாய் மிகவெளிப்படையாய்த் தோற்றுகின்றதோ அது மாயை என்று இந்திரஜாலமுதலியவற்றில் உலகத்தோர் காண்கின்றனர் :— (௧௪௧)

௧௮. சுலோகம் ௪௩௰-ல் கூறிய இந்திரஜாலத்தினைத் தார்ஷ்டாந்தமான ஜகத்தில் பொருத்துதல்.

[௪௩௯] स्पष्टं भाति जगच्चेदमशक्यं तन्निरूपणम् ।
मायामयं जगत्तस्मादीक्षस्वापक्षपाततः ॥ १४२ ॥

(அ-கை.)

திருஷ்டாந்தமான இந்திரஜாலமுதலிய மாயையில் சித்தித்த லக்ஷணத்தைத் தார்ஷ்டாந்தமான பிரகிருதமாயையில் பொருத்துகின்றார் :—

इदं जगत् स्पष्टं भाति च तन्निरूपणं अशक्यं तस्मात् जगत् अपक्षपाततः मायामयं ईक्षस्व ॥

(சு-ம்.)

இந்தப்பிரபஞ்சம் வெளிப்படையாகத் தோற்றிக்கொண்டிருந்தும் அதை நிரூபித்தல் முடியாததா யிருக்கின்றது. ஆகையால் ஜகத்தைப் பக்ஷபாதமின்றி மாயாமயமாகக் காண்க. (௧௪௨)

௧௯. ஜகத்து நிரூபிக்கக்கூடாமை.

[௪௩௭] निरूपयितुमारब्धे निखिलैरपि पंडितैः ।
अज्ञानं पुरतस्तेषां भाति कक्षासु कासुचित् ॥ १४३ ॥

(அ-கை.)

ஜகத்து எப்படி நிரூபிக்கக்கூடாததா யிருக்கின்றதென்றாசங்கித்து அதைக் காட்டுகின்றார் :—

निखिलैः पंडितैः अपि निरूपयितुं आरब्धे तेषां कासुचित् कक्षासु पुरतः अज्ञानं भाति ॥

(சு-ம்.)

சகல பண்டிதர்களாலும் ஜகத்து நிரூபிக்க ஆரம்பிக்கப்பட்டகாலத்து அவர்களுக்குச் சிற்சில இடங்களாகிய பக்ஷங்களில் முன்னுக அஞ்ஞானம் விளங்குகின்றது. (௧௪௩)

உ௦. ஸ்லோகம் ௫௩௪-ல் கூறிய அர்த்தத்தை உதாரணத்தால் விளக்குதல்.

[௫௩௮] देहेंद्रियादयो भावा वीर्येणोत्पादिताः कथम् ।
कथं वा तत्र चैतन्यमित्युक्ते ते किमुत्तरम् ॥ १४४ ॥

(அ-கை.)

ஜகத்து நிரூபிக்கக்கூடாத தென்பதனையே உதாரணத்தால் விளக்குகின்றார்:—

देहेन्द्रियादयः भावाः वीर्येण कथं उत्पादिताः वा तत्र चैतन्यं कथं इति उक्ते ते किं उत्तरम् ॥

(சு-ம்.)

தேகேந்திரியமுதலிய பதார்த்தங்கள் வீரியத்தால் எப்படி யுண்டாகின்றன? அல்லது அவற்றுள் சைதன்னியம் எப்படி யுண்டாகின்றது? என்று கேட்குமிடத்து உனக்கு என்ன விடை வரும்? (௧௪௪)

உ௧. ஸ்லோகம் ௫௩௪-ல் கூறிய அர்த்தத்தில் சுபாவவாதியின் சங்கைசமாதானம்.

[௫௩௯] वीर्यस्यैषः स्वभावश्चेत्कथं तद्विदितं त्वया ।
अन्वयव्यतिरेकौ यौ भग्नौ तौ वंध्यवीर्यतः ॥ १४५ ॥

(அ-கை.)

ஜகத்தின் உற்பத்தி சுபாவமென்னும் வாதிகளாகிய சார்வாகாதிகள் மூலத்தில் சங்கிக்கின்றார்கள்:—

एषः वीर्यस्य स्वभावः चेत् ॥

(சு-ம்.)

இந்தத் தேகமுதலியவைகளை உண்டாக்குதல் வீரியத்திற்கு இயற்கையாமெனின்,

(அ-கை.)

சித்தாந்தி கேட்கின்றார்:—

त्वया तत् कथं विदितम् ॥

(சு-ம்.)

அந்த வீரியத்தினியற்கை உன்னால் எப்படி அறியப்பட்டது?

(அ-கை.)

அந்வயவியதிரேகங்களா லறிகிறேன் என்றாசங்கித்து, வியாப்தியில்லாமையால் அந்வயவியதிரேகங்களால் வீரியத்தின் சுபாவத்தை யான் அறிகிறேன் என்று கூறுதல் பொருந்தாதென்று சித்தாந்தி கூறுகின்றார்:-

अन्वयव्यतिरेकौ यौ तौ वंध्यवीर्यतः भग्नौ ॥

(சு-ம்.)

அந்வயவியதிரேகங்கள் எவைகளோ அவைக ளிரண்டும் மலட்டு வீரியத்தால் பங்கமடைந்திருக்கின்றன.

(வி-ம்.)

மலட்டுப்புருஷனது வீரியத்தினாலும், வந்தியாகிய ஸ்திரீயினிடத்து வீரியம் வியர்த்தமாகுதலாலும் எங்கெங்கே வீரியமுண்டோ அங்கங்கே தேகாதிக ளுண்டாகு மென்னும் வியாப்தி பொருந்தாது. வியாப்தியின் அபாவத்தால், வீரியமுண்டாகுமாயின் தேகாதிக ளுண்டாகு மென்னும் அந்வயமும் பொருந்தாது. சுவேதஜங்களான பேன்முதலியவற்றிலும், உற்பிஜ்ஜமான விருக்ஷமுதலியவற்றிலும் வீரியத்தால் உற்பத்தி வியபிசரித்தலால் வீரியம் இல்லாவிட்டால் தேகாதிக ளுண்டாகாது என்னும் வியதிரேகமும் பொருந்தாது. (கசரு)

உஉ. பலித்தபொருள் (ஜகத்து இந்திரஜாலமெனல்).

[சசo] न जानामि किमप्येतदित्यंते शरणं तव ।
अत एव महांतोऽस्य प्रवदंतींद्रजालताम् ॥ १४६ ॥

(அ-கை.)

இப்படி மறுபடியும் மறுபடியும் கேட்குமிடத்து "ஒன்றுமறியேன்" என்றிவ்வாறே உனக்கு விடை சொல்லத்தக்கதா மென்று சொல்லுகின்றவராய்ச் சித்தாந்தி பலிதத்தைக் கூறுகின்றார்:—

"एतत् किम् अपि न जानामि" इति अंते तव शरणं अतः एव महांतः अस्य इंद्रजालतां प्रवदंति ॥

(சு-ம்.)

ஒன்றனையும் நானறியேன் என்று முடிவில் உனக்குப் புகலிடம் அஞ்ஞானமேயாம். இதனைற்றான் மகான்கள் இச்சகத்திற்கு இந்திரஜாலத் தன்மையைக் கூறுகின்றார்கள். (கசசு)

உரு. சுலோகம் சச0-ல் கூறிய மாயையின் அநிர்வசநீய(இந்திரஜால)த்தன்மையில் பெரியோர் அபிப்பிராயம்.

[சசஎ] एतस्मात्किमिवेंद्रजालमपरं यद्गर्भवासस्थितं
रेतश्चेतति हस्तमस्तकपदप्रोद्भूतनानांकुरम् ।
पर्यायेण शिशुत्वयौवनजरावेषैरनेकैर्वृतं पश्यत्य-
त्ति शृणोति जिघ्रति तथा गच्छत्यथागच्छति ॥ १४७ ॥

(அ-கை)

சுலோகம் சரூரு-சசசு-ல் கூறிய ஜகத்தின் அநிர்வசநீயத்தன்மையில் விருத்தசம்மதியாகிய மேற்கோளைக் காட்டுகின்றார் :—

एतस्मात् अपरं इंद्रजालं किं इव । यत् गर्भवासस्थितं रेतः चेतति हस्तमस्तकपदःप्रोद्भूतनानांकुरम् पर्यायेण अनेकैः शिशुत्वयौवनजरावेषैः वृतं । पश्यति अत्ति श्रृणोति जिघ्रति तथा गच्छति अथ आगच्छति ॥

(சு-ம்.)

இந்த ஜகத்தைவிட வேறு இந்திரஜாலம் என்ன இருக்கிறது ?. கர்ப்பவாசத்திலுள்ள வீரியம் எதுவோ அது சேதனமாகின்றது அதாவது சேஷ்டிக்கின்றது. அந்த வீரியம், தலை கை கால்களும் அவற்றாலாகிய விரல் காது மூக்கு நேத்திரமுதலியவைகளுமாகிய முளையையுடையதும், சமயபேதத்தால் அநேக இளமை யௌவனம் முதுமை என்னும் அநேக வேஷங்களோடுகூடியதுமாய்ப் பார்க்கின்றது, உண்கின்றது, கேட்கின்றது, முகருகின்றது அப்படியே போகின்றது, வருகின்றது என்னுங் கிரியைகளையும் இவற்றாலுபலக்ஷிக்கப்பட்ட வேறுகிரியைகளையுஞ் செய்கின்றது. ஆகையால் இந்த ஜகத்து இந்திரஜாலமாம். (கசஎ)

உச. தேகத்தைப்போலவிருக்ஷாதிகளும் நிரூபிக்கக்கூடாதனவாதல்.

[சசஅ] देहवद्वटधानादौ सुविचार्य विलोक्यताम् ।
क्व धाना कुत्र वा वृक्षस्तस्मान्मायेति निश्चिनु ॥ १४८ ॥

(அ-கை.)

தேகமாத்திரமே அநிர்வசநீயமாம் அதாவது நிரூபிக்கக்கூடாததாமென்றில்லை. ஆலமரமுதலியவைகளும் நிரூபிக்கக்கூடாதனவா மென்று கூறுகின்றார் :—

देहवत् वटधानादौ सुविचार्य विलोक्यतां क धाना कुत्र वा वृक्षः तस्मात् माया इति निश्चिनु ॥

(சு-ம்.)

தேகத்திற்போல ஆலம்விதைமுதலியவற்றிலும் செவ்வையாக விசாரித்துப்பார்க்கவேண்டும். சூக்ஷ்மமான விதை எங்கே? விருக்ஷம் எங்கே? ஆயினால் இது மாயையாம் என்று நிச்சயஞ்செய். (௧௪௮)

௨௫. நையாயிகர்களால் மாயையின் நிரூபணஞ்செய்யப்பட்டதின் சங்கை சமாதானம்.

[௧௪௯] निरुक्तावभिमानं ये दधते तार्किकादयः ।
हर्षमिश्रादिभिस्ते तु खंडनादौ सुशिक्षिताः ॥ १४९ ॥

(அ-கை.)

அப்படியானால் எங்களால் சொல்லக்கூடாததாயினும், உதயனர்முதலிய ஆசாரியர்களால் சொல்லப்பட்டிருக்கின்றனவென்றுசங்கித்துக் கூறுகின்றார்:—

ये तार्किकादयः निरुक्तौ अभिमानं दधदे ते तु हर्षमिश्रादिभिः खंडनादौ सुशिक्षिताः ॥

(சு-ம்.)

எந்த நையாயிகர்முதலியோர் இந்த ஜகத்தைச் சொல்லுவதில் அபிமானத்தைத் தரிக்கின்றனரோ அவர்கள் ஹர்ஷமிசிரர்முதலிய ஆசாரியர்களால் கண்டனமுதலிய நூல்களில் செவ்வையாகக் கண்டனமென்னுந் தண்டத்தை யடைந்திருக்கின்றார்கள். (௧௪௯)

௨௬. சுலோகம் ௧௩௯-௧௪௯-ல் கூறிய அர்த்தமாகிய ஜகத்து சிந்திக்கக்கூடாததா மென்பதில் வேதாந்தாசாரியர்களின் வாக்கியமாகிய பிரமாணம்.

[௧௫௦] अचिंत्याः खलु ये भावा न तांस्तर्केषु योजयेत् ।
अचिंत्यरचनारूपं मनसाऽपि जगत्खलु ॥ १५० ॥

(அ-கை.)

சுலோகம் ௧௩௯-௧௪௯-ல் அர்த்தமாகிய ஜகத்தின் அநிர்வசநீயத் தன்மையில் வேதாந்தசம்பிரதாயமுடைய ஆசாரியர்களின் வாக்கியத்தினைப் பிரமாணமாக்குகின்றார்:—

ये भावाः अचिंत्याः खलु तान् तर्केषु न योजयेत् । जगत् मनसा अपि अचिंत्यरचनारूपं खलु ॥

(சு-ம்.)

எப்பதார்த்தங்கள் சிந்திக்கத்தகாதவைகளாகவே யிருக்கின்றனவோ அவற்றைக் கற்பனைவடிவ தர்க்கத்தில் பொருத்தலாகாது. இந்தப் பிரபஞ்சம் மனதினாலும் சிந்திக்கத்தகாத சிருஷ்டிவடிவ மென்பது நிச்சயமாம். ()

உஎ. மாயைவடிவ பீஜ(காரண)த்தைக் கூறுதல்.

[சசரு] अचिंत्यरचनाशक्तिबीजं मायेति निश्चिनु ।
मायाबीजं तदेवैकं सुषुप्तावनुभूयते ॥ १५१ ॥

(அ-கை.)

அப்படியானால் சுலோகம் சங௯-சசச-ல் கூறியபிரகாரம் ஜகத்து சிந்திக்கத்தகாத சிருஷ்டியாகுக? இதனால் மாயையில் என்ன வந்ததெனக் கூறுகின்றார்:—

"अचिंत्यरचनाशक्तिबीजं" माया इति निश्चिनु ॥

(சு-ம்.)

சிந்திக்கத்தகாத சிருஷ்டியின் சக்தியையுடைய காரணம் எதுவோ அதுவே மாயையாம் என்று நிச்சயஞ்செய்.

(அ-கை.)

இத்தன்மையதாகிய காரணம் எங்கே பார்க்கப்பட்டிருக்கின்றதெனக் கூறுகின்றார்:—

तत् एव एकं मायाबीजं सुषुप्तौ अनभूयते ॥

(சு-ம்.)

அந்த மாயைவடிவமாகிய காரணம் ஒன்றே சுழுத்தியில் அநுபவிக்கப்படுகின்றது. (கருக)

உஅ. சுலோகம் சசருல்-கூறிய பீஜத்தில் சகல ஜகத்தின் சம்ஸ்காரமு மிருத்தல்.

[சசசு] जाग्रत्स्वप्नजगत्तत्र लीनं बीज इव द्रुमः ।
तस्मादशेषजगतो वासनास्तत्र संस्थिताः ॥ १५२ ॥

(அ-கை.)

அந்த மாயை ஜகத்தின் காரணவடிவமா மென்பதெப்படி எனக் கூறுகின்றார்:—

जाग्रत्स्वप्नजगत् तत्र बीजे द्रुमः इव लीनम् ॥

(சு-ம்.)

ஜாக்கிரசொப்பனவடிவமாகிய பிரபஞ்சம் அந்தச் சுழுத்தியி லிருக்கும் மாயைவடிமாகிய வித்தில் மரம் ஒடுங்குவதுபோல ஒடுங்குகின்றது.

(அ-கை.)

அந்த மாயையில் ஜகத்து ஒடுங்குவதனால் என்ன சித்தித்ததெனக் கூறுகின்றார்:—

तस्मात् अशेषजगतः वासनाः तत्र संस्थिताः ॥

(சு-ம்.)

அதனால் சகல ஜகத்தின் வாசனைகளும் அதில் நிலைத்திருக்கின்றன.

(வி-ம்.)

அதனால் அதாவது ஜகத்திற்குக் காரணம் மாயையா யிருத்தலால் சகல * ௬அ. ஜகத்துவாசனைகளும் அந்த மாயையில் இருக்கின்றன என்பது பொருள். (கரு௨)

௨. ஈசுவரனது சொருபம் (ஆநந்தமயகோசம்) ௬௫௭-௬௫௨.

க. திருஷ்டாந்தத்தோடு ஈசுவரனது வடிவம் (மாயையிலுள்ளபுத்தி வாசனையி லிருக்கும் சிதாபாசன்).

[௬௫௭] या बुद्धिवासनास्तासु चैतन्यं प्रतिबिंबति ।
मेघाकाशवदस्पष्टचिदाभासोऽनुमीयताम् ॥ १५३ ॥

(அ-கை.)

அந்த மாயையில் வாசனை யிருத்தலாலும் என்ன சித்தித்ததெனக் கூறுகின்றார் :—

याः बुद्धिवासनाः तासु चैतन्यं प्रतिबिंबति ॥

(சு-ம்.)

மாயையிலுள்ள ஜாக்கிரசொப்பனவடிவ ஜகத்தின் ஞானமாகிய புத்தியின் வாசனைகள் எவை தம் உபாதானமாகிய சத்துவகுணவடிவமாய் இருக்கின்றனவோ அவைகளில் சைதன்னியம் பிரதிபிம்பிக்கின்றது.

---

* ௬அ. ஞானஜந்நியசம்ஸ்காரம்.

(அ-கை.)

அப்படியானால் அவ்வாசனைகளில் பிரதிபிம்ப மிருக்குமாயின் ஏன் அநுபவிக்கப்படவில்லை யென்றாசங்கித்து, வெளிப்படையின்றி யிருத்தலால் அநுபவிக்கப்படவில்லை யென்று கூறுகின்றார் :—

मेघाकाशवत् अस्पष्टचिदाभासः ॥

(சு-ம்.)

மேகாகாசத்தைப்போல அந்த வாசனைகளில் வெளிப்படுதலில்லாத சிதாபாசனிருக்கும்.

(அ-கை.)

அப்படியானால் எப்போது வாசனையில் வெளிப்படுதலின்றிய சிதாபாசனிருக்கின்றானோ, அப்போது அச்சிதாபாசன் எந்தப் பிரமாணத்தினால் சித்திப்பனெனக் கூறுகின்றார் :—

अनुमीयताम् ॥

(சு-ம்.)

அந்தச் சிதாபாசன் அநுமானத்தினாலறியத்தக்கவனாவன். (கடுங)

உ. மாயையில் வெளிப்படுதலின்றிய சிதாபாசனது அநுமானம்.

[௧௫௪] साभासमेव तद्बीजं धीरूपेण प्ररोहति ।
अतो बुद्धौ चिदाभासो विस्पष्टं प्रतिभासते ॥ १५४ ॥

(அ-கை.)

அப்படியானால் மேகத்தின் அம்சமாகிய ஜலம் வெளிப்படையின்றிய ஆகாசப்பிரதிபிம்ப முடையதா யிருக்கினும், அந்த மேகஜலத்திற்கு இனமாகிய வெளிப்படையான ஆகாயப்பிரதிபிம்பமுடைய கடஜல மிருத்தலால் மேகாகாசத்திற்கும் அநுமானம் பொருந்தும். இங்கே வாசனையிலுள்ள சிதாபாசனில் அதற்குச் சமானமான திருஷ்டாந்த மில்லாமையால் எப்படி அநுமான முண்டாமென்றாசங்கித்து, இங்கும் அவ்வியல்பினதாகிய திருஷ்டாந்தத்தைச் சம்பாதித்தற்பொருட்டுக் கூறுகின்றார் :—

साभासं एव तत् बीजं धीरूपेण प्ररोहति । अतः बुद्धौ चिदाभासः विस्पष्टं प्रतिभासते ॥

(சு-ம்.)

ஆபாசனோடுகூடிய அந்த மாயையாகிய காரணமே புத்திவடிவமாக உற்பத்தியாகின்றது. ஆகையால் புத்தியில் சிதாபாசன் விளக்கமாகத் தோற்றுகிறான்.

(வி-ம்.)

சிதாபாசனோடுகூடிய அந்த அஞ்ஞானமே புத்திவடிவமாகப் பரிணாமத்தை யடைந்து வெளிப்படையாகிய சிதாபாசனை யுடையதாகின்றது என்பது தாற்பரியம். இப்படி யுண்டாகுங்காலத்து இங்கே இவ்வநுமானம் சூசிப்பிக்கப்படுகின்றது :—விவாதத்திற்கு விஷயமாகிய புத்தியின் வாசனை சேதனப்பிரதிபிம்ப முடையதாகத்தக்கதாம்; புத்தியின் அவஸ்தா விசேஷமா யிருத்தலால்; புத்திவிருத்தியைப்போல என்பதாம். (௧௫௪)

௯. சுருதியிற் கூறிய ஜீவ ஈசுவரர்களின் மாயிகத்தன்மையின் முடிவு.

[௪௪௧] मायाभासेन जीवेशौ करोतीति श्रुतौ श्रुतम् ।
मेघाकाशजलाकाशाविव तौ सुव्यवस्थितौ ॥ १५५ ॥

(அ-கை.)

இப்படிச் சுருதியிற் கூறியிருக்கும் ஜீவேசுவரர்களின் மாயிகத்தன்மை உபபாதனஞ் செய்யப்பட்டது; அதனை முடிக்கின்றார் :—

"माया आभासेन जीवेशौ करोति" इति श्रुतौ श्रुतम् ॥

(சு-ம்.)

"மாயையாகிய மூலப்பிரகிருதி தன்னிடத்தில் சேதனப்பிரதிபிம்பமாக ஜீவேசுவரர்களைச் செய்கின்றது" என்னுஞ் சுருதியில் ஜீவேசுவரர்களின் * ௪௧. மாயிகத்துவம் கேட்கப்பட்டிருக்கின்றது.

(அ-கை.)

அப்படியானால் ஜீவேசுவரர்க ளிருவருக்கும் மாயிகத்துவம் சமானமாயிருக்க அவர்களின் பரோக்ஷத்துவ முதலியனவும் அபரோக்ஷத்துவ முதலியனவுமாகிய அவாந்தரபேதம் எப்படிச் சித்திக்குமென்று ஆசங்கி

---

* ௪௧. ஜீவேசுவரர்கள் மாயிகமாம். இங்கே மாயிக மென்னுஞ் சொல்லிற்கு "ஜீவேசுரர் மாயையின் காரியம்" என்பது பொருளன்று; ஆனால் "மாயையினது சித்தியின் அதீனமாய்த் தம் சித்தியையுடையனவா யிருக்கின்றன" என்பது பொருள். ஏனெனின், ஜீவன், ஈசுவரன், சுத்தசேதனம், அவித்தை, அவித்தைக்கும் சுத்தசேதனத்திற்குமுள்ள சம்பந்தம், இவ்வைந்திற்கும் ஒன்றற்கொன்றுள்ள பேதம் என்னும் இவ்வாறு பதார்த்தங்களும் சுவரூபமாக அநாதியாம் என்னும் வார்த்திககாரராற் சொல்லப்பட்ட சித்தாந்தத்திற்கு விரோதப்படுதலால் "மாயை ஜீவேசுவரரை ஆபாசமாகச் செய்கின்றது" என்னும் சுருதியிலுள்ள செய்கின்றது என்னும் பதத்திற்கும் மாயை தனது சித்தியின் அதீனமாய் ஜீவேசுவரர்களின் சித்தியைக் காட்டுகின்றது என்பதே பொருள்.

த்து, அஞ்ஞானத்தால் மூடப்பட்ட வாசனையாகிய அஸ்பஷ்டம் புத்தியா கிய ஸ்பஷ்ட மென்னும் உபாதிகளை யுடைமையால் மேகாகாச ஜலாகாசங் களைப்போல அந்த ஜீவேசுவரர்களுக்குப் பேதம் சித்திக்கிற தென்று கூறு கின்றார் :—

मेधाकाशजलाकाशौ इव तौ सुव्यवस्थितौ ॥

(சு-ம்.)

மேகாகாசஜலாகாசங்களைப்போல அச்சீவேசரிருவரும் வியவஸ்தை யடைகின்றனர் அதாவது வியவகாரத்தில் பேதத்தை யடைகின்றனர். ()

ஈ. ஈசுவரன் சுலோகம் ௧௫௪-௧௫௫-ல் கூறிய மேகாகாசத்திற்குச் சமானமாதலை விளக்குதல்.

[சுூ௦] मेघवद्वर्तते माया मेघस्थिततुषारवत् ।
धीवासनाश्चिदाभासस्तुषारस्थखवत्स्थितः ॥ १५६ ॥

(அ-கை.)

ஈசுவரன் மேகாகாசத்திற்குச் சமானமாவதை விளக்குகின்றார் :—

मेघवत् माया वर्तते मेघस्थिततुषारवत् धीवासनाः । तुषारस्थखवत् आभासः स्थितः ॥

(சு-ம.)

மேகத்தைப்போல மாயை இருக்கின்றது. மேகத்திலுள்ள மழையை (சூக்ஷ்மமாகிய நீர்த்துளிகளை)ப்போலப் புத்திவாசனைகள் இருக்கின்றன. மழைஜலத்திலுள்ள ஆகாச(ஆகாயத்தின்பிரதிபிம்ப)த்தைப்போலச் சிதா பாசன் இருக்கின்றான் (அவன் *டு௦. ஈசுவரன்). (௧௫௬)

* டு௦. சங்கை:—இங்கே வித்தியாரண்ணியசுவாமியானவர் புத்திவாசனைக ளுள்ள பிரதிபிம்பத்திற்கு ஈசுவரத்துவம் ஒப்பியிருக்கின்றனர். அது பொருந்தாது. அதில் ஆக்கிரகஞ்செய்கின்றவர்களை இது கேட்கத்தக்கதாம்:—

(௧) ஈசுவரத்தன்மையினது உபாதி அஞ்ஞானமாத்திரமா ?

(௨) அல்லது வாசனையோடுகூடிய அஞ்ஞானமா?

(௩) அல்லது வாசனைமாத்திரமா ?

(௧) முதற்பக்ஷத்தைக் கூறின் புத்திவாசனைகளோடு அஞ்ஞானத்திலுள்ள பிரதி பிம்பத்திற்கு ஈசுவரத்தன்மை கூறியதோடு விரோதமாம.

௫. மாயையிலுள்ள பிரதிபிம்பத்தினது ஈசுவரத்தன்மைமுதலியவற்றில்
சுருதிப்பிரமாணமா மென்பதன் சூசனம்.

[௬௫௧] मायाधीनश्चिदाभासः श्रुतो मायी महेश्वरः ।
अंतर्यामी च सर्वज्ञो जगद्योनिः स एव हि ॥ १५७ ॥

(௨) இரண்டாவது பக்ஷத்தைச் சொல்லுமிடத்து அஞ்ஞானமாத்திரத்தையே
ஈசுவரத்தன்மைக்கு உபாதியாக ஒப்பவேண்டும். புத்திவாசனையோடுகூடிய அஞ்ஞா
னத்தை ஈசுவரனது உபாதியாகக் கூறுதல் நிஷ்பலமாம். அஞ்ஞானமாத்திரத்தை
ஈசுவரனது உபாதியாகக் கொண்டால் ஈசுவரனிடத்துச் சருவஞ்ஞத்துவம் சித்தியா
தாகையால் சருவஞ்ஞத்துவம் சித்திக்கும்பொருட்டுப் புத்திவாசனையும் அஞ்ஞானத்தி
ற்குவிசேஷமாக ஒப்பப்பட்டிருக்கின்றதென்று சொல்லுமிடத்து அப்படிச் சொல்லு
தலும் பொருந்தாது. ஏனெனின், அஞ்ஞானத்திலுள்ள சத்துவாம்சத்தின் எல்லா
வற்றையும் விஷயஞ்செய்யும் விருத்தியினாலேயே சருவஞ்ஞத்துவம் சித்தித்தலால்
புத்திவாசனையை அஞ்ஞானத்திற்கு விசேஷணமாகக் கொள்ளுதல் நிஷ்பலமாம்.
அஞ்ஞானத்திலுள்ள சத்துவாம்சத்தின் விருத்தியினாலேயே சருவஞ்ஞத்துவம் சம்ப
விக்கின்றது. புத்திவாசனைகளால் சர்வஞ்ஞத்துவம் சித்தியாது. ஏனெனின், ஒவ்
வொருவாசனைக்கும் எல்லாப்பதார்த்தங்களையும் விஷயஞ்செய்யுந்தன்மை பொருந்
தாது. சருவஞ்ஞத்துவம் சித்திக்கும்பொருட்டுச் சகலவாசனைகளையும் அஞ்ஞானத்
திற்கு விசேஷணமாக ஒப்பவேண்டும். அது பிரளயகாலமின்றி ஏககாலத்தில் சருவ
வாசனைகளின் இருப்பும் சம்பவியாது. ஆகையால் சர்வஞ்ஞத்துவம் சித்திக்கும்
பொருட்டாகாது. இவ்வாற்றால் புத்திவாசனையோடுகூடிய அஞ்ஞானம் ஈசுவரனது
உபாதியாமென்னும் இரண்டாவது பக்ஷமும் சம்பவியாது.

(௩) வாசனைமாத்திரம் ஈசுவரனது உபாதியாமென்னும் மூன்றாவது பக்ஷத்தைக்
கூறின் அப்போதிது கேட்கத்தக்கதாம்:—

[க] ஒவ்வொரு வாசனைகளிலுமுள்ள பிரதிபிம்பம் ஈசுவரனா ?

[௨] அல்லது சகலவாசனைகளிலுமுள்ள பிரதிபிம்பம் ஈசுவரனா ?

[க] முதற்பக்ஷத்தைக் கூறின், ஜீவஜீவர்களின் புத்திவாசனை அநேகமாயிருத்த
லால் அவற்றிலுள்ள பிரதிபிம்பமாகிய ஈசுவரனும் அநேகமாவர். ஒவ்வொருவாசனை
யும் அற்பத்தை விஷயஞ்செய்வனவாயிருத்தலால் அவற்றில் பிரதிபிம்பமாகிய அநந்த
ஈசுவரனும் அற்பஞ்ஞரேயாவர். சகலவாசனைகளிலும் ஒரு பிரதிபிம்பத்தையொப்பி
னால் சகலவாசனைகளும் பிரளயமின்றி ஒருங்கே (ஏககாலத்தில்)உண்டாகாது. அநேக
வாசனைகளில் அநேக பிரதிபிம்பமே யுண்டாகும். ஆகையால் சகலவாசனைகளிலும்
ஒரு பிரதிபிம்பம் சம்பவியாது.

இவ்வாற்றால் அஞ்ஞானமாத்திரமே ஈசுவரனது உபாதியாம். வித்தியாரண்
ணியசுவாமியானவர் இங்கே வாசனையைப் பிரயோஜனமின்றி அநுசரித்திருக்கின்றா
ரென்னுமிது விருத்திப்பிரபாகரத்தின் ௮-வது பிரகாசத்திலுள்ள சங்கையாம். இதன்
சமாதானமிதுவாம்:—

(அ-கை.)

மாயையிலுள்ள பிரதிபிம்பம் ஈசுவரனு மென்பதில் பிரமாணம் யாதென் ருசங்கித்துச் சுருதியே பிரமாண மென்று கூறுகின்றூர் :—

मायाधीनः चिताभासः॥ मायी महेश्वरः श्रुतः ॥

(சு-ம்.)

மாயை,* நிக. எதன் அதீனமா யிருக்கின்றதோ அப்படிப்பட்ட சிதாபாசன் மாயையையுடைய மகேசுவரனைகச் சுருதியிற் கேட்கப்பட்டிருக்கின்றது.

(அ-கை.)

இந்தமாயையிலுள்ள பிரதிபிம்பத்திற்கு ஈசுவரத்தன்மை மாத்திரமே கேட்கப்பட்டிருக்கின்றதென்பதில்லை. அந்தரியாமித்துவமுதலிய தர்மங்களின் சமூகமும் கேட்கப்பட்டிருக்கின்றதென்று கூறுகின்றூர்:—

च अंतर्यामी सर्वज्ञः जगद्योनिः सः एव हि ॥

(சு-ம்.)

அந்தரியாமியும் சர்வஞ்ஞரும் ஜகத்காரணரும் அவரே யாவர். (கநிஎ)

---

இந்தப்பஞ்சதசிகிரந்தத்தை முன்பின் விசாரித்தலால் அநேக இடங்களில் மாயையாகிய அஞ்ஞானத்திற்கே ஈசுவரத்தன்மைக்கு உபாதியாந்தன்மை தோற்றுகின்றது. ஆகையால் அஞ்ஞானமே ஈசுவரத்தன்மைக்கு உபாதியாம்; புத்திவாசனையன்று. என்றூலும் இங்கே அஞ்ஞானத்தில் புத்திவாசனையினை அநுசரித்திருக்கின்றனர். அதன் தாற்பரிய மிதுவாம்:—

அஞ்ஞானத்தில் சருவஞ்ஞத்துவத்திற்குக் காரணமாகிய சத்துவகுணம் ஞானவடிவமாகிய சகலபுத்திவாசனைகளுக்கும் உபாதானமா யிருத்தலால் சுழுத்தியில் சகலபுத்திகளும் தம் உபாதான அம்சத்தில் இலயமாகுதலால் உபாதானவடிவமாக நிலைத்திருக்கின்றன. உபாதானவடிவமாக நிலைத்திருத்தலே சூக்ஷ்மஅவஸ்தையாகிய சம்ஸ்கார மென்னுஞ் சொல்லிற்குப்பொருளாம்.அந்தச் சம்ஸ்காரமே வாசனை யெனப்படும். இவ்வாற்ருல் அஞ்ஞானத்திலுள்ள சத்துவாம்சத்திற்கு வேருக வாசனை என்னுஞ் சொல்லிற்குப் பொருளில்லை. ஆகையால் இங்கே புத்திவாசனை என்னுஞ் சொல்லால் அஞ்ஞானத்திலுள்ள சத்துவாம்சமே கொள்ளப்பட்டது. வாசனை யென்னும் சொல்லாற் கூறுதல் சகல ஜனங்களுடைய அநுபவத்திலும் பதியும்பொருட்டாம்; அலலது ஜீவேசுவரர்கள் அபேதமா மென்னும் பிரசித்தியை யறிவிக்கும்பொருட்டாம். சுழுத்தியிலுள்ள அஞ்ஞானத்திற்கு சமஷ்டிஅஞ்ஞானத்தோடு பேதமில்லை யென்னு மபிப்பிராயத்தால் அது ஈசுவரனது உபாதியாம்.

* நிக. சுத்தசத்துவப்பிரதானப் பிரகிருதியின் அம்சம்.

௧. ஆனந்தமயன் ஈசுவரன் என்பதைச் சொல்லும் சுலோகம் ௬௫௨-ல் குறிப்பிக்கப்
பட்ட சுருதி.

[௬௫௨] सौषुप्तमानंदमयं प्रक्रम्यैवं श्रुतिर्जगौ ।
एष सर्वेश्वर इति सोयं वेदोक्त ईश्वरः ॥ १५८ ॥

(அ-கை.)

அப்படியானால் புத்தியின் வாசனையிலுள்ள பிரதிபிம்பத்திற்கு ஈசுவ
ரத்துவமுதலிய தர்மங்கள் எப்படிச் சுருதிசித்தமாமென் றாசங்கித்து அவ்
வீசுவரத்தன்மைமுதலிய தர்மங்களை உபபாதனஞ்செய்யுஞ் சுருதியைக்
காட்டுகின்றார் :—

सौषुप्तं आनंदमयं प्रक्रम्य "एष सर्वेश्वरः" इति श्रुतिः जगौ सः अयं
वेदोक्तः ईश्वरः ॥

(சு-ம்.)

சுழுத்திகாலத்தின் ஆனந்தமயகோசத்தை முதலில் ஆரம்பித்து இந்த
ஆனந்தமயகோசன் சர்வேசுவரனுமென் றிவ்வாறு வேதம் சொல்லியிருக்
கின்றது. ஆகையால் அந்த * ௫௨. இவ்வானந்தமயகோசன் வேதத்திற்
கூறிய ஈசுவரனும்.

* ௫௨. சங்கை:— இங்கே ஆனந்தமயகோசனுக்கு ஈசுவரத்தன்மை கூறுதல்
அசங்கதமாம். ஏனெனின், ஜாக்கிரசொப்பனத்தில் ஸ்தூலாவஸ்தையோடுகூடிய
பிரதிபிம்பசகித அந்தக்கரணத்தை விஞ்ஞானமய மென்பர். விஞ்ஞானமய ஜீவனே
சுழுத்திகாலத்தில் சூக்ஷ்மவடிவமாக ஒடுங்கி ஆநந்தமய மெனப்படுகின்றது. அதை
ஈசுவர னென்று கொள்ளின், ஜாக்கிரசொப்பனங்களில் அந்தக்கரண மொடுங்கிய
அவஸ்தையாகிய ஆனந்தமயன் இல்லாமையால் ஈசுவரனும் இல்லாததாகவேண்டும்.
அநேகபுருஷர்களது சுழுத்தியில் அநேக ஈசுவரர்க ளுண்டாகவேண்டும். ஜீவனுக்குப்
பஞ்சகோசத்தைச் சகலநூலாசிரியரும் கூறியிருக்கின்றனர். பஞ்சகோசவிவேகத்தில்
வித்தியாரணியசுவாமிகள் தாமும் ஜீவனுக்குப் பஞ்சகோசம் கூறியிருக்கின்றனர்.
ஆனந்தமயனே ஈசுவரனென்று அங்கீகரித்தால் சகல வாக்கியங்களும் பொருந்ாதன
வாம். ஆகையால் ஆனந்தமயனுக்கு ஈசுவரத்துவம் சம்பவியாது. இது விருத்திப்
பிரபாகரத்தின் எட்டாவது பிரகாசத்திலுள்ள சங்கையாம். அதற்கு அதிற்றானே
எழுதப்பட்டிருக்கும் சமாதானம் இங்கும் சுருக்கமாக எழுதப்படுகின்றது:— மகாவாக்
கியவிசாரத்தால் தத்துவஞானம் உண்டுபடாத மந்தபுத்தியுடைய புருஷர்கள் பிர
ணவசிந்தனஞ் செய்யவேண்டும். அதனியல்பு மாண்டூக்கிய உபநிஷத்திற் சொல்லப்
பட்டிருக்கின்றது. அங்கே ஆனந்தமயனுக்குச் சர்வஞ்ஞத்துவம் சர்வேசுவரத்துவம்
சொல்லப்பட்டிருக்கின்றது. அந்த மாண்டூக்கியவசனத்திற்கு ஜீவேசுவரர்களது
அபேதசிந்தனத்தில் தாற்பரிய மிருத்தல்போல வித்தியாரணியசுவாமிகளுக்கும்
ஜீவேசுவரர்களது அபேதசிந்தனத்தில் தாற்பரியமாம். ஆனந்தமயனுக்கு ஈசுவரத்
துவஞ் சொல்லுதல் கருத்தாயின் பஞ்சதசியின் பிரஹ்மானந்த மென்னும் ௧௧-வது
பிரகரணத்தில் ௧௨௦௪-௧௨௦௫ சுலோகம்வரையில் "ஜீவனது அவஸ்தாவிசேஷம்
ஆனந்தமயகோசமாம்" என்று எழுதப்பட்டிருக்கின்றது. அதற்கு விரோதமாகு மாகை
யால் வித்தியாரணியசுவாமிகளுக்கு ஆனந்தமயகோசனுக்கு ஈசுவரத்துவம் சொல்லு
தல் கருத்தன்று. ஆனால் மந்தபுத்தியுடைய புருஷர்களுக்கு ஜீவேசுவரர்களது
அபேதத்தன்மையைச் சிந்திக்கும்பொருட்டு ஆனந்தமயனிடத்தில் ஈசுவரத்துவம்
ஆரோபிக்கப்பட்டிருக்கின்றது.

(வி-ம்.)

"सुषुप्तस्थान एकीभूतः प्रज्ञानघन एव சுழுத்திஸ்தானத்தில் ஒருவடிவினதாய் மிகவும் ஞானகனமே யாகின்றது." என்னுமிவைமுதலிய சுருதிபுத்திவாசனையிலுள்ள பிரதிபிம்பமாகிய ஆநந்தமயனுக்கு ஈசுவரத்துவமுதலிய தர்மங்களைப் பிரதிபாதிக்கின்றது என்பது பொருள். (கடுஅ)

ரு. ஈசுவரனது (சர்வேசுவரத்துவமுதலிய)குணங்கள் சஎருரு-சஅக.
க. ஈசுவரனிடத்துச் சர்வஞ்ஞத்துவமுதலியன பொருந்துமாறு.

[சருரு] सर्वज्ञत्वादिके तस्य नैव विप्रतिपद्यताम् ।
श्रौतार्थस्यावितर्क्यत्वान्मायायां सर्वसंभवात् ॥ १५९ ॥

(அ-கை.)

அப்படியானால் ஆநந்தமயனுக்குச் சர்வஞ்ஞத்துவமுதலியன அநுபவவிருத்தமாமென் றாசங்கித்துக் கூறுகின்றார் :—

तस्य सर्वज्ञत्वादिके न एव विप्रतिपद्यताम् ॥

(சு-ம்.)

அவ்வாநந்தமயனது சர்வஞ்ஞத்துவமுதலியவற்றில் விவாதஞ் செய்யலாகாது.

(அ-கை.)

எதனால் அதில் விவாத மில்லையெனக் கூறுகின்றார் :—

श्रौतार्थस्य अवितर्क्यत्वात् ॥

(சு-ம்.)

சுருதியிற் கூறிய அர்த்தம் தர்க்கிக்கப்படாததா யிருத்தலால்.

(அ-கை.)

அன்றியும் சொல்லப்படும் இக்காரணத்தாலும் ஆநந்தமயனது சர்வஞ்ஞத்துவ முதலியவற்றில் விவாதஞ் செய்யத்தக்க தன்றெனக் கூறுகின்றார் :—

मायायां सर्वसंभवात् ॥

(சு-ம்.)

* நிரு. மாயையில் சர்வமும் சம்பவித்தலால். (கடுக)

---

* நிரு. மாயை செய்யத்தகாதவற்றைச் செய்வதிற் சாமர்த்தியமுடையதா யிருத்தலால் அதனிடத்து இந்திரஜாலக்காரனது மாயையைப்போலச் சகலமும் சம்பவிக்கும்.

௨. ஈசுவரனது சர்வேசுவரத்துவம்.

[௩௫௩] अयं यत्सृजते विश्वं तदन्यथयितुं पुमान् ।
न कोऽपि शक्तस्तेनायं सर्वेश्वर इतीरितः ॥ १६० ॥

(அ-கை.)

அப்படியானால் அநுகூலயுக்தி யில்லாதிருந்தால் சுருதியும் "கற்றெப்பம்" என்னும் வாக்கியம்போல *௩௪. அர்த்தவாதவடிவமாமென்றுசங்கித்துச் சுருதியின் பிரமாணத்துவம் சித்திக்கும்பொருட்டு ஆநந்தமயனது சர்வேசுவரத்துவமுதலியவற்றை யுக்திஹேதுக்களால் உபபாதனஞ்செய்கின்றார் :—

अयं यत् विश्वं सृजते तत् अन्यथयितुं कः अपि पुमान् न शक्तः । तेन अयं सर्वेश्वरः इति ईरितः ॥

(சு-ம்.)

இவர் எந்தப் பிரபஞ்சத்தை யுண்டாக்குகின்றாரோ அதை வேறுவிதமாக்குவதற்கு எந்தப்புருஷனும் சமர்த்தனல்லன். அக்காரணத்தால் இவர் சர்வேசுவர னென்று சொல்லப்பட்டது.

(வி-ம்.)

இந்த ஆநந்தமயன் எந்த ஜாக்கிரதமுதலிய பிரபஞ்சத்தை யுண்டாக்குகிறானோ அது ஒருவராலும் வேறுவிதமாகச் செய்யக்கூடியதன்று. ஆகையால் இவ்வாநந்தமயன் சர்வேசுவரனாவ னென்பது பொருள். (௧௬0)

---

* ௩௪. நிந்தையையாவது துதியையாவது அறிவிக்கும் வாக்கியம் அர்த்தவாதமெனப்படும். அவ்வர்த்தவாதம் பூதார்த்தவாதம் அபூதார்த்தவாதமென இரண்டு வகையாம்.

(க) "வச்சிரத்தோடுகூடிய கையையுடையவ னிந்திரன்" என்று இந்திரனது துதியை அறிவிக்கும் வாக்கியம் யதார்த்த அர்த்தத்தின் வாசகமாயிருத்தலால் பூதார்த்தவாதமாம்.

(உ) "கல்வடிவமிதப்பு" அல்லது "இந்த யஞ்ஞஸ்தம்பம் சூரியன்" என்னுமிவைமுதலிய வாக்கியங்கள் யதார்த்தமல்லாத அர்த்தத்தின் வாசகங்களாய்ச் சுதியை அறிவிப்பனவா யிருத்தலால் அபூதார்த்தவாதமாம்.

(க) அதுபோல "இந்தப் புருஷன் பாபி" என்று பாபியின் நிந்தையை யறிவிக்கும் வாக்கியம் பூதார்த்தவாதமாம்.

(உ) "இந்தப் புருஷன் பிசாசு" என்று புருஷனது நிந்தையை அறிவிக்கும் வாக்கியம் அபூதார்த்தவாதமாம்.

சிலவிடங்களில் குணவாதம் அநுவாதம் பூதவாதம் என்று அர்த்தவாதம் மூன்றுவிதமாகச் சொல்லப்பட்டிருக்கின்றது. அது மதபேதத்தாலாம்.

௩. ஈசுவரன் சர்வஞ்ஞனெனல்.

[௧௬௧] अशेषप्राणिबुद्धीनां वासनास्तत्र संस्थिताः ।
ताभिः क्रोडीकृतं सर्वं तेन सर्वज्ञ ईरितः ॥ १६१ ॥

(அ-கை.)

இப்போது சர்வஞ்ஞத்தன்மையை உபபாதனஞ் செய்கின்றார் :—

तत्र अशेषप्राणिबुद्धीनां वासनाः संस्थिताः ताभिः सर्वं क्रोडीकृतं तेन सर्वज्ञः ईरितः ॥

(சு-ம்.)

சகலப்பிராணிகளினது புத்தியிலுள்ள வாசனைகளும் அந்தச் சுழுத்தி காலத்தின் அஞ்ஞானத்தில் இருக்கின்றன. அவ்வாசனைகளால் சகல ஜகத்தும் விஷயஞ் செய்யப்பட்டிருக்கின்றது. அக்காரணத்தால் இவ்வாநந்தமயன் சர்வஞ்ஞனென்று சொல்லப்பட்டிருக்கிறான்.

(வி-ம்.)

அக்காரணவடிவமாகிய சுழுத்திகாலத்து அஞ்ஞானத்தில் அவ்வஞ்ஞானத்தின் காரியவடிவமாகிய சகல பிராணிகளது புத்தியின் வாசனைகளுமிருக்கின்றன. அவ்வாசனைகளால் சகல ஜகத்தும் விஷயஞ்செய்யப்பட்டிருக்கின்றன. அந்தச் சகல புத்திவாசனைகளோடும் கூடிய அஞ்ஞானவுபாதியுடைமையால் இந்த ஆநந்தமயன் சர்வஞ்ஞனெனப்படுகிறான் என்பது பொருள். (௧௬௧)

[௧௬௨] वासनानां परोक्षत्वात्सर्वज्ञत्वं न हीक्ष्यते ।
सर्वबुद्धिषु तद्दृष्ट्वा वासनास्वनुमीयताम् ॥ १६२ ॥

(அ-கை.)

அப்படியானால் சர்வஞ்ஞத்துவமிருந்தால் அஃது ஏன் அநுபவிக்கப்படவில்லையென்றாசங்கித்து, இந்த ஆநந்தமயனான ஈசுவரனது உபாதியாகிய வாசனை பரோக்ஷமாயிருத்தலால் ஈசுவரனது சர்வஞ்ஞத்துவத்தின் அநுபவமுண்டாகிறதில்லையென்று கூறுகின்றார் :—

वासनानां परोक्षत्वात् सर्वज्ञत्वं न हि ईक्ष्यते ॥

(சு-ம்.)

வாசனைகள் பரோக்ஷமாயிருத்தலால் சர்வஞ்ஞத்துவம் அறியப்படுகிறதில்லை அதாவது பிரத்தியக்ஷமாயறியப்படுகிறதில்லை.

(அ-கை.)

அப்படியானல் அந்தச் சர்வஞ்ஞத்துவத்தின் ஞானம் எப்படி யுண்டாகுமென் றாசங்கித்துக் கூறுகின்றார் :—

सर्वबुद्धिषु तत् दृष्ट्वा वासनासु अनुमीयताम् ॥

(சு-ம்.)

சகல புத்திகளிலு முள்ள அந்தச் சர்வஞ்ஞத்துவத்தைப் பார்த்து வாசனைகளில் அநுமானிக்கவேண்டும்.

(வி-ம்.)

இங்கு இஃது அநுமானமாம் :-எல்லாப்புத்திகளிலு முள்ள சர்வஞ்ஞத்துவம் எதுவோ அது தனது காரணவடிவ வாசனையி லுள்ள சர்வஞ்ஞத்துவத்தை முன்னிட்டு உண்டாகத்தக்கதாம்; காரியவடிவ சகலபுத்திகளிலும் உள்ள தர்மவிசேஷமா யிருத்தலால்; நூலின்காரியமாகிய வஸ்திரத்தி லுள்ள உருவமுதலியவற்றைப்போல என்பது பொருள். (ககூ௨)

௭. ஈசுவரனது அந்தரியாமித்துவம்.

[௬௩] विज्ञानमयमुख्येषु कोशेष्वन्यत्र चैव हि ।
अंतास्तिष्ठन्यमयति तेनांतर्यामितां व्रजेत् ॥ १६३ ॥

(அ-கை.)

சர்வஞ்ஞத்துவத்தை உபபாதனஞ்செய்து "एषोऽंतर्यामी இந்த ஆந்தசர்வஞ்ஞத்துவத்தை உபபாதனஞ்செய்து" என்று சுருதியிற் சொல்லப்பட்டமயுைகிய ஈசுவரன் அந்தரியாமியாம்" என்று சுருதியிற் சொல்லப்பட்ட

அந்தரியாமித்துவத்தை உபபாதனஞ் செய்கின்றார் :—

विज्ञानमयमुख्येषु कोशेषु च अन्यत्र एव हि अंतः तिष्ठन् यमयति । तेन अन्तर्यामितां व्रजेत् ॥

(சு-ம்.)

விஞ்ஞானமயனை முக்கியமாகவுடைய நான்கு கோசங்களிலும் மற்றப் பிருதிவிமுதலியவற்றிலும் உள்ளிருந்து எதனால் பிரேரிக்கின்றதோ அதனால் அந்தரியாமித்துவத்தை யடைகின்றது. (ககூ௩)

[௬௪] बुद्धौ तिष्ठन्नांतरोऽस्या धियानीक्ष्यश्च धीवपुः ।
धियमंतर्यमयतीत्येवं वेदेन घोषितम् ॥ १६४ ॥

(அ-கை.)

இந்த ஈசுவரன் அந்தரியாமி யென்னும் அர்த்தத்தில் அந்தரியாமிப் பிராஹ்மணவடிவ பிரகதாரணியக உபநிஷத்தின் பிரகரணம் முழுவதும் பிரமாணமா மென்று காட்டுதற்கு, அதன் ஏகதேசமாகிய "यो विज्ञाने तिष्ठन् எது விஞ்ஞானமாகிய புத்தியில் இருந்துகொண்டு விஞ்ஞானத்தைப் பிரேரிக்கின்றதோ" என்னும் வாக்கியங்களைக் கிரமமாகக் கூறுகின்றார்:—

बुद्धौ तिष्ठन् अस्याः आंतराः च धिया अनीक्ष्यः धीर्वपुः धियं अंतः यमयति । इति एवं वेदेन घोषितम् ॥

(சு-ம்.)

விஞ்ஞானமயகோசமாகிய புத்தியில் இருந்துகொண்டு எந்தப் புத்தியின் ஆந்தரமாயும் புத்தியினால் காணப்படாததாயு மிருக்கின்றதோ, புத்தி எதற்குச் சரீரமாயிருக்கிறதோ, புத்தியை எது உள்ளே பிரேரிக்கின்றதோ என்று இப்படி வேதத்தால் சொல்லப்பட்டிருக்கின்றது. (கசுச)

[சருகூ] तंतुः पटे स्थितो यद्वदुपादानतया तथा ।
सर्वोपादानरूपत्वात्सर्वत्रायमवस्थितः ॥ १६५ ॥

(அ-கை.)

இப்போது அந்தரியாமிப்பிராஹ்மணத்தின் சகல பரியாயத்திற்கும் வியாக்கியானஞ்செய்யின் கிரந்தம் விரியுமென் றஞ்சி வியாக்கியானம் சகல பரியாயத்திலும் பிரவிருத்தித்தல் சித்திக்கும்பொருட்டு यः सर्वेषु भूतेषु எது சருவபூதங்களிலும்" என்னும் பரியாயத்திற்கு வியாக்கியானஞ் செய்கின்றவராய், "यः सर्वेषु भूतेषु तिष्ठन् எது எல்லாவற்றிலு மிருந்து கொண்டு எல்லாவற்றையும் பிரேரிக்கின்றதோ" என்னும் வாக்கியத்தின் அர்த்தத்தைத் திருஷ்டாந்தத்தாற் கூறுகின்றார்:—

यद्वत् तंतुः उपादानतया पटे स्थितः तथा अयं सर्वोपादानरूपत्वात् सर्वत्र अवस्थितः ॥

(சு-ம்.)

எப்படி நூலானது உபாதானத்தன்மையால் படத்தி லிருக்கின்றதோ அதுபோல இவ்வீசுரன் எல்லாவற்றிற்கும் உபாதானவடிவமா யிருத்தலால் எல்லாப்பூதங்களிலும் நிலைத்திருக்கின்றார். (கசுரு)

[சருா] पटादप्यांतरस्तंतुस्तंतोरप्यंशुरांतरः ।
आंतरत्वस्य विश्रांतिर्यत्रासावनुमीयताम् ॥ १६६ ॥

(அ-கை.)

அப்படியானால் இவர் உபாதானத்தன்மையாக எங்கு மிருந்தால் எங்கும் ஏன் காணப்படவில்லை யென்றுசங்கித்து, எல்லாவற்றிற்கு முள்ளா யிருத்தலால் காணப்படவில்லை யென்று கூறுகின்றார்:—

पटात् अपि आंतरः तंतुः तंतोः अपि आंतरः अंशुः । आंतरत्वस्य विश्रांतिः यत्र असौ अनुमीयतां ॥

(சு-ம்.)

படத்தினும் நூல் உள்ளாம். நூலினும் இழை அதாவது நுட்பமாகிய நூல் உள்ளாம். இப்படி எங்கே உள்ளாகுந்தன்மைக்கு நிலைப்புண்டாகின்றதோ அங்கே இவ்விசுரன் அநுமானிக்கப்படுவர்.

(வி-ம்.)

இங்கே இஃது அநுமானமாம்:— உள்ளாகுந்தன்மையின் தாரதம்மியம் (ஏற்றத்தாழ்வு) எங்கேனும் விசிராந்தியடைந்திருக்கும்; தாரதம்மியமாயிருத்தலால்; அணுத்தன்மையின் தாரதம்மியம்போல. (௧௬௬)

[௪௬௧] द्वित्र्यांतरत्वकक्षाणां दर्शनेऽप्ययमांतरः ।
न वीक्ष्यते ततो युक्तिश्रुतिभ्यामेव निर्णयः ॥ १६७ ॥

(அ-கை.)

அப்படியானால் அந்தரியாமி உள்ளாயிருக்கினும், இழைமுதலியவற்றைப்போல அந்தரியாமியின் தரிசனம் ஏன் உண்டாகவில்லை யென்று சங்கித்து, அவற்றைப்போலப் புறம்பாந்தன்மை யில்லாமையால் அந்தரியாமி காணப்படவில்லை யென்னு மபிப்பிராயமாகக் கூறுகின்றார்:—

द्वित्र्यांतरत्वकक्षाणां दर्शने अपि अयं आंतरः न वीक्ष्यते ॥

(சு-ம்.)

இரண்டு மூன்று அந்தரத்துவ அவஸ்தைகளின் தரிசன முண்டானாலும் எல்லாவற்றிற்கும் உள்ளாயிருக்கும் இவர் காணப்படுகிறதில்லை.

(அ-கை.)

அப்போது எந்தப் பிரமாணத்தினால் அந்த அந்தரியாமியின் நிச்சயம் உண்டாகின்றது எனக் கூறுகின்றார்:—

ततः युक्तिश्रुतिभ्यां एव निर्णयः ॥

(சு-ம்.)

ஆகையால் சுருதியுக்திகளினுலேயே நிர்ணய முண்டாகின்றது.

(வி-ம்.)

அசேதனமாகிய ஜடப்பிரபஞ்சத்திற்குச் சேதனவடிவமாகிய அதிஷ்டானமின்றிப் பிரவிருத்தியுண்டாகாமை யுக்தியாம். சுருதியோ முன் சுகூஅ-வது சுலோகத்தில் உதகரிக்கப்பட்டே யிருக்கிறது. (கசுஎ)

[சகூ௨] पटरूपेण संस्थानात्पटस्तंतोर्वपुर्यथा ।
सर्वरूपेण संस्थानात्सर्वमस्य वपुस्तथा ॥ १६८ ॥

(அ-கை.)

"எந்த ஈசுவரனுக்குச் சகல பூதங்களும் சரீரமாக விருக்கின்றனவோ" என்னும் வாக்கியத்தின் அர்த்தத்தைக் கூறுகின்றூர்.

पटरूपेण संस्थानात् तंतोः पटः वपुः यथा । तथा सर्वरूपेण संस्थानात् अस्य सर्वं वपुः ॥

(சு-ம்.)

எப்படிப் படவடிவமாக நிலேத்தலால் நூலிற்குப் படம் சரீரமாகின்றதோ அப்படியே எல்லாவடிவமாகவும் ஈசுவரன் நிலேத்தலால் இந்த ஈசுவரனுக்குச் சகல ஜகத்தும் சரீரமாம். (கசுஅ)

[சகூ௩] तन्तोः संकोचविस्तारचलनादौ पटो यथा ।
अवश्यमेव भवति न स्वातंत्र्यं पटे मनाक् ॥ १६९ ॥

(அ-கை.)

"यः सर्वाणि भूतान्यंतरो यमयति எவர் சகல பூதங்களேயும் உள்ளாய்ப் பிரேரிக்கின்றூரோ" என்னும் வாக்கியத்தின் தாற்பரியத்தைத் திருஷ்டாந்தத்தோடு இரண்டு சுலோகங்களாற் கூறுகின்றூர்:—

पटः यथा तंतोः संकोचविस्तारचलनादौ पटः अवश्यं एव भवति । पटे स्वातंत्र्यं मनाक् न ॥

(சு-ம்.)

எப்படி நூலின் சுருங்குதல் விரிதல் அசைதல் முதலியவற்றில் படம் அவசியமாகவே அந்தந்தப்படி ஆகின்றதோ, அதனுல் படத்தில் சுதந்திரத்துவம் சிறிதும் இல்லேயோ. (கசுகூ)

[௬௬௪] तथांऽतर्याम्ययं यत्र यया वासनया यथा ।
विक्रियते तथाऽवश्यं भवत्येव न संशयः ॥ १७० ॥

(அ-கை.)

இதுவுமது:—

तथा अयं अंतर्यामी यत्र यया वासनया यथा अवश्यं भवति एव संशयः न ॥

(சு-ம்.)

அதுபோல இந்த அந்தரியாமி எங்கே எந்த வாசனையால் எப்படி விகாரத்தையடைகின்றதோ அப்படி அவசியமாகவே ஜகத்து உண்டாகின்றது. இதில் சந்தேகமில்லை.

(வி-ம்.)

நூலின் சுருக்கமுதலியவற்றால் படத்தின் சுருக்க முதலியன உண்டாகுதல்போலப் பிருதிவிமுதலியவற்றில் உபாதானத்தன்மையாக நிலைத்திருக்கும் அந்தரியாமி எங்கெந்த வாசனைகளால் எப்படிக் கடமுதலிய காரிய வடிவமாகப் பரிணாமத்தை யடைகின்றாரோ, அப்படியே அந்த ஈசுவரனது காரியசமூகங்களும் ஆகும் என்பது கருத்து. (௧௭0)

[௬௬௫] ईश्वरः सर्वभूतानां हृद्देशेऽर्जुन तिष्ठति ।
भ्रामयन्सर्वभूतानि यंत्रारूढानि मायया ॥ १७१ ॥

(அ-கை.)

இப்படி அந்தரியாமியைப் பிரதிபாதிக்கும் சுருதியைக் கூறி ஸ்மிருதியாகிய கீதையின் ௧௮-வது அத்தியாயத்திலுள்ள ௬௧-வது சுலோகமாகிய வாக்கியத்தையும் கூறுகின்றார்:—

अर्जुन । ईश्वरः यंत्रारूढानि सर्वभूतानि मायया भ्रामयन् सर्वभूतानां हृद्देशे तिष्ठति ॥

(சு-ம்.)

அர்ச்சுனா! * ௬௬ ஈசுவரன் எல்லாப் பூதங்களினது இருதயஸ்தானத்திலும் இருக்கிறார். அவர் எந்திரத்தின்பேரிலுள்ள சகல பூதங்களையும் மாயையினால் சுற்றுவிக்கின்றார். (௧௭௧)

---

* ௬௬. இந்தப் பகவானது வாக்கியத்திலுள்ள ஈசுவரனென்னும் பதம் முதல் வேற்றுமை ஒருமையாயிருத்தலால் ஈசுவரன் ஒருவரே நாநாவல்லரென்பது சித்திக்கின்றது. ஆகையால் ஈசுவரனாகிய அந்தரியாமிக்கு நாநாத்துவம் கூறும் விஷ்ணு

[௪௬௬] सर्वभूतानि विज्ञानमयास्ते हृदये स्थिताः ।
तदुपादानभूतेशस्तत्र विक्रियते खलु ॥ १७२॥

(அ-கை.)

சுலோகம் ௪௬௫-ல் கூறிய கீதாவாக்கியத்திலுள்ள "எல்லாப் பூதங்களி லும்" என்னும் பதத்தி னர்த்தத்தைக் கூறுகின்றார்:—

सर्वभूतानि विज्ञानमयाः ते हृदये स्थिताः ॥

(சு-ம்.)

எல்லா ஜீவர்களும் விஞ்ஞானமயகோசவடிவமாம். அவைகள் இரு தயகமலத்தி லிருக்கின்றன.

---

சுவாமியை அநுசரித்தவர்களது மதம் நிராகரிக்கப்பட்டது. விஷ்ணுசுவாமியை அநுசரித்தவர்கள், நாநா இருதயதேசத்திற்கு ஏகவசனம் (ஒருமை) ஆவதுபோல ஜாதி அபிப்பிராயமாக ஏகவசனமா மென்று கூறுகின்றார்கள். அது பொருந்தாது; ஏனெனின், வேறிடத்தில் இருதயதேசத்திற்கு நாநாத்துவம் கேட்கப்படுதலாலும், லோகாநுபவமாகச் சித்தித்திருத்தலாலும் இருதயதேசத்திற்கு ஏகவசனமாகச் சொல் லுதல் ஜாதி அபிப்பிராயமாகச் சம்பவிக்கும். ஈசுவரனது நாநாத்துவம் சுருதி ஸ்மிருதி முதலியவற்றில் ஒரிடத்திலும் கேட்கப்படவில்லை; உலகாநுபவத்திற்கு விஷயமு மன்று. ஆனால் சாஸ்திரத்தினாலும் உலகாநுபவத்தினாலும் ஒரே ஈசுவரன் தோற்றுகின்றார். அவனை ஜாதி அபிப்பிராயத்தால் ஏகவசனமாகக் கூறுதல் பொருந்தாது. அல்லது ஒவ்வொரு சரீரத்திலும் வேறு வேறு ஈசுவரனிருந்தால் ஒவ்வொரு பிரஜைக்கும் வேறு வேறு இராஜாவைப்போல ஏகதேசமாகிய ஒரு பிரஹ் மாண்டத்தின் அநேக நியந்தாக்(பிரேரகர்)களது இச்சையால் ஜகத்தின் வியவஸ் தையில்லாமற்போகும். ஒரு இராஜாவானவர் அநேக சேவகர்களைப்போல ஒரு பிரஹ் மமாகிய மகேசுவரரது அம்சமாகிய நாநா நியந்தாக்களை அங்கீகரிக்கின் விரோத மில்லை யென்று சொல்வோர்களை இது கேட்கவேண்டும்:—அந்த ஒருமகேசுவரன் சருவசக்தி சருவஞ்ஞத்துவத்தோடு கூடியவரா? அல்லது கூடாதவரா? கூடாதவ ரெனின், இராஜாவைப்போல அநீசுவரனாகிய ஜீவனாவர். கூடியவரெனின், அவ் வொருவருக்கே சருவஞ்ஞத்துவபூர்வகமாக எல்லாவற்றையும் பிரேரிக்கும் சாமர்த் திய மிருத்தலால் வேறு அம்சவடிவமாகிய நாநா அந்தரியாமியை அங்கீகரித்தல் பிரயோஜனமின்றிய கௌரவதோஷமுள்ள அப்பிரமாணமாம். வாசஸ்பதிமிசி ராசாரியார் ஈசுவரனுக்கு நாநாத்துவம் அங்கீகரிக்கின்றனர். அவருக்கு அத்தி யாரோபத்தை அறிவித்து அபவாதவாயிலாக முமுக்ஷுக்களுக்கு அத்வைதத்தை அறிவித்தலில் தாற்பரியமாம்; அங்கீகரித்தலில் தாற்பரிய மன்று. ஆகையால்விரோத மில்லை. இவ்வாற்றால் ஈசுவரன் நாநா வென்று கூறும் விஷ்ணுஸ்வாமியை அநுசரித்த வல்லாபாசாரியின் மதம் ஈசுவரன் என்னும் ஒருமைவசனத்தால் நிராகரிக்கப்பட் டது; வல்லாபாசாரியைவிட கிருஷ்ணபகவானது வாக்கியம் பிரபலமாதலால்.

(அ-கை.)

அப்படியானல் அந்த விஞ்ஞானமய ஜீவர்களுக்கு எதனுல் இருதயத்தி லிருப்பு இருக்கின்றது என்றுசங்கித்து, இருதயத்தில் அந்தரியாமி விஞ் ஞானமயவடிவமாகப் பரிணமித்தலால் அவற்றிற்கு இருப்பு இருதயத்தி லிருக்கின்றதெனக் கூறுகின்றூர்:—

तदुपादानभूतेशः तत्र खलु विक्रियते ॥

(சு-ம்.)

அந்த விஞ்ஞானமயவடிவ ஜீவர்களின் உபாதானவடிவ ஈசுவரன் ஆந ந்தமயன். அவன் அவ்விருதயத்தில் நிச்சயமாக விஞ்ஞானமயவடிவமாகிப் பரிணமத்தை அடைகின்றுன். (௧௭௨)

[௪௬௭] देहादिपंजरं यंत्रं तदारोहोऽभिमानिता ।
विहितप्रतिषिद्धेषु प्रवृत्तिर्भ्रमणं भवेत् ॥ १७३ ॥

(அ-கை.)

"எந்திரத்தில் ஆரூடமாகிய" என்பதிலுள்ள "எந்திரம், ஆரூடம்" என்னும் இரண்டு பதங்களுக்கும் அர்த்தத்தைக் கூறுகின்றூர்:—

देहादिपंजरं यंत्रं । अभिमानिता तदारोहः ॥

(சு-ம்.)

தேகமுதலிய சங்காதவடிவமாகிய பஞ்சரம் எந்திரமாம். அபிமானித் தன்மை அவ்வெந்திரத்தி லிருத்தலாம்.

(அ-கை.)

"இப்போது பிரமிப்பிக்கின்றூர் அதாவது சுற்றுவிக்கின்றூர்." என் னும் பதத்திலுள்ள பிரமித்தல் என்னும் பகுதியின் அர்த்தத்தைக் கூறு கின்றூர்:—

विहितप्रतिषिद्धेषु प्रवृत्तिः भ्रमणं भवेत् ॥

(சு-ம்.)

விகிதமான சுபமும் நிஷித்தமான அசுபமாகிய தர்மங்களில் பிரவி ருத்தித்தல் பிரமித்தல் ஆகின்றது. (௧௭௩)

[௪௬௮] विज्ञानमयरूपेण तत्प्रवृत्तिस्वरूपतः ।
स्वशक्त्येशो विक्रियते मायया भ्रामणं हि तत् ॥ १७४ ॥

(அ-கை.)

இப்போது பிரமிப்பித்த லென்னும் பகுதியிலிருக்கும் பி என்னும் விகுதியும் மாயை என்னுஞ் சொல்லுமாகிய இவ்விரண்டன் அர்த்தத்தையும் கூறுகின்றார்:—

विज्ञानमयरूपेण तत्प्रवृत्तिस्वरूपतः स्वशक्त्या ईशः विक्रियते तत् हि मायया भ्रामणम् ॥

(சு-ம்.)

விஞ்ஞானமய ஜீவவடிவத்தாலும், அதனது (விஞ்ஞானமயனது) பிரவிருத்தியின் சொரூபத்தாலும் தனது சக்தியாகிய மாயையால் ஈசுவரன் விகாரத்தை யடைகின்றார். அதுவே மாயையினால் பிரமிப்பித்தலாம் (கஎச)

[சஎரு] अंतर्यमयतीत्युक्त्याऽयमेवार्थः श्रुतौ श्रुतः ।
पृथिव्यादिषु सर्वत्र न्यायोऽयं योज्यतां धिया ॥ १७५ ॥

(அ-கை.)

முன்சுலோகம் சஎ௩-ல் கூறிய சுருதிகளிலுள்ள "நியமனஞ் செய்கின்றார் அதாவது பிரேரிக்கின்றார்." என்னும் பதத்திற்கும் இதுவே பொருளாமெனக் கூறுகின்றார்:—

अंतः यमयति इति उक्त्या अयं एव अर्थः श्रुतौ श्रुतः ॥

(சு-ம்.)

உள்ளாய்ப் பிரேரிக்கின்றார் என்னும் சொல்லால் சக-அ-ல் கூறிய பிரமிப்பித்தல் என்னும் பொருளே சுருதியில் கேட்கப்பட்டிருக்கின்றது.

(அ-கை)

முற்கூறிய வியாக்கியானத்தை வேறு பரியாயச்சொற்களினும் அதிதேசஞ்செய்கின்றார்:—

अयं न्यायः पृथिव्यादिषु सर्वत्र धिया योज्यताम् ॥

(சு-ம்.)

இந்த (சகூஅ-ல் கூறிய சுருதியிலுள்ள நியமன மென்னும் பதத்திற் கூறிய) நியாயம் அதாவது தன்மை பிருதிவிமுதலிய எல்லாவிடங்களிலும் புத்தியினால் பொருந்தத்தக்கதாம். (கஎரு)

[௧௭௰] जानामि धर्मं न च मे प्रवृत्ति-
जानाम्यधर्मं न च मे निवृत्तिः
केनापि देवेन हृदि स्थितेन
यथा नियुक्तोऽस्मि तथा करोमि ॥ १७६ ॥

(அ-கை.)

பிரவிருத்திமாத்திரம் சருவேசுவரனது அதீனமாமென்பதில் அந்நிய சாஸ்திரவாக்கியத்தை உதாரணமாகக் கூறுகின்றார்:—

धर्मं जानामि च मे प्रवृत्तिः न । च अधर्मं जानामि मे निवृत्तिः न । केन अपि हृदि स्थितेन देवेन यथा नियुक्तः अस्मि तथा करोमि ॥

(சு-ம்.)

யான் தர்மத்தை அறிகிறேன் எனக்கு அதில் பிரவிருத்தி உண்டாகிறதில்லை. யான் அதர்மத்தை அறிகிறேன். எனக்கு அதனின்றும் நிவிருத்தி யுண்டாகிறதில்லை. ஆகையால் இருதயத்திலுள்ள ஓர் தெய்வமாகிய அந்தரியாமியால் எப்படிப் பிரேரிக்கப்பட்டவனாய் இருக்கின்றேனோ அப்படிச் செய்வேனாக என்னும் நிச்சயமுண்டாகிறது. (௧௭௬)

[௧௭௭] नार्थः पुरुषकारेणेत्येवं माशंक्यतां यतः ।
ईशः पुरुषकारस्य रूपेणापि विवर्तते ॥ १७७ ॥

(அ-கை.)

அப்படியானால் பிரவிருத்தி ஈசுவராதீனமாயிருந்தால் புருஷனது பிரயத்தினம் அதாவது காரியத்தில் பிரவிருத்தித்தற் கேதுவாகிய உச்சாகம் வியர்த்தமாம் என்று சங்கித்துப் புருஷனது பிரயத்தினமும் ஈசுவரவடிவமாயிருத்தலால் புருஷனது பிரயத்தனம் வியர்த்தமாமென்று கூறுதல் பொருந்தாதென்று பரிகரிக்கின்றார்:—

"पुरुषकारेण अर्थः न" इति एवं माशंक्यतां । यतः ईशः पुरुषकारस्य रूपेण अपि विवर्तते ॥

(சு-ம்.)

புருஷப்பிரயத்தனத்தால் பிரயோஜனமில்லை என்று இப்படிச் சங்கிக்கலாகாது. எதனால் ஈசுவரன் புருஷப்பிரயத்தினத்தின் வடிவமாகவு மிருக்கின்றாரோ அதனால். (௧௭௭)

[௧௭௮] ईदृग्बोधेनेश्वरस्य प्रवृत्तिर्मैव वार्यताम् ।
तथापीशस्य बोधेन स्वात्मासंगत्वधीजनिः ॥ १७८ ॥

(அ-கை.)

அப்படியானால் புருஷப்பிரயத்தினமும் ஈசுவரவடிவமாயின், "பிரேரிக்கின்றார்" என்று ௧௬௮-௧௭௦ சுலோகங்களில் சொல்லப்பட்டிருக்கும் அந்தரியாமியின் பிரேரணை வியர்த்தமாமே என்றாசங்கித்து, அந்த ஞானத்தால் தனது ஆத்மாவாகிய சாக்ஷியினது அசங்கத்தன்மையின் ஞானமாகிய பலம் சம்பவித்தலால் அந்தரியாமியின் பிரேரணை வியர்த்தமா மென்பது பொருந்தாது என்று பரிகரிக்கின்றார்:—

ईदृग्बोधेन एव ईश्वरस्य प्रवृत्तिः मा एव वार्यतां । तथापि ईशस्य बोधेन स्वात्मासंगत्वधीजनिः ॥

(சு-ம்.)

இப்படிப்பட்ட ஞானத்தால் அதாவது புருஷப்பிரயத்தினமுதலிய வடிவமான ஈசுவரனது ஸ்திதியை அறிதலால் ஈசுவரனது அந்தரியாமிவடிவமாகப் பிரேரித்தலாகிய பிரவிருத்தி நிவிருத்திக்கப்படமாட்டாதெனினும், ஈசுவரனது முற்கூறிய ஞானத்தால் தனது ஆத்மா அசங்க மென்னும் புத்தியுண்டாகின்றது. (௧௭௮)

[௧௭௯] तावता मुक्तिरित्याहुः श्रुतयः स्मृतयस्तथा ।
श्रुतिस्मृती ममैवाज्ञे इत्यपीश्वरभाषितम् ॥ १७९ ॥

(அ-கை.)

ஆத்மாவினது அசங்கத்தன்மையின் ஞானத்தினாலும் என்ன பிரயோஜனமெனக் கூறுகின்றார்:—

"तावता मुक्तिः" इति श्रुतयः तथा स्मृतयः आहुः ॥

(சு-ம்.)

அவ்வளவினாலேயே அதாவது ஆத்மாவின் அசங்கத்தன்மையின் ஞானத்தினாலேயே மோக்ஷமா மென்று அநேகம் சுருதிகளும் அப்படியே ஸ்மிருதிகளும் கூறுகின்றன.

(அ-கை.)

சுருதிஸ்மிருதிகளாற் சொல்லப்பட்ட அர்த்தத்தைக் கடக்கலாகாதென்பதில் ஸ்மிருதியைக் காட்டுகின்றார்:—

"श्रुतिस्मृती मम एव आज्ञे" इति अपि ईश्वरभाषितं ॥

(சு-ம்.)

சுருதிஸ்மிருதிக ளிரண்டும் என்னுடைய ஆணைகளேயாம் என்றும் ஈசுவரனாற் சொல்லப்பட்டிருக்கின்றது. (௧எ௯)

[௪எ௪] आज्ञाया भीतिहेतुत्वं भीषाऽस्मादिति हि श्रुतम् ।
सर्वेश्वरत्वमेतत्स्यादन्तर्यामित्वतः पृथक् ॥ १८० ॥

(அ-கை.)

சுருதியும் ஈசுவரனைப் பயத்திற் கேதுவாகக் கூறியிருக்கின்றதெனக் கூறுகின்றார்:—

आज्ञाया भीतिहेतुत्वं "भीषा अस्मात्" इति हि श्रुतं ॥

(சு-ம்.)

ஈசுவராஞ்ஞை பயத்திற்குக் காரணமாம்; "இதன் பயத்தினால் வாயு அசைக்கின்றது" என்றும் சுருதியில் கேட்கப்பட்டிருக்கின்றதாகலின்.

(அ-கை.)

சுருதி, ஈசுவரன் பயத்திற்கு ஏதுவாவர் என்று எதற்காகச் சொல்லியிருக்கின்றது என்று சங்கித்து, ஈசுவரனது சருவேசுவரத்துவம் அந்தரியாமித்துவத்தினும் வேறு மென்பது சித்திக்கும்பொருட்டுச் சொல்லியிருக்கின்றது என்றங்கீகரித்துக் கூறுகின்றார்:—

एतत् सर्वेश्वरत्वम् अंतर्यामित्वतः पृथक् स्यात् ॥

(சு-ம்.)

ஆகையால் இந்தப் பயத்திற்கு ஏதுவாகுந்தன்மையாகிய சர்வேசுவரத் தன்மை அந்தரியாமித்தன்மையின் வேறாகின்றது. (௧௮0)

[௪எ௫] एतस्य वा अक्षरस्य प्रशासन इति श्रुतिः ।
अंतः प्रविष्टः शास्तायं जनानामिति च श्रुतिः ॥ १८१ ॥

(அ-கை.)

உள்ளும் வெளியும் ஈசுவரனே நியாமகரா யிருக்கின்றாரென்னும் அர்த்தத்தில் இரண்டு சுருதிகளையும் கூறுகின்றார்:—

"एतस्य वा अक्षरस्य प्रशाशने" इति श्रुतिः ॥ च "अंतः प्रविष्टः अयं जनानां शास्ता" इति श्रुतिः ॥

(சு-ம்.)

"இந்த அக்ஷரப்பிரஹ்மத்தின் ஆஞ்ஞையில் சூரியசந்திரர்கள் நிலைத்திருக்கின்றனர்." என்பது ஒரு சுருதியாம். "உள்ளே பிரவேசத்தையடைந்த இப்பரமாத்மா ஜீவர்களுக்கு நியாமகராவர்." என்பது இரண்டாவது சுருதியாம். (௧௮௧)

ரு. ஈசுவரன் ஜகத்துயோனியாதலாகிய காரணமாதல்.

[௪௭௯] जगद्योनिर्भवेदेष प्रभवाप्ययकृत्त्वतः ।
आविर्भावतिरोभावावुत्पत्तिप्रलयौ मतौ ॥ १८२ ॥

(அ-கை.)

இப்போது கிரமமாக அடையப்பட்ட "இது யோனியாம் அதாவது காரணமாம்." என்னும் சுருதிவாக்கியத்தின் அர்த்தத்தைக் கூறுகின்றார்:--

एषः जगद्योनिः भवेत् ॥

(சு-ம்.)

இந்தப் பரமாத்மா ஜகத்துக்குக் காரணராகின்றார்:—

(அ-கை.)

பிரதிஞ்ஞை செய்யப்பட்ட ஜகத்தின் காரணத்தன்மையாகிய அர்த்தத்தில் "प्रभवाप्ययौ हि भूतानां ॥ பூதங்களின் உற்பத்தியையும் பிரளயத்தையும் செய்கின்றார்" என்னும் சாஸ்திரவாக்கியத்தை ஏதுத்தன்மையாகப் பொருத்துகின்றார்:—

प्रभवाप्ययकृत्त्वतः ॥

(சு-ம்.)

உற்பத்தியையும் பிரளயத்தையும் செய்வதா யிருத்தலால் இது ஜகத்து யோனியாம்.

(விம்.)

உற்பத்திபிரளயங்களைச் செய்பவரா யிருத்தலால் ஈசுவரன் ஜகத்து யோனியாவர் என்பது பொருள்.

(அ-கை.)

உற்பத்தி பிரளய மென்னும் இரண்டு சப்தங்களுக்கும் சொல்லக் கருதிய அர்த்தத்தைக் கூறுகின்றார்:—

उत्पत्तिप्रलयौ आविर्भावतिरोभावौ मतौ ॥

(சு-ம்.)

உற்பத்தியும் பிரளயமும் ஆவிர்ப்பாவமாகவும் திரோபாவமாகவும் கருதப்பட்டிருக்கின்றன.

(வி-ம்.)

உற்பத்தியும் பிரளயமும் கிரமமாக ஆவிர்ப்பாவமாகிய பிரகடத்தன்மையாகவும் திரோபாவமாகிய அப்பிரகடத்தன்மையாகவும் கருதப்பட்டிருக்கின்றன என்பது அந்வயம். (கஅஉ)

[சஎஎ] आविर्भावयति स्वस्मिन्विलीनं सकलं जगत् ।
प्राणिकर्मवशादेष पटो यद्वत्प्रसारितः ॥ १८३ ॥

(அ-கை.)

ஈசுவரன் ஜகத்தின் ஆவிர்ப்பாவமாகிய உற்பத்திக்குக் காரணமாவரென்பதைத் திருஷ்டாந்தத்தோடு உபபாதானஞ் செய்கின்றார்—

यद्वत्प्रसारितः पटः । एषः प्राणिकर्मवशात् स्वस्मिन् विलीनं सकलं जगत् आविर्भावयति ॥

(சு-ம்.)

எப்படி விரிக்கப்பட்ட படமிருக்கின்றதோ அதுபோல இவ்வீசுவரன் ஜீவர்களது கர்மவசத்தால் தன்னிடத்தில் ஒடுங்கிய அதாவது பிரளயத்தில் சம்ஸ்காரவடிவமாயுள்ள சகல ஜகத்தையும் பிரகடனஞ் செய்கின்றார்.

(வி-ம்.)

எப்படிச் சங்கோசத்தையடைந்த சித்திரபடம் தனது விரிதலால் தன்னிடத்திலுள்ள சித்திரங்களைப் பிரகடனஞ் செய்கின்றதோ அது போல ஈசுவரனும் ஜகத்தைப் பிரகடஞ்செய்கின்றாரென்பது பொருள். ()

[சஎஅ] पुनस्तिरोभावयति स्वात्मन्येवाखिलं जगत् ।
प्राणिकर्मक्षयवशात्संकोचितपटो यथा ॥ १८४ ॥

(அ-கை.)

அவ்வீசுவரனே பிரளயத்திற்குக் காரணமாவரென்பதைக் காட்டுகின்றார்:—

यथा संकोचितपटः । प्राणिकर्मक्षयवशात् पुनः स्वात्मनि एव अखिलं जगत् तिरोभावयति ॥

(சு-ம்.)

எப்படிச் சுருங்கிய படமிருக்கின்றதோ அதுபோல ஈசுவரன் பிராணிகளது கர்மக்ஷயவசத்தால் மறுபடியும் பிரளயகாலத்தில் தன்னிடத்திலேயே சகலப் பிரபஞ்சத்தையும் ஒடுக்குகின்றார்.

(வி-ம்.)

விரிந்த அந்தப் படமே சங்கோசமாகிய சுருக்கத்தை அடைந்து எப்படிச் சித்திரங்களைத் திரோதானஞ் செய்கின்றதோ அதுபோல ஈசுவரனும் ஜகத்தைத் திரோதானஞ் செய்கின்றாரென்பது பொருள். (௧௮௪)

[௬௭௯] रात्रिघस्रौ सुप्तिबोधावुन्मीलननिमीलने ।
तूर्ष्णीभावमनोराज्ये इव सृष्टिलयाविमौ ॥ १८५ ॥

(அ-கை.)

ஆவிர்ப்பாவதிரோபாவங்களிரண்டினும் வேறு திருஷ்டாந்தத்தைக் கூறுகின்றார்:—

रात्रिघस्रौ सुप्तिबोधौ उन्मीलननिमीलने तूर्ष्णीभावमनोराज्ये इव इमौ सृष्टिलयौ ॥

(சு-ம்.)

இரவும் பகலும் சுழுத்தியும் ஜாக்கிரமும் கண் மூடுதலும் கண் திறத்தலும் மனதின் நிருவிகற்பத்தன்மையாகிய சும்மாவிருத்தலும் மனதின் சவிகற்பத்தன்மையாகிய மனோராஜ்ஜியமுமாகிய இவற்றைப்போல இந்தச் சிருஷ்டியும் பிரளயமு மிருக்கின்றன. (௧௮௫)

[௬௮0] आविर्भावतिरोभावशक्तिमत्वेन हेतुना ।
आरंभपरिणामादिचोद्यानां नात्र संभवः ॥ १८६ ॥

(அ-கை.)

அப்படியானால் ஈசுவரனுக்குள்ள ஜகத்காரணத்தன்மையும் ஆரம்பத்தைச் செய்யுந்தன்மையினாலா? அல்லது அச்சகத்தின் வடிவமாகப் பரிணமிக்குந்தன்மையினாலா? என்பன இவ்விரண்டு விகற்பமாம். அவற்றுள்,

முதல் விகற்பம் பொருந்தாது; அத்துவிதீயத்திற்கு * ௫௬. ஆரம்பத்தைச்செய்யுந்தன்மை பொருந்தாமையால். இரண்டாவது விகற்பமும் பொருந்தாது; நிரவயவத்திற்குப் * ௫௭. பரிணாமம் சம்பவியாமையாலென்றாசங்கித்து மூன்றாவது * ௫௮. விவர்த்தவாதத்தை ஆசிரயித்தலால் இந்த இரண்டு பக்ஷங்களிலும் கூறிய தோஷ மில்லை யென்று பரிகரிக்கின்றார்:—

---

* ௫௬. எங்கே அநேக காரணமாகிய அவயவங்களின் சையோகத்தால் அத்தியந்த பின்னமாக ஆரம்பித்து, அவயவிவடிவமாகிய காரியத்திரவியம் சமவாயசம்பந்தத்தால் சமவேதமாய்(கூடியதாய்)உண்டாகின்றதென்று அங்கீகரிக்கப்பட்டிருக்கின்றதோ அது ஆரம்பவாதமாம். கபாலமாகிய அவயவங்களின் சையோகத்தால் கபாலங்களுக்கு வேறாகிய கடம் என்னும் காரிய முண்டாவதுபோலவாவது அல்லது இடிந்த பழைய வீட்டின் கல்முதலிய அவயவங்களால் வேறு புதுவீடாகிய காரிய முண்டாவதுபோலவாவது எங்கே அங்கீகரிக்கப்பட்டிருக்கின்றதோ அங்கே உபாதானகாரணம் தனது சொரூபத்தை விடுகிறதில்லை ; உபாதானத்திற்கு வேறாகிய காரியத்தின் உற்பத்தி யுண்டாகின்றது. எப்படிக் கிரியைவாயிலாக இரண்டு பரமாணுக்களின் சையோகத்தால் துவியணுகத்தின் ஆரம்பமும், மூன்றுதுவியணுகங்களால் திரியணுகத்தின் ஆரம்பமும், தந்துக்களால் படத்தின் ஆரம்பமும் உண்டாதல்போல எங்கு அங்கீகரிக்கப்படுகின்றதோ, அங்கும் காரியகாரணங்களுக்கு அத்தியந்தபேதமே ஒப்பப்பட்டிருக்கின்றது. இவ்வாரம்பவாதம் பிரஹ்மத்தினின்றும் ஜகத்து உற்பத்தியாவதில் பொருந்தாது; ஏனெனின், பிரஹ்மம் அத்விதீயமா யிருத்தலால் அதற்கு வேறாகிய காரிய மில்லாமையால் பிரஹ்மம் அத்விதீய மென்பது உபநிஷத்துக்களில் பிரசித்தமாம். ஆரம்பவாதத்தை அங்கீகரித்தால் காரிய உற்பத்திக்குப் பின்னும் காரியத்திற்கு வேறாகக் காரணம் எப்படியோ அப்படியே இருப்பதா யிருத்தலின் ஏரகாரணத்தில் அநேககாரியங்களின் உற்பத்தி யுண்டாகவேண்டும். ஆகையால் நையாயிகர் ஒப்பிய ஆரம்பவாதம் அசங்கதமாம்.

* ௫௭. எங்கே உபாதானத்தின் சமானசத்தையினாலேயே ஒரு அம்சத்தின் பரிணாமத்தால் காரியமாகிய வேறுவடிவமாக உற்பத்தியுண்டாகின்றதென்று கொள்ளப்பட்டிருக்கின்றதோ அது பரிணாமவாதமாம். அதில் பரிணாமம் (காரியம்), பரிணாமி (காரணம்) என்னு மிரண்டற்கும் அபேதம் அங்கீகாரமாம். அது மண்ணிற்குக் கடரூபபரிணாமமும், அந்தக்கரணத்திற்கு விருத்திரூபபரிணாமமும், பிரகிருதிக்கு மகத்தத்துவமுதலிய பரிணாமமும் இருத்தல் போலவாம். இது சாங்கியர்களுக்கும் சில உபாசகர்களுக்கும் சம்மதமாம். சாங்கியர் ஜகத்தைப் பிரகிருதியின் பரிணாமமாகவும், சில உபாசகர் பிரஹ்மத்தின் பரிணாமமாகவும் கொண்டிருக்கின்றனர். இவ்விருவர் கொள்கையும் அசங்கதமாம். ஏனெனின், பிரஹ்மமீமாம்சையில் சூத்திரகாரரும் பாஷியகாரரும் சுருதியுக்திகளின் பலத்தால் ஜடமாகிய பிரதானம் காரணமா மென்பதை விஸ்தாரமாகக் கண்டித்திருக்கின்றனர். சேதனம் நிரவயவமா யிருத்தலால் அதற்குப் பரிணாமம் சம்பவியாது. சேதனத்திற்கும் பரிணாமம் அங்கீகரிக்கின், சேதனம் நாசமுடையதா மெனல் வரும். ஆகையால் பரிணாமவாதம் அசங்கதமாம்

* ௫௮. எங்கே உபாதானகாரணத்தின் சொரூபத்தையே விடாமல் விஷமசத்தையால் காரியமாகிய வேறுவடிவமாக உற்பத்தியும் ஞானமும் உண்டாகின்றதென்று

आविर्भावतिरोभावशक्तिमत्त्वेन हेतुना अत्र आरंभपरिणामादिचोद्यानां संभवः न ॥

(சு-ம்.)

ஈசுவரன் ஆவிர்ப்பாவ திரோபாவசக்திகளாகிய மாயாவடிவ சாமர்த்தியத்தோடு கூடியிருக்கும் ஏதுவால் இங்கே எங்கள் சித்தாந்தத்தில் ஆரம்ப பரிணும * ௹கூ.முதலிய விகற்பங்களாகிய பிரசினங்களின் சம்பவம் இல்லை. (கஅசு)

[சஅக] अचेतनानां हेतुः स्याज्जाड्यांशेनेश्वरस्तथा ।
चिदाभासांशतस्त्वेष जीवानां कारणं भवेत् ॥ १८७॥

(அ-கை.)

அப்படியானல் ஒரே ஈசுவரன் சேதனு சேதனமாகிய இரண்டுவித ஜகத்திற்கும் எப்படி யுபாதனமாவர்? என்ருசங்கித்து, மாயா உபாதியின் பிரதானத்தன்மையால் அசேதனங்களாகிய தேகமுதலிய ஜடபதார்த்தங்களின் உபாதானமும், சேதனமாகிய சிதாபாச அம்சத்தின் பிரதானத்தன்மையால் சேதனங்களாகிய சிதாபாசகர்களின் உபாதானமு மாகின்றதென்று கூறுகின்ருர்:—

जाड्यांशेन ईश्वरः अचेतनानां हेतुः स्यात् । तथा चिदाभासांशतः तु एषः जीवानां कारणं भवेत् ॥

(சு-ம்.)

ஜடத்தன்மையாகிய மாயைவடிவ அம்சத்தால் ஈசுவரன் ஜடங்களுக்குக் காரண மாகின்ருர். அப்படியே சிதாபாசனுகிய அம்சத்தால் இவ்வீசுவரன் சிதாபாசராகிய ஜீவர்களுக்குக் காரண மாகின்ருர். (கஅஎ)

---

அங்கீகரிக்கப்படுகின்றதோ அது விவர்த்தவாதமாம். அது சுத்தியில் வெள்ளியின் உற்பத்தியும் சுவர்ணத்தில் ஆபரணத்தின் உற்பத்தியுமுண்டாதல் போலவாம். இது வேதாந்தமதத்தி லொப்பப்பட்டிருக்கின்றது. அதனை அங்கீகரிக்கின், ஆரம்பவாத பரிணமவாதங்களிற் கூறிய தோஷமில்லை.

* ௹கூ. இங்கே முதலியவெனுஞ் சொல்லால் சுபாவவாதமுதலியன கொள்ளப்படும். ஆரம்ப பரிணும விவர்த்தவாதங்களின் பிரதிபாதனத்தையும் விவர்த்தவாதத்திற்கு வேருகிய இரண்டுவாதங்களின் அசம்பவத்தையும் கசகரு-கசகஅ சுலோகங்களிற் காண்க.

௬. பிரசங்கத்தால் பிரஹ்மத்தையும் ஈசுவரனையும் விவேகித்தல் ௬ ௧௨-௬௬௬.
௧. வார்த்திககாரர் பரமாத்மாவையே ஜகத்காரணமாகக் கூறிய தென்றனரென்னும் சங்கை.

[௬அ௨] तमःप्रधानः क्षेत्राणां चित्प्रधानश्चिदात्मनाम् ।
परः कारणतामेति भावनाज्ञानकर्मभिः ॥ १८८ ॥

(அ-கை.)

அப்படியானால் மாயாவியாகிய ஈசுவரன் ஜகத்திற்குக் காரணமாவரென்று சொல்லுதல் பொருத்தமுடையதன்று. ஏனெனின், சுரேசுவராசாரியராகிய வார்த்திககாரர் பரமாத்மாவாகிய பரப்பிரஹ்மத்திற்கே அந்த ஜகத்காரணத்தன்மையைக் கூறியிருத்தலால் என்று இரண்டு சுலோகங்களால் வாதி சங்கிக்கின்றான்:—

परः भावनाज्ञानकर्मभिः तमप्रधानः क्षेत्राणां कारणतां एति । चित्प्रधानः चिदात्मनाम् ॥

(சு-ம்.)

பரமாத்மாவானவர் பாவனை ஞானம் கர்ம மென்னும் நிமித்தங்களால் தமப்பிரதானமுடையவராய்ச் சரீரமுதலிய க்ஷேத்திரங்களுக்குக் காரணமாதலையுமாதலையும் சித்துப்பிரதானராய்ச் சிதாபாசர்களுக்குக் காரணமாதலையுமடைகின்றார்.

(வி-ம்.)

மாயையாகிய பிரகிருதியின் தமோகுணத்தைப் பிரதானமாகவுடைய பரமாத்மா சரீரமுதலிய க்ஷேத்திரங்களுக்குக் காரண மாவர். சேதனத்தைப் பிரதானமாகவுடைய பரமாத்மா சிதாபாசர்களுக்குக் காரண மாவர். பாவனை யென்பது சம்ஸ்காரம்; ஞான மென்பது தேவதையின் தியானமுதலியன; கர்ம மென்பது புண்ணியபாவம்; இம்மூன்று நிமித்தங்களாலும் பரமாத்மா ஜடசேதனமாகிய ஜகத்திற்குக் காரணமாகின்றன ரென்பது பொருள். (௧அ௮)

[௬அ௩] इति वार्तिककारेण जडचेतनहेतुता ।
परमात्मन एवोक्ता नेश्वरस्येति चेच्छृणु ॥ १८९ ॥

(அ-கை.)

இதுவுமது :—

इति वार्तिककारेण जडचेतनहेतुता परमात्मनः एव उक्ता । ईश्वरस्य न ॥

(சு-ம்.)

இப்படி வார்த்திககாரரால் ஜடசேதனங்களுக்குக் காரணமாந்தன்மை பரமாத்மாவிற்கே சொல்லப்பட்டிருக்கின்றது; ஈசுவரனுக் கன்று.

(அ-கை.)

இப்போது சமாதானஞ்செய்ய விரும்பிய சித்தாந்தி வாதியை அபிமுக மாக்கிச் சமாதானஞ் செய்கின்றார்:—

इति चेत्शृणु ।

(சு-ம்.)

வாதியே! நீ இவ்வாறு சொல்லுவாயாயின் கேள். (கஅகூ)

உ. வார்த்திககாரர் ஈசுவரனுக்கும் பிரஹ்மத்திற்கும் அத்தியாசத்தைச் செய்து பரமாத்மாவைக் காரணமென்று கூறியிருக்கின்றாரென்று சுலோகம் சஅஉ-சஅகூ-ல் கூறிய சங்கையின் சமாதானம்.

[சஅச] अन्योऽन्याध्यासमत्रापि जीवकूटस्थयोरिव ।
ईश्वरब्रह्मणोः सिद्धं कृत्वा ब्रूते सुरेश्वरः ॥ १९० ॥

(அ-கை.)

"துவம்" பதார்த்தம் போலத் "தத்" பதார்த்தத்திலும் அதிஷ்டான ஆரோபங்களின் அந்நியயோந்நியாத்தியாசத்தைச் சொல்லக் கருதியபடியால் பரமாத்மாவே ஜகத்காரணராவரென்று சொல்லுதல் பொருந்தாதென்று சித்தாந்தி பரிகரிக்கின்றார்:—

अत्र अपि जीवकूटस्थयोः इव ईश्वरब्रह्मणोः अन्योऽन्याध्यासं सिद्धं कृत्वा सुरेश्वरः ब्रूते ॥

(சு-ம்.)

இங்கும் தத்பதார்த்தத்தில் ஜீவகூடஸ்தர்களைப்போல மாயாவியான ஈசுவரனுக்கும் பிரஹ்மத்திற்கும் அந்நியோந்நியாத்தியாசம் சித்தித்ததாகச் செய்து சுரேசுவராசாரியர் பரமாத்மாவிற்கு ஜகத்காரணத்தன்மையைச் சொல்லுகின்றனர். (ககூ0)

ங. சுலோகம் சஅச-ல் கூறிய அர்த்தத்தை யநுசரித்த சுருதிப்பிரமாணம்.

[சஅரு] सत्यं ज्ञानमनंतं यद्ब्रह्म तस्मात्समुत्थिताः ।
खं वाय्वग्निजलोर्व्योषध्यन्नदेहा इति श्रुतिः ॥ १९१ ॥

(அ-கை.)

அப்படியானால் சுரேசுவராசாரியர் ஈசுவரப்பிரஹ்மங்களின் அத்தியாசத்தைச் சித்தித்திருப்பதுபோலச் செய்துகொண்டு வியவகரித்திருக்கின்றார் அதாவது பரப்பிரஹ்மத்திற்கு ஜகத்காரணத்துவம் கூறியிருக்கின்றனரென்பது எதனாலறியப்படுகின்றதென்றுசங்கித்துச் சுருதியர்த்தத்தின் விசாரவசத்தால் அறியப்படுகின்றதென்பதைக் காட்டும்பொருட்டுச் சுருதியின் அர்த்தத்தைச் சொல்லுகின்றார்:—

सत्यं ज्ञानं अनंतं यत् ब्रह्म तस्मात् खं वाय्वग्निजलोर्व्योषध्यन्नदेहाः समुत्थिताः इति श्रुतिः ॥

(சு-ம்.)

சத்தியமும் ஞானமும் அநந்தமுமாகிய பிரஹ்மமெதுவோ அதிலிருந்தும் ஆகாயம், வாயு, அக்கினி, ஜலம், பிருதிவி, ஓஷதி, அந்நம், தேகமுதலியவைகளும் உண்டாயின வென்பது அர்த்தவடிவ சுருதியாம். (கககக)

௪. சுலோகம் ௪அ௪-ல் கூறிய அந்நியோந்நியாத்தியாசம் சுலோகம் ௪அ௩-ல் கூறிய சுருதியினால் சித்தித்தல்.

[௪அ௬] आपातदृष्टितस्तत्र ब्रह्मणो भाति हेतुता ।
हेतोश्च सत्यता तस्मादन्योऽन्याध्यास इष्यते ॥ १९२ ॥

(அ-கை.)

அப்படியானால் இந்தச் சுருதி இருக்கட்டும். இதனால் அந்நியோந்நியாசத்தின் ஞானம் எப்படி யுண்டாகுமெனக் கூறுகின்றார்:—

तत्र आपातदृष्टितः ब्रह्मणः हेतुता भाति । च हेतोः सत्यता । तस्मात् अन्योऽन्याध्यासः इष्यते ॥

(சு-ம்.)

அந்தச் சுருதியில் விசாரமின்றிய பார்வையால் பிரஹ்மத்திற்குக் காரணத்துவம் தோற்றுகின்றது. காரணமாகிய ஈசுவரனது சத்தியத்தன்மையும் தோற்றுகின்றது. அதனால் அந்நியோந்நியாத்தியாசம் அங்கீகரிக்கப்படுகின்றது.

(வி-ம்.)

அந்தச் சுலோகம் ௪அ௩-ல் கூறிய சுருதியில் சத்தியமுதலிய இலக்ஷணமுள்ள பிரஹ்மத்திற்கு ஜகத்காரணத்துவமும், ஜகத்திற்குக் காரணமாகிய

மாயையை அதீனஞ்செய்யும் சிதாபாசனுக்குச் சத்தியத்தன்மையும் விசாரமில்லாமையால் தோற்றுகின்றன. அது அந்நியோந்நியாத்தியாசமின்றிப் பொருந்தாது. அதனால் அந்நியோந்நியாத்தியாசம் அங்கீகரிக்கப்படுகின்றதென்பது தாற்பரியம் (௧௯௨)

௫. பசைப்படத்தின் திருஷ்டாந்தத்தால் சுலோகம் ௪௮௬-ல் கூறிய அர்த்தத்தின் திடத்தன்மை.

[௪௮௭] अन्योऽन्याध्यासरूपोऽसावन्नलिप्तपटो यथा ।
घट्टितेनैकतामेति तद्वद्भ्रांत्यैकतां मृतः ॥ १९३ ॥

(அ-கை.)

இப்படி அந்நியோந்நியாத்தியாசத்தால் சித்தித்த ஈசுவரப்பிரஹ்ம ஐக்கியத்தை முன் சுலோகம் ௨௯௫-ல் ௨௯௮-ல் உதாரணமாகக் கூறிய பசைப்பட திருஷ்டாந்தத்தை யிணைப்பூட்டுதலால் திடமாக்குகின்றார் :—

यथा अन्नलिप्तपटः घट्टितेन एकेतां एति । तद्वत् असौ अन्योऽयाध्यासरूपः भ्रांत्या एकतां गतः ॥

(சு-ம்.)

எப்படிக் கஞ்சிபூசியபடம் பசைத்தன்மையாகியதர்மவிசிஷ்ட படத்தோடு ஐக்கியத்தை அடைகின்றதோ, அதுபோல இந்த அந்நியோந்நியாத்தியாசத்தின் வடிவம் பிராந்தியினால் ஐக்கியத்தை அடைந்திருக்கின்றது. ()

௬. சுலோகம் ௪௮௬-ல் கூறிய அர்த்தத்தில் வேறு திருஷ்டாந்தம்.

[௪௮௮] मेधाकाशमहाकाशौ विविच्येते न पामरैः ।
तद्वद्ब्रह्मेशयोरैक्यं पश्यंत्यापातदर्शिनः ॥ १९४ ॥

(அ-கை.)

பிராந்தியினால் பிரஹ்மத்திற்கு ஈசுவரனோடு ஐக்கியத்தை அடைவதில் திருஷ்டாந்தமாகிய பசைப்படத்தைக்கூறி, விசாரதிருஷ்டியில்லாத புருஷர்களுக்குப் பிரஹ்மத்திற்கும் ஈசுவரனுக்கும் பேதந்தோற்றாமையால் முன் சுலோகம் ௩௧௪-ல் கூறிய வேறு திருஷ்டாந்தத்தினையே காட்டுகின்றார்:—

पामरैः मेघाकाशमहाकाशौ न विविच्येते । तद्वत् आपातदर्शिनः ब्रह्मेशयोः एक्यं पश्यंति ॥

(சு-ம்.)

எப்படிப் பாமரபுருஷர்களால் மேகாகாயமகாகாயங்களிரண்டும் விவேகிக்கப்படவில்லையோ அதுபோல ரதிருஷ்டியில்லாதவர்கள்

பிரஹ்மஈசுவரர்களின் ஐக்கியத்தைக் காண்கின்றார்கள்; பேதத்தைக் காண்கிறதில்லை என்பது பொருள். (௧௯௪)

எ. உபக்கிரமாதி ஆறுலிங்கங்களால் ஈசுவரப்பிரஹ்மங்களின் பேதஞானம்.

[௯அ௧] उपक्रमादिभिर्लिंगैस्तात्पर्यस्य विचारणात् ।
असंगं ब्रह्म मायावी सृजत्येष महेश्वरः ॥ १९५ ॥

(அ-கை.)

அப்போது பிரஹ்ம ஈசுவரர்களின் பேதஞானம் எதனாலுண்டாகின்றதெனக் கூறுகின்றார்:—

उपक्रमादिभिः लिंगैः तात्पर्यस्य विचारणात् ब्रह्म असंगं मायावी एषः महेश्वरः सृजति ॥

(சு-ம்.)

உபக்கிரமமுதலிய இலிங்கங்களால் தாற்பரியத்தை விசாரித்தலால் பிரஹ்மம் அசங்கமாம். மாயாப்பிரதிபிம்பனாகிய இந்த மகேசுவரன் சிருஷ்டிக்கின்றார்.

(வி-ம்.)

"உபக்கிரமோபசங்காரம், அப்பியாசம், அபூர்வதை, பலம், அர்த்தவாதம், உபபத்தி என்று தாற்பரிய நிச்சயத்தில் அறுவகை * ௯௦. இலிங்கங்க ளிருக்கின்றன" என்றிப்படிச் சொல்லப்பட்ட அறுவகை இலிங்கங்களால் சுருதிதாற்பரியம் நிச்சயமாகவே பிரஹ்மம் அசங்கம் மாயாப்பிரதிபிம்பராகிய ஈசுவரன் ஜகத்கர்த்தா வென்றறியப்படுகின்றது. (௧௯௫)

அ. பிரஹ்மத்தின் அசங்கத்தன்மையை விளக்குதல்.

[௯௯௦] सत्यं ज्ञानमनंतं चेत्युपक्रम्योपसंहृतं ।
यतो वाचो निवर्तंत इत्यसंगत्वनिर्णयः ॥ १९६ ॥

(அ-கை.)

சுருதியில் உபக்கிரமோபசங்காரங்களின் ஐக்கியத்தைக் காட்டுதலாற் சொல்லப்பட்டப் பிரஹ்மத்தின் அசங்கத்தன்மையை விளக்குகின்றார்:—

सत्यं ज्ञानं च अनंतं इति उपक्रम्य यतः वाचः निवर्तंते इति उपसंहृतं इति असंगत्वनिर्णयः ॥

---

* ௯௦. தாற்பரியத்தை நிச்சயிக்கும் ஆறுலிங்கங்களின் அர்த்தத்தை ௯அ௫-வது சுலோகத்தின் டிப்பணத்திற் காண்க.

(சு-ம்.)

"சத்தியஞானாநந்தம் பிரஹ்மம்" என்று உபக்கிரமஞ்செய்து (ஆரம்பித்து), "எந்தப் பிரஹ்மத்தினின்றும் வாக்குகள் நீங்குகின்றனவோ" என்று உபசங்கரிக்கப்பட்டிருக்கின்றது. (அதனால் பிரஹ்மத்தின் அசங்கத்துவநிச்சய முண்டாகின்றது.) (௧௯௬)

௧. ஈசுவரன் சிருஷ்டிகர்த்தாவாதலைப் பிரதிபாதிக்கும் இரண்டு சுருதிகள்.

[௪௯௧] मायी सृजति विश्वं सन्निरुद्धस्तत्र मायया ।
अन्य इत्यपरा ब्रूते श्रुतिस्तेनेश्वरः सृजेत् ॥ १९७ ॥

(அ-கை.)

மாயாவியாகிய ஈசுவரன் சிருஷ்டிகர்த்தாவாகுந் தன்மையைப் பிரதிபாதிக்கும் சுருதியை அர்த்தத்தாற் காட்டுகின்றார்:—

मायी विश्वं सृजति । तत्र अन्यः मायया सन्निरुद्धः इति अपरा श्रुतिः ब्रूते । तेन ईश्वरः सृजेत् ॥

(சு-ம்.)

மாயாப்பிரதிபிம்பர் ஜகத்தைச் சிருஷ்டிக்கின்றார். அந்த விசுவத்தில் அந்நியமாகிய ஜீவன் மாயையினால் செவ்வையாகக் கட்டுப்பட்டவனென்று சுலோகம் ௪௮௫-௪௯௦-ல் கூறிய சுருதிக்கு வேறாகிய சுருதி கூறுகின்றது. அந்தக்காரணத்தால் ஈசுவரன் சிருஷ்டிக்கின்றார்.

(வி-ம்.)

"अस्मान्मायी सृजते विश्वं एतत्तस्मिंश्च अन्यो मायया सन्निरुद्धः இக்காரணத்தால் மாயியான ஈசுவரன் இந்த ஜகத்தைச் சிருஷ்டிக்கின்றான். இதில் அந்நியமாகிய ஜீவன் மாயையினால் செவ்வையாகக் கட்டப்பட்டிருக்கிறான்." என்னும் சுருதி ஈசுவரனது ஜகத்கர்த்திருத்துவத்தையும், அச்சகத்தில் ஜீவனது பந்தத்தன்மையும் காட்டுகின்றதென்பது பொருள். (௧௯௭)

௫. ஈசுவரனால் ஜகத்து உற்பத்தியாகுந்தன்மை ௪௯௨-௪௯௯.
௧. ஈக்ஷண (ஆலோசனை) பூர்வகமான இரணியகர்ப்பன் உற்பத்தி.

[௪௯௨] आनंदमय ईशोऽयं बहु स्यामित्यवैक्षत ।
हिरण्यगर्भरूपोऽभूत्सुप्तिः स्वप्नो यथा भवेत् ॥ १९८ ॥

(அ-கை.)

இப்படி ஆநந்தமயகோசமாகிய ஈசுவரன் ஜகத்திற்குக் காரணமாவனென்பதைப் பிரதிபாதித்து, அந்த ஈசுவரனிலிருந்து ஜகத்துண்டாகுந் தன்மையைக் கூறுகின்றார்:—

अयं आनंदमयः ईशः बहु स्यां इति अवैक्षत । हिरण्यगर्भरूपः अभूत् ॥

(சு-ம்.)

இந்த ஆநந்தமயனுகிய ஈசுவரன் "நான் அநேகமாவேன்" என்று ஞானதிருஷ்டியாகிய ஈக்ஷணத்தைச் செய்தார். அவர் இரணியகருப்பவடிவமானர்.

(வி-ம்.)

ஈசுவரன் பரியாலோசனை செய்து சமஷ்டிசூக்ஷ்மப்பிரபஞ்சமாகிய இரணியகர்ப்பவடிவமானரென்பது அந்வயம்.

(அ-கை.)

அவ்வீசுவரன் இரணியகர்ப்பவடிவ மாவதில் திருஷ்டாந்தத்தைக் கூறுகின்றூர்:—

यथा सुप्तिः स्वप्नः भवेत् ॥

(சு-ம்.)

எப்படிச் சுழுத்தியானது சொப்பனவடிவ மாகின்றதோ அதுபோல.()

உ. சுருதியுக்திகளால் கிரமமும் கிரமமின்மையுமாகிய இருவகையினுலும் சிருஷ்டியைக் கூறுதல்.

[௧௯௯] क्रमेण युगपद्वैषा सृष्टिर्ज्ञेया यथाश्रुति ।
द्विविधश्रुतिसद्भावाद्विविधस्वप्नदर्शनात् ॥ १९९ ॥

(அ-கை.)

"तस्माद्वा एतस्मादात्मन आकाशः संभूतः அந்த மந்திரபாகத்திற் கூறிய அல்லது இந்தப் பிராஹ்மணபாகத்திற் கூறிய ஆத்மாவினின்றும் ஆகாச முண்டாயிற்று" என்னுஞ் சுருதியில் கிரமமாகச் சிருஷ்டி கேட்கப்பட்டிருத்தலாலும், "इदं सर्वमसृजत இந்தச் சர்வஜகத்தையும் சிருஷ்டித்தார்" என்று ஒரு காலத்திலேயே சிருஷ்டி கேட்கப்பட்டிருத்தலாலு சுருதியிற் கூறிய கிரமாக்கிரமவடிவ இரண்டுபக்ஷங்களில் எது கொள்ளத்தக்கதாம் எது தள்ளத்தக்கதாம் என்று கேட்குமிடத்து, இரண்டுபக்ஷங்களும் சுருதியுக்திகளோடு கூடியிருத்தலால் அதிகாரிபேதத்தாற் கொள்ளத்தக்கவைகளா மென்று கூறுகின்றூர்:—

एषा सृष्टिः द्विविधश्रुतिसद्भावात् क्रमेण युगपत् वा यथाश्रुति ज्ञेया ॥

(௬-ம்.)

இந்தச் சிருஷ்டியானது கிரமம் அக்கிரம மென்னும் இரண்டுவகைச் சிருஷ்டிகளைப் பிரதிபாதிக்குஞ் சுருதியிருத்தலால் கிரமமாகவாவது ஒரே காலத்திலாவது சுருதியிற் கூறியபடி அறியத்தக்கதாம்.

(வி-ம்.)

இந்த ஜகத்தின் * ௬௧. சிருஷ்டியானது இரண்டுவிதமாகிய சிருஷ்டியைக் கூறும் சுருதி இருத்தலால் கிரமமாகவாவது ஒரே காலத்திலாவது சுருதியிற் கூறியபடி அறியத்தக்கதா மென்பது சுலோகத்தின் அந்வயம்.

---

* ௬௧. இங்கே கிரமசிருஷ்டி யென்னும் சத்தத்தால் சிருஷ்டிதிருஷ்டிவாதம் (வியாவகாரிகபக்ஷம்) சொல்லப்படுகின்றது. அக்கிரமசிருஷ்டி யென்னும் சொல்லால் திருஷ்டிசிருஷ்டிவாதம் சொல்லப்படுகின்றது.

(க) சில நூலாசிரியர் ஸ்தூலபுத்தியுடைய புருஷர்கள் அறிதற்பொருட்டுச் சிருஷ்டிதிருஷ்டிவாதம் சொல்லியிருக்கிறார்கள். முதலில் சிருஷ்டி இருக்கின்றது; பின் பிரத்தியக்ஷமுதலிய பிரமாணங்களின் சம்பந்தத்தால் திருஷ்டி (ஞானம்) உண்டாகின்றது என்பது சிருஷ்டிதிருஷ்டி யென்னும் சத்தத்திற்கு அர்த்தமாம். இந்தப் பக்ஷத்தில் கடமுதலிய அநாத்மவஸ்துக்களுக்குச் சேதனத்தைப்போல அஞ்ஞாதசத்தையாம். சுத்திரஜதமுதலியவற்றிற்கு ஞாதசத்தையாம். கடமுதலிய அநாத்மபதார்த்தங்கள் வியாவகாரிகசத்தையுடையனவாம். சுத்திவெள்ளி முதலியவைகள் பிராதிபாஸிக சத்தையுடையனவாம். கடமுதலிய அநாத்ம பதார்த்தங்கள் பிரமாணத்திற்கு விஷயமாம். ஆகையால் குருசாஸ்திரமுதலியனவும் வியாவகாரிகமாம்.

(உ) திருஷ்டிசிருஷ்டிபக்ஷத்தில் சகல அநாத்மபதார்த்தங்களுக்கும் ஞாதசத்தையேயாம். சுத்திரஜதமுதலியவற்றைப்போலச் சகல அநாத்மபதார்த்தங்களும் பிராதிபாஸிக மாயிருத்தலால் சாக்ஷிபாஸியமாம்; பிரமாணத்திற்கு விஷயமன்று. அவற்றுள், பிரமாணத்திற்கு விஷயமாவதாகத் தோற்றுதல் பிராந்திவடிவமேயாம். பதார்த்தங்களைக் காணுதலே உற்பத்தியும், காணாமையே நாசமுமாம். "அவன் இத்தேவதத்தன்" முதலிய பிரத்தியபிஞ்ஞையும் நதி தீபஜோதி இவற்றின் பிரவாகம் போலும் சொப்பனபதார்த்தங்களின் பிரத்தியபிஞ்ஞையைப்போலும் பிராந்திவடிவமாம். குருசாஸ்திரமுதலியவைகளும் பிராதிபாஸிகமாம். இந்தத் திருஷ்டிசிருஷ்டி பக்ஷத்தில் இரண்டுபேதமுண்டு.

[க] திருஷ்டியே (ஞானசொரூபமே) சிருஷ்டியாம். ஞானத்திற்கு வேறாக சிருஷ்டி யில்லை. இது சித்தாந்தமுக்தாவலிமுதலிய கிரந்தங்களில் எழுதப்பட்டிருக்கின்றது.

[உ] திருஷ்டியின் (ஞானத்தின்) சமயத்திலேயே சிருஷ்டி உண்டாகின்றது. ஞானத்திற்கு முன் அநாத்மவஸ்துக்க ளில்லை. இப்படி ஆகரகிரந்தங்களில் பிரதிபாதிக்கப்பட்டிருக்கின்றது. இது அத்வைதசாஸ்திரங்களிலும் சம்மதமாம். இவ்வாறு சிருஷ்டிதிருஷ்டிவாதம் திருஷ்டிசிருஷ்டிவாதம் என்னு மிரண்டும் சுருதியநுமான

(அ-கை.)

அவ்விருவகைச் சிருஷ்டியில் யுக்தியைக் கூறுகின்றார்:—

द्विविधस्वप्नदर्शनात् ॥

(சு-ம்.)

இருவகைச் சொப்பனதிருஷ்டாந்தமாகிய யுக்தியைக் காணுதலால்.

(வி-ம்.)

உலகத்தில் கிரமமுள்ளதும் கிரமமில்லாததுமாகிய சொப்பனபதார்த்தங்களின் சமுகத்தைக் காணுதலால் இரண்டுவிதமாகிய சிருஷ்டியும் சம்பவிக்கும் என்பது தாற்பரியம். (கககக)

ரு. இரணியகர்ப்பசொரூபம்.

[சககச] सूत्रात्मा सूक्ष्मदेहाख्यः सर्वजीवघनात्मकः ।
सर्वाहंमानधारित्वात्क्रियाज्ञानादिशक्तिमान् ॥ २०० ॥

(அ-கை.)

இரணியகர்ப்பனது சொரூபத்தை நிரூபிக்கின்றார்:—

सूत्रात्मा सूक्ष्मदेहाख्यः सर्वजीवघनात्मकः ॥

(சு-ம்.)

சூத்திராத்மாவானவர் சூக்ஷ்மதேக மென்னும் பெயருடையவராயும், சர்வஜீவர்களின் சமஷ்டிவடிவமாயு மிருக்கின்றார்.

(வி-ம்.)

படத்தில் சூத்திரத்தைப்போல ஜகத்தில் அநுசூதமாயிருக்கும் ஆத்மாவை(சொரூபத்தை)யுடைய இரணியகர்ப்பர் சூக்ஷ்மதேக மென்னும் பெயருடையவரா யிருக்கின்றார். இன்னும் அவ ரெப்படி யிருக்கின்றாரெ

மாகப் பிரதிபாதிக்கப்பட்டிருக்கின்றன. அவற்றில் வியாவகாரிக பொன்முதலிய பதார்த்தங்களினின்றும் குண்டலமுதலிய காரியங்கள் சித்திக்கின்றன; பிராதிபாசிகங்களினின்றும் உண்டாகிறதில்லை என்றாலும் அதிஷ்டானஞானத்தால் பாதமும், சத்தசத்திற்கு விலக்ஷணத்துவ(பாதயோக்கியத்துவ)மாகிய அநிர்வசனீயத்தன்மையும் தனது அதிஷ்டானத்தில் பாரமார்த்திக அபாவமுடைமையும் வியாவகாரிக பிராதிபாசிகங்களி லிரண்டிலும் சமமாம். ஆதலால் வியாவகாரிகபக்ஷத்தை ஒப்புதலாலும் தோஷமில்லை. இப்படி அதிகாரிபேதத்தால் இரண்டுபக்ஷங்களும் சுருதியிலும் அத்வைதகிரந்தங்களிலும் கொள்ளப்பட்டிருக்கின்றன.

வின், இலிங்கசரீரத்தை யுபாதியாகவுடைய சகல ஜீவர்களின் சமஷ்டி வடிவமா யிருக்கின்றார்.

(அ-கை.)

அந்த இரணியகர்ப்பரது சமஷ்டிவடிவத்தன்மையில் ஏதுவைக் கூறுகின்றார்:—

सर्वाहंमानधारित्वात् ॥

(சு-ம்.)

எல்லாவற்றிலும் நானென்னு மபிமான மிருத்தலால்.

(வி-ம்.)

சகல வியஷ்டிலிங்கசரீரங்களிலும் நானென்னு மபிமானமுடையவரா யிருத்தலால் இவ்விரணியகர்ப்பர் சகல ஜீவர்களின் சமஷ்டிவடிவமாவ ரென்பது தாற்பரியம்.

(அ-கை.)

இன்னு மவர் எப்படி இருக்கின்றார் ?

क्रियाज्ञानादिशक्तिमान् ॥

(சு-ம்.)

கிரியை ஞானமுதலிய சக்திகளையுடையவரா யிருக்கின்றார்.

(வி-ம்.)

இச்சாசக்தி கிரியாசக்தி ஞானசக்திகளையுடையவரா யிருக்கின்றார்.

௨. இரணியகர்ப்பாவஸ்தையில் பிரபஞ்சம் தோற்றுதலில் திருஷ்டாந்தம்.

[௨௧௫] प्रत्यूषे वा प्रदोषे वा मग्नो मंदे तमस्ययम् ।
लोको भाति यथा तद्वदस्पष्टं जगदीक्ष्यते ॥ २०१ ॥

(அ-கை.)

இரணியகர்ப்பாவஸ்தையில் ஜகத்துத் தோற்றுவதில் திருஷ்டாந்தத்தைக் கூறுகின்றார்:—

यथा वा प्रत्यूषे वा प्रदोषे अयं लोकः मंदे तमसि मग्नः भाति तद्वत् अस्पष्टं जगत् ईक्ष्यते ॥

(சு-ம்.)

எப்படிப் பிராதக்காலத்திலாவது சாயங்காலத்திலாவது இந்த உலகம் மந்தமாகிய இருளில் மூழ்கியதாய்த் தோற்றுகின்றதோ, அதுபோல இர

ணிய கர்ப்பாவஸ்தையில் விளக்கமில்லாததாய் ஜகத்தானது காணப்படு கின்றது. (௨0௧)

[௬௬௬] सर्वतो लांच्छितो मष्या यथा स्याद्घट्टितः पटः ।
सूक्ष्माकारैस्तथेशस्य वपुः सर्वत्रलांछितम् ॥ २०२ ॥

(அ-கை.)

இப்படி உலகப்பிரசித்தமாகிய திருஷ்டாந்தத்தைச் சொல்லி "வெளுத்தபடம் கஞ்சிபூசியபடம் அச்சுக்கட்டியபடம் வருணந்தீர்ந்தபடம் என்பவைகளைப்போல" என்று முன் சுலோகம் ௨௬௬-ல் கூறிய அச்சுக்கட்டிய படத்தின் திருஷ்டாந்தத்தைக் கூறுகின்றனர்:—

यथा घट्टितः पटः सर्वतः मष्या लांछितः स्यात् । तथा ईशस्य वपुः सूक्ष्माकारैः सर्वत्र लांछितम् ॥

(சு-ம்.)

எப்படிப் பசைப்படம் எங்கும் மையினால் அச்சுக்கட்டியதாகின்றதோ, அதுபோல ஈசுவரனது சரீரம் சூக்ஷ்மவடிவங்களால் எங்கும் அச்சுக் கட்டியதாகின்றது.

(வி-ம்.)

பசைப்படம் மைவடிவ உருவங்களால் அச்சுக்கட்டியதாவதுபோல மாயாவியாகிய ஈசுவரனது சரீரம் அபஞ்சிகிருதபூதங்களின் காரியமாகிய இலிங்கசரீரங்களால் அச்சுக்கட்டிய தாகின்றது என்பது பொருள். (௨0௨)

[௬௬௭] सस्यं वा शाकजातं वा सर्वतोंकुरितं यथा ।
कोमलं तद्वदेवैष पेलवो जगदंकुरः ॥ २०३ ॥

(அ-கை.)

சிஷ்யனது புத்தியில் பதியும்பொருட்டு வைபவத்தால் (தனது பெருமையால்) வேறு திருஷ்டாந்தத்தைக் கூறுகின்றார்:—

यथा वा सस्यं वा शाकजातं सर्वतः कोमलं अंकुरितं । तद्वत् एव एषः पेलवः जगदंकुरः ॥

(சு-ம்.)

எப்படித் தானியங்களாவது சாகக்கூட்டங்களாவது எங்கும் மிருதுவாகிய முளைகளாகின்றனவோ, அப்படியே இவ்விரணியகர்ப்பர் மிருதுவாகிய ஜகத்தின் முளையாவர். (௨0௩)

ரு. மூன்று திருஷ்டாந்தங்களால் விராட்டைக் கூறுதல்.

[௪௬௮] आतपाभातलोको वा पटो वा वर्णपूरितः ।
सस्यं वा फलितं यद्वत्तथा स्पष्टवपुर्विराट् ॥ २०४ ॥

(அ-கை.)

இப்படிச் சூத்திராத்மாவின் சொரூபத்தைக் கூறி அதே சூத்திராத்மாவின் அவஸ்தாவிசேஷமாகும் பஞ்சீகிருதபூதங்களின் காரியமாகிய உபாதியுடைய விராட்டை மூன்று திருஷ்டாந்தங்களால் விளக்குகின்றார்:—

यद्वत् वा आतपाभातलोकः वा वर्णपूरितः पटः वा फलितं सस्यं तथा स्पष्टवपुः विराट् ॥

(சு-ம்.)

ஆதபாபாதலோகமான வெயிலாற்றோற்றும் உலகத்தைப் போலவாவது, வர்ணந்தீர்ந்த படத்தைப்போலவாவது, பலத்தை யடைந்த தானியத்தைப்போலவாவது விராட்டானது வெளிப்படையாகிய சரீரமுடையதாயிருக்கின்றது.

(வி-ம்.)

சூரியோதயமானபின் ஆதபமாகிய வெயிலால் பிரகாசிக்கப்படுகின்ற உலகம் எதுவோ அது ஆதபாலோக மெனப்படும். (உ0௪)

[௪௬௯] विश्वरूपाध्याय एष उक्तः सूक्तेऽपि पौरुषे ।
धात्रादिस्तंबपर्यंतानेतस्यावयवान्विदुः ॥ २०५ ॥

(அ-கை.)

இவ்விராட்டு உண்டென்றதில் பிரமாணத்தைக் கூறுகின்றார்:—

विश्वरूपाध्याये पौरुषे सूक्ते अपि एषः उक्तः ॥

* ௬௨. விசுவரூப அத்தியாயத்திலும் * ௬௩. புருஷசூக்தத்திலும் இந்த விராட்டு சொல்லப்பட்டிருக்கின்றது.

---

* ௬௨. எஜுர்வேதத்தின் சங்கிதையினது இரண்டாவது அஷ்டகத்தின் ஐந்தாவது அத்தியாயம் விசுவரூபாத்தியாயமாம்.

* ௬௩. எஜுர்வேதத்தினது தைத்திரீயசாகையின் தசோபநிஷத்தென்னும் பெயருடைய அரணத்தின் சித்தி என்னும் பெயருடைய மூன்றாவது உபநிஷத்தின் பிரகரணவிசேஷம் புருஷசூக்தமாம்.

(அ-கை.)

அப்படியானால் விசுவரூபஅத்தியாயமுதலியவற்றில் விராட்டின் வடிவம் எப்படிச் சொல்லப்பட்டிருக்கின்றது என்று கேட்குமிடத்துப் பிரஹ்மா முதல் ஸ்தம்பபரியந்தமுள்ளதாகிய சகல ஜகத்தையும் விராட்டின் வடிவமாகச் சொல்லியிருக்கின்றதென்று கூறுகின்றார்:—

धात्रादिस्तंबपर्यंतान् एतस्य अवयवान् विदुः ॥

(சு-ம்.)

பிரஹ்மாமுதல் ஸ்தம்பபரியந்தமா யுள்ளவற்றை இவ்விராட்டின் அவயவங்களாக வேதவித்துக்கள் அறிகின்றனர். (உ0௬)

சு. எல்லாவடிவமுமாக ஈசுவரனை உபாசித்தலின் பலன் ரு00-ரு0௩.

க. அந்தரியாமிமுதல் குந்தாலிமுதலியனபரியந்தமானவை ஈசுவரத்தன்மையாகப் பூசிக்கப்படுதலும், அவற்றிற்குப் பயனுண் டென்பதிற் பிரமாணமும்.

[ரு00] ईशसूत्रविराड्वेधोविष्णुरुद्रेंद्रवह्नयः ।
विघ्नभैरवमैरालमारिका यक्षराक्षसाः ॥ २०६ ॥

(அ-கை.)

இவ்வளவினால் அதாவது சகசு-வது முதல் ரு0௩-வது பரியந்த சுலோகங்களால் பிரகிருதத்தில் அதாவது சகல மதங்களுக்கும் விரோதமில்லாத ஈசுவர சொரூபத்தில் என்ன கிடைத்ததென் றுசங்கித்து, அந்தரியாமிமுதல் குந்தாலமுதலியவைவரையிலுள்ள வஸ்துக்கள்மாத்திரம் ஒவ்வொன்றும் ஈசுவரத்தன்மையாக பூசிக்கத்தக்கனவாம் என்று மூன்றுசுலோகங்களால் கூறுகின்றார்:—

ईशसूत्रविराड्वेधो विष्णुरुद्रेंद्रवह्नयः । विघ्नभैरवमैरालमारिकाः यक्षराक्षसाः ॥

(சு-ம்.)

அந்தரியாமி, சூத்திராத்மா, விராட்டு, பிரஹ்மா, விஷ்ணு, ருத்திரன், இந்திரன், அக்கினி என்பவர்களும், விக்கினேசுரன், பைரவர், மைராலர் மாரியம்மன், யக்ஷர், ராக்ஷதர் என்பவர்களும். (உ0௬)

[ரு0க] विप्रक्षत्रियविट्शूद्रा गवाश्वमृगपक्षिणः ।
अश्वत्थवटचूताद्या यवव्रीहितृणादयः ॥ २०७ ॥

(அ-கை.)

இதுவுமது:—

विप्रक्षत्रियविट्शूद्राः गवाश्वमृगपक्षिणः । अश्वत्थवटचूताद्याः यवव्रीहि-तृणादयः ॥

(சு-ம்.)

*பிரஹ்ம க்ஷத்திரிய வைசிய சூத்திரர்களும், பசு குதிரை மான் பக்ஷி என்பவைகளும், அரசு ஆல் மாமுதலியவைகளும், வாற்கோதுமை நெல் புல் முதலியவைகளும்.* (உ0எ)

[௨0௨] जलपाषाणमृत्काष्ठवास्याकुद्दालकादयः ।
ईश्वराः सर्व एवैते पूजिताः फलदायिनः ॥ २०८ ॥

(அ-கை.)

*இதுவுமது:—*

जलपाषाणमृत्काष्ठवास्याकुद्दालकादयः । ऐते सर्वे एव ईश्वराः पूजिताः फल-दायिनः ॥

(சு-ம்.)

*நீர், கல், கட்டை, வாச்சி, குந்தாலமுதலியவைகளுமாகிய இவையாவுமே ஈசுவரர்களாம். பூசிக்கப்பட்டுப் பலத்தைத் தருபவைகளாயு மிருக்கின்றன.* (உ0அ)

உ. *சுலோகம் ௨00-௨0௨-ல் கூறிய அர்த்தத்தில் சுருதியும் பயனும் மாறுபடுதலின் சங்கை சமாதானம்.*

[௨0௩] यथा यथोपासते तं फलमीयुस्तथा तथा ।
फलोत्कर्षापकर्षौ तु पूज्यपूजानुसारतः ॥ २०९ ॥

(அ-கை.)

"तं यथा यथोपासते तदेव भवति--*அந்த ஈசுவரனை எப்படி யெப்படி யுபாசிக்கின்றார்களோ அப்படியப்படியே பலம் உண்டாகின்றது" என்னுஞ் சுருதி அந்தந்த ஈசுவரபூஜையால் அந்தந்தப் பலமுண்டா மென்பதில் பிரமாணமா மென்று கூறுகின்றார்:—*

तं यथा यथा उपासते तथा तथा फलं ईयुः ॥

(சு-ம்.)

*அவரை எப்படி எப்படி உபாசிக்கின்றார்களோ அப்படி அப்படி பலத்தை அடைகின்றார்கள்.*

(அ-கை.)

அப்படியானால் சகல பதார்த்தங்களுக்கும் ஈசுவரத்தன்மை யிருக்க, ஏன் பலம் வேறுபடுகின்றது என்றாசங்கித்துப் பூச்சியமான அதாவது பூசிக்கப்படுவனவாகிய அதிஷ்டான தேவதைகள், பூஜனமாகிய அர்ச்சனை முதலியவைகள் என்பனவற்றின் சாத்விகமுதலிய பேதங்களால் பலத்தின் வேற்பா டுண்டாகின்றதென்று கூறுகின்றார்:—

फलोत्कर्षापकर्षौ तु पूज्यपूजानुसारतः ॥

(சு-ம்.)

பலத்தின் உயர்வு தாழ்வுகள் பூச்சியம் பூஜை என்பவற்றினை யநுச ரித்து உண்டாகின்றன. (உ0க)

௬. அத்வைதப்பிரஹ்மஞானத்தில் விசேஷ உபயோகமுள்ள பொருள் ௫0௪-௫௫௨.

க. ஜீவேசுவரவிவாதத்தில் புத்தியின் பிரவேசத்தை நிஷேதித்தல்பூர்வகமாக விவேகித்தலோடு அவற்றின் ஐக்கியம் ௫0௪-௫௩௫.

க. ஞானத்தினாலேயே முக்தி யுண்டாகின்றதென்பதில் சொப்பன்திருஷ்டாந்தம்.

[௫0௪] मुक्तिस्तु ब्रह्मतत्त्वस्य ज्ञानादेव न चान्यथा ।
स्वप्रबोधं विना नैव स्वस्वप्नो हीयते यथा ॥ २१० ॥

(அ-கை.)

இப்படிச் சம்சாரசம்பந்தியாகிய பலம் சித்திக்குக; ஆனால் முக்தி எந்தத் தேவனை உபாசித்தலா லுண்டாகின்றதென்றாசங்கித்து, முக்தி ஞான மின்றி வேறெதனாலு முண்டாகாதென்று கூறுகின்றார்:—

मुक्तिः तु ब्रह्मतत्त्वस्य ज्ञानात् एव । च अन्यथा न ॥

(சு-ம்.)

முக்தியோ பிரஹ்மதத்துவத்தின் ஞானத்தினாலேயே உண்டாகின்றது; வேறுவிதமா யுண்டாகிற தில்லை.

(அ-கை.)

ஞானத்தினாலேயே முக்தியுண்டா மென்பதில் திருஷ்டாந்தத்தைக் கூறுகின்றார்:—

यथा स्वप्रबोधं विना स्वस्वप्नः न एव हीयते ॥

(சு-ம்.)

எப்படித் தனது விழிப்பின்றித் தனது சொப்பனம் நீங்குகிறதில்லையோ அதுபோல.

(வி-ம்.)

தனது விழிப்பின்றித் தனது நித்திரையாற் கற்பிக்கப்பட்ட சொப்பனம் நீங்காததுபோலப் பிரஹ்மதத்துவத்தை அறிதலின்றி அதை யறியாதினாற் கற்பிக்கப்பட்ட தன் ஜன்மாதிவடிவ சம்சாரம் நீங்கா தென்பது தாற்பரியம். (உ௧0)

௨. த்வைதமாகிய ஜகத்துச் சொப்பனத்திற்குச் சமானமாதல்.

[௰0௫] अद्वितीयब्रह्मतत्त्वे स्वप्नोऽयमखिलं जगत् ।
ईशजीवादिरूपेण चेतनाचेतनात्मकम् ॥ २११ ॥

(அ-கை.)

அப்படியானால் த்வைதநிவிருத்தியாகிய மோக்ஷம் தத்துவஞானத்தால் சாதிக்கப்படுமென்று சொப்பனதிருஷ்டாந்தத்தால் சொல்லுதல் பொருந்தாது, நிவிருத்தியாகத்தக்க த்வைதம் சொப்பனத்திற்குச் சமானமாகாமையாலென் றுசங்கித்து, விபரீதமாகக் கொள்ளுதல்வடிவமா யிருத்தலால் ஜாக்கிரத்வைதம் சொப்பனத்திற்குச் சமானமேயாம்; ஏனெனின், "त्रयमेत् सुषुप्तं मायामात्रं ஜாக்கிரசொப்பனசுழுத்திகளாகிய இம்மூன்றும் சுழுத்தியா;ம் சொப்பனம் மாயாமாத்திரமாம்." என்னுஞ் சுருதியால் சொப்பனத்திற்குச் சமானமாகச் சொல்லப்பட்டிருக்கின்றது. ஆகையால் த்வைதம் சொப்பனத்திற்குச் சமானமாகா தென்று சொல்லுதல் பொருந்தா தென்று கூறுகின்றார்:—

ईशजीवादिरूपेण चेतनाचेतमात्मकम् अखिलं जगत् अयं अद्वितीयब्रह्मतत्त्वे स्वप्नः ॥

(சு-ம்.)

ஈசுவரன் ஜீவன்முதலியவடிவமாக விருக்கும் சேதனாசேதனசொரூபமாகிய சசல ஜகத்தும் இந்த அத்விதீயப்பிரஹ்மதத்துவத்தில் சொப்பனமாம். (உ௧௧)

௩. ஈசஜீவர்கள் ஜகத்தி லடங்குதல்.

[௰0௬] आनंदमयविज्ञानमयावीश्वरजीवकौ ।
मायया कल्पितावेतौ ताभ्यां सर्वं प्रकाल्पितम् ॥ २१२ ॥

(அ-கை.)

பிரஹ்மாபின்னமாகிய ஈசுவரஜீவர்கள் அடங்குவர் எனல் எப்படிப் பொருந்துமென் றுசங்கித்து, அவ்வீசுவரஜீவர்களிருவரும் மாயாகற்பிதரா யிருத்தலால் ஜகத்தினுள் அடங்குவ ரென்று கூறுகின்றார்:—

आनंदमयविज्ञानमयौ ईश्वरजीवकौ एतौ मायया कल्पितौ ताभ्यां सर्वं प्रकल्पितम्॥

(சு-ம்.)

ஆநந்தமய விஞ்ஞானமய ரிருவரும் கிரமமாக ஈசுவரனும் ஜீவனு மாவர். இவ்விருவரும் மாயையினால் கற்பிக்கப்பட்டவர்களாவர். அவ்விருவர்களா லும் சகலஜகத்தும் கற்பிக்கப்பட்டிருக்கின்றது. (உகஉ)

௭. விபாகமாக ஜீவேசுவர்களது சிருஷ்டியின் எல்லை.

[௫0௭] ईक्षणादिप्रवेशांता सृष्टिरीशेन कल्पिता ।
जाग्रदादिविमोक्षांतः संसारो जीवकल्पितः ॥ २१३ ॥

(அ-கை.)

"அவ்விருவராலும் சகல ஜகத்தும் கற்பிக்கப்பட்டிருக்கின்றது" என்று ௫0௬-ல் சொல்லப்பட்டிருக்கின்றது. அவர்களுள் யார் எவ்வளவு ஜகத்தைக் கற்பித்திருக்கின்றனர்? என்று கேட்குமிடத்துக் கூறுகின்றார்:-

ईक्षणादिप्रवेशांता सृष्टिः ईशेन कल्पिता । जाग्रदादिविमोक्षांतः संसारः जीवकल्पितः ॥

(சு-ம்.)

பார்வைமுதல் பிரவேசம்வரையிலுள்ள சிருஷ்டி ஈசுவரனால் கற்பிக் கப்பட்டிருக்கின்றது. ஜாக்கிரமுதல் மோக்ஷபரியந்தமாகிய சம்சாரம் ஜீவனாற் கற்பிக்கப்பட்டிருக்கின்றது.

(வி-ம்.)

"स ईक्षत लोकान्नु सृजै அந்தப் பரமேசுவரன். 'நான் உலகங்களை நிச்சய மாகவே சிருஷ்டிப்பேன்' என்று பார்த்தார் அதாவது பரியாலோசனை செய் தார்." என்பதை முதலாக வுடையதும், "एतया द्वारा प्रापद्यत இந்தச் சிரசின் மத்தியிலுள்ள துவாரமாகிய பிரஹ்மரந்திரத்தின் வழியாய் அடைந்தார் அதாவது ஜீவரூபமாகச் சரீரத்தில் பிரவேசித்தார்." என்பதை அந்தமா கவுடையதுமாகிய சுருதியால் பிரதிபாதிக்கப்பட்ட சிருஷ்டி ஈசுவரனால் சிருஷ்டிக்கப்பட்டதாம். "तस्य त्रय आवसथा இந்தச் சிதாபாசனாகிய ஜீவனுக்கு ஜாக்கிர சொப்பன சுழுத்தி யென்னும் மூன்று அவஸ்தைகளுண்டு." என்

பதை முதலாகவுடையதும், "स एतमेव पुरुषं ब्रह्म ततमपश्यत् அந்த ஜீவன் இந்த ஆத்மவடிவமாகிய புருஷனைப் பரிபூரணபிரஹ்மரூபமாகப் பார்த்தான்." என்பதை அந்தமாகவுடையதுமாகிய சுருதியினுல் பிரதிபாதிக்கப்பட்ட ஜாக்கிரமுதல் சொப்பனபரியந்தமாகிய சம்சாரம் ஜீவனுல் செய்யப்பட்டதாம் என்பது பொருள். (உகஙு)

ரு. ஜீவேசுவரர்களிடத்து வாதிகளுக்கு விவாத முண்டாதற்குக் காரணம் (அஞ்ஞானம்).

[௵0அ] अद्वितीयं ब्रह्मतत्त्वमसंगं तन्न जानते ।
जीवेशयोर्मायिकयोर्वृथैव कलहं ययुः ॥ २१४ ॥

(அ-கை.)

அப்படியானுல் பிரஹ்மமே பாரமார்த்திகமாகுமாயின் ஜீவேசுவரசொரூபத்தை விஷயஞ்செய்யும் வாதிகளுக்கு விவாதம் ஏன் உண்டாகின்றதென்றுசங்கித்துச் சுருதியால் நிச்சயிக்கப்பட்ட தத்துவமாகிய பிரஹ்மாத்ம ஐக்கியஞானமின்மையால் ஜீவேசுவரர்களிடத்து வாதிகளுக்கு விவாத முண்டாகின்ற தென்று கூறுகின்றூர்:—

अद्वितीयं असंगं ब्रह्मतत्त्वं तत् न जानते । मायिकयोः जीवेशयोः वृथा एव कलहं ययुः

(சு-ம்.)

அத்விதீயமும் அசங்கமுமாகிய பிரஹ்மதத்துவ மெதுவோ அதை எவர்கள் அறிகிறதில்லையோ அவர்கள் மாயாகற்பித ஜீவஈசுவரர்களிடத்து வீணுகவே கலகத்தை அடைகின்றனர். (உகச)

சு. ஞானிகள் வாதிகளை நோக்கிப் போதித்தல் தகுதியாகாமை.

[௵0௧] ज्ञात्वा सदा तत्त्वनिष्ठाननुमोदामहे वयम् ।
अनुशोचाम एवान्यान्न भ्रांतैर्विवदामहे ॥ २१५ ॥

(அ-கை.)

அப்படியானுல் ஜீவேசுவரர்களில் வாதிகள் விவாதஞ் செய்தற்கு அஞ்ஞானம் காரணமாயின், அவ்வாறு அவ்வாதிகள் உம்மால் அறிவிக்கத் தக்கவர்களாவரே யென்றுசங்கித்து வீண் பிரயாசையாவதால் எம்மால் அவர்கள் அறிவிக்கத்தக்கவர்களல்லர் என்று கூறுகின்றூர்:—

तत्त्वनिष्ठान् ज्ञात्वा वयं सदा अनुमोदामहे । अन्यान् अनुशोचामः एव । भ्रांतैः न विवदामहे ॥

(சு-ம்.)

தத்துவஞானிகளாகிய முக்தபுருஷர்களை அறிந்து நாங்கள் எப்போதும் சுமைதாங்குவோன்போல முக்திவடிவ சந்தோஷத்தை யடைகின்றோம். மற்ற ஜிஞ்ஞாசுவையும் விஷயியையும் பார்த்து அநுதாபப்படுவோம் அதாவது அநுதாபத்திற்கு * ௬௪. காரணமாகிற கருணையையும் மைத்திரியையும் செய்வோம்; * ௬௫. பாமரர்களோடு விவாதஞ் செய்யோம். (௨௧௫)

எ. ஜீவேசுவரரிடத்துப் பிராந்தியினால் விவாதமுடைய வாதிகளின் பகுப்பு.

[௫௪௦] तृणार्चकादियोगांता ईश्वरे भ्रांतिमाश्रिताः ।
लोकायतादिसांख्यांता जीवे विभ्रांतिमाश्रिताः ॥ २१६ ॥

(அ-கை.)

ஈசுவரனிடத்தும் ஜீவனிடத்தும் பிராந்தியினால் விரோதமுள்ள அபிப்பிராயமான சம்சயத்தை யடைந்த வாதிகளைப் பகுத்துக்காட்டுகின்றார்:—

तृणार्चकादियोगान्ताः ईश्वरे भ्रांतिमाश्रिताः लोकायतादिसांख्यांताः जीवे विभ्रान्ति आश्रिताः ॥

---

* ௬௪. எங்குக் கருணையுண்டாகின்றதோ அங்கு அநுதாப முண்டாகின்றது. அது தயாளமுள்ளவர்களிடத்தில் பிரசித்தமாம். ஆகையால் கருணை அநுதாபத்திற்குக் காரணமாம். எவனோடு மைத்திரியுண்டாகின்றதோ அவன் துக்கத்தைக்கண்டு அநுதாப முண்டாகின்றது. பீஷ்மர்முதலியோரது மைத்திரியால் அர்ச்சுனனுக்கு அநுதாப முண்டாயிற்று. அது கீதையில் பிரசித்தம். இதனால் மைத்திரியும் அநுதாபத்திற்குக் காரணமாம். ஆகையால் அநுதாப மென்னுஞ் சொல்லால் இங்கே அவற்றிற்குக் காரணமாகிய தாயைப்போல கருணையும் குழந்தையைப்போல மைத்திரியும் கிரமமாகக் கொள்ளப்படும்.

* ௬௫. உத்தமம் மத்திமம் கனிஷ்ட மென்னும் வேறுபட்டால் பாமரர் மூன்று வகை யாவர்.

௧. சாஸ்திரசம்ஸ்காரத்துடன் கூடியிருந்தும் சாஸ்திரத்தினர்த்தத்தில் சிரத்தையின்றிய நாஸ்திகன் உத்தமபாமரனுவன்.

௨. சாஸ்திரசம்ஸ்காரமில்லாதவனும்ச் சாஸ்திரவாக்கியத்தில் விசுவாச மில்லாமல் இச்சைப்படி நடப்பவன் மத்திமபாமரனுவன்.

௩. சாஸ்திரவாக்கியங்களில் விசுவாசமுள்ளவனுயிருந்தும் அஞ்ஞானத்தால் தனதிச்சைப்படி நடப்பவன் கநிஷ்டபாமரனுவன்.

அவர்கள் யாவரும் பகிர்முகரா (வெளிப்பார்வையுடையோரா) யிருத்தலால் பிராந்தர்களாவர். அவர்களோடு யாம் விவாதஞ்செய்யோம். ஆனல் மலத்தைப்போல அவர்களை உபேக்ஷையே செய்வோம்.

(சு-ம்.)

புல் செங்கல்முதல் யோகம்வரையி லுள்ள வாதிகள் ஈசுவரனிடத்துப் பிராந்தியை ஆசிரயித்தவர்களாவர். லோகாயதன்முதல் சாங்கியன் வரையிலுள்ள வாதிகள் ஜீவனிடத்துப் பிராந்தியை ஆசிரயித்தவர்கள். ()

அ. வாதிகளின் பிராந்தித்தன்மையின் காரணமும், அவர்களுக்கு முக்தியும் சுகமுமில்லாமையும்.

[௲கக] अद्वितीयब्रह्मतत्त्वं न जानंति यदा तदा ।
भ्रांता एवाखिलास्तेषां क्व मुक्तिः क्वेह वा सुखम् ॥ २१७ ॥

(அ-கை.)

அவ்வாதிகளுக்குப் பிராந்தி எதனால் உண்டாகின்றதெனக் கூறுகின்றார்:—

अद्विदीयब्रह्मतत्त्वं यदा न जानन्ति तदा अखिलाः भ्रान्ताः एव ॥

(சு-ம்.)

அத்விதீயப்பிரஹ்மதத்துவத்தை எப்போது அறியவில்லையோ அப்போது சகலரும் பிராந்தர்களே.

(அ-கை.)

எல்லோரும் பிராந்தர்களாகவே யிருக்கின்றார்கள், அதனாலவர்களுக்கு என்ன பயனுண்டாகுமெனக் கூறுகின்றார்:—

तेषां क्व मुक्तिः ॥

(சு-ம்.)

அப்பிராந்தர்களுக்கு முக்தி எங்கே மோக்ஷம் ஓரிடத்து மில்லையென்றபடி.

(அ-கை.)

கொண்ட கொள்கையைச் சொல்லுதலில் ஆக்கிரகத்தால் சித்தத்திற்கு விசிராந்தியில்லாமையால் அவர்களுக்கு இவ்வுலகசம்பந்தமாகிய சுகமும் இல்லை என்று கூறுகின்றார்:—

इह वा क्व सुखम् ॥

(சு-ம்.)

அல்லது இவ்வுலகத்திலும் அவர்களுக்குச் சுகம் எங்கே இருக்கிறது ?

௯. பிறவித்தைகளின் சுகம் முமுக்ஷுக்களால் ஆதரிக்கத்தகாததாதல்.

[௫௧௨] उत्तमाधमभावश्चेत्तेषां स्यादस्तु तेन किम् ।
स्वप्नस्थराज्यभिक्षाभ्यां न बुद्धः स्पृश्यते खलु ॥ २१८ ॥

(அ-கை.)

அப்படியானால் அவர்களுக்குப் பிரஹ்மவித்தை யில்லாதிருந்தும் அந்நியவித்தை (சாஸ்திரவித்தை) களாலாகிய உத்தமாதமத்தன்மைகள் காணப்படுகின்றன. ஆகையால் உத்தமாதமத்தன்மையாலாகிய சுகம் சிலவாதிகளுக் குண்டாமென் றாசங்கித்து, அது முமுக்ஷுக்களா லாதரிக்கத் தக்கதன் றென்பதைத் திருஷ்டாந்தத்தால் கூறுகின்றார்:—

तेषां उत्तमाधमभावः चेत् स्यात् अस्तु । तेन किं । स्वप्नस्थराज्यभिक्षाभ्यां बुद्धः खलु न स्पृश्यते ॥

(சு-ம்.)

அவர்களுக்கு உத்தம அதமத்தன்மை உண்டாகுமாயின் உண்டாகுக. அந்த உத்தமாதமத்தன்மையால் முமுக்ஷுக்களுக் கென்ன பிரயோஜனம்? ஒன்று மில்லை. ஆனால் சொப்பனத்திலுள்ள இராஜ்ஜியத்தினாலும் பிச்சையினாலும் விழித்தவன் நிச்சயமாகப் பற்றப்படுகிறதில்லை. அதுபோல உத்தமாதமத்தன்மைகளால் முமுக்ஷுக்களுக்குப் பிரயோஜன மில்லை. (உ௧அ)

௧0. முமுக்ஷுவால் பிரஹ்மவிசாரம் செய்யத்தக்கதா மென்பதும் ஜீவேசுவரர்களின் விவாதத்தின் விஷயமான முற்கூறிய பொருளின் முடிவும்.

[௫௧௩] तस्मान्मुमुक्षुभिर्नैव मतिर्जीवेशवादयोः ।
कार्या किंतु ब्रह्मतत्त्वं विचार्य बुध्यतां च तत् ॥ २१९ ॥

(அ-கை.)

ஜீவேசுவரர்களது வாதம் முக்திக்கு ஏதுவாகாமையால் அவற்றில் முமுக்ஷுக்கள் புத்தியைப் பிவேசிப்பித்தல் தகுதியன்றென முடிக்கின்றார்:—

तस्मात् मुमुक्षुभिः जीवेशवादयोः मतिः न एव कार्या ॥

(சு-ம்.)

ஆகையால் முமுக்ஷுக்களால் ஜீவேசுவரவாதங்களில் புத்தி செலுத்தத்தக்க தன்று.

(அ-கை.)

அப்போது முமுக்ஷுக்கள் செய்யவேண்டியது யாதென் றுசங்கித்துச் சுருதிவிசாரத்தால் பிரஹ்மஞானமே செய்யவேண்டியதா மென்று கூறுகின்றார்:—

किंतु ब्रह्मतत्त्वं विचार्य च तत् बुध्यताम् ॥

(சு-ம்.)

ஆனால் பிரஹ்மதத்துவம் விசாரிக்கத்தக்கதாம். அந்தபிரஹ்மத்துவம் அறியத்தக்கதாம். (௨கக)

கக. விடத்தக்கதன்மையாக ஜீவேசுவரர்களை யறிதல் அங்கீகாரம்.

[௫கச] पूर्वपक्षतया तौ चेत्तत्त्वनिश्चयहेतुताम् ।
प्राप्नुतोऽस्तु निमज्जस्व तयोर्नैतावतावशः ॥ २२० ॥

(அ-கை.)

அப்படியானால் பிரஹ்மத்துவத்தை நிச்சயஞ்செய்தற்பொருட்டு அச்சீவேசுவரர்களின் சொரூபம் நீக்கப்படுந்தன்மையாக அறியத்தக்கதாமேயென் றுசங்கித்து, அப்படியாயின் ஜீவேசுவரர்களது வாதத்திலேயே புத்தியை முடிக்கலாகா தென்று கூறுகின்றார்:—

पूर्वपक्षतया तौ तत्त्वनिश्चयहेतुतां प्राप्नुतः चेत् अस्तु । एतावता तयोः अवशः न निमज्जस्व ॥

(சு-ம்.)

பூர்வபக்ஷத்தன்மையால் அச்சீவேசுவரர்கள் தத்துவநிச்சயத்திற்கு ஏதுவாகுந்தன்மையை அடைகின்றார்களெனின் இருக்குக. இவ்வளவினால் அவ்விரண்டன் வாதத்தில் வசமழிந்து மூழ்காதே.

(வி-ம்.)

இவ்வளவினால் அதாவது பூர்பக்ஷத்தன்மையால் தத்துவநிச்சயத்திற்கு ஏதுவாகுந்தன்மை சம்பவித்தலால் அந்த ஜீவேசுவரர்களின் வாதத்திலேயே வசமழிந்து அதாவது விவேகஞானமின்றி மூழ்கலாகாது என்பது அந்வயம். (௨௨0)

க௨. ஜீவேசுவரர்களது தள்ளத்தக்கதாந்தன்மையில் சங்கை சமாதானம்.

[௫கரு] असंगचिद्विभुर्जीवः सांख्योक्तस्तादृगीश्वरः ।
योगोक्तस्तत्त्वमोरर्थौ शुद्धौ ताविति चेच्छृणु ॥ २२१ ॥

(அ-கை.)

அப்படியானால் சாங்கியசாஸ்திரயோகசாஸ்திரங்களில் சொல்லப்பட்ட ஜீவேசுவரர்கள் சுத்தசேதனவடிவமாயிருத்தலால் அத்வைதவாதிகளாகிய உங்களாலும் அவை கொள்ளப்படுதலால் அந்த ஜீவேசுவரர்களுக்குப் பூர்வ பக்ஷத்துவம் அதாவது நீக்கப்படுந்தன்மையில்லை என்பதாக வாதி சங்கிக்கின்றான்:—

असंगचित् विभुः जीवः सांख्योक्तः । तादृक् ईश्वरः योगोक्तः । तौ शुद्धौ तत्त्वमोः अर्थौ इति चेत् ॥

(சு-ம்.)

அசங்கசேதனமாயும் விபுவாயுமுள்ளது ஜீவனென்று சாங்கியத்தில் சொல்லப்பட்டிருக்கின்றது. அத்தன்மையானவன் அதாவது அசங்க சேதனவிபு ஈசுவரனென்று யோகத்தில் சொல்லப்பட்டிருக்கின்றது. சுத்தமாகிய அந்த ஜீவேசுவரர்கள் "தத்" "துவம்" என்னும் பதங்களின் அர்த்தமாவரெனின்.

(அ-கை.)

சாங்கியயோகசாஸ்திரங்களிற் கூறிய ஜீவேசுவரர்கள் சுத்தசேதன வடிவராயினும், அந்த ஜீவேசுவரர்களின் வாஸ்தவபேதத்தை அவர்கள் அங்கீகரித்திருக்கின்றனர். ஆகையால் இது எங்கள் வேதாந்தசித்தாந்த மன்றெனக் கூறுகின்றார்:—

शृणु ॥

(சு-ம்.)

(௨௨௧)

அப்போது கேள்.

௧௩. அத்வைதபோதத்தின்பொருட்டுக் கூடஸ்தப்பிரஹ்மங்களின் பேதம்.

[௫௧௩] न तत्त्वमोरुभावर्थावस्मत्सिद्धांततां गतौ ।
अद्वैतबोधनायैव सा कक्षा काचिदिष्यते ॥ २२२ ॥

(அ-கை.)

இதுவுமது:—

तत्त्वमोः उभौ अर्थौ अस्मत्सिद्धांततां न गतौ ॥

(சு-ம்.)

தத் துவம் பதங்களின் இரண்டு அர்த்தங்களும் எங்கள் சித்தாந்தத் தன்மையை அடைந்தவையன்று.

(வி-ம்.)

"தத்" பத "துவம்" பதங்களின் இரண்டு அர்த்தமும் எங்கள் சித்தாந்தத்தன்மையை அடைந்தவையன் றென்பது அர்வயம்.

(அ-கை.)

அப்படியானால் கூடஸ்த பிரஹ்மசப்தங்களால் சுத்தமான (உபாதியின்றிய) "தத்" பத "துவம்" பதங்களின் அர்த்தம் உங்களாலும் வேறாகவே நிரூபிக்கப்பட்டிருக்கின்றதென்றாசங்கித்துக் கூறுகின்றார்:—

अद्वैतबोधनाय एव सा काचित् कक्षा इष्यते ॥

(சு-ம்.)

அத்வைதத்தை யறிவிக்கும்பொருட்டே அந்த ஓர் நிலை அங்கீகரிக்கப்படுகின்றது.

(வி-ம்.)

உலகப்பிரசித்தமாகிய பேதத்தை நிஷேதிக்கும்வாயிலாக அந்தத் "தத்" பத "துவம்" பதார்த்தங்களின் ஐக்கியத்தைப் பிரதிபாதிக்கும் பொருட்டே அந்தத் "தத்" பத "துவம்" பதார்த்தங்கள் பேதமாகச் சொல்லப்பட்டிருக்கின்றன. அவற்றிற்கு வாஸ்தவபேதம் பிரதிபாதிக்கப்பட வில்லை என்பது தாற்பரியம். (உஉஉ)

கச. பதார்த்தசோதனையின் பிரயோஜனம் (பிராந்தியை நிராகரித்தல்).

[நிகஎ] अनादिमायया भ्रांता जीवेशौ सुविलक्षणौ ।
मन्यंते तद्व्युदासाय केवलं शोधनं तयोः ॥ २२३ ॥

(அ-கை.)

அப்படியானால் அப்போது பதார்த்தங்களின் சோதனம் எதன் பொருட்டாமெனக் கூறுகின்றார்:—

अनादिमायया भ्रांताः जीवेशौ सुविलक्षणौ मन्यंते । केवलं तद्व्युदासाय तयोः शोधनम् ॥

(சு-ம்.)

அநாதிமாயையில் பிராந்தர்களாகிய புருடர் ஜீவேசுவரர்களை முற்றும் பேதமுடையவர்களாக மதிக்கின்றார்கள். அவ்வேறுபாட்டை நீக்கும்பொருட்டுமாத்திரமாம் அவ்விரண்டு பதார்த்தங்களின் சோதனம்.

(வி-ம்.)

இங்கே மாயை யென்னுஞ் சொல்லால் தனது ஆசிரயமாகிய ஆத்மாவை மோகிக்கச்செய்யும் அவித்தையேஅறியப்படுகின்றது.அந்த அநாதி அவித்தையினால் விபரீதஞானத்தை யடைந்த ஜீவர்கள் அந்த ஜீவனது கர்த்திருத்துவமுதலியவற்றோடுகூடியதன்மையையும், ஈசுவரனது சர்வஞ்ஞத்துவமுதலியகுணங்களோடுகூடியதன்மையையும் பாரமார்த்திகம் அதாவது வாஸ்தவ மென்று மதிக்கின்றனர். ஆதலால் அவற்றை நிவிருத்திக்கும்பொருட்டே சோதனை செய்யப்படுகின்றதென்பது பொருள். ()

கஓ. பதார்த்தசோதனையில் உபயோகமுள்ள நான்கு ஆகாயங்களினது திருஷ்டாந்தத்தின் ஸ்மரணம்.

[௫கஅ] अत एवात्र दृष्टांतो योग्यः प्राक् सम्यगीरितः ।
घटाकाशमहाकाशजलाकाशाभ्रखात्मकः ॥ २२४ ॥

(அ-கை.)

பதார்த்தத்தைச் சோதிக்குந்தன்மையையே அறிவிக்கக் கருதியவராய் அந்தப் பதார்த்தசோதனையின் முன் ௩௧௨-ல் கூறிய திருஷ்டாந்தத்தைக் கூறுகின்றார் :—

अतः एव अत्र घटाकाशमहाकाशजलाकाशाभ्रखात्मकः योग्यः दृष्टांतः प्राक् सम्यक् ईरितः ॥

(சு-ம்.)

இதனாற்றான் இங்கே பதார்த்தசோதனையில் கடாகாசமாகாச ஜலாகாச மேகாகாசவடிவமாகிய தகுதியான திருஷ்டாந்தம் முன் செவ்வையாய்ச் சொல்லப்பட்டிருக்கின்றது.

(வி-ம்.)

பதார்த்தசோதனஞ் செய்யவேண்டியிருத்தலாற்றான் நான்காகாயங்களின் திருஷ்டாந்தம் முன் ௩௧௨-ல் கூறப்பட்டிருக்கின்றது என்பது பொருள். (௨௨௪)

[௫கக] जलाभ्रोपाध्यधीने ते जलाकाशाभ्रखे तयोः ।
आधारौ तु घटाकाशमहाकाशौ सुनिर्मलौ ॥ २२५ ॥

(அ-கை.)

பதார்த்தசோதனைசெய்யுந்தன்மையினையே கூறுகின்றார் :—

जलाकाशाभ्रखे ते जलाभ्रोपाध्यधीने । तयोः आधारौ तु घटाकाशमहाकाशौ सुनिर्मलौ ॥

(சு-ம்.)

ஜலாகாய மேகாகாயங்களாகிய அவ்விரண்டும் ஜலம் மேகம் என்னும் உபாதிகளின் அதீனமாம். அவற்றின் ஆதாரங்களாகிய கடாகாய மஹாகாயங்கள் மிகப்பரிசுத்தமுடையனவாம்.

(வி-ம்.)

ஜலாகாய மேகாயங்க ளிரண்டும் ஜலம் மேக மென்னும் உபாதிகளின் அதீனமா யிருத்தலால் பாரமார்த்திகமாகா. அந்த ஜலாகாயமேகாகாயங்களின் ஆதாரமாகிய கடாகாயமகாகாயங்கள் நிர்மலமாம் அதாவது ஜலமுதலிய உபாதிகளின் அபேக்ஷையின்றிய ஆகாயமாத்திரவடிவமா மென்பது பொருள். (உஉரு)

கசு. சுலோகம் ௨கஅ-௨ககூ-ல் கூறிய திருஷ்டாந்தத்தின் தார்ஷ்டாந்தம்.

[௨உ0] एवमानंदविज्ञानमयौ मायाधियोर्वशौ ।
तदधिष्ठानकूटस्थब्रह्मणी तु सुनिर्मले ॥ २२६ ॥

(அ-கை.)

தார்ஷ்டாந்தத்தைக் கூறுகின்றார் :—

एवं आनंदविज्ञानमयौ मायाधियोः वशौ । तदधिष्ठानकूटस्थब्रह्मणी तु सुनिर्मले ॥

(சு-ம்.)

இப்படி ஆநந்தமய ஈசுவரனும் விஞ்ஞானமய ஜீவனும் மாயை புத்தி என்பவற்றின் அதீனராவர். அவ்வாநந்தமய விஞ்ஞானமயங்கட் கதிஷ்டானமாகிய பிரஹ்மமும் கூடஸ்தனும் மிக நிர்மலமாம். (உஉசு)

கஎ. பதார்த்தசோதனையில் சாங்கியயோகங்களைப்போல லோகாயதர் முதலியோர் மதங்களின் உபயோகம்.

[௨உக] एतत्कक्षोपयोगेन सांख्ययोगौ मतौ यदि ।
देहोऽन्नमयकक्षत्वादात्मत्वेनाभ्युपेयताम् ॥ २२७ ॥

(அ-கை.)

அப்படியானால் இரண்டு பதார்த்தங்களையும் சோதிக்கும் அவஸ்தையில் உபயோகமுள்ளவைகளா யிருத்தலாலும் சாங்கியயோக மென்னும் இரண்டு மதங்களும் அங்கீகரிக்கத்தக்கனவா மென்று கூறுவாயாயின், இஃது உன்னால் மிக அற்பமாய்க் கூறப்படுகின்றது. எனெனின், அந்நிய சார்வாகர் முதலியோரது சாஸ்திரங்களும் அந்தந்தத் தேகமுதலியவற்றினின்றும் ஆத்மாவைச் சோதிக்கும் அவஸ்தையில் உபயோகமுள்ளனவா யிருத்தலின் எங்களால் அங்கீகரிக்கப்பட்டிருத்தலாலு மென்று கூறுகின்றார் :—

एतत्कक्षोपयोगेन यदि सांख्ययोगौ मतौ अन्नमयकक्षत्वात् देहः आत्मत्वेन अभ्युपेयतां ॥

(க-ம்.)

இரண்டு பதார்த்தங்களையும் சோதித்தலாகிய அவஸ்தையில் உபயோகமா யிருத்தலால் சாங்கியமும் யோகமும் ஒப்பப்படுமாயின், அந்நமய கோசத்தைச் சோதனைசெய்யும் அவஸ்தையில் தேகம் உபயோகமுள்ளதா யிருத்தலால் தேகமும் ஆத்மத்தன்மையாக அங்கீகரிக்கத்தக்கதாம். ()

கஅ. சாங்கிய யோகங்களின் வேதாந்தத்திறெடு விரோதிக்கும் அம்சம்.

[௲௨௨] आत्मभेदो जगत्सत्यमीशोऽन्य इति चेत्त्रयम् ।
त्यज्यते तैस्तदा सांख्ययोगवेदांतसंमतिः ॥ २२८ ॥

(அ-கை.)

அப்போது சாங்கியயோகங்களுக்கும் வேதாந்தத்திற்கும் எதனால் விரோதமிருக்கின்ற தென்றுசங்கித்து, ஜீவர்களின் பேதம், ஜகத்தின் சத்தியத்துவம், ஈசுவரனது ஜீவனையும் ஜகத்தையும்விட வேறுதற்றன்மை யென்னும் இம்மூன்று அம்சங்களிலும் சாங்கியத்திற்கும் யோகத்திற்கும் வேதாந்தத்தோடு விரோத மிருக்கின்ற தென்று கூறுகின்றார் :—

आत्मभेदः । जगत् सत्यं । ईशः अन्यः इति त्रयं तैः त्यज्यते चेत् तदा सांख्ययोगवेदांतसंमतिः ॥

(க-ம்.)

ஆத்மாவின் பேதமும், ஜகத்து சத்திய மென்பதும், சாங்கிய யோகிகளென்னும் இருவர் மதமாம். ஈசுவரன் ஜீவனையும் ஜகத்தையும்விட வேறென்பது யோகமதம். இத்தன்மைய மூன்றும் அச்சாங்கிய யோகவாதிகளால் நீக்கப்படுமாயின் அப்போது சாங்கிய யோக வேதாந்தங்களுக்கு ஒரு நிச்சயமாம். (௨௨அ)

[ஙஉக] जीवोऽसंगत्वमात्रेण कृतार्थ इति चेत्तदा ।
स्रक्चंदनादिनित्यत्वमात्रेणापि कृतार्थता ॥ २२९ ॥

(அ-கை.)

அப்படியானல் ஜீவாத்மாவினது அசங்கத்தன்மையினலேயே முக்தி சித்தித்தலால் அத்வைதஞானத்தினலென்ன பிரயோஜனம்? என்றுசங்கித்து, அத்வைதஞானமின்றி அசங்கத்தன்மைமுதலியன சம்பவியாதென்னும் அபிப்பிராயத்தை உள்ளத்திற்கொண்டு உத்தரங் கூறுகின்றார் :—

जीवः असंगत्वमात्रेण कृतार्थः इति चेत् तदा स्रक्चंदनादिनित्यत्वमात्रेण अपि कृतार्थता ॥

(சு-ம்.)

ஜீவன் அசங்கத்தன்மைமாத்திரத்தால் கிருதார்த்தனெனின், அப்போது மாலை சந்தனமுதலியவற்றின் நித்தியத்தன்மைமாத்திரத்தாலும் அதாவது சத்தியத்தன்மையை அறிதலாலும் ஜீவனுக்குக் கிருதார்த்தத்துவமுண்டாம். (உஉகூ)

[ஙஉச] यथा स्रगादिनित्यत्वं दुःसंपाद्यं तथात्मनः ।
असंगत्वं न संभाव्यं जीवतोर्जगदीशयोः ॥ २३० ॥

(அ-கை.)

அபிப்பிராயத்தை வெளிப்படுத்துகின்றார் :—

यथा स्रगादिनित्यत्वं दुःसंपाद्यं तथा जगदीशयोः जीवतोः आत्मनः असंगत्वं न संभाव्यम् ॥

(சு-ம்.)

எப்படி மாலைமுதலியவற்றின் நித்தியத்தன்மை சம்பாதிக்கக்கூடாததோ அதுபோல ஜகத்தும் ஈசுவரனும் ஜீவித்திருக்கின் ஆத்மாவாகிய ஜீவனது அசங்கத்தன்மை சம்பவிக்கத்தக்கதன்றாம்.

(வி-ம்.)

ஜகத்தும் ஈசுவரனும் ஜீவித்திருக்கின் என்பது விசேஷிய விசேஷண வடிவமாகத் தோற்றிக்கொண்டிருக்கின் என்பதாம். (உஙo)

[ஙஉரு] अवश्यं प्रकृतिः संगं पुरेवापादयेत्तथा ।
नियच्छत्येतमीशोऽपि कोऽस्य मोक्षस्तथा सति ॥ २३१ ॥

(அ-கை.)

ஜகத்தும் ஈசுவரனு மிருக்கின் ஆத்மாவின் அசங்கத்தன்மை சம்பவியாதென்பதை விளக்குகின்றார்:—

प्रकृतिः पुरा इव अवश्यं संगं आपादयेत् । तथा एतं ईशः अपि नियच्छति ॥

(சு-ம்.)

பிரகிருதியானது முன்போல அவசியமாகச் சங்கத்தைச் சம்பாதிக்கும் அப்படியே இந்த ஜீவனை ஈசுவரனும் பிரேரிக்கின்றார்.

(அ-கை.)

பலிதத்தைக் கூறுகின்றார்:—

तथा सति अस्य कः मोक्षः ॥

(சு-ம்.)

அப்படிச் சங்கமும் பிரேரணையும் உளதாயின் இந்த ஜீவனுக்கு எந்த மோக்ஷம் உண்டாகும் ? (௨௩௨)

[௫௨௯] अविवेककृतः संगो नियमश्चेति चेत्तदा ।
बलादापतितो मायावादः सांख्यस्य दुर्मतेः ॥ २३२ ॥

(அ-கை.)

அப்படியானால் சங்கமும் பிரேரணையும் அவிவேகத்தின் காரியமாயிருத்தலால் விவேகஞானத்தால் அவிவேகம் நிவிருத்தியாக, மறுபடியும் சங்கமுதலியவற்றின் உற்பத்தி எங்கிருந்துண்டாகும் ? என்று வாதி சங்கிக்கின்றான்:—

संगः च नियमः अविवेककृतः इति चेत् । तदा ॥

(சு-ம்.)

சங்கமும் பிரேரணையும் அவிவேகத்தினாலாகியதெனின்.

(அ-கை.)

இப்படியாகுமாயின் உனக்கு அபசித்தாந்தத்தி னடைவு உண்டாகும் என்று பரிகரிக்கின்றார்:—

दुर्मतेः सांख्यस्य बलात् मायावादः आपतितः ॥

(சு-ம்.)

அப்போது தூர்ப்புத்தியுள்ள சாங்கியனுக்கு வலியால் மாயாவாதம் வந்து பொருந்தியது.

(வி-ம்.)

இங்கே இது தாற்பரியமாம்:-அவிவேக மென்பது விவேகமின்மையா? அல்லது அவ்விவேகத்திற்கு வேறு ? அல்லது அதன் விரோதியா ? இவை மூன்று விகற்பங்களாம். அவற்றுள், முதல் விகற்பம் விவேகமின்மையை அவிவேகமெனல் பொருந்தாது; அபாவமாத்திரத்திற்கு சங்கமும் பிரேரணை யென்னும் பாவகாரியத்தை யுண்டாக்குந்தன்மையும் பொருந்தாதாகையால். இரண்டாவது விகற்பமாகிய விவேகத்திற்கு அந்நியம் அவிவேக மென்பதும் பொருந்தாது;விவேகத்திற் கந்நியமாகிய கடமுதலியவைகள் சங்கத்திற்கு ஏதுவாதல் காணுமையால். மூன்றுவது விகற்பமான விவேகத்திற்கு விரோதி அவிவேகமெனின், அந்த அவிவேகம் பாவமாகிய அஞ்ஞான சொரூப மென்றே சித்தித்தது. இப்படியாகவே சாங்கியமதத்தில் மாயாவாதத்தின் பிரசங்க முண்டாயிற்று. (உ௩உ)

௧௧. அத்வைதமதத்தில் மாயையினுல் பந்தமோக்ஷங்களின் வியவஸ்தை.

[௫உ௯] बंधमोक्षव्यवस्थार्थमात्मनानात्वमिष्यताम् ।
इति चेन्न यतो माया व्यवस्थापयितुं क्षमा ॥ २३३ ॥

(அ-கை.)

அத்வைதத்தை அங்கீகரிக்குமிடத்துப் பந்தமோக்ஷங்களின் வியவஸ்தைசம்பவியாமையால் ஆத்மாவின் பேதம் அங்கீகரிக்கத்தக்கதா மென்று வாதி பூர்வபக்ஷமாக்குகின்றுன்:—

बंधमोक्षव्यवस्थार्थं आत्मनानात्वं इष्यतां इति चेत् ॥

(சு-ம்.)

பந்தமோக்ஷங்களின் வியவஸ்தையாகிய விபாகத்தின்பொருட்டு ஆத்மாவின் பேதம் அங்கீகரிக்கத்தக்கதாமெனின்.

(அ-கை.)

ஒரே ஆத்மாவிற்குப் பந்தமோக்ஷங்களின் வியவஸ்தை மாயையினுல் சம்பவித்தலால் அதன்பொருட்டு ஆத்மாவின் பேதம் ஒப்பவேண்டியதா மென்று சொல்லுதல் பொருந்தா தென்று சித்தாந்தி பரிகரிக்கின்றுர்.—

न यतः माया व्यवस्थापयितुं क्षमा ॥

(சு-ம்.)

எத்னுல் மாயை வியவஸ்தைசெய்யச் சாமர்த்தியமுடையதா யிருக்கின்றதோ அதனுலாகாது. (உ௩௩)

[௬-அ] दुर्घटं घटयामीति विरुद्धं किन्न पश्यसि ।
वास्तवौ बंधमोक्षौ तु श्रुतिर्न सहतेतराम् ॥ २३४ ॥

(அ-கை.)

அப்படியானால் மாயையும் எப்படிப் பந்தமோக்ஷங்களின் வியவஸ்தை யைச் செய்யுமென்றாசங்கித்து, அந்த மாயை கூடாததைக் கூட்டுவிக் கும் சுபாவமுடையதாயிருத்தலால் பந்தமோக்ஷங்களின் வியவஸ்தையைச் செய்வதற்குஞ் சாமர்த்தியமுடையதாமென்று கூறுகின்றார்:—

दुर्घटं घटयामि इति विरुद्धं किं न पश्यासि ॥

(சு-ம்.)

கூடாததைக் கூட்டுவிப்பேன் என்னும் மாயையின் விரோதசுபா வத்தை நீ என் இந்திரஜாலத்தில் காண்கிறதில்லை.

(அ-கை.)

பந்தம் அவித்தையின் காரியமாயினும் மோக்ஷம் வாஸ்தவமாக அங்கீ கரிக்கத்தக்கதாமென்றாசங்கித்துச் சுருதிக்கு விரோதமாயிருத்தலால் இப் படிச் சொல்லவேண்டாமென்று கூறுகின்றார்:—

वास्तवौ बंधमोक्षौ तु श्रुतिः न सहतेतराम् ॥

(சு-ம்.)

வாஸ்தவமாகிய பந்தமோக்ஷங்களைச் சுருதியானது மிகவும் சகிக்கிற தில்லை.

(வி-ம்.)

சுருதியானது பந்தத்தைப்போல மோக்ஷத்தையும் வாஸ்தவமெனச் சகிக்கிறதில்லையென்பது தாற்பரியம். (உகூச)

உ0. வாஸ்தவ பந்தமோக்ஷங்களை நிஷேதிக்கும் சுருதி;

[௬உக] न निरोधो न चोत्पत्तिर्न बद्धो न च साधकः ।
न मुमुक्षुर्न वै मुक्त इत्येषा परमार्थता ॥ २३५ ॥

(அ-கை.)

மோக்ஷமுதலியன வாஸ்தவமென்பதை நிஷேதிக்குஞ் சுருதியைக் கூறுகின்றார்:—

न निरोधः च न उत्पत्तिः न बद्धः च न साधकः व मुमुक्षुः वै न मुक्तः इति एषा परमार्थता ॥

(த-ம்.)

நிரோதமுமில்லை, உற்பத்தியுமில்லை, பந்தமுடையவனுமில்லை, சாதகனுமில்லை, முமுக்ஷுவுமில்லை, முக்தனுமில்லை என்னுமிது பரமார்த்தத் தன்மையாம்.

(வி-ம்.)

நாசம், உற்பத்தி அதாவது தேகத்தோடு சம்பந்தித்தல், சுகதுக்காதி தர்மமுடையவனாகிய பெத்தன், சிரவணமுதலிய அநுஷ்டானங்களைச் செய்வோனாகிய சாதகன், சாதனசதுஷ்டய சம்பன்னனான முமுக்ஷு, அவித்தை நீங்கியவனாகிய முக்தன் என்னுமிவையாவும் வாஸ்தவமாயில்லையென்பது பொருள். (௨௩௫)

௨௧. ஜீவேசுவராதி பேதம் மாயாமய மென்பதின் சமாப்தி.

[௫௩௦] मायाख्यायाः कामधेनोर्वत्सौ जीवेश्वरावुभौ ।
यथेच्छं पिबतां द्वैतं तत्त्वं त्वद्वैतमेव हि ॥ २३६ ॥

(அ-கை.)

இப்படி ஜீவேசுவரர்முதலியோரின் பேதம் மாயாமயமாம் அதாவது மித்தியாவடிவமா மென்று உபபாதனஞ் செய்ததை முடிக்கின்றார் :—

मायाख्यायाः कामधेनोः जीवेश्वरौ उभौ वत्सौ यथेच्छं द्वैतं पिबतां । तत्त्वं तु अद्वैतं एव हि ॥

(த-ம்.)

மாயை என்னும் பெயருடைய காமதேனுவுக்கு ஜீவேசுவரர்கள் இருவரும் கன்றுகளாவர். அவ்விரண்டு கன்றுகளும் இஷ்டப்படி துவைதமாகிய பாலைக் குடிக்கின்றனர். வாஸ்தவ சொரூபமோ அத்வைதமே. ()

௨௨. திருஷ்டாந்தபூர்வகமான கூடஸ்தபிரஹ்மங்களின் பேதமின்மை.

[௫௩௧] कूटस्थब्रह्मणोर्भेदो नाममात्रादृते नहि ।
घटाकाशमहाकाशौ वियुज्येते न हि क्वचित् ॥ २३७ ॥

(அ-கை.)

அப்படியானால் ஜீவேசுரர்கள் மாயிகமாயிருத்தலால் அவர்களது பேதம் மித்தையாயினும் கூடஸ்தனும் பிரஹ்மமும் பாரமார்த்திகமாயிருத்தலால், அந்தக்கூடஸ்தபிரஹ்மங்களின் பேதமும் பாரமார்த்திகமாமென்றாசங்கித்துப் பேதத்திற்குக் காரணமாகிய சொரூபத்தின் வேற்றுமை இல்

லாமையால் கூடஸ்தப்பிரஹ்மங்களின் பேதமும் பாரமார்த்திகமா மெனல் பொருந்தாதெனப் பரிகரிக்கின்றார் :—

कूटस्थब्रह्मणोः भेदः नाममात्रात् ऋते न हि ॥

(சு-ம்.)

கூடஸ்தப்பிரஹ்மங்களின் பேதம் பெயர்மாத்திரத்தாலன்றி இல்லை.

(அ-கை.)

நாமமாத்திரத்தால் பேதம் தோற்றினும் சொரூபமாகப் பேத மில்லை யென்பதில் முன் ௩௨௨-ல் கூறிய திருஷ்டாந்தத்தை நினைப்பூட்டுகின்றார் :-

घटाकाशमहाकाशौ क्वचित् हि न वियुज्येते ॥

(சு-ம்.)

கடாகாசமகாகாசங்க ளிரண்டும் ஓரிடத்திலும் வேறுபடுகிறதில்லை. ()

உரு. பேதம் மித்தை என்பதன் பயன் (அத்வைதநிச்சயம்).

[௩௩௨] यदद्वैतं श्रुतं सृष्टेः प्राक्तदेवाद्य चोपरि ।
मुक्तावपि वृथा माया भ्रामयत्यखिलान् जनान् ॥ २३८ ॥

(அ-கை.)

இப்படிப் பேதம் மித்தை யென்று சொல்லுதலால் என்ன பிரயோஜன முண்டாயிற்றெனக் கூறுகின்றார் :—

यत् अद्वैतं सृष्टेः प्राक् श्रुतं तत् एव अद्य च उपरि मुक्तौ अपि ॥

(சு-ம்.)

எந்த அத்வைதமானது சிருஷ்டிக்குமுன் கேட்கப்பட்டிருக்கின்றதோ அதுவே இப்போது சிருஷ்டிகாலத்திலும் கேட்கப்பட்டிருக்கின்றது; பின் பிரளயத்திலுமிருக்கும் முத்தியிலுமிருக்கும்.

(வி-ம்.)

"सदेव सोम्येदमग्र आसीत् एकमेवाद्वितीयम् சௌமியனே! இது முன் ஓரே அத்துவிதீயசத்தாகவே யிருந்தது" என்னுஞ் சுருதியில் பிரதிபாதிக்கப் பட்ட அத்துவிதீயப்பிரஹ்மமே மூன்று காலத்திலும் பாதிக்கப்படாததா யிருத்தலால் வாஸ்தவமாம் ; பேதமில்லை யென்பது தாற்பரியம்.

(அ-கை.)

அப்போது சகல புருஷர்களுக்கும் பேதத்தில் எதனால் ஆக்கிரக முண்டாகின்றதெனக் கூறுகின்றார் :—

माया अखिलान् जनान् वृथा भ्रामयति ॥

(சு-ம்.)

மாயை சகல ஜனங்களையும் வீணாகப் பிரமிக்கச் செய்கின்றது.

(வி-ம்.)

சகல ஜனங்களும் தத்துவஞானமின்றி யிருத்தலால் பேதத்தில் ஆக்கிரகஞ் செய்கின்றனர் என்பது தாற்பரியம். (உ௩அ)

உ௯. ஞானியும் சம்சாரத்திற் சுழலுதலின் சங்கை சமாதானம்.

[௫௩௩] ये वदंतीत्थमेतेऽपि भ्राम्यंते विद्ययात्र किम् ।
न यथा पूर्वमेतेषामत्र भ्रांतेरदर्शनात् ॥ २३९ ॥

(அ-கை.)

அப்படியானால் பிரபஞ்சம் மாயாமய மென்பதையும் தத்துவத்தின் அத்விதீயத்தன்மையையும் வர்ணிக்கின்றவர்களும் சம்சாரமுடையவர்களாகக் காணப்படுகின்றமையால் தத்துவஞானத்தால் என்ன பிரயோஜனமென்று வாதி சங்கிக்கின்றான்:—

ये इत्थं वदंति एते अपि अत्र भ्राम्यंते विद्यया किम् ॥

(சு-ம்.)

எவர்கள் இப்படிச் சொல்லுகின்றார்களோ அவர்களும் இச்சம்சாரத்தில் சுழலுகின்றார்களாகையால் வித்தையினால் என்ன பிரயோஜனம்?

(அ-கை.)

பிராரப்தகர்மவசத்தால் சிலஞானிகளுக்கு வியவகார மிருக்கினும், முன் அஞ்ஞானவஸ்தையைப்போல வியவகாரத்திலாக்கிரக மில்லாமையால் அந்த ஞானிகளும் பிரமிக்கின்றார்களென்பது பொருந்தாதென்று சித்தாந்தி பரிகரிக்கின்றார்:—

न पूर्वं यथा एतेषां अत्र भ्रांतिः अदर्शनात् ॥

(க-ம்.)

அப்படியல்ல; முன்போல ஞானிகளுக்கு இச்சம்சாரத்தில் பிராந்தி காணுமையால். (௨௩௯)

௨௨. அஜ்ஞானிகளின் நிச்சயம்.

[௫௩௪] ऐहिकामुष्मिकः सर्वः संसारो वास्तवस्ततः ।
न भाति नास्ति चाद्वैतमित्यज्ञानिविनिश्चयः ॥ २४० ॥

(அ-கை.)

ஞானிகளுக்குப் பிராந்தி யில்லை யென்பதைக் காட்டுதற்கு அஞ்ஞானிகளின் நிச்சயத்தை முதலில் கூறுகின்றார்:—

ऐहिकामुष्मिकः सर्वः संसारः वास्तवः । ततः अद्वैतं न भाति । च न अस्ति इति अज्ञानिविनिश्चयः ॥

(க-ம்.)

இகலோகத்தனவும் பரலோகத்தனவுமாகிய சகல சம்சாரமும் வாஸ்தவமாம். ஆகலால் அத்வைதம் தோற்றவில்லை; இல்லை யென்பது அஞ்ஞானிகளது நிச்சயம்.

(வி-ம்.)

இந்த லோகத்திலுள்ளனவாகிய புத்திரகளத்திராதிகளைப் போகித்தலாகிய சம்சாரம் இகலோகத்தனவாம். பரலோகத்திலுள்ளனவாகிய சுவர்க்கமுதலியவற்றை அநுபவித்தலாகிய சம்சாரம் பரலோகத்தனவாம். (௨௪௦)

௨௩. ஞானியின் நிச்சயமும் இருவர் நிச்சயத்தின் பயனும்.

[௫௩௫] ज्ञानिनां विपरीतोऽस्मान्निश्चयः सम्यगीक्ष्यते ।
स्वस्वनिश्चयतो बद्धो मुक्तोऽहं चेति मन्यते ॥ २४१ ॥

(அ-கை.)

தத்துவநிச்சயம் அவ்வஞ்ஞானிகளது நிச்சயத்திலும் வேறென்பதைக் காட்டுகின்றார்:—

ज्ञानिनां निश्चयः अस्मात् विपरीतः सम्यक् ईक्ष्यते ॥

(க-ம்.)

ஞானிகளது நிச்சயம் இவ்வஞ்ஞானிகளது நிச்சயத்திலும் விபரீதமென்று செவ்வையாகக் காணப்படுகின்றது.

(வி-ம்.)

அத்வைதம் பாரமார்த்திகமாயும் தோற்றிக்கொண்டு மிருக்கின்றது. சம்சாரமோ பாரமார்த்திகமல்லாததாய் மித்தையா யிருக்கின்றது என்பது ஞானிகளது நிச்சயம் என்பது பொருள்.

(அ-கை.)

அந்நிச்சயத்தால் என்ன உண்டாகின்றதென் றாசங்கித்துத் தத்தம் நிச்சயாநுசாரமாகப் பல முண்டாகின்ற தென்று கூறுகின்றார்:—

स्वस्वनिश्चयतः अहं बद्धः च मुक्तः इति मन्यते ॥

(சு-ம்.)

தத்தம் நிச்சயித்தினால் நான் பத்தன், நான் முக்தன் என்று அஞ்ஞானியும் ஞானியும் மதிக்கின்றார்கள். (உ௪௧)

௨. துவைதாத்வைதவாதபூர்வமாக அத்வைதத்தின் அபரோக்ஷத்துவமும் துவைதத்தின் மித்தியாத்துவமும் ௫௩௬-௫௫௨.

௧. அத்வைதம் தோற்றாமையின் சங்கை சமாதனம்.

[௫௩௬] नाद्वैतमपरोक्षं चेन्न चिद्रूपेण भासनात् ।
अशेषेण न भातं चेद्वैतं किं भासतेऽखिलम् ॥ २४२

(அ-கை.)

“அத்வைதம் தோற்றுகின்றது” என்று கூறுதல் சாஸ்திரத்தாலன்றி அநுபவத்தா லன்று. ஆதலின் அவ்வத்வைதநிச்சயம் பொருந்தா தென்று வாதி சங்கிக்கின்றான்:—

अद्वैतं अपरोक्षं न चेत् ॥

(சு-ம்.)

அத்வைதம் அபரோக்ஷமன்றெனின்.

(அ-கை.)

அத்வைதம் அநுபவகோசரமாகாதெனல் சித்தியா தென்று சித்தாந்தி பரிகரிக்கின்றார்:—

न । चिद्रूपेण भासनात् ॥

(சு-ம்.)

அது பொருந்தாது; ஞானவடிவமாகத் தோற்றிக்கொண்டிருத்தலால்.

(வி-ம்.)

"கடம் விளங்குகின்றது படம் விளங்குகின்றது" என்று கடமுதலியவற்றில் அநுசூதமாக ஸ்புரணை (விளக்க) ரூபமாக அத்வைதம் அநுபவத்திற்கு விஷயமாகாதென்பதில்லையென்பது பொருள்.

(அ-கை.)

அப்படியானால் ஞானவடிவமாகத் தோற்றிக்கொண்டிருக்கினும், அது முழுவதும் தோற்றுகிறதில்லை என்று வாதி சங்கிக்கின்றான்:—

अशेषेण न भातं चेत् ॥

(சு-ம்.)

அத்வைதம் முழுதுமாகத் தோற்றுகிறதில்லையெனின்.

(அ-கை.)

முழுதும்தோற்றாமை த்வைதத்திலும் சரியேயென்று சித்தாந்தி கூறுகின்றார்:—

द्वैतं किं अखिलं भासते ॥

(சு-ம்.)

த்வைதம் முழுவதும் தோற்றுகின்றதா? என்னை. (௨௬௨)

[௫௩௭] दिङ्मात्रेण विभानं तु द्वयोरपि समं खलु ।
द्वैतसिद्धिवदद्वैतसिद्धिस्ते तावता न किम् ॥ २४३ ॥

(அ-கை.)

இப்படித் த்வைதம் அத்வைத மென்னுமிரண்டு பக்ஷங்களிலும் தோஷம் சமமா மென்பதைக் கூறி இப்போது பரிகாரமாகிய தோஷநிவிருத்தியும் சமமா மென்பதைக் கூறுகின்றார்:—

दिङ्मात्रेण विभानं तु द्वयोः अपि खलु समम् ॥

(சு-ம்.)

திசைமாத்திரத்தால் தோற்றுதல் த்வைதம். அத்வைதம் இரண்டிலும் நிச்சயமாகவே சமமாம்.

(வி-ம்.)

திசைமாத்திரத்தால் அதாவது ஏகதேசத்தால் த்வைதாத்வைதங்களிரண்டும் தோற்றுதல் சமானமா மென்பது பொருள்.

(அ-கை.)

இவ்வளவினால் எப்படிப் பரிகாரத்திற்குச் சமத்துவ முண்டாமென் றாசங்கித்துக் கூறுகின்றார்.—

ते तावता द्वैतसिद्धिवत् अद्वैतसिद्धिः किं न ॥

(சு-ம்.)

உனக்கு அவ்வளவினால் துவைதம் சித்தித்தல் போல அத்வைதம் ஏன் சித்தியாது ? சித்திக்கு மென்பது பொருள்.

(வி-ம்.)

உனது பக்ஷத்தில் அவ்வளவினால் அதாவது * சுசு. ஏகதேசத்தோற் றமாத்திரத்தால் துவைதம் சித்திப்பதுபோல அத்வைதநிச்சயமும் ஏன் உண்டாகாது ? உண்டாகவே செய்யும் என்பது பொருள். (௨௪௩)

௨. துவைதத்தின் ஞானமிருக்கின் அத்வைதம் சித்தியா தென்னும் சங்கை.

[௫௩௮] द्वैतेन हीनमद्वैतं द्वैतज्ञाने कथं त्विदम् ।

चिद्भानं त्वविरोध्यस्य द्वैतस्यातोऽसमे उभे ॥ २४४ ॥

(அ-கை.)

பூர்வபக்ஷி வேறுவிதமாக அத்வைதம் சித்தியாததைச் சங்கிக்கின்றான்:-

अद्वैतं द्वैतेन हीनं इदं द्वैतज्ञाने तु कथम् ॥

(சு-ம்.)

துவைதமில்லாதது அத்வைதமாம். இவ்வத்வைதம் துவைதஞான மிருக்குங்கால் எப்படிச் சம்பவிக்கும்?

---

* சுசு. ஸ்தாலிபுலாகநியாயத்தாலாவது ஒருவீட்டிலுள்ள ஆகாயத்தின் திருஷ்டாந்தத்தினாலாவது சரீரத்திற்குள்ளிருக்கும் அந்தர்முகநிச்சயமாகிய விருத்தியால் சேதனத்துவம், ஆநந்தத்துவம், அத்வைதத்துவம், பூர்ணத்துவம், நித்திய முக்தத்துவமுதலிய பிரஹ்மத்தின் விசேஷணங்களோடுகூடிய பிரத்தியகாத்மாவைக் கிரகித்தலால் பிரத்தியாகாத்மாவிலுள்ள அவித்தையினம்சம் நீங்கவே பிரத்தியக பின்னபிரஹ்மம் சுவயம்பிரகாசமாகத் தோற்றும். இப்படி ஏகதேசத்தோற்றத்தால் அத்வைதநிச்சய முண்டாகின்றது. ஒரு அங்கத்தினது பாகத்தைப் பரீக்ஷித்தால் சகல அங்கங்களின் பாகமும் நிச்சயமாகின்றது. இத்திருஷ்டாந்தத்தை ஸ்தாலிபுலாக நியாய மென்பர். ஒரு வீட்டிலுள்ள ஆகாயத்தின் அசங்கத்தன்மைமுதலிய நிச்சயத்தினால் சகல பிரஹ்மாண்டமுதலியவற்றிலுமுள்ள ஆகாயத்தினது அசங்கத்துவமுதலியவற்றின் நிச்சய முண்டாகின்றது. அதனைப்போலவாம்.

(வி-ம்.)

அத்வைத மென்பது துவைதமில்லாமையாம். அத்வைதமும் துவைதமும் ஒன்றற்கொன்று விரோதமாம். அப்படி விரோத மிருக்குங்கால் துவைதம் தோற்றிக்கொண்டிருக்கும்போது அத்வைதம் சம்பவியாது என்பது பொருள்.

(அ-கை.)

அப்படியானல் துவைதமும் அத்வைதத்திற்கு விரோதியா யிருத்தலால் அத்வைதம் தோற்றிக்கொண்டிருக்குங்கால் துவைதமும் சித்தியாதென்னும் உமதுமெனதுமாகிய பிரசினைகள் சமானமாமென் ருசங்கித்துப் பூர்வபக்ஷி கூறுகின்ருன்:—

चिद्भानं तु अस्य द्वैतस्य अविरोधी अतः उभे असमे ॥

(சு-ம்.)

சேதனமாகிய ஞானமோ இத்துவைதத்திற்கு விரோதமில்லா திருத்தலாம். ஆகையால் இரண்டும் சமானமில்லாதனவாம்.

(வி-ம்.)

சித்தாந்தி! தம்மதத்தில் சேதனமாகிய ஞானமே அத்வைதத்தின் ஞானமா யிருத்தலால் அச்சேதனமாகிய ஞானம் எங்கள் துவைதத்திற்கு விரோதியாகாது. அதனல் தமது பிரசினமும் எனது பிரசினமுமாகிய இரண்டும் சமானமாகா வென்பது தாற்பரியம். (உசச)

[௫௩௧] एवं तर्हि शृणु द्वैतमसन्मायामयत्वतः ।
तेन वास्तवमद्वैतं परिशेषाद्विभासते ॥ २४५ ॥

(அ-கை.)

தோற்றிக்கொண்டிருக்கும் துவைதமும் வாஸ்தவ மாகாமையால் துவைதம் வாஸ்தவமாகிய அத்வைதத்திற்கு விரோதியாகா தென்று சித்தாந்தி பரிகரிக்கின்ருர்:—

एवं तर्हि शृणु । द्वैतं असत् मायामयत्वतः तेन परिशेषात् वास्तवं अद्वैतं विभासते ॥

(சு-ம்.)

இப்படிக் கூறுவையாயின் வாதி! கேள். துவைதம் அசத்தாம்; மாயா வடிவமா யிருத்தலால் அதனல் பரிசேஷத்தால் வாஸ்தவமாகிய அத்வைதம் தோற்றுகின்றது.

(வி-ம்.)

கிடைத்துள்ளதை நிஷேதிக்குங்கால் மற்றொன்றில் பொருந்தாமை யால் மிஞ்சியிருக்கும் வஸ்துவில் செவ்வையாகத் தோற்றுதல் பரிசேஷ மெனப்படும். இதனையே ஒழி பென்பர். (௨௪௫)

௩. அத்வைதம் ஒழிபாதற்றன்மை.

[௫௪௦] अचिंत्यरचनारूपं मायैव सकलं जगत् ।
इति निश्चित्य वस्तुत्वमद्वैते परिशेष्यताम् ॥ २४६ ॥

(அ-கை.)

பரிசேஷத்தின் தன்மையினையே காட்டுகின்றார் :—

"अचिंत्यरचनारूपं सकलं जगत् माया एव" इति निश्चित्य वस्तुत्वं अद्वैते परिशेष्यताम् ॥

(சு-ம்.)

சகல ஜகத்தும் மாயையாம் என்று நிச்சயித்து வஸ்துத்தன்மையை அத்வைதத்தில் பரிசேஷம் செய்யவேண்டும்.

(வி-ம்.)

சிந்திக்கத்தகாதது அசிந்திய மெனப்படும். அப்படிப்பட்ட அசிந்திய சிருஷ்டியை வடிவமாகவுடைய சகல ஜகத்தும் மாயை(மித்தை)யேயாம். இவ்வாறு அநிர்வசநீயமாயிருத்தலால் துவைதத்தின் மித்தியாத்தன் மையை நிச்சயித்து, வாஸ்தவமாகிய அத்வைதத்தைப் பரிசேஷமாக்கல் வேண்டு மென்பது பொருள். (௨௪௬)

௪. அத்வைதஞானத்தின் பிறகு துவைதத்தினது வஸ்துத்தன்மையின் விளக்கத்தில் பிரசிநோத்தரம்.

[௫௪௧] पुनर्द्वैतस्य वस्तुत्वं भाति चेत्त्वं तथा पुनः ।
परिशीलय को वात्र प्रयासस्तेन ते वद ॥ २४७ ॥

(அ-கை.)

அப்படியானால் இப்படி அத்வைத நிச்சயமுண்டாகியும், பூர்வவாசனையால் மறுபடியும் மறுபடியும் துவைதத்தின் சத்தியத்துவம் தோற்றுகின்றதென்றாசங்கித்து, அது நீங்க மறுபடியும் மறுபடியும் துவைதத்தின் மித்தியாத்தன்மையை விசாரிப்பாயாக வென்று கூறுகின்றார் :—

पुनः द्वैतस्य वस्तुत्वं भाति चेत् । त्वं तथा पुनः परिशीलय तेन ते अत्र कः वा प्रयासः वद ॥

(சு-ம்.)

மறுபடியும் துவைதத்திற்கு வாஸ்தவத்தன்மை தோற்றுமாயின், அப்போது நீ அப்படியே மறுபடியும் விசாரிப்பாயாக. அவ்விசாரத்தால் உனக்கு இங்கே என்ன வருத்தமிருக்கிறது? அதனைச் சொல்வாயாக.

(வி-ம்.)

"आवृत्तिरसकृदुपदेशात् சுருதியின் உபதேசத்தினால் அடிக்கடி ஆவிருத்தியாகிய சிரவணாதிகளின் அநுஷ்டானஞ்செய்யத்தக்கதாம்." என்னும் சாரீரகத்தின் நான்காவது அத்தியாயத்திலுள்ள முதற்பாதத்தின் முதற்சூத்திரத்தில் ஸ்ரீ வியாசபகவானால் ஆத்மசிரவணமுதலியவற்றின் ஆவிருத்தி விதிக்கப்பட்டிருத்தலால் அடிக்கடி விசாரஞ்செய்தல் தகுதியா மென்பது தாற்பரியம். (உசஎ)

ஞ. விசாரத்தின் அவதியை வினவுதலோடு அத்வைதத்தின் விசாரத்தில் துன்பம் பொருந்தாமை.

[ஙசஉ] कियंतं कालमिति चेत्खेदोऽयं द्वैतं इष्यताम् ।
अद्वैते तु न युक्तोऽयं सर्वानर्थनिवारणात् ॥ २४८ ॥

(அ-கை.)

அப்படியானால் எவ்வளவுகாலம்வரையிலும் இப்படிச் சிரவணாதி வடிவ விசாரம் செய்யத்தக்கதாமென் றாசங்கித்து, "அவற்றுள், அபரோக்ஷ ஞானம் வாய்க்கவே இவ்விசாரம் முடிகின்றது." என்று சுலோகம் ௩௦௯-ல் விசாரிக்கும் காலத்திற்கு வரம்பு கூறப்பட்டிருத்தலால் அத்வைதவிசாரத்தில் இந்தத் துக்கம் பொருந்துவ தன்று; ஆனால் துவைதத்தோற்றத்திலேயே இத்துக்கம் பொருந்துவதா மென்று கூறுகின்றார்:—

कियंतं कालं इति चेत् । अयं खेदः द्वैते इष्यतां । अद्वैते तु अयं न युक्तः सर्वानर्थनिवारणात् ॥

(சு-ம்.)

எவ்வளவுகாலபரியந்தம் விசாரிக்கவேண்டியதெனின், இந்தத் துக்கம் துவைதத்தை விசாரித்தலில் அங்கீகரிக்கத்தக்கதாம். அத்வைதவிசாரத்திலோ இந்தத் துக்கம் பொருத்தமுடைய தன்று; அத்வைதவிசாரத்தினால் சகல அநர்த்தங்களும் நீங்குதலால். (உசஅ)

சு. பசிதாகமுதலியன அகங்காரத்தின் தர்மங்களாமாறு.

[ஙசஙூ] क्षुत्पिपासादयो दृष्टा यथापूर्वं मयीति चेत् ।
मच्छब्दवाच्येऽहंकारे दृश्यतां नेति को वदेत् ॥ २४९ ॥

(அ-கை.)

அப்படியானால் இப்படி அத்வைத ஆத்மதத்துவத்தின் அபரோக்ஷ ஞானமுடைய என்னிடத்திலும் பசிதாகமுதலியவடிவ அநர்த்தங்கள் காணப்படுதலால் ஆத்மஞானத்திற்கு அநர்த்தத்தை நிவிருத்திக்குந்தன்மை சித்தியாதென்று வாதி சங்கிக்கின்றான்:—

क्षुत्पिपासादयः मयि यथापूर्वं दृष्टाः इति चेत् ॥

(சு-ம்.)

பசிதாகமுடைய சம்சாரதர்மங்கள் என்னிடத்தில் முன் அஞ்ஞான காலத்திலிருந்ததுபோலக் காணப்படுகின்றனவேயெனின்.

(அ-கை.)

பசிதாகமுதலியவைகள் எனதென்னுஞ் சத்தத்திற்கு வாச்சியமாகிய அகங்காரத்தில் காணப்படுகின்றனவா? அல்லது எனதென்னும் சத்தத்தினால் உபலக்ஷிக்கப்பட்ட சிதாத்மாவினிடத்தில் காணப்படுகின்றனவா? என்று இரண்டு விகற்பஞ்செய்து முதற்பக்ஷத்தைச் சித்தாந்தி அங்கீகரிக்கின்றார்:—

मच्छब्दवाच्ये अहंकारे दृश्यतां । न इति कः वदेत् ॥

(சு-ம்.)

எனதென்னும் சத்தத்திற்கு வாச்சியமாகிய அகங்காரத்தில் செவ்வையாய்க் காண்க. காணலாகாதென்று எவன் சொல்லுவான்?

(வி-ம்.)

சிதாத்மாவினிடத்துக் காணப்படுகின்றன என்னுமிரண்டாவது பக்ஷம் பொருந்தாது. ஏனெனின், அச்சிதாத்மா சங்கமில்லாததாயும் விஷயமாகாததாயு மிருத்தலால் என்னும் விடை மூலசுலோகத்திற்குப் புறம்பாகவே காண்க. (உ௪கூ)

[௫௪௪] चिद्रूपेऽपि प्रसज्येरंस्तादात्म्याध्यासतो यदि ।
माध्यासं कुरु किंतु त्वं विवेकं कुरु सर्वदा ॥ २५० ॥

(அ-கை.)

உண்மையாக அந்தப் பசிமுதலியன தோற்றாவிடினும், பிராந்தியினால் ஆத்மாவினிடத்து அப்பசிமுதலியவற்றின் பிராப்தி யுண்டாகுமென்று வாதி சங்கிக்கின்றான்:—

तादात्म्याध्यासतः यदि चिद्रूपे अपि प्रसज्येरन् ॥

(சு-ம்.)

தாதாத்மிய அத்தியாசத்தினால் சிதாத்மாவினும் பசிதாகமுதலியன வந்து பொருந்துமெனின்.

(அ-கை.)

இப்படியாகுமாயின் அனர்த்தத்திற்கு ஏதுவாகிய அத்தியாசத்தை நிவிருத்திக்கும்பொருட்டு எப்போதும் விவேகத்தையே செய்யவேண்டுமென்று கூறுகின்றார்:—

त्वं अध्यासं मा कुरु किंतु सर्वदा विवेकं कुरु ॥

(சு-ம்.)

நீ அத்தியாசத்தைச் செய்யாதே; எப்போதும் விவேகத்தைச் செய். (௨௫௦)

[௫௪௫] झटित्यध्यास आयाति दृढवासनयेति चेत् ।
आवर्तयेद्विवेकं च दृढं वासयितुं सदा ॥ २५१ ॥

(அ-கை.)

அநாதிவாசனைவசத்தால் மறுபடியும் அவ்வத்தியாசம் வருமாயின், அதை நிவிருத்திக்கும்பொருட்டு விவேகமே அடிக்கடி செய்யத்தக்கதாம்; வேறு உபாயமில்லையென்று கூறுகின்றார்:—

दृढवासनया झटिति अध्यासः आयाति इति चेत् । दृढं वासयितुं सदा विवेकं च आवर्तयेत् ॥

(சு-ம்.)

திடவாசனையால் உடனே அத்தியாசம் வருகின்றதெனின், திடவாசனையோடு கூடியதாக்குவதற்கு எப்போதும் விவேகத்தையே அடிக்கடி பழகவேண்டும். (௨௫௧)

௭. விசாரத்தினால் துவைதம் மித்தையாதலின் அநுபவத்தின் சங்கை சமாதானம்.

[௫௪௬] विवेके द्वैतमिथ्यात्वं युक्त्यैवेति न भण्यताम् ।
अचिंत्यरचनात्वस्यानुभूतिर्हि स्वसाक्षिकी ॥ २५२ ॥

(அ-கை.)

அப்படியானால் விசாரத்தினால் துவைதத்தின் மித்தியாத்துவம் யுக்தியினாலேயே சித்தமாகின்றது; அநுபவத்தாலன்றென்றுசங்கித்து, சிந்திக்

க்தகாத சிருஷ்டியாகிய மித்தியாத்துவத்தின் அநுபவம் சர்வசாக்ஷியுடையதா யிருத்தலால் துவைதமித்தியாத்துவம் யுக்தியினாலேயே சித்திக்கின்றது; அநுபவத்தா லன்றென்று கூறுதல் பொருந்தாதென்று பரிகரிக்கின்றார்:—

विवेके द्वैतमिथ्यात्वं युक्तचा एव इति न मण्यतां हि अचिंत्यरचनात्वस्य अनुभूतिः स्वसाक्षिकी ॥

(சு-ம்.)

விவேகமாகிய விசார முண்டானபோ துண்டாம் துவைதத்தின் மித்தியாத்தன்மை யுக்தியினாலேயோ மென்று சொல்லலாகாது. எதனால் சிந்திக்கத்தகாத சிருஷ்டித்தன்மையின் அநுபவம் சர்வசாக்ஷியினால் அறியப்படுவதா யிருக்கின்றதோ அதனால். (உ௫உ)

அ. சிந்திக்கப்படாத சிருஷ்டிவடிவ மித்தியாபதார்த்தத்தின் லக்ஷணத்தில் சங்கை சமாதானம்.

[௫௪௭] चिदप्याचिंत्यरचना यदि तर्ह्यस्तु नो वयम् ।
चितिं सुचिंत्यरचनां ब्रूमो नित्यत्वकारणात् ॥ २५३ ॥

(அ-கை.)

அப்படியானால் ௫௪௦-ல் கூறிய அசிந்தியரசனத்துவ மென்னும் மித்தியாபதார்த்தத்தின் லக்ஷணம் எதுவோ அது சிதாத்மாவினிடத்து அதிவியாப்தி யடைந்திருக்கின்றது என்று வாதி சங்கிக்கின்றான்:—

चित् अपि अचिंत्यरचना यदि ॥

(சு-ம்.)

சேதனமும் சிந்திக்கத்தகாத சிருஷ்டியுடையதாமெனின்.

(அ-கை.)

பிராகபாவத்தோடுகூடியதன்மையிருக்கின், அசிந்தியரசனத்துவம் மித்தியாத்துவத்தின் லக்ஷணமா மென்று சொல்லக்கருதிய சித்தாந்தி ஆத்மாவின் அசிந்தியரசனத்துவத்தை அங்கீகரிக்கின்றார்:—

तर्हि अस्तु ॥

(சு-ம்.)

அப்போது இவ்வாறு சேதனமும் சிந்திக்கக்கூடாத சிருஷ்டியுடையதாயிருக்குக.

(அ-கை.)

இப்படிச் சேதனம் சிந்திக்கக்கூடாத சிருஷ்டியுடையதென்று அங்கீகரிக்கின், அபசித்தாந்தமாகுமேயென் றாசங்கித்துச் சித்தாந்தி பரிகரிக்கின்றார் :—

वयं चितिं सुचिंत्यरचनां नो ब्रूमः ॥

(சு-ம்.)

நாங்கள் சேதனத்தைச் செவ்வையாய்ச் சிந்திக்கத்தக்க சிருஷ்டியுடையதாகச் சொல்லுகிறதில்லை.

(அ-கை.)

அந்தச் சேதனம் செவ்வையாய் அதாவது சுகமாகச் சிந்திக்கத்தக்க சிருஷ்டியாகா தென்பதில் ஏதுவைக் கூறுகின்றார் :—

नित्यत्वकारणात् ॥

(சு-ம்.)

நித்தியத்தன்மையாகிய காரணத்தால்.

(வி-ம்.)

நித்தியத்தன்மையாகிய காரணத்தால் அதாவது உற்பத்தியில்லாமையால் நாங்கள் சேதனத்தைச் சுகமாகச் சிந்திக்கத்தக்க சிருஷ்டியுடையதென்று சொல்லுகிறதில்லையென்பது அந்வயம். (௨௫௩)

௧. சேதனத்தின் நித்தியத்தன்மையும் த்வைதத்தின் அநித்தியத்தன்மையும்.

[௫௪அ] प्रागभावो नानुभूतश्चितेर्नित्या ततश्चितिः ।
द्वैतस्य प्रागभावस्तु चैतन्येनानुभूयते ॥ २५४ ॥

(அ-கை.)

சேதனம் எதனால் நித்தியமாமென் றாசங்கித்துச் சேதனத்தின்து பிராகபாவத்தின் (முன்னின்மையின்) அநுபவமில்லாமையால் சேதனம் நித்தியமா மென்று கூறுகின்றார் :—

चितेः प्रागभावः न अनुभूतः ततः चितिः नित्या ॥

(சு-ம்.)

சேதனத்தின் பிராகபாவம் அநுபவிக்கப்படவில்லை. ஆதலால் சேதனம் நித்தியமாம்.

(லி-ம்.)

சேதனத்தின் பிராகபாவம் அநுபவிக்கப்படாமையால் சேதனம் நித்யமா மென்பது அந்வயம். இங்கே இஃது அபிப்பிராயமாம்:- சேதனத்திற்குப் பிராகபாவ முண்டு என்று கூறும் வாதி இது கேட்கத்தக்கவனுவன்:— சேதனத்தின் பிராகபாவம் சேதனத்தா லநுபவிக்கப்படுகின்றதா? அல்லது அந்நியமான ஜடத்தா லநுபவிக்கப்படுகின்றதா? இவை இரண்டு விகற்பங்கள். அவற்றுள், சேதனத்தின் பிராகபாவம் பிறிதொன்ரு லநுபவிக்கப்படுகின்றது என்னும் இரண்டாவது பக்ஷம் பொருந்தாது. ஏனெனின், அச்சேதனத்திற்கு அந்நியம் ஜடமாயிருத்தலால் அநுபவத்திற்குக் கர்த்தாவாதல் பொருந்தாது. சேதனத்தின் பிராகபாவம் சேதனத்தா லநுபவிக்கப்படுகின்றதென்னும் முதற்பக்ஷத்திலும் அந்நியசேதனத்தா லநுபவிக்கப்படுகின்றதா? அல்லது எந்தச் சேதனத்திற்குப் பிராகபாவ மிருக்கின்றதோ அந்தத் தன்னுலேயே தனது பிராகபாவம் அநுபவிக்கப்படுகின்றதா? என இரண்டுவிகற்பமாம். அவற்றுள், முதற்பக்ஷம் பொருந்தாது; அத்வைதவாதத்தில் இரண்டாவது சேதனமே யில்லாமையால்; அவ்விரண்டாவது சேதனத்தை அங்கீகரிக்கினும், சேதனத்தைப் பிரதியோகியாகவுடைய *கூஎ. அபாவம் சேதனத்தைக் கொள்ளுதலின்றி அறியக்கூடாததா யிருத்தலால். அந்தச்சேதனத்தையும் கிரகிக்கினும் கடமுதலியவற்றைப்போல் சேதனத்திற்கு ஜடத்தன்மையின் பிராப்தி யுண்டாகுதலால் தன்னுலேயே தனது பிராகபாவம் அநுபவிக்கப்படுகின்றது என்னும் இரண்டாவது பக்ஷமும் பொருந்தாது; தனது * கூஅ. அபாவம் தன்னுல் கிரகிக்கக் கூடாததா யிருத்தலால்.

(அ-கை.)

அப்படியானுல் துவைதம் பிரமாதாவாகிய அந்தக்கரணமுதலியபேதமுடையதா யிருத்தலால் அந்தத் துவைத்தின் அபாவம் அந்தத் துவைதத்திலுலேயே அநுபவிக்கக்கூடாததாயிருத்தலாலும், அந்தத் துவைதத்தினது பிராகபாவத்தினை அநுபவிப்பது பிறிதொன்றில்லாமையாலும் சைதன்னியத்தைப் போலவே துவைதத்திற்கும் நித்தியத்துவப்பிராப்தி யுண்டாகுமேயென் ருசங்கித்துத் துவைதத்தின் பிராகபாவத்தினை அநுபவஞ்செய்வது வேறில்லையெனல் சித்தியா தென்று பரிகரிக்கின்ருர்:—

---

* கூஎ. எதன் அபாவ முண்டாகின்றதோ அது அபாவத்தின் பிரதியோகியாம். பிரதியோகியின் தோற்றமுன்னிலையாக அபாவத்தோற்ற முண்டாவது நியமமாம். ஆகையால் சேதனமாகிய பிரதியோகியின் தோற்றமின்றிச் சேதனத்தினது அபாவத்தின் தோற்றம் சம்பவியாது. சேதனத்தின் தோற்றத்தை ஒப்புவோமாயின் சேதனம் கடமுதலியவற்றைப்போல ஜடமாகும்.

*கூஅ. தனது அபாவகாலத்தில் தானில்லாமையால் தனது அபாவம் தன்னுல் கிரகிக்கப்படமாட்டாது.

द्वैतस्य प्रागभावः तु चैतन्येन अनुभूयते ॥

(சு-ம்.)

துவைதத்தின் பிராகபாவமோ சைதன்னியத்தா லநுபவிக்கப்படுகின்றது.

(வி-ம்.)

ஜாக்கிரமுதலிய துவைதத்தினின்மை சுழுத்தியில் சாக்ஷியினு லறியப்படுவதாயிருத்தலாலும் "तमसः साक्षी सर्वस्य साक्षी அஞ்ஞானத்திற்குச் சாக்ஷியாயும் எல்லாவற்றிற்கும் சாக்ஷியாயு மிருக்கின்றது" என்னும் சுருதியினுலும் என்பது தாற்பரியம். (உ௫௪)

௧0. துவைதத்தினது மித்தியாத்தன்மையின் சித்தி.

[௫௪௯] प्रागभावयुतं द्वैतं रच्यते हि घटादिवत् ।
तथापि रचनाऽचिंत्या मिथ्या तेनेंद्रजालवत् ॥ २५५ ॥

(அ-கை.)

இப்படிப் பிராகபாவத்தோடுகூடியதாய்ச் சிந்திக்கக்கூடாத சிருஷ்டித்தன்மை யென்னும் மித்தியாத்துவத்தின் லக்ஷண மிருத்தலால் துவைதத்திற்கு மித்தியாத்துவம் சித்தித்தது என்று கூறுகின்றூர்:—

प्रागभावयुतं द्वैतं घटादिवत् रच्यते हि । तथापि रचना अचिंत्या तेन इंद्रजालवत् मिथ्या ॥

(சு-ம்.)

பிராகபாவத்தோடுகூடிய துவைதமாகிய ஜகத்துக் கடமுதலியவற்றைப் போல உண்டாக்கப்படுகின்றது. அங்ஙனமாயினும், துவைதசிருஷ்டி சிந்திக்கத்தகாததாம்; அதனுல் இந்திரஜாலத்தைப்போல மித்தையாம்.

(வி-ம்.)

"பிராகபாவத்தோடுகூடிய" என்னும் துவைதத்தின் விசேஷணம் ஏதுகர்ப்பிதமாம். ஆதலால் துவைதம் பிராகபாவத்தோடுகூடியதாயிருத்தலால் கடமுதலியவற்றைப்போலச் சிருஷ்டிக்கவேபடுகின்றது. அப்படிச் சிருஷ்டிக்கப்படுவதாயினும், அந்தத் துவைதத்தின் சிருஷ்டி சிந்திக்கத்தகாததாம். அந்தச் சிருஷ்டிக்கப்படுந்தன்மை யுள்ளதாகவே சிந்திக்கக்கூடாதன்மையாகிய காரணத்தால் இந்திரஜாலத்தாலாகிய அரண்மனையைப் போலத் துவைதம் மித்தையா மென்பது பொருள். (உ௫௫)

கக. அத்வைதம் அபரோக்ஷமன் றென்பதில் வியாகாததோஷம்.

[௫௫௦] चित्प्रत्यक्षा ततोऽन्यस्य मिथ्यात्वं चानुभूयते ।
नाद्वैतमपरोक्षं चेत्येतन्न व्याहतं कथम् ॥ २५६ ॥

(அ-கை.)

சேதனம் முதலில் சொப்பிரகாசமா யிருத்தலால் நித்தியமாயும் அப ரோக்ஷமாயும் விளங்குகின்றது. சேதனத்திற்கு வேருகிய ஜகத்தின் மித் தியாத்துவம் அதே சேதனத்தா லறியப்படுகின்றது என்று ௫௩சு-௫சகூ-ல் காட்டப்பட்டது. இவ்வாருகவே அத்வைதம் அபரோக்ஷமன் றென்று கூறும் வாதிகளுக்கு வியாகாத முண்டாகு மென்று கூறுகின்ருர்:—

चित् प्रत्यक्षा च ततः अन्यस्य मिथ्यात्वं अनुभूयते । च अद्वैतं अपरोक्षं न इति एतत् कथं न व्याहतम् ॥

(சு-ம்.)

சேதனம் அபரோக்ஷமாம். அச்சேதனத்திற்கு அந்நியமாகிய துவை தத்தின் மித்தியாத்தன்மை அநுபவிக்கப்படுகின்றது. ஆகையால் அத்வை தம் அபரோக்ஷ மன்று என்னும் இவ்வார்த்தை எப்படி வியாகாதத்தோடு கூடியதாகாது?

(வி-ம்.)

மூலத்திலுள்ள 'च-உம்' என்னும் சொல் சேதனவடிவமாய்த் தோற்றுத லால் ௫௩சு-ல் கூறிய யுக்தியைச் சேர்க்கும்பொருட்டாம். " அத்வைதம் அபரோக்ஷமன்று " என்று ௫௩சு-ல் கூறிய வசனம் எப்படி வியாகாதத் தோடுகூடியதாகாது ? ஆகவே ஆகு மென்பது அந்வயம். (உ௫சு)

கஉ. சுலோகம் ௫௩சு-௫௫௦-ல் கூறிய வேதாந்தார்த்தத்தை அறிபவர்களின் சந் தோஷமின்மையிற் சங்கை சமாதானம்.

[௫௫க] इत्थं ज्ञात्वाप्यसंतुष्टाः केचित्कुत इतीर्यताम् ।
चार्वाकादेः प्रबुद्धस्याप्यात्मा देहः कुतो वद ॥ २५७ ॥

(அ-கை )

இப்படி ௫௩சு-௫௫௦-ல் கூறிய வேதாந்தத்தின் அர்த்தத்தை அறியும் சிலபுருஷர்களுக்கும் இவ்வேதாந்தார்த்தத்தில் விசுவாசம் ஏன் உண்டாகிற தில்லை யென்று வாதி சித்தாந்தியைக் கேட்கின்ருன்:—

इत्थं ज्ञात्वा अपि केचित् असंतुष्टाः कुतः इति ईर्यताम् ॥

(சு-ம்.)

இப்படி அறிந்தும் சிலர் எதனால் சந்தோஷமில்லாதவர்களா யிருக்கின்றனர்? இதனை எனக்குச் சொல்லவேண்டும்.

(அ-கை.)

நல்ல விசாரமில்லாதவர்களாதலால் அவர்களுக்கு விசுவாசமில்லை யென்று சொல்லக் கருதியவராய்ச் சித்தாந்தி பிரதிபந்தி என்னும் வாக்கியக்கட்டால் வாதியைத் தடுக்கின்றார்:—

प्रबुद्धस्य चार्वाकादेः अपि देहः आत्मा कुतः वद ॥

(சு-ம்.)

மிகுந்தவிவேகிகளாகிய சார்வாகர் முதலியோர்களுக்கும் தேகம் ஆத்மா வென்பது எனிருக்கின்றது? சொல்லுவாயாக.

(வி-ம்.)

முதலியோரென்னுஞ் சொல்லால் பாமரர்களும் கொள்ளப்படுகின்றனர். மிகுந்தவிவேகிகள் அதாவது விகற்பத்திலும் கண்டனத்திலும் சாமர்த்தியமுடைய சார்வாகர்முதலியோர்களுக்கு ஏன் தேகத்தில் ஆத்மபுத்தி (உறுள) யிருக்கின்றது? சொல்லுவாயாக.

[ருருஉ] सम्यग्विचारो नास्त्यस्य धीदोषादिति चेत्तथा ।
असंतुष्टास्तु शास्त्रार्थे न त्वैक्षंत विशेषतः ॥ २५८ ॥

(அ-கை.)

இப்போது வாதி பிரதிபந்தியாகிய வாக்கியக்கட்டினின்றும் விடுபடுதற்குச் சங்கிக்கின்றான்:—

अस्य धीदोषात् सम्यग्विचारः न आस्ति इति चेत् ॥

(சு-ம்.)

இச்சார்வாகாதிகளுக்குப் புத்திதோஷத்தினால் நல்லவிசாரம் இல்லையெனின்,

(அ-கை.)

சித்தாந்தி சமத்தன்மையால் சமாதானஞ் செய்கின்றார்:—

तथा असंतुष्टाः तु विशेषतः शास्त्रार्थं न तु ऐक्षंत ॥

(சு-ம்.)

அப்படியே திருப்தியில்லாத புருஷர்கள் புத்திதோஷத்தால் விசேஷமாகச் சாஸ்திரார்த்தத்தைக் காண்கிறதில்லை அதாவது விசாரிக்கிறதில்லை.

(வி-ம்.)

இங்கே புத்திதோஷத்தா லென்பது முற்பாதியினால் சம்பந்தத்தை யடைகின்றது. மூலத்திலுள்ள तु (து) என்னுஞ்சொல் நிச்சயவாசகமாகிய ஏ-என்னும் சத்தத்தின் பொருளாம். (உ௫அ)

எ. தத்துவஞானத்தின் பயன் ௫௫௯-௫௭௪.

க. தத்துவஞானத்தின் பயனைப் பிரதிபாதிக்கும் சுருதியின் வியாக்கியானம் ௫௫௯-௫௬௧.

க. ஞானத்தின்பயனைப் பிரதிபாதிக்கும் சுருதியிலும், அது அநுபவசித்தமாமென்பதிலும் சங்கைசமாதானம்.

[௫௫௯] यदा सर्वे प्रमुच्यंते कामा येऽस्य हृदि श्रिताः ।
इति श्रौतं फलं दृष्टं नेति चेद्दृष्टमेव तत् ॥ २५९ ॥

(அ-கை.)

இப்படிப் பிரஹ்மாத்மவடிவ தத்துவத்தை விசாரித்து அத்தத்துவ விசாரத்தால் உண்டாகிய தத்துவஞானத்தின் பலத்தை விசாரித்தற்கு அத்தத்துவஞானத்தின் பலத்தைப் பிரதிபாதிக்கும் கடசுருதியைப் படிக்கின்றார்:—

अस्य हृदि श्रिताः ये कामाः सर्वे यदा प्रमुच्यंते ॥

(சு-ம்.)

எப்போது இந்த முமுக்ஷுவின் இருதயத்தில் ஆசிரயித்துள்ளனவாகிய காமங்களான இச்சைகள் எவையோ அவையாவும் விடுபடுகின்றனவோ.

(வி-ம்.)

"अथ मर्त्योऽमृतो भवत्यत्र ब्रह्म समश्नुते அப்போது மனிதன் அமிருதமாய் இங்கேயே பிரஹ்மத்தை யடைகின்றனன்." என்பது இந்த மூலசுலோகத்தின் முற்பாதியிற் கூறிய வேதமந்திரத்தின் பிற்பாதியாம். இந்த முமுக்ஷுவின் இருதயத்தில் ஆசிரயித்துள்ள காமங்கள் அதாவது தாதாத்மியத்தியாசமாகிய் காரணத்தையுடைய இச்சை முதலியவைகள் யாவும் எப்போது நீங்குகின்றனவோ அதாவது தத்துவஞானத்தால் அத்தியாசம் நிவிருத்தி

யா (நீங்கு) கின்றனவோ, அப்போது ஞானத்திற்குமுன் தேகத்தோடு தாதாத்மிய அத்தியாசத்தால் மரணசுபாவமுடைய புருஷன் அமிருதம் அதாவது அத்தியாச மில்லாமையால் மரணமில்லாதவ ராகின்றனன். அந்த அமிருதமாதலில் எதுவைக் கூறுகின்றார். இந்தத் தேகத்திலேயே பிரஹ்மத் தைச்செவ்வையாக அடைகின்றனன் என்பது இத்தத்துவத்தின் பலத்தைப் பிரதிபாதிக்கும் சுருதியின் பொருள்.

(அ-கை.)

அப்படியானால் இந்தச் சுருதியினுற் பிரதிபாதிக்கப்பட்ட காமநிவி ருத்திமுதலிய தத்துவஞானத்தின் பலம் அநுபவசித்த மன்று; ஆனல் சாஸ் திரசித்தமாம் என்று வாதி சங்கிக்கின்றான்:—

इति फलं श्रौतं दृष्टं न इति चेत् ॥

(சு-ம்.)

இப்படிக் கூறிய பிரயோஜனம் சுருதியினுற் கேட்கப்பட்டதாம்; கண்டதன்றெனின்.

(அ-கை.)

முற்கூறிய சுருதிக்குப் பின்னேயிருக்கும் சுருதிவாக்கியத்தின் தாற்ப ரியத்தை விசாரித்தலால் அச்சுருதியிற் கூறிய தத்துவஞானபலம் கண்டதா கவே சித்திக்கின்றது என்னும் அபிப்பிராயமாகச் சித்தாந்தி பரிகரிக் கின்றார்:—

तत् दृष्टं एव ॥

(சு-ம்.)

அச்சுருதியிற் கூறிய பலம் பார்த்ததேயாம் அதாவது வித்வான்களால் (உருகூ) அநுபவிக்கப்பட்டதேயாம்.

உ. சுலோகம் ருருகூ-ல் கூறிய சுருதியர்த்தத்தால் (காமவடிவகிரந்திபேதத்தால்) அதனது அர்த்தம் வெளிப்படையாதல்.

[ருருச] यदा सर्वे प्रभिद्यंते हृदयग्रन्थयस्त्विति ।
कामा ग्रंथिस्वरूपेण व्याख्याता वाक्यशेषतः ॥ २६० ॥

(அ-கை.)

அக்காமநிவிருத்தியாகிய ஞானபலம் திருஷ்டமாம் அதாவது அநுப வசித்தமாம் என்பதை விளக்குதற்பொருட்டு அந்த-ருருகூ-ல் கூறிய சுருதி க்குப் பின்னுள்ள சுருதியின் வாக்கியத்தை உதகரித்து அதன் அர்த்தத் தைக் கூறுகின்றார்:—

यदा सर्वे हृदयग्रंथयः तु प्रभिद्यंते इति वाक्यशेषतः कामाः ग्रंथिस्वरूपेण व्याख्याताः ॥

(சு-ம்.)

*எப்போது சகல இருதயக்கிரந்திகளும் நாசமாகின்றனவோ என்னும் வாக்கியசேஷத்தால் காமங்கள் கிரந்திவடிவமாக வியாக்கியானம் செய்யப் பட்டன.*

(வி-ம்.)

*இவ்வாக்கியசேஷத்தால் காமநிவிருத்தி * கூகூ. கிரந்திபேதமாக வியாக்கியானஞ் செய்யப்பட்டிருத்தலாலும், அகங்காரசிதாத்மாக்களின் தாதாத்மியாத்தியாசநிவிருத்தியாகிய கிரந்திபேதம் அநுபவசித்தமா யிருத்தலாலும் சுருதியிற் கூறிய காமநிவிருத்தியாகிய ஞானத்தின் பலம் அப்பிரத்தியக்ஷமன் றென்பது தாற்பரியம்.* (உகூ0)

ந. *காமசப்தத்தின் அர்த்தம்.*

[௯௬௬] अहंकारचिदात्मानावेकीकृत्याविवेकतः ।
मे स्यादिदं मे स्यादितीच्छाः कामशब्दिताः ॥ २६१ ॥

(அ-கை.)

*அப்படியானால் காமமென்னுஞ் சொல்லால் இச்சையின் பேதமே சொல்லப்படுகின்றது. ஆகையால் அக்காமம் சுருதியில் கிரந்திவடிவமாக எப்படி வியாக்கியானஞ் செய்யப்பட்டிருக்கின்றது என்றுசங்கித்து, அத்தியாசத்தைக் காரணமாகவுடைய இச்சாவிசேஷமே காமமெனுஞ் சத்தத்திற்கு வாச்சியமாம். இச்சைமாத்திரம் காமமெனுஞ் சத்தத்திற்கு வாச்சியமாகாது என்று கூறுகின்றார்:—*

अहंकारचिदात्मानौ अविवेकतः एकीकृत्य "मे इदं स्यात्, मे इदं स्यात्" इति इच्छाः कामशब्दिताः ।

(சு-ம்.)

*அகங்காரத்தையும் சிதாத்மாவையும் அவிவேகத்தால் ஒன்றுபடுத்தி அதனலாம் "எனக்கு இது உண்டாகுக. எனக்கு இது உண்டாகுக."*

---

* கூகூ. கிரந்தி யென்பது பிரிவுபடாதிருக்கும் முடிச்சு; அதன் பேதமாவது அதனை வேறுபடுத்தல்; இதுவே கிரந்திபேத மென்பது.

என்னும் இச்சைகள் காமமெனுஞ் சொல்லால் சொல்லப்படுகின்றன. ஆகையால் கடவல்லிசுருதியிற் கூறிய காமம் கிரந்திவடிவமாம். (உகூக)

ஈ. அத்தியாசயின்றிய காமமாகிய இச்சையை அங்கீகரித்தல்.

[ருகூ] अप्रवेश्य चिदात्मानं पृथक्पश्यन्नहंकृतिम् ।
इच्छंस्तु कोटिवस्तूनि न बाधो ग्रंथिभेदतः ॥ २६२ ॥

(அ-கை.)

அப்படியானால் அத்தியாசத்தைக் காரணமாகவுடைய காமமே தள்ளத்தக்கதாகுமாயின் அத்தியாசவடிவகாரணமில்லாத மற்றக் காமம் அங்கீகரிக்கத்தக்கதாகுமேயென்றாசங்கித்துப் பாதகமில்லாமையால் அத்தியாசமின்றியதாகிய ஆபாசவடிவ காமம் அங்கிகரிக்கவேபடுகின்றதென்று கூறுகின்றார்:—

चिदात्मानं अप्रवेश्य अहंकृतिं पृथक् पश्यन् कोटिवस्तूनि इच्छन् तु ग्रंथिभेदतः बाधः न ॥

(சு-ம்.)

அகங்காரத்தில் சிதாத்மாவைப் பிரவேசிக்கச்செய்யாமல் அகங்காரத்தைச் சிதாத்மாவிற்கு வேறாகப் பார்த்துக்கொண்டு கோடிபதார்த்தங்களை இச்சிக்கினும் கிரந்திபேதத்தால் சாக்ஷியாகிய ஆத்மாவிற்காவது ஞானமோக்ஷங்களுக்காவது பாதமில்லை.

(வி-ம்.)

அகங்காரத்தில் சிதாத்மாவைப் பிரவேசிக்கச் செய்யாமல் அதாவது *எO. தாதாத்மிய அத்தியாசத்தால் உட்படுத்தாமலென்பது பொருள். ()

* எO. ஈண்டு இது இரகசியமாம்:— சிதாபாச தேக சாக்ஷிகளோடு கிரமமாகச் சகஜம் கர்மஜம் பிரமஜம் என்னும் வேறுபாட்டால் அகங்காரத்தின் தாதாத்மிய அத்தியாசம் மூன்றுவகையாம்.

(க) சிதாபாசனோடுள்ள அகங்காரத்தின் தாதாத்மியம் சகஜ (சுபாவீக) தாதாத்மியாத்தியாசமாம். ஏனெனின், அகங்காரமும் சிதாபாசனும் கூடவே தோன்றிக் கெடுதலால்.

(உ) வர்த்தமானதேகத்தோடுள்ள அகங்காரத்தின் தாதாத்மியம் கர்மஜ (பிராரத்த கர்மத்தாலுண்டாகிய) தாதாத்மிய அத்தியாசமாம். ஏனெனின், ஜீவித்திருக்கும் அவஸ்தையில் "நான் மனிதன்" என்று சகல ஜனங்களுக்கும் அநுபவமிருக்கின்றது. பிராரப்தகர்மமாகிய உபாதிகுறையத் தேகத்தோடுள்ள தாதாத்மியம் குறைதலால் தேகம் விழுந்தபின் தேகத்தில் நானென்பனமுதலிய வியவகாரங் காணப்படுகிறதில்லை, ஆதலால் அது கர்மஜந்யமாம்.

ஒ. அத்தியாசமின்றியும் பிராரப்தத்தால் காமம் சம்பவித்தல்.

[ருருள] ग्रंथिभेदेऽपि संभाव्या इच्छाः प्रारब्धदोषतः ।
बुध्वापि पापबाहुल्यादसंतोषो यथा तव ॥ २६३ ॥

(அ-கை.)

அப்படியானால் அத்தியாசமில்லாவிடின் காமமே உதயமாகாதென்றாசங்கித்து, பிராரப்தகர்மவசத்தால் அக்காமங்களின் உற்பத்தி சம்பவிக்குமென்று கூறுகின்றார்:—

ग्रंथिभेदे अपि प्रारब्धदोषतः इच्छाः संभाव्याः ॥

(சு-ம்.)

கிரந்திபேதமுண்டாகியும் பிராரப்தவடிவதோஷத்தால் இச்சைகள் சம்பவிக்கத்தக்கனவாம்.

(அ-கை.)

இங்கே திருஷ்டாந்தத்தைக் கூறுகின்றார்:—

यथा बुध्वा अपि पापबाहुल्यात् तव असंतोषः ॥

(சு-ம்.)

எப்படித் தத்துவத்தை யறிந்தும் பாபத்தின் மிகுதிப்பாட்டால் உனக்குச் சந்தோஷமில்லையோ அதுபோல. (உசுரு)

சு. அத்தியாசமின்றிய காமம் பாதகமில்லாததா மென்பதில் இரண்டு திருஷ்டாந்தங்கள்.

---

(ரு) அசங்கசாக்ஷி சேதனத்தோடுள்ள அகங்காரத்தின் தாதாத்மியம் பிரமஜ அஞ்ஞானத்தாலாகிய பூர்வ பூர்வபிராந்தியினால் சித்தித்துள்ள (தாதாத்மிய அத்தியாசமாம், தத்துவஞானத்தால் பிராந்திநிவிருத்தியாயின் தாதாத்மியமில்லாமையால் ஞானிக்குச் சாக்ஷியினிடத்து "நான் கர்த்தா போக்தா சுகி துக்கி" என்னும் அபிமானமில்லை. ஆகையால் அது பிரமஜமாம்.

இப்படி ஸ்ரீ சங்கராசாரியரது வாக்கியவிருத்தியில் மூன்றுவிதமான அகங்காரத்தின் தாதாத்மியத்தைக் கூறியிருக்கின்றார். இம்மூன்றில் சகஜமும் கர்மஜமும் ஞானிகளிடத்திலும் எப்போதாவது தோன்றுகின்றது. ஞானிக்கு அஞ்ஞானமும் பிராந்தியும் நீங்குதலால் மூன்றாவது பிரமஜ தாதாத்மியம் உண்டாகிறதில்லை. ஆகையால் அகங்காரத்தின் தர்மமான ஆபாசவடிவ இச்சைமுதலியவற்றால் முன்போல ஞானியின் சொரூபமாகிய சாக்ஷிக்குப் பாத முண்டாகிற தில்லை.

[ருரு-அ] अहंकारगतेच्छाद्यैर्देहव्याध्यादिभिस्तथा ।
वृक्षादिजन्मनाशैर्वा चिद्रुपात्मनि किं भवेत् ॥ २६४ ॥

(அ-கை.)

அத்தியாச மில்லாவிடினும் அகங்காரத்திலுள்ள இச்சைமுதலியவை கள் பாதகமாகா வென்பதை இரண்டு திருஷ்டாந்தங்களைக் காட்டுதலால் விளக்குகின்றார்:—

देहव्याध्यादिभिः वा वृक्षादिजन्मनाशैः तथा अहंकारगतेच्छाद्यैः चिद्रूपात्मनि किं भवेत् ॥

(சு-ம்.)

தேகத்தின் வியாதிமுதலியவற்றாலாவது விருக்ஷமுதலியவற்றின் ஜன்மநாசத்தினாலாவது சித்துவடிவ ஆத்மாவில் பாத முண்டாகிறதில்லை. அதுபோல அகங்காரத்தின்கணுள்ள இச்சைமுதலியவற்றினால் சித்து வடிவ ஆத்மாவில் யாது உண்டாகின்றது? எதுவு முண்டாகிற தில்லை.

(வி-ம்.)

தேகத்தின்கணுள்ள ரோகமுதலிய தர்மங்களால் அகங்காரத்தின் சாக்ஷியாகிய ஆத்மாவிற்குப் பாத மில்லை; ஆத்மா தேகசம்பந்த மில்லாததா யிருத்தலின். அல்லது விருக்ஷமுதலியவற்றின்கணுள்ள பிறப்புமுத லியவற்றால் தேக அகங்காரங்களின் சாக்ஷிக்குப் பாத மில்லை. இவ்வாறே அத்தியாசத்தின் நிவிருத்தியுண்டாகியவிடத்து அகங்காரத்தின்கணுள்ள இச்சைமுதலிய தர்மங்களாலும் சாக்ஷியாகிய ஆத்மாவிற்குப் பாத மில்லை யென்பது தாற்பரியம். (உசுச)

எ. கிரந்திபேத(நாச)த்தின் வடிவம்.

[ருருகூ] ग्रंथिभेदात्पुराप्येवमिति चेत्तन्न विस्मर ।
अयमेव ग्रंथिभेदस्तव तेन कृती भवान् ॥ २६५ ॥

(அ-கை.)

சிதாத்மாவின் அசங்கத்தன்மை மூன்றுகாலத்திலும் ஒன்றாயிருத்த லின் கிரந்திபேதத்திற்கு முன்னும் காமாதிகளால் ஆத்மாவிற்குப் பாத மில்லை என்று பூர்வபக்ஷி மூலத்தில் சங்கிக்கின்றான்:—

ग्रन्थिभेदात् पुरा अपि एवं इति चेत् ॥

(சு-ம்.)

கிரந்திநாசத்திற்கு முன்னும் இவ்வாறு காமாதிகளால் ஆத்மாவினது பாதத்தின் அபாவ மிருக்கின்றது என்றறிகின்று னெனில்,

(அ-கை.)

கிரந்திபேதத்திற்கு முன்னும் அகங்காரத்தின்கண் ணுள்ள காமமுதலியவற்றால் என்றும் அசங்கமாயுள்ள ஆத்மாவிற்குப் பாத மில்லை என்னும் போதத்தினையே கிரந்திபேதமாக யாம் கூறியிருத்தலால் உன்னுடைய இவ்வினு எமக்கநுகூலமா மென்று சித்தாந்தி கூறுகின்றார்:—

तं न विस्मर । अयं एव तव ग्रंथिभेदः तेन भवान् कृती ॥

(சு-ம்.)

அவ்வறிதலை மறவாதே. இவ்வறிவே உனக்குக் கிரந்திபேதமாயிற்று. அந்தக் கிரந்திபேதத்தால் நீ கிருதார்த்தன். (உசு௫)

அ. ஞானி அஞ்ஞானிகளுக்கு கிரந்தியின் நாசம் நாசமின்மைகளாலாம் பேதம்.

[௫சு0] नैवं जानंति मूढाश्चेत्सोऽयं ग्रंथिर्न चापरः ।
ग्रंथितद्भेदमात्रेण वैषम्यं मूढबुद्धयोः ॥ २६६ ॥

(அ-கை.)

" கிரந்திபேதத்திற்கு முன்னமே காமமுதலியவற்றால் ஆத்மாவிற்குப் பாத மில்லை" என்னும் உணர்ச்சியின் இன்மையே கிரந்தியா மென்று கூறுகின்றார்.—

मूढाः एवं न जानंति चेत् सः अयं ग्रंथिः च अपरः न ॥

(சு-ம்.)

மூர்க்கன் எப்போது இவ்வாறு அறியவில்லையோ அப்போது அவன் இவ்வாறு அறியாதிருந்ததே இக்கிரந்தியாம்; வேறு கிரந்தி இன்று.

(அ-கை.)

அப்படியானுல் ஞானிக்கும் இச்சையை அங்கீகரிக்கின், அஞ்ஞானி ஞானிகளின் விலக்ஷணத்தன்மை எதனுலா மென்றுசங்கித்துக் கிரந்தி பேதத்தாலன்றி வேறு எதனுலும் ஞானி அஞ்ஞானிகளுக்கு விலக்ஷணத் தன்மை இல்லை யென்று கூறுகின்றார்:—

ग्रंथितद्भेदमात्रेण मूढबुद्धयोः वैषम्यम् ॥

(சு-ம்.)

கிரந்தியினாலும் அக்கிரந்தியின் நாசமாத்திரத்தினாலும் அஞ்ஞானி ஞானிகளுக்கு விலக்ஷணத்தன்மை யுண்டு. (உசுசு)

க. ஞானி அஞ்ஞானிகளின் பேதத்தில் கிரந்திபேத மன்றி வேறு காரணம் இல்லையெனல்.

[ருசுக] प्रवृत्तौ वा निवृत्तौ वा देहेंद्रियमनोधियाम् ।
न किंचिदपि वैषम्यमस्त्यज्ञानिविबुद्धयोः ॥ २६७॥

(அ-கை.)

ஞானி அஞ்ஞானிகளின் விலக்ஷணத்தன்மையில் கிரந்திபேத மன்றி வேறு காரண மில்லாமையினையே விளக்குகின்றார்:—

देहेंद्रियमनोधियां प्रवृत्तौ वा निवृत्तौ वा अज्ञानिविबुद्धयोः किंचित् अपि वैषम्यं न अस्ति ॥

(சு-ம்.)

தேகம் இந்திரியம் மனம் புத்தி என்பவற்றின் பிரவிருத்தியிலாவது நிவிருத்தியிலாவது அஞ்ஞானிக்கும் ஞானிக்கும் சிறிதும் வேற்றுமை யில்லை. (உசுஎ)

[ருசுஉ] व्रात्यश्रोत्रिययोर्वेदपाठापाठकृता भिदा ।
नाहारादावस्ति भेदः सोऽयं न्यायोऽत्र योज्यताम् ॥ २६८ ॥

(அ-கை.)

முற்கூறிய பொருளில் திருஷ்டாந்தத்தைக் கூறுகின்றார்:—

व्रात्यश्रोत्रिययोः वेदपाठापाठकृता भिदा आहारादौ भेदः न अस्ति । सः अयं न्यायः अत्र योज्यताम् ॥

(சு-ம்.)

* எக. விராத்தியனுக்கும் * எஉ. சுரோத்திரியனுக்கும் வேதத்தைப்

* எக. பதினாறுவயது பரியந்தம் எவனுக்கு உபாகர்மம் (பூணூல் போடுதல்) ஆகவில்லையோ, இதனாலேயே எவனுக்கு வேதாத்தியயனம் இல்லையோ, அப்படிப் பட்ட பிராஹ்மண க்ஷத்திரிய வைசியச்சிறுவனை விராத்திய னென்பர்.

* எஉ. பூணூல்தரித்தபின்னர் ஆறங்கங்களோடும், சங்கற்பத்தோடுங்கூடிய (அர்த்தமும் கர்மவிதானமுமுள்ள) தனது சாகைவடிவ வேதத்தின் அத்தியயனத்தோடு கூடியவனும் அறுதொழிற்செய்வோனுமாகிய பிராஹ்மணன்முதலியோர் சுரோத்திரிய ரெனப்படுவர்.

படியாமை படித்தல்களினாலாகிய பேத முண்டு. ஆகாரமுதலியவற்றில் பேதமில்லை யென்னும் அத்தன்மைய இத்திருஷ்டாந்தம் இங்கு அதாவது ஞானி அஞ்ஞானிகளின் பேதத்தில் பொருத்தத்தக்கதாம். (உ௬அ)

௬௦. ஞானிக்குக் கிரந்தி இல்லை யென்பதில் கீதையின் வாக்கியம்,

[௫௬௯] न द्वेष्टि संप्रवृत्तानि न निवृत्तानि कांक्षति ।
उदासीनवदासीन इति ग्रंथिभिदोच्यते ॥ २६९ ॥

(அ-கை.)

ஞானிக்குக் கிரந்தி இல்லை யென்பதில் கீதையின் பதினான்காவது அத்தியாயத்திலுள்ள உஉ-உ௩-வது சுலோகங்களாகிய வாக்கியங்களைப் பிரமாணமாக்குகின்றார்:—

"संप्रवृत्तानि न द्वेष्टि निवृत्तानि न कांक्षति । उदासीनवत् आसीनः" इति ग्रंथिभिदा उच्यते ॥

(சு-ம்.)

"வாய்த்த துக்கங்களை வெறுக்கிறதில்லை. நீங்கிய சுகங்களை விரும்புகிறதில்லை. உதாசீனனைப் போலிருக்கின்றான்" என்று கிரந்திபேதத்தினால் சொல்லப்படுகின்றது.

(வி-ம்.)

செவ்வையாய் அடையப்பட்ட துக்கங்களைத் துவேஷிக்கிறதில்லை. நீங்கிய சுகங்களை விரும்புகிறது மில்லை. ஆனால் * எ௩. நொதுமற்றன்மையை யடைந்த புருஷனைப் போலிருக்கின்றான் என்னும் பொருள் கிரந்திபேதத்தினால் சொல்லப்படுகின்றது. (உ௬௯)

௬௧. சுலோகம் ௫௬௯-ல் கூறிய வாக்கியத்தின் பொருளிற் சங்கைசமாதானம்.

[௫௭௦] औदासीन्यं विधेयं चेद्वच्छब्दव्यर्थता तदा ।
न शक्ता अस्य देहाद्या इति चेद्रोग एव सः ॥ २७० ॥

(அ-கை.)

அப்படியானால் அந்த ௫௬௯-ல் கூறிய கீதையின் வாக்கியம் "ஞானி உதாசீனமா யிருத்தல்வேண்டும்." என்பதாக உதாசீனத்தன்மையை விதிப்பதாம். கிரந்திபேதத்தில் பிரமாணமன் றென்பதாக வாதி சங்கிக்கின்றான்:—

* எ௩. விருப்புவெறுப்பின்மை நொதுமற்றன்மை. இதனையே உதாசீனத் தன்மை யென்பர்.

औदासीन्यं विधेयं चेत ॥

(சு-ம்.)

இக்கீதையின் வாக்கியத்தினல் உதாசீனத்தன்மை விதிக்கத்தக்கதா மெனின்.

(அ-கை.)

இவ்வாக்கியம் விதியைக் குறித்ததாமாயின் மூலசுலோகத்திலுள்ள "वत् போல" என்னுஞ் சொல்லின் பொருள் வியர்த்தமாகு மென்று சித்தாந்தி பரிகரிக்கின்றார்:—

तदा वच्छब्दव्यर्थता ॥

(சு-ம்.)

அப்போது " वत् போல" என்னுஞ் சொல்லிற்கு வியர்த்தத்தன்மை யுண்டாகும்.

(அ-கை.)

அப்படியானல் ஞானியின் தேகமுதலியவற்றிற்குக் காரியஞ்செய்த லில் சாமர்த்தியமில்லாதனவா யிருத்தலினலேயே பிரவிருத்தியின்மை யுளது. கிரந்திபேதத்தால் பிரவிருத்தியின்மை யில்லையென் றசங்கித்துச் சித்தாந்தி பரிகரிக்கின்றார்:—

अस्य देहाद्याः शक्ताः न इति चेत् सः रोगः एव ॥

(சு-ம்.)

இந்த ஞானியின் தேகாதிகள் காரியஞ்செய்தலிற் சாமர்த்தியமில்லா தனவா யிருக்கின்றன வெனின், அப்போது அந்த ஞானம் ரோகமேயாம்!! ()

[ருகரு] तत्त्वबोधं क्षयं व्याधिं मन्यंते ये महाधियः ।
तेषां प्रज्ञातिविशदा किं तेषां दुःशकं वद ॥ २७१ ॥

(அ-கை.)

அப்படியானல் தத்துவபோதமே ரோகமா யிருக்குக. அதனல் தோ ஷம் யாது? எனக் கூறுகின்றார்:—

ये महाधियः तत्त्वबोधं क्षयं व्याधिं मन्यंते तेषां प्रज्ञा अतिविशदा । तेषां किं दुःशकं वद ॥

(சு-ம்.)

மகாபுத்தியுடையவர்களாகிய எவர்கள் தத்துவபோதத்தை க்ஷயரூப மாக மதிக்கின்றார்களோ அவர்களுடைய புத்தி மிகச்சுத்தமாம். அவர்க ளுக்குச் செய்யக்கூடாதது யாதுளது!! அதனைச் சொல்லுவாயாக. இவ் வாறு மதிக்கின்றவர்கள் மகா மூர்க்கர்க ளென்பது தாற்பரியம். (உஎக)

[௬கஃசு] भरतादेरप्रवृत्तिः पुराणोक्तेति चेत्तदा ।
जक्षन्क्रीडन्रतिं विंदन्नित्यश्रोषीर्न किं श्रुतिं ॥ २७२ ॥

(அ-கை.)

அப்படியானால் இந்த ௬சுரு-வது சுலோகத்திற் செய்த பரிகாசம் தொடர்பின்றிய இடத்ததாம்; ஞானிக்குப் பிரவிருத்தியின்மை புராணசித் தமாயிருத்தலின் என்று வாதி சங்கிக்கின்றான்:—

भरतादेः अप्रवृत्तिः पुराणोक्ता इति चेत् । तदा ॥

(சு-ம்.)

பரதர்முதலியோருக்குப் பிரவிருத்தியில்லாமை புராணங்களிற் கூறப் பட்டிருக்கின்றதென்று சொல்லுவாயாயின் அப்போது.

(அ-கை.)

நீ சுருதியை யறியாமல் பிரசினஞ்செய்கின்றாய் என்று சித்தாந்தி பரி கரிக்கின்றார்:—

जक्षन् क्रीडन् रतिं विंदन् इति श्रुतिं किं न अश्रौषीः ॥

(சு-ம்.)

ஞானி புசித்துக்கொண்டும் கிரீடித்துக்கொண்டும் இரதியையடைந் தும் என்னுஞ் சுருதியை நீ கேட்டதில்லையா?

(வி-ம்.)

" जक्षन् क्रीडन् रममाणः स्त्रीभिर्वा यानैर्वा ज्ञातिभिर्वा वयस्यैर्वा नोपजनंस्मरन्निदं शरीरम् ஞானி புசித்துக்கொண்டும் கிரீடை செய்துகொண்டும் ஸ்திரீகளோடாவது குதிரை முதலிய வாகனங்களிலாவது ஞாதிகளோடாவது ஒத்த வயதுடையவர்க ளோடாவது இரமித்தலை அதாவது பிரீதியை யடைந்தும் ஜனங்களின் சமீபத்திலிருக்கின்றவனாய் இச்சரீரத்தை நினைக்கிறதில்லை" என்னுஞ் சுரு தியின் வாக்கியத்தை நீ கேட்டதில்லையா என்பது பொருள். மூலத்தி லுள்ள जक्ष என்னும் வினைப்பகுதி புசித்தல், சிரித்தலென்னும் பொருளி லிருக்கின்றது. ஆதலால் புசித்துக்கொண்டும், தன்னிச்சைப்படி உலவுதலா கிய கிரீடையைச் செய்துகொண்டும் ஸ்திரீமுதலியவர்களோடு இரமித்துக்

கொண்டும் இத்தனது சரீரத்தை ஞானி ஸ்மரிக்கிறதில்லை யென்பது பொருள். மூலசுலோகத்திலுள்ள "रति विदन् இரதியையடைந்தும்" என்னும் பதம் சுருதியிலுள்ள "रममाण இரமிக்கின்ற" என்னும் பதத்தின் வியாக்கியானவடிவாம். (உஎஉ)

[ருசுஎ] न ह्याहारादिसंत्यज्य भरताद्याः स्थिताः क्वचित् ।
काष्ठपाषाणवत्किन्तु संगभीता उदासते ॥ २७३ ॥

(அ-கை.)

அப்படியானல் புராணத்திற்குக் கதியாது? என்னும் ஆசங்கையால் புராணமும் உதாசினத்தன்மையை அறிவிப்பதன்று; ஆனல் பிரவிருத்தியின்மையை அறிவிப்பதா மென்னும் அபிப்பிராயமாகக் கூறுகின்றார்:—

हि भरताद्याः आहारादिसंत्यज्य काष्ठपाषाणवत् क्वचित् स्थिताः न । किंतु संगभीताः उदासते ।

(சு-ம்.)

எதனல் ஜடபரதர்முதலியோர் ஆகாரமுதலியவற்றைவிட்டுக் கட்டை கற்களைப்போல ஓரிடத்து மிருந்ததில்லையோ, ஆனல் சங்கத்திற்குப் பயந்து உதாசினர்களா யிருந்தார்களோ அதனல். (உஎங)

[ருசுஅ] संगी हि बाध्यते लोके निस्संगः सुखमश्नुते ।
तेन संगः परित्याज्यः सर्वदा सुखमिच्छता ॥ २७४ ॥

(அ-கை.)

அப்படியானல் சங்கத்தையும் எக்காரணத்தால் விடவேண்டுமெனக் கூறுகின்றார்:—

हि लोके संगी बाध्यते निःसंगः सुखं अश्नुते । तेन सुखं इच्छता संगः सर्वदा परित्याज्यः ॥

(சு-ம்.)

எதனல் உலகத்தில் சங்கமுடையவன் பாதத்தை யடைகின்றனே, அக்காரணத்தால் சுகத்தை இச்சிக்கின்ற புருஷனல் சங்கம் எப்போதும் தள்ளத்தக்கதாம். (உஎச)

[ருசுகூ] अज्ञात्वा शास्त्रहृदयं मूढो वक्त्यन्यथान्यथा ।
मूर्खाणां निर्णयस्त्वास्तामस्मत्सिद्धांत उच्यते ॥ २७५ ॥

(அ-கை.)

அப்படியானல் அப்போது மனதினலாகிய பிரேக மென்னுஞ் சங்கம் விடத்தக்கதாகவே உட்சங்க மின்றியவனும் வெளியில் வியவகாரஞ் செய்ப வனுமாகிய ஞானிக்கு அஞ்ஞானித்தன்மைமுதலியன எவ்வாறு ஜனங்க ளாற் சொல்லப்படுகின்றன வென்றுசங்கித்து, சாஸ்திரதாற்பரியத்தின் ஞான மில்லாமையால் ஜனங்களால் ஞானிக்கு அஞ்ஞானத்தன்மைமுதலி யன சொல்லப்படுகின்றன வென்று கூறுகின்றார்:—

मूढः शास्त्रहृदयं अज्ञात्वा अन्यथा अन्यथा वक्ति ॥

(சு-ம்.)

மூடன் சாஸ்திரத்தின் தாற்பரியத்தை யறியாது வெவ்வேறுவகை யாய்க் கூறுகின்றான்.

(அ-கை.)

ஆதலால் மூடர்கள்வியவகாரம் இங்குச் சாஸ்திரவியவகாரத்தில் விசாரிக்கத்தக்க தன்றெனக் கூறுகின்றார்:—

मूर्खाणां निर्णयः तु आस्ताम् ॥

(சு-ம்.)

மூர்க்கர்களது நிர்ணயம் இருக்குக.

உ. வைராக்கிய ஞான உபரதிகளின் வர்ணனம் ருளஎ-ருஅச.

க. ஞானியின் ஸ்திதியில் தனது சித்தாந்தத்தின் பிரதிஞ்ஞை.

(அ-கை.)

அப்போது விசாரிக்கத்தக்கது யாதென்று கேட்கும் விருப்பத்தில் சாஸ்திரத்தின் அபிப்பிராயம் விசாரிக்கத்தக்கதா மென்று கூறுகின்றார்:—

अस्मत्सिद्धान्तः उच्यते ॥

(சு-ம்.)

வித்வான்களாகிய எமது சித்தாந்தம் சொல்லப்படுகின்றது. (உஎரு)

உ. சாஸ்திரத்தின் அபிப்பிராயம்.

[ருஎo] वैराग्यबोधोपरमाः सहायास्ते परस्परं ।
प्रायेण सह वर्तंते वियुज्यंते क्वचित्क्वचित् ॥२७६॥

(அ-கை.)

தம்முடைய இச்சித்தார்த்தம் யாதென்று கேட்குமிடத்துக் கூறுகின்றார்:—

वैराग्यबोधोपरमाः ते परस्परं सहायाः प्रायेण सहवर्तंते क्वचित् वियुज्यंते ॥

(சு-ம்.)

வைராக்கியம் ஞானம் உபரதி என்னும் மூன்றும் ஒன்றற்கொன்று சகாயமாம். அவை *எசு. பெரும்பாலும் கூடவே யிருக்கின்றன. *எரு. ஒவ்வோரிடத்துப் பிரிவை யடைகின்றன. (உஎசு)

ரு. ஏதுமுதலியவற்றால் வைராக்கியமுதலிய மூன்றன் பேதத்தை அறிதல் தகுதியாமெனல்.

[ருஎக] हेतुस्वरूपकार्याणि भिन्नान्येषामसंकरः ।
यथावदवगंतव्यः शास्त्रार्थं प्रविविच्यता ॥ २७७ ॥

(அ-கை.)

வைராக்கியமுதலியவற்றின் ஒன்றற்கொன்று விடத்தகாததான நிலைமையினைக் காணுதலால் அபேதத்தின் சங்கையுண்டாக வைராக்கியாதி மூன்றன் காரணமுதலியவற்றின் பேதத்தால் வைராக்கியமுதலியவற்றின் பேதம் அறியத்தக்கதாமெனக் கூறுகின்றார்:—

हेतुस्वरूपकार्याणि भिन्नानि । शास्त्रार्थं प्रविविच्यता एषां असंकरः यथावत् अवगंतव्यः ॥

(சு-ம்.)

இவ்வைராக்கியமுதலியவற்றின் ஏதுவும் சொரூபமும் காரியமும் வேறுவேறாம். ஆதலால் சாஸ்திரத்தின் அர்த்தத்தை விசாரஞ்செய்யும் புருஷனால் இவ்வைராக்கியமுதலியவற்றின் பேதம் உள்ளவாறு அறியத்தக்கதாம். (உஎஎ)

---

*எசு. சுகர் வாமதேவர் முதலியோர்களைப்போலப் பிரதிபந்தகமான கர்மமின்றி அநுகூலமான தேசகாலாதிகளோடுகூடிய நிவிருத்தியுடையோரிடத்துப் பெரும்பாலும் கூடவே யிருக்கின்றன.

*எரு. பிரதிபந்தமாகிய கர்மத்தோடு கூடியும் பிரதிகூலதேசகாலாதிகளோடு கூடியும் சாஸ்திரீய லௌகிக வியவகாரங்களில் பிரவிருத்தியுடைய புருஷர்களிடத்து ஒவ்வோரிடத்து வியோகத்தை யடைகின்றன.

௪. வைராக்கியத்தின் ஏது, சொரூபம், பலம்.

[ருஎஉ] दोषदृष्टिर्जिहासा च पुनर्भोगेष्वदीनता ।
असाधारणहेत्वाद्या वैराग्यस्य त्रयोप्यमी ॥ २७८ ॥

(அ-கை.)

அவற்றுள், வைராக்கியத்தின் ஏதுமுதலிய மூன்றனையுங் காட்டுகின்றார்:—

दोषदृष्टिः च जिहासा भोगेषु पुनः अदीनता अमी त्रयः अपि वैराग्यस्य असाधारणहेत्वाद्याः ॥

(சு-ம்.)

* எசு. தோஷதிருஷ்டியும், * எஎ. விடுதலின் இச்சையும், விட்ட

---

* எசு. (க) பிறப்பு (உ) மரணம் (ங) மூப்பு (ச) வியாதி என்பவற்றில் துக்கத்தையும் தோஷத்தையும் அடிக்கடி காணுதல் அதாவது சாஸ்திரத்தையும் தனது அநுபவத்தையும் அநுசரித்து ஆலோசித்தல் எதுவோ அது தோஷதிருஷ்டி என்னும் சொல்லிற்குப் பொருளாம்.

(க) பிறப்பு என்னும் சொல்லால் பிறப்புக்குச் சமீபத்திலுள்ள கர்ப்பவாசமும் கொள்ளப்படும். கர்ப்பவாசத்தில் ஒன்பது மாசபரியந்தம் பிண்டவடிவமாய் நிற்றல், மலத்தின் கிருமியால் கடிபடுதல், தாயின் ஜடராக்கினியால் எரிதல், தாயின் விஷமமான சயனம் நடைமுதலியவற்றால் தாலை கீழாகவும் நேராகவுமாகுதல், திடமான கருப்பையால் சுற்றப்படுதல்முதலியவடிவினவாகிய பெருந்துன்பங்களுள. மலமூத்திரங்களின் மத்தியில் இருத்தலும், அவற்றின் இரஸத்தைப் பருகுதலுமாகிய தோஷங்களுமுள. அன்றியும், பிறப்பில் பிரசவவாயுவினால் இழுக்கப்படுதலும், யோனிவடிவ யந்திரத்தால் நெருக்கப்படுதலுமாகிய பெருந்துன்பங்களும் யோனிவாயிலாக வருதலாகிய தோஷமும் உண்டு.

(உ) மரணத்தில் சகலநாடிகளையும் இழுத்தல், மர்மஸ்தானத்தைப் பேதித்தல் பிராணனைச் சுருக்குதல், மேல்மூச்சு வாங்குதல், மரணத்தின்தாபம் என்னும் வடிவினவாகிய பெருந்துன்பங்களும், இயமதூதர்கள் இழுத்தல், வருத்தத்தால் மலஜலங்கள் விழுதல்முதலிய வடிவினவாகிய தோஷங்களும் உள. மரணம் என்னும் சொல்லால் மரணத்தின் சமீபத்திலுள்ள நரகவாசமும் கொள்ளப்படும். கும்பிபாகம் ரௌரவம் அசிபத்திரவனம் வைதரணிமுதலிய நரகங்களில் இயமதூதர்களால் தள்ளப்படுதலாகிய பெருந்துன்பங்களும், சிலேஷ்மம் ரத்தம் சீழ் வீரியம் மலம் மூத்திரம் என்பவற்றின் குழிகளில் வசித்தலும் சிலேஷ்மமுதலியவற்றைக் குடித்தலுமாகிய தோஷமுமுண்டு.

(ங) மூப்பில் சகல அங்கங்களின் தளர்ச்சியும், மந்தத்தன்மையும், செவிட்டுத்தன்மையும், தழுதழுத்த வாக்கும், நடுக்கமுதலியனவும், எழுதல்முதலியவற்றில் விழுதலும், தன் இனத்தாரால் நீக்கப்படுதலுமாகிய பெருந்துன்பங்களும், மலஜலமும் வாய்நீரும் வீழ்தலாகிய தோஷமுமுண்டு.

போகங்களில் மீண்டும் * எஅ. ஏக்கறுதற்றன்மையின்மையுமாகிய மூன்
றும் வைராக்கியத்தின் அசாதாரண ஏது முதலியனவாம். (உஎஅ)

---

(ச) வியாதியில் துர்ப்பலததன்மையும் குளிர்ச்சுரமுதலியவற்றின் மீவகத்தால்
பரிதாபமுதலியனவும் கஷாயக்குடித்தல்முதலியனவுமாகிய பெருந்துன்பங்களும்,
தேகத்தின் துர்க்கந்தம் வியர்வை முதலிய தோஷங்களு முண்டு.

இவ்வாறே ஜன்மமுதலியவற்றில் அடிக்கடித் துக்கத்தையும் தோஷத்தையுங்
காணுதலால் விவேகிகளாகிய புண்ணியசீலபுருஷர்களுக்கு எங்கும் தீவிரவைராக்
கியமும் மோக்ஷஇச்சையும் அவை சித்திக்கும்பொருட்டுப் பிரவிருத்தியும் சித்திக்
கின்றன. ஆதலால் இந்தத் தரிசனமானது முமுக்ஷுக்குச் செவ்வையாய்ச் செய்யத்தக்
கதாம். இந்தத் தோஷதிருஷ்டி வைராக்கியத்திற்கு ஏதுவாம்.

* எஎ. விடுதலின் இச்சை அல்லது இச்சையின்மை வைராக்கியத்தின் சொரு
பமாம்.

பரம் அபர மென்னும் பேதத்தால் வைராக்கியம் இரண்டுவிதமாம்.

(க) அடைந்த அணிமாதி ஐசுவரியங்களை விடுதலின் இச்சையினை அல்லது சத்
துவாதி குணமாதிரத்தின் ஆசையை விடுதலை பரவைராக்கிய மென்பர்.

(உ) அதனின் வேருயதனை அபரவைராக்கிய மென்பர். [க] யதமானம்,
[உ] வியதிரேகி [ஈ] ஏகேந்திரியம் [ச] வசீகாரம் என்னும் பேதத்தால் அபரவைராக்
கியம் நான்குவகைத்தாம்.

[க] தோஷதிருஷ்டிவடிவ மந்தவிவேகத்தினை யதமானவைராக்கிய மென்பர்.

[உ] தனது சித்தத்தில் எவ்வளவு குணங்கள் பரிபக்குவமாயினவோ அவற்றைக்
கண்டு சந்தோஷித்து, மறுபடியும் பிறகுணங்களுக்குப் பிரயத்தனஞ்செய்தல் வியதி
ரேகிவைராக்கியமாம்.

[ஈ] இருதயத்தில் சூக்ஷ்மமான ராக மிருக்க வெளியில் இந்திரியங்களை நிக்கிர
கித்தலை ஏகேந்திரியவைராக்கிய மென்பர்.

[ச] இருதயத்தின்கண்ணுள்ள வாசனைவடிவ சூக்ஷ்மராகத்தின் அபாவத்தினை
வசீகாரவைராக்கிய மென்பர். (க) மந்தம், (ஙு) தீவிரம், (ச) தீவிரதரமென்னும்
பேதத்தால் அந்த வசீகாரவைராக்கியம் மூன்றுவகையாம்.

(க) புத்திரன் தாரம் தனமுதலிய அநுகூலவிஷயங்களின் நாசத்தால் தற்கா
லம் "சை" ஈதென்ன சம்சார" மென்னும் புத்தியுண்டாகின்றது. இந்தப் புத்திபூர்
வகமான விடுதலின் இச்சை அல்லது இச்சையின்றியதன்மை மந்தவசீகாரவைரா
க்கியமாம்.

(ஙு) இந்த ஜன்மத்தில் புத்திரன் தாரமுதலிய விஷயங்க ளெனக்கு உண்டாகலா
காது என்னும் நிரந்தர ஸ்திரபுத்திபூர்வகமான வைராக்கியம் தீவிரவசீகாரவைரா
க்கியமாம்.

(ச) மீண்டும் திரும்புதலையுடைய பிரஹ்மாமுதலியோர்களது எவ்வுலகமும்
எனக்கு வேண்டா மென்னும் புத்திபூர்வகமான வைராக்கியம் தீவிரதரவசீகார
வைராக்கியமாம்.

இவ்வாற்றல் பேதத்தோடுகூடிய வைராக்கியத்தின் சொரூபம் சொல்லப்பட்டது.

* எஅ. தன் பிரயத்தனமின்றி ஊழினூற் கிடைத்த தனமுதலிய விஷயங்களில்
மீண்டும் இஷ்டபுத்தியாகக் கொள்ளாமைவடிவினது விஷயங்களிலுள்ள ஏக்கறுதற்
றன்மை யின்மையாம். இதனையே தீனத்துவமின்மை யென்பர். அதுவே வைராக்
கியத்தின் பலம்.

௫. தத்துவபோதத்தின் ஏது, சொரூபம், பலம்.

[௬௭௯] श्रवणादित्रयं तद्वत्तत्त्वमिथ्याविवेचनं ।
पुनर्ग्रंथेरनुदयो बोधस्यैते त्रयो मताः ॥ २७९ ॥

(அ-கை.)

இனித் தத்துவஞானத்தின் காரணமுதலிய மூன்றனையுங் காட்டுகின்றார்:—

श्रवणादित्रयं तद्वत् तत्त्वमिथ्याविवेचनं पुनः ग्रन्थेः अनुदयः एते त्रयः बोधस्य मताः ॥

(சு-ம்.)

சிரவணமுதலிய * ௭௯. மூன்று, அங்ஙனமே தத்துவத்தையும் மித்தையையும் * ௮௦. விவேகித்தல், மீண்டும் கிரந்திகள் * ௮௧. உதயமாகாமை என்னும் மூன்றும் கிரமமாக ஞானத்திற்கு ஏது சொரூபம் பலமென்று கொள்ளப்படுகின்றன.

---

* ௭௯. சுரோத்திரியரும் பிரஹ்மநிஷ்டருமாகிய குருமுகமாகக் கேட்ட "தத்துவமஸி" முதலிய மகாவாக்கியங்கள் சூரியதரிசனத்திற்கு நேரே காரணமாயுள்ள நேத்திரத்தைப்போல ஞானத்திற்கு நேரே காரணமா மெனினும், நேத்திரதோஷத்தை நிவிருத்தித்தல்வாயிலாக அஞ்சனாதிகள் சூரியதரிசனத்திற்கு ஏதுவாதல்போல அசம்பாவனை விபரீதபாவனைவடிவ பிரதிபந்தத்தை நிவிருத்திக்கும்வாயிலாக சிரவணாதிகள் ஞானத்திற்கு ஏதுவாம்.

* ௮௦. பிரஹ்மாத்மஅபேதத்தின் நிச்சயமாகிய தத்துவஞானத்தின் சொரூபமும் சொல்லப்பட்டது என்றாலும் கூடஸ்தஅகங்காராதிகளின் பேதஞானவடிவ கிரந்திபேதம் அதனினும் வேறன்று. ஏனெனின், "தேகம் இந்திரியம் முதலியவற்றிற்கு வேறாகிய யான் சொப்பிரகாச அசங்கசாக்ஷியாகிய சித்ரூபப்பிரஹ்மமாயிருக்கின்றேன். இப்பிரபஞ்சம் தோற்றிக்கொண்டிருந்தும் மித்தையாயிருக்கின்றது." என்னும் சம்சயவிபரீதங்களின்றிய திடநிச்சயமாகிய சித்தவிருத்தி ஏதுவோ அது தத்துவம் மித்தை என்பவற்றின் விவேசனவடிவ பரிபக்குவநிஷ்டையாம். அதுவே பிரஹ்மாத்மாவின் அபேதநிச்சயவடிவ தத்துவஞானத்தின் சொரூபமாம்.

* ௮௧. தத்துவஞானத்தின் பயனோ ஜன்மாதி காரியங்களோடு அவித்தை நீங்குதலும் பரமாநந்தசொரூபப்பிரஹ்மத்தை யடைதலுமாகிய மோக்ஷமாம்; மீண்டும் கிரந்தி உதயமாகாமை யன்று. என்றாலும் அவித்தை அந்நியோந்நியாத்தியாசத்திற்கு ஏதுவாம். அந்நியோந்நியாத்தியாசம் ஜன்மாதி அநர்த்தத்திற்கு ஏதுவாம். அவ்வந்நியோந்நியாத்தியாசத்தின் நிவிருத்தி அவித்தையின் நிவிருத்தியின்றி யுண்டாகிறதில்லை. அவித்தையின் நிவிருத்தி கூடஸ்தஅகங்காரங்களின் பேதஞானமின்றி

(வி-ம்.)

இங்கு முதலிய என்னுஞ் சொல்லால் மனன நிதித்தியாசனங்களுங் கொள்ளப்படுகின்றன. "आत्मा वा अरे द्रष्टव्यः श्रोतव्यो मंतव्यो निदिध्यासितव्यः மைத்திரேயி! ஆத்மா நிச்சயமாகக் காணத்தக்கதாம். சிரவணஞ்செய்யத்தக்கதாம். மனனஞ்செய்யத்தக்கதாம். நிதித்தியாசனஞ்செய்யத்தக்கதாம்." என்று சுருதியில் ஆத்மதரிசனத்திற்குச் சாதனமாகச் சிரவணாதிகள் விதிக்கப்பட்டிருத்தலின் சிரவணாதிகள் ஞானத்திற்கு ஏதுவாம். தத்துவமித்தைகளின் விவேசனம் அதாவது கூடஸ்த அகங்காரமுதலியவற்றின் பேதஞானம் ஞானத்தின் சொரூபமாம். கிரந்திகள் உதயமாகாமை அதாவது அந்நியோந்நியாசத்தின் உற்பத்தியின்மை ஞானத்தின் பயனும். (௨௭௯)

௯. உபரதியின் ஏது, சொரூபம், பலம்.

[௫௭௪] यमादिर्धीनिरोधश्च व्यवहारस्य संक्षयः ।
स्युर्हेत्वाद्या उपरतेरित्यसंकर ईरितः ॥ २८० ॥

(அ-கை.)

உபரதியாகிய உபசமத்தின் ஏது, சொரூபம், பயன் என்னும் மூன்றனையுங் காட்டுகின்றார்:—

यमादिः च धीनिरोधः व्यवहारस्य संक्षयः उपरतेः हेत्वाद्याः स्युः इति असंकरः ईरितः ॥

---

யுண்டாகிறதில்லை. ஆதலால் அவித்தையின் நிவிருத்திக்கு ஏது தத்துவமித்தையின் விவேசனவடிவ கிரந்திபேதமாம். அவ்வவித்தையின் நிவிருத்தி அதிடமாயின், பின்னும் அந்நியோந்நியாத்தியாசவடிவ கிரந்தியின் உதய முண்டாம். அவித்தையின் நிவிருத்தி திடமாயின் அந்நியோந்நியாத்தியாசத்தின் உதய முண்டாகாது. கிரந்தியின் உதயமின்மையினாலேயே ஜன்மாதி அநர்த்தத்தின் நிவிருத்தி சித்தித்திருக்கின்றது. ஓர் அரசனானவன் பாட்டன் தகப்பன் பேரன் என்னும் மூவரையும் சேர்க்கையாகவே நீக்கிவிடுவதுபோல ஞானவடிவ ராஜாவானவன் அவித்தை,அதன் காரியமாகிய அத்தியாசம், அதன் காரியமான ஜன்மாதிகள் என்னும் மூன்றனையும் கூடவே நீக்குகின்றான். ஆதலால் ஜீவித்திருக்குங்காலத்தினால் உபலக்ஷிக்கப்படும் சுகதுக்காதி அவத்தையில், அகங்காரமுதலிய அநாத்மாக்களில் மறுபடியும் ஆத்மபுத்தியின் இன்மைவடிவ சிற்சடக்கிரந்தியின் உதயமின்மையே காரியத்தோடு அவித்தை நீங்குதலாம். அந்த நீக்கம் அதிஷ்டான ஆநந்தருபப் பிரஹ்மத்தினும் வேறன்று; ஆனல் அதிஷ்டானவடிவமேயாம், ஆதலால் மறுபடியும் கிரந்தி உதயமாகாமையே மோக்ஷவடிவமாம்.

(௬-ம்.)

* ௮௨. இயமமுதலியனவும் புத்தியின் * ௮௩. நிரோதனமும், விபவ

* ௮௨. (௧) இயமம் (௨) நியமம் (௩) ஆசனம் (௪) பிராணாயாமம் (௫)பிரத்தியாகாரம் (௬) தாரணை (௭) தியானம் (௮) சவிகற்பசமாதி என்னும் இந்த எட்டு அங்கங்களும் உபாதியின் ஏதுக்க (சாதனங்க)ளாம்.

(௧) கொல்லாமை, வாய்மை, கள்ளாமை, பிரஹ்மசரியம், பிறர்பொருள் கவராமை என்னும் வேறுபாட்டால் இயமம் ஐந்துவகையாம்.

(௨) சௌசம்(தூய்மை), சந்தோஷம்(திருப்தி), தவம், சுவாத்தியாயம், ஈசுவரப் பிரணிதானம் என்னும் பேதத்தால் நியமம் ஐந்துவகைத்தாம்.

(௩) பத்மம், வீரம், பத்திரம், சுவஸ்திகம், தண்டம், சோபாசிரயம், பரியங்கம், கிரௌஞ்சம், அஸ்தி, உஷ்டிரம், ஸமஸம்ஸ்தானம், ஸ்திரசுகம், யதாசுகம் என்றல் முதலியனவாக ஆசனம் எண்பத்துநான்கு வகைத்தாம்.

(௪) வெளிவாயுவை உட்கொள்ளுதலாகிய சுவாசமும், உள்வாயுவை வெளிவிடுதலாகிய பிரசுவாசமும் ஆகிய இரண்டன் கதியினையும் கெடுத்தல் எதுவோ அது பிராணயாமமெனப்படும்.

[௧] பாகியம்.[௨] ஆப்பியந்தரம் [௩] ஸ்தம்பவிருத்தி என்னும் பேதத்தால் பிராணயாமம் மூன்றுவிதமாம்.

[௧] எங்குப் பிரசுவாசபூர்வகமான கதியின் அபாவ முண்டாகின்றதோ அது பாகியப்பிராணயாமமாம்.

[௨] எங்குச் சுவாசபூர்வகமான கதியின் அபாவ முண்டாகின்றதோ அது ஆப்பியந்தரப்பிராணயாமமாம்.

[௩] எப்படிக் கல்லில் பரவிய காய்ந்த ஜலம் எல்லாப் பக்கத்தினின்றும் சுருக்கத்தை யடைகின்றதோ அதுபோல எங்குச் சுவாசப்பிரசுவாசங்கள் இரண்டன்கதியும் ஒரேகாலத்தில் இல்லாமற்போகின்றதோ அது மூன்றாவது ஸ்தம்பவிருத்தி வடிவப் பிராணயாமமாம்.

இவ்வாறு அநேகவிதமான பிராணயாம முண்டு.

(௫) சப்தமுதலிய விஷயங்களினின்றும் சுரோத்திரமுதலிய இந்திரியங்களைத் தடுத்தலைப் பிரத்தியாகார மென்பர்.

(௬) நாபிசக்கரத்தில் அல்லது இருதயகமலத்தில் அல்லது உச்சியில் அல்லது ஜோதியில் அல்லது நாசிநுனியில் அல்லது மூர்த்திமுதலிய வெளிவிஷயங்களில் சித்தத்தின் விருத்திமாத்திரமாக நிறுத்துதல் எதுவோ அது தாரணை யெனப்படும்.

(௭) அவ்விடங்களில் தேகத்தை ஆசிரயஞ்செய்யும் சித்தவிருத்தியாகிய ஞானமெதுவோ அதன் ஏகதானத்துவம் அதாவது வேற்றுணர்ச்சிவடிவ மறைப்பின்றிய ஒப்புமையுணர்ச்சிப்பிரவாகம் தியான மெனப்படும். அல்லது அந்நிய விருத்திவடிவ மறைப்போடுகூடிய பிரத்தியகபின்ன பிரஹ்மத்தில் உண்டாம் சித்தத்தின் பிரவாகம் தியான மெனப்படும்.

காரம் செய்வனவாய்க் குறைதலுமாகிய இம்மூன்றும் உபரதியின் ஏதுமுதலியனவாம். இவ்வாறு வைராக்கியாதி மூன்றற்கும் பேதங்கூறப்பட்டது

(வி-ம்.)

இயமமுதலியன என்னுமிடத்துள்ள முதலியன என்னுஞ் சொல்லால் நியமமாதிகள் கொள்ளப்படும். இவ்வெட்டங்கங்களும் உபரதிக்கு ஏதுவாம். புத்தியின் நிரோதம் அதாவது சித்தவிருத்தியின் ஒடுக்கமாகிய யோகம் உபரதியின் சொரூபமாம். லௌகிக வைதிக வியவகாரங்களின் மறதி உபரதியின் பயனும். இவ்வாறு கூடவே இருப்பனவாகிய வைராக்கியமுதலியவற்றிற்கு ஏதுமுதலியவற்றால் பேதங்கூறப்பட்டது. (உ௮௦)

எ. வைராக்கியம் ஞானம் உபரதி என்னும் இம்மூன்றில் தத்துவஞானம் பிரதானமாதல்.

[௫எ௫] तत्त्वबोधः प्रधानं स्यात्साक्षान्मोक्षप्रदत्वतः ।
बाधोपकारिणावेतौ वैराग्योपरमावुभौ ॥ २८१ ॥

(அ-கை.)

வைராக்கியமுதலிய இம்மூன்றற்கும் சமானப்பிரதானத்தன்மையுண்டா? இல்லையா? என்னும் ஆசங்கையினாற் கூறுகின்றார்:—

तत्त्वबोधः प्रधानं स्यात् साक्षान्मोक्षप्रदत्वतः । वैराग्योपरमौ एतौ उभौ बोधोपकारिणौ ।।

(சு-ம்.)

தத்துவபோதம் பிரதானமாம்; நேரே மோக்ஷத்தைத் தருவதாயிருத்தலின், வைராக்கியம் உபரமம் என்னு மிரண்டும் ஞானத்திற்கு உபகாரிகளாம்.

---

(அ) எழும்பிய சம்ஸ்காரத்தின் நீக்கத்தையும் ஒடுங்கிய சம்ஸ்காரத்தின் வெளிப்படுதலையும் முன்னிட்ட அந்தக்கரணத்தின் ஏகாக்கிர த்தன்மைவடிவ பரிணமம் சமாதி யெனப்படும்.

அச்சமாதி [க] சவிகற்பம் [உ] நிருவிகற்பம் என்னும் பேதத்தால் இருவகைத்தாம்.

[க] திரிபுடியின் விளக்கத்தோடுகூடியது சவிகற்பம்.

[உ] திரிபுடியின் விளக்கமின்றியது நிருவிகற்பம்.

அவற்றுள், சவிகற்பசமாதி சாதனமா யிருத்தலால் அங்கமாம்.

இவ்வாறு கூறிய இயமமுதலிய எட்டங்கங்களும் உபரதியின் சாதனங்களாம்.

* அங. சவிகற்ப நிருவிகற்பசமாதியின் அப்பியாசத்தால் பிரமாணம், விபரியயம், விகற்பம், நித்திரை, ஸ்மிருதி என்னும் ஐந்து விருத்திகளின் எந்த நிரோதம் உண்டாகின்றதோ அது உபரதியின் சொருபமாம்.

(வி-ம்.)

"तमेव विदित्वातिमृत्युमेति नान्यः पंथा विद्यतेऽयनाय அப்பிரத்தியகபின்ன பரமாத்மாவினையே அறிந்து ஜனனமரணமாகிய மிருத்திபுவைக் கடக்கின்றான். மோக்ஷத்தை அடைதற்பொருட்டு ஞானத்திற்கு வேறாகிய வழியில்லை" என்னுஞ் சுருதியினால் தத்துவஞானத்திற்குப் பிரதானத்தன்மை அறியப்படுகின்றதென்பது பொருள். "ब्राह्मणो निर्वेदमायान्नास्त्यकृतः कृतेन"। "तद्विज्ञानार्थं स गुरुमेवाभिगच्छेत् शांतो दांत उपरतास्तितिक्षुः समाहितो भूत्वात्मन्येवात्मानं पश्येत्" "உலகங்களைக் கர்மங்களால் ஆக்கப்பட்டனவாக வறிந்து, பிரஹ்மமாகும் விருப்புடைய முமுக்ஷுவாகிய பிராஹ்மணன் நிர்வேதமான வைராக்கியத்தினை அடைகின்றான். ஆக்கப்படாத அதாவது கிரியையினாற் சாதிக்கமுடியாத மோக்ஷம் ஆக்கப்படுவதாகிய கர்மத்தினா லில்லை." "அந்தப் பிரத்தியகபின்ன பிரஹ்மத்தை யறிதற்பொருட்டு அம்முமுக்ஷுவானவன் குருவைநோக்கிச் செல்லுகிறான். சமமுடையவனும் தமமுடையவனும் உபரதியுடையவனும் திதிக்ஷையுடையவனும் சமாதானமுடையவனுமாய் ஆத்மாவினிடத்திலேயே ஆத்மாவைக் காண்கின்றான்." என்னும் இவ்விரண்டு சுருதிகளாலும் மற்ற வைராக்கிய உபரதிகள் ஞானத்திற்குச் சாதனமாக அறியப்படுகின்றன. (௨௮௧)

அ. வைராக்கியாதிகள் ஒருமித்திருத்தற்கும் பிரிதற்கும் காரணம்.

[௫௭௯] त्रयोऽप्यत्यंतपक्काश्चेन्महतस्तपसः फलं ।
दुरितेन क्वचित्किंचित्कदाचित्प्रतिबध्यते ॥ २८२ ॥

(அ-கை.)

வைராக்கியம் ஞானம் உபரதி யென்னும் மூன்றும் பெரும்பாலும் கூடியே யிருக்கும் சிற்சிலவிடத்துப் பிரிந்திருக்குமென்று ௫௭௦-வது சுலோகத்திற் சொல்லப்பட்டது. அதன்கண் காரணத்தைக் கூறுகின்றார்:—

त्रयः अपि अत्यंतपक्वाः चेत् महतः तपसः फलं । दरितेन क्वचित् किंचित् कदाचित् प्रतिवध्यते ॥

(சு-ம்.)

வைராக்கியாதி மூன்றும் அத்தியந்தம் பரிபக்குவமானால் பெருந்தவமாகிய புண்ணியத்தின் பயனாம். பாபகர்மமாகிய நிமித்தத்தால் சில புருஷர்களிடத்து ஒவ்வொன்று ஒருகால் பிரதிபந்தத்தை யடைகின்றது.

(வி-ம்.)

அநேக ஜன்மங்களில் சம்பாதிக்கப்பட்ட புண்ணியக்கூட்டத்தின் பரி
பாக முண்டாயின் மூன்றும் ஒருமித்திருக்க லுண்டாம். அவ்வாறு முற்
கூறிய புண்ணியராசியின் பரிபாக மின்றேல் பிரதிபந்தமாகிய பாபத்தை
அநுசரித்துப் புருஷபேதத்தில் காலபேதத்தால் வைராக்கியமுதலிய மூன்
றினுள் ஒவ்வொன்றன் பிரதிபந்தகமு(மறைப்பு)ண்டா மென்பது கருத்து ()

க. வைராக்கியஉபரதிகள் பூரணமா யிருக்கினும், தத்துவஞான மின்றி மோக்ஷ
முண்டாகாமை.

[௫௭௭] वैराग्योपरती पूर्णे बोधस्तु प्रतिबध्यते ।
यस्य तस्य न मोक्षोऽस्ति पुण्यलोकस्तपोबलात् ॥ २८३ ॥

(அ-கை.)

அம்மூன்றனுள்ளும் தத்துவஞானத்தின் பிரதிபந்த முண்டாயின்
மோக்ஷ மில்லை யெனக் கூறுகின்றார்:—

यस्य वैराग्योपरती पूर्णे बोधः तु प्रतिबध्यते तस्य मोक्षः न अस्ति ॥

(சு-ம்.)

எவனுக்கு வைராக்கிய உபரதிகள் பூரணமாய் ஞானம் பிரதிபந்தத்தை
யடைந்திருக்கின்றதோ அவனுக்கு மோக்ஷ மில்லை.

(அ-கை.)

அப்படியானல் வைராக்கியமுதலியவற்றைச் சம்பாதித்தல் பயனில்
லாததாகுமே யென்றுசங்கித்து, "*அச. யோகப்பிரஷ்டன் எவனே அவன்
புண்ணியஞ் செய்பவர்களது உலகமாகிய சுவர்க்காதிகளை யடைந்து அநேக
வருஷம் வசித்துப் பின் சுசியுள்ளவர்களும் ஸ்ரீமான்களுமாகிய புருஷர்
களது வீட்டில் பிறக்கின்றான்." என்னும் கீதையின் ஆறுவது அத்தியாயத்
தினுள்ள சக-வது சுலோகவடிவ பகவானது வாக்கியத்தினல் வைராக்கிய
முதலியவற்றைச் சம்பாதித்தலால் புண்ணியலோகத்தின் அடைவுண்டா
கின்ற தென்று கூறுகின்றார்:—

तपोबलात् पुण्यलोकः ॥

*அச. வைராக்கிய உபரதிவடிவ ஞானத்தின் சாதனத்தை யடைந்தும்
ஞானத்தை யடையாதவன் எவனே அவன் யோகப்பிரஷ்டனே யாவன். ஆதலால்
முன் கீதையின் ஆறுவது அத்தியாயத்தில் "யோகப்பிரஷ்டனது கதியை வைராக்
கிய உபரதியுடைய புருஷன் அடைகின்றான்" என்று கூறப்பட்டிருக்கின்றது.

(சு-ம்.)

வைராக்கியஉபரதிவடிவ புண்ணியகர்மமாகிய தபத்தின் வலியால் புண்ணியவான்களால் அடையத்தக்க சுவர்க்காதிலோகங்களாகிய புண்ணியலோகங்க ளடையப்படுகின்றன. (௨அ௩)

௧0. வைராக்கிய உபரதிகளின்றிப் பூரணமாகிய தத்துவஞானத்தால் மோக்ஷத்தின் நிச்சயமும், திருஷ்டதுக்கம் நாசமாகாமையும்.

[ருஎஅ] पूर्णे बोधे तदन्यौ द्वौ प्रतिबद्धौ यदा तदा ।
मोक्षो विनिश्चितः किंतु दृष्टदुःखं न नश्यति ॥ २८४ ॥

(அ-கை.)

வைராக்கிய உபரதிகள் பிரதிபந்திக்கப்படுமாயின், ஜீவன்முத்தியின் விலக்ஷணாநந்தம் சித்தியா தென்று கூறுகின்றார் :—

बोधे पूर्णे तदन्यौ द्वौ यदा प्रतिबद्धौ तदा मोक्षः विनिश्चितः किंतु दृष्ट-दुःखं न नश्यति ॥

(சு-ம்.)

ஞானம் பூரணமாய் அதற்கு வேறாகிய வைராக்கிய உபரதிக ளிரண்டும் பிரதிபந்திக்கப்படின் அப்போது *அ௫. மோக்ஷம் நிச்சயிக்கப்பட்டதாம். ஆனால் இகலோகவியவகாரத்தாற் பிறக்கும் விக்ஷேபமாகிய *அசு. திருஷ்டதுக்கம் நாசமாகாது. (௨அச)

௧௧. வைராக்கியமுதலிய மூன்றன் அவதி.

[ருஎ௯] ब्रह्मलोकतृणीकारो वैराग्यस्यावधिर्मतः ।
देहात्मवत्परात्मत्वदार्ढ्ये बोधः समाप्यते ॥ २८५ ॥

---

*அ௫. ஞானத்தால் பந்தத்திற்குக் காரணமாகிய அவித்தையின் நிவிருத்தி யுண்டாயிருக்கிறது. மறுபடியும் அவித்தையின் உற்பத்தி சம்பவியாமையால் மோக்ஷம் அவசிய முண்டாகின்றது.

*அசு. கிரமமாக வாசனக்ஷய மனோநாசங்களுக்குக் காரணமான வைராக்கிய உபசமங்க ளின்மையால் ரஜோதமோகுணங்களின் மிகுதிப்பாட்டால் சுத்தசத்துவகுணம் மறைதலின் இவ்வுலகசம்பந்தமுள்ள அநுகூலப்பிரதிகூலபதார்த்தவடிவ நிமித்தத்தாற்றோன்றிய விக்ஷேபவடிவ திருஷ்டதுக்கத்தின் நிவிருத்தி யுண்டாகிறதில்லை. ஆனால் போதத்தால் ஜன்மாந்தரம் சம்பவியாமையால் பரலோகசம்பந்தியான இனிவருந் துன்பத்தினின்மை உண்டாகவே செய்கிறது.

(அ-கை.)

இப்போது வைராக்கியமுதலியவற்றின் அவதியைக் காட்டுகின்றார்:—

ब्रह्मलोकतृणीकारः वैराग्यस्य अवधिः मतः । देहात्मवत् परात्मत्वदार्ढ्ये बोधः समाप्यते ॥

(சு-ம்.)

பிரஹ்மலோகத்தைத் துரும்பாகக் கருதுதல் எதுவோ அது வைராக்கியத்தின் அவதி யென்று மதிக்கப்படுகின்றது. ௬௦௫-வது சுலோகத்தில் சொல்லப்படும் * அஎ. தேகாத்மாவைப்போல, பரமாகிய பிரஹ்மத்தின் ஆத்மத்தன்மையினது திடத்தன்மை யுண்டாகவே ஞானம் முடிவுபெறுகின்றது. (௨௮௫)

[௫௮௦] सुप्तिवद्विस्मृतिः सीमा भवेदुपरमस्य हि ।
दिशानया विनिश्चेयं तारतम्यमवांतरम् ॥ २८६ ॥

(அ-கை.)

இதுவுமது:—

सुप्तिवत् विस्मृतिः उपरमस्य सीमा भवेत् हि ॥

(சு-ம்.)

சுழுத்தியைப் போன்ற மறதி எதுவோ அது உபரமத்தின் அவதியாம்.

(அ-கை.)

வைராக்கியமுதலியவற்றின் அவாந்தரமான தாரதம்மியம் எதுவோ அது தத்தம் புத்தியினால் நிச்சயஞ்செய்யத்தக்கதா மென்று கூறுகின்றார்:-

अनया दिशा अवांतरं तारतम्यं विनिश्चेयम् ॥

(சு-ம்.)

இந்த ௫௭௯-௫௮௦ சுலோகங்களிற் கூறிய திசையினால் இம்மூன்றன் அவாந்தரதாரதம்மியம் நிச்சயம் செய்யத்தக்கதாம். (௨௮௬)

---

* அஎ. அஞ்ஞானிக்கு "யான் பிராஹ்மணன், யான் க்ஷத்திரியன், யான் மனிதன், யான் தேவதத்த னென்னும் பெயருடையவன்." என்று தேகமுதலியவற்றில் சம்சய விபரீதபாவனைகளின்றித் திடமான ஆத்மபுத்தி (யான் என்னும் உணர்ச்சி) உண்டாகின்றது. அதுபோலச் சிரவணாதிவடிவ பிரஹ்மாப்பியாசத்தின் வலியால் பிராஹ்மணத்தன்மைமுதலியவற்றை விசேஷணமாகவுடைய தேகமுதலியவற்றில் உள்ள யான் என்னும் புத்தியைப் பாதித்து, பிரஹ்மத்திற்கு வேறாகாத ஆத்மாவில் சம்சய விபரீதபாவனைகளின்றிய இயல்பாகப்பெறப்பட்ட எந்தத் திடமான ஆத்மபுத்தி யுண்டாகிறதோ அது ஞானத்தின் அவதியாம்.

௧உ. பிராரப்தபேதத்தால் ஞானி வெவ்வேறுவிதமா யிருத்தல் மோக்ஷத்திற்குப் பிரதிபந்தமாகாமை.

[௫அ௧] आरब्धकर्मनानात्वाद्बुद्धानामन्यथाऽन्यथा ।
वर्तनं तेन शास्त्रार्थे भ्रमितव्यं न पंडितैः ॥ २८७ ॥

(அ-கை.)

அப்படியானால் தத்துவஞானமுடைய புருஷனுக்கு ராகத்துவேஷாதியுடைமையால் வேறுபாடு காணப்படுதலின் ஞானத்திற்கு முக்திக்கு ஏதுவாந்தன்மை நிச்சயிக்கக்கூடிய தன்றென்று ஆசங்கித்து, இராகாதிகள் வியாதிமுதலியவற்றைப்போலப் பிராரப்தகர்மத்தின் பயனா யிருத்தலின், அவ்விராகாதிகளுக்கு முக்தியைப் பிரதிபந்திக்குந்தன்மை பெறப்படுவதில்லை. ஆதலால் சாஸ்திரார்த்தத்தில் அதாவது திடஞானத்தால் மோக்ஷ மடையப்படு மென்பதில் விவாதஞ்செய்தல் தகுதியன்றென்று கூறுகின்றார்:—

आरब्धकर्मनानात्वात् बुद्धानां अन्यथा अन्यथा वर्तनं । तेन पंडितैः शास्त्रार्थे न भ्रमितव्यम् ॥

(சு-ம்.)

பிராரப்தகர்மம் நாநாவா யிருத்தலால் ஞானிகள் வெவ்வேறுவகையா யிருப்பர். அதனால் பண்டிதர்கள் சாஸ்திரார்த்தத்தில் மயங்கலாகாது (உஅஎ)

௧௩. ஞானிக ளெல்லோருக்கும் ஞானமும் முக்தியும் சமமாதல்.

[௫அஉ] स्वस्वकर्मानुसारेण वर्ततां ते यथा तथा ।
अविशिष्टः सर्वबोधः समा मुक्तिरिति स्थितिः ॥ २८८ ॥

(அ-கை.)

அப்போது நிச்சயஞ்செய்யத்தக்கது யாதெனக் கூறுகின்றார்.—

ते स्वस्वकर्मानुसारेण यथा तथा वर्ततां । सर्वबोधः अविशिष्टः मुक्तिः समा । इति स्थितिः ॥

(சு-ம்.)

அந்த ஞானிகள் தத்தம் கர்மாநுசாரமாக எப்படியோ அப்படி நடக்குக. எல்லோருக்கும் ஞானம் சமானமாம். ஞானத்தின் பயனாகிய முக்தியும் சமானமாம் என்பது நிச்சயம்.

(வி ம்.)

எல்லா ஞானிகளுக்கும் பிரஹ்மம் யான் என்னும் ஞானம் ஒருவடிவின தாம். அவித்தைமுதலிய தோஷமின்றிய பிரஹ்மவடிவமாக இருத்தலாகிய முக்தியும் சமானமா மென்பது கருத்து. (உ.அஅ)

கச. இப்பிரகரணத்தின் சுருக்கமான தாற்பரியம்.

[ருஅகூ] जगच्चित्रं स्वचैतन्ये पटे चित्रमिवार्पितम् ।
मायया तदुपेक्ष्यैव चैतन्ये परिशेष्यताम् ॥ २८९ ॥

(அ-கை.)

இச்சித்திரதீபப்பிரகரணத்தின் தாற்பரியத்தினைச் சுருக்கமாகக் காட்டுகின்றார்:—

जगच्चित्रं पटे चित्रं इव स्वचैतन्ये मायया अर्पितं । तत् उपेक्ष्य चैतन्ये एव परिशेष्यताम् ॥

(சு-ம்.)

ஜகத்துவடிவமாகிய சித்திரம் எதுவோ, அது படத்திற் சித்திரத்தைப் போலச் சுவசொரூபமாகிய சைதன்னியத்தில் மாயையினாற் கற்பிக்கப்பட்டிருக்கின்றது. அந்த ஜகத்வடிவ சித்திரத்தினை உபேக்ஷித்து அதாவது மித்தியாஞானத்தால் மறந்து சைதன்னியத்திலேயே மிஞ்சவைத்தல் வேண்டும். (உஅகூ)

கரு. நூலைப் பயிலுதலின் பயன்.

[ருஅசு] चित्रदीपमिमं नित्यं येऽनुसंदधते बुधाः ।
पश्यंतोऽपि जगच्चित्रं ते मुह्यंति न पूर्ववत् ॥ २९० ॥

(அ-கை.)

நூல்பயிலுதலின் பயனைக் கூறுகின்றார்:—

ये बुधाः इमं चित्रदीपं नित्यं अनुसंदधते । ते जगच्चित्रं पश्यंतः अपि पूर्ववत् न मुह्यंति ॥

(சு-ம்.)

எந்தச் சுத்தபுத்தியுடைய முமுக்ஷுக்கள் இச்சித்திரதீபத்தை நித்தியம் அநுசந்தானஞ் செய் (ஸ்மரிக்) கின்றார்களோ அவர்கள் ஜகத்தாகிய சித்திரத்தைப் பார்த்துக்கொண்டிருந்தும் முன்போல் மோகத்தை யடையார்கள். (உகூ0)

சித்திரதீபமென்னும்
ஆறாம்பிரகரணம்
முற்றிற்று.

